# இனிக்கும் இராஜ நாயகம்

ஏவி. எம். ஜாபர்தீன் — நூர்ஜஹான்
அறக்கட்டளைச் சொற்பொழிவு

மு. மு. இஸ்மாயீல்

சென்னை உயர்நீதி மன்ற
முன்னாள் தலைமை நீதிபதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி.டி.டி.ஐ. தரமணி,
சென்னை-600 113

ஏவி. எம். ஜாபர்தீன் நூர்ஜஹான்
அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசை—1

**A. V. M. JAFFERDIN Endowment Lecture No—1**
**Endowment Lectures Publication Number—4**

---

**BIBLIOGRAPHICAL DATA**

| | | |
|---|---|---|
| Title of the Book | — | Inikkum Irājanayakam |
| Author | — | M. M. Ismail<br>Hon. Chief Justice Retired)<br>Madras High Court |
| Publisher | — | International Institute of<br>Tamil Studies, T.T.T.I, Post.<br>Taramani, Madras-600 113. |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Publication Number | — | 103 |
| Endowment Lectures<br>Publication No. | — | Four |
| Date of Publication | — | December, 1984 |
| Paper Used | — | 14.2 kg D/Demy<br>White Printing |
| Size of the Book | — | 21x14 Cms |
| Printing Type used | — | 10 Point |
| Number of Pages | — | xii + 640 = 652 |
| No. of Copies | — | 2,200 |
| Price | — | Rs. 50/- (Fifty only) |
| Printers | — | Novel Art Printers<br>Madras-600 014<br>Phone : 82731 |
| Binding | — | Card Board |
| Artist | — | Eswari |
| Subject | — | A detailed study of the<br>Tamil epic 'Raja Nayakam' |

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி. ஐ அஞ்சல்,
தரமணி,
சென்னை—600 113.

# பதிப்புரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் ஏறத்தாழ 12 அறக்கட்டளைகளுக்கு மேல் நிறுவியுள்ளது. ஆண்டுதோறும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளைத் தொடங்கும் முன் புத்தகத்தை எழுதித் தந்த பின்பு ஆற்றுவது என்றகோணத்தில் நடைபெற்று வருகிறது. 'ஏவி.எம். ஜாபர்தீன் நூர்ஜஹான் அறக்கட்டளைச் சொற்பொழிவு' அவற்றுள் ஒன்று. அதனுடைய முதல் சொற்பொழிவாக முன்னாள் தலைமை நீதிபதி மாண்புமிகு மு.மு. இஸ்மாயீல் அவர்கள், இனிக்கும் இராஜநாயகம்' என்ற தலைப்பையே தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். இஸ்லாமியக் காப்பியங்களில் சிறந்த காப்பியமாக 'இனிக்கும் இராஜநாயகம்' அமைந்துள்ளது. அதைப் பல கோணங்களில் மாண்புமிகுநீதிபதி அவர்கள்பார்த்து மிகச்சிறப்பாக காப்பியக் கதைச் சுருக்கம், காப்பியக் கதைக் கரு, இரட்டை மரபு, இறை தத்துவக் கருத்துகள், நாட்டு நடப்பு, புதுமை, உலக நீதி, இலக்கியப் பூங்கா, நலம் புனைந்துரை, நயம் தெரிசொற்கள் எனப் பல கோணங்களில் பார்த்து மிகச் சிறப்பாக அமைத்துள்ளார். இந்த நூல் வெளிவருவது குறித்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். நிறுவனம் பயனுடைய நூல்களை மட்டுமே வெளியிடுகிறது. அவற்றுள் இதுவும் ஒன்று. 100 நூல்களுக்குமேல் வெளியிட்டுள்ள இந்த நிறுவனம் 'இனிக்கும் இராஜநாயகத்தை'த் தமிழுலகுக்குத் தருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறது. இதற்கு ஒத்துழைத்த அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,
**ச. வே. சுப்பிரமணியன்**

# முன்னுரை

**ஏவி. எம். ஜாபர்தீன் நூர்ஜஹான் அறக்கட்டளை**யின் முதற்சொற்பொழிவினை நிகழ்த்த என்னை அழைத்த **உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்திற்கும்** அவ்வறக்கட்டளையை நிறுவியோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நிறுவனத்தின் இயக்குநர் **டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்** அவர்கள் "இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில்" இடம் பெற்றுள்ள இலக்கிய நயத்தையும், தத்துவக் கருத்துகளையும் என் சொற்பொழிவில் நான் விளக்கவேண்டும் என விரும்பினார்கள்.

அதற்கு மாறாகச் சகோதரர் **கலைமாமணி கவிஞர் கா.மு. ஷெரீப்** அவர்கள் வண்ணக் களஞ்சியப் புலவர் இயற்றிய **இராஜநாயகம்** என்னும் காப்பியம் என்னுடைய சொற்பொழிவிற்கு அடிப்படையாக அமையவேண்டும் என்று விரும்பினார்கள்.

இருவருடைய விருப்பத்தையும் சிந்தித்துப் பார்த்தேன். அதன் விளைவாக இராஜநாயகம் என்னும் காப்பியத்தையே என் சொற்பொழிவின் பொருளாகக் கொள்வது என்ற முடிவுக்கு வந்தேன்.

இம்முடிவிற்குப் பின்னணியாய் இருந்தவை இரண்டு கருத்துகள்.

இயக்குநர் அவர்களுடைய விருப்பப்படி செய்வதாக இருந்தால் முஸ்லிம் காப்பியக் கர்த்தாக்கள் பலருடைய நூல்களின் தொகுப்பாகச் சொற்பொழிவு அமையும்.

ஒருவகையில் என் சம்பந்தப்பட்ட வரையில் அது எளிதும்கூட. ஓர் அறக்கட்டளையின் சார்பில் நிகழ்த்தப்படும் முதற் சொற்பொழிவு ஓர் ஆராய்ச்சியின் பின்னணியில் அமைவதாக இருந்தால் சிறப்பாக இருக்கும் என எண்ணினேன்.

இரண்டாவதாக இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்களுள் தலைசிறந்ததாகச் சீறாப்புராணம் இருப்பதால் அதைப் பற்றியே எல்லோரும் எழுதவும் பேசவும் செய்கிறார்கள். இதன் விளைவாக மற்றவர்களிடையே ஒரு தவறான கருத்து உண்டாவதற்கு

வாய்ப்பு இருக்கிறது. அதுதான், சீறாப்புராணம் ஒன்றுதான் இஸ்லாமியத் தமிழ்க்காப்பியம்; அதற்கு அடுத்தபடியாகக் கூறுவதற்கு வேறு எதுவும் இல்லை, என்பதாகும்.

உண்மையில் இராஜநாயகம் என்ற காப்பியம் சீறாப் புராணத்தைப் பின்பற்றிப் பாடப்பெற்ற காப்பியம்; அதற்கு அடுத்த நிலையில் உள்ளது என்றும் சொல்லலாம்.

அத்தகைய காப்பியத்தைப் பலரும் தெரிந்து கொள்ள வாய்ப்பாக ஏன் இந்தச் சொற்பொழிவு அமையக் கூடாது என்று எண்ணினேன்.

இவ்விரண்டு காரணங்களால்தான் இராஜநாயகம் என்னும் காப்பியத்தை இச்சொற்பொழிவிற்குப் பொருளாக எடுத்துக் கொண்டேன். இயக்குநர் அவர்களுக்கும் இதனை விளக்கி அவரையும் இசைவித்தேன்.

இதனுடைய விளைவால் ஒரு மாபெரும் நன்மை ஏற்பட்டது; அந்த அளவிற்கான இடர்ப்பாடுகளும் உண்டாயின.

நன்மை: இராஜநாயகக் காப்பியம் முழுமையும் படிக்கின்ற வாய்ப்பு.

இடர்ப்பாடு: இராஜநாயகக் காப்பியத்திற்கு ஒரு திருந்திய பதிப்பு இல்லாதது. இதனைப் பற்றி மேலும் என் சொற்பொழிவின் இடையே குறிப்பிட்டிருக்கிறேன்.

நான் அறிந்தவரையில் இக்காப்பியத்தைப் பற்றி இதுவரை எவரும் முழுமையாகப் பேசவோ எழுதவோ முயன்றிலர்.

1957-ல் பன்னூல் ஆசிரியரான ஜனாப் M.R.M. அப்துல்ரஹீம் அவர்கள் "முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்" என்றநூலை எழுதினார்கள். அதில் வண்ணக்களஞ்சியப் புலவர் அவர்களைப் பற்றி எழுதும் பொழுது, அவர் இயற்றிய இராஜநாயகம் பற்றிக் குறிப்பிட்டு அதில் உள்ள சில பாடல்கட்கு நயம் கூறி எடுத்துக்காட்டி இருக்கிறார்கள்.

1959-ல் ஸ்ரீலங்காவைச் சேர்ந்த அக்கரைப் பற்று என்னும் ஊரினர் ஆன ஜனாப் அ.ஸ. அப்துஸ் ஸமத் அவர்கள் "சுலைமான்-பல்கீஸ் (இராஜநாயகக் காட்சிகள்)" என்ற நூலை ஜனாப் M.R.M. அப்துல்ரஹீம் அவர்களுடைய "யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்" வாயிலாய் வெளியிட்டுள்ளார்கள்.

இந்நூல் அவர்களுடைய வானொலிப் பேச்சு, சில கட்டுரைகள் இவற்றின் தொகுப்பு ஆகும். இந்நூலில் இராஜநாயகத்தில் உள்ள பல பாடல்களின் நயத்தை விளக்கி இருக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் எடுத்துக் காட்டும் கதைப்போக்கு சிற்சில இடங்களில் வண்ணக் களஞ்சியப் புலவர் அவர்களுடைய காப்பியக் கதைப் போக்குக்கு ஒத்து அமையவில்லை.

காலம் சென்ற R. P. M. கனி அவர்கள் 1963-ல் "இஸ்லாமிய இலக்கியக் கருவூலம்" என்ற நூலை வெளியிட்டார்கள். இந்நூலில் "கடந்த கால இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள்" என்பது ஒரு பகுதி. இப்பகுதியில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் பற்றிக் குறிப்பிடும்போது வண்ணக்களஞ்சியப் புலவர் பற்றியும் அவருடைய நூலான இராஜநாயகம் பற்றியும் குறிப்பிட்டு, அக் காப்பியத்திலிருந்து சில பாடல்களையும் எடுத்துக் காட்டி இருக்கிறார்.

Muslim Epics in Tamil Literature என்ற ஆங்கில நூல், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்து இஸ்லாமிய இலக்கியத் துறைத்தலைவராய் இருக்கும் டாக்டர் எம். எம். உவைஸ் M.A., Ph.D., அவர்கள், ஸ்ரீலங்கா பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டத்திற்காக எழுதிய ஆய்வு நூலாகும்.

இது 1967-ல் நூல் வடிவில் வெளிவந்தது. இந்நூலில் இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்களினுடைய பகுதிகளையும், பண்புகளையும் எடுத்து விளக்கிக் கொண்டு வரும்போது இராஜநாயகம் நூலில் இருந்தும் சில பாடல்களைப் பொருத்தமான இடங்களில் எடுத்து விளக்கி இருக்கிறார்.

ஜனாப் J. M. சாலி அவர்கள் "இஸ்லாமியத் தமிழ்க் காவியங்கள்" என்ற நூலை 1978ல் வெளியிட்டார். அதில் இன்பக் காவியம் இராஜநாயகம் என்ற ஒரு அத்தியாயம் இருக்கிறது.

இராஜநாயகம் நூல் பற்றியும். அதன் பாடல்கள் சில பற்றியும் ஜனாப் J. M. சாலி அவர்கள் விளக்கி இருக்கிறார்கள்.

இவையே அன்றி அங்கும் இங்குமாக அவ்வப்பொழுது இராஜநாயகம் பற்றிய சில கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

சென்னை மீரா அற நிறுவனத்தின் சார்பாகத் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் திரு. சிலம்பொலி சு. செல்லப்பனார்

M.A., B.L.,B.T. அவர்கள் இராஜநாயகக் காப்பியம் பற்றி ஒரு தொடர்சொற்பொழிவு ஆற்றிக் கொண்டு வந்தார்கள். அது வும் 21-10-84 அன்று நிறைவு பெற்றது.

அத்தொடர்ச் சொற்பொழிவினை நானே தொடக்கி வைத்தேன். அச்சொற்பொழிவினை நூல் வடிவில் கொணரப் போவதாக அவ் அறநிறுவனத்தார் அறிவித்திருக்கிறார்கள்.

இவ்வாண்டு ஜனவரி 1984 உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் (சென்னை) சார்பினிலேயே டாக்டர் உவைஸ் அவர்கள் சீதக்காதி அறக்கட்டளையின் சொற்பொழிவினை "இஸ்லாம் வளர்த்த தமிழ்" என்ற தலைப்பில் நிகழ்த்தினார்.

இந்நூலில் இராஜநாயகக் காப்பியம் பற்றி ஏழு பக்க அளவில் குறிப்பிட்டுள்ளார்.

இயன்ற வரை மேற் குறிப்பிடப்பெற்றவற்றில் எடுத்துக் காட்டி விளக்கப் பெற்றிருக்கும் பாடல்களை என் சொற்பொழி வில் விலக்கமுயன்றிருக்கிறேன்(கூறியது கூறல் ஆகாது என்பதால்).

எனினும் சில காப்பியங்களைப் பற்றிப் பேசும் பொழுதோ, எழுதும் பொழுதோ, உயர்வின் காரணமாக, நயத்தின் காரண மாக, எவராலும் விடமுடியாதபடி சில பாடல்கள் அமைவது உண்டு. முன்னர் பலர் சொன்னார் என்பதற்காக ஒதுக்க இயலாது. அப்படி ஒதுக்குவது காப்பிய முழுமையைக் குறை படுத்தும். தவிர அதன் சரியான தரத்தையும் எடுத்துக் காட்டுவது ஆகாது.

அத்தகு பாடல்களை நானும் விளக்க முயன்றிருக்கிறேன். சிற் சில இடங்களில் அவற்றை ஒரு புதிய கோணத்தில் இருந்து காட்ட வும் முயன்றிருக்கிறேன்.

இக்காப்பியத்தைப் படிக்கும்போது பல இடங்களில் எனக்கு ஐயம் உண்டாயிற்று. அதனைத் தெளிவுபடுத்திக் கொள்ள சில நண்பர்களையும் அணுகினேன். எனினும் நான் தேடின பெற்றேன் அல்லேன். காரணம் இராஜநாயகக் காப்பியத்தை எவரும் ஆய்ந்து பதிப்பித்ததாகவோ, உரை எழுதியதாகவோ தெரியவில்லை.

அப்படி இருக்கும்பொழுது இக்காப்பியத்தைப் படித்து எதை யாவது எடுத்துக் காட்ட முடிந்தது என்றால் அதற்கு இறை அருள் ஒன்றே முதற் காரணம்.

எனவே இறைவனுக்கு அவனுடைய அருளுக்காக, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவதாகச் **சென்னை சிந்தாதரிப்பேட்டை மேல்நிலைப்பள்ளி ஆசிரியர், திரு. மாம்பாக்கம் நாராயண சந்திரசேகரன்** அவர்களுடைய மாபெரும் உதவியாகும்.

நாங்கள் இருவரும் சேர்ந்தே இக்காப்பியம் முழுமையும் படித்தோம். அவருடைய ஆழ்ந்த சங்க இலக்கிய ஞானம் இப்போது கிடைக்கிற பதிப்பில் இருக்கிற குறைபாடுகளைத் தெரிந்து கொள்ளவும், வண்ணக் களஞ்சியப் புலவருடைய இலக்கியப் புலமையின் ஆழத்தை உணர்ந்து கொள்வதற்கும் உதவிற்று.

திரு. நா. சந்திரசேகரன் அவர்களுடைய உதவிஇல்லாவிட்டால் இந்தப் பணியை என்னால் நிறைவேற்றி இருக்கவே முடியாது.

திரு. நா. சந்திரசேகரன் அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவ்வப்பொழுது, அங்கும் இங்குமாகச் சிற்சில ஐயப்பாடுகளை நிவர்த்தித்துக் கொள்வதற்கு உதவிய **ஜனாப் எம். ஸையிது முகம்மது ''ஹஸன்''** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

நூல் வடிவில் வந்திருக்கும் இச்சொற்பொழிவினைப் படிப்பவர்கள் ஒன்றைக் காணத் தவறமாட்டார்கள். அதுதான் ''காப்பியக் கதைச் சுருக்கம்'' என்ற பகுதியில், (தலைமுறை தோற்றப்படலம் நீங்கலாக) இடம் பெற்றிருக்கும் நடைக்கும், பிற பகுதிகளில் இடம் பெற்றிருக்கும் நடைக்கும் உள்ள வேறுபாடு.

கதைச் சுருக்கப் பகுதி பெரும்பாலும் காப்பியத் தொடர்களைக் கொண்டும் பிற இலக்கியத் தொடர்களைக் கொண்டும் அமைக்கப் பெற்றது.

''முன்னோர் மொழி பொருளே அன்றி அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும்......''

(நன் பொதுப்-9)

இப்பகுதி ''சாலும் கரி''

திரு. நா. சந்திரசேகரன் அவர்களுடைய ஆழ்ந்த சங்க இலக்கியப் பயிற்சியே, இந்த நடைக்கு முழுக்க முழுக்கக் காரணம்.

பிற பகுதிகளில் அமைந்தது என் இயல்பான, வழக்கமான நடை. இங்கும் கூட நான் சொல்லிக்கொண்டு வரும்போது எழுதி வந்த அவர் தம்முடைய இலக்கியப் பயிற்சியினால் பெற்ற திறனை அங்கும், இங்கும் காட்டத் தவறவில்லை.

சங்க இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டுவதற்கு உதவியவரும் அவரே.

"யாம் பெற்ற இன்ப பெறுக இவ்வையகம்" (திருமந்திரம்) என்று பலரும் பேசுவர், செயற்படுவர்.

"யாம் பெற்ற இடர்ப்பாடு எவரும் பெறற்கதில்"

இவ்வெண்ணத்தாலேயே பாடல்களை விளக்க வேண்டிய இடத்துச் சந்தி பிரித்துக் கொடுத்துள்ளேன்.

மனித முயற்சி எதுவுமே பூரணத்துவம் பெறமுடியாது. இறைவன் அருள் பூரணமாக இருந்தாலும் அந்த முழுமை மனித முயற்சிக்குக் கிடைத்து விடாது.

இந்த நூலை எழுதி வரும்போது "அகலக்கால் வைத்து விட்டோமோ?", "நிலை (ஆழம்) அறியாது நீர்ப்புக்கோமோ?" என்று எண்ணக் கவற்சி மேவி மனத்தளர்வு பெற்ற சந்தர்ப்பங்கள் பல.

எனினும் குறைவாகவோ, நிறைவாகவோ இதனை முடிக்க அருளிய **இறைவனுக்கே துதிகள் அனைத்தும் சாரும்.**

அப்பழுக்கு அற்ற முழுமையும் பரிபூரணத்துவமும் இறைவன் ஒருவனுடைய பண்பே ஆகும்.

இப்பின்னணியில் இச்சொற்பொழிவில் காணப்பெறும் தவறு களையோ, பிழைகளையோ அறிஞர்கள் அனுதாபத்துடன் அணுகி அவற்றை எடுத்துக் காட்டினால் அவர்கட்கும் நன்றி உள்ளவனாக இருப்பேன்.

**சென்னை-4**
**17-12-1984**

மு. மு. இஸ்மாயீல்

# பொருளடக்கம்

# 1. நூன் முகம்

முஸ்லிம்களுடைய திருமறை ஆகிய திருக்குர்ஆன்[1] படியும், இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளின்படியும் இஸ்லாம்[2] என்பது முகம்மது நபி (ஸல்)[3] அவர்களால் ஏற்படுத்தப்பட்ட புதியதொரு மார்க்கம் அன்று. இறைவன் மனிதனைப் படைத்ததி லிருந்து அவனுடைய வாழ்க்கை நெறியினைச் செம்மைப்படுத்து வதற்காகத் தன்னுடைய தூதர்களை நியமித்துக் கொண்டே இருந்திருக்கிறான். அவர்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் பொதுவாக ஒரு நெறிமுறையை உணர்த்தி, அதனைப் பிற மக்களுக்கும் உபதேசிக்குமாறு, ஒரு தூண்டுதலை ஏற்படுத்தி இருக்கிறான். இத்தகைய, இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அவனுடைய தூதுவர்கள் நபிகள்[4] என்று கூறப்படுவர்.

முகம்மது நபி (ஸல்) அவர்கள் வாக்குப்படி 1, 24,000 நபி மார்கள் இவ்வுலகின் பல பாகங்களுக்கும் அனுப்பப் பெற்றிருக் கிறார்கள். திருக்குர்ஆன் நபிமார்கள் அனுப்பப் பெறாத எந்த பூஉலகத்தின் பகுதியும், மக்கள் பகுதியும் இல்லை என்றே கூறு கிறது. இதன்படி மனிதன் தோன்றிய காலம் தொட்டு இறைவன் மனிதர்களுக்குத் தன்னுடைய தூதர்களை அனுப்பி அவர்கள் வாழவேண்டிய நெறியை அறிவுறுத்தியே வந்திருக்கிறான்.

ஒரே இறைவன் தன்னுடைய படைப்பினங்களுக்கு அவர்கள் வாழும் நெறியை அவ்வப்பொழுது பல தூதர்களின் மூலமாக உணர்த்திக் கொண்டிருக்கும் பொழுது, அந்நெறியின் அடிப்படை யில் மாற்றம் இருக்க முடியாது. இப்படி அடிப்படை மாற்றம் அற்ற மதத்தின் பெயர்தான் இஸ்லாம் ஆகும். அந்த இறை

வனுடைய கட்டளைக்கு அடிபணிந்து நடப்பவன் முஸ்லிம் ஆவான். அந்த இறைவனை மறுப்பவனோ, அந்த இறைவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாதவனோ காபிர்[5] எனப்படுவான்.

திருக்குர்ஆன் வசனங்கள் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு நேரிடையாக இறைவன் கூறுபவையாக அமைந்திருக்கின்றன. அப்படிக் கூறுவனவற்றுள் ஒன்று,

முகம்மது நபி(ஸல்) அவர்களுக்குத் தான் அறிவுறுத்துவது அவர்களுக்கு முந்தைய நபிமார்களுக்கு அறிவுறுத்தியவற்றிலிருந்து வேறுபட்டது அன்று என்பதாகும்.

இதிலிருந்தும் இஸ்லாம் என்பது மனிதனுக்கு என்று இறைவன் வகுத்த நெறியின் பெயர் என்பது தெளிவு.

இது அன்றியும் திருக்குர்ஆனில் காணப்படும் சில வசனங்கள் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு முன் தோன்றிய நபிமார்களையும் முஸ்லிம் என்றே குறிப்பிடும். இதுவும் மேற்குறிப்பிட்ட கருத்தையே வலியுறுத்துவது ஆகிறது.

இஸ்லாம் என்பது முகம்மது நபி (ஸல்) அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட மார்க்கம் என்றும், அதைப் பின்பற்றுபவர்கள் முஸ்லிம்கள் என்றும் ஒரு தவறான கருத்து பரவலாக இருக்கிறது.

இராஜநாயகம் என்னும் இக்காப்பியமோ முகம்மது நபி(ஸல்) அவர்களுக்கு முன் தோன்றிய தாவூது நபி அவர்கள் உடைய புத்திரர் ஆன சுலைமான் நபி அவர்களைப் பற்றியது.

இக்காப்பியத்தில் இஸ்லாம், முஸ்லிம், தீன், ஈமான், குபிர், கலிமா போன்ற சொற்கள் இடம் பெற்றிருக்கின்றன.

இஸ்லாம் முகம்மது நபி(ஸல்) அவர்களுடன் தோன்றிய புதிய மார்க்கம் அன்று; ஏக இறைவனுடைய என்றும் உள ஒரே மார்க்கம்தான் என்ற இஸ்லாமிய அடிப்படைக் கொள்கையைக் கருத்தில் கொண்டால் அன்றி புலவருடைய இத்தகைய சொல் ஆட்சி மயக்கத்தை உண்டாக்கக் கூடும். எனவே தான் இக் கொள்கை இங்கு எடுத்துக் காட்டப்பெறுகிறது.

இதன் அடிப்படையில் இறைவனால் படைக்கப்பட்ட ஆதி மனிதன் ''ஆதம்'' ஆவார். இவர் முதல் நபியும்கூட. இறைவனுடைய இறுதித் தூதராக வந்தவர் தாம் முகம்மது நபி (ஸல்) ஆவார்கள்.

அவர்க்கு முன்னர்தான் முற்கூறப்பெற்ற 1, 24,000 நபிகள் தோன்றினர். இந்நபிமார்களுடைய பெயர்கள் அனைத்தும் திருக்குர்ஆனில் குறிப்பிடப் பெறவில்லை. இருபத்தைவர் பெயர்கள் தாம் குறிப்பிடப் பெற்றிருக்கின்றன.

இப்பொழுது இரு செய்திகளைக் கவனிக்கலாம்.

ஒன்று: 1, 24, 000 நபிமார்களை அனுப்ப வேண்டிய அவசியம் யாது?

இரண்டு: முகம்மது நபி (ஸல்) அவர்கள் இறைவனின் இறுதித் தூதர் என்று ஏன் குறிப்பிடப் பெறுகிறார்கள்?

திருமறையே கூறுவது போல் உலகின் எல்லாப் பகுதிகளுக்கும், மனித இனத்தின் எல்லாப் பிரிவினர்க்கும் இறைவன் தன் தூதரை அனுப்பி இருக்கிறான். இவர்கள் குறிப்பிட்ட இடத்திலே வாழ்ந்த மக்கள் பகுதியினரை மாத்திரம் நல்வழி நடத்துநராக இருந்தனர். அம்மக்களும் காலப்போக்கில் தங்கள் நன்னெறி தவறி இறைவனுக்கு ஒவ்வாத பாதையில் புகத் தலைப்பட்டனர். அவர்களைத் திருத்தி மீட்டும் நன்னெறி சேர்க்கத் தூதர்களை அனுப்பும் அவசியம் ஏற்பட்டுவிட்டது.

முகம்மது நபி (ஸல்) அவர்களை ஒரு குறிப்பிட்ட மக்கள் தொகுதியினர்க்கு மாத்திரம் நபி ஆக அனுப்பாமல் இப்பிரபஞ்சம் முழுவதற்குமே நபியாக அனுப்பியதன் காரணம் ஆகவும், அவர்களுக்கு இறைவனால் அருளப்பட்ட வேதம் ஆகிய திருக்குர்ஆன் எல்லாக் காலத்திற்கும், எல்லா மக்களுக்கும் பொருந்துவது ஆன நடைமுறைகளையும், தத்துவங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதாலும், முகம்மது நபி (ஸல்)அவர்கள் இறைவனின் இறுதித் தூதர் என்று கொள்ளப்பெறுகிறார்கள்.

இதில் இருக்கும் இன்னொரு சிறப்பும் யாது எனில் இறைவன் 'ஆதம்' என்னும் முதல் மனிதனைப் (முதல் நபி இவரே) படைக்கும் பொழுதே இறுதியாக முகம்மது நபி (ஸல்) அவர்களைப் படைக்கும் தன் சித்தத்தையும் வெளிப்படுத்திவிட்டான்.

இதன் காரணமாக முகம்மது நபி (ஸல்) அவர்களின் ஒளியை ஆதம் நபி தொடங்கி இறுதியாக முகம்மது நபி (ஸல்) பிறக்கிற வரை மரபு வழி பொருத்திக் கொண்டே வந்தான். அம்மரபு வழியாவது:

1. ஆதம்
2. சீது (நபி)
3. யானூசு
4. ஹயினான்
5. மகுலீல்
6. எறாது
7. உகு நூகு
8. இதுரீசு (நபி)
9. மத்தூ சல்கு
10. லாமக்
11. நூகு (நபி)
12. ஷாம்
13. அறுபகுசது
14. சாலகு
15. ஐபறு
16. பாலகு
17. றாகுவா
18. சாறூகு
19. நா கூறு
20. ஆசறு
21. இபுறாகீம் (நபி)

இஸ்மாயீல் (மூத்த மகன்) — இஸ்ஹாக் (இளைய மகன்)

இஸ்மாயீல் சந்ததியார் பனீ[6] இஸ்மாயீல் என்றும், இஸ்ஹாக் சந்ததியார் பனீ இஸ்ராயீல் என்றும் வழங்கப்பெற்றனர்.

இவ்விரு வம்சத்தையும் சேர்ந்தவர்களே முஸ்லிம்களும், யூதர்களும் கிறித்தவர்களும் ஆவார்கள். முகம்மது நபி (ஸல்) அவர்கள் தோன்றுகிறவரை எல்லா நபிமார்களும் பனீ இஸ்ராயீல் வர்க்கத்திலே தான் உதித்தார்கள்.

இஸ்ஹாக் நபியின் மைந்தர் யஃகூப் நபி. இவர்க்கு "இஸ்ராயீல்" என்றும் ஒரு பெயர் உண்டு. எனவே தான் இவருடைய மரபினர் பனீ இஸ்ராயீல் என்று அழைக்கப் பெறுகிறார்கள். மேலும் பனீ இஸ்ராயீல் மரபினர் பாலஸ்தீனத்திலும், பனீ இஸ்மாயீல் மரபினர் அரேபியாவிலும் வாழ்ந்துவந்தனர்.

இந்த இரு வம்சாவளியினர்க்கு இடையிலேயே இறை நெறிப்படி நடவாதவர்களும் உண்டு. ஆகையால் தான் அவ்வப்பொழுது நபிமார்கள் தோன்ற வேண்டிய அவசியம் உண்டாயிற்று.

பனீ இஸ்ராயீல்களின் முதல் நபி மூஸா நபி (ஸல்) ஆவார்கள்; இறுதி நபி ஈஸா நபி (ஸல்) ஆவார்கள்.

இவரைத் தான் [ஈஸா நபி (ஸல்)] கிறித்தவர்கள் ஜீஸஸ் என்று அழைக்கிறார்கள். தமிழில் ஏசு, (அல்லது) இயேசு என்றும் எழுதுகின்றனர்.

இனி இந்த மரபு வழியை மேலும் காண்போம்.

21. இபுறாகீம்
|
இஸ்ஹாக்
|
யஃகூப்
|
எஹூதா
|
பாறில்
|
கில்றூன்
|
தாம்
|
காரிப்
|
உமை
|
நஜூத்தூர்
|
சில்மூன்
|

பாகிறு
|
வைது
|
ஈசா
|
தாவூத் (நபி)
|
சுலைமான் (நபி)
|
றசுகீம்

(சுலைமான்—இராஜநாயகக் காப்பியப் பாட்டுடைத் தலைவர்)

மூஸா நபி (அலை) அவர்கள் தாவூத் நபி அவர்களுக்கு முன்னரும் ஈசா நபி, தாவூத் நபிக்குப் பின்னரும் தோன்றியவர்கள்.

தாவூத் (அலை) அவர்களும், சுலைமான் (அலை) அவர்களும் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு முந்தையவர். முன்னவர் இருவரும் பனீ இஸ்ராயீல் வகுப்பினர். முகம்மது நபி (ஸல்) அவர்கள் பனீ இஸ்மாயீல் வகுப்பினர்.

எல்லா நபிமார்களுக்கும் இறைவன் நன்மாராயத்தை அனுப்பி வைத்திருந்த போதிலும், மூசா நபி (அலை), தாவூத் நபி (அலை), ஈசா நபி (அலை), முகம்மது நபி(ஸல்), ஆகிய நால்வருக்கும் பிரதானமாகக் கருதப்படுகிற நான்கு வேதங்களை அருளினான், அனுப்பி வைத்தான்.

அவை முறையே தௌராத், ஜபூர், இன்ஜீல், புர்க்கான் (அல்குர்ஆன்) என்பன ஆம்.

தாவூத் (அலை) அவர்கள் இறைவனுடைய நபியாக இருந்ததோடன்றி மாபெரும் சக்தி வாய்ந்தவராகவும் இருந்தார்கள்.

தாவூது (அலை) அவர்சள், அரசுப் பொறுப்பையும் நபித்துவத்தையும் ஒருங்கே பெற்றவருள் முதல்வர் ஆவார்.

இறைவன் இவர்களுக்குத் தன்னால் அருளப்பட்ட ஜபூர் வேதத்தைப் பல்வேறு (70வகை) பண்களில் ஓதும் திறனையும் உடன் அளித்தான் என்பர்.

கனிந்து உருகி இம்மறையை ஒலிக்கக் கேட்பின் மலையும், குன்றும், விலங்கும், புள்ளினமும், மனிதரும், எதற்கும் உருகாக் கல் நெஞ்ச ஜின்களும், ஷெய்த்தான்களும் உருகுமாம்.

இயங்கியல் உயிர்கள் அவரைச் சூழநின்று அகலாவாய்த் தம் வசம் இழந்து நிற்குமாம்.

ஓடும் நீரும், அசை இயல் காற்றும் கூட அசைவறும் என்பர்.

## குறிப்புகள்

1. திருக்குர்ஆன்:
முகம்மது நபி(ஸல்) அவர்களுக்கு இறைவன் அவர்களுடைய நாற்பதாவது வயதில் இருந்து, அறுபத்து மூன்றாம் வயது வரை (இப்பூவுலகை அவர் நீத்த வரை) ஜிப்ரயீல்* என்னும் மலக்கு மூலமாக அறிவித்த இறை வசனங்கள் ஆகும். இதுவே அல் புர்க்கான் என்றும், புர்க்கான் என்றும் குறிக்கப் பெறும்.

மலக்கு:

மலக்குகள் -வானவர், விண்ணவர்.
(தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி- மதுரை காமராசர்: பல்கலைக் கழக வெளியீடு, பக்கம் 202)
மலா இக்கத் (பன்மை). இவர்களுள் முக்கியமானவர்கள்: ஜிப்ரீல் (அலை), இசுறாஃபீல் (அலை), மீக்காயீல் (அலை), இஸ்ராயீல் (அலை) ஆய நால்வர்.

ஜிப்ராயீல் (அலை) விண்ணவர் தலைவர் ஆவார்கள். இவர் தாம் இறைத்தூதுவர்களுக்கு இறைவனிடமிருந்து செய்தி கொணர்பவர்.

இசுறாஃபீல் (அலை)— காற்றின் அதிபதி. மீக்காயீல் (அலை) — மழை பொழிவிக்கும் பொறுப்பினர்; வானப் பாதுகாவலர். கடலை நிர்வகித்தல்; படைப்புகட்கு உணவளித்தல்: கருப்படு உயிர்களுக்கு உரு அமைக்கும் பொறுப்பினர்; இஸ்ராயீல் (அலை) —படைப்பினங்களுடைய வாழ்நாட்காலம் முடியும் வேளையில் உயிர் கவர்வார். மரணம் என்பதனை 'மவுத்' என்னும் அரபுச்சொல் குறிப்பதனால், இவர் 'மலக்கல்மவுத்' எனப்படுவார்.

2. இஸ்லாம் : இது ஓர் அரபுச் சொல். இதன் வேர்ச் சொல் ஸலாம் என்பர்; ஸலாம்—சாந்தி, அமைதி, நிம்மதி என்ற பொருளது. இஸ்லாம் என்ற சொல்லுக்கு சாந்தியையும் அமைதியையும் நிலைநாட்டும் நெறி என்பது பொருள் ஆகும். இதன் காரணம் ஆகவே முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் பொழுது "அஸ்ஸலாமு அலைக்கும்" (-உங்கட்குச் சாந்தி உண்டாவதாக) என்று கூறுகிறார்கள். அதேசமயத்தில் 'ஸல்லம' என்ற அரபுச் சொல்லுக்கு சரண் அடைதல், புகல் தேடுதல் என்பன பொருள்,

இவ்வடிப்படையில் பார்க்கும் பொழுது இஸ்லாம் என்ற சொல்லுக்குச் சரணாகதி, கீழ்ப்படிதல் என்ற பொருள் கிடைக்கும். எனவே இறைவனிடத்துச் சரண் அடையும் நெறிதான் இஸ்லாம் என்பதாகும். இறைவனுடைய படைப்புகளில் தானும் ஒருவன் ஆனதால் பிற படைப்பு களோடு சாந்தியுடனும், அமைதியுடனும் ஒழுகும் நெறியை உணர்த்துவதும் இஸ்லாம் ஆகும். இத்தகைய இஸ்லாத்தைப் பின்பற்றுபவன் 'முஸ்லிம்' எனப்படுவான்.

3. ஸல்-
ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என்பதன் சுருக்கம். இதன் பொருள் "இறைவனுடைய நல்லாசியும் சாந்தி யும் அவர்கள்பால் உண்டாவதாக" என்பதாம்.

4. நபி:
நபி என்ற சொல் 'நபஉ' என்ற வேர்ச் சொல்லில் இருந்து பிறந்தது என்றும், மிகவும் பயன்தரத்தக்க நன்மாராயத் திற்கு 'நபஉ' என்பது பொருள் என்றும், இதனை இறை வனிடமிருந்து பெற்றுத் தருபவருக்கு நபி என்பது பெயர் என்றும் கூறுவர்.

5. காபிர் - குபிர் - மறுப்பவர்; இறை நெறி மறுக்குநர். இச்சொல் 'குப்ர்' என்ற சொல்லில் இருந்து தோன்றியது. இதன் நேர்ப் பொருள் உண்மையை மறைத்தல், மூடுதல் என்பதாம். விதையைத் தூவி அதன் மீது மண் இட்டு மறைத்து வைப்பதற்கும் இச்சொல் பயன்படுத்தப் படுகிறது. இது இறைவனை மறைத்தல் அல்லது நிரா கரித்தல் என்னும் பொருளில் திருக்குர்ஆனில் பயன் படுத்தப்பட்டுள்ளது. இச்செயல் மேவுநர் காபிர் எனப் படுவர்.

6. பனீ : பனூன் என்ற சொல்லில் இருந்து பிறந்தது. இது குலம், குடும்பம், வர்க்கம் என்று பொருள்படும்.

# 2. காப்பியக் கதைச்சுருக்கம்

வில் உறு பஞ்சியில் விண் பரந்த வெண்மேகங்கள் விரிகடல் தலம்புக்கு மட்டற நீர் அருந்தி, கரிய மலைபோல் திரண்டன.

2. நாட்டுப் படலம்

எண்டிசைக் களிறுகள் ஒரு வழிச் சேர்ந்து பிளிறுவ போல் கொண்டல்கள் குமுறின. பல்கீசு இட்டிடை போல் மின்னின. ஓங்கலிடை, உயர்வான் நின்று உயிர்கள் புகுதற்கு ஒருவன் அமைத்த வெள்ளி நூல் ஏணி போல் தாரைகள் பொழிந்தன. உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈந்தது வள்ளல்வான்.

குன்றும் குளிர்ந்தது. இருள் துஞ்சு பெருமுழையில் முடங்குளைச் சீயம் ஒன்று புக்கு, குளிர் ஆற்றாது, வயிற்றிடைத் தலை நுழைத்து, அனல் கால் விழிகள் முகிழ்த்து உறங்கியது. வரைபடு விலங்கினம் யாவும் அம்முழை சேர்ந்தன. பகையுள சீயமும், வாள் வரி வேங்கையும் உள என அறியாது கோட்டுமா, புல்வாய் போல்வன பிறவும் உட்புகுந்து ஒடுங்கின. துஞ்சுபுலி இடறின. அவை இடறினும் தளரினும் அவை பாராதனவாய் கொல் இயல் மாக்களும் உறக்கமே மேவின.

பெருகிய நீர்த்திரள் அகில் சுமந்து, ஆரம் முழு முதல் உருட்டி கிளைமுதல் சேர்ந்த புட்குலம் கலைய, கூடும் குஞ்சும் இழந்து அவை அலறப் பாய்ந்து ஓடியது.

குன்றக் குறவர் வாழிடம் அழித்து அவர் படைக்கல வகைகள் அனைத்தும் திரட்டி மலையரசு கடல் அரசன்பால் பொரக் கருதியது போல் விரைந்து பாய்ந்தது.

பொன் கொழித்து, மணிதிரட்டி, முத்து ஈர்த்து, நிலன் நெளி மருங்கில் நீர் நிறைத்து, பரந்து, பாலைப் பரப்பினும் உலாயது.

விண்டுள விடர் எலாம் உட்புகுந்து ஓடி வேரல், கள்ளி வேலி பெயர்த்து, சூறையிட்டு அகன்று, முல்லை நிலத்தைக் கடந்து, பாறையிட்ட வெண்டயிர் மிடாக்கள் உடைத்துக் கலந்து, ஏரி நிறைத்து எங்கணும் பரவி கிணைப்பறை ஒலித்திடப் புகுந்தது. உழவர் திரண்டனர். ஆற்றின் கரை உயர்த்தினர். வயல் உழுதனர். கொழு கிழித்த சாலில் கிடந்து மின்னிய மணிகளைத் திரட்டி வரம்பில் இட்டனர். தாமரை, குவளை, நெய்தல், கழுநீர் ஆகிய மலர்களைக் களை எனப் பறித்து, கள் சோர அவற்றை நீடிய வரப்பில் வாடிய விட்டனர்.

முகிலிடைத் தெரிதரும் உடுக்குலம் போல சேற்றிடை மின்னின வளை தரு மணிகள்.

உழுது, சேறு செய்து, தெய்வம் தொழுது, நன்னாள் குறித் தனர்.

பின் அந்நாளில் விதை தெளித்தனர். மரமேறி மந்தி பாய கிளைகள் அசைய, மலர்கள் தேன் உகுத்தன. அத்தேனும் வரம்பில் எறிந்த கமலங்கள் உகுத்த தேனும் வாய்க்கால் வழி ஓடி வயலிற் பாய்ந்தன.

நந்திலாப் பெருந்தவம் என நாற்று வளர்ந்தது.

பசுங்கருமை தரும் பருவம் அடைந்த நாற்றினைப் பறித்த கடைசியர், கள்வழி வாயர், இரு விழி சிவந்து, குழல் சரிய, குழை கள் ஊசலாட, குடமுலைத் தடம் ஆட, இடை ஒசிய பிறிதொரு வயலில் நடுதல் செய்தனர்.

மணப்படு சேறு மதி முகம் தெறித்தது. களக்கறு மதி எனில் கண்ணேறு படும் என அது கழிய இட்ட மைப்பொட்டு போலாம்.

பெயர்த்த அடிதொறும் முத்துகள் கண்டார். அவை விண் மதிக் கடவுள் "இவர் அழகில் சிறிது கவர்ந்து வருக" எனத் தாரா (உடு) கணங்களை ஏவியது போல் விளங்கின.

நெற்பயிர் சிறியவர் மனப் பெருமை போல் இறுமாப்புடன் தலை, நிறுவி, சூல் முதிர்ந்து, கொய் உளைப் புரவி குனிந்த] தலை போல், வளைந்து நிலம் படிந்தது.

முற்றிய பயிர்கண்டு முதிர் உவகையினார், காவி அம்தொடை யல் கமழ் தர அணிந்து, கூனிக் குயத்தின் வாய் நெல் அரிந்து, தாள் அடித்தனர்; மணி குவித்தனர்.

பகடு நடத்தி, அதரி திருத்தி, வை அகற்றி, போர் குவித்தார். குவை செய் நெல்மணி பண்டி நிறைத்து நெறிகளும் புதைய, மண் நெளிய ஊர்ந்து திரு உறை களஞ்சியம் நிறைத்து நித்திய கல்யாண வாழ்வு அடைந்தனர்.

காய்குலைக் கமுகும், விழுக்குலைத் தெங்கும், கன்னலும், செந்நெலும், கோங்கும், வாழையும் செறிந்த தண்டலை வளம் நிறைந்த நாடு சாம்.

தண்டலை மயில்களாட, தரு உதிர் பொன் மகரந்தம் உடல் போர்க்க, நீலநிற மஞ்ஞை நிறம் பெயர்ந்து அமைய, பிற கேகயங்கள் தழுவு நம் இனமோ, அலவோ என ஐயுறும்; உற்று நோக்கும்; எனினும் அயிர்ப்பு நீங்கா.

அரிமயிர் முன்கைப் புரி வளை மாதர் பொய்கைத் தடம் படிந்து ஆடின், வெண்மதி வந்ததால் நம்பால் என்று ஆம்பல் பொதி அவிழ்க்கும். அரவிந்தம் முகம் குவியும். பொறிவரி வண்டு கள் ஆம்பல் மலருட் புக்கு ஆர மாந்தும். அவர் கரை ஏறின் ஆம்பல் இதழ் மூட, அளித்திரள் உட்கிடந்து ஆவித்து உழலும்.

கிடங்கரில் பாய்ந்து, கொழு மீன் குறைய, வள்ளிதழ்க் குவளை மேய்ந்த குடம்படு செருத்தல், கயவாய் எருமை ஊதுலைக் குருகின், ஒய் என உயிர்த்து முட்டுவரால் கன்றென்று முலை அமுது ஒழுக்கும். தண்ணீர்ப்பரப்பு தன் நிறம் பெயர்ந்து உருக்கிய வெள்ளி ஓடவிட்டாற்போல் அமையும்.

கிடங்கர் (க்கரை) மாஅத்து விளைந்து உகு மகரந்தத்துகள் நீர்ப்பரப்பில் படுதல் பொன் உருக்கிச் சாய்த்தது போலாம் என்ப.

கனி உண் நசையர் கரை அகத்த, செம்முக வெண்ணரைக் கல்லா வன் கவி கல்லால் எறிவர். விரைந்து மரம் ஏறிய அச்செழுங் குரங்கு தேமாவின் பழங்களைப்பந்து அடிக்கும். விழுமுனம் பிடித்து வேணவா தீர்வர்.

தகட்டுவரால் துள்ள, அஞ்சிய அளிக்குலம் மலரின் நீங்கி திரள் பட மேல் எழுந்து சென்று மீட்டும் மலர் படிதல், ஆம்பல் வாய் வயல் எனும் அணங்கு கருமணி எறிந்து கரங்களால் ஏந்தி அம் மனை ஆடுதல் போலாம்.

மருக்கொள், இதழ்விரி மலர்களின் மகரந்தம் அடுத்துள முருக்கு அலரில் ஆரப்படிந்து அதற்கும் மணம் அளித்தல் பெரியார்ச் சார்ந்த சிறியாரும் பிறரால் விரும்பப்படுதல் போலாமால்.

கனிமரக்காவில் அங்கும் இங்கும் பாய்ந்து கவிக்குலம் துள்ளவால், விரிதலைக் கமுகின் சேறு கொள முற்றிய குலைகள் சிதறும். மகிழ்மலர் உதிரும். பொன்னிறத்தாது பரந்து நிலம் போர்க்கும்.

இக்காட்சி திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்தில் மரகத மணியும், பதுமராகமும், பொன் அணிகளும் கடைபரப்பி வைத்த போல் அமையும்.

அந்நாட்டார் ஈய விரும்பியும் ஏற்பார் இலையே எனச்சலிப்பர். இச்சலிப்பு அலால் சலிப்பு பிற இலை. தேய்ந்து போவன தெரி இழையார் மருங்குலே பிற அல. ஏந்துகைக் கொடியர் அன்றி இயற்கையில் கொடியர் இலர். பாவ நிந்தனை அன்றிப் பிற நிந்தனை இலை.

நீராரும் கடல் உடுத்த நில மடந்தைக்கு எழில் ஒழுகும் சீராரும் அணிகள் எனத் திகழ் நகர்கள் பிறவாக, அவள் அணி தடமுடி மகுடம் என நெடுவளம் குலவுவது சாம் நகரம்.

பாடல் சான்ற, பயன் பல துறுமிய, பீடார் சிறப்பின் பெருந்தகு திருநகர் ஆகும்.

வன் கொண்டல் விட்டு மதி முட்டும் புரிசைகள், நன்னீர்க் கடலை நகர்ப்புறம் வளைத்தென அகழித்தடம் உடையது.

3. நகரப் படலம்

வயவர் எறி வாள் என வெடிபோம் வாளைகள் வாழ் அவ்வகழித் தடத்து குவளையும் ஆம்பலும், பங்கயங்களும் மலர்ந்து விளங்கின. மீன் தேர் கொட்பின் சிரல் முதலன சிறை விரித்து அந்நீர்ப்பரப்பு முழுவதும் நிழற்றின.

கொங்கு தேர் வாழ்க்கைஅஞ்சிறைத் தும்பிகள் ஒரு மலர்த்தேனே ஆரமாந்தி ஆலித்து உழன்றன.

அம்மதில் வாயில், அழகு ஒழுக ஆடகப்பொன்னால் அமைக்கப் பெற்ற திண்ணிய நிலைகளும், போர் அமைபுணர்ப்பின் பொலங்கொள் கதவங்களும் கொண்டது. உலக வளம் எலாம் ஒருவழித் தொக்க என வயங்குவது.

களக்கறு மதியக் கதிர்களைத் திரட்டிப் பூசியபோல் விளங்கும் வெண்சுதை மாடங்கள்; கொண்டல் இளைப்பாறும் மேல் தளங்கள், நவமணி பதித்த கோபுரக் கலசங்கள் கணக்கில.

ஆசான் உரைத்தவை அமைவுறக் கொள்ளான் மனம்போல் தனித்தன்மை ஒன்று அமைவது இன்றி, அடுத்தவர் இயல்பெலாம் தனதாக்கிக் காட்டும் பளிக்கினால் அமைந்த, முதிர்வளம் செறிந்த மாடங்கள் பல. அவற்றுள் பதித்த மணிக்கொடிகள் காற்றில் அசைந்து விண்தவழ் மதியின் வியர்வகற்றி இளைப் பாற்றும்.

மாளிகையின் மேல் தளங்களில் பந்தினை இளையவர் பயில் வர். குழல் சோர, வியர்சேர, ஆடுவர். சூட்டிய முல்லை அரும்புகள் அவர் காலிடை உதிர்ந்து உறுத்தும். முலைக்கு இணை எனலால் பந்து அடிபடும். முறுவற்கிணை எனலால் முல்லை மிதிபடும்.

சில இடங்களில் மறை எனல் அறியா மாயம் இல் ஆயமொடு மங்கையர் சிலர் அம்மனை ஆடுவர். கொலை விழி புரளும்; சுரி குழல் நெகிழும்; திமிர் முலைத்தடத்திடை வடம் உருண்டு அசை யும்; குழை ஊசலாடும்.

உபயதனம் அசையில் ஒடியும் இடை எனக் காலணி சிலம்புகள் எச்சரிக்கை ஒலி எழுப்பும்.

காந்தன் தந்த, கைத்தலம் கொண்ட கவினுறு அஞ்சுவனக் கிளியை உற்று நோக்குவர் செஞ்சொல் மடந்தையர். தம் கண் நிறம் பாய்ந்து கிளி கறுத்திடலால் கறுத்துச் சினந்து, ''பொய் வலாளரே! மெய்போல் கருங்கிளி ஒருங்களித்தீரோ?'' என ஊடு வர். எழுநிலை மாடத்து இடை நிலத்துக் காட்சி இது.

பளிங்குத் தலத்திடை நின்ற ஒருத்தியின் கண்இணை கவிழ்ந்து தளம் நோக்க, கயல் எனச் சாயை தோன்றியது. பளிங்குத்தடம் நீர்த்தடம் என, கண் நிழல் கயல் எனக் கருதிய விரி சிறைச்சிரல் ஒன்று வீழ்ந்து பற்றக் கருதி அலகு முறிந்தது.

பளிக்கறை ஒன்றனுள் துன்று கருங்குழல் மாது ஒருத்தி நடை பயில, சுற்றுச் சுவர் எலாம் சூழ் பல் அரிவையர் போல் நிழல் தோன்றல், அரம்பையர் ஆயிரவர் கூடி இவள் மெய்யழகு, நடை யழகு காணத் திரண்டு, தொடர்ந்து நோக்குவது போலாம்.

வயல் படுவன, கான்படுவன, நகர் படுவன, நாடுபடுவன, மலை படுவன, கடல் படுவன, என அளந்தறியாப் பல் பண்டம்

வரம்பு அறியாமை வந்து ஈண்டி கடைத்தெரு நிரம்பும். இவ்விடை இல்லாதது இல்லை. 'இல்லை' என்றமொழி எழுவதும் இல்லை.

உரைப்படு நிதியால், ஒழுக்க நெறியால், நிரப்புறு கொடையால், இறை நெறிச்சார்வால் அந்நகரார்க்கு ஆரும் நிகரிலர். இரப்பாரே இல்லா இருபெரு வளநகர் சாம்.

முன்றில் தோறும் மும்முரசு ஒலிக்கும்; பறந்தலை தோறும் நாற்படை கலிக்கும்; அரங்கம் தோறும் சிலம்பொலி மிகுக்கும்; ஆவணக் களரியில் மணி தூக்கு எழில் தராசு ஒலி சிறக்கும்.

அஞ்சிறைக் கிள்ளையும், பஞ்சரப் பூவையும், வேத கீத ஒலியே மிழற்றும்.

வதுவை செய் இளைஞர் வீதிவாய்ச் சேறின் கண்ணேறுபடும் என ஆலத்தி சுழற்றுவர்.

அதிவிடு மணியும், கனகமும் பிறவும் வீதிவாய்க் குப்பையாய்த் திரளும்.

இத்தகு வளநகர் சாம் இருந்து ஆண்டார் சுலைமான் (நபி) அவர்கள்.

இக்காப்பிய நூலின் பாட்டு உடைத் தலைவர் அவரே!

தலைமுறைத் தோற்றப் படலத்தில் 13 பாடல்கள் உள்ளன.

முதல் இரு பாடல்கள் பொதுவானவை; அதில் முதற் பாடலாவது.

4. தலைமுறைத் தோற்றப்படலம்

நிலையும்ஆய் அடிநடுவும்
அந்தமும் நிகழ்த்த அரிய
தலைவன்ஆம் இறை
அருள்நபிப் பட்டமும் தரித்தோர்
அலையும் ஆழ்கடல் வளைபுவி
அனைத்தையும் புரந்தோர்
சுலையுமான் நபி தலைமுறை
தோற்றமே சொல்வாம் (4:1)

இப்பாடல் கவிக் கூற்றாக அமைந்துள்ளது. இரண்டாவது பாடல்,

பொருள் எலாம் நிறை மறை முதல் இறைவனைப் புகழாது
இருள் எலாம் நிறை தருமனத்தினர் எனும் குபிரர்
மருள் எலாம் அற தீன் நெறியினில் வர அழைத்தோர்
அருள் எலாம் நிறைந்து இருப்பதற்கு இல் இடம் ஆனோர்
(4:2)

என்று பொதுவாகச் சுலைமான் நபி அவர்கள் குல முதல்வர்கள் தன்மையைப் பற்றிக் கூறுகிறது.

மற்ற பதினோரு பாடல்களிலும் நூன் முகத்தில் காட்டி உள்ளபடி இபுறாகீம் (நபி) அவர்களில் இருந்து தாவூது நபி அவர்கள் ஈறாக கொடி வழிப்படி குறிப்பிடப் பெற்றிருக்கிறார்கள்.

அவர்கள் ஒவ்வொருவர் இயல்பைக் குறிக்க ஓரிரு அடைமொழிகள் சேர்த்தே புலவர் பாடி உள்ளார்.

எனினும், இத்தலைமுறையின் முதல்வராகிய இபுறாகீம் நபி அவர்களைப் பற்றி மூன்று பாடல்கள் பாடி உள்ளார்:

அறுதியாய் நமுறூது அனல் புகுத்துவது அறிந்தும்
பெறுதி என்று இறைசெயும் எவை யையும் பெறுவோம் என்று
உறுதி மாறு இலாது உயர்ந்து மண்முதல் பலது உதவி
சிறிதும் வேண்டிலாது இருந்து அருளியது ஒரு செம்மல். (4:3)

பவக்கடல் குடி இருக்கும் நெஞ்சினன் நெடும் பகையோன்
எவர்க்கும் மிக்கவன் முனிவு இறங்கிய நமுறூது அன்று
அவர்க்கு அமைத்தது ஓர் நெருப்பினில் தள்ள அந்நெருப்பில்
சுவர்க்கம் மீதினில் இருப்பது ஒத்து இருந்து அருள் தூயோர் (4:4)

சாற்றும் ஓர் இபுலீசு தன் கலைவினைத் தவிர
மாற்றுவோர்கள் மூசா நபி மற்றவர் ஈசா
ஆற்று நம் முகம்மது நபியாகும் அன்னவரோடு
ஏற்றும் இன்னவர் ஒருவராம் நபி இபுறாகீம். (4:5)

இவ்வாறு இபுறாகீம் நபி அவர்களைப்பற்றிக் கவிஞர் பாடுவதற்குக் காரணங்கள் உள.

முதலிரு பாடல்களில் நமுறூது* என்னும் கொடிய மன்னன் இபுறாகீம் நபி அவர்களை நெருப்பில் இட்டு அழிக்க முயன்றதை

---

* நமுறூது:
உலகம் முழுமையும் ஒரு குடைக் கீழ் ஆண்டவர் நால்வர்.
அவர்களுள் முஸ்லிம்கள் இருவர்; இறைவனை நிராகரித்தோர் இருவர்.

முஸ்லிம்கள்:
1. சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள்
2. சுலைமான் நபி அவர்கள்

காபிர்கள்:
1. நமுறூது
2. புக்து நஸர்

யும், இபுறாகீம் நபி அவர்கள் இறைவன் அருள் ஒன்றையேவேண்டி பிறர்தரு எவ்வுதவியையும் வேண்டா என்று விலக்கி, ஏக இறைவனிடத்து ஒப்பற்ற உறுதி காட்டினார் என்ற செய்தியையும் குறிப்பிட்டு உள்ளார்.

நமுறூது மன்னன் காலத்தில் தான் இபுறாகீம் நபி வாழ்ந்து வந்தார்கள். நமுறூது தன்னையே கடவுள் என்று பறை சாற்றி, நாட்டவர் தன்னையும் வழிபடவேண்டும் எனப் பணித்தான்.

ஆணைக்கு அஞ்சிய அந்நாட்டு மக்கள் தாம் வழிபடு பிற கடவுளர்களோடு, நமுறூதையும் கடவுளாகக் கருதி உருவ வழிபாட்டில் நிலைத்தனர்.

உருவம் அற்ற ஏக இறைவன் வழிபாட்டினை இபுறாகீம் நபி அவர்கள் போதித்ததோடு,'அப்புத்துகள்' அனைத்தையும் எடுத்து எறியச் செய்தார்.

(புத்துகள்-வழிபடு கடவுளர் உருவச்சிலைகள்). அவர் வழி மேற்கொண்டு ஒழுகினோர் அவ்வாறே சிலைகளை உடைத்து எறிந்தனர்.

மூண்டெழு சினத்தன் நமுறூது இபுறாகீம் நபி அவர்களைத் தீக்குண்டம் ஒன்றில் இட்டுக் கொல்ல ஆணை இட்டான்.

கொலைமேல் கொண்டொழுகும் ஏவலர் அரசன் ஆணை ஏற்று நபி அவர்களைத் தீக்குழியில் தள்ளினர்.

மழை பொழி பொறுப்பு ஏற்ற மீக்காயீல் (மலக்கு) நீரைக் கொண்டு தீ அவிக்க அனுமதி கோரினார். "உம் இடம் இருந்து எனக்கு எந்த உதவியும் தேவை இல்லை." என்று இபுறாகீம் நபி மறுத்து விட்டார்.

காற்றுக்குப் பொறுப்பான இசுறாஃபீல் "பெருங்காற்றை அனுப்பி இந்நெருப்பை அவித்துவிட அனுமதி தருக" எனக் கோரினார். இபுறாகீம் நபி அவர்கள்"எவர் உதவியும் தேவை இல்லை", என்று சொன்னார்.

வானவர் தலைவரான ஜிப்ரீல் (அலை) அவர்களும் "நான் ஏதாவது உதவி செய்யவா?" என வினவினார். "உம்மிடத்து இருந்து எந்த உதவியும் தேவை இல்லை. அல்லாஹ் எனக்கு அருளப் போதுமானவன்" என்று சொல்லி ஏற்க மறுத்தார்.

இறைவன்பால் வைத்திருந்த அசைக்க முடியாத நம்பிக்கையின் காரணமாகத்தான் இபுறாகீம் நபி அவர்களைக் கவிஞர்,

''உறுதி மாறிலாது உயர்ந்து மண்முதல் பலது உதவி
சிறிதும் வேண்டிலாது இருந்து அருளியது ஒரு செம்மல்''

என்பார்,

இவ்வுறுதிக்கு அருள் செய்யும் வகையில் நெருப்பிடை இபுறாகீம் நபி இருப்பதனை, அவர்கள் சுவர்க்கத்தில் இருப்பது போல் துயரற்றதாக ஆக்கி வைத்தான் இறைவன்.

இதனை எடுத்துக் காட்டுவது 4ஆம் பாடலின் ஈற்று அடி. ''அருள் தூயோர்'' என்ற சொல் ஆட்சி வியந்து பாராட்டற்குரியது.

5ஆம் பாடலில் இபுலீசின்* தீச்செய்கை எந்த விதத்திலும் அணுகாத, சாராத தன்மையர் நால்வர் எனக் கண்டோம்.

மூசாநபி, ஈசாநபி, முகம்மது நபி (ஸல்). இம்மூவரோடு 'இபுறாகீம்' நபியையும் சேர்த்துக் கூறுவது காண்க.

உண்மையில் இஸ்லாத்தினுடைய வரலாற்றில் இபுறாகீம் நபி அவர்களுக்கு மிகப் பெரிய இடம் உண்டு. திருக்குர்ஆன் இவரைப் பல இடங்களில் மிக உயர்த்திக் குறிப்பிட்டுள்ளது.

---

* இபுலீசு-இப்லீஸ் என்ற சொல் விரக்தி உள்ளவன், நிராசை அடைந்தவன் என்ற பொருளது. இறைவன் அருட்குப் புறம்பானவனானமையால் இவனுக்கு இப்பெயர் அமைந்தது என்பர். ஷைத்தான்களுக்குத் தந்தை (அன்றி) தலைவன் இவனே என்பர்.

மனிதன் மண்ணினால் படைக்கப்பட்டான். இவன் தீயால் சமைக்கப்பட்டான் என்பர்.

[ஒரு மனிதன் எவ்வினத்தன் ஆக, எம்மதத்தவன் ஆக இருப்பினும் அவன் தீயவனாக, கொடியவனாக, ஒழுக்கமிலியாகவோ இருந்தால் அவனையே ஷைத்தான் என்று கூறுவது வழக்கம்]

ஆதி மனிதன் ஆகிய ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்படு முன்னரே படைக்கப்பட்டவன் என்பர்.

இஃதன்றியும் மனிதன் நல்லது, தீயது என்று பகுத்தறிந்து நல்லதன் பாற்பட்டு ஒழுக முயலும்போது அவன் மனத்திட்பம் இன்றி தீயதன்பால் சார்ந்து அவ்வழி ஒழுகத் தலைப்படும் தன்மையை இபுலீசு என்று உருவகமாகக் குறிப்பர்.

'இஸ்லாம்' என்ற சொல்லின் கருத்துச் செறிவிற்கு ஏற்ற எடுத்துக்காட்டு இவரே என்று திருக்குர்ஆன் இவரைக் குறிப்பிடும்.

இறைவன் அவரிடம் ''என்னிடம் முற்றிலும் ஈடுபட்டவராகச் சரண் அடைக'' என்று சொன்னபோது, அவர் ''உலகங்கள் யாவற்றுக்கும் இறைவன் ஆகிய உனக்கு முற்றிலும் வழிபட்டோனாகச் சரண் அடைந்தேன்'' என்று கூறினார் என திருக்குர்ஆன் உணர்த்தும்.

* (2:131)

இதனை மேலும் வலியுறுத்தும் வகையில் ''இபுறாகீம் யூதராகவோ, கிறித்தவர் ஆகவோ, இருக்கவில்லை. ஆனால் அவர் அல்லாஹ்விடம் முற்றிலும் (சரண் அடைந்த) நேர்மையான முஸ்லிம் ஆக இருந்தார். அவர் இணைவைத்து வணங்குவோரில் ஒருவர் ஆக இருக்கவில்லை.'' என்று திருக்குர்ஆன் கூறும். (3:67)

இவை எல்லாவற்றிற்கும் மேலாக இபுறாகீம் நபி அவர்கள் சிறப்புக்குக் காரணமாய் இருப்பது, தன்னுடைய தள்ளாத வயதில் பிறந்த மகனாகிய, இஸ்மாயீல் அவர்களை இறைவன் ஆணைப்படி பலி இடமுன் வந்ததுதான்.

இதனையே திருமறை :

''ஆனால் (இஸ்மாயீல் என்னும்) அவர் அவருடன்கூட வேலை செய்யும் (வயதை எய்திய) பொழுது, பிதா ஆனவர் 'ஏ! என் மகனே! நான் உன்னை (இறைவனுக்குப்) பலியிடவேண்டும் என நிச்சயமாகக் கனவு கண்டுள்ளேன். எனவே, நீ (இது பற்றி அபிப்பிராயம்) என்ன காண்கிறாய் என எண்ணிப்பார்!' என்று கூறினார். (இதற்கு அம்மைந்தர்) 'ஏ! என் தந்தாய்! நீங்கள் கட்டளை இடப்பெற்றவாறே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் என்னைத் தாங்கள் பொறுமைசாலி ஆகவே காண்பீர்கள்' என்று விடை இறுத்தார்.' (37:102)

---

குறிப்பு

* திருக்குர்ஆன் 2:131 என்பது 2ஆம் அத்தியாயத்தைச் சார்ந்த 131ஆம் வசனம் எனப் பொருள்படும்.

முதல் எண் அத்தியாய எண்ணையும் இரண்டாம் எண் வசன எண்ணையும் குறிப்பிடும்.

திருக்குர்ஆனில் 6666 வசனங்கள் உள்ளன. இவை 114 அத்தியாயங்களில் அமைந்துள்ளன.

''ஆகவே, அவ்விருவரும் (இறைக் கட்டளைக்குக்) கீழ்ப்படிய இணங்கியக்கால் அவர் (இபுறாகீம்), அவரை (இஸ்மாயீலை) முகம் குப்புறக் கிடத்தியக்கால்'' (நிகழ்ந்ததை நினைவு கூர்க) என்றும் கூறும். (37:103)

இத்தகைய முழுச் சரணாகதியின் காரணமாகவே இறைவன் திருக்குர்ஆனிலேயே:

''அவருக்காக (அவருடைய கீர்த்தியை)பின் உள்ளோர்களிலும் நிலைக்கச் செய்தோம்.'' (37:108)

''ஆகவே உலகத்தில் உள்ள யாவருமே, ''ஸலாமுன் அலா இப்ராஹீம்'' (இப்ராஹீமுக்குச் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக) என்று கூறுகின்றனர்'' (37:109)

இத்தகைய சிறப்புகளோடு இபுறாகீம் நபி அவர்களைத் திருக்குர்ஆனிலேயே, இறைவன் (அவரை) தன்னுடைய தோழராக எடுத்துக் கொண்டான் என்றும் குறிப்பிடுகிறான். (4:125)

இதன் காரணம் ஆகவே, இபுறாகீம் நபி அவர்களை ''இபுறாகீம் கலீலுல்லாஹ்'' என்று குறிப்பிடுவது வழக்கம்.

சுலைமான் நபி என்னும் பெயர் மேவி, தருமமே என்பது ஒன்றும், தகுபொறை என்பது ஒன்றும், தவம் அருள் என்பது ஒன்றும் களி நடம் புரிய ஒருருக் கொண்டு உற்பவித்தன.

தக்கவர் தாதையார் தாவூது நபி ஆவார்.

## 5. சுலைமான் நபி அவதாரப் படலம்

தாவூதுநபி சபூறு என்னும் வேத நாயகர்; முரண் குபிர்க்கலி முழுவதும் மாற்றியவர்; மண்உலகைப் பொன் உலகாய் மாற்றிடதரணியில்உதித்த தரும தாரு ஆனவர்.

உரம் பெறு குபிரர் தம் உளத்து உறை செருக்கு எனும் இரும்பையும், இறை அருள் கூட, அனலிடை இடாது மலைதரு இரும்பையும், உருக்கி வளைத்து மாற்றும் ஆற்றலர்.

"பிழைபடு குபிரரே! தவறு உணர்ந்து இவர்பதம் தரிசிக்க வாரும். இல்லையேல் இல்லாகிப் போவீர்" என்று அழைப்ப போல் வியன் மதில் குடுமிதோறும் காண்டகு பதாகை ஆடை கைகளால் அழைக்கும்.

மும்முரசு முழக்கு அறா முன்றிலில் முடி மன்னர் பலர் செவ்வி பெறல் பொருட்டு, கொணர்ந்த இறைப் பொருள் ஒருபால் கிடத்தினர்; வைகுவார்.

தாவூது நபி அவர்கள் உலகம் பொது அறப் புரக்கும் காவலர்; வலம்படு, வளம்படு நாற்படைத் தளத்தர்; வென்றியே மேம்படு அடு போர்க் களத்தர்.

இவர் நிழலிலடைந்தன திசைகள்; நெறியில் அடைந்தன மறைகள்.

இவர்க்கு அமை மனைவியர் தொகை ஒன்பதிற்றொன்பதொடு ஒருபதினேழு.

இரண்டு குறையாகியிடும் ஈரைம் பதின்மர்.

கதிர் மதியம் போல் முகத்தாள்; கவின் இளமைச் சீர் நலத்தாள் நசாயிகு என்னும் மங்கையை மணம் முடித்தார்.

அவள் இளையள்; தீது இலள்; குறுமகள்; செவ்வியள்;அளியள்.

ஒருவன் அன்பு எனும் ஒண் மலர் குடிபுகு அன்னம்; நிலம் இயங்கு மின்; மாற்றுரையாத பொன்; கணு இல்லாக் கருப்பு; பன் மலர்ப் பூங்கொடி.

யாகூஃ என்பார் செய்திடு தவப்பயன் செகத்திடை வடிவு பெற்றது போன்றவள்.

வாருதி அமிழ்து வடிவு எடுத்தன்ன இவளைக் கொண்டு நலம் துய்த்தார்.

எண்ணிக்கையில் ஒன்று குறையாகியிடும் நூற்றுவர். எண்ணத்தில் ஒன்றும் குறைவில்லார் என ஒற்றுமைப் பட விளங்கினர், அவ்வொண்டொடி மடவார். அன்புறு சிந்தையர் ஆகி, அவரிடைச் சமரசமாக இருந்தனர் தாவூது.

இளையாளை மணம் முடிக்கு முன் இவர் பெற்ற சந்ததியர் ஈரெண்மர்.

ஒரு நாள்.

அரும் பொருள் இறைவன் 'ஒகி'[1] இறக்கினான்.

''தனம், தவம் பெருகிய தாவூதே! உமக்கு ஒரு நன்மகவு அளிப்பன். புறந்தூய்மை நீரான் மேவுக. தூமெல்லாடை புனைக. அரும் பெறல் மரபின் பெரும் பெயர் மகவு பெறல் பொருட்டு, அன நடை நசாயிகு அணைக. செல்க.'' என்றது அவ்வொலி.

மகிழ்ச்சி நன்னீர்க் கடலிடை அமிழ்ந்தார்; உடலம் பூரித்தார்; தூநீர் ஆடினார்; தூமடி உடுத்தார்; மணப் பொருள் திமிர்ந்தார்; மண அறை புக்கார்.

எல்லி எதிர்கண்ட எழில் கமலம் தளை அவிழ்ந்தது. கவவுக் கை ஞெகிழாது, மெய் புகுவன்ன கை கவர் முயக்கம், வளியிடை போழப்படாஅ இறுக்கம் மேவினார்.

அருமறைக்கு உணர்வு அரும் அவன் அருள் மேவி, துலங்கு நற்புகழ் வளர் சுலைமான் நபி நசாயிகு வயிற்றில் பலன் உறக் கர்ப்ப உற்பத்தி ஆனார்.

இறைவன் அமரர்க்கு ஆணை பிறப்பித்தான்.

''அறை தரும் அதிக சோபனம் கொண்டாடுக'' என அமரர் அகமகிழ்வு எய்தி ஆர்த்தனர்.

படரெலாம் படைத்தான்; பழி வளர்க்கும் இயல்பினான்; கொடுமையும் மாயமும் வஞ்சனையும் மலி நெஞ்சத்து இபுலீசு கலங்கி வீழ்ந்தான்.

''ஏன் இச் சோபனம்? எடுத்து உரைப்பீர்'' என வினவிட,

''நின்ற வஞ்சனை நெஞ்சினை ஆதி நீ! ஆதி தன் ஆணையை அறிகிலை போலுமால். உன் மாய வஞ்சமும், அரசும், மற்றும் முற்றும் அழியும் உண்மை. தனிப் பேராட்சி புரிவோர் தாய் வயிற்றில் தரித்த நாளிது. ஆயதால் மகிழ்ச்சி கொண்டு ஆடுதும் நாங்களே'' என்றனர்.

''ஆர் மகன் அவன்?'' என அழி தரும் உள்ளத்தோடு இழி தரும் கண்ண நீரோடு இபுலீசு வினவ,

''சுருதி நன்னபிக் கடை மகன்; முதல் மகன் அவன். கடை மகனே! கடிதினில் விலகு'' என்று விலக்கி விரைந்து போயினர் விண்ணவர்.

---

1. ஒகி — இறை அறிவிப்பு

சோர்ந்தான்; தளர் நடையான் தன்னிடம் சார்ந்தான்.

வாய் விட்டுக் கதறினன்; நெஞ்சகம் பதறினன்; 'எனக்குப் பகையோ?' என விதறினன்; கை கடித்து உதறினன்.

படுத்தனன்; எண்ணம் பல தொடுத்தனன்; துடித்தனன்; சில முடிவு எடுத்தனன்; 'ஏற்பில' என விடுத்தனன்.

ஈரலும் கருகினன்; தன் நிலைக்கு உருகினன்; மயக்கம் பெருகினன்.

இனத்தொடு சூழ்ந்தனன்; துயரிடை ஆழ்ந்தனன்; தரையில் வீழ்ந்தனன்.

"கருவைக் கலைத்தால்...?" என அவன் வினவ,

"செய்தக்கதே" என அவர் விளம்பினர். செயத் துணிந்தான்.

"நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்" என்றறியா, நன்றறியாப் பேதை முயற்சியில் தோற்றான்.

"வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்?"

கரு வளர்ந்து உரு மேவியது. எனினும் தாய் நசாயிகு கால் கை சோர்ந்திலள்; வயா உற்று மண்வேட்டு உண்டிலள்; புளிப்பினில் இச்சை மேவிலள்; துவர் இதழ் வெளுத்திலள்; சிற்றிடை பருத்திலள்.

மயக்கமும் உறக்கமும் மேவிலள்; மென்மெல இயங்கிலள்; இளைத்திலள்; வளர் மகவு கால் உதை வயிற்றினில் பெற்றிலள்; பசு நரம்பு கொண்டிலள்; வயிறு வீங்கிலள்;

கருக்கொண்டாள் எனற்கு உரிய உருக்கொண்டாள் இலள்.

'இது அதிசயமே' என்பார் என்க. இறைவன் படைப்பில் இதனினும் மேற்பட எண்ணில் அதிசயங்கள் உளவே! அவர் அறிவாரோ? மற்று.

இடை வலி எடுத்தது. புறக்குறி இலவே அன்றி அகக்குறி கொண்டாள் ஆதலின், ஏவற் சிலதியர், குற்றிளையார், தன் மூத்த சகக் களத்தியர் சூழுற விளங்க,

பாயல் கொண்டனள்; படுத்தனள்; புரண்டனள்; துடித்தனள்; சோர்ந்தாள்.

மருத்துவ மடவியர் சூழ்ந்தனர். 'அஞ்சல்' என்று கையமர்த்தி அருகு இருந்து அயர்வு அகற்றினர்.

ஒருத்தி தன் மடியிடை நசாயிகு இருத்தி, மார்பில் அணைத்துக் கிடந்தாள்.

குழல் சோர்ந்தது; நீல் நெடுந்தாரை விழி கடந்தது; வலி எழுந்தது; மகவும் பிறந்தது.

ஆண்டவன் ஆணை கொண்டு ஏதமில் விண்ணோர் நான்கு மாராயக் கொடி கொண்டு இறங்கினர்.

சோபனம் கூறி, பிறந்த மனை சுற்றி, வெளியிடை நாற்புறத் தும் கொடி பிடித்தவாறு நின்றனர்.

பிறந்த மகவின் தேகம் பெரிதும் அன்று; சிறிதும் அன்று. வெளிர் சிவப்பு நிறம்-இணைத்தாமரை விழிகள்; அகல் மார்பு; பெரிய புயம்; மென் புருவம்.

இவ்வாறாய்ச் சுலைமான் நபி பிறந்தார்.

மனிதப் பயிர் தழைக்க, மறை முதல்வன் அருள் முகந்து கொணர் கொண்டல் என, நபி பிறந்தார்.

பகைவர்க்கு இடிஏறு அன்னான், படிமிசைக் கொண்ட கீர்த்தி தாவூது நன்னபி மகவாய்ப் பிறந்தார்.

வான் வழங்கு இயற்கை வளக்கதிர் இரண்டும், நரர் உருக் கொண்டு நானிலம் உய்யப் பிறந்தன என்னுமாப்போலே பிறந் தார்.

வன்றிறல் ஜின்கள்; வலி குலாம் செயித்தான்; பூத கணத் திரள் பொருந்தி பதம் பணிந்து 'ஏவல்' செய்து ஒழுக ஏந்தல் நபி பிறந்தார்.

அறம், தவம், நற்குணம், இரக்கம், பொறைநிறை, யாவும் ஒருரு மேவிப் பிறந்த, என்ப போல் பிறந்தார்.

பிறந்த மகவு அழுதது. மடவியர் எடுத்தனர்! தூநீராட்டினர்; துகில் கொண்டு புலர்த்தினர்; சேனை ஊட்டினர்.

ஒருத்தி மடியினில் தகவு உறக் கிடத்தினர்.

தாவூது நபி, செய்தி அறிந்து, வறிஞன் நன்னிதியம் பெற்றது போலவும், பிரிந்த நண்பன் கூடப் பெற்றவன் போலவும் மகிழ்ந் தார்.

பெறலரு மகவு பெற்ற பேருவகையால் மன்னிய நாள் மீன், மதிகனலி என்றிவற்றை முன்னம் படைத்த முதல்வன் குறித்து 'சுஜூது'[1] செய்து கனிந்து 'துஆ'[2] இரந்தார்.

கூனல் ஒட்டகம், கொழுவிய தகர்கள் மட்டற அறுத்து குறுபான்[3] செய்தார்.

பிணி இல்லவராம் பீன தனத்தவர், பெருந்தடங்கண் பிறைநுதல் இளையவர் சிலவரைத் தம் மகற்குப் பால் கொடுக்க அமர்த்தினார்.

முலைத்தாயர் அவர்கள் முகந்து கொள வேண்டுமட்டும் செல்வம் விரும்பி அளித்தார்.

காணிய வந்தார்க்குக் கனகமும், தூசும், பூண் ஆபரணமும் பொருந்து நல் வளங்களும் ஈத்துவந்தார்.

தகைப் பெரும் மகவினைத் தாய் கை ஈந்தனர். தாயர் அனைவரும் தனித்தனி ஏந்தினர்

மகவு வளர்ந்தது.

நசாயிகு ஆன நற்றாய் நச்சி, உச்சிதனை முகர்ந்து (மோந்து) கண்ணோடு அணைத்த திருத்தாளர் தாள் நிலம் தோய தளர் நடை இட்டார்,

கோடு கூடு மதியம் போல் குறைவற வளர்ந்தார்.

சுலைமான் (அலை) அவர்கள் நீரவர் கேண்மை போல் நலம் கூடினார்.

6. புறா வசனித்த படலம்

தவழ்ந்து, நின்று, நடந்து, மழலை கிளத்தி, மகிழ்வித்து, முலைமறந்து, முகம் உணர்ந்து, மூன்று வயதும் நிரம்பினார்.

ஒரு கால் (முறை) செவிப்பட்டவை ஒருக்காலும் மறவாராய் தந்தை மறை பயிற்றப் பயின்றார்.

---

1. சுஜூது—தொழுகையின் ஒருநிலை; முழங்காலில் அமர்ந்து நெற்றி நிலத்தைத் தொட இருக்கும் ஒரு தொழுகை நிலை.
2. து ஆ—பிரார்த்தனை; வேண்டு கோள்
3. குறுபான்—பலி

எவ்வுயிரினமும் உரைப்பன கேட்டு அவற்றின் உளக்கருத்து அறியும் ஆற்றலும் இறை அருளால் கூடப் பெற்றார்.

குறிப்பால் குறிப்பு உணர்வார்.

வயது கூடியது. திறனும் கூடியது. எது ஒரு கருமம் வருகினும் தம் கடைசி மகன் இவரிடத்துக் கலந்து ஆலோசியாது தாவூது நபி அவர்கள் செயல் மேவார்.

இவ்வாறிருக்கும் ஒரு நாள், பசிய கழுத்து; குருவிந்த மணி நிற விழிகள்; பவழத்தால் அமைந்த தாள்கள்; கூரிய அலகு; புன்னைக் காய் போல் திரண்ட தலைகொண்ட குறுநடைப் புறவுப் பெடை ஒன்று கொற்றவர் திருமகன் முன் பறந்து வந்து மென்மெல இயலி, தாள் அடைந்தது.

வணங்கி, பணிந்து, தலை உயர்த்தி, முகம் நோக்கி, அவருடன் பேசத் தொடங்கியது.

"உயிரினம் பேசும் உரை எலாம் உணர்வோய்! மறைபுகல் நெறிகள் மறு அற அறிந்தோய்! தேன் உகு கமலம் தெரிதரு முகத்தோய்! நீணில விளக்கே! மாநில அணியே! தாவூது நபியின் தவம் திரண்டனையாய்! கருணையங்கடலே! எளிய பறவை இயம்புந கேட்டு அருள்!

இந்நகர்ப் புறவுயான். பருவம் சான்றும் குஞ்சு ஒன்றுனும் கொடுத்திலன் இறைவன். எண்ண எண்ண ஏக்கமே மிகும்.

என் இனத்தார் தாம் ஈன்ற குஞ்சுகளுடன் கொஞ்சி மகிழ்வது காணும்தோறும் நெஞ்சு படுபாடு நிகழ்த்தத் திறனிலேன்.

வையத்து உயிர்கள் வழங்கி வருதல் கண்டு, என் நிலைக்கு இரங்காது இருத்தல் முடியுமா?

"மலட்டுப் புறவு" என மற்றவர் வசைமொழி பெறுதலினும் சாதல் நன்றே.

சஞ்சலமே மிகும். இரை எடுக்கவும் கருதிலேன்; உண்டிலேன்; உறக்கமும் நீத்தேன்; உடலமும் மெலிந்தேன்.

மகவுகள் பல்கிப் பெருகும் உறவினர் முன் கூடவும் நாடிலேன். மலடு எனக் கீழ்ப்பட்டு இனத்திற்கு முன் அடங்கித் தலை கவிழ் தலினும் இழிவு வேறு உளவோ?

இனியரே! தனியவன் இடத்து எனக்காகத் 'துஆ' இரந்து குறை தவிர்த்தல் ஆகாதோ?'' என வேண்டியது.

அருளாளர் செவி மடுத்தார்; அகம் கனிந்தார். கொண்டு அப்புற வினைத் தம் மடி மீது கிடத்தி மெல்லப் புறம் தைவந்து, ''அஞ்சல் புறவே! அஞ்சல். இறைவன் அருளால் வயிறு வாய்க்கப் பெறுவாய். உனக்குச் சந்ததியாய் எழுபது பார்ப்புகள் பிறக்கும். இடையறவு படாது உன் இனம் வளரும். ஊழி தோறூழி பல்கிப் பெருகும்.

சுற்றம் மேவுக. சூழ்துயர் நீங்கும். செல்க'' எனக் கூறி விடை தந்து அனுப்பினர்.

ஒரு பொருட்கு அவாவினான் பல்பொருள் வலிய அருளப் பெற்றது போல் பெரிது உவந்து சலாம் செய்து எழுந்து, உயர்ந்து தன் குடம்பை சார்ந்தது.

சேவலைக்கண்டு செப்பியது. தன் நயந்துறைந, தான் நயந் துறைந ஆகிய இனத்தார்க்குக் கூறி மகிழ்ந்தது.

மணி வயிறு வாய்க்கப் பெற்று, குஞ்சுகள் அடைந்து மகிழ்ந்தது.

முன் அவர் உரைத்தவாறே எழுபது பார்ப்புகள் இது பெற்று இறும்பூது எய்தியது.

ஒருநாள் கோமுறை கோடாக் கொற்றவர் தாஹூது (அலை) அவர்கள் தம் அரும் பெறல் மகவு சுலைமான் (அலை) அவர் களோடு மகிழ்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்.

## 7. பசு உயிர் மீட்ட படலம்

அப்போது கிழட்டுப் பசு ஒன்று மென் மெல இயங்கி தாஹூது (அலை) அவர்கள் பக்கல் அணுகியது.

''உயிர்க்குலத்தின் உரிமை முதல்வரே! உரைப்பன கேட்டு உளம் கனிந்து அருள்க! உங் கள் பனி இசுறாயீல் கூட்டத்து ஒருவன் தன் மாடு யான்.

பிறந்த நாள் தொட்டு, சுமை தாங்கியாய் ஆகிவிட்டேன். வாணிபச் சாத்தில் அவனொடு ஏகுவேன். பொறாச்சுமை புறம் பொசியினும் நடை தளரேன். வழியிடை இருமருங்கும் வளர்ந் துள நறிய புல் காணினும், தாநீர் ஊறினும் கறிக்க எண்ணேன்.

எம்குல ஆடவர்க்கும் (ஏறுகள்) அதிகமாகச் சுமை பொறுப்பேன். ஓயாமல் உழைத்தேன்; ஓடாகிப் போனேன்.

இம்மட்டோ? இருபது கன்றுகள் ஈன்று புறந்தந்தேன். அவையும் உண்ணா வகைத் தீம்பால், முப்பொழுதும் கறந்து கொள்வர். பாலும், பால்படு பொருள்களும் மிகைப்பட உண்டு தேக்கிட்டனர்.

பொறை கொண்டேன்; பொறுமையும் கொண்டேன். வேறென் செய்வேன்? துள்ளிடும் கன்றுகள் கண்டு துயர் மறந்து இருந்தேன். கொழுவிய அவற்றின் இளமை அவர்கள் கண்களுக்கு விருந்தாயிற்று. காலக்கழிவில் வயிற்றுக்கும் விருந்தானது.

கண்முன் கொலைப்படு கன்றுகள் கண்டு மனம் கன்றினேன்.

ஒருநாள் என்னையும் கொலை குறித்தனர். இது அவர்கள் தமக்குள் பேசிய உரையாட்டால் அறிந்தேன். உள்ளகம் வெதும்பினேன். ஓடிவந்தேன்; ஆவி நீத்தற்கு ஆரே உடம்படுவார்? 'எவ்வுயிரும் தம் உயிர்போல் எண்ணி உள்ளே ஒத்திருக்கும்' உரவோர்; உத்தமர் நீரே, என மனம் தேறி இங்கு வந்து அடைந்தேன். ஆவி காத்தருளுவீர்'' என வேண்டியது.

''உலகிடை ஒரு தனி முதல்வன் படைத்துள பொருள்கள், நரர்கள் நலம் குறித்து அமைந்தவையே. அதற்கு மாறாக யாம் செயத்தக்கது இல். செல்க'' என தாவூது (அலை) அவர்கள் பணித்தார்.

பக்கலில் இருந்த மிக்க நற்குணத்தார் ''நன்றி மறப்பது நன்று அன்றே; கொண்டு பயன் துய்த்தார் கொலை மேவுவதோ?'' எனக் கூறினார்.

கோவைக் கூவி ''செல்க! நின்பின் தொடர்வேன்; ஆவன செய்வேன்; அஞ்சல் ஓம்பு மதி'' என்று அருளினார்.

கோ உடையான் மனை குறுகினர். கோக்குமரன் கோகனகக் கைத்தலத்தால் கபாடம் தட்டினார்.

உடையான் புறம் போந்தான். ''இளங்கோவும், என் கிழக் கோவும் இங்கோ? ஒருங்கோ? இருப்பது'' என வியந்து, வந்தவர் வணங்கினான்.

அவர் வந்தமை குறித்து வினாவினான்.

சுலைமான் (அலை) அவர்கள், ''நீர் இப்பசுவை அறுத்துண்ண நினைக்கின்றீராம். எனவே, இதனைக் கொல்லாமை பொருட்டு எனக்கு விலைக்குத் தருக'' என்றார்.

''எம் அரசிளங்கோவே! சொல்லிய உண்மை தான். எவ்வாறு அறிவீர் இவை?'' என உடையான் கேட்டான்.

இளங்கோ தம்மிடம் அக்கோ உரைத்தன அனைத்தும் புகன்றார்.

''நாம் பேசிக்கொண்டு இருந்ததனை இப்பசு கேட்டு, அரசரிடம் முறையிட்டது எனில், நம் பழமறை நூல் குறிப்பிட்டன அனைத்தும் மெய்யே போலும்'' எனக் கூறி மகிழ்ந்தான்.

இதற்குள் உடையான் உறவினர், ஊரார், ஆகப் பலர் குழுமினர். பிற உயிர்கள் பேசுவன கேட்டு அருளும் பெருந்தகை மையைப் போற்றினர்.

பின் அவர்களுள் ஒரு முதியவர் இளவரசரை நோக்கி, ''ஐயா! நீர் நம் மரபிடைப் பிறக்கு முன்னரே நம் மறை நூலில் சில குறிப்புகள் கண்டோம். பனி இசுறாயில் கூட்டத்தில் ஒருவர் பிறப்பார்; அவர் உலக உயிர்கள் கழறிற்று அறிவார். அவைகளும் அவரிடம் உரையாடும்; குறையிரக்கும்; குறை முடிக்கப் பெறும்; மாந்தரே அன்றிப் பேய்களும், பிறவும் அவர் ஏவல் வழி மேவும்' என்பன அவற்றுள் சில.

அத்தகைய வள்ளலை எம் வாழ்நாளில் தரிசிக்கும் பேறு கிட்டுமோ என ஆவலுடன் எதிர்பார்த்திருந்தோம். அந்த நாயகர் நீர்! அந்நூல் குறித்த அடையாளம் கொண்டு வந்த நாயகர் நீர்! எம்குலம் விளங்க வந்தச் சொந்த நாயகர் நீர்! எண்ணிய ஈடேறப் பெற்றோம். யாம் பெற்ற பெருந்தவப் பேறு எவர் பெற்றாரே?'' என்று நாவியந்து, கொணர்ந்த ஆ வியந்து, பாராட்டினர்.

உடையானும் ''கோவே! இக்கோவே கொள்க'' என்று முன்பு கொடுத்து மகிழ்ந்தனன்.

தாவூது (அலை) அவர்கள் இவை எல்லாம் கேட்டறிந்தார்; மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

ஒரு நாள் தாவூது (அலை) அவர்கள் தம் மன்றிடை அமர்ந்து வழக்குகளை விசாரித்துக்கொண்டு இருந்தார். அப்போது நிறை குணத்தவர் இருவர் வந்தனர்; மலரிப்பதம் புகழ்ந்தனர்; மணி வாய்ப்பொத்தி நின்றனர்.

அவருள் ஒருவன் "இறைவனின் திருத்தூதரே! எம் உரை கேட்டு அருள வேண்டுகிறோம். என்னுடன் வந்து இதோ நிற்கும் இவரிடம் ஒரு நிலம் வாங்கி, திடர் திருத்தும் பொழுதில் இப் புதையலைக் கண்டேன். நிலத்தைத் தான் விலைக்குக் கொண்டேனேயன்றி அதில் கிடக்கும் புதையலையுமா நான் கொண்டேன்? எனவே இவரிடம் எடுத்துச் சென்று ஈய முனைந்தேன்; பெற மறுத்து விட்டார்" என்றான்.

8. நிதி யாட்டுப் படலம்

அதற்கு மற்றவர், "ஐயா! அந்நிலம் எனக்கு மரபுவழி வந்ததும் அன்று. எவரிடம் இந்நிலத்தை யான் விலைக்குக் கொண்டேனோ அவர் மரபினர் எவரும் இது பொழுது இலர். எனவே இதனை எனக்குரியது என எவ்வாறு நான் கொள்வது?" என்றார்.

அவற்றைச் செவியுற்ற தாவூது (அலை) அவர்கள், அந்நல்லவர் பண்பு நலத்தை வியந்தவராய், "நீங்கள் இருவரும் அதனைச் சம நிறையாகப் பங்கிட்டுக் கொள்க" என்றார்.

அவர்கள் அதற்கு உடன்பட்டிலர். அது கண்ட தாவூது (அலை) அவர்கள் அருகிலிருந்த சுலைமான் (அலை) அவர்கள்,

"ஐயா! என்னை இவ்வழக்கில் 'நீதி வகுப்பாய் நீ' என உரைக்கில் ஆவன செய்வேன்" என்றார்.

தாவூது (அலை) அவர்கள் இதற்கு ஒப்பினார்.

உடனே சுலைமான் (அலை) அவர்கள் அவ்விருவரையும் நோக்கினார். "உமக்குச் சந்ததி உண்டோ?" என வினவினார்.

அதற்கு ஒருவர் 'எனக்கு ஒரு ஆண் மகன் உளன்' என மற்றவர் 'எனக்குப் பெண் ஒருத்தி இருக்கின்றாள்' என்றார்.

சுலைமான் (அலை) அவர்கள் முறுவல் பூத்ததார்; முகம் மலர அவர்களை நோக்கி "நீவிர் இருவரும் உங்கள் மகனுக்கும் மகளுக்கும் மணம் முடித்து மகிழுங்கள்; நிலத்திடைக்கண்ட நிதியத்தை அவர்கட்கு அன்பளிப்பாக நல்கி வாழ்த்துங்கள்" என்று கூறினார்.

அறிவார்ந்த தீர்ப்பைக் கேட்டு அவையோர், அரசர், அவ் விருவர் அகம் மகிழ்ந்தனர்.

பின் அவ்விருவரும், அவ்விருவரின் பதம் வாழ்த்தித் தம் பதிபுக்கனர். மன்றல் நிகழ்த்தினர். புதையலைப் புதுமணத் தம்பதிகட்குப் பரிசிலாக அளித்தனர்.

பிறிதொரு நாள் அவையிடை இருவர் வந்தனர். அவர் தம்முள் ஒருவன் நிலை பெறானாய் இருந்தான். தாவூது (அலை) அவர்களை நோக்கி வணங்கி, "இறை அருள் தூதரே! என் முதிர் கதிர் வயலிடை இவர் ஆடுகள் புகுந்து முற்றும் அழித்து விட்டன. விளைச்சல் வீணாயிற்று. பலநாள் உழைப்பும் பாழாயிற்று. இதற்குத் தாங்களே நீதி வழங்க வேண்டும்" எனக் கோரினான்.

தாவூது (அலை) அவர்கள் அம்மற்றவனை நோக்கி, "இவர் கூறுவன மெய் தானே?" என வினவ, அதற்கு அவன் "ஆம் ஐயா! வயல் முற்றும் பாழ்பட்டது உண்மையே! இவர் வயற்கு அடுத்த வயலில் கிடை மடக்கினேன். நான் இரவில் தூங்கி காலையில் எழுந்த போது அங்கு என் ஆடுகளைக் காணவில்லை. அவை இரவில் தொழுத்திறந்து அண்டை வயலைப் பாழ்படுத்திவிட்டன. தொழுத்திறந்து ஆடுகளை நான் விடவுமில்லை; தொழு முறித்து அவை சென்று பாழ்படுத்தியதையும் நான் அறியவில்லை. எனினும் இது என் கவனக் குறைவால் நிகழ்ந்ததே" என்றான்.

தாவூது (அலை) அவர்கள் கதிர்ச்சேதத்தைக் கணக்கிட்டார். ஆடுகளின் மொத்த மதிப்பையும் கணக்கிட்டார். அவை ஒத்த மதிப்பினவாக இருந்தமை கண்டார்.

"உம் ஆடுகளால் அவர்க்கு விளைந்த இழப்பினை நீரே தீர்த்தல்வேண்டும்.எனவே ஆடுகளை அவர் ஒட்டிச் செல்லவும், கொள்ளவும் விடுக; செல்க" எனப்பணித்தார். இது கேட்ட சுலைமான் (அலை) அவர்கள் தந்தையாரை நோக்கி "ஐயா! இவ்வழக்கிடை நீதி நிகழ்த்தவோ நான்?" என வேண்டினார். அவரும் உடன்பட்டார்.

பின் சுலைமான் (அலை) அவர்கள் "இவர் (ஆட்டிடையன்), அவர் (உழவர்) வயலைத் தன் பொறுப்பில் ஏற்று உழுது பயிர் ஏற்றிப் பாதுகாத்து முன்போல் கதிர் முதிர் பருவத்தில் வயலை மீட்டும் அவர்க்கே அளிக்கவேண்டும்.

அதுவரை அவர் (உழவர்), இவரது ஆடுகளைப் பெற்று நன்கு பராமரித்துப் பயன் துய்த்து வரவேண்டும். இடைப்பொழுதில் அவ்வாடுகள் ஈனும் குட்டிகளோடும் தன் வயலைத் தான் மீளப் பெறும் பொழுதில் இவர்க்கு அளித்து விடவேண்டும்.

இம்முறையில் இருவர்க்கும் இழப்பு இல்லை அன்றோ?'' என்றார்.

பனி இசுறாயீல் கூட்டத்தினர் இவை உணர்ந்தனர். ''சதுர, சாதுர்யர் அணி மணியே!'' எனப் புகழ்ந்து போற்றினர்.

இவ்வாறாக சுலைமான் (அலை) அவர்கள் பலர் பாராட்டு வகையில் வழக்கிடைத் தீர்ப்புகள் வழங்கினார் என்ப.

9. கனவு கண்டு மணம்செய்த படலம்

சாம் நகரிலிருந்து நெடுந்தொலைவில் இருந்த நாட்டில் ஓர் அதிசய நிகழ்ச்சி நடந்தது.

அந்நாட்டு இளவரசன் நனவுபோல நள்ளிருள் யாமத்துக் கனவு ஒன்று கண்டான். அழகெல்லாம் ஒருங்கே குடி கொண்டாற் போன்ற பேரழகு படைத்த ஒருத்தி தன் பக்கம் வரக்கண்டான். கண் முகிழ்த்தான். கண்டது கனவு எனத் தெளியானாய் அங்கும் இங்கும் அவளைத் தேடினான். காண்கிலாமையால் கருத்தழிந் தான். அவள் நினைவால் பெருமூச்செறிந்தான். ''காரிகை அவள் வானம் கீறி வெளிச் செல்கிலள்; நிலம் தொட்டு (துளைத்து) உட்புகுந்திலள். எங்கேனும் ஓரிடத்தில் இருந்தே தீர்வள்'' என்ற திடமுடிவுக்கு வந் தான். அரண்மனை ஆரும் அறியாவகை நீத்தான். ஒருவேளை அப்பெண்ணைக் காண நேரின் அவளுக்கு இயைந்த செய்யவேண்டி வருமே, என்பதற்காகப் பொன்னும் மணி யும் பொதிந்த பை ஒன்றும் கைக்கொண்டான்.

காடும், புனமும், கதிர்தெறுகானலும் அலைந்தான்.

ஓர் நாள் செல்லலன்; இரு நாள் செல்லலன்; பலநாள் சென்றனன்; பன்னீராண்டுகள் இவ்வாறு திரிந்தான்.

பின் ஒரு சிற்றூரில் இருந்த பள்ளி வாயிலை அடைந்தான். அப்பள்ளி வாயில் ஊழியர் (மோதீன்) இவனது வாடிய மேனி வருத்தம் கண்டு இரங்கினார்; உண்பிக்க விரும்பினார்; தம் மனைக்கு அழைத்துச் சென்றார்.

தன் திருமகள் கையில் உண்கலம் ஈந்து 'வந்துள விருந்தினரை உபசரிக்க' என ஏவினார்.

கால் கழுவி, உணவு கொள்ள அமர்ந்த அவன் தட்டம் இட்ட முன்கை கண்டான்; முகம் நிமிர்ந்து அவளை ஏறிட்டு நோக்கி னான்; ''ஏந்திழை இவளே என் கனவிடை வந்தவள்'' எனத்

தெளிந்தான். தலை சுழன்றது. நா குழன்றது; ஒன்றும் உரையா னாய், உணவும் கொள்ளானாய் விரைந்து பள்ளி வாயிற்கே ஓடி விட்டான்.

தகைசால் பூங்கொடி தந்தையிடம் நிகழ்ந்த நிகழ்த்தினாள்.

அவரும் உடனே பள்ளி வாயிலை அணுகினார். "எக்குறை எம்பால் கண்டீர்? ஏன் இவ்வாறு நடந்துகொண்டீர்? உணவு கொள்ள வந்தவர் உண்ணாமை செல்வது இழுக்கன்றோ எமக்கு? எடுத்துரைக்கவும்" என வேண்டினார்.

அதற்கு அவன் "குறை ஒன்றும் நிகழ்ந்திலது. நான் கேட்கும் ஒன்றனை எனக்கு அளிப்பதாக வாக்குறுதி அளிப்பீராயின் உணவு கொள்வேன்" என்றான்.

"யாதேனும் தான் ஆகுக. செய்வேன். இது மாறேன்" என உறுதி அளித்தார்.

இசைந்து அவருடன் இல்லம் சேர்ந்தான்; உணவு கொண் டான். அப்பெரியவர் உவகை கொண்டார்.

பின் "யாது கேட்க விழைந்தது? நிகழ்த்தலாகும் என்னிடம்" என, "உள்ளத்து உறுதி அணுவும் மாறாதவர் நீர். அறிவேன். தங்கள் திருமகளை எனக்கு மணம் முடித்துத் தரவேண்டும்" என வேண்டி நின்றான்.

காளை வேண்டுகோள் காதுகளில் கனல் எனப் பாய்ந்தது; மறுகினார்; உருகினார்; பலவாறு எண்ணமிட்டார். பின் தெளிந் தார். அவனை நோக்கி "எம் மகள் எம் இருவர்க்கும் பொது அன்றோ? எனவே மனைவியிடம் கலந்து பேசி கருத்து தெரிவிப் பேன்" என்றார்.

தன் மனை அடைந்தார். "தனி மகன்; எளியன்; உடுப்பதூ உம் உண்பதூஉம் இன்றி வருந்துபவன். இவனுக்குக் கேட்பார் நகைக்கும் வண்ணம் கீழ்மை மேவ நம் மகளை நல்குவதோ?" எனத் துணைவிபால் வினவினார்.

அவள் கலங்கினாள். "சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ? எனினும் நம் மகளையும் ஒரு வார்த்தை கேட்டுக் கூறுவது நல்லது அல்லவா?" என்றாள். பூங்கொடி அனையாட்குப் புகன்றனர்.

சில மெல்லிய அம் கீழ் கிளவியாள் அவளும் "உமது நெஞ்சு என் நெஞ்சு" என்றாள்.

மூவர் கருத்தும் ஒரு சொல் ஆக முடிந்தது. மோதின் ஊர் கூட்டினார்; மணம் முடித்தார்.

புதுமண மதுவின் தேறல் ஒக்க உண்டு இருந்தனர். மருவி இவ்வண்ணம் வாழ்கின்ற ஒரு நாள் அவன் தன் குறித்த செய்திகள் அனைத்தும் செப்பினான். உடன் கொண்டு சென்ற பொன், மணி கொண்டு பூ அனையாட்குப் பொன் அணி, இழை பூட்டிப்பூரித்தான்.

"எந்தை தாய் பாலின் ஏக எண்ணம் உற்றேன். எழுக!" என்றான்.

துணைவியும், காவலோனும், செல அன்று துணிந்தார். அனைத்தும் அறிந்த பெற்றோர் ஆராமை மீதூரினும் பிரியா விடை தந்தனர்.

நகர் நீங்கினர்; இடையில் இருள்படச் செறிந்த மரங்கள் அடர்ந்த கானக வழியே செல்ல நேர்ந்தது.

சுற்றமை வில்லன்; அரிவளர் பித்தையன்; சுற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் ஆறலை கள்வன் ஒருவன், காரிகையைக் கண்டான். கணவனை நோக்கி, "இவளை என்பால் விட்டனை ஏகு. இன்றேல் துடிபடச் சென்னியைத் துணிப்பேன்" என்று வாள் ஓச்சினான்.

"இக்கள்வனிடமிருந்து தப்பி நம் கணவன் உய்ந்திருப்பான் ஆகில், கள்வன் நம்மை எத்திசைக் கொண்டு ஏகினும் நல்லூழ் உளதேல் பின்னொரு வேளை அவனைக் காண்டலும் கூடும்" என மனம் துணிந்து "மன் உயிர் செகுத்திடாமல் இவர்விட்டு எனைக் கொண்டு ஏகு" என்றாள்.

கள்வனும் உடன்பட்டான்; காரிகையைக் கொண்டான்; அச் சுறுத்தி அப்பால் அகன்றான்; தான் வாழ் சாம் நகர் அடைந்தான்.

கொண்ட குளிர்நிலவைக் கொடியவன் கொண்டு போகக் கண்ட காவலன் மகன், கலக்கம் எய்தினான்; பித்தன்போல் ஆனான்; பின் தொடர்ந்து ஓடினான்; காண்கிலன் ஆயினன்; கவன்றான்.

பின்னர்ப் பல்லிடங்களில் தேடித் திரிந்தான். சாம்நகரை நண்ணினான்.

கள்வன் உடன்போன காரிகை, தான் பிறன் மனைவி ஆனதால் நாற்பது நாட்கள் நோன்பு ஒன்று நோற்ற பின்னரே அவனை மணம் முடிப்பது ஏற்றது ஆகும் என்று கூறினாள். கள்வனும் இதற்கு இசைந்தான்.

"ஆர்த்த கணவன் அகற்றினேன் ஆலி நச்சி, அவனை என்பால் மீட்டுத்தருவாய்" என இருகரம் ஏந்தி இறைஞ்சிக் கொண்டிருந் தாள்.

அவ்விளவரசனோ, அவளைத்தேடும் முயல்வினில் ஈடுபட்ட வனாய்ச் சாம்நகரில் உள்ள வீடுகள் ஒவ்வொன்றன் முன் நின்றும் அறத்திடு பிச்சை கூவி இரந்தான். ஈகை நல்கும் இழையாரிடை எவளாவது தன் மனைவியாய் இருப்பாளோ? என்ற ஆதுரம் மிக ஏறிட்டு நோக்குவான்; ஏமாற்றமே மிகும். உயர்த்திய விழிகள், உடன் நிலம் நோக்கும்.

ஒருநாள், ஓர் இல்லிடை அவன் இரந்து நின்றபோது அவன் குரல் கேட்டு "அன்னவரே என் கணவர்" எனத் தெளிந்து வெளி வந்த பெண்ணின் கண்களும், இவன் கண்களும் ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றின.

ஆர்வம் மீதூர, வில்லிக விரலின் நல்லகம் பொருந்தினாள்; இறுகத் தழுவினாள்; 'கோ' எனக் கதறினாள்; குமுறினாள்; குலைந்தாள்.

இருவர் அழு குரலும் எதிர் ஒலித்தன.

மனையிடை இருந்த கள்ளன் ஒலி கேட்டு வெளிப்போந்தான். உடற்குருதி சூடேற ஊரவர்க் கூட்டினான். தன் மனைவியை மாய மந்திரங்களால் மயக்கிக் கைக்கொள நினைக்கும் கள்ளன் எனக் குற்றம் சாட்டினான். இருவரையும் உடன்கொண்டு தாழூது (அலை) அவர்களிடம் சென்றான்.

தாவூது (அலை) அவர்கள் வழக்கினைக் கேட்டறிந்தார். அவன் (இளவரசன்), அவளை (மோதீன் மகள்) மணம் முடித்தவன் எனக் கூறற்கு ஆதாரம் எவையும் இன்மை தெரிந்தார். கள் வனோ தன் மனையாளே அவள் எனக் கூறியதோடன்றித்தான் அவளை மணம் முடித்தற்கான சான்றுகள் இவர் என நால்வரை அரசவைக்கு அழைத்து வந்தான்.

அந்நால்வரும் பெற்ற பொருள் நசையால், பொய்க்கரி புகன் றனர். எனவே கள்வன் வழக்கிடை வென்றான்.

தாவூது (அலை) அவர்கள் அவ்விளவரசனைக் கழுவில் ஏற்றப் பணித்தார். காரிகையைக் கள்வனிடம் ஒப்படைத்தார்.

கள்வன் அவள் மலர்க்கரம் வலித்துப் புறம்போந்தான். அழுது பின் தொடரும் அவ்வரிவை வெளியில் விளையாடிக் கொண்டிருந்த சுலைமான் (அலை) அவர்களிடம் ஓடிச் சென்று மடி பிடித்து மன்றாடினாள்.

''வகை வழி நீதி வழங்கவில்லையேல், வரும் பழி'' எனப் புகன்றாள்; புலம்பினாள்.

அல்லற்பட்டு ஆற்றாது, அரிவை அழக்கண்ட இரக்க உருவினர் சுலைமான் (அலை) அவர்கள், அவளுடன் தம் தந்தையை அணுகினார்.

மீட்டும் ஒரு முறை விசாரித்துத் தான் நீதி வழங்க விழைவதாய்ப் புகன்றார். வியந்த தந்தையார், விழிகள் மலர்த்தினார்.

''அங்ஙனமே ஆகுக'' என்றார்.

தமக்குப் பணி செய்யக் கணக்கர் நால்வர் வேண்டும் எனக் கோரிப் பெற்றார்.

கழுவிடை கொண்டு செல்லப்பட்டவனைக் கொணரப் பணித்தார். வீடு விரைந்த சான்றுகள் நால்வரையும் வரவழைத்தார்.

கள்ளனை, பொய்க், கரியாளரை மங்கை நல்லாளை, அவள் கணவனை, ஒருவர்க்கு ஒருவர் தொடர்பு கொள்ளாவகை ஒன்றற்கொன்று தொலைவில் இருந்த ஏழு அறைகளில் அடைத்து வைத்தார்.

பின்னர் அவ்வைவரிடம் மணமகன் பெயர், மணமகள் பெயர், அவர்தம் பெற்றோர் பெயர், மகர், மன்றலில் கை அளித்தோர், சீதனப் பொருள்கள், மணம் முடிந்த வருடம், மாதம், நாள் அனைத்து விவரங்களையும் கூறச்சொல்லி தன் எழுத்தர்களைக் கொண்டு அவ்வாக்கு மூலங்களை எழுதிக் கொள்ளப் பணித்தார்.

பின்னர், அவ்விருவரிடமும் அவ்வாறே வாக்கு மூலங்கள் பெற்றார்.

சிறிதும் எதிர்பாரா வகையில் இவ்விசாரணை அமைந்ததால் அவ்வைவரும் ஒன்றற்கொன்று முரணிய ஐவேறு வகை வாக்கு மூலங்கள் அளித்தனர். அவை சிறிதும் ஒத்தில.

தாவூது (அலை) (அவர்கள்) திருமுன் முன் பெற்ற அவ்வைந்து வாக்கு மூலங்கள் படிக்கப் பெற்றன. முரணிய செய்திகள் முற்றும் கொண்ட அவை கண்டு அரசர் முனிவுற்றார்.

பின்னர், அவ்விருவரது வாக்கு மூலங்களும் படிக்கப்பெற்றன. அவை சிறிதும் மாறு இன்று, ஒத்திருக்கக் கண்டார் அவ்வுரவோர்.

நெறி வழுவ இருந்த தன்னைத் தன்மகன் வழி நேர்ப்படுத்திய இறைவன் கருணைக்கு நன்றி செலுத்தினார்.

கன்றிய கள்வன் கழு ஏற்றப்பட்டான். பொய்க் கரியாளர் கண்கள் பறிக்கப்பட்டு காட்டிடை விரட்டப்பட்டனர்.

ஒன்றிய மனத்தர், நபி அவர்கள் பரிந்தளித்த பரிசில்கள், பரிசனங்களோடு தம்மூர் புக்கார்.

தயாவான தத்துவற்கு நன்றி கூறினார்; நலம் பெற்றார்.

மற்றொரு நாள் தொன்முதாட்டி ஒருத்தி சுட்ட உறட்டி மூன்றும், ஒரு பெட்டி நிறைய கோதுமையும் எடுத்துக் கொண்டு அடுத்த வீட்டில் உள்ள திரிகையில் மாவரைக்கச் சென்றாள்.

**10. சதக்கா நன்மைப் படலம்**

வீதிவாய், நிறை பசியால் நடை தளர்ந்த ஆலிம் ஒருவர் எதிர்ப்பட்டார். கிழவி இக்குறிப்பு அறிந்து "உண்க" என அவ்வுறட்டிகள் மூன்றையும் அவர்க்கு உவந்து அளித்தாள்.

பின் அடுத்த வீட்டில் கோதுமையை அறைபடத் திரித்து மாவாக்கிக் கொண்டு வரும்போது பெருங் காற்று ஒன்று வீசியது. பெட்டி மா அனைத்தும் காற்றிடைப் போயது. ஒரு துளியேனும் எஞ்சிலது. உள்ளதும் போனமையால் உடைந்த உள்ளத்தளாய் தாவூது (அலை) அவர்கள் அவை அடைந்தாள்.

குறை இரந்தாள்; காற்றுத் தேவற்கு ஏவலிட்டு, எடுத்த மாவைத் தனக்குத் தரவேண்டும் என வேண்டி நின்றாள்.

"அம்மா! அம் மா போயின் என்ன? இதோ நூறு காசுகள் உள்ளன கொள்க; செல்க!" என கைக்காசு ஈந்தார். கிழவி அது கொண்டு வெளிப் போந்தாள்.

வழியில் விளையாடிக் கொண்டிருந்த சுலைமான் (அலை) அவர்களைக் கண்டாள். வணக்கம் தெரிவித்தாள். அவர் "ஏது பதி? ஏது வரவு? என்ன குறை?" என வினவிட நடந்தன அனைத்தும் நவின்றாள்.

''மாவே வேண்டும்; காசு வேண்டா என நம் கோவை வேண்டுக'' எனக் கூறினார்.

மீட்டும் அரசற் கண்ட அம்முதியவள் அவ்வாறே கூற ''கொடுத்த காசு போதாது போலும்'' என எண்ணியவராய் மேலும் ஒரு நூறு காசு உவந்து அளித்தார்.

முதியவள் அவ்வாறு மும்முறை திருப்பப்பட்டாள். அரசற்கு வியப்பு மேலிட்டது. ''அம்மா! உம்மை இவ்வாறு மீட்டும், மீட்டும் திருப்பியவர் யார்? சொல்க'' எனப் பணிக்க, ''காவல் நாயகமே! உம் கண்மணி அனையார் சுலைமான்(அலை)அவர்களே இவ்வாறு ஏவினர்'' எனப் புகன்றாள்.

அரசர் தன் மகனை வரப் பணித்தார். மைந்தன் வரவு கண்ட மன்னர் இவை குறித்துக் கேட்டார்.

''ஐயா! நீரிடு ஈகை, நித்தியக் கடமைக்கு முரண் அன்றோ? வழக்கு வேண்டி வந்தவளுக்குக் கைக்காசு ஈந்து, கடமை மறப்பதா?'' என வினவினார்.

தன் தவறு உணர்ந்த தகை சால் வேந்தர் காற்றினை அழைத்தார்; மா கவர்ந்த காரணம் யாது என வினவினார். காற்று ''பத்தான் (வானவர்) ஏவ நான் அது புரிந்தேன்'' என்றது. பத்தானை அழைத்தார். ''ஏனிவ்வாறு ஏவினீர்?'' என்றார்.

''காற்றின் அதிபதி இஸ்ராஃபீல் கட்டளைப்படி, இது ஏவ விட்டேன்'' என்றார் பத்தான்.

இஸ்ராஃபீலும் வரவழைக்கப்பட்டார். இது குறித்து அவரிடமும் வினவினார்.

''இது செய எனைப் பணித்தவர் இசுறாயீல்'' என்றார். இசுறாயீலும் இது குறித்து வினவப்பட்டார்.

இசுறாயீல் ''பலகை லவுகினில்[1] குறிப்பிட்டிருக்கும் வண்ணமே நான் செய்தேன். அன்றைக்கு எழுதி வைத்தது என்றைக்கும் மாறாது அன்றோ?'' என்றார்.

''எல்லாம் வல்ல இறைவனின் ஆணை,'' என்பது உணர்ந்து இறைவனை நோக்கி ''துஆ'' இரந்தார்.

இறைவனிடமிருந்து ஜிப்ரீல் செய்தி கொணர்ந்தார்.

---

1. இறைநாட்டம் அனைத்தும் பொறிக்கப்பட்டிருக்கும் பலகை.

"தாவூது (அலை) அவர்களே! இந்நாட்டில் இல்லை என்று உரைப்போர்க்கு இல்லை என்று உரையா இதயமும், ஈகையும் உடையார் ஒருவர் உளர். உள்ளி, உள்ள எல்லாம் உவந்து ஈயும் அவ்வள்ளியோர்க்கு உரியவாய் வங்கம் பல உள. நிறை பரம் சுமந்து அவர் கலன்கள் செறிகடல் ஓடும்போது அவற்றில் ஒன்றின் இணைப்புப் பலகை அகல, சிறிது வெடிப்பு உண்டாயது. அவ்வழி கடல் நீர் உட்புகின் கலன் கடலிடை அமிழ்ந்து போம். அந்நிறை கலன் அமிழ்ந்து படின், அதனால் விளையும் ஏதம் பெரிதால்.

எனவே அவ்வெடிப்பினை அடைத்துக் காக்கவே காற்றின் வழி மா கொணரப் பணித்தோம். வெடிப்பும் அடைவுண்டது.

நீர் அக்கலன்கள் கரை சேர் பொழுதில் அங்கு சென்று மீகாமனிடம் செய்தி செப்பி கலச்சரக்கு மதிப்பில் காற்பங்கு இவளுக்கு உரியதாக்கவும். ஆணை நமது"

இறைவன் விடுத்த செய்தி இது.

நாட்கள் நகர்ந்தன. கலன்கள் துறை நண்ணின. தாவூது (அலை) அவர்கள் கலன் மீகாமனை வரவழைத்தார் இறை அருள் செய்தியை எடுத்து இயம்பினார்.

கேட்ட மீகாமன் வியந்தான். "அண்டை போயுளதோ கலத்திடை? சொன்மின்." என்றார். மீகாமன், "நான் அறிகிலன் அது பட்டது" என்றான். அவன் சார்பினர் அனைவரும் "பெயர்ந்தது அறிந்திலம்" என்றார்.

சுலைமான் (அலை) அவர்கள் கரை சார்ந்த கலன்கள் ஒவ்வொன்றிலும் ஏறி, இறங்கி, உற்று நோக்கினார்.

ஒரு கலனில் ஏற்பட்ட பிளவையும் அது மாவினால் அடைபட்டு இருப்பதையும் சுட்டிக் காட்டினார்.

அனைவரும் இதனை அறிந்து வியந்து அளப்பரும் இறைவன் வளப்பெருங் கருணையினைப் போற்றினர்.

தாவூது (அலை) அவர்கள் ஆணையின்படி மீகாமன் கலன் பொதி சரக்குகளின் மதிப்பில் கால்கூறு ஆன முப்பதாயிரம் பொற்காசுகளை அம்முதியவட்கு உவப்புற அளித்தான்.

முன்னர்க் கொண்ட முந்நூறு காசுகளையும் அவளுக்கே உரியதாகப் பணித்தார்.

கொண்ட கிழவி கூன் நிமிர்ந்தாள். சுரித்த முகம் சிரித்து மலர, அனைவரையும் நோக்கினாள். முறுவல் கிளைத்தாள். முற்றும் மகிழ்ந்தாள்.

ஈகை அதன் பயன் இருந்தவாறு இது.

11. அனந்தப் பிரித்த படலம்

ஒரு முறை பிறப்போரன்ன உடன் வயிற்றாளர் இருவர் அரசவை அடைந்தனர்.

அவர்களில் ஒருவன் "ஐயா! எம் தந்தை எம் மாட்டு ஒத்த அன்பினராய் இருந்தார். நாங்களும் எங்கள் கடமைகளை, அவர்க்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை, மறவாத வராய், அவர்ப்பேணி வந்தோம்.

வயதின் முதிர்வால் இறப்பும் நண்ணியது. அது உணர்ந்த அவர் எம் இருவரையும் ஒருங்கு அழைத்தார்; உடன் இருத்தினார்; உரை கொள் நீதிகள் பல உரைத்து அமைந்தார்.

"என் உயிர்ப் பிரிவின் பின் உங்களில் ஒருவனே, என் உடைமைகட்கு உரியவன்" எனவும் உரைத்தார்.

அவன் இவன் எனச் சுட்டிச் சென்றிலர். அன்னவர் ஆவியும் அகன்றது.

பொன் உடல் அடக்கினோம்; செய் கடன் செய்தோம்; செய்வது அறியாது திகைக்கின்றோம்.

ஒருவனே எனக் குறிப்பிட்டமையால், எம் இருவரில் எவன் இது கொள்வது? என எங்கட்கு விளங்கவில்லை, என்று கூறினான்.

இருவர் சோதரர் இணைந்த கருத்தராய் இருத்தல் கண்டு தாவூத்(அலை)அவர்கள், அவர்களை உற்று நோக்கினர். "சொல்லினும்,தோற்றினும் வேற்றுமை இவர்பால் இலை. நீதி நிகழ்த்துவது எவ்வாறு?" என எண்ணி மனம் சலித்தார்.

தந்தையின் சோர்வினை அறிந்த தனயன் "ஐயா! நீர் ஆணையிடின் இதற்கு உரியநீதி எடுத்துச் சொல்ல முயல்வேன்" என்றார்.

உள்ளகம் நிறைந்த உவகையினோடு, "உரை செய்க" எனப் பணித்தார்.

சுலைமான் (அலை) அவர்கள் "ஐயா! நீவிர் இருவீரும் தொடு குழிப்படுத்த உம் தந்தை உடலினின்றும் ஓர் எலும்புத் துண்டு ஒடித்து எடுத்துவரின் அன்றி இவ்வழக்கு முடித்தல் அரிது" என்றார்.

ஆங்கு, அவ்வாசகம், முன்னவன்செவியில், ஊறுறு கனல் எனப் புகுந்தது. துளி உலாம் கண்ணனாய், துவளுறு உடலனாய், "உயிர் போயினும் உயிர் தந்த தந்தையின் உடல் எலும்பினை உடைத்து, எடுத்து வருவதா? நான் இது செய்யேன். தம்பிக்கே தனம் ஈக. யான் இது பொறேன். இவ்வழி செல்வமும் பெறேன்" எனக் கூறினான்.

உடன் நின்ற இளையவன் இதற்குள் ஓடிச் சென்று, என்பு ஒன்றனை முற்குறிப்பிட்டாங்கு ஒடித்து, எடுத்து வந்தனன். சுலைமான் (அலை) முன் வைத்தான்.

இது கண்டு, அவர், "நீவிர் இருவீரும் உம் சிறு விரல் முனையில் ஊசி கொடு பொதுத்து குருதித் துளிகள் சில கொள்க. எம் முன் வைத்துள்ள இவ்வெள்ளெலும்பின் மீது அத்துளிகளை இடுக." என்று ஏவினார்.

முன்னவன் என்பு கண்டான்; மூண்டெழு துயரன் ஆகி; தன் விரல் பொதுத்து குருதித் துளிகளைக் கண் நீர்த் துளிகளோடு அவ்வென்பின் மீது இட்டனன்.

இட்ட குருதித் துளிகள் இரும்புண்ட நீரின் மீள்கில ஆயின. பின் இளையவனும் அவ்வாறே செய்தான். ஆனால் உடற் குருதித் துளிகள் என்பில் பதிந்திலவாய், விரைந்து வழிந்து ஓடின.

இதுகண்ட அவையோர் இறும்பூது எய்தினர். "என்ன நீதி இதிலிருந்து நிகழ்த்துவார் இவர்?" என ஆவலுடன் காத்திருந் தனர்.

"இறந்த உடலிலிருந்து என்பு எடுக்கவோ, ஒடிக்கவோ, இசை யவும் செய்கிலாத இவன் அவர் மகன். இதுவே உறுதி. பின்னவன் முறைப்படு மகனலன். முன்னவன் செல்வம் முழுமையும் கொள்க" எனப் புகன்றார்.

இளையவன் இது பொறானாய், ஓடித் தன் மனை புக்கான். அன்னையை அழைத்தான். அனைத்தும் கூறினான். "நான் அவர் மகன் அலன் என நவின்றாரே சுலைமான் அவர்கள்; ஏன்?" என வினவினான்.

பல்லாண்டுகள் முன் நடந்த அத் தீ நிகழ்ச்சியை அவள் மகன் உளம் கொளக் கூறினாள்.

ஒருநாள்; மயங்கிருள் மாலைப் பொழுதில் மனைப் புகுந்த தீயன் ஒருவன், தன்னைத் தழுவிடச் சார்தர, தலைவன் எனத் தவறாக எண்ணி உடன்பட்டிருந்ததையும், பின்னர் நிகழ்ந்தன நன்று அல என்று அறியவர, செயலற்றுப் போனதையும் "யாரிடம் சொல்வேன் இது?" என்று உணராது புலம்பியதையும் கூறினாள்.

வன் புணர்ச்சியால் வயிறு வாய்க்கப் பெற்று, சூல் முதிர ஈன்று எடுத்த மகவே இளையவன் என்றும் குறிப்பிட்டாள்.

"அவர் அறியாரோ இது?" என மகன் வினவ "குறிப்பால் உணர்ந்தார். எனினும் ஒன்றும் கேட்டிலர் என்னை அவ்வுயர் குணப் பெருந்தகை" என்று கூறி, குளம்படு விழிகளோடு, குனிந் தாள் தலை. நெடுமூச்சு எறிந்தாள், நீர் சோர நின்றாள் நெடிது.

அப்போது தாவூது(அலை) அவர்களுக்கு வயது 163. "நம் பின் அரசு எவர்க்கு நல்குவது?" என்று எண்ணினார்.

ஈன்ற மக்கள் எழுவரொடு பதின்மரில் இளையவன் நீக்கி, பதினறுவரையும், உலமாக்கள் எழுபதின் மரையும் உடன் கூட்டினார்: கலந்து ஆலோசித்தார். நாடாள் நலத்தகையர் இவர் என அவரில் (16 பேரில்) ஐவர் தேர்ந்தனர்.

12\. அரசு நிலையிட்ட படலம்

"ஓர் இருக்கையில் எவ்வாறு ஐவரை இருத்துவது, இவ்வைவரில் ஒருவனே அகலிடத்தை நெடுங்காலம் அளிக்க வல்லவன் ஆதல் வேண்டும். அவ்வாறாயின் எவரைக் கொள்ளுவது? எவரைத் தள்ளுவது?" என்று அறிகிலராய்த் திகைத் தார்.

இறையருள் கூட, வானவர் கோமான் ஜிப்ரீல் மண்ணிடை இழிந்தார். இறைவன் வாழ்த்துகளைத் தெரிவித்தார். முதல்வன் தந்த ஒளி மிக வீசும் முத்திரை முடங்கல் ஒன்றை அளித்தார்.

''இம்முடங்கலில் பன்னிரு மசலாக்கள்[1] உள்ளன. எவர் ஒருவர் இவைகட்குத் தக்க விடை தரவல்லவரோ அவரே தரணி ஆளத்தக்கவர். இது மன் இறைவன் ஆணை'' என்றுரைத்தார்; பின் விண் மேவினார்.

அப் பதினறுவரும் வினாக்களை அறிந்தனர்; வியன் நூல்கள் பல புரட்டினர்; ஓய்ந்தனர்; ஒன்றுரைக்க வகை அறியார் ஆயினர்.

தாவூது (அலை) அவர்கள் மனம் கலங்கினார். அண்டர் கோன் இழிந்தார்; அருகில் மேவினார். ''உமக்கு மக்கள் எத்துணைவர்? அவர் அனைவர்க்கும் இம்மசலாக்கள் உரைத்தது உளதோ?'' என வினவினார்.

சுலைமான் தவிர மற்றவர்க்கு உரைத்ததாகவும் அவர்கள் விடை அறியாராய் இருப்பதனையும் குறிப்பிட்டார்.

''ஏல நீர் தவிர்த்து இசைத்தது ஏன்?'' என

''சாலவும் சிறியன். ஆகவே அவனை நீக்கினேன்'' என விடை பகர்ந்தார்.

''இறைவன் ஆற்றலை அறிந்திட வல்லீரோ நீர்? உருவு கண்டு எள்ள வேண்டா. சுலைமான் (அலை) அவர்களையும் வரவழைத்து வினவுக.'' என்றார், சென்றார்.

அவ்வாறே அவர் தருவிக்கப்பட்டார். வினாக்களை அளித்தார். சிறிதும் தாமதியாது விடை எளிது பகர்ந்தார்.

கேட்டன, கிளத்தின வருமாறு:

1. மிகவும் விரைந்து செல்லும் பொருள் எது?

   இறப்பு. சென்றன சென்றன நாட்கள்; விரைந்து வந்தது வந்தது மவுத்து.

2. மிகவும் தொலைவில் போகும் பொருள் எது?

   கை நழுவித் தொலைந்த பொருள்.

3. எவற்றினும் நெருங்கி மருவி நிற்பது எது?

   அகத்து உள ஈமான் (நம்பிக்கை)

4. எவற்றினும் மிக்க நலம் நல்குவது எது?

   ''ஒப்பில் ஒருவன் உளன்'' எனும் நிர்ணயம்.

5. எவற்றினும் மிக்க கேடு பயப்பது எது?

   ஆதி நாதற்கு மாறாக நிற்றல்.

---

[1] வினாக்கள்

6. நுண்பொருளாய் இருப்பது எது?
உண்மை.

7. யாதினும் மிகுந்த மறம் விளைப்பது எது?
அழுக்காறு.

8. என்றைக்கும் உள்ள இரண்டு எவை?
நாளும் நிற்பது, விண்ணொடு மண்ணே.

9. நாளும் முரண் உள இரண்டு எவை?
ஒளி சேர் பகலும், இருள் செறி இரவும்.

10. ஒன்றற்கொன்று சினந்து காய்வன எவை?
பிறப்பொடு இறப்பே.

11. புகழப்பட்டவை எவை?
சினம் காத்துப் பொறைமேவல்.

12. இகழப் பட்டவை எவை?
அன்பரிடத்து கொன்னே வெகுளி மிகுத்தல்.

அறுவரொடு பதின்மர் அழுக்காறு முற்றினர். தமக்குள் உரை நிகழ்த்தினர். "முன்னர் நசாயிகுக்கு உரைத்த வண்ணமே நபிப் பட்டம் சுலைமான் பெறத்திட்டம் இட்டார் போலும் நம் அரசர். இளையள்; இனியள்; அவள் பால் இவர் உற்ற மயல் விளைத்த செயல் இது" என்று பலவாறாய்ப் பிதற்றினர்.

பின் தாவூது (அலை) அவர்களை அணுகினர். "யாவர்க்கும் பொதுவாக ஒரு சோதனை நிகழ்த்துவோம். அதனுள் வெற்றி பெறுவோர்க்கே அரசுப்பட்டம் அளிக்கலாம். அவர்க்கு நாங்கள் அனைவரும் அடங்கி வாழ்வோம்" என்றனர்.

"நாங்கள் பதினெழுவரும் பதினேழு பட்ட மரத்துண்டுகள் எடுத்து வருவோம். எம் பெயர் பொறிப்போம். அவற்றை ஓர் அறையில் இடுவோம். அறைக்குக் காவலும் அமைப்போம். மறு நாள் கதவம் திறந்து காணும் பொழுது எவர் பெயர் பொறித்த பட்டமரத்துண்டு தளிர்த்து விளங்குகிறதோ அவரே அரசர் ஆகலாம். இதற்கு நாங்கள் சம்மதிக்கிறோம்" என்றனர்.

"ஆகுக" என்று தாவூது (அலை) அவர்களும் சம்மதித்தார்.

பொய் பொதுள் பூரியர் அப்பதினறுவரும் பசுங்கழித் தேடித் தம் பெயர் வரைந்தனர். பதினேழாவதாக உலர்ந்து

அழிய, இறந்த பட்டமரத்துண்டு ஒன்றில் சுலைமான் (அலை) அவர்கள் பெயர் பொறிக்கச் செய்து, அனைத்தையும் அறைக்குள் இட்டனர்; காவலும் அமைத்தனர்.

மறுநாள் காலை மன்னர் தாவூது (அலை) அவர்கள் தம் மக்களோடும் உலமாக்களோடும் அவ்வறையினை அடைந்தார்.

கதவம் திறக்கப் பெற்றது கண்டார் அப்பதினெழுவரும்.

மூத்தோர் பெயர் பொறித்த அக்கழிகள் உள்ள பசுமையும் ஒருங்கு இழந்து போய் வற்றிக் கிடந்தன.

சுலைமான் (அலை) அவர்கள் பெயர் பொறித்த கம்பு தழைத்து நின்றது கண்டார்.

சுழித்தெழு தீயினைக் கற்பூரம் கொண்டு அவிக்கக் கருதிய அற்பர்கள் முகம் கருகியது. சுலைமான் (அலை) அவர்கள் முகம் விகசித்தது.

பின்னர் தாவூது (அலை) அவர்கள் "சுலைமான் (அலை) இவ்வரசு பெறுவதில் நும் மனத்தில் ஐயம் இன்னமும் உண்டோ?" என வினவினார்.

"இளைய மனைவிபால் இணையில் அன்பினீர். வஞ்சகச் சூழ்ச்சி செய்தீர். அந்த மகன் பெயர் பொறித்த பட்டகழி தழைத்து விளங்க, இரவெல்லாம் கண் விழித்து ஏங்கி துஆ செய்தீர் போலும். அவன் வென்றான். எனினும் ஒரே ஒரு வினா விடுப்போம். அதற்கு அவன் விடை இறுப்பின் அரசுப் பொறுப்பு அவனுக்கே அமைப்போம்" என்றனர்.

"யாது அது? சொல்க!" என்றார், தாவூது (அலை) அவர்கள்.

"மனிதர்க்கு என அமைந்த ஒன்று, அதனை நல்விதம் கொள்ளின் நன்மை அமையும்; புல்விதம் கொள்ளின் புன்மை அளிக்கும். அது எது?" என்று அவர்கள் வினவ,

கடைப்பாலகனார் உடனே தடையின்றி "அவர், அவர் இதயமே அது" என்று விடை கூறினார்.

பல்லோர் வாழ்த்த, உடன் தோன்றல்கள் ஒருங்கு உடன் போற்ற சுலைமான் (அலை) அவர்கட்கு அரசு நிலை பெற்றது.

ஏழியாண்டு இனிது கழிந்தன. மூவுத்து வந்து அடுத்தது எண்ணி மன்னர் தாவூது (அலை) அவர்கள் தம் மனை மாடத்தில் சுலைமான் (அலை) அவர்களைப் பக்கத்தில் இருத்தி, பிற மக்களைச் சூழ இருத்திப் பரிவுடன் அவர்கட்குச் சில அறிவுரைகள் பகரலுற்றார்.

13. தாவூது நபி உபாத்து[1]ப் படலம்

அப்போது தாவூது (அலை) அவர்கள் வயது 170; இளைய மகனார் வயது 13.

தாவூது (அலை) அவர்களது அறிவுரைகளில் சில :

1. எவரையும் ஏளனம் செய்யற்க. வறுமொழியும் வம்ப நகையும் ஒழிக்க.
2. உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கும் சினம் காக்க. சினம் அறிவில் தெளிவையும், ஆலோசனையையும் அழித்து விடும்.
3. உளன் இறைவன் ஒருவன் என்று ஓர்ந்து, அவனை உள்ளன்போடு தியானம் செய்க. இருவினை அகலும்; மேலாம் பதமும் மேவும்.
4. மணங்கொள் மங்கையர்கள் தம் கற்பினைத் தாமே காக்கக் கடவர்; சிறை காக்கும் காப்பு வேண்டா. அவர் தம் கற்பை ஐயுறல், ஏதம் பெரிதும் பயக்கும்.
5. தோழனோடும் ஏழமை பேசற்க.
6. நாளை என்பது நமதே; நல்லதே என எண்ணுக. கழிந்ததற்கு இரங்கலும் எதிரதற்கு ஏங்கலும் வேண்டா.
7. பிறன் மனை நயப்பு பெரிதும் தீது.
8. நல்லாரிணக்கம் நலம் நல்கும்.
9. தெளிந்த உலமாக்கள் அறிவுசால் உரை தழீஇ வாழ்க.

இன்னன பலவும் கூறி இறைவன் திருப்பெயர் மனத்தில் இருத்தி பாயலில் சாய்ந்து இருகண் மூடினார். மென்மெல அவர் உயிர் இல்லாகின்று. உயர் குண தாவூது (அலை) அவர்கள் உபாத்து ஆயினார்.

சூழ்ந்த மக்களும், சுற்றமும், பிறரும் ஆழ்ந்த துன்பினால் அரற்றல் மேவினார். ஆகுலம் மிகுத்து, கண் அருவி ஒழுக்கினார்.

[1] உபாத்து—மரணம்.

நானம் கமழ் குழலாள் நசாயிகு உள்ளிட்ட மனைவியர் அனைவரும் இடி உண்ட மஞ்ஞையின் ஏங்கி அழுதனர்.

கைம்மை வாழ்வின் கொடுமை கூறிப் புலம்பினர்.

இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி அமைதற்கு அமைந்தவர் இழந்து வாடினர். கொழு கொம்பை இழந்து தேங்கும் கொடிகள் ஆயினர். கண்மை கரையக் கலங்கினர்; அழுதார்.

அரற்றினர்; வீழ்ந்தனர். விம்மினர்; வெருண்டார்; புலம்பினர்; புரண்டார்; சுருண்டனர்; சோர்ந்தார்.

அப்பொழுது ஆதிபால் இருந்து 'சொர்க்கத் திவ்வியத் துகில்' கைக் கொண்டு ஜிப்ரீல் மண் அடைந்தார்.

சுலைமான் (அலை) அவர்கள் பால் அணுகினார்; கையினால் தழுவினார்; ஆறுதல் மொழி சில அமைவுறக்கூறினார்.

"இறைவன் தந்த இவ் ஆடை கொண்டு கபன்[1] செய்து தாதை உடலை அடக்கம் செய்க. பின் செய் சடங்குகள் பிழையறப்புரிக. அன்னதன் பின்னர் ஆட்சி மேவுக" என்று கூறி துகில் கைக் கொடுத்து சிறையின் சோதி ஒளிர விண் சேர்ந்தார்.

சுலைமான் (அலை) அவர்கள் புள்ளினத் தொகையைக் கூவினார்.

"ஐயன் உடலை அடக்கம் செய்து யாம் மனை புகும் அளவும் அந்தரப் பந்தல் அமைத்தல் நும் கடன். பைத்துல் முக்கத்திசு பள்ளி தொட்டு அதற்கு நான்கு புறமும் ஏழுகாதம் மட்டும் விரி சிறைப் பந்தல் விரைந்து இயற்றுக" எனப் பணித்தார்.

பெரு மகனார்க்கு நீழல் செய்யும் பெருமை சேர்ந்தது எம்பால் என மகிழ்ந்தனவாய், கூம்பிய சிறகர் மனை உறை குரீஇ முதல் மா இருந்தூவி மணி நிறமஞ்ஞை ஈறாக அனைத்துப் பறவைகளும் அகல்வான் அடைந்தன. தூவிகள் விரித்தன. நிலை சிறிதும் அசைவு இலாவாறு நெருங்கின; தலைகள் தழுவிப் பிணைந்தன; பல்வண்ணத் துகில் தொடு விதானம் அமைத்தபோல் விளங்கின.

கதிரவன் கதிர் நுழையாதவாறு மிடைந்தன.

தாவூது (அலை) அவர்கள் பொன் உடலை மக்கள் பதினெழுவரும் கரத்தால் தாங்கி வெளி எடுத்து வந்தனர். பலகையில்

---

* கபன் — உயிரற்ற உடலை அடக்குமுன் போர்க்கும் துணி.

கிடத்தினர். புதுப்புனல் ஆட்டினர். உடல் ஈரம் மாற்றினர். சொர்க்கத் துகிலைக் கோடி ஆக உடுத்தனர்: கபன் செய்தனர்; சுறுமாத் தீட்டினர்; மஞ்சில் இட்டனர்.

உடல் சுமக்கத். தோள் கொடுக்க ஒருவரோடு ஒருவர் முந்தினர். பைத்துல் முக்கத்திசு என்னும் பள்ளியின் பக்கலில் பரிவொடு 'கபுறி'ல்* வைத்து அடக்கம் செய்தனர் அடங்காத் துயரினர்.

மென்மெல இயங்கித் தன் மனை சேர்ந்தார்; சுலைமான் (அலை) அவர்கள் பந்தரிட்ட பறவைத் திரளுக்குப் பரிவுடன் ''ஐய! நீர் செய்தது ஆர் செயவல்லார். நன்று'' எனக் கூறி ''உரிய சார்விடம் சேர்க'' என விடை கொடுத்தார்.

பின் செயற்கு உரிய யாவும் பிழையிலவாய்ச் செய்தனர். பெரும் பொருள், வாங்குநர்க் கையகம் வருத்த ஈந்தார்.

கலன் கழி மகளிர், நரை விராவுற்ற செம்முகத் தோழியர் தேற்ற, நன்மொழி பல இசைக்க, ஒருவாறு மனம் தேறினார்.

நீத்தார்க்கு உறுகடன் நிகழ்த்தினர். பின் நந்தாப் புகழ் செறி தந்தையார் இருந்த மிகுறாபில்[1] சுலைமான் (அலை) அவர்கள் வந்து திகழ்ந்தார்.

14. நபிப்பட்ட முத்திரை மோதிரம் வந்தபடலம் — கவின் கொள் தலைப்பாகை கட்டினார். மின்னின் ஒளிர் சுப்பா (ஜுப்பா) மேனி அலங்கரித்தது. வேத நன்னபி என விளங்கிய மூசாவின் கரம் அலங்கரித்த ஆசா (கைத்தடி) வலக்கரம் ஏந்தினார். அரசர்க்குரிய கோலத்தில் அழகுற விளங்கினார்.

அப்பொழுது அமரர்கோன் ஜிப்ரீல் அவ்வழி அடைந்தார்.

''இறைவன் தம் வாழ்த்துக்களை உமக்குத் தெரிவிக்கச் சொன்னான். மிகு புகழ் சுலைமான் (அலை) அவர்களே!

---

* கபுறு-புதை குழி

1. மிகுறாபு- பள்ளி வாசலில் இமாம் தொழுகை நடத்துவதற்கு என ஒதுக்கப்பட்ட இடம். இங்கே அரசர் இருப்பதற்காக மன்றத்தில் அமைந்திருக்கும் இடத்தைக் குறிக்கும்.

'பெரும்புவி அனைத்தும் ஒரு குடை நிழற்றும் இவ்வரசப் பேறோ? ஒப்பில்லாவகை உயர்நிலை அறிவோ? இவ்விரண்டில் நீர்வேண்டுவது எது ஒன்று?' என்று கேட்டறியச் சொன்னான்.

எதுவேண்டும் என இயம்புக மற்றே," என்று ஜிப்ரீல் வினவ சுலைமான் (அலை) அவர்கள் மறுமொழி கொடுத்தார்.

"புல் நுனி பனித்துளி அளவு சுக்கிலமே, பெரும்பேர் யாக்கை ஆக அமைகிறது. இது கொண்டு செய்தக்க பல. அவை செயற்கரிய வாய் அமையவும் கூடும். எனினும் உடற்பற்றாளர், மிகு திறலாளர் உலகம் பொது எனப் பொறார்; வாய் வாள் வேந்தரை வணக்கக் கருதுவர்; வாள் முறுவலார் தோள் நலம் துய்க்கமேவுவர்; இன்பம் இவை எனக் கருதிச் செய்வன அனைத்தும் கேடும் துன்பமும் தர வல்லனவே.

நில்லா உலகம் புல்லிய நெறித்து. பெற்ற அநுபவத்தைக் கொண்டு, நினைப்பில் வெறுப்பும், விருப்பும் அகற்றி, புளியம் பழமும் தோடும் போல பற்றறுத்து, மும்மலம் கடிந்து, அறுபகை செகுத்து, பொருவரும் கதி இடைப்புக என அமைந்த சாதனமே இந்த நரஜென்மம்.

இதனினும் ஆக்கம் இலை மன் உயிர்க்கே.

அரசு நிலையானது அன்று. குடை நிழல் இருந்து குஞ்சரம் ஊர்ந்தோர், ஓர் காலத்து நடை மெலிந்து, ஓர் ஊர் நண்ணினும் நண்ணுவர்.

இம்மை, மறுமை இரண்டனுக்கும் நலம் பயப்பது அறிவு ஒன்றே.

எனவே எள்ளறு சிறப்பின் இமையவர் கோவே! விள்ளரு சிறப்பின் அறிவே வேண்டுவன். மன் உயிர்கள் வேண்டுங்கால் வேண்டும் அறிவு". என்று கூறி முழந்தாளிட்டு அல்லாவிற்கு நன்றி செலுத்தும் வகையில் நெற்றி நிலம் கொள்ள, சுஜூது செய்தார்.

கேட்டு மகிழ்ந்த கிளர்மணிப் பூணினார் மீட்டு விண்ணிடைப் போதல்மேயினார். இறைவன் திருமுன் இயம்பினார். இறைவன் மட்டிலாக் கருணை கூர்ந்தான்.

"அழியா இயல்பின் அறிவே வேண்டிய அரசர் ஏறே! மகிதல நரர்க்கும், ஜின் கணத்தொகைக்கும், ஊர்வன, பறப்பன, ஏன் எல்லா உயிர்த் தொகைக்கும் நீரே தலைவர் ஆகப் பணித்தோம்

தற்செருக்கு, ஆணவம் முதலிய மாசுகள் உம் மனத்தினில் அகல்வதாக.''

இவ்வாறு விண் திருமொழி ஒலிக்கக்கேட்டு, உவகையால் மண்டி இட்டு, பக்தி கொண்டு சுக்கூறு[1] செய்தார். ''என் இறைவன் திருக்கருணை இருந்தவாறு என்?'' என வியந்தார்.

சுஜூதினில் விழுந்து பலமுறை தொழுதார். இது நிகழ்ந்த பொழுது அவர் வயது இருபது.

''சொர்க்கத்தில் உள்ள சுத்த ஒண் கிரண முத்திரை ஆழி எடுத்து சுலைமான் (அலை) அவர்களுக்கு அருள்க'' என ஜிப்ரீலுக்கு இறைவன் ஆணை இட்டான்.

இறைவன் ஏவலில் இங்ஙனம் சுலைமான் (அலை) அவர்கள் பால், முத்திரை மோதிரம் அளிக்கப் பெற்றது.

அப்பொழுது நபிப்பட்டமும் எழில் குலவ வந்து சேர்ந்தது. அம்மோதிரம் மணம் கமழ் நிலையது; பார்ப்பவர் கண் ஒளி பறிப்பது; நாற்சதுர வடிவிற்று; ஒவ்வொரு புறமும் ஒவ்வொரு மறைமொழி என நான் மறைமொழிகள் தீட்டப்பெற்றது.

கருவிகளாற் செதுக்கப்படாது, இறை குதறத்துக்[2] கொண்டு வரிப்படுத்தியது. அம்மறை மொழிகளாவன:

1. லாயிலாக இல்லல்லாஹ்
2. குல்லு செய்யின் காலிக்கு
3. சுபுகான மன்லகுல் முல்க்
4. ஃபத் தபாறக்கல் லாகு

''இம் மோதிரத்தால் சகல ஷோபனாதிகளும் அமையும்''

ஜிப்ரீல் இவ்வாறு அருளி இருஞ்சிறை விரித்து எழுந்து வானகம் புக்கார்.

மோதிரம் பெற்ற முழுநலச் சான்றோர் அதனைத் தன் இரு, கைத்தலத்து ஏந்தினர்; கண்ணில் நீர் ஆட்டினர்; கண்மலர் ஒற்றினர்; தலைமிசைச் சுமந்தார்; தணத்தலில் உவகையில் மூழ்கினரார்.

உடன் தோன்றல்களும், உலமாக்களும், அக்குடியினரும் அம் முத்திரை மோதிரத்தைக் கண்டு, தம் கண்களில் புத்தொளி பெற்றனர்.

---

1. சுக்கூறு - நன்றி தெரிவித்தல்
2. குதறத்து - இறை அற்புதம்

சுலைமான் (அலை) அவர்கள் வியன் உள மின்பறு[1] தனில் ஏறி "பிஸ்மில்லாகிற் றகுமானிற் றகீம்" என இனிது உற இசைத்தார்.

அப்பொழுது அது அறிந்த இபுலீசு (ஷைத்தான்) சிந்தை முறிந்தவன் ஆகி, அழுது, அழுது அரற்றி முகம் கருகினான்.

சுலைமான் (அலை) அவர்கள் நபிப்பட்டம் பெற்ற அள்வில் முதுமறை தேர்ந்தோர் ஆசிகள் பல பகர்ந்தார். பல்லியம் கறங்கின. சூதர், மாகதர் வாழ்த்து இசைத்தனர்.

"புவனம் உதித்த நாள் முதல் கடையுகச் சூறு[1] ஊதும் நாள் அளவும் வரத்தகும் அரசர்களில் இவர்க்கிணை இவரே" என்று போற்றினர்.

கொல் சினத்த கடுங்களிறு, கதழ் பரிய கலிமா, நெடுங்குடைய நிமிர் தேர், நெஞ்சுடைய புகல் மறவர் ஆகிய நாற்படை, அணி பெறத் திரண்டன.

வணங்கா அரசர்கள் உடலங்களை அவர் வைவாள் சுவைத்தது.

எறும்பு முதல் யானை ஈறாக எவ்வுயிர்க்கும் செந்தண்மை மேவி விண்தொடும் நெடுமதில் "சாம்" எனும் செல்வத் திருநகர் அதனில் வீற்றிருந்து கோன் முறை புரிந்தார்.

அவர் செய்திறம் அடுத்துக் காண்பாம்.

## 15. ஜின் கணங்கள் வசப்படு படலம்

விண்ணுக்கு ஒரு கோமான் ஜிப்ரீல் விரைந்து மண் வந்தார்.

"மலை, கடல், காடு ஓடைக் கரைகளில், பிற இடங்களில் வாழும் ஜின் கணங்களே! பூத கணங்களே! பைசாசங்களே! உரைப்பன கேளுங்கள்.

நித்தமும் நீதி புரி உத்தமர் சுலைமான் (அலை) அவர்களிடம் சரண் புகுக. அஞ்சுறு மனமும், அஞ்சலித்த கரமும் கொண்டு அவர் தாள் பணிந்து உய்க.

---

1. மின்பறு - ஏறி நின்று பிரசங்கம் பண்ணுவதற்காகத் தொழுகை நடத்தும் இடத்திற்கு அணித்தாகப் பள்ளி வாசலில் அமைக்கப்பட்டு உள்ள சிறு மேடை
2. சூறு - ஊது குழல்; இறுதி நாளன்று ஊதப்படுவது

உய்வகை இது அலால் வேறு இலை உமக்கே! தெளிமின்" என்று கூறி விண் அடைந்தார்.

ஜின் கணங்கள் திரண்டன. நபி பதம் இறைஞ்சி ஏத்தின.

தறுகண் வீரரும் காணில் திடுக்கிடும் தோற்றத்த சில ஜின்கள்

பாறைகளைப் பந்தெடுத்து ஆடுவ. விடு மூச்சில் மலைகளை உருட்டி மகிழ்வ. கடல் அளறுபட துடும் எனப் பாய்ந்து குளித்து மண் கொள்வன. கண் நொடி அளவில் காதம் கடப்பன. முகில் களைப் பிழிந்து தம் முதுகு நனைப்பன. பிணந்தின் வாயவாய் துணங்கை ஆடுவ. வேண்டுருக் கொளவல விறல் படைத்தன.

மலை அகழ்க்குந கடல் தூர்க்குந.

ஒட்டகம், முயல், ஆடு உடல் உரோமத்தால் ஆடைகள் நெய்து அமைத்தும், உடுத்தும் வருவன.

பிணக்குடர் மாலைய. காலணி தண்டை என,கை அணி கடகம் என, காதணி குழை என மலைப் பாம்புகளை அணி கொள்வன.

கனை இருள் கங்குலிலும் கால் கிளர்ந்து திரிவன.

கொத்தளக் கொம்மைபோல் அமை அசை பல்லின. பிறை எயிற்றின. பேழ் வாயின.

இருள்புரை மேனிய. சந்தனச் சாந்து என ஆனைக்குருதி பூசி மகிழ்வன, சில ஜின் கணங்கள்.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்த கேடு கெட்ட மானிடர் ஆவிதான் போனபின் அவை காத்து நிற்பன.

மன்றோரம் சொன்னார் மனை வாழ்வன. நெடுங்காலம் பூட்டிக்கிடக்கும் வீட்டிடைக் கிடப்பன சில பூத கணங்கள்.

தாழ்ந்து மார்பிடைத் தட்டும் உதட்டின. ஒட்டி ஒட்டு விடாத கொடிற்றின. கூர் உகிர்க் கொடு விரலால் பிணத்தின் கண் தொட்டு உண்பன.

கழி முடைக் கருந்தலை ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர நட்டம் பயில்வன.

முன்தேர்க் குரவையும், பின்தேர்க் குரவையும் ஆடி மகிழ்வன.

சூரல் பம்பிய சிறு கான்யாற்றில் தனித்துப் புகும் ஆடவரைப் பற்றி அலக்கழித்து உருக்குலைக்கும் தாக்கணங்குகள்.

இத்தகைய 420 பெருங்கணங்கள் ஒருங்கு கூடின.

இவ்வகை அலகைகள், பூதங்கள், ஜின்கள் யாவும் சுலைமான் (அலை) அவர்கள் நெறியில் அடைந்தன.

அது கண்டு அவர் ஆதியைச் சுஜூது செய்து எழுந்தார்.

ஜின் கணத்தொகை யாவும் ஈமான் கொள்ளச் செய்தார். அவற்றை நோக்கி "உமது குலம், வாழிடம், உணவு வகை, குடிநீர், சமயம் எவை? தலைவர் யார்?" என்று வினவி அறிந்தார்.

அவை கைகட்டி வாய் பொத்தி, தாழ்ந்த தலைகொடு, தகு விடை இறுத்தன.

தன் வழி நிற்பன அவை, என்பதன் அடையாளமாகத் தன் கரத்தின் மோதிரத்தால் தனித் தனி முத்திரை பதித்தார்.

"அழைக்கும் பொழுது வந்து உடனே சேர்க! உம் வாழிடம் சார்க" என விடை தந்து அனுப்பினார்.

ஜின் கணங்களில் சில தருக்குற்று அடங்காதனவாய் இருந்தன. அவற்றையும் தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்தி இருத்தினார். செருக்கு மேவிய அவற்றின் வலி குறைத்து, ஏவல் கூவல் பணி செய்ய அமைத்தார்.

தளைப்படு தாளன, இட்ட பணி யாவும் செய்தன.

படர்ந்தெழு மரங்களைத் துணிக்க, வீடுகள் சமைக்க, செப்புக் குடங்கள் கடாரங்கள் அமைக்க, மலையில் கல் உடைக்க, அவற்றை ஏவினார்.

அவர்தம் துணைவியரை, கம்பளங்கள், ஒண் பரமதானிகள் நெய்து அமைக்க, ஏவலிட்டார்.

ஆழ்கடல் மூழ்கி அரும் பெறல் முத்து, பவளம், வலம்புரி திரட்டப் பணித்தார்.

கருவூலம் கதிர் மணிகளால் நிரம்பியது.

தானியக் களஞ்சியங்களில் தானிய மணிகளை, எங்கணும் திரட்டிச் சேர்க்கப் பணித்தார்.

குற்றி, கொழித்து, மா அரைக்க சிலவரை ஏவலிட்டார்.

மேற்பார்வைக்கும், காவற்கும் எனச் சிலரை நியமித்தார்.

ஏவலர்க்கு இரு நிதியம் ஈந்து ஒட்டகம், மாடு, ஆடுகள் முதல் பல கால் நடைகள் கணக்கில்லனவாய்த் திரட்டினார்.

இருள் செறி காட்டகத்து இந்தனம் வெட்டிச் சுமந்து வர ஜின்கள் சில ஏவப்பட்டன.

மக்கட்கு உணவு படைக்கக் கடல் போல் ஆழிய செப்புப் பாத்திரங்களை அடுப்பில் இட்டன சில. போசனம், கறி முதல் பலவும் அறுசுவைப்பட அட்டன சில. மூடநெய் பெய்து சமைத்தன சில.

அட்டு ஆனாக் கமழ் குய் அடிசில் மணம் விண் அளாவ, வேல் கண் அரம்பையரும் ''அமிழ்து போன்ம்''என அவாவினர் உண்ண.

பெருநில மாக்கள் பெருஞ் சோற்று அமலை ஆர மாந்தினர்.

அடுதல், இடுதல் பணி இயற்றிய ஜின்கள் கடைசி பந்தியில் அமர்ந்தன. தமக்குள் ஒலி அறாப் பேச்சினவாய் உண்டு மகிழ்ந்தன.

இவ்வாறு மக்கள் தொகுதிக்கு ஜின்களும் பணி செய்ய அமைத்தார்.

இளங்கன்றுகள் ஒழிய முதிர் பருவத்து, தளர் நடைய ஆன ஒட்டகம், ஆடு, மாடு இவற்றை ஒரு நாளைக்கு 30,000க்கு மேல் அறுத்து காட்டு விலங்குகட்கும், கழுகு முதல் பறவைகட்கும் உணவு படைத்தார்.

ஜின்களை ஏவி காட்டகத்தே நிலன் நெளி மருங்கில், கரை வழி நடப்பின் காதம் ஆம் எனும் அளவிற்கு நீளிய, ஆழிய நீர்த் தடம் அமைத்தார். கற்பாறைகள் கொண்டு கரை அமைத்தன. நிறைய நீர் தேக்கின.

காட்டு உயிர் இனங்கள் இரை கொண்டு நீர் பருகி மகிழ்ந்தன.

கைக்கும் வேம்பும் கறிக்கும் நெடுங்கழுத்து ஒட்டகம் நித்தம் சுமந்த தானியங்களைக் காட்டில் வெள்ளிடை இறைய வீசி குருவி, புறா முதலன உண்ணச் செய்தார்.

இவ்வாறு முறைப்படி நித்தமும் சுவை உணவு உண, விருந்திடு முயற்சியில் ஈடுபட்டார்.

''பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுப்பேன்'' என்ற திட முடிவினராய் இருந்தார் சுலைமான் (அலை) அவர்கள்.

செய்ய மெய்ப்பொருள் ஆம் இறைவன் தன் தனிப்பெரும் கருணையால் தணப்பரும் ஆற்றல் சால் சுலைமான் (அலை) அவர்கள், ஒருகால் தன்னை வியந்து தருக்கினார்.

இறைவனை நோக்கி, "தலைவ! நின் படைப்பு ஆவது எவ் வெவைக்கும் யான் படி அளந்து உணவு ஈவென் இப்பணி எனக்கு ஈக" என வேண்ட,

16. படி அளந்து ஏலாப்படலம்

இறைவன், "பெரு நிலம் புரக்கும் ஒரு தனி உரவோய்! உமக்கு யான் நல்கிய அரசினை எம்முடைய பேரரசின் முன் ஒப்பிடில் வெள்ளிடை இட்ட கடுகு போல் அமையும். இது உணராது படி அளக்கக் கருதுவது பழுது. எண்ணம் நீக்குக" என்றான்.

சுலைமான் (அலை) அவர்கள், "நின் தூதாய் ஜிப்ரீலைத் தாபித்தாய்; கமம் சூல் மாமழைக்கு மீக்காயீல் பொறுப்பு ஏற்றார்; உகக் கடை முடிவில் சூறு இசுறாஃபீல் கொண்டார்;மவுத்து இசுறாயீல் பொறுப்பில் அமைந்தது. எனக்கு என எது ஈந்தீர்? இது தரல் கூடாதோ?" என வேண்ட,

"செய் திறம் நும்மிடம் இல்லை" என இறைவன் தடுக்க,

"ஓரியாண்டளவிலாவது அப்பணி ஏற்பேன்" என சுலைமான் (அலை) கூற,

அதனையும் ஆண்டவன் மறுத்தான்.

கோரிக்கை, ஆண்டு, மாதம், வாரம் எனக் குறுகியது. கொண்டது விடார் ஆகிய சுலைமான் (அலை) அவர்களை நோக்கி, "படைப்பு அனைத்தையும் பட்டினி இட்டுக் கொல்லவோ துணிந்தீர்? படி அளக்கத் தகுவதோ?" என இறை வினவியும்,

"ஒரு வேளைக்கேனும் உணவு ஈயும் பொறுப்பை ஒருவ! தருவாய்" என வேண்டுகோளை விடாது வற்புறுத்தினார். வேண்டுதல் வேண்டாமை இலான், "பட்டே அறிக! ஒரு வேளை உணவு இட உணவுப் பொருள்கள் வேண்டுமட்டும் சேகரம் செய்க" என ஏவினான்.

அரசன் ஆணையால் அடலருந்துப்பின் ஜின்கள் திரண்டன. ஓர் இடத்து ஒரு பணி உன்னி நாற்றிசைக்கும் அவை பறந்தன.

எண்டிசை மேவின. உன்னி பெருங்கம்பளங்களில் தானியங்களை எடுத்துச் சுமந்தன; கொணர்ந்தன; நிறைத்தன.

ஆறைந் நாட்கள் அலைந்தன. குரை கடல் கரையில் கூலப் பொருள்களைக் குவித்தன. குவியல்கள் கொண்டல்கள் தழுவும் கொடுமுடி கொண்டன.

தவிர, ஓரிலக்கம் நெடுங்கழுத்து ஒட்டகங்கள், நிலம் தூங்கு அணல நல்லேறுகள், பொறை சால் கழுதைகள் பொதி சுமந்தன.

இக் குவியல்கள் இருந்த இடத்தின் நீளம் கடக்க முத்திங்கள் ஆகும். அகலம் கடக்க ஐயாறு நாட்கள் ஆகும். அத்துணைப் பெரிய.

படி அளக்க வந்தார் சுலைமான் (அலை) அவர்கள்.

''இன்றைய விருந்து மீன் வகைகட்கு'' என்பது அறிந்து மக்கள் கடலங்கரையில் துன்றினர்.

இறைவன் இது கண்டான். ஜிப்ரீலை விளித்து ''நாலாம் கடல் மீன் ஒன்றிடம் போய் 'இன்று விருந்துண வருக' எனச் சொல்க'' என்றான்.

வெவ்விய பசியினோடும், விரைதரு கதியினோடும் மீன் ஒன்று வந்து, கரையில் தலை நீட்டி, உடல் நீரில் கிடக்க அமைந்தது.

அது வந்த வேகத்தில் பனைமர உயரம் அலைகள் எழுந்தன. வால் சுழற்றி வந்ததால் நீர் தளும்பி அலைகள் கரையில் இப்பி, முத்து, எறிகதிர்ப்பவளம் முதலியவற்றைக் கொழித்தன.

கரை வந்த மீன் தன் கயவாய் திறந்தது.

வயவேந்தர் 'இதன் வயிற்றுத் தீத்தணிய வாரி இடும்' என ஏவினார்.

கதவம் திறந்த கோட்டை வாயில் போல் அதன் வாய் அமைய, திரண்ட ஜின்கள் அருவி போலப் பொருள்களைச் கொட்டின.

தூரா வயிற்று மீன் ஆராமை கொண்டு வாய் அகலத் திறந்தது.

வாய்மேல் விளிம்பு வான் தடவியது. நிலத்திடை நின்றோர் நீர்ப்பரப்பு கண்டிலர்.

ஜின்கள் சோனை மாரி என அதன் உள்வாய் உண்பொருள் சொரிந்தன.

கை சலித்தன; ஓடி ஓடி கால் சலித்தன; எழு வியரால் மெய் சலித்தன; உளமும் சலித்தன; ஓய்ந்தன.

ஓங்கல் என நின்ற உண்பொருட் குவை நிரம்பிய கடல்கரை வெற்று மணல் வெளி ஆயிற்று.

ஆயினும் அதன் பசி அகன்றிலது.

காவற்கமைந்த வேந்தர் கண்டார்; வியந்தார்; வெருவினார்.

கொட்டிய உணவைச் சுவைக்கும் வகையிலும் ஒரு முறையேனும் அது வாய் மூடிலது.

ஒட்டகம், மாடுகள், கர்த்தபத்திரள் அனைத்தையும் புகுத்தார்.

பல் திசைகளிலும் ஜின்களைப் போக்கினார்.

கொணர்ந்த அனைத்தும் கொட்டினார்.

பயனில்லை.

சுலைமான் (அலை) அவர்கள் இதுகண்டு, அது நோக்கி "நீடிய நின் வயிறு நிரம்பியதோ?" என வினவ,

"இல்லை. இட்டு உணாதவர் வயிறு போல் பற்றிய பசித்தீயால் வாடுகிறேன். நீரிட்டது உட்பசியை எழுப்பி விட்டது.

முதல்வன் சொல் முறை கெட, உரை மீறி சகல உயிர்க்கும் படி இடத் துணிந்து ஹதா (பிழை) செய்தீர்.

இது நாள் வரை நான் பட்டினி கிடந்திலேன். பசி என்பது அறியேன். இன்று நன்கு உணர்த்தினீர். கல்க்குகள் (உயிர்கள்) எவைக்கும் றிசுக்குகள் (உணவு) கொடுத்துக் காக்க வல்லீரோ நீர்?" என்று சினக்குறிப்பு எழ அம்மீன் உரைத்தது.

கேட்டு, மனம் நடுங்கி, "கடல் மீன்களில் பெரியது நீதானோ" என வினவ,

"அன்று. மிகச் சிறியவன் நான். நாலாம் கடலிடை எம் இனத்தவர் எழுபதினாயிரம் கூட்டத்தவர் உளர். விண்மீன் எண்ணினும், விரி தருக்களில் விளங்கு இலை எண்ணினும் கூடும். ஆனால் எம்மவர் எண்ணத் தொலைவிலர்.

அவற்றில் ஒன்றின் வாயில் நான் உட்புகுந்து மீளினும் அது, அது அறியாது.

அப்படி உட்புகினும் பெருவெளி இடை சோளப் பொறி இட்டது போல் அதன் வயிற்றிடை வைகுவேன். அத்துணைப் பெரியவும் உள.

ஒன்றல, இரண்டல்ல, எண் அற்றன. குமுறும் இக்கடலிடைக் கூடி வாழ்வன.'' என்று கூறி தலை திருப்பி, வால் சுழற்றி வல் விரைந்து வாரியுட் புக்கது.

தாவூது (அலை) சந்ததி தன் தவறு உணர்ந்தார். தாழ்ந்த தலையராய்த் தலைவனைப் போற்றினார்.

''உடைத்தாம் என் வலியறியாது ஊக்கத்தின் ஊக்கி இடைக் கண் புரிந்தேன். இறைவா! இது பொறுத்தி! எனை முனிந் தருளல்'' என்றார் கனிந்து உருகி நீர் வாரக் கண்.

''அகல்வான் திரி தரு பறவை இனமும் என் வழி நடக்க இறைவ! அருள் செய்க'' என சுலைமான் (அலை) அவர்கள் வல்ல வன் இடத்துத் துஆ இரந்தார்.

ஏகன் இவர் வேண்டுகோள் ஏற்றான். அவன் ஏவல் வழி 'ஜிப்ரீல்', 'மீக்காயீல்' பூமியில் வந்தனர்.

17. பறவை விலங்கினம் வசப்படு படலம்

''வையத்து வாழும் வண் சிறைப் புள்ளினங்காள்! வருக! சுலைமான் (அலை) அவர்கள் பதம் இறைஞ்சி எதிர் நின்று அவர் ஆணை வழி நடக்க!'' என்று கூறி அவற்றைத் திரட்டி சுலை மான் (அலை) அவர்கள் திருமுன் புகவிட்டு, விண்புக்கார்.

திரள் என வந்த அவை நிற்கவும் இடம் இல்லை. மன்னர் வாழ் மாளிகைத் திருவீதிவாய்ச் சேர்ந்தன; நெருக்குண்டன; தள்ளுண்டன; சுருக்குண்டன; சோர்ந்தன.

முன் நின்றதன் முதுகு தீய, பின் நின்றது நெடுமூச்சுவிட்டு முடுக்கியது.

இருக்கவும் இடம் பெறாதன மனை முகட்டில், மரக்கிளை யில், வெற்புகளில், வனத்தில், மேகங்குலவும் கொடிக் கம்பங்களில் அமர்ந்தன.

சில, வேறு இடம் இன்மையால் அந்தரக் கொட்பினவாய்ப் பல அடுக்குகளாய்ப் பந்தருக்குள் பந்தரிட்டு அமைந்தன.

வந்து வணங்கி வாழ்த்திய அவற்றிடம் குடம்பை அமைத்தல், முட்டை இடல், அடைகாத்தல், பொரித்தல், இரை ஊட்டல், பறப்பு பயிற்றல், இனம் தழுவி வாழ்தல் இன்ன பிற வாழ்க்கை முறைகளைத் தனித்தனி கேட்டு அறிந்தார்.

அன்னம் ஒன்று பையவே வந்து அவர்ப் பதமலர்ப் பணிந்தது.

"என் வரலாறு கேட்டீமின் பெரும!" என வேண்டியது.

பின் நெட்டுரை நிகழ்த்தியது.

"நும் பாட்டனார் நூகு நபி அவர்கள் என் இனத்தில் என்னைத் தெரிந்து எடுத்து வளர்த்தார்.

ஊழிப் பெரு வெள்ளத்தினின்றும் உயிர் உயப் போந்தோர் தம்முள் நானும் ஒருவன்.

அவர் மரக்கலத்தில் இடம் பெற்றவன் யான்.

ஆனவயதிற்கோர் அளவில்லை. ஆதி மனிதர் ஆதம் நபியையும் அறிவேன். அவர் என்பால் மட்டற்ற அன்பினர்.

'நிலமிசை நெடிது நீ நலஞ் செறி வாழ்வு பெறுவாய். உன் இனமும் அவ்வாறே உயர் நலம் பெறும்' என வாழ்த்தினார்.

'நெடுங் காலத்தின் பின் என் மரபில் இணையில் ஒருவர் தோன்றுவார். அவர் சொற்கேட்டு அகிலத்து உயிர்கள் அனைத்தும் நடக்கும்; ஏவு பணி செயும். காற்றுத் தேவனும் அவர் குறிப்பு வழி நிற்பான். நீயும் அந்நாள் அளவும் நெடிது வாழ்வாய். அவர்க் காணில் அவர்க்கு என் "சலாம்" இயம்பு என்றார்" என்று கூறியது.

வியந்து இது கேட்டார்; விழிகள் மலர்ந்தார்.

"உரை தகு சூறத் ஒன்று என்பால் உளது. அது ஓதின் இணையில் வகை நலம் மிக மேவும். செவியிடை இது கொளின் எடுத்த காரியம் யாவினும் வெல்வீர். கூறவோ பெரும?" என்று அது வேண்டிட, முடி துளக்கி, அருள் கண் காட்டினார்.

தான் நிறத்தால் பளிங்குத் தலம் சிவக்க, நிலத்திடை மண்டி இட்டு, 'பாத்திகா' ஓதி, ஆமீனைத் தரிக்க நீட்டி விண்டது; ஆதியைச் சுஜூது செய்தது.

ஆதிநாதன் அருட்செயல் வியந்து, சோதி மாமுடிச் சுலைமான் (அலை) அவர்களும் சுஜூது இட்டார்.

அடுத்து,

குறடு போல் அலகும், கொடு நெடுங் கழுத்தும் கொண்ட கழுகு ஒன்று வந்து வணங்கிக் கூறும்:

"துதி பெறு வலவன் திருஅருள் பெருக, ஒரு தனிச் செங்கோல் நடத்தும் உரவோய்! இணையில் அரசே! இயம்புந கேட்டருள்.

ஆதி மனிதராம் ஆதம் நபியை இமைப் பொழுதும் நீங்காது இருந்த பெருமையும் உண்டு என்பால்.

விண் வாழ் நிலை நீங்கி, மண்ணிடை மேவி, கண் புனல் சோர கவிந்த துயருடன் அவர் வாழ்ந்த போதும் இறைப் பொழுதும் அவரை அகலகில்லேன்.

அவர் என்னை அருகு அழைத்து அணைத்து "எம் மரபில் பல் நபிகள் பிறப்பர். சிறந்த ஏந்தல் ஒருவர் தோன்றுவார். அவர் தமக்குப் பேரியாக்கை மதமா முதல் சிற்றுயிர் எறும்பு ஈறாக அனைத்து உயிர்களும் அடங்கி நடக்கும். பவனனும், புவனமும் அவர் வழி மேவும்.

எம்மினும் நெடிய ஆயுளை நீ. அவர்க் காண்பாய். அவர்க்கு என் சலாம் உரை என்றார்.

செவ்விதின் அவ்வுரை செப்பினேன் நும்பால்.

உலக இயல். வானவர் இயல் நன்கறிவேன் நான். பாக்கியம் பழுத்தன்ன சூறத் என்பால் உளது. சொலவோ பெரும? திருஉளம் என் கொல்? திருச்செவி சாற்றவோ?" என வேண்டியது.

"நன்னயக் கழுகே நவில்க அது" என்ன, கேட்ட கழுகு கிளத்தியது.

இன்புற வணங்கி, சுசூது இட்டு ஒதுங்கியது ஓர்பால்.

வள்ளலும் வரம்பிலானை வணங்கினார், இறைஞ்சி ஏத்தி.

பின் அக்கழுகினை விளித்து "புள் இனத் திரட்கு எலாம் பொருந்து நல் அரசன் நீ. உன் உரைப்படி அவை நடக்கும். மீறுபவை ஒறுப்பேன்" என்று கூறி, மற்று அப்புள்ளினங்கள் நோக்கி,

"அஞ்சிறைத் தூவி அணிகொள் பறவைகாள்! இனி இவ் எருவை நும் அரசன். ஏற்று அதன் வழி நடப்பீர்" என்று கூறினார்.

புட் பெருங்குலம் உட்பொருந்தி உவணச் சேவலைப் பணிந்து உயர்ந்தன.

அடுத்து வந்தது ஆனை இறாஞ்சி. அனைவர் நாட்டமும் ஒரு வழிப்பட்டன. உற்று நோக்கினர்; உவந்தனர்; வியந்தார்.

மாசறு மதிநேர் மாதர் நல் எழில் முகம். தான் தோய் அளவில் நீள் நெடுங் கூந்தல். அம்மெல் ஆகம் நிறைய வீங்கி

கொம்மை இணை கொள் குவி இள வள முலைகள். இருபால் அமைந்த திருக்கரங்கள். ஒவ்வொரு கரத்தும் முப்பது விரல்கள். பன் மணி ஒளி உமிழ், கரம் மறைத்து விளங்கும் இருஞ்சிறைகள்.

பால் நினைந்தூட்டும் மனிதத்தாயினும் சாலத் தன் பார்ப்புகள் பால் பரிவு மிக்குடையது.

மெல்ல வந்து மலரடி தாழ்ந்து, சலாம் உரைத்துச் சார்ந்தது ஒருபால்.

''எங்கும் இது போல் யாம் கண்டிலம்'' என யாவரும் வியந்தனர் விண்டார்.

மகிழ்ந்த மன்னர், ''கண் கவர் வனப்பினை! யாது உன் வயது?'' என வினவ,

''ஈரிரண்டாயிரம் ஆண்டுகள் கடந்தவன் நான்'' என இறுமாப்புடன் விடை இறுத்தது.

''பெண் முகப் பறவையே! பேதைமை தவிர். அகங்காரம் அனைத்தையும் அழிக்கும். அறிதி அன்றே. அகன்ற செருக்கினை அகற்றி வாழ்'' எனக் கூறி அதனைப் புறம் போக விட்டார்.

ஒலி கொள் கலவ மயில் ஒன்று அங்கு அடைந்து வணங்கி ''ஆதி மனிதர் ஆதம் என்னிடம் ஓதிய 'தசுபீகு'[1] உரைக்கவோ பெரும!'' என வேண்டி நின்றது.

''செய்க'' எனச் செம்மல் செப்ப, சிந்தை உவந்து செப்பிச் சென்றது.

நீல ஒண்கதிர், நெடிய கூர்வாய், கரிய கால்கள், செம்பவளச் சிகை; கொண்ட குதுகுது (ஹுத் ஹுத் —கொண்டலாத்திப் பறவை) ஒன்று விதுப்புறப் பொதுஅறப் புரப்பான் பொன்னடி வணங்கிற்று. சாலவும் துதித்துச் சலாம் செய்தது.

''முதலவன் கருணையால் உம்தகை மலர்ப் பாதம் தரிசனம் பெற்றேன். சுரங்களில் வனங்களில் எவ்வெவ்விடத்து நீர் நிலைகள் உள்ளன என்று அறிந்து உரைப்பேன். 'தூது' செல் பணியில் எனை அமைத்திரேல் பிற இடங்களில் நடக்கும் அற்புத நிகழ்ச்சிகளையும் அறிந்து வந்து சொல்வேன். என் பணி ஏற்று அருள்க'' என வேண்டி ஒரு சார் ஒதுங்கியது.

''ஆகுக, அவ்வாறே'' என அரசர் கூறினார்.

---

1. இறைவனுடைய திருநாமங்களை ஓதுவது.

குவி இணர்த் தோன்றி ஒண்பூ அன்ன தொகு செந்நெற்றி, பகர் விரல், ஒண் சிறை, மிடல் வாய், கவர் குரல் கான வாரணம் ஒன்று வந்து வணங்கி, தன் வேதினச் சிகைச் சிரம் உயர்த்தி, "இறைவன் திருப்பெயர் இமைப்பொழுதும் மறவாதீர். ஒன்றி இருந்து நினைமின். உம் தமக்கோர் ஊனம் இல்லை", என அதிர்ந்து கூவியது.

"ஐயா! குல முதல்வன் ஆம் ஆதம் நபி அவர்கள் அடி உறை வாழ்க்கையன் யான். ஆண்டவன் தொழுகை நேரம் அறிந்து அவர்க்கு அறிவிக்கக் கூவுவேன். அவர் பின் நூகு நபி அவர்கள் பதம் சார்ந்து வாழ்ந்தேன். அவரொடு மரக்கலத்தில் உயிர் உய்யத் தப்பிப் போந்தேன். செய் தவப்பேற்றால் இபுறாகீம் நன்னபி இணைத்தாள் மேவினேன். அவர் இடைவிடாது துஆ ஓதியவாறு இருப்பார். கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைத்தேன். எனக்கு அவை மனப்பாடம். ஓதவோ இங்கு?" என வேண்ட,

'உரை' என்றார், உரை கடந்த உரவோர்.

முழுவதும் விண்டது. புகன்றன கேட்டு, புவி புரப்பார் புயம் புளகித்தார்.

"நீங்காது இங்கு உறைக" என்றும் கூறினார்.

காற்றுத் தேவன் கைதொழுது ஏத்திக் கழல் பணிந்து நின்றான்.

"ஐய! நீரும் நும் தளமும் எத்திசைக்கு ஏக உன்னினும் உம் கால் நிலம் தோயா அளவில் உம்மைச் சுமந்து ஒல்லையில் சேர்ப்பேன். இறைவன் ஏவ இவ்விடை வந்தேன். கொள்வதே பணி" என்று கூறி இரந்தான்.

விலங்கின் திரள் அவர் அருள் வேண்டிப் பணிந்தன. மைம் முகில் இனமும் மண் படிந்து வாழ்த்திற்று.

"எத்துணையும் அரியை நீ! எளியை ஆனாய். எனை ஆண்டு கொள் விதமும் இதுவோ? என் இறைவன் திருக்கருணை இருந்த வாறு என்?" எனப்பனி வார் கண்ணராய்ப் பணிவார் ஆயினார்.

"கூவ, இங்கு அமைவீர். இது போது சென்று வருக" என்று திரள் எவ்வுயிர்க்கும் விடை தந்து அனுப்பினார்.

கம்பளம் நெய்யும் ஜின்களை அழைத்தார். "யாமும், எண் பேராயமும் ஐம்பெருங் குழுவும். தானைத் தலைவரும் தகுபல வீரரும் ஒக்க இருந்து வெளிவளி இயங்கக் கம்பளம் ஒன்று கடிதினில் நெய்து தருக.

தாய் கைத்தவழும் குழவி போல் எமைக் காற்று குறித்த இடத்தில் கொண்டு சேர்க்கும்.

செய் வினையாளரே! நெய் வினைக்குத் தேவைப்படுவன கேட்டுப் பெறுமின்'' என ஏவவிட்டனர்.

சொன்னது கேட்டன; தந்தது கண்டார்,

நாற் சதுர வடிவில் பரமதானி[1] ஒன்று நெய்து கொணர்ந்தன.

ஒரு பக்க அளவு ஒரு காதம். பொன் கொண்டு இழைத்த, மணி கொடு சமைத்த இப்பரமதானி காண்பவர் கண் பிற பொருளிற் செல்லா. காய் கதிர்ச் செல்வனைத் தட்டித் தகடு செய்தது போல் அமைந்தது அது.

இடை பதிந்த மின்பறு ஒன்று, சுற்றி பொன் அரியணைகள் (உலமாக்கள் அமர), அவற்றைச் சுற்றி, வெள்ளி அரியணைகள் (பரபதித்தலைவர் அமர) கொண்டு விளங்கிற்று.

ஜின்கள், நரர்கள், அலகைகள், படைக்கலன்கள் யாவும் கொள்ளத்தக்க வகையில் அமைக்கப்பட்டது.

வான் வழங்கு இயற்கை வளி வேகத்தில், புள்ளியற் பரிமா மேற்கொண்டு ஒருவன் ஒரு மாதத்தில் கடக்கும் தூரத்தை அப் பரமதானி ஒரு பகற்பொழுதில் கடக்கும்.

சுலைமான் (நபி) அவர்கள் காலை எழுந்து பரிவாரம் சூழ அப்பரமதானியில் மேற்கொண்டு தன் நாடான (SYRIA) சாம் விட்டு, மாலைப் பொழுதிற்குள் ஆப்கனிஸ்தானத்தை அடைந்து விடுவார் என்பர்.[2]

சுலைமான் (அலை) அவர்கள் சேனை நூறு காதவழி கொண்டது என்ப.

மானிடர் குழாம். கதிமிகு ஜின்கள், விலங்கினத் தொகை, பறவைத் திரள் என ஒவ்வொன்றிலும் இருபதின் ஐந்து காதவழி அமைந்தது என்பர்.

---

1. பரமதானி—பன்னிறம் சான்ற மெல்லிய மிருதுவான வண்ணக் கம்பளம்
2. "Shorter Encyclopaedia of Islam" P. 550

துணைவியார் என முந்நூற்றுவர், காமக் கிழத்தியர் ('சுறியத்') எழுநூற்றுவர் ஆக பத்துப் பதிற்றுப்பத்துப் பாவை கொண்டார் என்ப.

ஒன்று மனத்தர் இவர் அவ்வொவ்வொருவர்க்கும் ஒருமனை என ஒன்றே போல் அமைந்த ஆயிரம் மாளிகை அமைத்தார்.

ஒரு பொழுதில் ஆயிரம் உருக்கொண்டு ஒவ்வொருத்தியுடனும் உயர்நலம் துய்த்துக் கிடந்தார் என்ப.

பேராயிரம் படைத்த பெரியோன் அருள் பெற்ற நபிக்குச் செயற்கரியவும் உளவோ?

இவர் தந்தையார் தாவூது (அலை) அவர்கள், ஒன்று குறை யாகியிடும் நூற்றுவருடன் இன்பம் மேவினார் எனின், தந்தையின் தகை சான்ற மகன் பதின் மடங்கு வலன் அலனோ?

இத்திறத்து இவர் உறை பொழுதில் ஒருநாள்:

ஏந்திய குறுந்தடி; எழில் உறு தோற்றம்; இளமை நலம்; மேனி மறைத்த கபன்; இத்தகு தோற்றத்தராய் ஒரு பக்கீர்[1] இவர் முன் போந்தார்

''இடைப்படச் சேயவாய ஒண்மணிகளை ஒருவழித் தொகுத்து அருவிலை நன்கலம் அமைத்தது போல் ஆயிரவர் அழகியரை உம் அகப்படுத்தினீர்.

எண்ணும் ஒரு மனிதர்க்கு இத்துணையும் வேண்டுமோ?

இவர் தம்முள் ஒருத்தியை எனக்கு அளித்தல் ஆகாதோ?'' எனக் கேட்டார்.

''அவ்வாயிரவரில் எம் உடன் உறையாது தனித்து ஒருத்தி இருப்பின் அவளை நீர் கொள்ளலாம். சென்று கண்டு வருக'' என்றார்.

வந்த பக்கீர் வல் விரைந்து ஓடலுற்றார். கழுத்தணி மாலைகள் நூல் அறுந்து சிதற, குடரோடு குடர் தொடக்கி முடக்கிவிட, ஒவ்வொரு மனையிலும் சென்று கண்டார்.

எவள் ஒருத்தியும் சுலைமான் (அலை) பக்கலில் அமையாது தனித்து இருந்திலள்.

''மாயங் கொல்? மற்றென் கொல்? என் பேரவா கெட இறைவன் மருட்டியது இத்தன்மை கொல்?'' என வியந்து அவை நண்ணினார். அங்கும் அவர் இருக்கக் கண்டார்.

---

1. பக்கீர்—ஏழை; ஊர் சுற்றித் திரிபவர்

"கொற்றவ! குறைமதிப் பேதையேன் கூறின பொறுத்து அருள். எங்கும் இருப்பீர் என எண்ணிலேன். ஓடினேன்; ஓய்ந்தேன்." என்றார்.

"அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டில் எழுபதின் ஆயிரவர் சூழ ஒருவன் இருப்பினும் இவ்வாறே இருப்பன் நீர் கேட்டன பிழை என யாம் கருதிலம்.செல்க" எனக் கூறி நபி அவர்கள் விடை தந்தார்.

பின்னர் நபி அவர்கள் சமூகத்தில் புள்ளினமும் விலங்கினமும் புகன்ற அறிவுரைகள் புகல்வாம்.

"பிறப்பு என்று ஒன்று உண்டாம் பொழுதே இறப்பு ஒன்றும் உறுதி. இது தெளிக." என்றது கழுகு.

"பிறரை எவ்வாறு நடத்துகிறீரோ அவ்வாறே நடத்தப் படுவீர்" என்றது கலவ மயில்.

செவிக்குத் தேன் என இன்குரல் வழங்கும் குதுகுது "அரிய மெய்ப்பொருளிடத்து அச்சம் மேவுவீர்; அன்புடன் தொழுவீர்; தவுபாச்[1] செய்வீர்" என்றது.

"பிறப்பே இறப்பு; இறப்பே பிறப்பு. பழையன புதியவாம். புதியன பழையவாம். இஃதறிந்திமின்; இருநிலத்தீரே" என்று கவுதாரி இசைத்தது.

"மன்னர் ஏறே! புகழ் அனைத்தும் தூய ஏகனாகிய கருணையங் கடவுளுக்கே என்று புறவு ஒன்று கூறியது.

"உயிர்க்கு உதவி செய்வாரே,உயர் புகழ் மேவுவர். வல்லோன் அன்பிற்கு அவரே பாத்திரர் ஆவர். துயரச் சாயையும் தொடராது அவர் பால்" என்று ஒரு ஜின்னாறு கூறியது.

"முடிசார் மன்னரும் முடிவில் படிசார் மண்துகள் ஆவர். எனவே நல்லவே எண்ணுக. நல்லன சொல்க. நல்லன செய்க. தன் நெஞ்சு அறிவது பொய்யற்க" எனக் கழுகு கூறியது.

இமிலேறும், வெளவாலும், இல்லுறை வெருகும் சில நல்லன இயம்பின.

"நா வடக்கம் உடையானே நலம் பெறுவான். கரவா கரைந்து உண்ணக் கற்பீர் எம்பால்" என்று கொடி (காகம்) ஒன்று கூறி அமைந்தது.

---

1. தவுபா : இறைவனிடத்துத் தான் செய்த பிழை பொறுத்து அருளஇறைஞ்சுதல்

இவ்வாறே கிளியும், ராஜாளியும், தவளையும், கோழியும் தாம் அறிஅளவையில், தக்கன கூறின.

எளிய என்று இகழ்ந்திடாமல் எனைத்தானும் நல்லவை கேட்டார், அனைத்தானும் ஆன்ற பெருமையவர்.

கொய் உளைப் புரவி ஒன்றில் நாற்பெருந் தானையொடு நபி அவர்கள் புறப்பட்டார். வழக்கம்போல் வண் சிறைப்புள்ளினம் நீழல் வழங்கிற்று.

18\. வானம்பாடிப் படலம்

பாய்ந்து செல் புரவிகள் பதம், படி மிதித்தில. அவை செல்லும்வேகத்தால் எழு மிகு துகள் படலம் விண்டலம் போர்த்தது.

படை செல் பாதையில் ஒரு வானம்பாடி முட்டை இட்டு அடை காத்துக் கொண்டு இருந்தது. ஆண் பறவை சுலைமான் (அலை) அவர்கள் படை வருவது அறிந்து,

''பலர் இயங்கு பாதையில் நீ இவ்வாறு மனத்துணிவாய் முட்டை இட்டுளாய். வரும் படை வேகத்தால், கால்களால் துவைபட்டு, முட்டைகள் அனைத்தும் உன் கண் எதிரில் அழியப் போகின்றன பார். முன்னரே சொன்னேன் கேட்டாயா? வரு முன்னர்க் காவாய். வல் விரைந்து கெடுவாய். பெண் புத்தி பின் புத்தி என்று மெய்ப்பித்து விட்டாய்.

சொந்த அறிவும் இல்லை. சொல் அறிவும் கேட்டிலை'' என்று கூறியது.

உடனே பெண் பறவை, ''சுலைமான் (அலை) அவர்கள் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் செம்மல் அன்றோ? அவர் அறியாரோ நம் நிலை? நம் முட்டைகள் அழிந்து போதனை அவர் செய்யார். படைகளும் செய்யா. இவ்வழி அவர் படைகள் வரும் என்பது தெரிந்துதானே, கண்ணால் கண்டு மகிழ, பாதங்களைத் தரிசிக்கக் காத்திருக்கிறேன். இப்பேறு எளிதில் வாய்ப்பதோ நமக்கு?

அவர், அவர் படை குறித்து, அழிவு பெறுவோம் என எண்ணிய பாவம் தீர 'தவுபா'ச் செய் போ. எனக் கடிந்து நின்றது.

காற்று இந்நிகழ்ச்சியைச் சுலைமான் (அலை) அவர்களிடத்துச் செப்பிற்று.

அவர் வலிய ஜின் ஒன்றை ஏவி "நீ அங்கு போய், அவ்வானம் பாடிகள் உள்ள இடத்தில் இருகால் பரப்பி அவற்றை உள்ளடக்கிய வாறு நில். நம் படைகள் உன்னிடம் இருந்து விலகிச் செல்லும். அவையும் பாதுகாக்கப் பெறும்" என்றார்.

அரசரும், படையும் அவ்விடம் முற்றும் கடந்து செல்லும் வரை ஜின் அங்கு கால் பரப்பிட்டுக் காவல் செய்தது.

படைகளின் இயக்கத்தால் எழு துகள் அப்பறவைகளை அணுகாவாறு காற்றுத் தேவன் செயல் புரிந்தான்.

இயங்கு படை அரவம் மென் மெல இல்லாகிப் போக, தாம் பாதுகாக்கப்பட்டதும், சிறிது தூசியும் தம்மீது படாமையும் நன்கு அறிந்த பேடை பெருமை மிக அரசரைப் போற்றியது.

"சொன்னது கேட்டிலீர், நடந்தது என்ன? நமக்கு எள்ளளவும் தீங்கு மேவிலது. பிழை மிக எண்ணினீர். பேசவும் செய்தீர். பிழை அகல வேண்டித் 'தவுபா'ச் செய்யப் போம்" என்று உரைத்தது.

தன் தவறு உணர்ந்த ஆண் பறவை 'தவுபா'ச் செய்த பின் "நாம் இருவரும் நம் அரசரைத் தரிசித்தே ஆக வேண்டும். போக லாம் வா!" என அழைக்க,

"பெரியரிடத்து, வெறுங்கையராய் ஏகுவது பிழை. என்ன கையுறை நாம் எடுத்துச் செல்வது?" என்று கூறிச் செய்வது அறியாது திகைத்தது.

"அல்கு இரையாக செத்த வெட்டுக்கிளி ஒன்று வைத்திருக் கின்றேன். உன்னிடம் என்ன உள்ளது?" என்று ஆண்பறவை வினவியது.

"நம் குஞ்சுகட்கு ஊட்டியது போக கொஞ்சம் இரை விஞ்சி உள்ளது. அதனையும் கொண்டு போவோம், வாருங்கள்." என்று தன் துணை அழைத்துக் கொண்டு விண் வழி விரைந்து பறந்து சென்று, விறல் நபி இடை வழியில் தங்கிய இடம் அடைந்து, அவர் பாதங்களில் தாம் கொணர்ந்த காணிக்கையை வைத்துத் தலை யாலே தாள் பணிந்து மகிழ்ந்தன.

''எளியேம் இட்ட கையுறை. உள்ளத்து அமைதரத் தெரிந்த அன்பொடு பொதிந்தது. ஏற்றருள்க. எம்குலம் காத்த ஏந்தலே வாழி!'' என வாழ்த்தி அமைந்தன.

''இனிதின் நாமும் உண்டனம்'' என்றவாறு அவ்விரையைக் கையால் தொட்டு அருகில் இருந்த பறவைகள் துய்க்க ஈந்து, தன் வலிய கரங்களால் மெல்லென அவற்றை எடுத்துத் தம் மடி மீது இருத்தித் தலைமுதல் கால் வரை மெல்ல நீவி, ''என்றும் இடுக்கண் இன்றி வாழ்க'' என்று கூறினார். இறைவனிடம் 'துஆ' செய்தார்.

''உம் இருப்பிடம் சேர்க'' என்று கூறிப்பின் தாம் சேர எண்ணிய திசை சென்று மீண்டார்.

பொருவரு சுலைமான் (அலை) அவர்கள் ஒரு பொழுது, ஒரு திசை ஏக உன்னினர். விருது முழங்க, விண் அதிர வெள்ளத் தானை விரையும் போதினில் வழியிடை எறும்பு ஒன்று தன் இனத்தவருடன் பேசிக்கொண்டு இருந்தது.

19. எறும்புகள் புத்திப் படலம்

''அடுக்கு மூவுலகும் படர் புகழ் இவர் போல் எவரும் இலர். இறை அருள் பெற்ற இவரே நல்லர். இவர்க்கு ஒப்பாக யான் எவரையும்கண்டிலேன்'' என்றது.

''இதனினும் சிறந்த வாழ்க்கை ஒன்று உண்டால். புறத்தல, அகத்தும் ஆதியாம் புனிதன் பால் அச்சம் உற்று நடத்தல்; தாழ்வு மேவினும், உசிதம் அற்ற வாழ்வு மேவு போதினும் அவனே புகல் என அடைதல்; இடுக்கண் பல பெறினும் மனத்தில் மகிழ்தல்; இவை கொண்டோரே மேன் மக்கள் ஆவர்'' என்றும் செப்பியது.

எறும்பி தன் இனத்தொடு பகர்ந்தவை இரு செவிப்புக, கேட்டு மன்னர் மகிழ்ந்தார்.

ஒரு முறை வான் பொய்த்தது. நீர் நிலைகள் வறண்டன. வளம் குறைந்தது. கருகின பயிர்கள் கண்டு, இவர் உள்ளம் உருகினர்.

அல்லாவின் அருள்வேண்டி, வலிதரு ஜின்கள், மானிடர் இவர் களில் பலரைத் தெரிந்து எடுத்து, தாம் வாழ் நகர்க்கு அப்பால் வெள்ளிடை ஒன்றில் தொழுகை நடத்த எண்ணினார்.

கூடிய திரளினோடு அவ்விடம் நண்ணினார்.

அவ்வகலிடத்தில் நொண்டி எறும்பு ஒன்று முன் கால்களை ஊன்றி முழந்தாளிட்டு, இரு கால்களைக் கரம்போல் ஏந்தி, கவை வாய்ச்சிரத்தினை உயர்த்தி, இறைவனிடம் 'துஆ' இரந்தது.

''வேத விழுப் பொருளே! நின் படைப்பு அனைத்தினும் சிறியன் யான். கூறுவ கேட்டு, குறை முடித்து அருள்வீர். ஆக்க காக்க போக்க அமைந்த உன்னை அல்லால் எவர் துணை ஆவார் எமக்கு? எவரிடம் புகல்வேம் இனி?

ஆதம் மரபினோர் அழி செயல் மேவினர். அவர் செய் பாவத்தால் ஏதும் அறியா நாங்கள் இடர்ப்படல் முறையோ? நாங்கள் வாழ்தல் வேண்டி வான் மழை வழாது பெய்ய அருள். இரக்க வடிவே! உருக்கம் உற்று உரைப்போம். உளம் கொண்டு அருள்க'' என வேண்டி நின்றது.

மூவறிவு, அறுகால், ஒருமை உள்ளத்த எறும்பு இருநிலம் வாழ பெரு மழை வேண்டி நின்றது.

செவ்விய வேண்டுகோள் செவி மடுத்த செம்மல், ''நம்மினும் இறைவன் அருள் வேண்டும் இதற்கே அல்லாவின் அருள் உறுதியாய்க் கிட்டும். நாம் கேட்பதும் மிகை'' என்றவராய்ச் செயல் தவிர்ந்தார்.

பெரும் பெயல் உற்றது. தட்டைப் டறையின் தவளைகள் கறங்க, தடங்கள் நீரொடு, நிறமலர் கொடு நிறைந்தன. உயிர்கள் நெஞ்சகம் மகிழ்ந்தன.

ஒரு நாள் சுலைமான் (அலை) அவர்கள் பாடமை சேக்கையுள் புக்குத் துயில் மேவினார். அவர் மணி ஒளி உடலில் எறும்பு ஒன்று விரைந்து ஊர்ந்து, திரிந்தது.

உணர்ந்த தெய்வ அருளாளர், தன் இரு விரல் கொடு அதனைப் பற்றி எறிந்தார்.

தரை மோதுண்ட அது தவித்தது. ''அறிவு அறை போகிய பொறியறு நெஞ்சத்து அரசே! நெடிய வல்லோனுக்கு நீரும் அடிமை; நானும் அடிமை; பேருடல் பெற்ற அகந்தையால் சிற்றுயிர்க்குச் சிறுமை தருவதோ? மெலியவர்க்குத் தீங்குசெய்தால் உமக்கும் தீங்கு நிகழும் என்று அறியாது போனீரோ?'' என்றது.

செவியகம் வெதும்ப, செப்பிய உரை மடுத்தார்; செயல் ஒழிந்தார். அது நோக்கிச் சில கூறினார்.

"உனக்கு நான் என்ன அத்துணைக் கொடுமையா செய்து விட்டேன்?" என வினவ,

அவ்வெறும்பு "அரசே! நொய்யினும் நொய்து என் உடல்; அதனினும் நொய்து அதன் மேல் போர்த்திய தோல்; இரு விரல் களால் என் தலை இறுகப் பற்றி வீசிக் கல்நிலத்திடைக் காயம்பட எறிந்தீரே! விளைவு கண்டீரா? நொறுங்கிப் போனேன். இதை விடத் தீங்கு எது உளது?" என்றது.

மேலும் "வலியார், மெலியாரை மதியாது வருத்தம் தர முயல்வது சரி எனில், அலைகடல் கரை கடந்து அகிலத்தை அழிக்க லாமே! செய்கிறதா? அல்லவே. ஏன்?

உயிர் புரக்க அமைந்த நீர் ஊறு செய்யலாகுமா?" என்றும் வினவியது.

"தெரியாதே யாம் இழைத்த தீச்செயலைப் பொறுத்தி" என சுலைமான் (அலை) அவர்கள் வேண்டினார்.

"ஒரு வாக்குறுதி அளிப்பதாயின் பிழை உளன, பொறுத்து அமைவேன்" என்றது.

"கூறுக" என்றார் கொற்ற வேந்தர்.

"உலகப் பொருள்களிடத்து உலவாப் பற்றினை ஒழிப்பீர். குறுமொழி, நெடுநகை கொள்ளாது விலக்குவீர். உதவி கேட்டு அணுகுநர்க்கு உறுநலம் புரிவீர். இம்மூன்றும் இயல்பினின் வழாது இயற்றி நீர் வரின், பிழை பொறுப்பேன்" என்று கூறி விடை பெற்று ஏகியது.

"எளிய உயிர் வழி, எனக்கு அருள் புரிந்த இறையே! நின் நலம் வாழ்க" என ஏத்தி அமைந்தார்.

காதம் நீளிய கவின் கம்பளத்தில் கலி மிகு தானையுடன், பரிவாரம் சூழ அமர்ந்து விண் செலவ் மேவினார்.

20 கருபத்துல்லாவில் குறுபான் கொடுத்த படலம்

அப்பரமதானி மக்கமா நகர் கஅபா மேல் நேர் உறப் பறந்தது. சுலைமான் (அலை) அவர்கள் தமர்க்கு அது சுட்டி "எமக்குப் பின் ஒப்பற்ற வராய் ஒரு நபி இங்கு பிறப்பார் அவர் தன் மண்ணில் தவழப்பெறும் பேறு படைத்தது இத்தலம்." என்று சொல்லி முடிக்கும் அவ்வள வில் செல்லக் குறித்த தலத்தில் சார்ந்தது; அங்கு தம் செயல் பொருந்தினார்.

மக்கமாநகர் கஅபா அமரர்கள் தம் கரத்தினால் இயற்றப் பெற்றது. வான் இயங்கு வெண் சுடரும், தண்மதியும் அதன் மேற் செல நேரின் சற்று ஒதுங்கி வலம் கொண்டு ஏகும்.

உலக மேலவர்கள் செய்தவப்பயன் எலாம் திரண்டு ஓர் உருக் கொண்டு உலகின் நாப்பண் அமைந்தது எனத்தக்க சிறப்பினது. அத்தகு கஃபத்துல்லா (கஅபா) வாய் விட்டு அழுதது.

இறைவன் செவியில் இவ் அழுகை ஒலி சாரவும் "அழாஅல் கஅபா; அழுவதும் ஏன்?" என வினவ,

"உன் நபிகளில் ஒருவர், உன் அருளும் பெற்றவர், என்னை மதியாது, என் இருப்பை உணராராய், தளமுடன் எனது சிகரத்தின் மீது தாவிப் பறந்து செல்கின்றார். இவ்விடத்து இழிகிலர்; உன்னைத் தொழுகிலர்;[1] 'திக்று' செய்கிலர்.

கமை கடல் உலகம் காக்கக் கடவியவரே தம் கடமை மறந்தால் என் செய்வது?

இறைவா! என் இடத்தைச் சூழ்ந்து பூமியில் பூத்த புழல் காளாம்பிபோல் 'புத்துகள்' அமைத்து இம்மக்கள் வழிபட்டு வருகின்றனரே. இக்கொடுமை குறித்துக் குமுறாமல் இருக்க இயலவில்லையே! அரும்பெறல் மரபின் பெரும் பெயரோயே! அழாது என் செய்வேன்?" என்றது.

"கஅபா! கவலற்க. துறவியர் உன் அகத்தும், புறத்தும் தொழுகை மேவுவர். அவர் உயிர் அனையை நீ. இம்மண் நம் குறித்துச் சுஜூது செய்து எழுவார் நெற்றிகட்கு அணி எனத் திகழும். நீ உறு அவலம் நீங்கும் விரைவில். கவலவேண்டா. அவலமும் தவிர்.

என் திரு ஒளியாய், நபிகள் எவர்க்கும் நாயகமாய், புண்ணியப் பொருள்கள் செய் புண்ணியப் பயனாய் ஹபீபு முகம்மது என் பாரை உன்பால் அனுப்புவேன்.

அவர் எம் அருளால் திருமறை வசனங்களை இவ்விடத்து திருவாய் மலர்வார். கன்றுகள் உள்ளி கறவை வருவ போல், பறத்தல் செல்லாக் குஞ்சுகள் இடத்து, இரை தரப் பறவை வருவ போல் உலகின் உயிர்கள் உனை நாடி வரும்.

---

1. திக்று-அல்லாஹ்வைத் தியானித்தல்

அவர் பெற்று அருள் குர்ஆன் உன்னிடத்து ஓதி மகிழவும் வணங்கவும், துதிக்கவும் வருவோர் தம்மைக் கண்டு மகிழ்வாய்.

அவரே கண்டாய் இறுதி நன்னபி. அவர் உனைச் சூழ்ந்துள புத்துகள் அனைத்தும் எடுத்து எறிந்து தூய்மை செய்வார்.

எனவே அழுகை தவிர்'' என்றான், இறைவன்.

கஅபா இன்பம் பெருக, துன்பம் துடைத்து, மகிழ்ந்தது.

முதல்வன், கையற்று ஏங்கி கஅபா அழுததைச் சுலைமான் (அலை) அவர்கள் அறியச் செய்தான்.

தன் தவறு உணர்ந்த தகைசால் நம்பி, மீட்டு அவ்வழி மேவினார். கஅபா இருக்கும் இடத்திற்கு அருகில் இறங்கினார். தன் பெருந்தானை சூழ கஅபாவில் சென்றார். சூழ உள்ள புத்துக்கள் அனைத்தையும் ஏவலர் விட்டு எடுத்து எறிந்தார்.

கருணையங்கடலைக் கனிந்து உருகி, பரவி இன்புற்றார்.

கோஏறு கழுதைகள், வெள்ளாடுகள், எருதுகள், பசுக்கள், செம்மறி ஆடுகள் என வகைக்கு ஐயாயிரம் வீதம் அறுத்து 'குறுபான்' கொடுத்தார்.

அங்கு உளோர் அருந்தி உள்மகிழ ஊன் துவை அடிசில் பெரு விருந்து இட்டார்.

இரந்துண் மாக்களைத் திரட்டி பொன்னும் துகிலும் பொருந்து நன்மணியும் 'இலம்' என்னும் எவ்வம் உரையாமை, ஈந்தார்.

இங்ஙனம் ஏற்றாரை, அடுத்தாரை, அவர் கடைக்கண் அருள் பெற்றாரை, எழு தலை முறைக்கும் இலம்பாடு தீண்டாது எனின் அவர் ஈகைத் திறன் இயம்பலும் எளிதோ?

சுலைமான் (அலை) அவர்கள் பதி எழு அறியாப் பழங்குடியினரை, திக்கது மதிக்க வரு குறைஷியர் குலத்தினரை, அறஞ்சார் முப்பினரை, நல்லிளைஞரை, அனைவரையும் கூட்டி மன்ற மாசற்ற சில சொல்லத் தொடங்கினார்.

''கஅபா விளங்கும் இத்தலத்தினில் குறைஷியர் குலத்தினில் மரபு விளக்கும் கொழுந்து போல்வார் ஒருவர் தோன்றுவார்.

எடுத்த செயல் யாவினும் வெற்றியே மேவுவார். நபிகளுக்குள் நவம் பெருகு மணி போல்வார் அவர்.

வலம்படு வாய்வாள் ஏந்தி பற்றலர் உயிரைப் பற்றினர் போக்கி, குற்றம் அணுவும் அணுகா வகையில் கொற்றம் மேவுவார்.

உள்ள மெய்ப்பொருளை, இல் என மறுக்கும் தீ நெறியாளருடன் அறப்போர் விளைத்தே, வாகை சூடுவார். தீன் எனும் இளம்பயிர் செழுமுகம்காட்டி, அறக்கதிர் ஈன அன்பு நீரட்டி பாதுகாப்பார்.

சுந்தரத்தோன்றல், இவர், சொல் வழி நடப்போர் சுவன மங்கையர் கொழுநர் ஆவார். இவர் நெறி அடையாப் பூரியர் கனன்று எரி நரகிடைக் கிடப்பர்'' என்று கூற,

கேட்டு உள் மகிழ்ந்தாருள் ஒருவர் ''ஐயா! அவர் வரவு எத்துணை ஆண்டுகட்குப் பின்?'' என வினவ,

சுலைமான் (அலை) அவர்கள் ''ஓராயிரம் ஆண்டுகள் கழிந்த தன் பின்னர் வருவார்'' என்றார்.

குறைஷியர் குலத்தோர் இது கேட்டு மகிழ்தற்கு மாறாக மன வருத்தம் மேவினர். ''அவர் வரவின் போது, நாம் பிறக்க, அவருடன் ஒக்க இருக்க, உறுபயன்மேவ இறைவன் அமைத்திலனே நம்மை'' என்று வருந்து துயரினர் ஆயினர்.

எனினும் ''அவர் வருவார் என்னும் நற்செய்தி கேட்கப் பெற்றோம்'' என்று மகிழ்வாரும் ஆயினர்.

சுலைமான் (அலை) அவர்கள் மேலும் கூறுவார் ஆயினார்.

''அம்முகம்மது இரு பதம் இகபர கதி தரும். ஏக சிற்பர மெய்ப்பொருள் ஒளித்தெளிவை ஆடியிற் காட்டுவார். ஆகமக் கலைகட்கு அனந்த ஆபரண அழகர் அவரது திருப்பெயர்த் தியானம் செய்யும் பேறு பெற்ற மனங்களே மனங்கள்.

தெள்ளமுது அனைய முகம்மது நபியைக் காணும் பேறு பெற்ற கண்களே கண்கள்.

அகத்திருள் அகற்றும் அலகில் செஞ்சுடர் அவர், திருப்பெயர் வாழ்த்த வாய்த்த வாய்களே வாய்கள்.

வள்ளலைப் பல்லோர் வாழ்த்திய வாழ்த்தொலி நிறையப் புகும் வாய்ப்பு பெற்ற வண் செவிகளே செவிகள்.

மான்மதம் கமழ்தரு மேனியர் அவர் வரவு அறிந்து, எதிர் உறப் பெற, அந்த மணம் புகப்பேறு கொள் நாசியே நாசி.

அங்கம் படைத்த பயன் இவை'' எனக் கூறி, எதிரது உரைத்து மக்கமா நகர் மக்களிடத்துப் பிரியா விடைபெற்றுப் போந்தனர்.

தக்கவர் மக்கமா நகர் நீங்கி, படை புடை சூழ வந்தார். அவ் வழியில் கட்டெறும்பு, ஈயல் சிற்றெறும்பு, முசிறு எனப் பல்வகை எறும்புகள் கூட்டம் கூட்டமாக, இலக்கக் கணக்கின இருந்தன.

21. எறும்பு அரசைக் கண்ட படலம்

வலஞ்சுரித் தோகை வள்ளுகிர் ஞமலி உயரத்தில் ஒரு முடம்படு தாள் எறும்பு ஒன்று அவ்விடை நடு நின்றது. அதற்கு இரு பாலும் சிறகுகள் இருந்தன. அதன் பெயர் மகுசனா, தாயித்.

''என் உயிர்த் தோழர்காள்! சுலைமான் (அலை) அவர்கள் படை இவ்வழிச் செல்லும் என்று அறிகிறேன்.

அவை இவ்வழி அடைதரின் புடை திரண்டுள நாம் மிதி பட்டுத் துவைப்பட்டுத் தூளாகிப் போவோம்.

எனவே ஓடி ஒளிந்து உய்ம்மின். பின்னர்க் காண்போம்'' என்றது.

கேட்ட அவை, தம் ஆறு கால் அறுகால் ஆக விழுந்து அடித்து ஓடி, குழிகளில், மரத்தில், பாறைகளில், நில வெடிப்புகளில் எங்கெங்கு இண்டு இடுக்குகள் உள்ளனவோ அங்கங்கே ஒன்றி ஒளிந்தன.

உறவி (எறும்பு) உரைத்ததும், அவை மறைந்ததும், காற்றுத் தேவன் நபி அவர்களிடம் செப்பினான்.

''இடை தெரிந்து அருளிய உனக்கு நன்றி'' எனக் கூறிப் படையினரை, ''நில்லும்'' என்று நிற்கப் பணித்தார்.

''வல் விரைந்து ஏகி அந்த நொண்டி எறும்பினை இங்கு கொணர்க'' என்றார்.

ஏவலர் அப்பணி ஏற்று அது கொணர்ந்தனர்.

ஓகை மிக்க சூகை (எறும்பு) அவர் தாள் துணை இறைஞ்சி நின்றது.

"ஐயா! மகுசனா, தாயித் என்பது என் பெயர். உம்தம் தந்தையார் தாதை ஆன இபுறாகீம் நபி அவர்களது மேதகு பாதமும் நும் பாதமும் அன்றிப் பிறர்தாள் என்றும் பணிபு அறியலனே." என்று கூற, கருணை பொங்கி,

"என் சேனை வந்திடின் மிதித்துக் கொல்வர்; மறைந்து கொள்க! என உன் திரட்கு எல்லாம் உரைத்தது ஏன்? சிந்தை கலங்கி அவை பயம் மேவிப் பதுங்க ஏன் செய்தாய்?

நான் அவநெறிப் படர்பவனா? அல்லன செய்பவனா? ஏன் அச்சம்? எவை, எவர் செய்யும் நன்றியையும் என்றும் மறவேன். நீ அறிந்திலையோ? நீள் உலகும் அறியுமே" என்றார் சுலைமான் (அலை) அவர்கள்.

அதற்கு அது "ஐயா! திக்று செய்யத் திரண்டனர் எம்மவர். அவ்விடை நும்படை மேவின் "யாரையோ இவர்?" என்று அதிசயித்து தியானம் மறந்து, மதி மயங்குவர். தியானம் தடைப் படல் தீது அன்றோ? எனவே தான் மறைந்து கொள்ளச் செய்தேன். அது அன்றி வேறு இன்று." என்று கூறியது.

கூறிய கேட்டுத் தேறிய அவர்,

"நாவியல் நல்லுரை கூறுக" எனக் கோரினார்.

உருவு கண்டு எள்ளாது அவ்வுயர் தவச் செல்வர் கேட்டன கேட்டு ஈட்டிய உவகை எறும்பின் தலைவன்,

"உந்தையார் பெயர் தாவூது என அமைந்தது ஏன்?" என வினவ,

"யானறிகிலனே!" என்று அவர் கூற,

"இடையறாது இறைவனை எண் மனத்தர். அவர் உலக மாயை சேர ஒரு நாள் செயல் மறந்தார். ஆனால் உடனே தவறு உணர்ந்து தெளிந்தார். அவ்வழி அடைந்த காரணப் பெயரர் அவர்" என்றது.

மேலும், "உம் பெயரும் காரணத்தால் அமைந்ததே; ஒலி கடல் உலகம் தன்னுள் ஊர் தரும் உயிர்கள் மாட்டே ஒரு நிலை நீதி நிகழ்த்து வல் திறத்தால் நீர் அடைந்தது இப்பெயர்" என்றது.

பின்னரும் பற்பல நன்மொழி பகர்ந்து, இறைவனைச் சுகுது செய்து வணங்கித் தன் இருப்பிடம் சேர்ந்தது.

ஒரு முறை நாட்டு வளம் காண விழைந்து ககன ஊர்தியில் இருந்தனர் சென்றார்.

22. எறும்புகள் விருந்திடு படலம்

வழியில் பழம் மூதிர் பருவரை தரு பல நிறைவுறு வனம் ஒன்று கண்டார். அவ் வனத்தில் கதலி, மா, பலா, கமுகு, சந்தனம், முருக்கு முதல் பல மரங்கள் அடர்ந்து இருந்தன.

ஊர்தி விட்டு இறங்கிய உயர்குணச் செம்மல், இருள் திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல் அமர்ந்தார்.

துன்றிய இருளைத் துணி செய்து அன்ன, காருடல் எறும்புகள் பல அங்கு வரக் கண்டார்.

சாரையாய் வந்த அவை சலாம் இட்டன. முதிர் வயது முயிறு ஒன்று ''ஐயா யாங்கள் வாழ் தலத்து எய்திய உமக்கு விருந்துதந்து அனுப்பும் விழைவு மேவினோம். அருந்தி ஏகவேண்டும், என்பது எம் அவா. திருஉளம் யாதோ?'' என வேண்டிற்று.

ஏந்தல் இது கேட்டு ''என் உடன் போந்தார் எண்ணிலர் உளர் கண்டீர். விருந்து எனக்கு மட்டுமா? அன்றி எமக்குமா? சொல்க'' என்றார்.

''தகவுடையீர்! உமக்கும் வந்துள தளம் எவைக்கும் ஏய அளிப்போம்'' என்றன.

''கொண்டு வருக'' என்று அவர் விண்டார்.

திரண்ட எறும்புகள், திரட்டி தானியக்குவை, காய்கறி, சர்க்கரை, பருப்பு, நெய், உப்பு முதல் அனைத்தும் சிறுவாய் முனையில் கொணர்ந்து குவித்தன.

ஒருங்கு உடன் கூடிய உலவாத்தளத்தர், பெருங்குவை கண்டு வியந்தனர் பெரிது.

திரள் குவை சேர்த்தபின் ''வள்ளலே! யாங்கள் அடுதல்' இடுதல், அப்பணி அறியோம். ஈங்கு இவை கொண்டு ஏற்பன செய்க'' என வேண்டின.

சில் நேரத்தில் பல் ஜின் கணத்தார், கையறி மடைமயின் அடி சில் ஆக்கினர். வந்த தமர்க்கு வயிறு ஆர இட்டனர். உண்டார்.

பொருட்குவை இன்னமும் இருப்பது கண்டார்.

வியன் உலகாள் நபி வியந்தார்.

''வருக! எறும்புகாள்! தருக ஈங்கு'' எனப் பணித்தார்.

''சிற்றுடல் படைத்தவர்களே! எமக்கும் எம் தளத்திற்கும் வேண்டியன எவ்வாறு திரட்டினீர்? யான் அறியக் கூறும். அறிய அவாவினேன். எங்கு சேகரித்து வைத்தீர் இவை? எவ்விடமிருந்து திரட்டினீர்?'' என்று வினவினார்.

''ஐயா! முந்நாள் முன்னர் வணிகச் சாத்து ஒன்று இவ்வழி வந்தது. வணிகர்கள் இடைவழி இங்கு ஓய்வு கொண்டனர். சமைத்து உண்டனர். பின் நன்கு உறங்கினர். அவர்கள் கொண்டபொதிகளில் இருந்த பொத்தல்கள் வழிச் சிந்தின திருடி, திரட்டிச்சேர்த்தோம்'

செவ்வெவன் கதிர் சுருக்கிச் செங்கதிரோன் சென்று ஒளிய அவர் தம் வழிப் போயினர். 'சுலைமான் (அலை) அவர்கள் ஆட்சியில் இரவிடைக் கழிதற்கு ஏதம் இல்' என அவர்கள் பேசின கேட்டோம்'' என்றது முயிறு.

''முதுநீர் உலகம் முழுது ஆள்வேந்தன் நான், என முனைப்பு உற்று இருந்தேன். என் செங்கோல் கீழ் வாழ் வணிகன் வழியிடை ஓய்வு கொள்ள அவன் கொண்ட பொதிகளில் சிந்தின இத்துணைப் பொருட்குவை எனின் அவன் கொண்ட பொதிகள் எத்துணை? அவன் எத்துணை வளத்தனாக இருக்கவேண்டும். இவன் போல்பவர் எத்துணை பேர்? இவற்றை எல்லாம் எண்ணில் நம் வாழ்வு அணுவினும் நுண்ணிது

இறைவா! செருக்கு அகத்தில் முற்றாவகை நெறி செய்து எறும்பின் வழி எனக்கு விருந்திட்ட நின் சூழ்ச்சியை, என் அன்பே, உன் அன்பை, என் என்பேன் யான்'' என்று இரு கண் புனல் உக 'சுஜூது' செய்து எழுந்தார்.

கோல் நெறி கோடாக் கொற்றவர் ஏறு, மானிடர், ஜின்கள், மருள்தரு சைத்தான்கள், நீர் வாழ்வன, விண் பறப்பன, விலங்கினத் தொகை, இவை அலாப் பிற உயிர் இனங்கள் என ஏழினங்கட்கும் முறை வழங்க ஓரினத்திற்கு ஒரு நாள் என வார நாட்களை வகுத்து அமைந்தார்.

23. ஆனை இறாஞ்சி தர்க்கப் படலம்

வழக்குகள் வாரா வைகல் மறை நெறி அறிவு தெருட்டுவார். அவ்வாறு அமைந்த ஒரு நாளில் கழுகு அவர்பால் மேவி, ''நீர் நடந்து செல நினைப்பீர். ஆனால் பரிமா ஊர்ந்து செல அமையும். இவ்வாறு அமையும் ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ? கூறுக!'' என்றது

''விதி வலிது. தன் எழுத்தை என்றும் மாற்றிக் கொள்ளாது. அதனை அகற்றலும் அரிது; அறிவதும் அரிது; மாற்றரும் உண்மை இது'' என்றார்.

மேலும் ''பெருவலி ஊழினும் மிகு வலி உடையது எதுவும் இல்லை. மடிதற்றுத் தான் முந்துறும் அது'' என்றும் கூறினார்.

இது கேட்ட அடலருந்துப்பின் ஆனை இறாஞ்சி கூறல் உற்றது.

''நபி பெருமானே! விலக்கரிது விதி எனக் கழுகு கூற, நீரும் இசைந்தீர். விதியை மதியால் வெல்லலாம் என்னும் வழக்கு உண்மை அறிகிலீரோ? அறிவு நலம் வாய்க்கப் பெற்றார், கூற்றின் ஆற்றலும் மாற்றும் திறலினர். அவர்க்கு அரியவும் உளவோ?'' எனச் செருக்கின் மிகையால் கூறியது.

''மத கரி வலி தொலை மட்டில் ஆற்றலை. எனினும் ஆனை இறாஞ்சியே! நீ அவ்வாறு உரையல். விதி வலி மாற்றல் எவர்க்காயி னும் அரிது'' என்றார்.

''அவ்விதிக்கு விதி ஆவேன். என் விறல் காண்டிர்'' என்றது மதமாப் பதப்புள்.

சுலைமான் (அலை) அவர்கள் கூறுவார்.

''இன்றைய தினத்தில் கீழ்த் திசை அரசன் ஒருவற்குப் பெண் மகவு ஒன்று பிறந்துளது. மேற்றிசை அரசன் ஒருவன் ஆண் மகவு பெற்றுளான்.

அப்பெண் பதினேழாட்டைப் பருவம் முற்றிய பின் (ஆறாந் திங்கள் ஆறாம் நாள் கழிந்ததன் பின்னர்) அவ்விருவரும் முறை யில் வழி முயங்குவர். இவ்வாறு அமைந்துளது அவ்விருவர் தம் விதி. ஆற்றல் உன்பால் உளதேல் மாற்றப்போ'' என்றார்.

அவ்விரு அரசர் பெயர், நாடு துணைவியார் பெயர், பிறந்த மகவுகள் பெயர், அனைத்தும் அரசர் கூறக் கேட்டு ''விடை தந்து ஈக'' என வேண்டி எழுந்தது

''நில். இம்முயற்சியில் நினக்குப் பிணை யார்? நிகழ்த்துக'' என்ன, கழல் கண் கூகையைக் காட்டி 'இது என் பிணை' என இயம்பிற்று.

வல் விரைந்து பறந்தது அப்பறப்பினால் எழுந்த சிறைக் காற்றால், வான்முகில்களும் பல துணுக்குகளாகச் சிதறல் உற்றன.

வனத்துறை சீயமும், கரடியும், கரியும், பிறவும் தறி கெட்டு ஓடி கால்கள் முறிந்து வீழ்ந்தன. கடலில் பேரலைகள் எழுந்தன. சிறு தீவுகள் முற்றும் முழுகின.

கிட்டிசை அரசன் ஒளர்மணி மாளிகை புகுந்தது. தாதியர் தர தன் மடியில், பிறந்த மகவை அரசன் கொண்டிருப்பது கண்டது.

கொம்பர் ஏறி நிலை இருங்குட்டம் நெடிது நோக்கி இருந்து புலவுக்கயல் எடுக்கும் பொன்வாய் மணிச்சிரல் போல ஞெரே லெனப் பாய்ந்து இருகரத்து ஏந்தி அகன்றது.

அவல ஆர்ப்பு ஒலி எழுந்தது. கொண்ட மகவைத் தன் தட முலைத்தடத்தில் அணைத்துப் பறந்தது. தன் விரல்களால் பொதிந்து, உகிர் அழுந்துறா வகை, அதிவேகமாகச் சென்றது.

ஜின்களும் ஏற்றருஞ் சென்னியதாய், நாற்கடல் நாப்பண் கிடந்த பெருமலை ஒன்றில் உள்ள முகில் கிழித்து துளி சிதறும் கொப்பும் கிளையும் மிக்க நெடுமரம் ஒன்றில் முன் தான் அமைத்த குடம்பையில் இட்டது.

துணை புணர் அன்னம் அவச நிலையில் உகுத்த மென் தூவி திரட்டி வந்து அம்மெல் அணையை அமைத்து அதில் கிடத்தியது.

வளியும் வான் மழையும் வருத்தாவாறு வளநிழல் இட்டது.

தன் வனமுலை சுரந்த அமுதூட்டி வளர்த்தது. பிணி அணுகா வகைப் பேணியது.

காலஞ் செல்ல, மென்றுண்வகை நறியன கனி, காய்கள் உண்ணு நீர் ஆவலுடன் கொணர்ந்து அளித்தது.

வேடிக்கை காட்டி, இன்பூட்டி, மாந்தர் மொழி பயிற்றி, நடை பயிற்றி, மழலை கேட்டு, மனமகிழ்வு மேவியது.

துகில் அணிவித்து அணி சூட்டி எவரும் இச்செயல் அறியா வகை வளர்த்தது.

"வல்லுப் போல், குண்டுமணி போல், குரும்பைபோல், பம்பரம் போல், செண்டுபோல், கொங்கை திரண்டு திமிர் ஏற," மானும் திரண்டாள்.

தன்னை அறிந்தாள் அத்தையலாள். கவின் நலம் கனிந்து ஒழுக மண் வளர் மின் எனத் திகழ்ந்தாள்.

காற்றுத் தேவன் இஃதனைத்தும் சுலைமான் (அலை) அவர் பால் முற்றும் தெரிவித்தான்.

அறிந்தும், அறியார் போல் ஆனை இறாஞ்சியிடம் உரையாடி மகிழ்வார்; ஒன்றும் கேட்டிலர்.

இது இவ்வாறு அமைய, அங்கு நடந்தன காண்போம்.

மேலைத் திசை வேந்தன் தன் அரும்பெறல் ஒரு தனி மக வினை மேன்மைப்பட வளர்த்து வந்தான்.

24. இராஜகுமாரன் கடல் வேட்டைக்கு எழுந்த படலம்

அந்நாள் சுலைமான் (அலை) அவர்கள் இடமிருந்து ஒரு தூதன் அவ்வழி அணு கினான். "இறையருள் கலிமா ஓதுக. மறை வழி நடந்து தீன் நெறி மருவுக. திறை கொடுத்துப் பணிக இது எமது ஆணை.",

என்ற அம்முடங்கல் வாசகம் படிக்கக் கேட்ட முடி அரசன் மூண்டெழு சினத்தனாய், வெடிபட நகைத்து கடகக்கை புடைத்து கண்கள் கனன்று சிவக்க,

"எனக்கு மேலோனோ இவன்? இத்தொலை கடந்து வந்து நம்மைத் தாக்கும் துணிவும், வன்மையும் கொண்டவனோ? நன்று நன்று. திறையா? இவனா? கேட்பதா? நம்மையா?

உயிரை என் வாளுக்குத் திறை கொள்கிறேன். எழுக போர்க்கு என இயம்பு.

துணிந்து இது கொணர்ந்தனை. தூதன் ஆகலின் துணிக்கிலன் உன் தலை. உயிர்க்கு உறுதி தேடின் ஒல்லை நீங்கு" என்றான்.

வந்த தூதுவன் வணங்கினன், சென்றான். நடந்தன அனைத்தும் நபி பால் நவின்றான்.

போர் என்ன வீங்கும் பொலன் கொள் தோளினார், வேற் படையாளர், நாற்படையாளர் திரண்டனர். பகை முகத் தேயம் நோக்கி நடந்தனர்.

நிலம் வளை நெடுநீர் போல, கடலந்தானை அவன் நெடுநகர் வளைத்தது. முற்றுகை இட்டது. முரசு முழக்கு ஒலிக்கு, முந்நீர்ப் பரப்பும், முகில் கணமும் அஞ்சின. 'மகரிபு' தேய மன்னன் மறம் கிளர் மனத்தினோடு அமைச்சனை விளித்து,

"சூழுறு சேனை, சூறைத் துரும்பு எனச் சிதற, உடன்று மேல் வருவோர் உயிர்த்தொகை ஒரு பகல் எல்லையில் உண்ணவும் செய்க.

முரணியோர் முரண் முற்றும் முருக்குக" என்று ஆணை இட்டான்.

இருவர் படைகளும் எதிர்ந்தன; மாதிரம் அதிர்ந்தது. முதிர் சின வீரர் முருக்கினர், அழித்தார். தோளொடு தாளும் துணிந்து வேறாக ஊழி வெள்ளம் போல் எழுந்த குருதியால் நிலம் சேறாக மகரிபு மன்னன் மனத்திற்கு மாறாக, சுலைமான் (அலை) அவர்களின் வயப்படையினரின் வாய்வாள் ஆண்மையின் மகரிபு தேய மன்னன் படைமுற்றும் தோற்று ஓடியது.

அரசரும் அமைச்சரும் பொருது, களத்து அவிந்தனர். களத்தே கங்க சாலமொடு, காகமும் நரியும் நாயும் கருந்தலை வீரர் உடல் துணி உண்ணத் திரண்டன.

பாறு பந்தரிட்ட அப்பறந்தலை அதனுள் அவல ஓலமே மிக்கு எழுந்தது.

நபி அவர்கள் படை, நகர்க்குள் புக்கது. பண்டகசாலை, மூல பண்டாரம் அனைத்திற்கும் காவல் அமைத்தது.

வேந்தும், விறல் அமைச்சும் களிறாடு அழுவத்து இறந்தது அறிந்து அரசனின் கிளைஞர், இளைஞன் ஆன அவ்வரச சந்ததியைப் பற்றிக் கொடு போந்து சுலைமான் (அலை) அவர்கள் முன் தாழ்ந்தனர்.

இறந்தார்க்கு உரிய கடன் நிகழ்த்த அனுமதி கோரினர். பெற்றார்.

செய்கடன் சிறக்கச் செய்தார் செப்பரும் துயரம் மேவி.

பின் அம் மகரிபு தேய மக்கள் தீன் நெறி புக்கனர்.

இளவரசன் சாலவும் இளையவன் ஆக, தக்க வயது சார் அளவும் தன் பிரதிநிதியாய் ஒருவரை அங்கு அமர்த்தி, சுலைமான் (அலை) அவர்கள் தன் நாடு புக்கார்.

ஆண்டுகள் சில கழிந்தன.

இருநில வேந்தன் மகன் ஈர் எட்டு ஆண்டு அகவையான் ஆகினன்.

சுலைமான் (அலை) அவர்களின் ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன் ஆகி, கப்பம் கட்ட ஒப்பினான். அவர் ஆணை வழி அரசுப் பொறுப்பு ஏற்றான்.

காட்டுமா வேட்டையில் நாட்டம் மிக்கவனாக விளங்கினான். அமைச்சர்கள் 'அது தவிர்' என்னவும் கேளான் ஆயினன்.

"கடலிடை வேட்டம் காணச்செல்வோம்" என்று கூறி ஆவன செய்ய அமைச்சரைப் பணித்தான்.

மரங்கொல் தச்சர், மாண்வினையாளர் ஒவ்வொன்றும் மரத்தான் இயன்றிட்ட கோட்டை எனத்தக்க நாற்பது, வங்கம் நலப்பட அமைத்தார்.

வேட்டத்திற்கு வேண்டியனவும், வேடிக்கையாகப் பொழுது போக்க வேண்டியனவும், உண் பொருட்குவையும், பருக நன்னீரும் எண்ணில் வகையில் ஈட்டினர்; சேர்த்தார்.

வலைஞர், கலைஞர், அறிஞர், ஆடுநர், பாடுநர், நகை வேழம்பர் எனப் பல்லோர் திரண்டனர்.

மரக்கலப் பாய்கள் விரிந்தன. நெடுநீர் கிழித்து விரை செலல் மேயின.

நாடாள் வேந்தன் நாவாய், நடுவண் அமைய, பிற மதி சூழ் விண்மீன் எனச் சுற்றிலும் அமையும் வகையில் இணைத்துத் தொடர்ப்படுத்தினர்.

கீட்டிசைக் கடலில் மிதந்து சென்றன அவை.

பல்லியம் முழங்கின; பீரங்கிகள் ஆர்த்தன.

மீன் வேட்டம் மேவினர். வலைஅறுத்துத் தப்பின, பல மீன்கள் எனினும். பிடித்த மீன்களைப் பெருங்குவை செய்தனர்.

நாடகம் நயந்தும், பாடல் ஓர்ந்தும், இயம் பல இசைத்தும் நடனம் கண் களிப்பக் கண்டும், விகடப் பேச்சுகள் வியந்து நனி கேட்டும், பொழுது போக்கினர்.

மேல் நின்ற விதிக்கு நாயகன் விதித்த வண்ணம், நளி இரு முந்நீர் அழுவத்துப் பெரும் புயற் காற்று ஒன்று எழுந்தது.

நடுவண் நாவாய் சுற்றிய, மரக்கலன்கள் தொடர் இற்று, அழிய, ஒன்றோடொன்று மோதிச் சின்ன பின்னங்கள் ஆகிச்செறி கடல் ஆழ்ந்தன.

திரைப் பெருங்கடலிடை இளவரசன் இருந்த படகு அலைகளால் மோதுண்டது.

நாலாங்கடல் நடுவண் அமைந்த அப்பெருந்தீவின் அணித்தே காற்று தன் வன் கரங்களால் எடுத்து எறிந்தது.

விண் அளக்க நிமிர் பாறைகள் பல மலிந்த, பெருமலை அமைந்த அத்தீவின் பக்கலில் கடலில் வந்து வீழ்ந்தது.

இளவரசன் மற்றும் சிலரே, சிலவே உயிர் எஞ்சினர். உண் பொருட்குவை உட்பட அனைத்தும் அழிந்தன.

புயற்காற்று அடங்கியது. அமைதி சூழ்ந்தது. காற்று, தென்றல் போல் நீர்ப்பரப்பை மெல்ல மெல்லத் தை வந்தது.

இந்நிலையில் வெய்யவன் விளங்கு மேற் கடலில் குளிப்பதாயினான். இளவரசன் பணி மக்கள் நங்கூரம் பாய்ச்சினர். நள் என் கங்குலிலும் நாவாய் மேல் தட்டில் கண் படை பெறாராய் உரையாடிக்கிடந்தனர்.

விடிந்தது பொழுது. விரி கதிர் விண் பரவ, இளவரசனும் ஏவலரும் நாவாய் மேல் தட்டில் நின்றவராய் அந்நெடுமலையை அண்ணாந்து நோக்கினர்.

25. இருவர் மோகப் படலம்

அம்மலை அறையும் பொறையும் மணந்த தலையது. மேகநெடுமாலை தவழ்வது. அவ்விடை ஒரு தரு. கிளைகள் ஆயிரம் கிளைத்து விளங்குவது. ஒவ்வொரு கிளையும் பெரு மரம் போல்வது.கன்றிய வஞ்சகர் மனம்எனக்காழ் முற்றி விளங்குவது.

அம்மரத்து உச்சியில்தான் ஆனை இறாஞ்சி அமைத்த பஞ்சரம் இருந்தது.

அரசிளங் குமரனும் அவனைச் சார்ந்தோரும் மரத்து அடியில் இறந்து பட்ட யானைகளின் என்புக் குவியல்கள் கண்டார். இறைச்சித் துண்டங்கள் கண்டு மேல் நோக்கினர். "அக்கூடு ஆனை இறாஞ்சி அமைத்தது போலும். அது நம்மைக் காணில் உயிர் கொலுமே" என்று அஞ்சினர்.

"இவ்விடத்து இருந்து உய்ந்து போகவோ வழி இல்லையே" என்று ஏங்கியவனாய்ப் படகின் மேல் தட்டில் இருந்து குனிந்து நீர் நோக்கிப் பல் விளக்கினான், அரசகுமாரன்.

உடன் இருந்தவர், உறவினர் எவரும் இன்றி, எவரும் சேர இயலா இடத்துத் தனித்துச் சாக வேண்டி நேர்ந்ததே என்று ஏங்கி வாய்விட்டு அழுதனர்.

இவ் அழுகை ஒலியைக் காற்றுத் தேவன் மரத்தின் மேல் உள்ள கூட்டில் வாழும் குமரியின் செவி இடைச் சேர்த்தான்.

"நம் போலும் மனிதர் அழுகை ஒலி இங்கு எழுவது ஏன்?" என வியந்து கீழ்க்கடல் நீர் நோக்கினாள்.

நீரிடை அவள் முகச் சாயை தெரிந்தது. கண்கள் மலர "நீரிடை முளைத்த நிலவு?" என உற்று நோக்கினான். 'எவர் முகம் இது?' என்று அறி அவாவினால் விண் அண்ணாந்தான்.

அப்பெண் முகம் கண்டான். நீல வானில் நெகிழ்தரும் வெண் மேகக் கூட்டத்திடைத் திகழ்தரும் மதி நிகர் முகம் கண்டான். மோகம் கொண்டான்.

"இம் முழு நிலவினை இருகரத்து ஏந்தி முகத்தொடு முத்தி அணையும் பேறு கிட்டுமோ நமக்கு?" என்று பலவாறாய் எண்ணினான். செயல் நிகழ்வரிது என்று எண்ணித் துடித்தான். "வன் கொண்டல் விட்டு மதி முட்டுவது இம்மலை. வண் சிறைப் பருந்தும் உச்சி சேர எண்ணிடினும் இடைவழி அயர்ந்து சோரும்" என்றும் உன்னினான்.

"இங்கு பேசுவது அங்கு எப்படிக் கேட்கும்?" என்று எண்ணி மயங்கினான்.

"பேரழகுப் பெட்டகமே! நீ யார்? எப்படி அங்கு உற்றாய்? சுவ(ர்)ண உலகச் சுந்தரியோ நீ?" என உரத்த குரலில் கேட்டான்.

முகச்சாயை நீரில் தெரிவதால் ஒலி கேட்கும் தொலைவில் தான் அவள் இருப்பாள் எனத் துணிந்தான்.

இருவரைப் பிணைக்க இழைத்துள விதி உண்மையால் இவ் வுரை செவ்வியோள் செவியிடை இறைவன் ஏவல் வழிக் காற்றுத் தேவன் சேர்த்தான்.

"பொன் உலகப் பூவையே! பூமி எழில் காண விழைந்தாயோ? உன் அடித்துகள் மருவ இம்மலை அளவில் காலம் அருந்தவம் செய்திருக்க வேண்டும்.

என் மனக்கடலில் தனித்து இயங்கும் மரக்கலமே! பெண்கள் திலகமே! மாசறு பொன்னே! பேசும் ஓவியமே! கணு இல்லாக் கரும்பே! கண் கவர் பெரு வனப்பே! மயில் இயல் குயில் மொழியே!

பாகு பொதி பவளமே! தேம் கமழ்த் திரு நுதால்! ஆம்பல் நாறும் நின்தேம் பொதித்துவர் வாய் திறவாய் பாவாய்!

குழை படு விழியே! கழைபடு மொழியே! இழைபடும் இடையே! எனை இடர் செய்தாய்.

ஒடுங்கு ஈர் ஓதி ஒண்ணுதற் குறுமகளே! கோங்கம் கமந்த பூங்கொம்பே! ஏங்கும் என் உளம் இன்பம் எய்வகை எவ்வகை உரையாயோ?'' எனப் பலபட நலம் பாராட்டினான்.

அவனது காமம் சான்ற கழிபடர் கிளவி அவளது வளவிய செவி புக்கது.

மிக்கெழு நாண் அடச்சாய்ந்த நலம் கிளர் எருத்தத்தாள் ''அடைந்திலனே யான்'' என்னும் வருத்தத்தாள், கூறலுற்றாள்.

''ஆனை இறாஞ்சி அரும்பெறல் மகள் நான். அது இப்பொழுது சுலைமான் (அலை) அவர்கள் அவைக்குச் சென்றுளது. ஆதவன் சாய் பொழுது இவ்விடை வரும். இரவெல்லாம் இங்கு இருக்கும். நீள் பகற் பொழுதில் நெடு நில வேந்தருடன் இருக்கும்'' என்றாள்.

சுலைமான் (அலை) என்ற சொல் செவிப் புக நைந்தான். ''என் தாதையைப் போரிடை உயிர் தொலைத்தவர் அவர். நான் அவர்க்கீழ் வாழ் சிற்றரசன்'' என்று கூறித் தன் நிலைக்கு வருந்தி விழி வழி நீர் வழிய நின்றான்.

''ஏன் அழுகின்றீர்?'' என்று அவள் கேட்ப, தன் துயர் மறைத்து ''கோலக் குமரி நீ! உன் துணை வயதினர் தக்க கணவரைச் சேர்ந்து தகைமை மேவுவர். தணப்பிலா இன்பம் தலைப்படுவர். கனியே! நீ தனியே இருக்கிறாய். பெருங்காற்று வீசி உன்னை இக்கடலிடை வீழ்த்தின், எடுக்கவல்லார் யார்? உன் தாயும் ஈங்கிலை; தமரும் இலரே! எண்ணுந் தோறும் ஏக்கமே மிகும்.

மதிமுகப் பெண் அணங்கே! இந்து இளம்பிறை எழில் நெற்றியளே! முனைவன் கருணை புரிவன். கலங்க வேண்டா. எனக்கு நீ, உனக்கு நான் .செம்புலப்பெயல் நீர் போல நெஞ்சம் கலந்தோம்.

விதி நன்கு உளதேல் உன்னை என்பால் சேர்க்கும்.

மனக்கினியை. எனக்கு இனியை. கனக் கருங் குழலாய்! இறைவன் உன் தனிமை போக என்னை உன்பால் சேர்ப்பான். இது உறுதி'' என்று கூறினான்.

கண் தர வந்த காம ஒள் எரியால் நெஞ்சகம் வெதும்ப செம்மலைச் செவ்விதின் பார்த்த கண்ணை ஈர்கிலா அச்செல்வி ''அவ் அகன்ற மார்பிடை என் அம்மெல்லாகம் அடைய முயங்கு வேனோ?'' என்று ஆதரம் மிக அவன் தோள் நோக்கினாள். தலை கவிழ்ந்து தன் நகிலிணை நோக்கினாள். புல்லினாள் போல் உளம் பூரித்தாள்.

தம் இருவர் நிலை மறந்து எண்ணியமைக்கு ஏங்கினாள்.

''ஐய! இத்தரு ஏறலும், என் வழிச் சேறலும் எளிதலவே. எவ் வழி இங்கு அடைவீர்? கரி இறாஞ்சி காணில் கடுஞ்சினம் கொள்ளுமே. உயிர் கொலுமே'' எனக் கவன்றாள்.

''ஒண் நித்தில நகையாய்!உரைப்பன நன்கு கேள். இன்று உன் தாய் வரும்போது விழிகளில் நீர்தேக்கு. விம்மி அழு. அது, அது பொறாது 'ஏன் அழுதனை?' என்று கேட்கும்.

உசாத் துணையாகவும் ஒருவரும் இலரே! மலையும், கடலும், வெளியும் நோக்கி எவ்வளவு நேரம் தான் கிடப்பது? பகலும் இருள் அறா இரவு ஆகில் நன்றாயிருக்குமே? என்று சொல்லிப் புலம்பு. அதற்கு அது கூறும் உரையை நாளை என்னிடம் கூறு.பின் நல்லதோர் திட்டம் நாம் வகுப்போம்'' என்றான்.

புன்கண் மாலைப் பொழுதும் சாய்ந்தது. புள் வரும் ஒலி செவி மடுத்தான். நாவாய் அறையுள் ஒடுங்கினன், நடுங்கி.

மாறிப் புக்க இதயத்தாள், வந்த புள்ளிடம், வளர்த்த தாயிடம், வடிக்கண் வடித்த நீரொடு தன் குறை கூறினாள்.

பரிவும், பாசமும் மீதூரப் பெற்ற அப்புள் ''கண்ணின் பாவை நடை கற்றன்ன, எண்ணறு நலத்த என் அரும்பெறல் மணியே! நின் குறை நபி அவர்களிடத்து இயம்புவேன். பின் அவர் கூறு வழி நடப்போம். அழாதே'' என்று உரைத்தது.

தாய்க் கைச் சிக்கித் தவிக்கும் மனம் கொண்டாள். கவிந்த இருள் இடையும் கண்படை பெறாள் ஆயினள்.

அப்பறவை அவளைத் தன் நெடிய கரங்களால் தழுவித் தன் தட நகிலிணையில் அணைத்தது. பெயர்த்து முயங்கியது. 'வியர்த் தனன்' என்றாள், ஒதுங்கிப் படுத்தாள். தன் துணை மனமும் தானுமாய்த் தனித்து இருக்கத் தளர்ந்தாள்.

அலமரல் நோய் அறியாது, அணைத்து உறங்கும் ஆனை இறாஞ்சியிடம் அவள் வெறுப்பே கொண்டாள். "இருளும் துஞ்சும்; அலையும் துஞ்சும்; ஈங்குள பொருள்கள் எவையும் துஞ்சும்; ஓர் யான் மன்ற துஞ்சாதேனே" என விரகம் மிக உருகினாள்; அயர்ந் தாள்.

"இமைகளே! தழுவுவீர். கனவிலாவது அவரைத் தழுவுவேன். கரை பொரு சிற்றலை ஒலியும் ஊழிக் காற்று எனச் செவியிடைத் துளைக்குமே" என்று விம்மினாள்.

இவள் கொள் காமத்தீ, அடுத்துப்படுத்துள புள்ளின் சிறகைத் தீய்க்க, மழை என உகு கண்ணீரே அவ்வெம்மையை மாற்றிற்று.

ஆக வெம்முலை அகத்தொடுங்கிய தண்முத்த மாலை நீறாகிப் பொரிந்து பொடி ஆகி, அழுகை நீர் சேர, வெண்தேய்வை ஆகிப் பரவி பொன்னம் பொருப்பை வெள்ளிப் பொருப்பு, என ஆக்கியது.

அங்கு வங்கத்தின்மீது அரச மகன் உறக்கம் இன்றி உலவினன்; திரிந்தான்.

"நீண்ட மதர் விழியால் என் நெஞ்சம் புண் ஆக்கினாய்; வெம்முலை வேது வேண்டுவன். வாயமிழ்து நல்கி நையும் உயிர் காவாயோ? பாவாய்! அன்பே! அறிவு அறைபோக வெறுங் கூடாகிப் போனேன். கொண்ட என் அறிவை எங்கு ஒளித்தனை? முகையிலா? நகையிலா? இடையிலா?

நான் உன்னிடம் உரைத்தன நவின்றனையோ? இல்லையோ? என்பால் இரக்கம் இல்லையா?"

என்று இவ்வாறாய்ப் பலப் பல எண்ணி, எண்ணி நைந்து உருகினான்.

புலரி மேவியது; கீழ்வான் சிவந்தது. பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டான். பருதியஞ் செல்வன் பாய் இருள் பருகிப் பகல் கான்றான்.

பூவையர் வதனப் புள் உள் மகிழ்ந்து மகளை அணைத்து "உன் உளக் கருத்து ஒருங்கு அவர்க்கு உரைத்து துயர் தீர் வழியை அறிந்து கூறுவேன். அவலம் ஒழிக" என்று கூறி முத்தமிட்டுப் பறந்து சென்றது.

26. விதி கூட்டிய படலம்

புள்ளின் உருவம் விண்ணில் புள்ளி போல் மறைந்த பின் "நெஞ்சத்து உறைவோய்! வங்கத்து மறைவாய்! அரசே வருக! வெளி வருக! புள்ளும் போனது. நம் புலம்பும் போனது. என் கவலை தீர, நின் கதிர்முகம் காட்டுக" என அழைத்தாள்.

வங்கத்தின் மேல் தளத்திற்கு வந்த அரச மகன் "ஆவியே! அமுதமே! கூறினாயோ உன் குறையை? என்ன சொல்லிற்று?" என்று பரபரப்புடன் கேட்டான்.

"இன்று மாலை தெரியும், இதற்கும் நபி அவர்கள்தான் வழி சொல்ல வேண்டுமாம். நான் என்ன சொல்வேன்; செய்வேன்?" என்றாள்.

மேல் நோக்க, கீழ்க் கவிய இருவர் கழுத்தும் வலி கொண்டன. உலவாக் கட்டுரை பல பாராட்டினர். நகைபடு தீஞ்சொல் பகிர்ந்தனர் மகிழ்ந்தார்; நீள் நெடு நிழல் குறுகி அடி உறைந்து பின் பெருகி நீளும் வரையும் பேசிக் கிடந்தனர்.

புள் வரும் பின்னே; பெருங்காற்று வரும் முன்னே. இஃதறிந்து இருவரும் காண்டல் தவிர்ந்தனர். அரிதில் பிரிந்தனர். அவன் அறைக்குள் புக்கான். குமரி கூடு ஒடுங்கினாள்.

வந்து அமர் புள்ளிடம் "அன்னாய்! நபி என்ன சொன்னார்? அறியலாமோ?" என வினவினாள்.

"மகள் தனிமைத் துயர் தீர உடன் இரு. நாலிரு நாளின் பின்வா" என்றார் என்றது.

ஆங்கு அவ்வாசகம் என்னும் அனல், குழை தூங்கு தன் செவியில் தொடரா முனம் துண் என்றாள்.

நீர்நசை மேவி கிணறு வெட்ட, நெடும்பூதம் புறப்பட்டது போலானது கண்டாள்.

தாய்ப் புள்ளால் தளிர் இற்செறிக்கப்பட்டாள் என்று எண்ணி ஏங்கினான். ஓர் பகல் ஊழியாக, உரைக்கொணாத் துன்பம் மேவி இருவரும் காண்டல் இலராய்க் கவலை கூர்ந்தனர்.

அவன் அதனை அறியான் ஆகலின் அகம் சாம்பினான்; முகம் கூம்பினான்; தேம்பினான்; திகைத்தான்.

நாலிரு நாட்கள் நத்தை ஆயின. தேறியவள் போலத் தெளி முகம் காட்டினாள். வாயல் முறுவல் என அறியாது வண் புள் மகிழ்ந்தது.

ஒன்பதாம் நாள் காலை பேரொலி கேட்டான்; புள் புறப்படக் கண்டான்; வெளி வந்தான்.

"பனி தரு திங்கள் முகமே! பறவை போயிற்று. வா, வெளியே. திருமுகம் காட்டு. தீரும் என் இன்னல். ஆவியே! அமுத சஞ்சீவியே! மேவிய தவப் பயனே! வா, வல்விரைந்து" என்று வாய்விட்டு உரக்கக் கூவினான்.

வட்ட நிலா இதழ் விரித்தது. ஈர் இரு விழிகள் பேரார் வினொடு உண்டன ஒன்றை ஒன்று.

"என்ன கேடு வந்தது உன் தாய்க்கு? எப்போதும் பகலில் அகல்வது உன்பால் இகல் கொண்டது ஏன்? இருநால் நாட்கள். எண் பேருழிகள்" என்று சொல்லி விம்மினான்.

"நபி சொன்னாராம் 'இரு' என்று. இருந்துவிட்டது. நாம் எண்ணிய எண்ணியாங்கு எய்தப் பெற்றிலேம்" என்று சலித்தவாறு கூறினாள்.

"எங்கோ கிடப்பவள் நீ. எங்கோ வாழ்ந்தவன் நான். இருவரை யும் கடலில் மலையில் காணச் செய்த விதி கூட்டவும் செய்யும். கழிந்ததற்கு வருந்தாதே.

நான் வகுத்துக் கூறுவன கேள். அதன்படி செய். இன்பம் பெருக்குவோம். பெருந்தடங்கண் பிறைநுதலே! வருந்தல்" என்று ஆறுதல் கூறினான்.

"துன்பம் கலவா இன்பம் ஏது? எம்மொடு உயிர் எஞ்சிய சில குதிரைகளில் ஒன்றனைக் கொன்று வயிறு கீறி, குடல் நீக்கி, குடைந்து உட்புகுந்து புறம் பொத்திக் கொள்கிறேன்.

உன் தாய்ப் பறவை வந்த பின், 'நபி தரிசனம் நாளும் பெறு வாய். நாட்டு நடப்பை நன்கு அறிவாய். எனக்கும் கூறுவாய். கேட்டு மகிழ்வேன். இவை எல்லாம் இவ்வெட்டு நாட்களில் உனக் கும் எனக்கும் இல்லாகிப் போயின.

தனிமைத் துயர் கெட அதோ கிடக்கும் அக்குதிரைப் பிணத்தையாவது எடுத்து என் முன் கிடத்து. அதனைக் கண்டா

வது ஓரளவு துயர் மறப்பேன்' என்று சொல். உன் சொற்படி அது நடந்திலதேல், பின்னர்ப் பிறிதொரு திட்டம் வகுப்போம்'' என்றான்.

அவளும் ஒப்பினாள். மாலையும் வந்தது. மகளிடத்து மாறாப் பற்று கொள் புள் அவள் வேண்டுகோள் ஏற்று விரைந்து செயல் மேவும் என்று நம்பி துணிவொடு துரகத்தின் வயிறு கிழித்தான்; உட்புகுந்தான்.

உள் உளன் ஒருவன் என எவரும் எள் அளவும் அயிராவகைத் தன்னைப் பொதிந்து கொண்டான்.

புள்ளும் வந்தது. பூவையும் புகன்றாள். செத்த குதிரையால் தீது நேராது என்று எண்ணி விரைந்து, தூக்கித் தன் குடம்பையின் பக்கல் கிடத்தியது.

அடுத்து நிகழ்வன அறிகிலது அப்பேதைப் புள்.

அவளுக்கும் அவனுக்கும் தான் எத்துணைத் துணிவு? மோகம் கொண்டால் உயிர்க்கு அச்சம் அகலும் போலும்.

நாற்ற உடலிடை இருந்தான்; நலிந்தான்.

அன்றிரா முழுவதும் அவர்கள் உறங்கிலர். பக்கத்து இருந்தும் பரிவுடன் தழுவப் பெற்றிலமே என்று வருந்தினர்.

காலை வந்தது; கனை இருள் கழிந்தது. புள்ளும் விடை பெற்றுப் போயிற்று. பூவை புன்முறுவல் காட்டினாள்.

''வருக! வேந்தே வருக! தாய் வயிற்றிருந்தீர் முன். தாவுறு குதிரை வயிற்றிலும் வதியும் பேறு பெற்றீர். இரு பிறப்பாள! எழுந்து வருக'' என விளித்தாள்.

புறம் போந்தான். புன்புலால் நாற்றம் பொறானாய் முகம் சுளித்தான். வயிற்றிடை இருந்த வாலாமை தீர, அவள் நீர் உதவ நீராடினான். உடல் ஈரம் புலர்த்தினாள். துகில் அணிவித்தாள்.

மங்கை மலர்க்கரம் தீண்ட மால் கொண்டான்.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறிந்து ஐம்புல இன்பமும் மேவினான். இருவர் இடையிலும் வளி சென்றிலது. புது மண மதுவின் தேறல் ஒக்க உண்டனர், தூமப்பணிகள் தோய்ந்து கலந்தாற்போல் உடல்கள் பின்னின. துன்னினர் இன்பம்.

பொய்யாக் காமத்தர் பொழுதிடை தெரிகிலார்.

கூட்டம் மேவிய அந்நாள்,

அலகில் ஆற்றலன் ஆண்டவன் முன் நாள் அவட்கு விதித்த யாண்டு பதினேழு, திங்கள் ஆறு, நாள் ஆறு.

இவர்க்கு இணை இவர் என இறைவன் இயற்று விதி இம்மியும் மாறுமோ?

மேலைத் திசை ஆடவன் ஒருவன், கீழைத் திசை மகள் ஒருத்தியை நாலாம் கடல் நாப்பண், முறையில் வழியில் முயங்குவான் என பலகை 'லவ்கில்' அன்று எழுதியது அழிக்கப் போமோ?

எழுதி, எழுதிச் செல்லும் கை விதியின் கை. இதிலோர் எழுத்தும் மாறாதே.

அளப்பரும் இறைவன், வளப்பெரும் திறலைச் சில நாள் பல் பிணிச் சிற்றறிவினரோ கணிக்க வல்லார்?

ஆருயிர் முறை வழிப்படூஉம் என்பது முது மொழி அன்றோ?
நுரை முகந்தன்ன மென் பூஞ்சேக்கையில் சிலர் துயில் மேவ பரல்படு தரையில் நெடிது வளர் மரத்தின் வலை வலைந்தன்ன புள்ளி நீழலில், கை அணையாக ஆழ்ந்த உறக்கம் சிலர் மேவ, அமைந்து உள விதியை அகற்றுவார் ஆர்?

காளை. காரிகை கலந்ததைக் காற்றுத் தேவன் கடுகினன் முடுகி காவற்கமைந்த கருணையாளன் செவி இடைக் குறுகிச் செப்பினன்.

சுலைமான் (அலை) அவர்கள் பக்கலில் இருந்த பாவை முகப் பறவையின் முகத்தை ஏறிட்டு நோக்கினார். ஏதும் கூறிலர். கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பு மேவினார்.

இவர்கள் இவ்வாறு இருக்க, தன் துணைப் பெடையுடன் ஆண் பருந்து ஒன்று அரசர் திருமுன் அணுகியது.

பெண் பருந்து கூறும்:

27. தரும லாபப் படலம்

"பெரும! யான் கரு உயிர்த்து ஈனும் குஞ்சுகள் அனைத்தும் கள்ளப் புணர்ச்சியின் விளைவு என இது கூறும். கொண்ட துணைவியை ஐயுற்று அடாப்பழி கூறுவதனினும் கொடுமை வேறுண்டோ? நேர்ந்தான் அன்றிப் பிறர் நெஞ்சும் புகுந்திலேன்.

இவ்விதம் இது பழி கூறின் என் கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்? என் குறை இரந்தேன். இவர் சொல்வனவும் கேட்டு, ஏற்றன நீதி எடுத்து இயம்பிடுக. நலன் அறி நெஞ்சின் நபிகள் நாயகமே!'' என்று கண் கலிழக் கலுழன் கூறிற்று.

உத்தமர் உவணச் சேவலை உருத்து எதிர் நோக்கி, ''உன் துணை உரைத்தன உண்மையா?'' என

''ஆம்'' என்று ஆண் பறவை செப்பிற்று.

''எவ்வகை கண்டாய்? இயம்பு'' என்றார்.

''பயிர்ப்பு உணர்வு சிறிதும் இன்றி, பயமும் இன்றி, அயலவர் பருந்துகள் வரின் அருகு இருந்து அன்புரையாடலும், அசதியாடலும், வெடிபட நகைத்தலும் ஆக இருப்பின், ஐயம் எழாது என் செயும்? 'விலக்குக! வேண்டா இந்நிலை' என்றேன். கேட்டிலது. இந்நிலையில் கருத்தரித்து ஈனுவ கள்ளக் குஞ்சுகள் என்பதில் என்ன ஐயம்? சொல்க! பெரும! சொல்க!'' என்று தருக்குடன் கூறியது.

ஐயன் அது கேட்டுப் பெடையை நோக்கிப் பேசுவார் பின்னும்.

''பெடையே! நின் செயல் பீடன்று. எவ்வகை நோக்கினும் நன்றன்று. கொண்டான் குறிப்பறிந்து நட. இல்லிற்கிசைந்து ஒழுகாப் பெண் ஆகாதே. அயலவரைத் தீ எனக் கருது. அணுகாதே. அவம் மேவாதே'' என்று அறிவுரை கூறி அனுப்பினார்.

ஒப்பி முகம் மலர்ந்து ஒருங்கு சென்றது அவ்விணை.

அடுத்துப் பிறிதொரு பருந்து வந்து வணங்கியது.

''ஐயா! நும் குடிமகன் ஒருவன் வீட்டுப் புறக்கடை மரத்தில் கூடுகட்டி வாழ்கிறேன். பகலில் இரைதேடி நான் செல்லும் பொழுது அவன் நான் ஈன் முட்டைகள் அனைத்தும் கவர்ந்து செல்கிறான்.

ஈன்றன அனைத்தும் இழப்பதனை விட மலடாய் இருத்தலே நன்று அல்லவா?'' என்று தன் குறை கூறிப் புலம்பியது.

அவ்வீட்டுக்காரன் தருவிக்கப் பெற்றான். 'நிகழ்ந்தன உரை' என நபி அவர்கள் கேட்க, அவன் ''ஐயா நான் ஒரு மருத்துவன். மருந்து ஒன்று செய்யப் பருந்து முட்டைகள் தேவைப்படுகின்றன. என் வீடு; என் மரம்; என் மரத்தில் இவை இட்ட முட்டைகள் எனக்கே சொந்தம். எடுத்ததில் என்ன பிழை'' என்றான்.

''போனது போக. இனியாவது அவ்விதம் செய்யாதே'' என்றார்.

''பருந்து முட்டைகள் காட்டிலோ, பிற இடத்திலோ பெறல் அரிது. எளிதில் பெறுவதை விடுத்துத் துன்புறல் வேண்டுமா?'' என வினவினான்.

''புள் அலற, முட்டைகள் கொளின், உன் கேள் அலற உன் உயிர் கொள்வேன். போ.'' என எச்சரித்து அனுப்பினார்.

அவன் ''என் தொழிலை நான் விட்டு விடுவதா?'' என்று முணு முணுத்தவாறே சென்றான்.

பின் ஜின் இருவரை அழைத்தார்.

''நீங்கள் அம்மரத்தில் தங்கி இருங்கள். அவன் பருந்து இடும் முட்டைகளைக் கவரவரின் உயிர் செகுத்து, உடல் கிழித்து எறிக'' என்றார்.

ஜின்கள் சென்றன. பறவையும் சென்றது.

அன்றிரவு ஒருவன் பசித்து, இளைத்து, உடல் அயர்ந்து ''இல்லீரே! உணவின்றிப் போகும் என் உயிரைக் காப்பீரே'' என வேண்டினான்.

மனையில் இருந்த மருத்துவன் இது கேட்டு ''உண்ணும் போதினில் இரப்போர்க்கு இல்லை எனல் தீது'' என எண்ணி உறட்டித் துண்டு ஒன்றும் ஒரு செம்பு நிறைய நீரும் கொண்டு அவன் முன் வைத்தான்.

உண்டு, பசியாறி நீர் நிரம்ப அருந்திய பின், ''அல்லாவே! ஏகும் உயிர் காத்த இந்நல்லானுக்கு எல்லா நலன்களும் அருள் வாயாக'' என்று இருகை ஏந்தி 'துஆ' செய்தான். சென்றான்.

வைகு புலர் விடியலில், வைத்தியனின் புறக்கடை மரத்தில் ஏறி பருந்து முட்டைகளை எடுக்கச் சென்றான். தடுக்க முயன்றன ஜின்கள். கொல்லவும் முந்தின.

அவன் செய் அறப்பயன் அவற்றைச் செயலற்றன ஆக்கிற்று. அடித்து விரட்டிற்று. ஜின்கள் மொத்துண்டு, குத்து உண்டு, தள்ளுண்டு, தடுமாறின.

இவை ஒன்றும் அறியா வைத்தியன் எடுத்தனன்; அகன்றான்.

அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை. அதனை மறத்தலின் ஊங்கு இல்லை கேடு அன்றோ?

களைத்து, இளைத்து, சோர்ந்து துவண்டு நபிகள் முன்னர், தள்ளாடி நடந்து சென்று விழுந்தன.

பருந்தும் அவ்விடைச் சார்ந்து குறை கூறி அழுதது.

"காவல் வைத்தும் என்? என் முட்டைகள் அனைத்தும் இன்றும் பறி போயினவே. நெஞ்சுரம் மிக்கான் பஞ்சர முட்டைகளைக் கொண்டானே. நீர் நீதி நிகழ்த்தி என்ன பயன்? நெடுஞ்சின்களை அனுப்பி என்ன பயன்?" என்று அகம் கலாய்த்து அழுதது.

ஜின்களை உசாவினார். "எம் செயலால் ஆவது இனி ஒன்றும் இல்லை. எம் உரன் முற்றும் அவிய உறட்டித் துண்டு ஒன்று எம்மைப் புரட்டிப் புரட்டி அடித்தது. மூட்டுக்கு மூட்டு மொத்துண்டோம். எழவும் கூடுவதில்லை. அழவும் உடலில் தென்பு இல்லை." என்றன.

அரசர் ஏவல் வழி மருத்துவன் வரவழைக்கப்பட்டான்.

"நேற்று இரா நீ செய்த நன்மை ஏதேனும் உண்டோ?" என வினவினார்.

உறுபசியால் அடைந்தானுக்கு உறட்டித் துண்டும், உண்ணு நீரும் தந்தமை கூறினான்.

"தருமம் உன் தலை காத்தது. தப்பினை. போ" என அவனைப் போக்கிய பின், பருந்தினை நோக்கி "வேறு மரம் தேடி கூடு இயற்று. குலம் பெருக்கு. என்னால் இயன்றது இவ்வளவே. தருமப் பயனைத் தடுக்கும் வலி இலேன்" என்றார்.

தெளிந்த புள் வேறிடத்துக் குடம்பை அமைக்கப் போயிற்று.

என்றுமில்லாத இறுமாப்புடன் ஆனை இறாஞ்சி அரசர் மாடு அணுகியது.

28. ஆனை இறாஞ்சிப் பட்சி நாணிய படலம்

"உன் வழக்கு ஏதேனும் உண்டோ? சொல்" என்றார்.

"நபி அவர்களே! பதினேழு ஆண்டுகள் முன்னர் தாங்கள் சொன்னதைத் தங்கட்கு நினைவுபடுத்துகிறேன். மாற்ற இயலாது விதி என்றீர். ஆந்தையைப் பிணை கொடுத்து 'அகற்றுவேன் விதியின் ஆற்றல்' என்றேன்.

நேற்றோடு, அந்தத் தவணை முடிந்தது. முறையில் வழி முயங்குவர் என்றீர். ஆடவர் வாடையே அவள்மீது படாதவாறு கண்ணைக் காக்கின்ற இமைபோல் அப்பெண்ணைக் காத்தேன்'' என்றது.

முன்நாள் வரை நடந்த அனைத்தும் ஒன்று விடாமல் உரைத்துப் புதியதோர் முறுவல் பூத்தது.

''விதியை விலக்கி விட்டதாக நீ கூறுவது விந்தையே! இதனை இவ்வவையோர் அறியவும் செய்வர். போ! போய் உன் மகளைக் கொண்டு வா. உடன் துணையாக இப்புள்ளையும் கொண்டு போ'' என்றார்.

அவை மிக வேகமாகப் பறந்து சென்றன. எதிர்பாரா வகையில் மாலைப் பொழுதின் முன்னரே, புள் வரு ஒலி கேட்டனர். புல்லிக் கிடந்தார்; புடை பெயர்ந்தார். குமரன் குதிரையினுள் புக்கான். அவளோ அவச நிலையில் இருந்தாள். அழன்றது மேனி; அவிழ்ந்தது கூந்தல்; எழுந்தது குறுவியர்; இழந்தனள் கன்னிமை; ஓடின தடங்கண்; கூடின புருவம்.

வல் விரைந்து வந்த புள், மகள் நிலைகண்டு திடுக்கிட்டது. தலைவிரி கோலம், செருகிய விழிகள் கொண்டு அவள் இருப்பது கண்டு ''என்ன நடந்தது? ஏன் இக்கோலம்?'' என வினவியது.

''ஆழ்ந்து உறங்கிக் கிடந்தேன். உம் வரவு அறிந்து திடுக்கிட்டு எழுந்தேன். தவிர, என்றும் தனித்து வரும் நீர், இன்று ஒரு துணைப்பறவையுடன் வந்ததால் மனம் கலங்கினேன். அதன் விளைவுதான் இது'' என்றாள்.

''ஏந்திழையே! எனக்கும் நபிபெருமானுக்கும் இடையில் ஒரு தர்க்கம் முன் நடந்தது. இன்று நானே வெற்றி பெற்றேன். அரும் பெறல் மகளே! உன்னை அவர்க்கு அறிமுகம் செய்து வைத்து வெற்றி விழாக் கொண்டாட வேண்டாவோ? அதற்காகவே இப்பறவையையும் எனக்குத் துணையாக அழைத்து வந்தேன்'' என்றது.

''சரி. நீர் என்னை எவ்வாறு எடுத்துச் செல்வீர். முதுகிடைக் கொண்டு போவீரோ? அய்யோ! பிடி தவறிப் பெருங்கடலுள் வீழ்ந்து இறந்து போவேனே. கைகளால் பற்றிப் பிணைத்து பறக்க முயலின் உம் வள்ளுகிர்க் கரங்களால் என் உடல் பொத்துண்டு போமே'' என்று அஞ்சியவள் போல உரைத்தாள்.

"சரி. நீயே ஒரு திட்டம் சொல். எவ்வாறு உன்னைக் கொண்டு செல்ல வேண்டும்?" என்று புள் கேட்டது.

"இந்த செத்த குதிரைக்குள் வயிறு கீறி நான் புகுந்து பொத்திக் கொள்கிறேன். இதனை என்னோடு எடுத்துச் செல்லும். கீழ்நோக்கிக் கடல் கண்டு மருளவோ, மேல் நோக்கி விண் கண்டு வெருவவோ வேண்டிவாராது அல்லவா? பேழையுள் இருப்பது போல் பாதுகாப்பாகவும் அமையும்" என்றாள்.

தன் உயிர் அனையானைப் பிரிய மனம் இன்றி இவ்வாறு கூறினாள்.

ஆனை இறாஞ்சி இதற்கு ஒப்பியது.

குதிரையின் வயிறு கீறி உட்புகுந்து தன்னை மறைத்துக் கொண்டாள்.

விண்வழி குதிரையைச் சுமந்து கொண்டு விரைந்து பறந்தது.

தன்னையும், தன் இணைந்தானையும் தாய் என வளர்த்த புள்ளைக் கொண்டே சுமக்கச் செய்தனள் இவள் என்றால், ஒண்டொடி மாதர் உளத்தினில் ஊன்றிய காதல் (காமம்)திறத்தினைக் கழறலும் கூடுமோ?

கலக விழி மாதர், காமம் மிகின், கபட வழி மேவுவர் என்பது நாடறிந்த உண்மை அன்றோ?

நீள் பெருங்காமம் மேவிய அவ்வழி நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து செயலற்றுப் போகுமே.

காமம் நெரிதரின் நிறை இறைப்பொழுதும் நில்லாது அல்லவா?

கோடகத்தூடே குமரனும் கோதையும் கூடிக் கிடந்தனர். பாவையின் பனிமலர் இதழ் அவன் மதுக் கோப்பையானது. மாந்தளிர் மேனி மெல்லணையாகத் தோளிடைத் துயின்றான். தொலையாத இன்பம் துன்னினான்; துய்த்தான்.

சரபப் புள்ளும் சாம் நகர் அடைந்தது. அரசர் திருமுன் அசுவம் இட்டது.

புள் அது வரு முன்னரே, வாயுத்தேவன், நபியின் செவியிடை நடந்தன அனைத்தும் நவின்றான்.

ஏந்தல் ஏதும் அறியார் போல் "சரபமே! உன் மகளைக் கொண்டு வந்தாயா?" என வினவினார்.

"இங்கே! இதனுள்ளே" என இறந்த இவுளியைச் சுட்டிக் காட்டியது.

"செல்வி எங்கே,எனில் செத்த குதிரையைக் காட்டுகிறாயே?" என்றார்.

"மகளே வருக! மன்னர் காண வருக! உன் தாய் வென்றேன் என்று உலகு அறிய இன்னே, இவர்தம் கண் முன்னே, நன்னர் வருக; நலமே வருக" என்று அழைத்தது.

களங்கறு கதிர்மதி முகத்தாள் கவன வாம்பரி வயிற்று அகத்து இருந்து வெளிப் போந்தாள்; ஒல்கி எதிர் நின்றாள்.

"வாய் வாள் வேந்தரே! வாய்த்த வெற்றி எனக்கே" என்று தருக்குடன் கூறியது.

"விதியை வெல்ல வல்லையோ நீ?" எனச் சினந்தார்.

"இன்னும், ஐயமா? இது கண்ட பின்னுமா? நன்று நும கொற்றம்" என்று எள்ளல் குறிப்புடன் கூறியது.

"விதிக்கு ஈமான் கொள்ளாய் வெற்றுரை புகல்கிறாய். பொறு. குதிரைக் குகை வயிற்றில் பதுங்கிக் கிடக்கும் குமரா வருக. மகரிபு தேய மன்னன் மகனே! வா வெளியில். வென்றது விதியே என்று இவர் அறிய, தெளிய, ஒளிந்துள்ளவனே ஒல்லை வருக" என்றார்.

கருமுகில் கிழித்துக்கதிரவன் வருவது ஒப்பாய் அவன் வெளிப் போந்தான்.

அவையோர் வியந்தனர்.

ஆனை இறாஞ்சி வியப்பு, திகைப்பு, வெட்கம், வேதனை, அனைத்து உணர்ச்சிகளும் முகத்தில் ஓட நின்றது.

நபி அவர்கள் அவையோர்க்கு நடந்தன அனைத்தும் நவின்றார்.

உள்ளகம் வெதுப்பும் சஞ்சலத்தோடு, வேதனைத் தீயை ஆற்றாதாகி, நபி முகத்து எதிர் விழிக்கவும் வெள்கி, ஒன்றும் உரையாதாய் ஜெரேலெனப் பாய்ந்து பறந்து நாலாம் கடல் நடுவண் தான் இருந்த கூடு போய்ச் சேர்ந்தது.

பிணை என அமைந்த பிதுங்கு கண் ஆந்தையும் சேரிடம் அறிந்து சேராமையால் வருந்திற்று.

நபி வெறுப்புடன் அதனை நோக்கி ''போ'' எனப் போக்கினார்.

தன் இனம் முன்னர் வரவும் நாணி தனித்து இருளில் இயங்கும் இயல்பு மேவி கான் அடைந்தது. அன்று முதல் பறவைக்கணம் எவற்றின் கண்ணிலும் படாமல், இரவு இயங்கும் இயல்பிற்று ஆனது.

இறை விதி வழியில் முறையில் வகையில் கூட்டம் கொண்ட அவ் இருவர்க்கும் முயல் சடங்குகள் நிறைவுறச் செய்து, தந்தை தாய் நிலையில் தம்மவர் இருப்ப நிலைசெய் நிக்காகு நிறைவுற அமைத்து ''நின் நகர்ச் சேறி'' என்று கூறி அனுப்பல் செய்தார்.

கொற்றக் குரிசிலும் கோதை நல்லாளும் பெற்ற அப் பரிசில் பெருங்குவையோடே, நற்றவ நபியின் பொற்றாள் போற்றி, கோ இயல் பதியை நீத்து, கன்று புணர் பிடிய குன்று பல நீந்தி, மகரிபு தேய மாநகர்ச் சேர்ந்தார்.

உற்றார் மகிழ்ந்தார்.

**29. பல்கீசு வரலாற்றுப் படலம்**

வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள், ஒட்டகங்கள், ஆடுகள், மாடுகள் எனக் கால்நடை வளம் மிக்க நாடு எமன். இசையால் திசை போய புகழ் உடைய அதன் தலைநகர் சபபு.

எழுநிலை மாடம், எண்ணில் நிதிவளம், செழுமை கொள் மலர்க்கா, செங்கனி ஈட்டம் மிக்கது அந்நகர். அகலிரு வானத்தாரும் அடைய அருத்தி கொள் நகர் அது. அவ்விடை வாழ்நர் அறநெறி வழாஅர்; அடல் அருந்துப்பினர்.

அந்நாடாள் வேந்தர், பகடு புரந்தருநர் பாரம் ஓம்பி நூல் நெறி வழாது, கோன்முறை மறாது ஆண்டனர்.

அம்மர பினரிடையே புன்மையும், தீமையும், நஞ்சும், உலகுள கொடுமையும் ஒருருக் கொண்டாலன கொடியன் 'சுறாயிக்கு' தோன்றினான்.

இபுலீசு கைம்மகவு அவன். ஐவகைப் பாவங்களை ஐவேறு உருவிற் செய்வினை முற்றிய முடி என மேற்கொண்டவன்.

மனத்திலோர் தூய்மை இல்லான்; வாயிலோர் இன்சொல் இல்லான்; சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன்.

பெண்மை நலம் கனிந்து ஒழுகும் பேரமர்க் கண்ணாரை முதன் முதலில் சுவைப்பதே இயல்பாய்க் கொண்டவன். இவனால் முறையில் வழி கன்னிமை அழிந்தாரையே பிற இளைஞர் தார மாய்க் கொள்ளச் செய்வான். புதிது உண்ணும் தன்மையன். தன் எச்சில் தான் உண்ணான். எனவே நாட்கொரு நங்கை என நலம் துய்ப்பது ஆயினான். இவனறியா வகை எவரேனும் ஒரு பெண்ணை (இவன் சுவையாமுன்) மன்றல் முடிப்பரேல், கொண் டானை, கொடுத்தாரை கூர்வாளால் உயிர் முடிப்பான்.

இவனுக்கு அமைந்த அமைச்சன் யூசறுகு என்பான் நின்ற சொல்லன்; நீடு தோறினியன்; கலை வல்லாளன்; காலம் அறிந் துணர் நீதியன்; உலகும் மயங்கும் எழில் உடையவன். அறம் தவறான். அல்லன செய்யான். இவன் தன் வேந்தனுக்கு தான் உரைத்தன விழல் நீராகக் கண்டான். எனவே நல்லுரை தவிர்ந் தான். நல்லான் தீம்பால் நிலத்து உகலாமோ?

''கெடுப்பாரின்றியே கெடுக இவன்'' என்ற முடிவுக்கு வந்தான். தற்சார்ந்தார் பெண்களேனும் இத்தகவில்லான் தவிர் கில்லான். வெளிச் சொலல் ஆற்றாது, புழுங்கிய மனத்தர் தளத்தர், தானைத்தலைவர், பிற அமைச்சர்கள், யூசறுகு எனும் இவனாலேயே நலம் விளையும் என நம்பினர்.

அவ் எமன் தேயத்து, குத்திரக் குணத்து ஜின்கள் கொடுமை செய்தன. நாட்டவர் அமைச்சனை அணுகி ''இதற்கு என்கொல் செய்வோம் இனி?'' என வினவிட,''அஞ்சல். ஆவன செய்வோம்'' என்று ஆறுதல் கூறி அனுப்பினான்.

இந்நல்லான் கானமர் வேட்டம் கொளின் இட்ட கண்ணியில் ஜின்கள் மான் உரு மேவி சிக்கும். மான் ஊன் உண் நசையில் சிக்கிய அவற்றைக் கொல்ல முனையில், பண்டை வடிவம் மேவி ''மான் அலம் நாங்கள். உன் முகமாண் நலம் காணவே சிக்கி னோம்'' என்று கூறிப் பறக்கும்.

அவமே செய்தொழுகும் அலவல் ஜின்கள் தலைவன் ''றிபுனு கைத்''. ஜின் இனத்திலேயே ஆற்றலில், அழகில் மிக்கார் இவனினும் எவரும் இலர். இவன் செய்தவப்பயனாய் அமைந்த செல்வி 'உமையிறத்'.

''உமையிறத்'' நேரில் கண்டார் உறக்கமும், ஊணும் நீத்து தோள் தோயக்கருதும் நசையினர் ஆகி காமப்பித்து ஏற ஊன் உருக உடல் உருக மெல்ல மெல்ல இல்லாகுவரே!

''றிபுனுகைத்'' தேனமர் சோலையில் மணி மாடமனை ஒன்று இயற்றி அங்கு தன் மகளை ஏவற் சிலதியர் இகுளையர், காவற் பெண்டிர் சூழ வைத்தான்.

வரம்பில் வனப்பினான் ''யூசறுகு'' வனத்திடை வயவர் சூழ வேட்டம் போயினன்.

விரைந்துசெல் பரிமா ஊர்ந்தனர் சென்றார்.

வேட்டம் முடித்துத் திரும்பும் பொழுது 'யூசறுகு' இவர்ந்த பரி, இனத்திடைப் பிரிந்து ஓடல் உற்றது.

வந்து சேர்வார் என்ற நம்பிக்கையில் உடன் போந்தார் நகர் புகுந்தனர்.

நிலன் குழிய கொட்டிப் பரந்த பரி பின் நடை மெலிந்து சோலை ஒன்றை அடைந்தது.

பகல் செய்வான் மறைந்தான். பாய் இருள் சூழ்ந்தது. 'இரவினில் இங்கு வைகி விடியலில் நகரம் சேர்வோம்' என்று எண்ணினான், இருந்தான்.

நள்ளிருள் யாமத்தும் உறங்கல் செல்லாத் திறங்கொள் ஜின்கள் மகிழ்வுடன் பேசுவன கேட்டான்.

இருளூடும் பொருளை இனம் தெரிய வல்ல ஜின்கள் மரத்தடியில் மனிதன் கண்டு, 'எவ்வாறு இவண் வந்தான் இவன்?' என்று அறிய அவாவி அங்கு அடைந்தன.

கஞ்சம் நிகர் செஞ்செ(வ்)விய சீரொளிய முகம் கண்டு தம்மை மறந்து தாளில் விழுந்தன. 'ஐய! நீவிர் யார்? பொன்னவிர் மேனிச் சுடர் முக ஒருவ! உம்மைப்போல் யாண்டும் காணோம். மாண்டக்கோரே! ஏதுபதி? ஏது பெயர்? ஏதுவரவு?'' என வினவின.

ஊரும், பேரும், வரவும் உரைக்கக் கேட்டன. அழகெலாம் ஒருங்கே கண்டு ஆற்றொணாத் திகைப்பில் மூழ்கி ''செய்தவம் மிக்க வானவரேயோ, பிறரேயோ?'' என வியந்து ''பெருந்தவம் செய்தோம் யாம் உம்மைக் காண'' என்று கூறி மணி அணித்தீபம் கொணர்ந்து வைத்து 'உண்டு பசி தீர்ம்' என ஒண்சுவைக் கனிகள் தந்தன; பக்கலில் சார்ந்தன; பணிவுடன் நின்றன.

'வேண்டுவ பிறவும் உளவோ?' என அவை வினவ, "உம் ஆடல் பாடலில் அவா கொண்டுள்ளேன். செய்திரோ?" என வினவினான்.

ஜின் கணக்கலைஞர் திரண்டனர், அங்கே. பல்லியம் இசைப் போர், பலர் சேர்ந்தனர். காட்டரங்கம் ஆட்டரங்கம் ஆனது. கவிந்தகார் இருள் துரந்த மணி விளக்கு ஒளியில் குரல் வாய்ப் பாணன் பாடல் இசைத்தான்.

ஒன்பான் சுவைகளைப் பிண்டியில், பிணையலில், எழிற்கை யில், தொழிற்கையில், அசைவுறு கண்களில், துடிப்புறு இதழ்களில், ஒசியும் இடையினில், மென்மலர்ப் பதங்களில் காட்டி நடித்தன.

'நிலைதரும் சிள்ளோசை நெடிய காட்டில் ஆடல் பாடல் அமைந்தது எவ்வாறு?' என ஒலி செவிமடுத்த ஒண்டொடி மாது மணிமாடத்துப் போந்து எட்டி நோக்கினாள்.

ஜின்கள் புடைசூழ நாப்பண் நாயக மணிபோல் விளங்கிய தகவாளனைக் கண்டாள். 'ஆடவர் திலகம் போல்வான் இவனே' என்று கருதினாள். கண் வழி நுழைந்து கருத்தில் புகுந்தான். தன் வயம் இழந்தாள். கடல் அன்ன காமம் உழந்தாள்.

எதிர்பாரா வகையில் இவன் பார்வையும் மாடம் நோக்கியது. வைத்த கண் வாங்கிலன். பருகுவன் அன்ன அருகா நோக்கமொடு நன்னெடு நேரம் நோக்கிக் கிடந்தான். பின் இருவரும் தம் உணர்வு பெற்றனர்.

"சேயிழையார், யார் இவர்?" என வினவி அவள் வரலாறு அறிந்தான்.

மனம் என அமைந்த தோழியரால் யூசறுகு பற்றிய செய்திகள் அனைத்தும் ஜின்கள் கூற அவள் அறிந்தாள்.

கதிரவன் குணதிசை மேவினன். இருவரும் அரிதில் நம் நிலை மேவினர்.

"வேற்று வரைவுக்கு இடம் கொடேன். என் கொங்கை அந் நல்லார் அல்லார்தோள் சேரற்க" என்ற திடமுடிவுடன் இருந்தாள்.

நாள் சில கழிந்தன. கனவினும் அந்நங்கையையே எண்ணி வாடும் யூசறுகு தன் நட்பாய் அமைந்த சில ஜின்குலப் பெரி யாருடன் கூடி "றிபுனுகைத்" பால் நண்ணி, "உம் தவப் புதல்வி 'உமையிறத்' தன்னை நல்கி நலியும் என் உயிர் காத்திரோ?' எனக் கோரினான். றிபுனுகைத் இதுகேட்டு உளம் பொருந்தினான்

"கொள்ளென் பிறரை. உள்ளுவது அவரையே" என்ற முடிவில் இருந்த கோதை நல்லாட்குக் கொற்றவன் 'றிபுனுகைத்' வினவிய வினா மகிழ்ச்சியே விளைத்தது.

நாணம் அடர, குழல் சுவல் பிறக்கிட்டு, கால்நகத்தால் நிலம் கீறி, "உம் எண்ணம் என் எண்ணம்" என்று நயப்பட தன் எண்ணம் தெரிவித்தாள்.

நாள் குறித்தனர். நகர்க்கு அறிவித்தனர். மலரால், மணியால் மாளிகைகள் அலங்கரிக்கப் பெற்றன. வீதி அடைக்கப் பந்தரிட்டனர். புதுமணல் பரப்பினர். நீர் தெளித்தனர். பறைபட, பணிலம் ஆர்ப்ப, மடவியர் நடனம் ஆட, தேனிசை வழங்க, ஊர்தி ஒன்றில் நடுவில் அவன் இருத்தி ஊர்வலம் வந்தனர்.

வீதிவாய் இருமருங்கும் வேளை வென்ற விழிச்சியர் திரண்டனர். சாயலும், நாணும், நிறையும், கலையும் வளையும், தன்னையும் இழந்தார் சிலர். வதன மதிபூத்த பூங்குவளைக் காட்டிடையே போயினான்.

நல்லாசனத்து நாப்பண் இருத்தினர். கற்பினை, கவினை, அங்கண் உலகத்து அரம்பை மின்னாளை, மங்கல நல்லமளி ஏற்றினார்.

இருபெருங் குரவரும் ஒரு பெருநாளில் "உமையிறத்" மண அணி காண மகிழ்ந்தனர்.

அதிர்கடல் உலகின் அல்கு இருள் அகற்றும் கதிர் இரண்டும் ஒருங்கு இருத்திக் கண்டனர்; உவந்தார்.

தாதலர்த் தாரான் யூசறுகு மாதர்ப்பிறை நுதலுக்கு மாலை அணிவித்தான்.

மண அறை புக்கார். எண்ணத் தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்ணில் நிலையாமை கருதினர் போல்.

ஜின்கள் வேந்தற்குத் தானும் ஓர் அமைச்சன் ஆகி அவ்விடை மனைவி உடன் வாழ்ந்தான்.

தன் தேயத்தார் ஜின்களால் பெறும் துன்பமும் மாற்றினான்.

இருவர் பெறும், பெரும் பேறாக இவன் கவினும் அவள் ஒளியும் ஒன்றாய்ப் படர்கொடி நிகர்க்க பைங்கிளி ஒன்று பிறந்தது.

உலகத்து எழில் திரட்சியாய் அமைந்த அக்குழவி பல்கீசு எனப் பெயரிடப் பெற்றது.

ஈன்றார் இட்ட பெயர் 'பல்கீசு' என்பது. ஆன்றோர் அக்குழவி யின் அந்தமில் அழகு கண்டு "சூறத்துல் எமினா" எனப் பெயரிட்டு அழைத்தனர்.

"எமன் தேயத்து இறைவன் மலர்" என்பது அதன் பொருள். 'என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும் நின்று அலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மை கொள் தெய்வ மண மலர்' ஆகிய அப் பெண் மகவு இருந்து தவழ்ந்து நடைபயின்று, மழலை கிளத்தி வளர்ந்தது.

ஆண்டு சில கழிந்தன, தகவு உறு கிழமையிற் காண்டகு சிறப்பின் 'உமையிறத்தி'ற்கு.

பல்கீசு பேதைமை நீங்கிப் பெதும்பை நிலை சேர்ந்தபோது ஈன்றதாய் இழந்தாள்.

தாயும் தானே ஆகித் தாங்கும் கடப்பாடு அந்த கலைவலாற் சார்ந்தது. தாய் கையில் வளர்ந்திலள்: வளர்ந்தது தவத்தால் என்றானது.

முலை முகம் செய்தன; முள் எயிறு இலங்கின; தலைமுடி சான்றது; உடலின் மாற்றத்தால் நாண் மிக்கது.

முகைமொக்குள் மலர் நிலை பெற்றது.

ஒருநாள் தன் தந்தை யூசறுகு நோக்கி "எந்தாய்! நமக்கு என ஒரு நாடு இருக்க, இங்கண் உறைதல் இழுக்கன்றோ? அவ்விடத்து மனை அமைத்து வாழ்தல் நன்றன்றோ? யாது நும் கருத்து?" என்றாள்.

யூசறுகு உடன் விடை இறுத்திலன்; சிந்தித்தான்.

"உண்மையே! எல்லா வளங்களும் உடைய நாடு நம் நாடு எமன். சுவன பதியிலும் மேம்பட்டது நம் சபபுநகர்.

ஆனால், ஆள்வோன் நல்லன் அல்லனே. சபபுநகர்ப் பெண்களில் எவரும் இவனால் கறைபடாமல் இரார். கடிக்கும் வல் அரவும்கூட ஓர்கால் மந்திர வயப்படும். இவன் அதனினும் கொடியன். வழி படுவோரை வல் அறிகில்லான். பிறர் பழி கூறுவார் மொழியே தேர்வான். அவன் கைப்புகுந்து சீரழியாதவை பெண் ஓவியங்களும் பெண்டிர் சிலைகளுமே!

கார்கொண்ட குழலினார்கறைகொண்ட உடலினார் ஆயினர். ஏன்னை அவன் ஏதும் செய்திலன் எனினும் வலிய பற்களின்

இடையே சிக்கி கடிபடா வகையில் துவண்டு நெளிந்து கொடுத்து நலன் கொளும் நா போல்வேன் நான். நா இழந்தேன்.

நாம் நம் நகர் குறுகின் அந்த ஆணவன் உன் காணில் அகற லும் உண்டோ? கொண்டே தீர்வான். அரும் பெறல் மகளே! அந்தப் பாவிக்கு ஈயவோ உன்னைப் பெற்றேன்?'' என்று கூறி வருந்தினான்.

''அப்படி ஆயின் தலைநகரில் குடிவேண்டா. ஆறு அடுத்த சிற்றூர் ஏதாவது ஒன்றில்....'' என்று கூறி முடிக்கும் முன்னரே'

''எங்கே இருந்தாலும் என்? அவன் ஒருநாய் மோப்பதில் வல்ல வன். அறியாமல் போவானோ? அடையாமல் போவானோ?'' என்று சொல்லி மறுத்தான்.

''ஈனம் அணுகாது; இறைவன் காப்பான். சபபு நகர் எல்லையி லேயே மாளிகை அமையும். என்னையும் காத்து, குலமானத் தையும் காத்து நிற்பேன். அஞ்ச வேண்டா. ஆவன செய்க. இங்கு நான் இரேன். இது உறுதி'' என்று திடம்பட உரைத்தாள்.

செய்வது ஓர்கிலன்; சிந்தைத் தெளிவிலன். மகள் உரை மறுக் கவும் மனம் சிறிதும் இலன். சபபு நகர் எல்லையில் மாளிகை அமைத்தான். ஜின் குலத்தவர் திரண்டு பணி செய்தனர்.

பிறப்பிற் குன்றா சிறப்புடை மடந்தையர் சிலவரையும் நரை விராவுற்ற செம் முகச் செவிலியர் சிலரையும், முடலை யாக்கை முழுவலி ஜின்கள் சிலரையும் அங்கு அவள் துணை ஆக அமைத் தான்.

பல்கீசு இத்தகைய சூழலில் இனிது இருந்தாள்.

வீழிக் கனி இதழ், ஆழித் தடங்கண் பல்கீசு இருப்பினைக் கோல் கோடற்கே பிறந்த சுறாயிகு அறிந்தான்.

**30. பல்கீசு அரசுரிமைப் படலம்**

அவன் ஒற்றர்கள் ''அவள் இணை அழகி அகிலத்து இலள். அடையத் தகு அரும்பெரும் பொருள் அவள்'' என்று கூறி ஆவலை வளர்த்தனர். கயவுகொண்டு எழுந்த மோகத்தீயும் வடவையாய் வாட்டிற்று. ''சுறாயிகு வாழ்வு இச்சுந்தரியால் முடிவுறல் வேண்டும்'' என்று விதி இருப்பின் மாற்றவல்லார் யார்?

முறையில் வழி முத்தன்ன மூரலார் நலம் துய்ப்பது, தானம் கல்வி சீர் குலச்சிறப்பு அனைத்தையும் அழித்து பரகதியையும் மாற்றும். அருநரகத்து ஆழ்விக்கும் அன்றோ?

தெரிந்தே தீ வீழ்வாரைத் தெருட்டும் நல்லார் யார்?

சோர் பதன் ஒற்றி, வெம்பரி ஊர்ந்து, வீரர் சிலவருடன் பல்கீசு வைகும் மாளிகை அடைந்தான்.

''ஆர் ஈங்கு உள்ளார்? அறிந்து வருக!'' எனத் தன் ஏவலர்ப் பணித்தான்.

காவல் மேவிய கலி கெழு ஜின்கள் இருப்பன அறியாது, அடையா நெடுங்கதவ அணி மாளிகையினுள் கேளாது புக்க; ஆவ் ஏவலர்களைப் பற்றி இழுத்து வெளியிடைக் கல் பரவிய தளத்து, மோத எறிந்து, கதவம் ஓங்கி அறைந்து மூடித்தாழ் இட்டன.

''கேளாது புக்க பிழை பொறுப்பீர். இங்கு வாழ்பவர் யார்? அறியலாகுமோ?'' என்று கொண்ட துன்பத்தையும் பொறுத்துக் கொண்டு வினவினர்.

''ஜின் குலத் தலைவர் ''றிபுன்னுகைத்'' பெயர்த்தி. உங்கள் நாட்டு மதியூகி யூசறுகு கண்மணிப் பல்கீசு இங்கு இருப்பவர். தெரிந்து கொண்டீரல்லவா? இன்னமும் ஏன் இருப்பது?'' எனச் சினந்து கூறின.

விழுந்து அடித்துக் கொண்டு ஓடினர். செய்தி செப்பினர். ''சுறாயிகு'' செம்பாகம் வெற்றி பெற்றதாகவே எண்ணினான். மகிழ்ந்தான்.

அமைச்சன் 'யூசறுகு' அழைக்கப் பட்டான்.

மரபுளி வணங்கி, மன்னர்ப் பக்கல் நின்றவனை, நெடிது நோக்கி, அமரப் பணித்து,

''உமக்குத் திருமண வயதில் மகள் ஒருத்தி இருக்கின்றாளாம். பெண்ணுக்குப் பெண்ணே பேராவல் கொள்ளும் பேரழகி படைத்தவளாம். அவளை ஊர்க்கு வெளியில் தனிக்குடி இருப்பில் வைத்துள்ளீராம். இவை எல்லாம் ஏன் எனக்குத் தெரிவிக்கவில்லை?'' எனச் சினக் குறிப்புடன் வினவினான்.

''அம்மாளிகை அமைக்க நம் நாட்டுக் கருவூலத்திலிருந்து ஒரு குன்றிமணி அளவிலேனும் பொன் கொண்டதில்லை. ஜின்கள் குலத் தலைவன் பெயர்த்தி அவள். பல்கீசு என்னும் பெயரினள்'' என்றான்.

''ஏன்? அவள் ஏதோ அயல் மகள் போல் பேசுகிறீர்? உம் மகள் தானே அவள்?

அமைச்சர் தம் மகளை அரசர்க்கு அளிப்பதும், அரசர் மகளை அமைச்சர் மணப்பதும் உலகில் நடவா நிகழ்ச்சிகள் அல்லவே?

நேரிடையாகவே கேட்கிறேன். பல்கீசு என் மனைவி ஆக ஆவன செய்க. ஒல்லையில் இத்திருமணம் முடிந்தே தீர வேண்டும்' ஆணை நமது. அகல்க'' எனச் செருக்குடன் கூறினான்.

மூண்டெழு துயரத்தை உள்ளத்தடக்கி ''எதற்கும் அவளை ஒரு சொல் கேட்டு...'' எனக் கூறு முன்னரே,

''நன்று. செய்க அவ்வாறே'' எனக் கூறி அனுப்பினான்.

''தன் மகள் அரசமாதேவி ஆவதை விரும்பாதார் ஆர்? உலகியல் அதுதானே. யூசறுகும் உடன் படுவன். பல்கீசும் மறுக்க மாட்டாள்'' என்று தணியாத தன்னம்பிக்கை கொண்டான்.

யூசறுகு,''அன்றே சொன்னேன். கேட்டிலை. கேடு வந்துள்ளது. இன்று அவனுக்கு உன்னை மணம் முடிக்க வேண்டுமாம். என் செய்வது?'' என்று கலக்கம் மிக மகளிடம் கூறினான்.

''கவல வேண்டா! 'மாலை புனைவள்' என்று மெய்போல் சொல்க. அவன் ஆசையைக் கொண்டே, அவனை அழிப்பேன். ஐயம் வேண்டா. துணிந்து சொல்க'' என்று சொல்லத் தேறி சுறாயிகு முன் சென்றான்.

''அணங்கும் அகம் ஒப்பினாள்'' என்றான்.

கேட்டனன் கிராதகன். கிளர்ந்து எழும் உவகையால் உடலம் பூரித்தான். அதனால் கீழ்மகன் அவன் அணிந்த சட்டை கிழிந்தது.

உறுவது காட்டும் உற்பாதம் போல் அமைந்த நிகழ்ச்சி இது.

கொடுங்கோற்கோ மணச்சிறப்புயாவும் செய்தனன். இளைஞர், நண்பர், வேதியர், அரசர், தத பரிசனர் சூழ, சங்கம் முழங்க, மேளங்கள் ஆர்க்க, திகழ்ந்து எழில் குலவு தன் மாளிகையினில் யூசறுகு ஒண்டொடியை வதுவை செய்தான்.

தன் நேர் இல்லாத தையலாள் தன் வயம் ஆனதால் தலை தடுமாற்றம் பெற்றான். பரிமா விரைய, பரிவாரம் சூழ, அரசர்க்கு உரிய விருது முதல உடன் வர அவள் வாழ் மனையை நோக்கிப் புறப்பட்டான்.

பல்கீசு கூறிய படி, யூசருக்கு "ஐய! என் மகள் ஜின் குலத்தவள். இத்துணைப் பரிவாரமும் காணில் அச்சம் மேவுவள். தனித்து இருந்தே பழகியவள். கூட்டம் காணில் வெருவும் இயல்பினள்.

எனவே உம் பரிவாரத்தை நெடுந்தொலை நிறுத்தி நீர் மட்டுமே வரவேண்டும்" என்று அரசற்குச் செய்தி அனுப்பினான்.

சூழுறு தளத்தரைத் தொலைவில் நிறுத்தி ஏவலர் எவரு மின்றி தனித்துக் கட்டக எழுநிலை, ஏழ்வாயில் மனையின் முன் வாயில் அடைந்தான்.

வண்ணச் சுண்ணம் வாரினர் தூவி, முருக்கவிழ் மலர்களை நெருக்க இறைத்து, வாயில் வந்தானை வரவேற்க ஆலத்தி சுழற்றினார்.

செந்நிற அயினி நீர் 'உன் குருதி இவ்வாறே சுழியிட்டுத் தேங்கும்' என்ற குறிப்பில் அமைந்தது.

அடுத்துள ஐந்து வாயில்களிலும் இவ்வாறே அணங்கனார் ஆலத்தி சுழற்றி வரவேற்றனர்.

ஆலத்தி சுழற்றியார், அருகு வரு மகளிர், சூழுறு அணங்கனார் எவரையும் இவனது தீக்கண்கள் கதுவாமல் இல்லை.

பாழாம் மனத்தினன் ஏழாம் வாயில் எய்தினான்.

அங்கொரு அரிவை ஆலத்தி சுழற்றி அவன் முகம் நோக்கி "இனி உம் காலம் அக்கட்டிலில் கழியும்" என்று முழுமண மலர் களால் அலங்கரித்த பாடமை சேக்கைப் பாயல் காட்டினாள்.

வன்பனைக் கரங்களைத் தன் வளைக் கரங்களால் பற்றி அழைத்துச் சென்று அன்னத்தூவி அமன்ற அம்மெல் அணையில் அமர்த்தினள், அமரா முகத்தினள்.

"இருத்திர் ஈண்டு. இன்னமுதம் வரும்" என்று கூறி அடுத்த அறை வாயிலில் அழகு மறைத்த அணிகளோடு, ஆடைகளோடு இருந்த பல்கீசுபால் சென்று, "வந்தான்; தீர்ந்தான் வஞ்சகன்." என்று கூறினாள்.

பல்கீசு அவளிடம் "நாங்கள் உண்ண நெய்யுடை அடிசில், நறியன கறிகாய், நறவு இவை அனுப்பிவை. தவிர வாடை விரவினும் வெருவி வீழச் செய் நஞ்சு கலந்த பானம் ஒரு வள்ளத் திலும், கண்டும் தேனும் கலந்து சுண்டக் காய்ச்சிய பால் பிறி தொரு வள்ளத்திலும் கொண்டுவா.

அன்னதை அவன் முன்வை, பின்னது என்னது. இதனை மறவாதே'' என்று செவியிடைக் குறுகிச் சொன்னாள்.

அனம் என இயலி, மென் மெலச் சென்று, கட்டில் குறுகி பக்கல் அமர்ந்து, பதகன் முகம் நோக்கினாள்.

அவன் கரம் இவளைத் தீண்டு முன்னர், ஒருத்தி சேடி அவ்விடை அடைந்தாள். அவ்விருவர் முன்னர் அகல் உயர் பீடம் அமைத்து அதன்மேல் மென்துகில் விரித்து, வாள் நிற விசும்பில் கோள் மீன் சூழ்ந்த ஞாயிறு போல பொற்கலம் பல பரப்பி, பல் வேறு அடிசில் இட்டு,

''வந்தன உணவு; உவந்தினிர் உண்க'' என வேண்டினாள்.

''கொள்க பெரும!'' எனப் பல்கீசும் கூறினாள்.

அவள் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன், ஒரிரு கவளம் உண்டான். ஏலவார் குழல் மணம் நாசி சார்தர, பேரழகு அமுதம் அருந்தி தேக்கிட்டுக் கிடந்தான். இன்மொழி பேசியவாறு உண்டான்.

இருளையர் அடர் பொற் சிரகத்தில் உண்ணுபானம் கொணர்ந்தனர்.

முன் குறித்தபடியே நஞ்சு கலந்த பானம் அவன் முன்னம் வள்ளத்தில் வைக்கப்பட்டது.

வட்ட வாள்மதி முகத்தினாள் தன் வள்ளம் வாய் வைத்தாள்.

இவனும் எடுத்தான்,விழி உயர்த்தி அவளையே நோக்கியவாறு வள்ளங் கொண்டான்; பருகினான்.

நிறம் பெயர் பானம் கண்டிலன். பருகிய அவ்வளவில் உரை குழறியது; மிடறு எரிந்தது; விழிகள் செருகின; வியர் பெருகியது; உணர்வு ஒருங்கிக் கட்டிலில் சாய்ந்தான்.

வேல் விழி விரைந்து செயல்பட்டாள். இன் உயிர் அனைய தோழியை அழைத்தாள்.

வல் விரைந்து வந்த தோழி.சேலை இடைக்குள் இறுக்கினாள். கழல், ஒலி வளையல்களை முன் கையிவிருந்து முழங்கை வரைத் தள்ளிச் செறித்தாள். கூர்வாள் கைக் கொண்டாள். கூர் விளிம் பிளை உகிர் நுதி புரட்டினாள். கட்டில் நண்ணினாள்; கறுவி னாள்; செருமினாள்; இதழ் கறித்தாள்; அவன் அணிந்திருந்த மலர் மாலைகளைப் புய்த்து எறிந்தாள்.

இழிசினக் கீழ் மகனை ஒரே வெட்டில் போழ்ந்தாள். கண்டம் துண்டுபட்டது. பீறிட்ட குருதி அவள் முகத்தில் தெறித்து செந் நிறப் போர்வை இட்டது.

துள்ளியது முண்டம்; தள்ளினாள் கீழ், துடிப்பும் அற்றது.

செருகிய விழிகள் நிலைக்குத்திட்டு நின்றன. வாய் கோணிக் கிடந்தது. இதழ் கடந்து வெளிவந்த நா பற்களால் கடியுண்டு பொத்தல் கொண்டது.

நுரை முகந்தன்ன மென்பூஞ் சேக்கை தோடார் தோன்றிப் பூ பரப்பியது ஒப்ப இருந்தது.

தந்தையை அழைத்தாள். நடந்தன கூறினாள். கேட்டு, மகள் துணிவை எண்ணி மகிழ்ந்தான், யூசறுகு.

சுறாயிகு முத்திரை ஆழியை விரலின் நின்றும் அகற்றச் செய் தாள். கொணரப் பணித்தாள், கொண்டாள்.

பெருங்குழிப் படுத்துச் சோரிகான்ற நெட்டுடலை அதனுள் புகுத்தி மண் இட்டு மூடினர்.

பல்கீசு தன் தந்தையை நெருங்கி,

"எந்தாய்! முதலில் தானைத் தலைவர் நூற்றுவரை நம் வயப்படுத்தவேண்டும். அதற்காக அரசன் எழுதுவதுபோல் இரு பொய்ம்முடங்கல்கள் எழுதவேண்டும். எழுதி, சுருட்டி இம் முத்திரை மோதிரத்தால் முத்திரையும் பதிக்கவேண்டும்.

தக்கவர் வழி இவ்விரண்டினையும் தானைத் தலைவர்பாற் சேர்க்கவேண்டும். என்று கூறினாள். தந்தையின் செவி சார சில கூறினான்.

முதல் முடங்கலில் பொதிந்த வாசகம் இது.

"தளமும், தானைத் தலைவரும் விருந்து செய்து உண்டு பின்னர் நம்பால் வருக."

ஓர் ஒற்றன் வயம் இது ஈந்தாள். அவன் தன் தலைவன் பால் தர, பொதிந்த முடங்கல் முத்திரை கண்டு, 'அரசன் ஆணை' என சிந்தை தெரிந்து அதனைத் தானைத் தலைவர்க்கு அறிவித்தான்.

கருவூலக் காப்பாளர்க்கும் அதனைக் காட்டி விருந்துக்கு வேண்டுவ தொகுக்கக் கூறி, மடைவலாளர் சிலரை ஏவி அறு சுவை அடிசில் ஆக்கப் பணித்தான்,

தலைவர் ஆணைப்படி திரண்ட தளத்தார் உவட்டெறிய உண்டு தேக்கிட்டுத் தம் மனை சென்றனர்.

தானைத் தலைவர் நூற்றுவர் மட்டும் ஒரு திரளாக யூசறுகு அரண்மனை வாயிலை நிலையுற அடைந்தனர்.

ஆன்ற கீர்த்தி "யூசறுகு" தன்னை அங்கு கண்டு, வணக்கம் செய்தனர்.

நல்வரவு கூறி அமர்த்தி "அரசன் ஆணை பொறித் தது இம்முடங்கல். உங்களுக்கு அவர் செப்பக்கருதிய செய்தி ஒன்று இதனுள் உள்ளது.

'மண விருந்து முடிந்த பின் நம் தானைத் தலைவர் இம்மனை யிடை நம் ஆணை வழி சார்வர். அனைவரும் வந்தபின் இதனை அவரிடம் சேர்ப்பிக்க' என்று கூறினார் அரசர்.

"இப்போது அவர் ஆழ்ந்து துயில்கிறார்." என்று சொல்லி அம் முத்திரை முடங்கலைத் தலைவன் பால் ஈந்து,

"வாசித்து ஆராய்ந்து அறிக" என்று கூறி அமர்ந்தான்.

தானைத் தலைவன் முடங்கலின் முத்திரை நீக்கி செய்தி படிப்பது ஆயினன்.

"விருந்துண்டபின் உம் தம் துணைவியர் தம்மை ஏற்ற நம் படுக்கை அறைக்கு அழைத்து வருக. விட்டு அகல்க. நம் மண விழா சிறப்பாக அமையவும், பொழுது நன்கு போக்கவும், அவர்கள் துணை எமக்குத் தேவை. இது நம் ஆணை!"

கேட்ட கூட்டத்தினரிடையே சலசலப்பு மூண்டது.

வெகுளி மிக்கனர்; வெடிபடு சொற்கள் விண்டனர்; துடித்த னர்; ஆர்த்தனர்; அடர முற்பட்டனர்.

"இது நாள் வரை இவன் செய் கொடுமைகள் அனைத்தும் பொறுத்தோம். இன்று நமக்கே கொடுமை செய்யத் துணிந்து விட்டான். கொண்டவனைவிட்டு நம் பெண்டு இவனுடன் ஒக்க உண்டு மகிழவேண்டுமாம். 'உன் மனைவியை எனக்குப் பள்ளி யறைக்கு உதவு' என்று ஓர் அரசன் ஆணை இடுவது அதிசயம் தான்.

இவன் என்று அரசன் ஆனானோ அன்று முதல் நேயம் கெட்டது; ஞாயம் கெட்டது; தேயம் கெட்டது. முறை வழுவா

இவன் முன்னோர் பெயரும் கெட்டது. அவர்கள் ஈட்டிய புகழ் அனைத்தும் கெட்டது. கரும சண்டாளன் காயத்தை நிலை என்று கருதி மனம் போன போக்கில் நடப்பதா?

இவன் காம இச்சைக்கு வரம்பே இல்லையா? பெண் பிறந்தோர் இவன் படுக்கை அறையைப் பகிர்ந்து கொள்ளவே பிறந்தவர்களா?

கொலையினும் கொடியன். சொல்லவும் தேறான். தானும் தெளியான். எமன் நாட்டு எம்மன் எமக்கு எமன் ஆனான் என்பதா?

அழியும் நாள் வந்துவிட்டது போலும். அரசனா இவன்? சீ... தூ...அவன் நல்விருந்து நமக்கு வழங்கியது நாம் அவனுக்கு நம் பெண்டிரை வழங்குவதற்காகவா?''

உரப்பினர்; தெழித்தனர்; தம் துடைகளில் ஓங்கி அடித்தனர்; மீசை மயிர் துடித்தனர்; கண்களில் கனல் கான்றினர்.

அனைத்தையும் கேட்டவாறு யூசறுகு இருந்தான்.

உறக்கம் கலைந்து எழுந்து வருபவள்போல் பல்கீசு அவ்விடை அடைந்தாள்.

''ஏன்? என்ன? ஆரவார ஒலி எதற்கு? என்ன நடந்தது?'' என ஏதும் அறியாதாள் போல அவர்களை வினவினாள்.

''இந்தப் பாவி அரசுக் கட்டில் ஏறிய நாள் முதல் அளவில்லாப் பெண்கள் கற்பை அழித்தான். இதுநாள் வரை கன்னிப் பெண் களைக் கண்டால் விடான் என்று மட்டுமே அறிவோம்.

இன்று அவ்வெல்லை கடந்து எம் மனைவியரையும் அல்லவா உம்முடன் துணை இருக்க, இன்பம் துய்க்க, அழைக்கின்றான் அழைத்து வந்து இவ்விடத்தில் விட்டு அகலவேண்டுமாம். ஆணை இடுகிறான்.

உம்மிடம் இருந்து வந்த இப்பத்திரத்துள்ள செய்தி இது'' என்று சினம் மிகக் கூறி அம்முடங்கலை ஓங்கித் தரையில் எறிந் தான் தானைத் தலைவர்த் தலைவன்.

''காலம் கடந்த சினம். தலைவலியும் கால் வலியும் தனக்கு வந்தால் தெரியும் என்பர். உம் மனைவியரை அழைத்தமையால் தானே ஆத்திரப் படுகிறீர்கள்?

எண்ணிப் பாருங்கள்,நீங்கள் நினைத்தால் விண்ணைஇடிப்பீர். வெற்பைப் பொடிப்பீர். ஆனால் இக்கொடுமைகளை இத்துணைக்

காலம் பொறுத்தது ஏன்? வாயடைத்துக் கிடந்ீரே? எதனால்? அச்சமா? ஆற்றலின்மையா? சிறிது சிந்தியுங்கள்...இதோ வரு கிறேன்'' என்று சொல்லி உட்புகுந்து சற்று நேரம் பொறுத்து மீட்டும் வந்தாள்.

பாதகன் ஆழ்ந்து உறங்குகின்றான். எனக்குப் பழி நேர்வதாயி னும் ஆகுக. கொண்டானைக் கொலை குறித்தாள் என்று குரை கடல் உலகம் தூற்றினும் தூற்றுக. உங்கள், ஏன் நம் நாட்டு நலம் கருதியே நான் இது செய்யத் துணிந்தேன்.

நானே என் கையால் அவன் உயிரைப் பறித்துவிடின், இந் நாட்டு அரியணையில் என்னை அமர்த்தி, அரசி ஆக்குவதாய் உறுதி கூறின், நானே கொலை மேற்கொள்வேன்.

என் தந்தை நாடு எமன். அது இடர் நீங்கவேண்டும், என்ற தணியாத ஆவல். உம். சொல்க. உறுதி அளிப்பீரா?

அவனது ஆழ்ந்த உறக்கம் மீளா உறக்கம் ஆகுக'' என்றாள்.

நிரந்து, இனிது சொல வல்ல அவள் உரையைக் கேட்டார். விரைந்து தொழில் கேட்க விழைந்தார்.

அனலம் காலும் கானலில் அலைவார் அமிழ்து உகு தீ(இனிய) மழை பேரளவில் பெய்யக் காணில் பேணாது போவாரோ?

''அனை அனையீர். நீரே செருக்கில் நீர் கூறியவாறே அரி யணை அமர்த்தி சுடர் முடி சூட்டித் தொழுவோம்.'' என்று ஒரு மித்த குரலில் கூறினர்.

''நன்று-செப்பிய விதமே பத்திரம் ஒன்று தீட்டிச் சேர்ந் துடைத் தலைவர் எல்லீரும் ஒப்பமிட்டுக் கையில் உதவுக'' என்றாள்.

ஒப்பினர்; ஒப்பமிட்டனர்; ஒண்டொடி மலர்க்கையில் உவந் தனர் அளித்தார்.

பேரமர்க்கண் பல்கீசு இது பெற்றபின் உள் சென்றாள்.

காத்திருந்தவர் கணப்பொழுது ஊழியாகக் கருதினர்.

ஐந்நாழிகைப் பொழுதின் பின்னர், பல்கீசு அரிந்த தலையைத் துகில் கொடு பொதிந்து வெளிப் போந்து பலரும் காணஒரு பீடத் தில் இட்டாள்.

கதிர்வேல் கரத்தார் கண்டார்; களித்தார்; துடித்தார்.

''தாயே! தவமே! நந்தா விளக்கே! மானம் காத்த மங்கையர் திலகமே! அரசு நீர்! அமைச்சுநீர்! ஆனமான சஞ்சீவி நீர்! நீதி நீர்! நெறியும் நீர்!'' எனப் பலவாறாய்ப் பாராட்டினர்.

கொய் தலைக்கிடந்த நான்ற நா கண்ட ஒருவன்''பாகு பொதி பவளத் துண்டம் என சரச வார்த்தை விண்டு அள்ளூற, ஆசை அமுதூற,அபலைப் பெண்களின் அதரம் சுவைத்த நாவே அடங்கி அயர்ந்தனையோ?'' என்றான்.

பிறிது ஒருவன், செருகிய விழிகளைக் கண்டு ''முறை வழி மேவிய எம் துணைவியரின் முகை காண, முறுவல் காண, முயங்கல் காண ஆவலித்துக் காத்திருந்த கண்களே! செயல் ஒய்ந்து போனிரோ? உம்மைக் குழிபட எறும்புகள் அரிப்பதாக''என்றான்.

அவ்வாறு முகத்து உறுப்புகள் அனைத்தையும் குறித்துத் தனித்தனி பழித்துப்.பேசினர்.

''ஊர்க்கு அடுத்த வனத்தில் விட்டு எறிமின்.பழுது கண்டாள் கண்களைக் கழுதுகள் தோண்டி உண்ண, பந்து விளையாடப் பயன்படும்'' என்றான் ஒரு வீரன்.

செத்த பாம்பை அடிக்கும் வீரர்கள். சின அயில் நுனியில் அத் தலையைக் குற்றி ஊரவர் அறிய உடன் பின் தொடர, வீதிவாய்ச் சேர்ந்து ஊர்க்கு அடுத்த காட்டில் எறிந்து நீராடி மீண்டனர்.

பின் பல்கீசை நோக்கி ''அம்மையே! நானிலம் தழைக்க, நாங்கள் இனியேனும் பயன் பல பெருகி வாழ, நாட்டவர் மனம் குளிர, அரசுக் கட்டில் ஏறுமின்'' என வேண்டினர்.

அதற்காவன செய்தல் உற்றனர். பல்கீசு தூநீராடி, துகில் புனைந்து, மணப் பொருள்கள் திமிர்ந்து, குழல் வார்ந்து முடித்து, அணிகள் பூண்டு, வாசமலர்ச் செண்டு ஒன்று கைக்கொண்டு சுடர் மணி ஆதனத்து இருந்தாள்.

யூசறுகு, கூடிய தலைவரிடம் ''முடி புனை முகூர்த்தம்'' இது என்றான். அனைவரும் அரண்மனை அடைந்தனர். ஒலக்க மண்டபத்தின் நாப்பண் நவமணி ஆதனம் நலம் பெற இட்டனர்.

பல்கீசு கைத்தலம் பற்றி மெல்ல அழைத்து வந்த பாவையர் ஆதனத்து இருத்தினர்; பக்கம் சூழ்ந்தனர்.

குழைத்தனர் கவரி; கொற்ற வெண்குடை ஏந்தினர். அணி மணி விளக்கம் தாங்கினர்.

விருது முழக்கினர். தானைத் தலைவர்கள், தகை சால் அமைச்சர்கள் திரண்டனர்; வாழ்த்தினர்.

மும்முரசு அதிர்ந்தன. தானம் தவம் இரண்டும் தங்கி நிலை பெற்றன. முடிசூடிய பல்கீசு,நாட்டு வளம் பெருக்கினாள்; படைத் தளம் பெருக்கினாள். உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினாள்.

வல் விரைந்து காலச் சக்கரம் சுழன்றது. யூசறுகு விண் புக்கான். தந்தையாய், தாயாய், தகவுடைத் துணையாய் இருந்த உறவினை இழந்ததால் வாய்விட்டு அழுதாள். கடமை உணர்வால் கவலை மறந்தாள்.

31. பல்கீசுக்கு பத்திரம் அனுப்பின படலம்

சின்னாட்களிலேயே பல்கீசின் பாட்டன் (உமையிறத் தந்தை) றிபுன்னுகைத் தன் வாழ்வின் இறுதி வந்தமை உணர்ந்து, பல்கீசை வரவழைத்துத் தன் அரசுப் பொறுப்பை அவட்கு அளித்து மாய்ந்தான்.

செய் சடங்குகள் செவ்வன் செய்தாள். ஜின்களில் சிலர் அவள் ஆளுகை ஏற்க மறுத்தனர். அன்பு காட்டி, அச்சம் ஊட்டி, அவற்றையும் பணி கொண்டாள்.

ஜின்குலம் தன் கைவசம் உறப்படுத்தினாள். தந்தை நாடாம் எமன் வந்து ‘உபைய’ கோலும் ஒன்றாக்கி வாழ்ந்தாள்.

சுலைமான் (அலை) அவர்கள் ஒரு நாள், ஒருதிசை, ஒரூர் சேர உன்னினார்.

மங்கல நகர் சாமிலிருந்து பலர் உடன் கூட, காற்றுத் தேவன் கைத்தலத்து ஏந்திய பரமதானி விமானத்தில் ஏறினார்; புறப்பட்டார்.

விரைந்து சென்ற விமான கதிக்கு ஏற்பப் பறவைப் பந்தரும் வேகமாகச் சென்றதால் பரமதானியர் தம் தலைக்கு மேல் பார்த்த பறவை அல்லது பிறிதொரு பறவை பார்த்திலர்.

இறைவனைத் தொழும் நேரம் குறுகவே, விமானத்தை அவ்விடை நிறுத்தக் கூறினார்.

காற்றும் தரைத் தலத்தினில் இறக்கி வைத்தது. தலத்தினில் இழிந்தனர்.

அத்தலம் போல் கொடு நெடும்பாலை இலக்கியத்திலும், இயற்கையிலும், எவரும் கண்டதில்லை.

நபி அருளினால் அவ்விடம் சேர்ந்தார், துன்புறா வகை அமைந்தனர்.

பொன்போலும் கள்ளிப் பொறி பறக்கும் அக்கானலில் வாழ் தர நேரின் உயிரினங்கள் ஊன் உருகி, என்புருகி நீறாகும்.

சுடரோனும் அக்கானல் வெம்மை பொறாதவனாய் விரைந்து ஓடி மேலைக் கடலில் முங்கக் குளிப்பான்.

ஒரோவழி முகில்கள் அங்கு மழை பெயின் விழுந்த துளிகள் அந்தரத்தே வெம்.

கமம் சூல் மாமழை அவ்வெம்மை பொறாது கொண்ட சுமை நீங்கி வெளிறிப் போகும்.

தண் என் இரவில் விண் வழி உலாப் போதரும் முழுநிலவும் அவ்வழி மேவின் நிலத்தினின்றும் எழும் வெம்மையால் மேனி அழன்று முகம் கன்றிப் போகும். இதனையே உலகினர் களங்கம் என்று கூறுவர்.

என்றூழ் நீட, வெம்மை பொறாது, நிலம் வெடிப்புண்ணும். அக்கமர் வழி சுடு சூட்டுக் கதிர்கள் பாய்ந்து, நிலம் தாங்கும் விடையின் மருப்பினைத் தாக்கும்.

வெம்மை பொறாது, அக்காளை தலை அசைக்கும். அதனால் தாங்குறு நிலமும் அசையும். இதனையே உலகினர் நில நடுக்கம் என்பர்.

ஒண் கதிர்த் தெறுதலின் வரை பிளந்து இயங்குநர் வழி கெடுக்கும்.

அந்நிலத்து மணல் துகள் ஒன்று கடல் இடைப்படுமேல் வாரி சுவறிட, அளறுபடும்.

கள்ளிகள் கரிய, வெள்ளில்கள் விண்டு போக, வேல்கள் பொடிந்தன.

இல்லிற்கிசைந்து ஒழுகாப் பெண் கொண்டான் மனம் போல அழன்று விளங்கும் அந்நிலத்தை உள்ளினும் உள்ளம் சுடும்.

இந்நிலத்தில் சேர்ந்த நபி அவர்கள் குதுகுது விளித்து "நீர்த் தடம் உள்ள இடம் அறிந்து வா! வல்லே" எனப் பணித்தார்.

"எகுபீறு" என்னும் பெயர் கொள் அக் குதுகுது அவர் எண்ணத்தை விட வேகமாகப் பறந்து சென்றது.

வானகத்து உயர்ந்து, பறந்து, பின், முன், வலப்பால், இடப் பால் என எல்லாப் பக்கங்களிலும் நோக்கியும், நீர் நிலை காணாது நெடுந்தொலை கடந்து, பின் ஒரு பூவார் சோலை நீழல் எய்தியது.

அச்சோலையில் அமிழ்து விளை தீங்கனிகள் பறிப்பாரற்றுக் கிடந்தன. தடங்களில் வெண்மைச் சிறைப்புள் ஓதிமங்கள் குடி கொண்டிருந்தன.

கண்டு, கண் களி மயக்கத்துக் காதலோடு புக்கது. 'இவ்விடத் தைப் பற்றி நபிகள் இடம் கூறவேண்டும்' என்றும் கருதியது.

குளிர்தரு; தரு நிழல்; நிழல் கனிந்த கனிகள்; நிலன் நெளி ஓடைகள்; ஓடைகளில் ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீர்; வீசும் மென் பூங்காற்று; பூங்காற்றில் விளை சுகம். இவற்றைக் கண்டு உணர்ந்து சிறிது செயல் மறந்தது.

அங்கொரு குதுகுது கண்டது. அக் குதுகுது எகுபீறு நோக்கி "எங்கிருந்து வந்தீர்? நீவிர் யாவிர்?" என வினவியது. எகுபீறும் தன் வரலாறு கூறியது.

"எம் தலைவர் சுலைமான் (அலை) அவர்கள் உயிரினங்கட்கு ஒப்பற்ற தலைவர். காற்றும் அவர் ஆணை ஏற்று அதன் வழி நடக்கும். அவரைப் பகைத்தார் உயிருடன் இலர். ஆக உயிர் நசை யால் பகைப்பாரும் இலர் ஆயினர்.

சாம் நகரில் வாழ்பவர். என் பெயர் எகுபீறு. அவர் தொழுகை நேரம் அறிந்து ஒலுச் செய நீர் நிலை தேடி வரப் பணித்தார்" என் றது.

மேலும், "சரி. உம் பெயர், வாழிடம், நாட்டு வளம் பற்றிக் கூறலாகாதோ?" என வினவியது.

"எம் நாட்டுப் பெண்டிர் நடைக்குத் தோற்று, அன்னங்கள் நல் நீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியும்; மா இருந் தூவி மணி நிற மஞ்ஞை சாயற்கு இடைந்து கான் மேவும்.

மகளிர், அழகால், கற்பால் மேம்பட்டவர். ஆடவர் ஆற்றலில் அறத்தில் தலை சிறந்தவர். எம் நாடு, கோட்டை கொத்தளம், மாடமாளிகைகள் பல கொண்டது. இவை போல் எங்குமே நீர் காண முடியாது.

எங்கள் தலைவி பல்கீசு. அழகு எனப்படுவது, திரண்டு ஓர் உருக் கொண்டது போன்றவர். களங்கமில் மதி முகமாது. ஆடவரி னும். ஆற்றலில் மேம்பட்டவர்.

தாய் வழி ஜின் குலத்தவள். தந்தை வழி மனித குல அறிவு சான்றவள்.

எம் படை வீரரை, நேர் செறுத்தவர்க்கரிது நிற்பிடம், நெடு விசும்பலால் பிறிதும் இல்லையே.

எம் அரசியால் அன்புடன் வளர்க்கப்படும் புள் யான். இப் பொழில் அவர்க்கு உரியது. என் பெயர் இன்பின். எம் நகர் வளம் காண என்பின் வருக'' என அன்பின் உடன் கூறியது.

எகுபீறு ''நீர்த்தடம் கண்டு வரப் பணித்தார். தொழுகை நேரத்திற்கு முன் செல்ல வேண்டும். பிந்தினால் பிழைக்கிடம் ஆகும். பின்னொரு கால் பார்ப்போம்'' என்றது.

அதற்கு,இன்பின்,''எம் அரசி அழகினை நீர் முழுவதும் கண்டு உம் அரசர்க்கு எடுத்துரைத்தால் மிக்க மகிழ்ச்சி அடைவார். பெற லருஞ் சிறப்பினர், ஒருவழி இருத்தல் சிறப்பு அல்லவா? நம் தலை வர்கட்கு நாம்தாம் முன் நின்று மணம் முடிப்போமே'' என்றது.

''அதுவும் சரி. வருக! போவோம்'' என்று எகுபீறு உடன் பட்டுப்பின் தொடர்ந்தது.

அவ்விரண்டும், கோபுரங்கள், பொழில்கள், மாட மாளிகைகள் புரிசைகள், வீதிகள் பல கடந்து சென்றன.

எகுபீறு போகும் போக்கிலேயே யாவும் பார்த்து மகிழ்ந்தது.

பல்கீசு வாழும் பளிங்கு அரண்மனை கண்டது. நவமணித் தூண்கள் தாங்கிய மாளிகை அது.

பொன்னால், வெள்ளியால், பவளத்தால் இயன்ற அறைகள் பல கண்டது.

ஓலக்க மண்டபம் கிளிச்சிலைப் பொன், தகடுகள் பொருத்தப் பெற்றது. நாற்பது முழ அகலம், எண்பது முழ உயரம் கொண்ட மண்டபம் அது.

யாவும் கண்டு 'சிவ்' எனப் பறந்து பள்ளியறை புக்கன. அவ்விடை, அறையிடை அழகி டல்கீசு கண்டு வியந்த எகுபீறு 'மண்ணில் பொன்னுலகம் இந்த நகரம். அரம்பையரும் இவளுக்குச் சேடியாம் தரத்தர் அல்லர். ஐயமே இல்லை.'' என எண்ணியது.

''இவை அனைத்தும் எம் நபி பெருமானார்க்கு இயம்ப வேண்டும். வரவா? விடை தருக'' என வேண்டி அங்கிருந்து எழுந்தது.

இங்கு இவ்வாறாக,

அங்கு

நபி வான் கண்டார். புள் வரக்கண்டிலார். ''நேரம் ஆயிற்று. நீர்த்தடம் கண்டதோ? இல்லையோ? ஏன் வரவில்லை?'' பலவாறாக எண்ணி ஊசலாடுற்றார் உளம். உள்ளத்து அரும்பி கவர்ந்து எழுந்து ஓங்கியது சினம்.

புட்குல வேந்தை அழைத்து, அமைச்சன் கருடனையும் ஒருங்கு கூட்டி, ''இவ்வளவு நேரமும் வந்திலாக் குது குது, எங்கு தங்கி ஓய்வு கொண்டது என்று கண்டு, பற்றி இழுத்து வருக. ஒப்ப நாடி அத்தக ஒறுப்போம் போய் வருக'' என்று ஆணையிட்டார்.

இரண்டும் வேகமாகப் பறந்து போயின. எங்கும் காண்கிலாது அலுத்தன. எமன் தேயம் நோக்கிச் சென்றன.

இடை வழியில் சீழ்க்கை அடித்தவாறு பாடி, ஆடி அசைந்தவாறு முழுதும் உட்களிப்போடு வரும் குதுகுது கண்டன.

''பாடிக் கொண்டா வருகிறாய்? பழுது வந்தது. வா'' என அருகுற்று இரண்டுமாகச் சேர்ந்து அதனை இறுகப் பற்றின.

பற்றிய உகிர்கள் தசையைப் பொதுத்து என்பிலும் பதிந்தன. வலி பொறுக்க இயலாமல் 'எகுபீறு' வாய் விட்டுக் கதறியது.

''அல்லாஹ் மேல் ஆணை. என்னைத் துன்புறுத்தாதே'' என்று கண்களில் நீர் துளிக்கக் கதறியது.

பிடித்த பிடி தளர்த்தின. ஆனால் விட்டில. ''உன் உடல் தசையைப் பிய்த்து சிறு சிறு துண்டங்களாக வெட்டிக் கட்டெறும்புக் குழியில் போடவும், எலும்பு எஞ்சிய உடலைக் கொடு வெயில் உச்சிப் பொழுதில் மணலில் இடவும் வேண்டும் என்று மன்னர் ஒழிவறு சினத்துடன் இருக்கிறார்கள். வா போவோம்'' என்றன,

விரைந்து பறந்து சென்றன. நபி அவர்கள் திருமுன் குதுகுது வைக்கிடத்தின. 'எகுபிறு' ஏதும் செய்ய இயலாது வாய்ப் பிளந்து சிறைகளைப் படபட எனஅடித்துக் கொண்டு தரை மீது கிடந்தது.

சினம் மிக்க நபி,அதன் கால்களை ஒரு கரத்தாலும், தலையை ஒரு கரத்தாலும் பற்றி இழுத்தார்.

''ஐயா! என்னை விட்டு விடுங்கள். வலிய அல்லாஹ்வின் திரு முன் நீர் நின்றிடும் அந்நாளை நினையுங்கள். மெலிய என்னை அடர்க்கக் கருதும் நீங்கள் வலிய அவன் முன் நிற்கும் நாளையும் எண்ணிப் பார்க்க வேண்டாவோ?'' என்றது.

நபி அவர்கள், ''ஒலு* செய்ய நீர்த்தடம் கண்டு வா, என்னில் ஓய்வு கொண்டு காலம் தாழ்த்தி வருகிறாய். எங்கு போனாய்? என்ன நடந்தது? எடுத்துரை'' என்றார்.

''நபி அவர்களே! நெடுந்தொலை அலைந்தும் நீர்த்தடம் கண்டிலேன். ஆனால் உலகத்தில் இல்லாத அதிசயங்கள், பல அற் புதங்கள் ஒருங்குள ஓரிடம் கண்டேன்.'' என ஆதியோடு அந்த மாகத் தான் கண்டன, கேட்டன அனைத்தையும் விண்டது.

கேட்டு, சினம் சிறிது அடங்கி, அதனைக் கைவிட்டு, ஜின் ஒன்றை அழைத்து, ''எகுபிறு உடன் போ! நீர் கொண்டுவா!'' எனப் பணித்தார்.

இரண்டும் சென்று ஒல்லை மீண்டன. கொணர்ந்த நீர் கொண்டு, கை கால் கழுவி, பரமதானி விரித்து, முழந்தாள் இட்டு நெஞ்சுருகி இறைவனைத் தொழுதார்.

தன் செய்கடன் முடித்தபின் ஒரு முடங்கல் எழுதச் செய்தார்.

''பிசுமில்லா'' என்ற இறைவன் திருப்பெயருடன் தொடங்கி யது அக்கடிதம். அதன் வாசகம் வருமாறு:

''ஏகன் நினைவு என்றும் மறவாத சுலைமான் நபி அவர்கள் செழுமுடி அரசு பல்கீசு அவர்கட்குச் செவ்விதின் வரைந்தது இம் முடங்கல்.

தெளிந்து நேர்வழி தொடர்பவர்க்கு எம் பழுதறு சலாம் உரியது ஆகுக.

---

* ஒலு—தொழுகை போன்ற புனித காரியங்கள் நிறைவேற் றப்படுவதற்கு முன்னால் கை, முகம், கால் முதலிய வற்றைக் கழுவுதல்.

எம்மின் உயர்ந்த பார்த்திபர் இவ்வுலகில் இலர். உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை.

புரைதீர் தீன் நெறிப் பொருந்துதல் நன்று. குபிர் நிலை அகற்றி, தவ நிலைக் கலிமா நா இயல் மருங்கில் நவிலப் பயில்க.

சுபம் உயர் சுவன வாழ்வு எளிதில் பெறுவீர். செப்பிய இவைக்கு ஒப்பினிர் ஆயின் எம்மை முறைப்படி காண வருக.

யாம் பைத்துல் முக்கத்திசுப் பதியினில் பாடி கொண்டுள் ளோம்.

அவண் வருக''

முடங்கலைச் சுருட்டி, முத்திரை இட்டு, தூது என அமைந்த தூவியங் குதுகுது அழைத்து, அளித்து, ''பாவை பல்கீசு மாளிகை அணுகு. அவளும் அறியாவகை அவள் கைத்தலத்து இதனைப் பொருத்து.

மாளிகை ஒரு சார் இருந்து நடப்பன தெரிந்து வா'' என்று ஏவி, விமானத்தில் ஏறி, கடிதில் பைத்துல் முக்கத்திசு எய்தினார்.

வல்விரைந்து பறந்து வள நகர்ச் சபபினைச் சேர்ந்தது. மதில் கடந்து உட்புகுந்தது.

நெடுநிலைக் கதவம் அனைத்தும்அடைக்கப்பட்டமை அறிந்து மேலுறு சிறு சாளரப்புழை வழியே பல்கீசு பள்ளியறை புக்கது.

யாரும் அற்ற அவ்வறையில் மங்கை நல்லாள் பல்கீசு, மல ரணை மேவி, முந்தணி துகில் களைந்து மெல்லிய துகில் புனைந்து மணம் கமழ் வெண்டுகில் ஒன்று போர்த்தித் துயின்றமை கண்டது.

அவள் ஆழ்ந்து உறங்குகின்றமை கண்டு, முடங்கலை மெல்ல அவள் நகிலிணை மேற்பால் காறை எலும்பிடை வைத்து, பல கணியில் வந்து ஒளிந்து கொண்டது.

பல்கீசு தன்மேல் படிந்த ஒன்று, கனத்தமை உறக்க நிலையி லும் உணர்ந்து, எழுந்து மான்விழி மருளநோக்கி 'எவ்வாறு வந் தது இது?' என வியந்து கபாடம் நோக்கினாள்; தாழ் இட்டிருந் ததும் கண்டாள்.

''முத்திரை இட்ட இம்முடங்கலை யார்தான் இங்கு சேர்த்தி ருப்பார்கள்?'' என்று எண்ணியவளாய், சுற்றும் முற்றும் பார்த்து, எவரும் கண்டிலாது, தெளிவும் பெறாமல் தன் தாமரைக் கை களால் மெல்ல முத்திரை நீக்கி முடங்கலைப் பார்த்தாள்.

செவ்வரி ஓடிய விழிகள் அவ்வரி மீது ஓடின.

பின் ஆடைதிருத்தி, அணிதிருத்தி, வெளிப் போந்து நாள் ஓலக்க ஆதனத்தில் அமர்ந்தாள். தானைத் தலைவர், பிறரை வரப் பணித்தாள்.

வந்தவர் வணங்கி செவ்வாய் செங்கையிற் புதைத்து, தானை மடக்குறத் துவண்டு நின்றார்.

"பைத்துல் முக்கத்திசு என்னும் நகரில் சுலைமான் நபி என்று ஒருவர் முடியரசராய், நபிப்பட்டம் அருளப் பெற்றவராய் உள் ளார்.

அவர் நம்மை இசுலாம் நெறியில் சேரப் பணித்திருக்கின்றார். இது குறித்து ஓலையும் போக்கி உள்ளார். உம் கருத்து யாது? கூறுக!" என்றாள்.

"தங்களை விட மேலானவர் எனப் பிறரை நாங்கள் கருது வது இல்லை. உங்கள் கருத்து யாதோ? அது நேரிதாகத்தான், சீரியதாய்த்தான் இருக்கும்." எனப்பணிவுடன் பகர்ந்தனர்.

அமுதம் அன்னாள் கூறுவாள்:

"தீன் நெறி மருவுக எனக் கூறும் இவர், அரசராக மட்டுமே இருப்பவர் ஆயின், நாம் சேர்கிலேம் எனில், நம் நாட்டின் மீது படை எடுப்பார். மலிவளத்தேயம் மண்டு எரி மடுப்பார்.

உண்மையில் நபிப்பட்டம் அருளப் பெற்றவர் ஆயின், எந் நாடும் தம் நாடாகவே கருதுவார். அறன் அழியச் செய்யார்.

இது அறிய காணிக்கை சில அனுப்புவோம். சில செயற்கு அரிய செயல்களை முடிக்கக் கோருவோம்.

அரசர் எனில் காணிக்கைப் பொருள்களை ஏற்பார்; செயல்கள் முடித்திட இயலார்.

நபிகள் என்னின் செயல் முடிப்பார்; கையுறை ஏலார். நபிகள் என்பது உறுதிப்படில் கலிமா ஓதல்; தீன் நெறிச் சேர்தல் செய் வோம்.

அரசரே என்னில், படை எடுத்துப் போர் புரிந்து அந்நாடும் நம் நாட்டு அகப்படுத்துவோம்" என்றாள்.

"இதுவே செய்தக்கது" என்றார் தளத்தர், தானைத் தலை வர், தகை சால் அமைச்சர்கள்.

"அரசர் மட்டுமா? அன்றி ஆண்டவன் அருள் பெற்ற நபி அவர்களுமா? இதனை அறியும் வகை அறிவாம்" என்று உரைத்த பல்கீசு அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டாள்.

32. பல்கீசு சோதனைப் படலம்

ஐம்பதின்மர் பெண்மைச் சாயல் பொருந்திய ஆடவர் தருவிக்கப் பெற்றனர். அவர் கட்குப் பொய் அளகம் பொருத்தினர். செயற்கை நகில்கள் செய்து அமைத்தனர். கண்கவர் அணிகள், கலன்கள் பூட்டினர். மொழியால், நடையால் 'பெண்களே இவர்' எனப் பிறர் நம்பும் வகையில் பயிற்சி தந்தனர்.

ஐம்பதின்மர் ஆண்மைச் சாயல் பொருந்திய அரிவையர் அழைக்கப்பட்டனர். பொங்கு வெம்முலைகள் அடங்கு வகை ஆடவர்க்கு உரிய ஆடைகள், அணிகள் அணிவித்தனர். ஆயுதப் பயிற்சி அளித்தனர். எழில் கொள் மென் ஒசிவு நடை நீங்க, ஏறு போல் நடை பயில்வித்தனர். தீங்கிளவி 'கரகர'த்த ஒலி ஆகப் பயிற்றினர்.

காண்பார் நிழல் கவினுறத் தெரிவகை, வியன் ஒளிக் கனகத்தால், விரி ஒளி வெள்ளியால் கனசதுரக் கற்கள் (பக்கம் ஒருமுழ அளவில்) வகைக்கு ஐம்பது என நூறு செயப்பணித்தார்.

இரு கனகச் சிமிழ்களில் எண்கோணப்பட்டை தீட்டப்பெற்ற இரு வைரங்களைத் தனித் தனிப் பொதிந்தனர். அதனுள் ஒன்று நேராய் அமையாத தொளை உடையது. பிறிதொன்று தொளையே இல்லாதது. பிறர் உள்ளக்கருத்தை முகக் குறிப்பாலே உற்று உணர்ந்து உரைக்கவல்ல நூல் நலம் சான்ற, செயல் வல் அமைச்சர்கள் இருவர் அழைக்கப்பட்டனர்.

இவர்கட்குப் பணிவிடை செய்யப் பலர், சென்று மீள ஊர்திகள் எனப் பலவும் அமைத்தார்.

முடங்கல் ஒன்றும் எழுதி முத்திரை இடப்பட்டது.

பின் பல்கீசு அவை கூட்டினாள். அவையோர்க்குச் செய்தி செப்பினாள்.

"எம் ஆணை ஏற்று பைத்துல் முக்கத்தீசு சேர்க. அரசும் நாம்; ஆதி தூதுவனும் நாம்' என்று ஓலை போக்கிய சுலைமான் மன்னரைக் கண்டு வணங்கி பேணி, கை கூப்பி 'பெட்பு உடையீர் இன்று உமக்குக் காணிக்கை தந்து உவப்போம் யாம்' என்று கூறி இக்கற்களை அவர் திருமுன் பணிவுற இடுக.

செயற்கரியவும் செயல் வல் நேர்த்தியீர் நீர் என்று அறிவோம். 'இவ்வே இருந்திடும் சிமிழ்களில் உள்ள வைரங்களில் தொளை உள்ளது ஒன்றில் மேல் தொளைவாய் நூல்கோத்து கீழ் வாய் வழி அந்நூல் கொணரவேண்டும். பிறிது ஒன்றனுக்குத் தொளை புதுவ தாக இடவேண்டும்.

இவ்வே நிற்கும் இந்நூற்றுவரில் ஆடவர் இவர், மகளிர் இவர் எனப் பிரித்தல்வேண்டும்.

மண்ணில் ஊறா, விண்ணில் இருந்து வீழா புனல் தர வேண்டும், எனக்கோருக.

இச்சோதனைகளில் அவர் வெற்றி பெறின், நன்று எனக்கருதி அமைக. அன்றி எவையும் செய்ய இயலாதவராய், பொய் புகலின்› காணிக்கை மட்டும் கைக்கொள்ளின் ஏதும் உரையீர் ஆகி உடன் வந்து சேர்க.''

அவள் இவை சொல்லி முடியுமுன் குதுகுது பறந்து வந்து நபி களிடம் அனைத்தும் கூறியது.

அமைச்சர் இருவர், நூற்றுவர் தளத்தர், ஏவலர், கற்கள் சிமிழ்கள் கொண்டு வருவதனையும், வியத்தகு புனல்கோரச் சொல்லியதனையும் கூறியது.

முயல்வில் இவர் தோற்பின், பின் அவள் அமர்மேவ இருப்ப தனையும் தெரிவித்து விட்டது.

சுலைமான் (அலை) அவர்கள் புதியதோர் முறுவல் பூத்தார்'

ஜின்கள் வரப்பணித்தார். இறைப் பொழுதின் கண் கூடி இறைஞ்சி நின்றன. குது குது கூறிய அளவில் கணக்கில்லாத பொன், வெள்ளிக் கற்கள் செய்தமைக்கக் கூறினார்.

அவையோர் அவர் கூறின கேட்டார். (அவ்வளவே) ஜின்கள் கொணர்ந்து வைத்தன கண்டார்.

மதில் எல்லை தொட்டு அரண்மனை சூழ உள்ள, தருமணல் ஞெமிரிய திருமலி முற்றத்தில் அக்கற்களைத் தள வரிசையாகப் பதிக்கப் பணித்தார்.

யானைக் கூடம் பரிநிலைப் பந்தி, ஆயுதக்கொட்டில், சோறு அடு அட்டில் எல்லா இடங்களிலும் அக்கற்களைப் பதித்தன. நூலிழை அளவும் இடைவெளி இன்றிப் பொருத்தின. பொன்கல் அடுத்து வெள்ளிக்கல் என ஒரு நிரல்பட அமைத்தன,

கோட்டை வாயிலில் இருந்து அரண்மனை வாயில் வரை உள்ள நடைபாதையில் மட்டும் பத்துக்குப் பத்து என்ற அளவில் சதுர இடம்வறிதே விடச் செய்தார்.

ஓலக்க மண்டபத்தில் நான்கு ஆயிரம் பொன் கதிரைகளும் (நாற்காலிகள்) நான்கு ஆயிரம் வெள்ளிக் கதிரைகளும் இடச் செய்தார். மனுக்குலத் தலைவர்களைப் பொன் ஆதனங்களில் அமர்த்தி ஜின் அதிபரை வெள்ளி ஆதனங்களில் இருத்தினார்.

தலைவர்கள் பின்னால் கருநிறக் கவர்க்கால் பேய்க் கூட்டம் கை ஏந்திய கொடிகளோடு, படைகளோடு, சினம் காலும் செவ் விழிகளோடு நின்றன.

பறவையின் கூட்டம் அவர் ஏவல் வழி, அரண்மனை முன்றி லில் அகல் நிழல் அமைய வான் பந்தர் இட்டன.

தாம் அமர் இடத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் எண் ஆதனங்கள் இட்டார். அவை முன்னர் திரையிடப் பெற்று விளங்கின.

தம்போன்ற சாயல் உடைய எழுவரைத் தம்மைப் போலவே அலங்கரித்து முன் ஏழு ஆதனங்களில் இருத்தினார்.

எட்டாம் அரியணையில் தாம் அமர்ந்தார்.

மறுசேரா மதிமுக மாது, மருசேர்ந்த குழல் பல்கீசு அருள் பொருள் குவையோடு, அமைச்சர் உள்ளிட்ட அனைவரும் சபபுநகர் நீத்துச் சாம்நகர் நண்ணினர்.

வியன் மதில் குடுமிதோறும் காண்டகு பதாகை ஆடை கைகளை அசைத்து அவர்களை வரவேற்றன.

மதில் கடந்து உள் ஓரடிவைத்தார்; வியந்தார்; வைத்த அடி பெயர்கிலர்; வைத்த கண் இமைத்திலர்.

பொன்னும், வெள்ளியும் பொதிந்த தளவரிசை யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பது கண்டார். சுற்றும் நோக்கினார்.

ஆனைக் கூடமும், அசுவப் பந்தியும், அட்டிலும், கொட்டிலும் இவற்றாலேயே அமைந்தமை கண்டார்.

குப்பை, கூளம், சாணம், சிறுநீர் குவிந்து, சிதறி, சிந்திக் கிடக்கக் கண்டார்.

கீழ் நோக்கினார். நங்கை தந்த கற்களும், நிலத்தில் நேர்ந்த கற்களும் அளவால், தரத்தால் ஒத்தமை அறிந்தார்.

"வியப்பார் என, நயப்பார் என நண்ணினோம், நம்பினோம். நம்மையும் மதிப்பார் இலர் ஆயினமே. 'கொல்லன் தெருவில் ஊசி விற்ற கதை' ஆகி விட்டதே" என எண்ணி வருந்தினர்.

மேலும் சில அடிகள் பெயர்ந்து சென்றனர். இடையில் நூறு கற்கள் இருந்த (இருக்க) இடம் (சதுர வடிவிற்று) வெறிது இருக்கக் கண்டனர்.

"இங்கு இல்லவை நூறு கற்கள். நாம் கொணர்ந்தவையும் நூறு கற்கள். காணிக்கையாக இதனைப் பணிந்து அளிப்பின் கொணர்ந்தன என்பரா? கொண்டன என்பரா? பெயர்த்து எடுத்தன என்று அன்றோ ஏசுவர்" என்று அயிர்த்தனர்.

"எம்மில் திருடி எமக்குப் பரிசளிப்பதா? எனப் பழித்திடில் என்ன செய்வது?

மலி செருக்குடன் வந்தோம். அவமானம் மேவ, செயலிழந்து போம் நிலை உண்டானது" என்று பலவாறு கருதி, வேறுவழியின்றி, அப்பப்பத்துக் கற்களையும் வெற்றிடத்தில் இட்டுப் பதித்து நிரப்பி மேற் செல்லலாயினர்.

முயற்சியில் முதலில் தோல்வி கண்டனர்.

ஓலக்க மண்டபம் ஒருங்கு உடன்புக்கனர்.

இதற்குள் சுலைமான் (அலை) அவர்களிடம் காற்று நடந்தன கூறிற்று.

நரர், ஜின், பறவைத் திரள், ஊர்வன உள்ளிட்ட பல உயிரும் அவ்விடைத் திரண்டன கண்டு "இவர் அரசர் மட்டும் அல்லர்; ஆதி தூதரே. ஐயம் இல்லை. மேற்சோதனைகள் ஏன்?" என எண்ணினர்.

நடப்பன நல்லவே ஆகும் என நம்பி பல்கீசின் அமைச்சர்கள் சுலைமான் (அலை) அவர்களின் அமைச்சர்களிடம், "இறை அருள் தூதர் யாண்டுளர்?" என "அவண்" என முகம் திருப்பிச் சுட்டிக் காட்ட அம்முதல் திரைப்பக்கல் அணுகினர்.

முதல் திரை மறைவில் அமர்ந்தார், "நான் நபி அலன்" என அடுத்த திரையிடத்துச் சேர்ந்தார்.

இவ்வாறு எழுதிரைகள் கடந்து எட்டாம் திரையை எட்டினர்.

திரை விலகிற்று; கண்டார்; இவர்கள் அறியாமைத் திரையும் விலகிற்று. பெருவிளக்கம் ஒருவந்தம் கண் ஒளி மழுக்கும் என்பது உணர்ந்தனர்.

''எய்யா நல்லிசை இலங்கு தலைவர் இவர் வரைந்த முடங் கலைத் தீண்டப் பெற்ற மங்கை அவள் கை என்ன பேறு பெற்றதோ? அவர் பொருட்டால் இங்கு போந்து கண் குளிரக் காணும் வாய்ப்பு பெற்ற நாமும் பெரும்பேறு பெற்றவரே!'' எனக் கருதி உளம் களித்தார்.

மடவியர் திலகம் பல்கீசு கொடுத்த பத்திரம் நபி அவர்கள் திருமலர்க்கையில் கொடுத்தனர்.

வணங்கி நின்றனர்; வாழ்த்து பகர்ந்தனர்; வைரங்கள் வைத்த சிமிழ்களை வைத்தனர், முன் இருந்த ஓர் ஆதனத்து.

செவ்வியாள் செப்பிய செப்பினர் செவ்வியோன் திருமுன்.

கண்டார்; களி கூர்ந்தார்; ஜின்களை அழைத்தார்.

''ஆர் இப்பணி ஆற்றிட வல்லீர்?'' என வினவினார்.

வந்து, வணங்கி, முன் நின்ற ஜின் ஒன்று ''எங்கட்கு இது அரிதோ பெரும! குன்றைத் துளைத்துக் கடலையும் உட்செலுத் தும் ஆற்றல் உடையேம்''எனக் கூறி தோளா வைரத்துத் தொளை யிட்டுத் தந்தது; சென்றது.

அடுத்து, மற்ற வைரத்தின் தொளை வழியே நூல்கோத்து வாங்க முயன்றன சில. தொளை நேரிது அன்று ஆகலின் தோல்வி கொண்டன.

''செய்தல் ஆற்றேம்'' என்று சேர்ந்தாற்போல் உரைத்தன.

நீர்வாய்ச்சிதல் ஒன்று நபி அவர்களை அணுகிற்று.

''செய்தவத்தீரே! செய்யப் பணிமின்'' என வேண்டியது. உயர் குணச் செம்மல் ஒப்பினர்; உவந்தார்.

சரடு (மெல்லிழை நூல்) ஒன்று வாய்க் கவ்வி மேல் தொளை வாய் உட்புக்கு தொளை பொருந்து வழி எலாம் தானும் சுற்றி இறுதியில் கீழ்த் தொளை வழியே வெளி வந்தது.

பதிவு உறும் தமர் வழியே சரடு இழுத்து வைத்தது.

கண்ட நபி, சிதல் திரள் நோக்கி ''நன்றி. மேவும் இடம் தொறும் உமக்குச் சுவை உணவு இறைவன் அருளப் பெறுக'' என்று வாழ்த்தி அருளினார்.

தொளை இடப்பட்ட வைரமும், சரடு கோத்த வைரமும் சிமிழில் இருத்தி, பல்கீசு அமைச்சர்பால் அளித்து ''பெறுக, பொதிக!'' என்றார்.

மற்றைய சோதனை பொருந்தினார். அவ்வையைந்நாண் கினரை அவர் பணி ஏற்ற ஒரு வேலையாள் விளித்து ஆளுக்கொரு மூங்கில் குழாய் அளித்து "தனித்த மறைவிடத்துச் சென்று கொடுத்த குழலின் வாய்ப்புறம் சிறு நீர் பெய்க" எனச் செப்பினன்.

வேறென் செய்வார். சொல்லியவாறே சென்று, குழல் வாய்ச் சிறுநீர் பெய்து. அக்குழலினைத் தனித்துஇருத்தி, தாம் பக்கல் இருந்தனர்.

குழலுட் பெய்தார் ஆடவர் எனவும், வாய்ப்புறம் சிந்திடச் செய்தார் பெண்டிர் எனவும் பிரித்து அமைத்தனர்.

அடுத்த சோதனை அமைவுறப் பொருந்தினர்.

வீரர் சிலவரை விளித்து வெளியிடை, காய்கதிர் வெயிலிடைக் கதழ் பரிய கலிமா ஊர்ந்து போக ஏவினர்.

காதம் ஓர் கணத்தில் கடந்து மீண்டனர். அவ்வயவர் மீதினில், வெம்பரி மீதினில் வழிந்தொடு வியர்வையைத் திரட்டி ஒரு பாத்திரத்தில் நிறைவித்தது பணி ஏற்ற ஜின் ஒன்று.

"இதுதான் மண் ஊறா, வான் வழங்காப் புனல்" என்றார்.

"உங்கள் வருகைக்கு எம் நன்றி. அமைச்சர்களே! உம் அரசி பல்கீசுக்கு எம் வாழ்த்துகளைத் தெரிவியுங்கள். தவிர தீன் நெறி சார்ந்து உய்யச் சொல்க. அன்றேல் மறங்கிளரின், நம் சேனை உம் நாட்டை இல்லாதாக்கி விடும் எனவும் கூறுக." என்று சொல்லி முத்தும், பொன்னும், மணியும், துகிலும் வாரினர் வழங்கி ஈந்தார். அவரும் உவந்தார்.

வந்தவர் வணங்கினர்; பிரியமனம் இன்றிப் பெயர்ந்தனர். தம் நாட்டாங்கண் சார்ந்தனர். உற்றன அனைத்தும் வகை, வகை சொல்லி வணங்கினர்.

இரு மணிகளையும், திரு முன் வைத்தனர். கண்டாள்; உவந்தாள்; கண்களில் ஒற்றினாள்.

உவர் நீர்(வியர்நீர்)கொண்ட பாத்திரமும் பார்த்தாள். பார்த்திவர் நுண்ணறிவு வியந்தாள் உவகை மேலிட்டாள். "என் இவர் எண் அறிவு இருந்தவாறு?" எனப் போற்றி மகிழ்ந்தாள்.

"ஆதி தூதரே அவர். ஐயம் இல்லையால். நாம் அவர் தீன் நெறி மருவுதல் நன்று" என்று கூறி, சென்று வந்தார்க்கு விடை தந்து மாறிலா மகிழ்ச்சியுள் மலர்ந்தாள்.

அமரர்கள் பரவு சுலைமான் (அலை) அவர்கள் ''அஞ்சல் இலள்; ஆற்றல் மிக்கவள்; கூர்த்த மதியினள்; இவளை வதுவை மேவுவோம்'' என்று கருதினார்.

33. பல்கீசை எடுத்து வந்த படலம்

''அவள் நம் தீன் நெறி மருவி கலிமா புகன்றபின் மணம் முடிக்கலாம் எனில், அழகினில் ஆசை கொண்டார்; அத னால் தான் தீன் நெறிவரச் செய்தார், மணந்தார்; என்று உலகம் பழித்தலும் கூடும்.

ஒரு வேளை அவள் தீன் நெறி மருவிலள் எனில், நாம் படை எடுக்க நேரின் 'மங்கை பால் மட்டிலாப் பற்றினர்; அவளைக் கொள்ளவே அமர் மேற் கொண்டாரோ?' எனவும் பழிப்பர்.

ஜின் ஒன்று ஏவி அவளை ஒரு கணத்தில் இங்கு கொணரின், அவள் இவை கண்டு பிரம்மிப்பு கொண்டு சம்மதித்தாலும் சம்மதிப்பாள்.

எதற்கும் ஜின் குலத்தலைவரை ஆலோசித்து அவர்கள் கூறு வனவும் கேட்போம்'' என்றும் கருதினார்.

ஜின்களில் ஆன்ற வயதினர், அறிவு சான்றவர், ஆற்றல் மிக்க வர் விளித்து ''சபபு நகர்ப் பெண் அரசு பல்கீசை மார்க்கம் ஏய் வதுவை செய நினைந்தோம். உம் கருத்து யாது?'' என வினவிட, அவை ''நாங்கள் மட்டுமே இதற்கு எம் யோசனைகளைக் கூறு வதை விட,எம் இனத் தலைவரில் மேலும் சிலருடன் கூடி ஆய்ந்து அவர்கள் கருத்தையும் உணர்ந்து பின் உமக்குக் கூறுவது நன்றாம்'' என்றன; சென்றன.

வில் என வளைந்த யாக்கையர், தண்டு கால் ஊன்றிய தளர்ந்த நடையர், ஏறு நடையர், இளைஞர் எனப்பல் நிலையர் ஜின் குலத் தலைவர்கள் திரண்டனர்.

தனி இருந்து ஆய்ந்தனர். ''அடிமை நிலை மேவினோம். இன்றில்லை எனினும் எதிர் காலத்திலாவது நலம் பிறக்கும் என எண்ணினோம். இவர் இறப்பின் பின் நமக்கு விடுதலை கிடைக்க லாம் என நம்பினோம். எண்ணம் பாழாயிற்று. நம் குலத் தவட்குப் பிறந்த பெண்ணையே இவர் மணம் முடிக்க விரும்பு கிறார். ஜின் குல வலிமையும் சுலைமான் (அலை) அவர்களின் அறிவும், ஆற்றலும் பொருந்த இவர் சந்ததி பெருகும். என்றும்

நமக்கு விடுதலை கிட்டாது. வழி, வழி அடிமையராய் வாழ்தல் வேண்டுமா? நாம், இத்திருமணம் நன்று; செய்தக்கதே, என்னில் கொள்ளி கொண்டு தலை சொறிந்தார் ஆவோம்.

பிறரை விடுத்து, நம்மை ஆலோசனை கேட்டதால் நாம் நல்ல இவ்வாய்ப்பை நழுவ விடக் கூடாது.

'குணக்கேடு உடையாள்; பழுதுள உறுப்பினாள்; என நாம் அனைவரும் ஒரு மொழியாக உரைப்போம் எனில் தவிர்வார்" என்று முடிவு செய்தன.

இறைஞ்சி நின்று, "ஐயா! சொல்லவும் கூடுவது இல்லை; சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. நீர் மணக்க எண்ணிய பெண் அதிகார வெறியினள்; ஆட்சிப் பொறுப்பில் கொண்ட அடங்காப் பற்றினால் கொண்டானைக் கொலை குறித்தாள். இது அவ்வூரார் அறிந்த உண்மை.

பாவியினும் படுபாவி இவள். வெடிபடு சொல்லினள்; கழுதையின் பதத்தினள்; கதி மிகு சினத்தினள்;கணுக்கால் முதல் தொடை அளவும் ஆடவர் போன்றே துன்று உரோமத்தாள்.

கொள்ளலும், உள்ளலும் தீது என்று உலகினர் தள்ளிய தன்மைகட்கு இவள் நிலை பேறாம் குடியிருப்புப் போன்றவள்.

உயர்வின் மேல் எல்லை நீர். கயமையின் கீழ்ப்பட்ட கீழ் எல்லை அவள். அவளை நீர் மணம் முடிப்பது எவ்வாறு முறை என்று சொல்லுவோம்?" என்று கூறி விடை பெற்று ஏகின.

சுலைமான் (அலை) அவர்கள் ஜின்கள் கூறுவ, மெய்யா அலவா என்று கண்டறிய விரும்பினார்.

ஜின் ஒன்று ஏவி, தம் மாளிகைக்கு வரும் வழியில் முன்னர் பெரிய 'நீர்த்தடம்' ஒன்று அமைக்கச் செய்தார். பளிங்கால் படிக் கட்டுகள் அமைத்து நீர்த்தேக்கி மீன் இனம் விடுத்துக் குளம் புதுக்கினார்.

நீர்ப்பரப்பின் மேல் முற்றும் கவியுமாறு பளிங்குப் பலகை பொருத்தச் செய்தார்.

தடத்தின் ஒரு பால் தமக்கு ஆதனம் இடச் செய்தார்.

பின்னர் நபி அவர்கள் "பல்கீசை நம் முன்னம் கொண்டு வருவார் யார்?" என வினவிட இபுரீத் என்னும் ஜின் "இன்று பகற் பொழுதிற்குள் கொணர்வேன்" என்றது.

"இதனினும் விரைவாய் அவளைக் கொண்டு வருபவர் யார்?" என்றார்.

இஸ்முல் அஃலம் இல்மு[1] என்னும் மறைமொழி வல்ல இபுனு பறுகியா என்பவர் எழுந்து "இமை மூடித் திறக்கு முன் எடுத்து வருவேன்" என்றார்.

"செய்" எனப் பணிக்க, இபுனு பறுகியா சென்றார்.

அப்போது அங்கே.

பல்கீசு ஒன்றன்மேல் ஒன்றாய் மெல்லிய ஏழு சட்டைகள், அம்மெல் ஆகம் நிறைய வீங்கிய, கொம்மை வெம்முலைக் கோடு தோன்றா வகை அணிந்து, ஆண் உடை தரித்து ஆதனத்து இருந்தாள்.

இபுனு பறுகியா அவளை அப்படியே அசையா வகை, தன் உரு அவட்குத் தெரியா வகை அந்தரத் தலத்திலிலே சுமந்து வந்தார்.

கொணர்ந்த அந்த ஆதனத்தை அன்னத் தூவி, மெல்ல தரையில் பொருந்தல் போல் இறக்கி வைத்தார்; மறைந்தார்.

பளிங்குத் தடத்தின் ஒரு கரையில் பல்கீசு; எதிர்க்கரையில் சுலைமான் (அலை) அவர்கள்.

எதிரினில் ஏந்திழை கண்டார். இறைவனை எண்ணித் துதித்தார். சுக்கூறு செய்தார். அகம் கனிந்து சுசூது செய்து எழுந்தார். இருகை ஏந்தி 'துஆ' இரந்தார்.

பின் பல்கீசை நோக்கி, "வருக! இங்கு வருக! வல்லே வருக! பொருந்த வருக!" என்று அழைத்தார்.

செவியில் தேன் பாய உடன் ஏற்று, எழுந்து, தன் ஆதனம் விட்டு இறங்கி நீர்த் தடத்தின் சில படிகள் கடந்து, கீழ் ஒள் பளிங்கு நோக்கி, நீர்த்தடத்தில் இறங்கில் ஆடை நனையுமே என்பதற்காக, முழந்தாள் மேலும் இடை ஆடையை உயர்த்தி,இரு கையால் பிடித்துச் சார்ந்தனள்.

கண்டார். ஜின்கள் விண்டன பொய் என அறிந்தார். செறி குறங்கின் செழுமையும், திரட்சியும் பொன் அவிர் ஒளியும் கண் கதுவக் கண்டார்.

பல்கீசு நீர்த்தடம் என எண்ணித் தன் இடை ஆடை உயர்த்தியமைக்கு நாணி, தானையை நிலம் தோய விட்டுப் பளிங்குப் பலகையில் மென் மெல இயலி அவர் பக்கம் சார்ந்தனள்.

---

1. இஸ்முல் அஃலம்-பெயர்களுள் சிறந்தது.

மற்றொரு ஜின் அதற்குள் அவள் ஆதனத்தை இக்கரையில் அவர் பக்கலில் அக்கறையோடு இட்டது.

''இது உம் தவிசு தானே?'' என வினவினார்.

வியப்பு மீதூரினும், வெளிக்காட்டாது ''சொல்லப் போனால் அதுவும் இதுவும் நிகர்" எனச் சாதுர்யமாகப் பதில் அளித்தாள்.

அவளது அறிவின் திறம் வியந்து, அவள் பக்கம் பதிந்த தன் பார்வையைத் திருப்பி, வேறு எதனையோ பார்த்த வண்ணம் இருந்தனர்.

''ஏன்? ஏன் பார்வையைத் திருப்பினீர்?'' என வினவினாள்.

''ஆடவர், பிற பெண்களை உற்று நோக்குவது பிழை அன்றோ?" என்றார்.

''நானா? பெண்ணா? நன்றாய்ப் பாரும். ஆணைப் பெண் எனக்கருதிவிட்டீரே"என்று எள்ளல் குறிப்புடன் கூறினாள். ஒருங்கு பெண் என உணர்த்தக்கருதி, முகம் திரும்பினார்; அருள் விழிகளை அவள் முக மலர்ப் பரப்பில் பதிய விட்டார்; உறுக்கி நோக்கினார்.

கண்களின் காந்தப் பார்வை காரிகையின் கண்களைக் கவர்ந்தது. நெஞ்சுள்ளும் நேர்ந்தது. அவள் உள்ளம் அனலிடை மெழுகு ஆனது. தன் பெண்மை நலம் இது என்பது நன்கு உணரத் தலைப்பட்டாள். அணிந்த மேற்சட்டைகள் ஏழும் தெறித்தன. நெகிழ்ந்து நீங்கின. பொங்கு வெம்முலை இணை புடைத்துத் தோன்றின.

வெட்கம் திரண்டது. விழி தாழ்த்தினாள். தலை தாழ்ந்தது. நாணடச் சாய்ந்த நலம் கிளர் எருத்தம் கண்டார்.

இதயமும், உடலும் ஒருங்கி நிற்பாளைக் கண்டார். ''இறை அருள் கலிமா புகலாயோ?" என்றார்.

வீழிக்கனி இதழ் மென்மெலப் பிரிய, குயிலும் நாண, குரு மொழி புகன்றாள்.

ஏவற்பெண்டிர் சிலவரை அழைத்துத் தளிர் இயலாட்குத் தனி இடம் அமைத்துத் துணை இருக்கப் பணித்தார்.

சபபு நகர்க்கும் செய்தி தெரிவிக்கப்பட்டது.

சபபு நகர்ப் பேரழகி பல்கீசு, சுலைமான் (அலை) அவர்களின் துணைவியாதல் குறித்து இரு நகரத்தாரும் இணையில் மகிழ்ச்சி எய்தினர்; திளைத்தார்.

ஒருபுகழ் உயர் தனி உரவோன் தூதராம் சுலைமான் (அலை) அவர்கள் பல்கீசை மணம் செயக்கருதி, தற்சார்ந்த தலைவர் பால் தம் கருத்தைத் தெரிவித்தார்.

"ஆவன செய்க" என ஆணை பிறப்பித்தார்.

34. திருமணப் படலம் சாம்நகரத் தானைத் தலைவர், தளத்தர் தகைசால் தம் தலைவர் திருமண விழ வினை மிக்க சிறப்பினோடும், விழை வினோடும் நடத்தக் குறித்தனர்.

ஜின்கட்கும், நரர்கட்கும் விருந்து இனிது அளிக்க ஆவன செய்யத் தக்கார்ப் பணித்தனர்.

மதநீர் ஒழுக்கு அறா, நிலந்தோய் தடக்கை நெடுநல் யானை எருத்தம் பொலிய வள்வார் முரசம் வயங்கவைத்தனர். "நாயகன் தூதற்கும், நங்கை நல்லாட்கும், பெட்புறு வதுவை பொருந்தும் இத்தினமே" என்று பெருநல் நகர்க்கு அறிவித்தனர்.

முந்நீர் முழக்கினும், மும்முடங்காக முரசு அதிர்ந்தது.

"வாழி நபிகள்! வாழிய நாடு!வரம்பில் பல் ஊழி வளம் மிகக் கொழித்தே. வாழி இவ்வையம்! வாழ்க நம் நகர்!" என்னும் வாழ்த்தொலி விண் அடைந்தது.

"இந்நகரீரே! இஃதறிந்தீமின். இறையருள் நபிக்கும், பொறை சால் பல்கீசுக்கும் நலஞ்செறி திருமணம் முடிவது இத்தினமே.

உவமையில் ஒருவனை உளத்துப் பொருத்துக. இல்லறக் கடமை இனிது இயற்றுக. நம்மரசன் திருமண நாளைச் சிறப்பு உறக் கொண்டாடுக."

கொற்ற வள் முரசம், குணில் கொடு எறிந்து, உற்ற மக்கட்கு உரைத்தனர் உவகை.

வன்திறல் கையாரும், வளைதிரள் கையாரும் தம் தம் மாளிகைகளை 'விளக்கம்' செய்யத் தொடங்கினர்.

தொகுவளை முன்கைத் தோகை நல்லார் திரண்டனர். உவந்தார். மணி விளக்கேந்தினர்; மணமலர் தூவினர்.

பண்தரு கிளவியார் தொய்யில் காய்ந்து உதிர்ந்த தூளும், பரிந்த கோதையும், ஒவ்வில என்று ஒதுக்கி எறிந்த அணிகளும், தெருவினில் குவிய, அவற்றைக் கூட்டி வாரி எறிந்தனர்.

பனி நீரால் சுவர் கழுவி, சந்தனத்தால் தரை மெழுகி, பொடித்த முத்தால் கோலம் இட்டனர்.

படிகத்தால் அமைந்த கால்கள் நட்டு, பவளத்தால் வளைவுகள் அமைத்து, மாற்றுயர் செம்பொன் விதானம் இட்டு, நித்திலப் பூம்பந்தர்க் கீழ்ப் புதுமணல் பரப்பினர். பன்னீர் தெளித்து மணல் தண்ணிது ஆக்கினர்.

அங்காந்த மகர மீன் வடிவில் தோரணம் அமைத்தனர். நிரை நிரை கொடிகள் பதித்தனர். வீட்டு வாயில் இரு மருங்கும் கன்னலும், கமுகும், கதலி மாதுளையும் பிறவும் ஆங்கே பிணைத்தனர்.

ஐந்தரு, அமரர் சோலை அவண்விட்டு இவ்விடம் வந்ததோ என அயிர்த்தனர் கண்டார்.

வாய் நெகிழ் அரக்காம்பல் வளமலர்த் தொடையல் தூங்க நாற்றினர். வெண்டாமரை மலர்ப்பிணையல் உடன்பொருத்தினர்.

சேண் நாறு மணத்த ஆய செவ்விய மலர்கள் பந்தரிற் புனைந்த தோற்றம், செவ்வானில் திகழ் தரும் உடுக்குலம் போலானது.

முகை விரி தளவம், முல்லை மல்லிகை, முருக்கவிழ் சண்பகம் முதல ஆய மலர்கள் சிந்து தேன் மதி உகு அமுதம் போலாம்.

துணி படு இருள் எனத் துலங்கிய அளிகள், சுடர் மணி வயிரச் சோதி ஆம்பலை மெய்ம்மலர் எனக்கருதி நண்ணி ஏமாந்து திரும்பின.

இக்காட்சி ஒளிக்கதிர் அவற்றைத் துரத்த ஓடின போலாம்.

வண்டர் கள்ளுண் மயக்கில், தூணில் தோன்றும் மலர் நிழல் கண்டு, மெய்ம்மலர் எனக் கருதி, பருகு ஆர்வத்தில் விரைந்து சென்று, முட்டுண்டு, மோதுண்டு அயர்ந்தன.

அளிதோ தானே அளிக்குலத்தியல்பே.

கதிர் கால் மணிகளால் காவணம் ஓர்கால் செவ்விதாய், ஓர் கால் வெளியதாய், ஓர்கால் பசியதாய் அமைந்தது.

வெண்கோயிற் சுவர்களில் வீதிவாய்ச் சேர்பவர், செல்பவர் நிழல் படிய சுவர்களும் இயங்குவபோலாம்.

மாளிகைதோறும் கொடிகள் நின்றாடல், விண்மகளிரை "வள நகர் காண வம்மோ;" என அழைத்தல் போலாம். அன்றி மண விழாக் காண திரண்ட அரம்பையரை ஒழுங்குறச் செல்ல அமைப்பன போலாம்.

நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை, பன்னீரொடு கலந்து துருத்தி நிரப்பி,வீதி வாய்ச்சேர்வார் மேனி குளிர, நனைய, மணக்க, வான் வழங்கு மழை என வீசுவர்; தூவுவர்.

மாடந்தோறும் நறுமென் கூந்தற்கு மகளிர் ஊட்டு புகை விண், முகில் அளாவ, பெய்யும் மழையும், வீசும் காற்றும் அகில் நாறும்மே.

நகரில் அமைந்த இண்டு, இடுக்கு, சந்தி சதுக்கம் யாவும் தேர்ந்து, தெளிந்து திரியவல்ல கல்லா இளைஞரும் "சென்று மீளல் அரிது; நம் மனை எது என நாமறிகிலமே" எனவும் அயிர்த்தனர்.

மணநாள் குறிக்கு முன் சாம்நகர் நீத்து ஒன்றன் மேலிட்டு வெளிநகர்ப்புக்கார் மீளவரின் "இது நம் நகர்தானோ? அலவே! பிறவோ?" எனவே ஐயுறுவர்.

பொங்கொளி முகத்தர் பொய்கைத் தடம்புக்கு முங்கக் குளிக்க, அந்நெடுநீர்ப் பரப்பு முழுமையும் பொம்மல் ஓதிப் பரந்தன; மறைத்த.

தடத்து நீர் தன் இயல்பு அழிந்து நானமும், அகிலும், தைலமும் கமழும் தன்மை எய்தியது.

வீதியின் இருவாய் விளங்கிழை நல்லார் மொய்த்தனர், தம் அரசர் உலாப் போதரும் காட்சி காண் நசையராய்.

உடை சுற்றும் தொடையினார், இயல் சுமை, ஏற்றிய சுமையால் ஒடிந்து வீழ் இடையினார், அனம்பயில் நடையினார், காமவேள் படையினார், கூந்தல் ஆட, அணிமாலைகள் ஆட, ஊஞ்சல் ஆடினர்.

சோதித் திறம்பாடி, சுலைமான் (அலை) அவர்கள் புகழ்பாடி, ஆடினர் ஊசல்.

வள்ளல் நபி வாழ்த்தி, வாய்த்த மனை தனை வாழ்த்தி,நிலாத் திங்கள் துண்டத்து நெற்றியார், அண்டத்தார் வியப்பெய்த கண்டத்தால் பாடத்தொடங்கினார்.

உலங்கொள் தோளினாரும், நலம்கொள் இழையினாரும் இவ்வாறு பல்லாற்றானும் நகர் அலங்கரித்து தம்மையும் ஒப்பனை மேவி புகலரு இன்பினில் பொருந்தினர்; மகிழ்ந்தார்.

அயினி நீர், வட்டத் தட்டத்துக் கரைத்து, ஒருபால் வைத்து "நம் மனை எதிரில் நபிகள் மேவின் மறவாது கண் எச்சில் கழிக்க வேண்டும். மனமே மறவாதே! சுற்றி நிறைவேற்று" எனத் தமக்குத் தாமே கூறுவர்.

"இவ்விடத்து இருந்து நோக்கின் தெளிவாக, முழுமையாக நபி அவர்கள் திருமுக தரிசனம் பெறலாம்" என இடம் குறித்து அமைந்தார்.

"பயனுறு கலிமா பக்ரவும்,பகல் செய்வான் போல்வார் பவனி காணவும் பேறு பெற்ற நம்மினும் எவரே சிறப்புடையார்?" என்று எண்ணி உள்ளத்தே கிளுகிளுத்தார்.

"உயர் சாம் நகரத்து உள்ளும் புறமும் உறைதரு சிறப்பின் மக்களே! ஜின்களே! விருந்துண வருக!" என மன்னன் ஆணை கிளர்ந்தது.

முட்டின்று திரண்ட அட்டில் பணியாளர், மரம்தோறும் மை வீழ்த்தினர். வீதிகள் முனைதோறும் வியன் இடம் அமைத்தார்.

கண்ணும் நாவும் சுவை பெற, கமழ்குய் அடிசில் ஆக்கி "முறைப்பட விருந்துண வருக!" எனப் பணித்தனர்.

அட்டன நீர்ப்பசை இல்லாகி, நெய்ப்பசையே மேவின. வந்து திரண்டார் வெண் சோற்றமலை ஆரமாந்தினர்.

வற்றல், வறுவல், பொங்கல், பொறியல் என அமைந்த ஊன் துவை அடிசில் உவட்ட உண்டனர்.

நெய் துள்ளிய வறை முகந்தார். சூடு கிழித்து வாடூன் மிசைந் தார் பாலிற் பெய்தன, பாகிற் கொண்டன அளவுடன் கலந்து மெல்லிது பருகினர்.

தேனும், தெரிதரு சுவை நற்கனிகளும், தெவிட்ட உண்டு தேக்கு எறிந்தார்.

உண் ஊண் ஊன் நறுமணம் விண் அளாயது.

இவ்வாறு ஊரார் அனைவரும் உண்டு மகிழ்ந்தார்.

கை மணக்க, வாய் மணக்க, களிப்பும் பொங்க,மெய் மணக்க, வயிறும் மணக்க உண்டனர்.

உண்டபின் கலையினால் இருகையும் வாயும் ஒக்கத்துடைத்து நெய்ப்பசை நீங்க பயற்றுமா தேய்த்து, நீர் கொடு கழுவினர்.

பின் தம் தோளும், மார்பும் கைகளும் மணக்க கலவைச் சந்தனம், பன்னீர், தைலம் கலந்து பூசினர். அம்மென் திரைய லுடன் அடைக்காய் அயின்றனர்.

புறஞ்செலா முதியவர், பொருந்தாப் படுக்கையில் நோய் நலியக் கிடப்போர், நாளொடு புலக்கும் நரை மூதாளர் குழவியர்' கூந்தற் பூவையர், இவர்க்கு ஆக அனமும் கறியும் இனமுற எழு தரு சகடத்து ஏற்றினர்; ஏவினர்.

மனை, மனை ஏகி ஈந்து மீண்டனர்.

வறல் உறு இடும்பைக் கொள்கலம் ஆகி வாடினர் சில்லோர் "நம் நபி நித்தமும் ஒரு திருமணம் நிகழ்த்திடின் என் ஆம்? வயிற் றுத் தீத்தணித்த வள்ளல் வாழிய" என்று வாழ்த்தினர்.

"தவித்த வாய்க்குத் தண்ணீர் கேட்டாற்கு நீரும் சோறும் நிகழ்தரு அன்புடன் அளிப்பார், 'அல்லாஹ்வின் அருகர்; அன்பர் ஆவார். அவர் வாழ்க" என உவந்தனர் சிலர்.

இன்னதன் பின்னர் அரண்மனை அதனில் நடந்தன நவில்வாம்.

மறைநெறி வல்லார், மற்றும் பலர் சூழ சுலைமான் (அலை) அவர்களை விரிகதிர்ப் பதுமப் பீடத்தில் இருத்தினர். வான்புனல் சொரிந்து நீர் ஆட்டினர்.

இராஜநாயகம் தூவெண்டுகிலால் தன் உடல் ஈரம் புலர்த்தி பாற்கடல் நுரை முகந்தன்ன வெண்ணிற மெல்லிழைத் துகில் இடையில் அணிந்தார்.

எழில் பரவு சருவந்து[1] சூடினார். தரளமும், வைரமும், நாண் தரு உருவக் குப்பாயம் உடலில் ஒளி பெற அணிந்தார்.

மாற்றலர் மருமம்புக்கு, அவர் மனத்தில் புக்கு, கரந்த வர்மம் எவ்விடத்து உள்ளது என ஆய்ந்து உட்புக்குத், துளைத்து உறை புகும் உவணியை இடைக்கச்சில் இறுகச் செறித்தார்.

வதனச் சிவப்பு வடிவம் மேவி நான்றது போன்ற செவ்வொளி மாணிக்க ஆரமும், காதம்நாறும் கமழ் மல்லிகைத் தொடையலும் மார்புற அணிந்தார்.

விழிகளில் சுறுமாத் தீட்டினார்.

அரும் பெறல் நிலையினை அளிக்கும் கலிமா, அட்டசித்திகள் அளிக்கும் மந்திரங்கள் இவை அனைத்துக்கும் உள்ளுயிர் நிலையது

1. சருவந்து (சருபந்து)—தலைக் கவசம்

ஆய மறைப்பொருள், கைபுனைந்து இயற்றாக் கவின்பெரு வனப்பினதாய் பொறிக்கப் பெற்ற சோதி முத்திரை மோதிரம் விரலில் அணிந்தார்.

உருவு கொண்டமைந்த கருணையந்தோன்றலை பொருப்பு வட்டமான முலைப்பூவையர் இருபால் நின்று அயினி நீர் சுழற்றினர்.

உடைவாள் எடுத்து ஒருத்தி உடன் வர, பாசடகு வட்டில் சுமந்து பாவை ஒருத்தி தொடர, இவ்வாறாய் வட்டவாள் முகத்தினார், அட்டமங்கலம் ஏந்தினர் வந்தார்.

ஆதுலர்க்கும் அறநூலோர்க்கும், தொடித்தலை, துவள்நிலை தொன் மூதாளர்க்கும் அவர் அவர் அவா அறும் வகை வேண்டுவ அளித்தார்.

சூழ நின்றவர் யாவரும் வாழ்த்து எடுக்க, தெரிவையர் குரவை ஒலி எழுப்ப, துகில் விரிதளத்து மென்மெல நடந்து நசாயிகு செல்வர் கவன வாம்பரி அமர்ந்தார்; செல்லலுற்றார்.

பல்லியம் முழங்கின. எழுபரித்தேரோன் ஒரு தனி செல்வது போல் சென்றார்.

சூழல் மேவினார் ஏந்திய கவிகை, விசிறி, பீலி, ஆலவட்டம் முதலன பெருநிழல் அமைத்தன.

சூழ நாற்படையாளர் சென்றார். இடைமேவியார் மணநீர், பன்னீர் தெளித்தார் சிவிறி கொண்டு தூவினர்.

மன்னர், ஜின்கணங்கள் அணிமுடிகள் கான்ற கதிர்த் திரள் காவணம் ஒளி ஊட்டியது.

சோற்றுச் செருக்கால் ஜின் குலம் பேரொலி எழுப்பி வாழ்த்தின. வயவர் கைப்படைகள் வாளொளி வழங்கின.

ஒருதனி உரவோன் ஊர்பரி முன்னர் ஜின் இரண்டு தண்டு கொண்டு பொய்ப் போர் புரிந்தன.

தோள்தட்டி, தொடைதட்டி, விருது முழக்கிப் பொருதன சில ஜின்.

இவ்வாறே ஆனைமருப்பு செஞ்சடையில் செருகிய, தொட்டால் ஒட்டும் கருநிறப் பூதங்கள், கையும் காலும் முளைத்த கரு முகில் ஒப்பன, மற்போர் செய்தன.

வலிப்புயஜின் ஒன்று கரிய பூத வேதாளம் ஒன்றனைப் பற்றி அந்தரத்து எறிந்து அம்மனை விளையாடியது. செங்கதிர் திரண்ட இருளைப் பந்தாடியது பார்த்து மகிழ்ந்தார் பலர்.

ஆண், பெண் ஜின்கள் புரவி முன்போய் நோக்கி, பின் விண் பாய்ந்து, மீள வந்து தரை நின்று, வணங்கி நிற்பது வானவர் வரம்பில் ஆற்றலான் தூது, வதுவை காண வந்தமை போலாம்.

இயல்பிலேயே வெறுமை உடைய மலர்கள் நறுமணம் மிக்க எனில், தெளித்த பன்னீர் எவ்வளவு என்பது?

சிலர் பரி முன்னரும், பின்னரும், வலப்பாலும், இடப்பாலும் உவந்து ஓடி அலங்கார அழகு கண்டு மகிழ்ந்தனர்.

பாற்கடல் அலைகள் எனக் கவரிகள் குழைந்தன. தானையின் பேரொலி, அலை தரு ஒலி என்று ஆனது.

தாஹூது சந்ததி, தம் தெருவில் உலாப்போதருகிறார் என அறிந்து மான் வந்தன; மீன் வந்தன; மின் வந்தன; தேன் வந்தன கான் வந்த கருங்குழல் கொள் காரிகையர் பலர் வந்தனர்.

தேன் நுகர் அளியின் திரண்டனர் மொய்த்தார்.

ஒல்கிடை தளர அல்கினர் ஆங்கே.

சேல்கள், பவளம், சிற்றிழை நூல்கள் மலைகள் பலவும் மலிந் தன அவ்வே.

ஆண் அழகர் அவர் கண்ட அவ்வளவில் நாண் மறந்தார்; பூண் இழந்தார்; கலை நெகிழ்ந்தார்; வளை கழன்றார்; குழலும் சோர்ந்தார்.

அடுத்த வீதியில் மகளிர் நபிகள் வந்தனரோ, என வாயில் நண்ணியும் 'வந்திலரே' என அகமனைபுக்கும் நடை பல் கால் பயின்று திரிந்தார், நிலம் குழிந்தது.

கையமர் கிள்ளையைப் பஞ்சரத்து உய்த்து பரபரப்புடன் விரைந்தாள் ஒருத்தி. ஆனால் அக்கிள்ளை அவள் மலர்க்கையின் நீங்காது உடன் உறைதல் மருவிற்று. ஒருவா ஆயிற்று.

வீதி வாய்ச் சேர்ந்த வித்தகற்கு முன் வேல்விழி மாதர் சிலர் ஆலத்தி ஏந்தி வந்து நின்றனர். நெடிது நோக்கினர். சுழன்றது அயினி நீர்த் தட்டம் அன்று. அவர் தம் விழிகளே!

ஒருத்தி தன் உத்தரீயம் சோர்ந்து வீழ்ந்ததும் அறிகிலாள். கடாஅக் களிற்றின் கட்படாம் சரிந்தது. கோட்டியுள் கிடப்பார் கண் தன் குவிமுலை காண்பதும் இவள் காண்கிலள் ஆயினள்.

காமக் கணிச்சி நாண் போழ்ந்தது.

தம் நகர், தம் தெரு, தாம் இவர், தமர் இவர் என்பன அறவே மறந்தார். "யார் நீங்கள்? எந்த ஊர் இது? இவ்வளை யாருடையது?" எனக் கால் கிடந்த வளை எடுத்துக் காட்டிக் கேட்டாள் ஒருத்தி, அது தனது என அறியாள் ஆகி.

பரந்து படு காமக் கூர் எரிகதுவ, மேனி வெதும்ப, அணி முத்த மாலை நூலறுந்து நால, மலைவீழ் அருவியின் மானத் தோன்றும்.

பாவையர் சிலர் தம் பயோதரப் பரப்பில் பசலை படர்ந்தமை கண்டு துவண்டார்.

"வீதி வாய் விரைபரி பின் போனது என் நெஞ்சு. அளிதோ தானே வாழி என் நெஞ்சே! வறிதோ திரும்புவேன் வாழ்மனைக் குள்ளே" எனச் சலித்தாள் ஒருத்தி.

இவ்வாறு பல் பருவப் பெண்டிர் பலர் உள்நைய பரி மிசைப் போந்தார். பவனி முடித்துத் தம் மனை புகுந்தார்.

அவரை உயர்தலத்து இருத்தினர். அவர் தாமரை அடியிணை யில் பன்னீர் வார்த்து துகில் கொடு துடைத்து, வாழ்த்து இசைத்து மணி அணித்தவிசின் மீது அமர்த்தினர்.

அந்த மனையின் ஓர் சார் அரம்பையரின் மேலாம் தரத்தளை வான் புனல் ஆட்டினர். புலர்த்தினர். பொற் பூங்கொம்பரைப் புனை துகிலிற் பொதிந்தனர். முகிலுக்கு மணம் ஊட்டினர். வை வேற்கு மை தீட்டினர். வள்ளைத் தண்டில் வயங்கு குழை சேர்த் தனர்.

கமுகைச் சுற்றிக் கவின் ஆரம் பூட்டினர்.

அலத்தக மலர்த்தாள் அணி சிலம்பு ஆர்த்தனர்.

போற்றி இசைத்தனர். பொருந்த வாழ்த்தினர். அயினி சுழற் றினர். அட்ட மங்கலம் ஏந்தினர். முரசு முழங்கிற்று. மூரல் முறு வலார் பல்கீசு என்னும் தவப்பயனை, பொருள் நபியின் பக்கல் இருத்தினர்.

பனி இசுறாயீல் குல முதல்வர், முதியவர், மறைவலாளர், மங்கை பல்கீசுக்கு மகிழ்வு தழைக்க, பூரண பொருத்த நிக்காகு செய்தனர்.

''நிலங்கள் வாழ்க! மேலோர் தவம் வாழ்க! மானிடர், ஜின் குலம் வாழ்க! புண்ணியப் பொருள் வாழ்க! தீன் நெறி வாழ்க! பல்கீசுடன் பண்பு நலம் பல பெற்று சுலைமான் (அலை) அவர்கள் வாழ்க! வாழ்க!'' எனப் பலர் வாழ்த்தினர்.

தடம் பெருந்தோளர், திடப்படு கற்பின் பல்கீசுடன் மதி மலி புரிசை மாடக் கவின் நகர் சாமில் மகிழ்ந்து வாழ்ந்திருந்தார்.

35. பவுனவகு வதைப் படலம் — அந்நாள் சாம் நகரில் இருந்து முத் திங்கள் பயணத்தில் அமைந்த எமன் தேயத்தில், மதான் நகரத்தில், வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக குன்று குடைந்தன்ன ஓங்கு நிலைவாயில் அரண்மனை ஒன்றும், மண் உற ஆழ்ந்த மணி நீர்க் கிடங்கு சூழ், விண் உற ஓங்கிய பல் படைப் புரிசைகள் மூன்றும் விரைந்து இயற்ற ஜின்களை ஏவினார்.

''செய்'' என வாய்ச் சொல் கேட்டன. 'செய்தனம்' என்னப் பெற்றார்.

வியன் கொண்ட ஜின்கட்கு வேண்டு பரிசில்கள் ஈந்தார்.

தொகுத்த கற்பரசியைத் தூண்டாச் சுடர் மணி விளக்கை அம்மேல் நிலை மனையில் வைத்தார்.

தாம் வாழ் சாம் நகரிலிருந்து திங்கள் தோறும் மூன்று நாள் என ஆங்கு எய்தி ''விரை செறி குழலி'' உடன் இருந்து நலம் துய்த்தார்.

உவரியின் நாப்பண், உயர் பெருந்தீவு ஒன்று இருந்தது. அத் தீவில் சைத்தூன் என்னும் பெயரிய எயில் வளை நகர் ஒன்று இருந்தது.

அந்நகர் ஆண்டோன் பவுனவகு என்பான். நெடு முந்நீர் அரண் நாடு ஆகலின், அவனை வேறல் அரிதாயிற்று. ஒப்பில் புக ழுறும் உயர் தனித் தானைப் பெருக்கொடு வாழ்ந்தான்.

தளத்தால், எயிற்புரவளத்தால், வெம்போர்க் களத்தால், இருள் தங்கிய உளத்தால், சேர் நிதி நலத்தால் உவமை இல்லாத வன்,

சுலைமான் (அலை) அவர்கள் இவனிடைத் தூது ஒன்று விடுத்தார்.

"தெருள் உறு தீன் நெறி மேவுக. அன்றேல், பின் நடப்பன எலாம் பீழை தருவன" என்றவர் உரைத்த மாற்றம் இரு செவி தீய ஏற்றான்.

ஈண்டு எரி நீண்டு உக, இருவிழி சிவந்து, வாள் எயிறு இலங்க வெடிபட நகைத்து, கடகக் கை புடைத்து "பொன்றக் கருதினீர்! போர்ப்புறம் புகுக! போ. போ. போய் உன் போக்கிலாற்கு உரை இது" எனக் கூறி விடுத்தான்.

அங்கு,

சாம் நகரில் "அலை எறி கடல், அரண் என இறுமாந்து இருக்கின்றான். ஏறுகடல் ஏறி வேறு பெயரா வகை, வேரொடும் நூறுவோம்" என்று கூறி, படைதிரட்டினார்.

வான்வழி சென்றன போக சில படைகள் கடலங்கரை துன்னின. அண்ணல் நபி சலதரத் திரளைக் கூவி "நம் படை பவுனவகு வாழ் திவகம் சார அணை அமைத்திடுக. ஏனையாய்ச் சுமந்து, அவை அவ்வழி மேவ ஆவன செய்க" என்றார்.

அனைத்து மீன் இனமும், அவ்வழி தொக்கன. வாட் சுறா முதலாய் திமிங்கிலங்களும் திரண்டன. மிதவையாய்க் கிடந்தன. "அய்யன் வேண்டின் செய்யக் கடவேம்" என்று களிப்பு மிக ஆன பேரணை அன்பின் அமைத்தன.

கலி கொள் வீரரும், கடம் அறாக் களிறும், கொய்யுளைப் புரவியும், கொடி உடைய தேரும், சாலை வழியே சார்வன போவ சலதரம் அமைத்த அணையில் சென்றன. குறித்த இடத்தில் சேர்ந்தன.

காற்று ஏந்த, பரமதானி சுமக்க, படை பரவை கடந்து சைத்தூன் நகர் எயிற் புறத்து இறுத்தது.

ஒற்றர் வழி இஃதறிந்த பவனவகு வியந்தான். "அளப்பரும் சேனை. வளப்பெரும் காட்சி" என்று அவர் உரைத்தன எரி மூட்டியது.

"பார் முதிர் பனிக்கடல்சூழ் நம்தீவகத்து எவையும் வாராவே. வேறு எவ்வகை வந்தன ஈண்டு இவை?" என்று எண்ணி, பிடர் பிடித்து விதி தள்ள, சேனை அதிபரை 'வருக' என்று ஏவினான்.

போர் என்ன வீங்கினர் பொருப்பு அன்ன தோளினார்.

தானும் முடிசூடி, கலவை பூசி படைக்கலம் பூண்டு, நூல் புகன்ற தானம் வீசினன் இயற்றி. வேட்டன வேட்டோர்க்கு வேண்டுவன நல்கி தன் நிழல், தெறூஉம் தறுகண் மதமா அரும் பிடர் ஏறினான்.

களம் புக்கான்; தானை கண்டான்; அடிப்படு துகள் இவை, என மதித்தான்.

மூண்டது போரும் ஆங்கே.

ஜின்கள் வெறி மிகுத்தன. வாய் வாள் ஏந்தின; கால் பெரு விரலால் தேர்களை உந்தி வானில் ஏற்றின; எற்றின; விளையாட்டாய் வெற்றி கொண்டன.

கரம் அற்றோர், சிரம் அற்றோர், உரம் அற்றோர், புறம் கொண்டோர், பலராக, தாள் அறுபட்டு, தோள் அறுபட்டு, வாழ் நாள் அறுபட்டு மாண்டார் பலர் ஆயினர்.

குரங்கு எறி விளங்காய் என ஜின்கள், யானைகளை, பரிமாக் களை, ஏன், தேர்களையும் கூட குரை கடல் எறிந்தன. குமிழி யிட்டு அவை நீரில் ஆழ்தல் கண்டு ஆவலித்தன; கெக்கலித்தன.

குபிர்ப் படைத் தலைவன் ஒருவன் சென்னி பனங்காய் ஆமாறு தண்டு கொண்டு சாடிச் சிதறியது ஜின் ஒன்று.

அறுதலை முண்டம் அதன்பின் ஆறடி நடந்து தொடர்ந்தது. மீட்டும் ஓரடி பெயர்க்கு முன் ஓர் அடி பெற்று தரை வீழ்ந்தது குருதி கான்று.

கபந்த பந்தங்கள் களித்து ஆடல் மேவின.

கழல் கண் கூகை, கருநிறக் காக்கை, துன்னரும் கந்தல் துணி நிகர்ச் சிறகர்க் கழுகு, பருந்து, அலகை, ஓரி எனப் பல களம் நிறைந் தன.

கூகை கொடிக்கஞ்சி குதிரைப் பிணத்துட்புக்கு ஆரமாந்தியது.

ஓரி நெடுங் குரல் ஓலம் யாண்டும் எதிரொலித்தது.

தோலறு முரசங்கள், குருதி ஆற்றில் நீரோட்டத்தில் மிதக் கும் குடங்கள் ஆயின. துணி பட்ட ஆனைகள் ஆற்றின் இடை பொருந்திய இரும்பிணர்த் துறுகல் என அமைந்தன.

அலகைத் திரள் அடைந்த உவகைக்கு அளவே இல்லை.

பிணங்கள், படைகள், குடைகள், கொடிகள், முரசம், சிவிகை, மூரி வண்டேர் எனப் பல கொண்டு ஈர்த்து குருதியாறு ஓடிற்று.

வரை மருள் புணரி வான் பிசிறு உடையக் கலக்க நீள் நீல் நீர்ப்பரப்பு மனாலக் கலவை மானத் தோன்றியது.

நஞ்சு தோய் படைக் கலங்களும் அடித்து வரப்பட்டன. அவை கலந்த நீர்பருகி இறந்து கரைகுவிந்தன எண்ணில் மீன்கள்.

வெண்டயிர்க் கண்டம், செந்தயிர்க் கண்டம் என மூளைகள் சிதறின. முத்த வெண் குடைகள் குருதி ஆற்றில் சுழல் படு பரிசல்கள் ஆயின.

போர்க்களம் புக்கார் எவரும் எஞ்சிலர். உயிர்ப்புறம் போக்கினர். புகழ் தம் அகப்படுத்தினர். போரிடை வெந் இட்டார், வீடடைந்தார். வேல் விழியார் முன் நின்றார். அவர் கடிந்து ஒதுக்க அங்கும் வெந் இட்டார். வேறு புலம் போனார்.

புறநகர் ஆங்கண் போர் நிலை இவ்வாறாக, அகநகர் மருங்கில் எழுந்த அவலப் பேரொலி அகல்வான் அகடு கிழித்தது. ஆர்கலி ஒலியை அடக்கி மேல் எழுந்தது.

பவுனவகு மனைவியும், மகள் ஜமுசத்தும் கலங்கி, நெடிது உயிர்த்து இரங்கி, உணர்வு அற மயங்கினர்; வீழ்ந்தார்.

வெற்றிச் சங்கம் ஊதி விஜய கீதம் பாடி சுலைமான் (அலை) அவர்கள் படைகள் அகநகர்ப் புக்கன.

படைக்கலத் கொட்டில், பண்டார அறைகள், மடவியர் (மகளிர்) மனை எங்கும் காவல் வைத்தனர்.

பவுனவகு அரியணை அங்கிருந்து அகற்றினர். சுலைமான் (அலை) அவர்கள் கொணர்ந்த அரியணை இருத்தினர். அமர்த்தினர்.

பவுனவகு மனைவி, மகள், உயிர் எஞ்சிய இளஞ்சிறார், நாவொடு புலக்கும் நரை மூதாளர், நகர மாந்தர் அனைவரையும் திறம் தர அழைத்தார்.

'முதலவன் கலிமா முன்னுக' என்றார்.

பொருந்து உறப் பயிற்றினார். தந்தை இறப்பினால் மிக வருந்திய ஜமுசத்து மனம் தேற அவளைத் தனக்கு மணம் முடித்தார்.

இவரும் அவளொடு கலந்து, அன்பு மேவி, அங்கு இருந்தார் சில நாள்.

பின் சுலைமான்(அலை) அவர்கள் இறைவன் பதத்துதி மறவா அந்நகர்ப் பெருமகனார் ஒருவர்க்கு ஆட்சிப் பொறுப்பு அளித்து அணங்கு ஜமுசத்துடன் அடலருந்துப்பின் தானையர் தம் மொடும் அலர் பொழில் சாம் நகர் அடைந்தனர்; உவந்தார்.

ஜமுசத்து தன் தந்தை இறப்பிற்குப் பெரிதும் வருந்தினாள். தன் உள் அகம் வெதும்பினாள். நீர் வார் கண்ணளாய் நெடிது உயிர்த்தாள்.

36. முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலம்

குறிப்பால் குறிப்புணர் கொற்றக் கோமான் இது நன்கு அறிந்தார். "நின் அகத்து நோயும் துன்பமும் நொடிப்பன் நொடியில். பொய்யுரை அன்று பொருளுரை. காண்பாய். கூறுக. கொள்துயர் தவிர்க" என்றார்.

"கண்ணின் மணியாய்க் கருதி எனை வளர்த்த, தாதை நினைவு தவிரகில்லேன். ஆகலின் தடுத்தும் இயலாது கண்ண நீர் பெருகும். யான் எவன் செய்கோ?" என்று கூறி முகம் சிவக்க, விழி கலங்க அழுதாள்.

"இறந்தார்க்கு இரங்கலும், உள் நெஞ்சம் புண் ஆக நெடுந் தூரம் தாம் நினைந்து வருந்துவதும் பேதைமை. தவிர எதிர் காலமும் இதனால் பாழாகும். வரு ஆக்கமும் சிதையும். தவிர்க" என்றார்.

"என் தந்தை போல் ஓர் உரு சமைத்து அளிப்பின் கண்டு வெம்பிய கவலையும், தேட்டமும் மாறி மகிழ்வுடன் இருப்பேன். அக்கவலை தீர, இது செய்து அளித்திரோ" எனக் கனிவுடன் வேண்டினாள்.

சிலை செய் வித்தகர் இடத்துச் செப்பினார். அவரும் பணி ஏற்று நன்று அமைத்து அளித்தனர். நபி அவர்கள் அதனைத் தன் புது மனையாட்குத் தந்து விது அனைய முகம் கண்டார். கொடி பூத்த முறுவற்கு நெடிது உவந்தார்.

அவள் தன் தந்தைச் சிலையையே கடவுள் எனக் கருதி நாற்பது நாள் வரை வணங்கி வழிபாடு செய்தனள். இஃது அவர் அறிந்திலர் எனினும் சிலை செய்து அளித்தது தீன் நெறிக்கு நிலை முரண் அன்றோ?

ஒரு நாள் நபி பெருமான் கால் நிலம் தோய சாம் நகரில் நடந்து சென்றார். எதிர் ஓர் பெண் உரு கண்டார்.

ஈறும் பேனும் இருந்து இறை கூடிய முடி. கருமை செம்மை கலந்து திரி திரியாய் அமைந்த கூழை. கரடி போல் தலை. தாழ்ந்து மோவாய் தட்டும் கீழ் உதட்டினாள். புழு பரந்து அரித்தது போல், புருவ மயிர் அற்ற கண். உட்குழிந்து நீரும் பீளையும் ஒழுக நிற்பது. கொசு மொய்த்த கண்கடை, வாய்க் கடை. கரும்பனந் துண்டம் போல் கழுத்து.

கரிய உடலில் மொய்த்து இலங்கும் செம்பட்டை உரோமம். விருப்பு, வெறுப்பு எண்ணாத இயல்பு; எவர்க்கும் எவைக்கும் அஞ்சும் மருள் நோக்கு; கடுநடை; வியர்வை, புலால் முடை நாற்றம் திகழ் உடலம்; குளறுவாய்; கோணல் உதடுகள்; தெற்றுப்பல்; நான்று நலனழிந்த நகிலிணை பிணர்மோடு; மீனவர் குலமாது இவள்.

"இவளும் ஒரு பெண். இவளையும் இறைவன் படைத்தான். என்னே இயற்கை? இவளையும் எந்த ஊரினன் ஒருவன் மணப் பானோ? எவ்வாறு மனம் ஒப்பி இவளைத் தன் மருங்கு இருத்து வான்? இறுகப் புல்லுவான்? இதழ் தின்பான்?

நினைக்கவே அருவறுப்பு ஆகின்றதே. என்னே இயற்கை இருந்தவாறு" என எண்ணினார்.

எளியளை எள்ளியமை ஒரு பெருங் குற்றம். ஏந்திழையாட்கு என உருவம் அமைத்து உவந்தளித்தது மறு பெருங்குற்றம்.

இவ்விரண்டனுக்கும் இவர்க்குத் தண்டனை தர இறைவன் எண்ணினான்.

வீதிவாய்ச் சேறலுற்றார். நடந்து செல் பொழுதில் கை அணி ஆழி கழன்று கீழ் விழுந்தது. கண்டு, எடுத்து, துகிலில் துடைத்து மீட்டும் அணிந்தார். சற்றுத் தொலை சென்றார்.

மீட்டும் வீழ்ந்தது; எடுத்தார் துடைத்தார்; அணிந்தார்; கடற்கரைப் பகுதியில் சென்றார்.

உருண்டு, புரண்டு, ஓங்கி, உயர்ந்து, தாழ்ந்து, தவழ்ந்து வரும் அலைகள் கண்டார். அப்போது அவர் கையாழி கழன்று வீழ்ந்தது. அலைகள் அதனை நீருட் கொண்டு செல எதிர்ப்படு மீன் ஒன்று தன் அங்காந்த வாயினுள் அது பொதிந்தது.

இறைவன் அதற்கு ஏவலிட்டான். "உன் இரை அது அன்று. பத்திரமாகப் பாதுகாத்து வை. உமிழ்ந்து விடாதே" என.

பின் சகுறுஜின் நோக்கி ''மா இரும்புவி துதித்திடச் சுலைமான் (அலை) அவர்கள் வடிவில் நீ மாறுவாய். அவர் அரியணையில் நீ போய் இருந்து அரசாள்க'' என்று இறைஆணை ஒலித்தது.

சகுறுஜின், சுலைமான் (அலை) அவர்கள் வடிவு தாங்கி அரியணை மேவியது. அனைவரும் நபி என்று கருதினரே அன்றி மாறு எண்ணிலர்.

இங்கே, கடலங்கரையில் நின்றவாறு இருந்த சுலைமான் (அலை) அவர்கள் கணையாழி இழந்ததும்,இயல் வடிவமும் மாறப் பெற்றார். அவர் அது அறிந்திலார். பின் தம் மனைக்கு ஏகினார்.

''யாரையோ நீ? இழிசின மகனே! போ! போ! பொல்லாப் புழுமலி நோய்ப் புல்லனே. ஒல்லை ஒழி'' என்று விரட்டினர், அரியணை நாடினார். அங்கிருந்தும் அவர் துரத்தப்பட்டார்.

''நான் நபி அல்லனோ? நன்றாய்ப் பாரும்'' என்றார்.

''நீ!...நீயா நபி? நீசனே! நபி நான் என்று உரைத்த உன் நாவைத் துண்டு போடுவோம் இன்னமும் இங்கிருந்தால். போ அகன்று போ.'' எனக் கோலினால் தள்ளினர்.

ஏவற்சிலதியர், காவற் பெண்டிர், குற்றிளையார் முதல் எவரும் இவரைக் கண்டு அஞ்சினர்; துரத்தினர்; விரட்டினர்.

முன்பு எல்லாம் சூழுற விளங்கும் கிள்ளையும், குயிலும் கூட ''இவன் கொலை வேட்டுவன் போலும்; கொன்று தின்பன் நம்மை.'' எனக் கருதி, அஞ்சிப்பறந்தன.

நகர் நீங்கினார். நல்லவர் நீங்கினார்; சிற்றூர் ஒன்றில் சேர்ந்தார். அங்கிருந்தும் விரட்டப்பட்டார்.

கோர உடம்பு கண்டு அகப் பயம் கொண்டு, தூரமாக அகன்றனரே அன்றி, எவரும் துணிந்து அவர்அருகும் அடைந்திலர்.

அறுசுவை உண்டி அமர்ந்து இல்லாள் ஊட்ட, மறுசிகை நீக்கி, உண்ட தான், வறியனாய், வளத் தோற்றம் முற்றும் இழந்து, ஓர் இடத்துக் கூழ் இரக்க வைத்த விதி குறித்து வருந்தினார்.

அறத்திடு பிச்சைக் கூவி இரந்தார். அவர்க்கு மட்டும் அவ்வூரார் ஏதும் அருளகில்லார்.

"அல்லாஹ்வின் அருள் பெற்ற நபி நான். அடர் பசி பொறேன். ஏதேனும் ஈமின். சாதல் காப்பீர். இடர் தீர்ப்பீர்'' என இரந்தார்.

கேட்டவர் சினந்தார்; கை கொட்டி நகைத்தார்; கழிகொடு தாக்கினார்.

வாய் அங்காந்தது; மூரல் வெளிக் கண்டது; அயர்ந்தார்; சோர்ந்தார்; மாவீரம் போனது; நாஈரம் போனது. வயிறு முதுகு என்பில் ஒட்டியது. என்பு எழுந்து இயங்கிய யாக்கையர் ஆயினார். செவிகள் பஞ்சடைந்தன. கண்கள் இருண்டன.

தொலைவிலிருந்து நோக்குவார், "இடு குழிப்படுத்த பிணம் இயங்கி வருவது எவ்வாறு?'' என ஐயுறுவர்.

பேசவும் திறனிலார்; நடை தளர்ந்தார். ஆழிய துயரினர் ஆகி இட்ட அடி நோக, எடுத்த அடி கொப்பளிக்க, ஆழி இழந்த அவ் ஆழிக்கரை அடைந்தார்.

புலவு நாறு வெண் மணல் இடை இருந்த புல் வேய் குரம்பை ஒன்றில் சேர்ந்தார்.

அவ்விடை முன்றிலில் மீன் உணக்கியவாறு இருந்த முழுவலி மாக்கள் சிலர் இவரை நோக்கினர்.

"வெம்பசியால் இடைந்தேன். இவ்விடை அடைந்தேன். ஏதேனும் உணவு ஈக'' என்றார்.

கண்டார். "ஈனப் பிறவியான் இவனைக் காண்டலும் ஆகாது'' என்று கடிந்து ஒதுக்கினர்.

"போ. எனப் போகிலன்; போக்குவோம்'' எனப் புகன்றவாறு தடி கொடு சாடினர். சுலைமான் (அலை) அவர்கள் தரையில் வீழ்ந்தார்.

"ஐயா! நான் மறை நபி தாவூது மகன். சுலைமான். நான் என்ன குற்றம் செய்தேன்? ஏன் வெறுத்து ஒதுக்குகிறீர்கள்?'' என்றார்.

"அடப்பாவி மகனே! நீயா நபி?'' என்றவாறு ஒரு கொடியவன் அவ்விடை விரைந்து வந்தான்.

அருள் கண் மாறிய கொலைஞர், வலைஞரில் அறக் கொடியவன் அவன்.

"ஆம். ஐயா! சுலைமான் நான்தான்'' என்றார்.

"என்ன மனத்துணிவு அடா உனக்கு?'' எனப் பருத்த கழி ஒன்று கொண்டு தாக்கினான்.

விறகு பிளப்பது போல், சுறவு எறிவது போல், கழி ஓச்சினான். மண்டை உடைந்தது. குருதி பெருக்கு எடுத்து ஓடல் உற்றது.

கழியும் முறிந்தது; கையும் சலித்தது; செயல் ஓய்ந்தான். சுலைமான் அவர்களை அவ்விடம் ஒதுக்கித் தள்ளி விட்டு அவரவர் தம் பணி மேயினர்; போயினர்.

அடித்தான் மேல் சினம் கொண்டிலர்; ஒரு மொழி உரைத்திலர்; தாம் செய் தவறுகள் ஓர்ந்தார்; உடற்றும் பசியும், ஒழுகும் குருதியும் கண்டார். இளநகை கலந்தது; அழுதார். வாய்விட்டு அழுதார்.

கண்டாரை இளக்கும் கண்தாரை சோர அழுதார். தாவூது (அலை) அவர்கள், இறைவன் அருள் வேட்டு கன்னம் சுவடு பட அழுதாராமே, அதே போல் அழுதார். கன்னக் கதுப்பும் கடந்து மார்பு நனைத்து, விலா எலும்புகள் வழி ஓடி, முதகந் தண்டு வழி பாய்ந்து இடை நனைத்தது.

இவர் அழுகை கண்டு மண்ணும், மலையும், மதியும், மீனும் முகிலும், காற்றும், நெருப்பும் பிறவும் உருகின; சோர்ந்தன.

இலை செறி மரமும், இலை இல ஆகிய வன் பாற்கண் வற்றல் மரமும் கூட வருந்தின.

''ஒரு பரம் பொருளே! சில நபிமாரை நீ வாதனை இயற்றிச் சோதனை புரிந்துளாய். இவ்வாறு பட்டினி கிடக்க விட்டாய் இல்லையே!

மீமிசை உயர்நிலை என்னை எய்துவித்தது நான் இத்தாழ் நிலை மேவுதற்கோ? ஆற்றேன், அடியேன். அல்லாஹ்வே! நல்லார் உள்ளம் மேவுறு பொருளே! ஓங்கிய கருணையாளனே! இனி மறந்தும்பிழை செய்யேன்.

பிழை உளன பொறுத்து அருளல் ஆகாதோ பெரியோனே!
நட்பும் நீ; பகையும் நீ; நல்ல செய்தல் வேண்டினேன்.
நின் அளந்தறிதல் மன் உயிர்க்கு அரிதே.
எனினும் யானறி அளவையின் ஏத்துவன் திருப்பெயர்.

பேராயிரம் உடையாய், பேரருளாளனே! பொறுத்தி! பிழை பொறுத்தி என்று அழுது அரற்றி தௌபாச் செய்து 'தூங்கு இசை சுருதி பகர் பயன் தரு சத நாம'த் துதி* செயல் மேவினார்.

---

* விளக்கம்: ''இறைதத்துவக் கருத்துகள்''

"இறைவா! உயிரினம் ஓங்கி உயர்தலும், தாழ்ந்து நிலை கெடலும் உன் செயலால் தானே" என்று இரங்கித் துதித்து, உருகி, அழுது, இருகை ஏந்தி நெடுந்துஆ இரந்தார். முதலோன் வென்றி கொள் கருணை நோக்கம் தோன்றியது.

அது போழ்து வலைஞர் "ஏய் சுலைமான் பெயர்ப்பைத்தியமே! உனக்கு மணம் முடித்து வைக்கிறோம். வா! நீயும் அவளும் மனம் ஒத்து இருங்கள்.நீ எம்முடன்வலை இழுத்து வாழ். பிச்சை எடுத்து வாழ வேண்டா. என்ன சம்மதமா?" என வினவினார்.

வேறு வழியின்றி 'இறைவன் செயல் இதுவே போலும்' என்று கருதி உடன்பட்டார்.

எவள் கண்டு எள்ளினாரோ, அப்பெண்ணையே "ஈடு உனக்கு இவளே! கொள்க" என முன்பு கூறி வதுவையும் செய்தளித்தனர்.

"கடலங்கரையில் கைவிரல் ஆழி இழந்தேன். கவின் இழந்தேன் அப்பூங்கொடியாரிடை அவமானம் மேவினேன். இப்புன்கொடியா ரிடை அடியுணப் பெற்றேன். பசியால் மெலிந்து வருந்தினேன். எவையும் போக எவளை இகழ்ந்தேனோ அவளையே துணைவி யாய் அமைந்தேன் இறைவா! அலகிலா விளையாட்டு உடையாய்! தலைவா! இவைக்கு எலாம் முடிவே இல்லையா?

பிறர் பழி கூறுவார் தாம் பழி மேவுவர் என்பது மெய்யா கின்றே.

இழிவு எலாம் திரண்ட உருவம் என்று பழித்தமைக்கே அழகு இழந்து, அரசு இழந்து,ஊண் இழந்து, உறவு இழந்து, நாடிழந்து, நகரிழந்து, மானமும் இழந்தேன்" என வருந்தி, ஒரு நிலை பெறாது உணர்வும் உளமும் ஒடுங்கிக் கிடந்தார்.

வலைஞர் அவ்விருவரையும் ஒருமனைப்படுத்தினர். அனமொடு பரியமீன், அரி கறி பிறவும அனுப்பினர். அவர் உண்டதுபோக எஞ்சிய அவள் உண்டாள். பின் அவள் முகம் நோக்கினார்.

அறம் கிடந்த நெஞ்சார்; அருள் ஒழுகு கண்ணால் கண்டார். அன்று தாம் பழித்த பெண்ணே 'பாரியை' ஆதல் உணர்ந்தார். "அளவில துன்பம் அநுபவிக்கவைத்த இறைவன் இவளை யான் பழியாது, ஒழியாது மருவிடில் இரங்குவன்" என்று உணர்ந்தார்.

இருந்து, முகம் திருத்தி முகத்தொடு முகம் பொருத்திப் புல்லிக் கிடந்தார்.

புலர்ந்தது பொழுது. கனை இருட்கங்குல் வல்லே வெளிறியது. விடிதலும் வலைஞருடன் இவரும் பன்மீன் வேட்டத்துத் திமில் ஏறினர்.

வலை தொட்ட நல்ல ராசி போலும்; கொழுவிய மீன்கள் திரண்டன; வலை வீழ்ந்தன.

இது கண்ட எல்லாரும் இவர் மாட்டு மட்டிலா அன்பு கூர்ந்தனர். கொண்டனவற்றுள் உண்டன போக எஞ்சிய விற்று வேண்டுவ வாங்கி, செம்மலும் மடவியும் இன்புற இருந்தனர்.

இருநான்கைந்து நாள் இவ்விதம் கழிந்தன.

ஒருநாள் இவரை உடன் கொண்டு போன வலைஞனுக்கு, நினைத்ததற்கும் மேலாக நிறைய மீன்கள் வலைப்பட்டன.

வீடு திரும்பும் பொழுது, அவற்றுள் அழகியதாய், பருத்து உடல் கொழுத்ததாய் நீண்ட மீன் ஒன்றனையும், மற்றும் பலவும் தந்து, 'செல்க' என விடுத்தான்,

கூர் நெடுங் கருவியால் அம்மீன் அகடு வகிர்ந்தார். புன்புலால் நாற்ற வயிற்றிடை பொருந்து ஒளி மோதிரம் கண்டார்.

திரள் சோதி மோதிரத்தை நெடிது நோக்கினார். கண் புனல் வார, கைம்மலரால் எடுத்துக் கண் மலரால் ஒற்றிக் கைவிரலில் தரித்தார்.

நீதி நாயகனை, கருணையங்கடலை, ஆதியை, ஆரணனை, அழிவில் இன்ப நிறைவினைக் குறித்து அளவிலாத் துதியும்,சுகூதும் செய்து அமைந்தார்.

''சிறியேன் செய்த பெரும்பிழை பொறுப்பாய் இறைவா! இறைவா!''என்று அகம் குழையஇறைஞ்சலும் பழிப்புறு புன்புலை தோற்றம் அகன்றது. களங்கமில் மதி எனத் திகழ்ந்தார்.

முன்னினும் மும்மடங்கு முகப்பொலிவு எய்தினார். அந்த இழிசினப் பெண்ணும் வான அரம்பையர் வடிவம் எய்தினாள்.

உம்பரிடை உடையவன் ஒலி எழுந்தது:

''சகுறு ஜின்! நபி முன்போல் அரசு இயற்றச் சேர்நாள் இது. நீ உன் முன் உருவம் எய்தி இருப்பிடம் சேர்''

சகுறு ஜின்னும் அரியணை நீத்து ஆறாம்கடல் தீவகத்துப் புக்கது.

எள்ளல் மேவி, எதிர் இருந்தாளை ஏந்தெழில் மிக்க நங்கை ஆகக் கண்டார். சொல் நலப்பட புகழாளன் தனைத் துதித்தார்.

உயர் நிலையர் சுலைமான் (அலை) போல் எவரும் இலர்.
பெண்டிரில் ஈனப் பிறவி இவள் போல்வார் எவரும் இலர்.

இவள் நபி காதலியாய் காண்டகு உருவம் பெற்றாள் எனில் ஊழ்விதிப்பயனை உரைத்தலும் கூடுமோ?

''எழுது எழில் மலர்க் கண்ணாய்! நீ இங்கு இரு'' என்று அங்கு அவள் நீத்து தன் நகர் அடைந்தார்.

நகரினர் எவரும் இம்மாற்றம் அறிந்திலர். சகுறுஜின் நபி யானதும், நபி அவர்கள் வலைஞன் ஆனதும் வல்லான் ஒருவனே, அமைத்தானே) அறிவான். பிறர் அறிவது எங்ஙன்?

அரியணை அமர்ந்து மறைவழி முறை நெறி அரசு செலுத்தி னார். நாற்பது நாள் நபி அவர்கள் தம் மனை வாராமையால் வருந்திய துணைவியர்கள் அவர் வரக்கண்டு வான் மழை ஏற்ற வாடுபயிர் ஆயினர்.

இடுமணல் எக்கர் வலைஞர் சேரிக்கு, ஏவலர்ப் போக்கி அவள் வரவழைத்தார். மங்கை நல்லாட்கும் மாடம் ஒன்று அமைத்தார். நிலைதரு தரும, நெறி முறை எவையும், நீள் நிலம் தழைப்ப இனிது வாழ்ந்தார்.

தனக்கு இத்தகவின்மை வரக் காரணம் ஆன ஜமுசத்து வர வழைத்தார். வனிதை வணங்கிய சிலையைக் கைப்பற்றினார். தீயிலிட்டார். நீறாக்கினார். நீற்றினைக் காற்றில் தூற்றினார். ''எனக்குரியை அல்லை. நீ ஏகுழி ஏகு. போ போ'' எனத் தலாக்கு[1] உரைத்து அகற்றினார்.

அணங்கு பல்கீசை மணந்த நாள் முதல் உயர்வு மேவினார். பவுனவகு பாவையை மணம் கொண்ட நாள் முதல் இழிவே எய் தினார்.

''ஆக்கமும், கேடும் 'கொண்டானால்' அமைவன'' என்பது உலக வழக்கு அன்றோ?

சிலநாள் பின்னர்.

கண்மணி அனையான் கையற்று ஏங்க, பல்கீசு இறைவிதித்த படி பொன் உலகம் புக்காள்.

றபிவுலவ்வல் மாதத்தில், திங்கட்கிழமை, கேள் அலறச் சென்றாள்-

---

1, தலாக்கு—விவாகரத்து

அவருடன் ஒன்றி வாழ்ந்த யாண்டுகள் ஏழு, மாதம் ஏழு நாட்கள் இருபதுடன் ஏழு. ஈன்றெடுத்த ஆண் புதல்வர் இருவர்.

அம்மகவுகள் முகமலர் வாட, கைம்மலரால் கண்மலர் பிசைந்து அழ, விடுத்துப் பிரிந்தாள்.

'ஆயிரத்துள் ஒருத்தி, ஆன அவள் இறப்புப் பொறாராய், அவ்வாயிரவரும் அன்பு உளம் உருகினர். "பொருந்தா வதுவை" என உள்ளால் வெறுத்த ஜின் குலத்திரளும் கனிந்து அகம் உருகின.

அண்ணல் நபி, அறுபது முழநீளப் பதுமராகப் பெட்டி செய்யப் பணித்தார். தக அமைத்த மூடியினுள் "இங்கு இதனுள் அமைதி பெறும் இவள் சுலைமான் (அலை) அவர்களின் காதலி, பல்கீசு என்னும் சாலிகா[1] ஆனவள்" எனத் தெரிவரத் தீட்டினார்.

ஆவி குடிபோன அவ்வுடலை அரிவையர்க் கொண்டு புனலாட்டி, துகில் பொதிந்து, கபன் செய்து, இருள் சீக்கும் ஒளிப் பேழையுள் கிடத்தி அகன்று, பள்ளியின் அருகில் அடக்கம் செய்தனர்.

மலர் நிகர் செழுங்கரத்தால் 'நிசானி'[2]யும் நிறுத்தி மீண்டார்.

மீண்ட பின்னர், மானம் தட்ப இரவா வறிஞர்க்கும், பிறர்க்கும் ஈவகை ஈந்து உவந்தார்.

'நெருநலான் இன்றிலான்' என்ற உண்மையால் உளம் தேறி பிறர் தேற்றினார்.

ஒருநாள் சுலைமான் (அலை) அவர்கள் வீதியில் மலர்ப்பத நடை மேவினர். இடை வழியில் தலை ஏற்றிய சுமையால் தாள் தளர்ந்து மென்மெல இயங்கும் சிறுவன் ஒருவன் கண்டார்.

37. தன் பெயரோனுக்கு அன்புறு படலம்

தலைமயிர் உதிர்ந்து சொட்டை பட தோல் திரைந்து, கை காய்ப்பு பெற்று உடல் எல்லாம் முள் கீறல் கொண்டு கழுத்தும் கால்களும் சுமை பொறாது வருந்த வரும் அவனைத் தன் அருகில் வரப் பணித்தார்.

---

1. சாலிகா-நல்லடியார்
2. நிசானி-பாரசீகச் சொல். பொதுவாக அடையாளம் என்று பொருள். அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் மண் குவித்து ஒரு சிறிய கொடியை நடுவது வழக்கம். அதனை இச்சொல் குறிக்கிறது.

அவனும் அருகு போந்தான். "தம்பி! உன் பெயர் யாது?" என வினவினார். "ஐயா என் பெயர் சுலைமான்" என்றான்.

"இவ் இளமையிலேயே இவ்வாறு விறகு சுமந்து விற்று அலைவது ஏன்?" என்று கேட்டார்.

"பெற்ற தந்தை இறந்து யாண்டு பல ஆயின. சுற்றத்தார் எனச் சொல்லுதற்கும் ஒருவரும் இலர். குலம் ஈட்டிய பொருள் குன்றியேனும் இலது. வயதான தாய், நான் வாழவேண்டுமே, தினம் வனம்போய் கட்டை பிளந்து பந்தித்துக்கொண்டு, வந்து, விற்று அவ்வருவாய் கொண்டு எம்வயிறு நிரப்புவோம். வயிற்றுக்கும் வாய்க்கும் போதாமைதான். என் செய்வது?" எனச் சலித்தான்.

"நம் பெயர் உனக்கு வைத்து உள்ளனர். நலிவது ஏன்? இது கொள். இதனை முதலாகக் கொண்டு வாணிபம் தொடங்கு. நாநயம்,நாணயம் கெடாமல் வர்த்தகம் புரி. வாழ்க" என்றவராய் அவன் கரத்து ஆயிரம் தங்கக் காசுகள் அளித்தார்.

பெற்றான்; வணங்கினான்; வாழ்த்தினான்; விடை பெற்றான்; விரைந்து சென்றான்; கொண்ட விறகை விற்றான்; தன் வீடு உற்றான்.

முன்றிலில் புளிய மரம் ஒன்று ஓங்கி வளர்ந்த வீடு அது. வாயில் அடைவாக வைத்திருந்த படலை விரைந்து தள்ளிக்கொண்டு உட்புகுந்தான்.

நடந்தன அனைத்தும் தன் தாயிடம் நவின்றான், உரத்த குரலில் உவகை மீதுர.

அடுத்த வீட்டான் உரத்த குரலில் அச்சிறுவன் உரைத்தன கேட்டான். அப்பொருளைக் கவரக் கருதினான். தன் கண் அம் மனையில் பதித்தான். செயல்கள் கூர்ந்து நோக்கினான்.

அவன் தாய் அது பெற்று மகிழ்ந்து கூரையினின்றும் தொங்க விடப்பட்டு இருந்த உறி ஒன்றில், பானையில் தங்கக் காசுகளை இட்டு மூடி வைத்துத் தன் பணியில் ஈடுபட்டாள்.

அன்று இரவு அனைவரும் உறங்கும் நள்ளிராப் பொழுதில் அயல் மனையாளன் மெல்ல படல் நீக்கி, தாழ் இல் சுதவம் நகர்த்தி உட்புகுந்து, ஒலி எழா வகை இயங்கி, உறிப்படு பொருளைக் கொண்டு ஏகினன். அவ்விருவரும் அயர்ந்து உறங்கினர் ஆகலின் இது அறிந்திலர்.

பொழுது விடிந்தது. திறந்த கதவம், சரிந்தபடல், உறியில் கவிழ்ந்த பானை, ஒருபால் கிடந்தமுடி, அனைத்தும் கண்டாள். நடந்தன யூகித்தாள்.

''வந்த வாய்ப்பினைவிட வாட்டும் வறுமையே வலிமை மிக்கது. நம் கலி நம்மை, விட்டு எங்கு போகும், பாவம். பிரியமனம் இல்லாதது. இழந்ததற்கு இரங்குவது பேதைமை. நம் கவனக் குறைவு இழப்பினை உண்டாக்கிற்று'' என எண்ணி ஒருவாறு மனம் தெளிந்தாள். மகனைத் தேற்றினாள்.

வழக்கம் போல், அரிவாள், குறுந்தடி, கயிறு முதலன உடன் கொண்டு காடு சேர்ந்தான். கட்டை பிளந்தான். இறுகச்சேர்த்துக் கட்டினான், பூஞ்சுமட்டினைப் புன் தலை பொருந்த வைத்து கட்டு சுமந்தான்.

வியன் நகர் வீதிவாய்ச் சேர்ந்து ''விறகோ! விறகு'' என வெடிபடு குரலில் விளித்தான். அன்றும் சுலைமான் (அலை) அவர்கள் அவன் எதிர்ப்பட்டார்.

''சுலைமான் அல்லையோ நீ? நேற்று உன்னிடம் நாணயமாம் தொழில் புரிந்து வாழ்க எனச் சொன்னதற்கு மாறாக நிகழ்ந்தது என்? இடையூறுண்டோ? நிகழ்த்து'' என்றார்.

இரவினில் எவரும் அறியா வகை கள்ளன் எடுத்து ஏகினதை இயம்பினான்.

''போனது போக. இதனையாவது விற்று சொன்னபடி செய்க'' என மலர்க் கரத்தார் மாணிக்க மணி ஒன்று அவன் அங்கை அளித்தார். அகங்களித்தான்.

இடை ஆடையில் அது பொதிந்து, வணங்கி, வழிச் செலல் மேயினான்.

கொண்ட விறகு முற்றும் விற்று, பெற்ற பொருளையும் பொதிந்து வீடு சேர்ந்தான்.

கண் விழி மலர, அம்மணி எடுத்து, அங்கை இட்டு, விரி ஒளி கண்டு வியந்தான்.

எங்கிருந்தோ வந்த பருந்து ஒன்று ஞெரேலெனப் பாய்ந்து அம்மணியை கவ்விப் பறந்தது.

மடிக்காசு சிதற, கை கால் உதறி, பதறி, வாய்விட்டுப் புலம்பி அழுதான்,

அவன் தாய் வெளிப் போந்தாள். 'யாது நேர்ந்தது' என வினவினாள். நடந்தன நவின்றான். சிதறிய காசுகள் பொறுக்கிச் சேர்த்து அன்றைப் பொழுதுக்கு உண்டி ஆக்கி அருந்தி நீள் இரவு கழித்தனர்.

மறுநாள் காலை வழக்கம் போல் காடு சென்று காட்டம் சேர்த்து வீடு திரும்பினான். வழியில் வள்ளல் நபி அவர்களைக் கண்டான்.

கூறக்கேட்டு நடந்தன அறிந்தார். இதயம் தளர்ந்து உருகி இறைவனை நோக்கி சுக்கூறு செய்து, "இறைவா! இவன் என்றும் வறுமையில் வாடத்தான் வேண்டுமா? நலம் பெற வேண்டி நான் அளித்த பொருளையும் இவன் இழந்து நிற்பது ஏன்? யாது காரணம்? யான் அறியல் ஆகுமா! கூறுவாயோ" எனக் கோரினார்.

அரியவன் விண்ணொளி எழுந்தது:

"ஒருவர்க்கு அமைந்த கலியை யான் மாற்றுவேன்; தாழ்வு அகற்றுவேன்; துயர் தணிப்பேன் என்று எல்லாம் நீர் நினைக்கலாமா? செய்யத்தான் உம்மால் இயலுமா? என் செயலால் அமைவனவே அன்றி உம் செயலால் அது தீருமா? அன்றி மாறுமா? எண்ணிப் பார்மின்"

"கருணையஞ் செல்வனே! கருத்துப் பிழையேன். பொறுத்தல் ஆகாதோ?" எனக் குறை வேண்டி தௌபாச் செய்தார்.

"இன்றைச் செலவினை இது கொண்டு முடி" என்று கூறி வெள்ளிக் காசு ஒன்று அச்சிறுவனிடம் கொடுத்தார்.

நன்றிப்பெருக்குடன் அவன் அவ்விடம் அகன்றான்.

நிகழ்ந்தன கூறி தாய் கை கொடுத்தான். அவள் அரசனை வாழ்த்தினாள். பின் மகனை நோக்கி "அரி கறி வாங்கி வா" எனக் கூறி கடைத் தெருவிற்கு அவனைப் போக்கினாள்.

புல்லென் அட்டில் புகுந்தாள். ஆன்ற மகிழ்வுடன் அரி(சி) உலையில் இட்டாள்.

மகன் வரக்கண்டு "புளியம்பூ கறிக்குக் கூட்டிச் சமைப்பின் சுவை மிகும். பறித்து வா" என ஏவினாள்.

மகனும் மடிதற்றுத்தான் முந்துற்றான்.

மரம் இவர்ந்து மடி நிறைய புளியம் பூ பறித்துப் பொதிந்தான். ஆங்கோர் கிளையிடை பருந்துக் கூடு கண்டான். அதனுள் தான் இழந்த மணி இருக்கக் கண்டான். கிளையை இறுகப் பற்றிய வாறு,

"அம்மா! அம்மா! இங்கே! இங்கேதான் இருக்கிறது, இழந்த பொருள். நபி கொடுத்த பொருள் வேறெங்கும் போய் விடவில்லை. இங்கேயே இருக்கிறது" என்று உரக்கக் கூவினான்.

அடுத்த வீட்டுத் திருடன் அப்போது சாளரம் திறந்து வைத்து தரையில் தான் திருடிய தங்கக் காசுகளைப் பரப்பி எண்ணிக் கொண்டு இருந்தான்.

அவன் சிறுவன் எழுப்பிய உரத்தகுரல் செவி மடுத்தான். "நபி கொடுத்த பொருள் நாம் கவர்ந்ததை, எண்ணுவதைப் பார்த்து விட்டான் போலும். அவரிடம் சென்று முறையிட்டால் கள்வனை கோறல் கடுங்கோல் அன்று என்று கூறுவரே. பொருள் ஆசை போக்குமோ தலை?" என்று அஞ்சி மெல்லத் துகிலிடை அவை பொதிந்து மரத்திலிருந்து சிறுவன் இறங்குமுன் அவன் வீட்டு இறப்பினுள் அப்பொதி திணித்து, எவரும் அறியா வகை, யாதும் அறியான் போல் தன் மனை சேர்ந்தான்.

சிறுவன் மடி நிறைந்த புளிய மலர்களுடன், மனம் நிறைந்த உவகையுடன், ஒளி நிறைந்த மணி உடன் மணல் நிறைந்த மரத் தடியில் குதித்தான். ஓடி வீட்டினுள் புகுந்தான்.

வெளிப்போந்த தாய் கையில் அம்மணி திணித்தான். அவள் பெற்று விழி மலர்ந்தாள்.

"சோறு கொதி அடங்கிவிட்டது. இறக்கி வை போ" என ஏவலிட்டு இறப்பைப் பற்றித் தாழ்ந்து வீட்டினுள் நுழைய முற் படும் பொழுது கள்வன் திணித்த பொதி தரையில் விழுந்தது. காசுகள் சிதறின சண்டாள்.

அனைத்தையும் திரட்டினாள். மகனை அழைத்தாள்.

"நல்லவர்கள் பொருள் நாசம் உறாது என்பது மெய். நபி அவர்கள் நல்ல எண்ணத்துடன் அளித்தார் என்றால் நம்மைவிட்டு அவை போகா என்பது மெய் ஆகிவிட்டது பார்" எனக் கூறி மகிழ்ந்தாள்.

காணமும், மணியும் கைம் முதல் ஆக்கி வாணிபம் புரிந்து நாநயம், நாணயம் கெடாவகை நடந்து, எல்லார்க்கும் நல்ல னாய்ப் பழகி, செல்வம் மேம்பட்டான்.

அறிந்த நபியும் அகம் மிக மகிழ்ந்தார்.

மறை அருள் பெற்ற தாவூது நபி அவர்கள், பைத்துல் முக்கத்தீசு வெளியில் பளிங்கினால் பள்ளி வாயில் கட்டக் கருதினார்.

38. சகுறுஜின் ஈமான் கொண்ட படலம்

அது குறித்துத் தம் இனத்தவர் பனீ இசுறாயீல் கூட்டத்தார்க்கு இயம்பினார். அவர்களும் 'நன்று' என்றனர். கட்டிடப் பணி விரைந்து நடந்தது. ஓராள் உயரம் சுவர் எழுந்தது அப்போது வான் வழி இறையவன் ஒலி எழுந்தது :

''தாவூதே! பள்ளி வாயிற் பணி உம்மால் முடிவதின்று. உம் மகன் சுலைமான் நபியால் மட்டுமே முற்றுப் பெறும். இஃது அறிக. இம்மட்டில் செயல் நிறுத்துக!''

ஒலி கேட்டுச் செயல் தவிர்ந்தார்.

பல் யாண்டுகள் பின்னர், தந்தை விட்ட பணியைத் தொடர நினைத்த திருமகனார் திட வலி மிகுத்த, பல உரு எடுத்த ஜின்களை அழைத்தார்.

வந்தன; வணங்கின; ''ஏவல் எது என இயம்புக பெரும!'' என்று வீக்கிய கை கொடு விளம்பின.

''பைத்துல் முக்கத்தீசு வெளியில் ஒண் பளிங்கால், செய்வினை முற்றிய, நீள, அகல, உயரங்களால் பிறவினும் பெருமிதத் தோற்றம் கொள்ளும் பள்ளி வாயில் கட்டக் கருதினோம்.

பளிங்குப் பாறைகள் உள்ள இடம் அறிந்து, உரைக்க வல்லீரோ? தேவைப்படு அளவில் கற்கள் எடுத்து வருவகை யாது? விளம்புவீரோ?'' என வினவினார்.

''கோடாக் கோன்முறை கொற்றவர் ஏறே! பளிங்கில் உளி கொடு செதுக்கில் சிறு சிறு பரல்களாய்ச் சிதறுமே அன்றிப் பிளப்பரிது. தவிர அப்பளிக்குப் பாறைகள் இருக்கும் இடமும் யாம் அறிகிலமே. எனினும் அங்கு போம் வழியும், பிளக்கவும், எடுக்கவும் வல் திறலாளன் சகுறு ஜின் ஒன்றே. ஏன்ற வலியனை ஏவல் கொள்ளின் எண்ணம் ஈடேறும்'' என்றன.

''தவிர எம்மால் இசையா ஒரு செயல் இயலாது என்றல் வசை அல. பெரும! பொறுத்து அருள்க!'' எனவும் கூறின.

''வல்லவன் அருளால் அனைத்து உயிர்க்கும் அரசன் ஆகினோம். ஆனது வயது அறுபதொடு இருபது. இந்நாள் வரை அச்

சகுறுஜின் எம் நெறிப் படர்ந்திலது என்னின் என் என்பது? ஏன் நீங்கள் இதுவரை இயம்பவில்லை? 'ஒண்சுடர் சாய் முன், தனி உரவோனை எம் முன் நிறுத்தகில்லீர் எனில் உம் உயிர் உம் வயத்தது அன்று. செல்க' '' என்றார்.

''ஐயா! அச் சகுறு ஜின் தன் சுட்டு விரலாலேயே எம்மின் வலியாரையும் வளைத்துக் கொல்லுமே. அத்தகு ஆற்றல் உடைய அதனை, விடை தாங்கு விரி உலகில் வென்றி மேவுவார் எவரே.

சகுறு ஜின் பெயர் கேட்ட அவ்வளவிலேயே தோடு கொள் எம் இன நிரை நெஞ்சு அதிரும்மே; பொங்கு அரி தன்னைப் புல்லிய எலிகளோ பொரக் கருதுவது?'' என்று அஞ்சிக் கூறின.

''அப்படி ஆயின் அச்சகுறு ஜின்னை இங்குக் கொணரும் சூழ்ச்சியாவது கூற வல்லிரோ?'' எனச் சினக்குறிப்புடன் வினவினார்.

''சகுறு உறைவது ஆறாம் கடல் தீவகத்து. நாலாம் கடல் தீவகத்து நாப்பண் கொழு நீர், நன்னீர் இலஞ்சி ஒன்று உளது. எட்டு நாளுக்கு ஒரு முறை நீர் பருக அவ்வழி அது எய்தும்.

வாடை விரவினும் மயக்கம் ஏற்படுத்தும் தேள் கடுப்பு அன்ன நாட்படு தேறலை அந்நீரிடைக் கலந்து வைத்தால், நீர் உண் நசையில் மேவும் அது வயிறு ஆர அருந்தி, மயங்கிச் சோரும்.

அப்பொழுது நாம் எடுத்துச் செல்லும் இரும்புச் சங்கிலிகளால் அதன் தாளும் தோளும் முடங்க இறுக்கி, தகை பெறப்பிணித்து, தக்க மிதவைகளில் ஏற்றி, நம் நகர்க்கடல் கொணர்ந்து, பின் கால்வல் சகடத்தில் ஏற்றி இவ்விடைக் கொணரலாம்.

இத்தகு வழி ஒன்று அன்றி, அதன் எதிர் நின்று பொரல் என்பது பொன்றல் விருப்பினார் பொருந்துவது ஆகும். இயலாத ஒன்று'' என்று மென் குரலில் கூறின.

நபி அவர்கள் அவை கூறிய கருத்துக்கு உடன்பட்டார்.

கொடி முந்திரிகைச் சாறு கொண்டு சமைத்த மதுவும், அதனினும் வெறி மிகுக்கும் பிறவும், இருப்புச் சங்கிலிகள், வடகயிறுகள், வல் மிதவைகள் கொடுக்கப் பணித்தார்; கொள்ள ஏவினார். 'செல்க' என விடுத்தார்.

ஜின் திரள் தடநெடும் புணை ஏறி அத்திசை போய் நாலாம் கடல் தீவுக்கரை சேர்ந்தன.

நடுவண் அமைந்த அப்பொய்கைத்தலத்து முன் சொன்ன வண்ணமே மது நிரம்பக் கலந்தன. தம் பொருள்களோடு செறி மரச்சார்பில் ஒதுங்கின, மறைவாய்.

விண் இயங்கு வெற்பு என விரைந்து சகுறு ஜின் பறந்து வருவது கண்டு வெருவி, மரங்களோடு கொடிகளாய்த் தம் உடல் பின்னின, கிடந்த.

வந்த சகுறு நீர்த்தடத்தில் இழிந்து நீர் மது மணம் பரந்து வீசுவது கண்டது.

நீரிடை மது வரக் காரணம் யாது என அறிகிலதாய் வனமும், மலையும், விண்ணும், புவியும் அதிர மறைந்துள ஜின்கள் மனம் துணுக்குற திமிலம் இட்டு (பேரொலி எழுப்பி) ஆர்த்தது. இவ் ஆர்ப்பு ஒலியால் தடத்து நீரில் பேரலைகள் எழுந்தன என்னில் அவ்வொலி மிகையை அறைதல் ஆகுமா?

''மதுவே! உன் கொண்டார் தம்மை ஆட்டுவிக்கும் ஆற்றல் உடையை! ஆன்ற அறிவினரும் உனைக் கொளின் அடு மடையர் ஆவர். எவ்வாறு வந்து இவ்விரும்புனலிடை இரண்டறக் கலந் தாய்?

உன் உண் நசையர் நகைப்பார்க்கிடமாய் கீழ்மை மேவுவரே!

ஐந்தொகைய பெரும்பாதகத்துள், தலைமை இடம் உனக்கு அன்றோ? உன் வயப்பட்டார் கொலை, களவு, பொய், குரு நிந்தை ஆன நான்கும் அமைவரப் பெறுவரே!

பூரியர்கள் ஆழும் அளறு உன்னால் கிடைக்கும் பயன் அன்றோ?

உனக்கு ஒரு நெடு வணக்கம். கொள்ளேன். செல்வேன். உனக்கு ஒரு கும்பிடு'' என்று உரைத்து தூ நீர் வேட்டு எழுந்தது.

மூன்று நாட்கள் பல்லிடத்தும் அலைந்தும் பெற இயலாது மீட்டும் தடக்கரை அடைந்தது.

''நா வறண்டது; உள் ஈரம் அற்று வருந்துவேன். வேறென் செய்வேன். முதிர் பெருந்தாகம் உற்றேன் உண்பேன். யாதேனும் தான் ஆகுக. யான் என் தாகம் பொறேன்'' என்று தன் நெடுமலை வயிறு ஆரப்பருகியது.

வெறி மிக்கது; உணர்வு அழிந்தது. விழிகள் சிவந்தன. தடக் கரை நிற்கவும் ஆற்றாது தள்ளாடியது; தலை தொங்கியது.

நிலம் கிழிய, குழிய, நீர்ப்பரப்பு அலை எழ, தரையில் சாய்ந்தது.

கண்ணிமைப் பொழுதும் சோராது காத்துள ஜின்கள் கடிதின் கூடின. இருப்பு வலைக்குள் அதன் உடல் பொதிந்தன. சங்கிலி கொண்டு அதன் தாளும், தோளும், தலையும், கையும் முடக்குறப் பிணித்தன.

கடற்கரை அகத்து இழுத்துச் சென்றன. மிதவையில் கிடத்தின. ஜின் திரள் துடுப்பு வலித்தன. சில ஜின்கள் பிணைத்த கயிறுகள் கைப்பற்றி மிதவைக்கு முன் வான் வழி பறந்து, ஈர்த்தன சென்ற.

நெடு நீர்ப்பரப்பு கிழித்து விரைந்த மிதவை பெருங்கடல் முழுவதும் நீங்கி சாம் நகர் அணித்தே கரை சார்ந்தது.

சார்ந்த அளவில் மதுவின் வெறி மென் மெல நீங்கிய சகுறு விழிச் சிவப்பு நீங்கிடப் பெற்றது. தன்னையே சுற்றும் முற்றும் பார்த்தது.

இடர்ப்பட இருத்திய தொடர்கள் கண்டது. மூண்டெழு சினத்தொடு பெருமூச்சு விட்டது. அவ்வளவில் பிணைத்த சங்கிலியும் மூட்டுவாய் நெகிழ்ந்தது. நிமிர்ந்து தகர்ந்து சிதறிற்று.

ஈர்ஞ் சிறகர் உதறும் சரபப் புள்போல எழுந்துநின்ற சகுறு, உடல் உதறிய அளவில், முடக்கிய தொடக்குகள் முற்றும் அகன்று தெறித் தோடக் கண்டது.

பற்றி ஈர்த்தார், கொணர்ந்த ஜின்கள் காற்று எதிர் குவித்த இலவம் பஞ்சு போலச் சிதறி எண்டிசையிலும் ஓடக்கண்டது.

"விடேன். நெஞ்சைப் பிளப்பேன். தொட்டு ஈர்த்த கைகளைப் புய்த்து எறிவேன். ஓடும் கால்களை ஒடித்துப் போடுவேன்." என்று அதிவிரைவொடு தொடர்ந்தது.

"எங்கு ஓடினும் சகுறு நம்மை விடாது. வேறு வழியில்லை. நபி பாத பங்கயமே நமக்குப் புகலிடம்" என்று உரைத்தனவாய் மிகுவலி கூட்டிப் பறந்து அவர் திருமுன் சார்ந்து வீழ்ந்தன.

ஆரவாரமும், அதிசினமும் மேவப் பின் தொடர் சகுறுவும் அவர் முன் எய்தியது.

எழிற்கரத்து ஆழியும், மூசா கொண்ட முதிர்நல ஆசாவும் அதன் கண் முன் தெரிதரக் காட்டினார்.

அவ்வளவில் ஓங்கு வலி எலாம் ஒடுங்க, மனத்தகத்து வெருவி அயர்ந்து, வெண்ணகை ஒளிர முறுவலித்து, நபி அவர்கள் தாளிணை வணங்கி, எழுந்து கை வீக்கி, குனிந்த தலை கொண்டு குறுகி நின்றது.

''சகுறு! நீ முறுவல் கொண்டது ஏன்? முடலை யாக்கை முழுவலியாளன் என்ற அகந்தையாலா? இவன் என்ன செய்வான் நம்மை? என்ற இறுமாப்பாலா? யாதுகாரணம்?'' எனச் சினக் குறிப்புத் தோன்ற வினவினார்.

''அரும் பெறல் மரபின் பெரும் புகழாள! அடிமை நான். அவ்வாறு எல்லாம் நடக்கவோ, கருதவோ கூடுமோ?

ஜின்களைப் பற்றித் தொடரக் கருதிப் பறந்து வரும் பொழுது நாட்டில் சில நிகழ்ச்சிகள் கண்டேன். அரியதாம் மானிடப் பிறவி அடைந்தும், இத்துணை மடமை கொண்டாரும் உளரே! என நினைக்கும் தோறும் நகையே மிகுமால். நபிகள் ஆட்சியில் இவ்வாறு நடக்கலாமா? என எண்ணினேன். என்னையும் மீறி நகைத்தேன்'' என்று கூறியது.

பிடித்து வரச் சென்ற ஜின்கள், நபி அவர்களைச் சூழ இருந்தும் கால் நடுங்க, கவுள் புடைத்து நடுங்க, பற்பறை கொட்ட இருந்தனவே அன்றிப் பயம் விட்டில.

''சரி. சகுறு இறைவன் நம்மை அரசனாய், ஆன்ற நபியாய் அமைத்து இருப்பதனை அறிந்தும் நீ பணிபு அறியாதது ஏன்? ஏன் வந்திலை?'' என வினவினார்.

''உண்மைதான். ஆறாங்கடல் நடுத்தீவகத்துத் தனி அதிபதியாய் இருக்கும் நான், கொண்ட பதவி ஆசையால், தலைவன் நிலை பறிபோமே என்ற வருத்தம் மிகத் தங்களைக் காண வந்திலேன். எங்கோ ஒரு மூலையில் இருக்கும் என்னைப் பற்றிப் பொருட்படுத்த மாட்டீர் என எண்ணினேன். பெரும் பிழைதான். ஒப்புகிறேன்.

மகவு செய் பிழைகளைத் தாய் மன்னிப்பது இல்லையா? மூடர் செய் தவறுகளை அறிஞர்கள் மறப்பதில்லையா? அடிமையர் செய் குற்றங்களை ஆண்டான் பொருட்படுத்துவது இல்லையே!

அது போலவே, என் பல பிழையும் பொறுத்திட வேண்டும் பெரும!'' என்றது.

''உன் மன நிலை புரிகிறது. நீ பெரும் பிழை ஏதும் புரிந்திலை. போனது போக. குற்றங்கள் மன்னிக்கப்பட வேண்டியனவே.

இதயத்து ஈண்டு இறைவனுக்கும், நமக்கும் வழிபட்டு இயல் கலிமா பகர்க'' என்றார்.

செவிக்குத் தேன் என செப்பிய மொழிகளை ஏற்று, அரியவன் கலிமா அன்பொடு விளம்பி, ஈமான் கொண்டு, உகந்து, இசுலாத்தில் புகுந்து நின்றது.

சுலைமான் (அலை) அவர்கள் சகுறஜின் நோக்கி ''உன்னை இங்கு வரவழைத்ததற்குக் காரணம் உண்டு. ஓர் அரிய செயல் நடை பெறல் வேண்டும். அதலனச் செய்யத் தக்கவன் நீயே! பிறர் அலர், என்று நன்கு தெரிந்தோம்.

39. பைத்துல் முக்கத்தீசுப் படலம்

பைத்துல் முக்கத்தீசு வெளியில் எள்ளரு சிறப்பின் எழிலார் பள்ளி வாசல் ஒன்று இயற்றக் குறித்தோம். பளிங்குப் பாறைகள் உள்ள இடம் அறிந்து, சார்ந்து, போழ்ந்து, எடுக்க வல்ல திறத்தவன் நீ என நன்கு அறிவோம்.

யாது உன் கருத்து?'' என வினவினார்.

''ஐயா! அப்பளிக்கு மலை எங்குள்ளது என்று துருவியே காண்டல் கூடும். ஒரு வேளை காணினும் பிளந்திடுதல் மிக அரிது. இடு கதிர் வைரத்தால் தான் வகிர்ந்து, (வெண்ணெய் போழ்வது போல்) வெட்டி எடுக்க இயலும். நம்மிடம் உள்ள வைரங்கள் கொள்ளலாம், எனினும் தேவைக்கு இவை போதா.

வைரப் பாறைகள் மலிந்துள இடம் உவணச் சேவல் ஒன்றே அறியும். வைரம் பெறவும் வழி ஒன்று உண்டு.

கருடன் படரும் அன்புடன் இருத்தும் கூடு அடைந்து, அது இல்லாப் போழ்தத்து அங்கு உள்ள குஞ்சுகளைக் கவர்ந்து அவற்றை ஒரு பளிங்குப் பெட்டகத்துப் பொதிந்து மூட்டுவாய் இறுக்கி, ஒரு மலைக் குகையில் வைத்து விட வேண்டும்.

புன்மாலைப் பொழுதில் கூடு நாடும் கருடன் தன் குஞ்சுகள் அங்கு இன்மை அறிந்து அவை தேடிப் பறக்கும். குகையில் கண்டு பெட்டி திறக்க வழி தேடும். திறக்க இயலாது. பின் வைரப் பாறைகள் உள்ள இடம் நாடிப் பறந்து சென்று பேழை திறக்க

வைரம் கொணரும். ஜின்களில் சில மலைக்குகையில் ஒளிந்து இருந்து அதன் செயல் அனைத்தும் கவனித்து வரவேண்டும்.

கொணர்ந்த வைரத் துண்டால் பெட்டி வகிர்ந்து, பெட்டியும் வைரமும் அங்கு கிடத்தி, விடுவித்த குஞ்சுகளோடு தன் குடம்பை சேரும்.

நாம் அது கிடத்திய வைரத்துண்டு கொண்டு, வைரப் பாறைகள் மல்கிய வரை நாடி, வேண்டு மட்டும் வெட்டு வைரக் கருவிகள் செய்து கொள்ளலாம். பின் பளிக்குப் பாறைகள் உள்ள இடம் சென்று வெட்டி எடுத்து வரலாம்'' என்றது.

''செய்க'' எனப் பணித்தார். அவ்வாறே செய்தது; செய்தன.

தன் குஞ்சுகள் காணாது வருந்திய கருடன் பல இடங்களில் பறந்து அலைந்து மலைக் குகையுள், பளிங்குப் பேழையுள் குஞ்சுகள் ஒரு மூலையினுள் ஒன்றியவாறு கதறி ஓலமிடுதல் கண்டது. பெட்டி மீது அமர்ந்து கால் உகிரால் பதிவு உற வகிர்ந்தது. பயனின்மை கண்டு, கலங்கி, பெட்டியை மோந்தது. வேறு வழி காண்டல் கூடுமோ என்று ஆய்ந்தது. பின் (ஜின் குறிப்பிட்ட படியே) வைர மலையை அடைந்தது. அங்கிருந்து வைரத்துண்டு ஒன்று வளைதரு கூர் வாயினால் எடுத்து வந்தது.

அடைத்த பெட்டி மீது அமர்ந்து, மிக்க கவனத்துடன் வகிர்ந்தது. போழ் ஒலி சிறிதும் எழுந்திலது. குஞ்சுகளை வெளிக் கொணர்ந்து கால் உகிர்களால் கவ்விப்பறந்து தன் இடம்சார்ந்தது.

இது நன்கு அறிந்த ஜின்கள் முன் குறிப்பிட்டது போலவே கருடன் கிடத்திய வைரத்துண்டு கொண்டு,வைர மலை அடைந்து பல வைரத்துண்டுகள் வெட்டி எடுத்து மீண்டன.

அடுத்து பளிங்குக் கற்கள் வெட்டு வகை பற்றி ஆய்ந்தனர்.

தூண் கற்கள், பாவு கற்கள், மதிற் கற்கள் என, எத்துணை வகை தேவை? எனவும், வகைக்கு எத்துணை? எனவும், அவற்றின் நீள, அகல, கன அளவுகள் பற்றியும் முழுமையாகக் குறித்துக் கொண்டு செயல் மேவப் பளிங்கு மலை நாடின.

கொண்ட அளவுப் படி கற்கள் வகிர்ந்தன; தோள் கொடு சுமந்தன; பைத்துல் முக்கத்தீசு வெளியிடை அடுக்கின.

பளிங்கு மலை இருந்த இடம் வெட்ட வெளி ஆயிற்று.

தாட்டிக துரிய ஜின்கள், மருள், அடல் பெரும் பூதங்கள் நரர்கள் எனப் பல் வகைப் பணியாளர் தம் தமக்கு உரிய பணிகளைச் செய்தனர்.

செம்மை, கருமை, வெண்மை எனப் பளிங்குக் கற்களின் குவை வானம் தடவக் கண்டார், சுலைமான் (அலை) அவர்கள்.

சதுர, நீள் சதுரக் கற்கள் சிறிதும் பிசிர் இல்லாதனவாய் அமைக்கப் பெற்றன.

செய்வினை முடித்த செம்மல் உள்ளத்தோடு சகுறு வெற்புகள் கிடுகிடுக்க வாய் விட்டு ஆர்த்தது. நபி அவர்கள் பூவகை கமலப் பாதம் புக்கது. அவரும் மகிழ்ச்சி பொங்கினார்.

பணி தொடங்கியது. மதில் மேல் எண்ணில ஒழுங்குப் பளிங் கினை அடுக்கினர். இடையில் ஒரு சிறு தடை, இடர்ப்பாடு ஏற் பட்டது. அதனையும் விரைந்து தீர்த்தார். கற்களைப் பொருத்த வெண் பசிய சாந்து அரைத்துப் பயன்படுத்தினர்.

மேல் தளமும் படிகத்தால் இயற்றினர். ஒளி உமிழ் மணிகள் பல, மதில் சுவரிலும், பிற இடங்களிலும் பதிக்கப் பெற்றன.

ஆயிரம் தூண்கள் நிறுவப் பெற்றன, அத்தொழுகைக்கூடத்து. தூண்களைச் சுற்றிக் கொடிகள் தழை, மலர், காய், கனி கொண்டு விளங்குவ போல் நுண்ணிய வேலைப் பாட்டுடன் செதுக்கப் பெற்றன.

செய்தக்க பணிகளை நான்கு பங்காக வகுத்தார். நரர்கள், ஜின்குலம், சைத்தான்கள், பூதங்கள், எனும் நால் வகையார் தனித்தனி அவற்றைச் செயல் மேவச் செய்து அமைத்தார்.

இவ்வாறாய்ப் பைத்துல் முக்கத்திசு பள்ளிவாயில் காண்பார் வியப்புறச் சிறப்பாகச் செய்து அமைக்கப் பெற்றது.

**40. சகுறஜின் கூட்டம் ஈமான் கொண்ட படலம்**

சகுறு, எடுத்த செயல்கள் யாவினும் வெற்றியே மேவும் கொற்றவர் இணைத்தாள் குறுகி, "அடிமை சொல் சில கேட்டு அருள வேண்டுகிறேன்." என்று கூறி பணிவுடன் நின்றது.

"ஐயா! நான் இங்கு வந்து நாள் பல கழிந்தன. அங்கு என் துணைவியும், மக்களும், குடிகளும் என்னைக் குறித்து 'அகன்ற இடத்தில் வந்த அல்லல்யாதோ? அவர் வந்திலரே' என ஆழ்ந்த கவலையராய் இருப்பர்; தேடுவர்; வாடுவர்.

தவிர, நான் மட்டும் உயர் கதி இஸ்லாம் சூழ்ந்தேன் என்பது நன்று அன்று. எம்மவர் காபிராய் நின்றிடல் பழுது அன்றோ? அவரும் அந்நிலை நீங்கி, ஈமான் கொள்ள வேண்டாவோ? அதற்கு ஆம் வகை அவர் அறிகிலரே!

சென்று, மீளவர, விடைதரின் நன்று. அவ்விடம் சார்ந்து இணங்கியார் கருத்தை இணக்கி, உம்மிடை அழைத்து வந்து ஈமான் கொள்ளச் செய்வேன்.

உற்றவர் அவர்களும் உயர்கதி மேவ உதவுதல் வேண்டும். பெரும!'' என்று இறைஞ்சி நின்றது.

''நன்று, சகுறு. வல்லவன் கலிமா அகத்தினும் மறவாது உரை. அறன் வழுவாதே. ஆய்ந்து ஒழுகு'' என்று பல நன் மொழிகள் இயம்பி, ''நீ நினைத்த அப்பரிசே செய். தன் நிழல் வாழ்நர் தகு நிலை மேவச் செய்வது தானே தலைவன் பொறுப்பு. செல்க'' என்று கூறி விடை தந்தார்.

இறை சலாம் விளம்பி, இறைப் பொழுதின்கண் விண் கூடி விரைவொடு பறந்து தன் தீவகம் சார்ந்தது.

இழந்த உயிர் பெற்றது என இறும்பூது எய்தினர் சகுறு ஜின் சார்ந்தார்.

சூழ்ந்தனர்; பணிந்தார்.

''மன்னவர் ஏறே! மழை முகிலே! எம் மறந்து எங்கு உறைந்திர்? உறைபதி நீத்து எப்பால் உற்றீர்? அறியக் கூறின் நன்று.'' என்றனர் அமைச்சர்.

நீர் வேட்கை மிக, மது கலந்த நீர் பருகியதும், தளைபட்டதும், விடுபட்டதும், நபி அவர்கள் தாள் புக்கதும், 'கலிமா' பகர்ந்ததும், ஈமான் கொண்டதும், செயற்கரியதாம் செயல் முடித்ததும் தற் சூழ்ந்தார்க்குச் செப்பிற்று.

அவர்களும் கேட்டவை, கேட்டவை விடாது உளத்து அமைத்து வியப்பில் ஆழ்ந்தனர்.

தன்னில் செம்பாகம் ஆயினாட்கும், கண்ணின் பாவை நடை கற்று அன்ன மகட்கும் இயம்பிற்று.

''கூடி இருந்து, நெஞ்சம் குளிர்ந்து, கொற்றவர் சுலைமான் (அலை) அவர்கள் குரை கழல் பணிவோம். ஊரீரேயோ! உடன் திரள்வீரே! வாரீர்! வாரீர்! வளப்படு தீன்நெறி மருவ'' என்ற வாறு திருமலி முற்றத்து ஜின் கணம் திரண்டது. நகர் வறிதுபட அனைத்தும் சாம்நகர் சேர முன்னின.

இயங்கு இயல் காற்று நபியிடம் இச்செய்தி தெரிவித்தது.

"வரு விருந்தினர்க்கு உடை, உண்டி, உறையுள் ஏற்பாடு செய்க. வரிசை அறிந்து வரன்முறை வழாது செயல்படுக. குறை ஒன்றும் எழாவகை கவனம் கொள்க!" என்று தமர்க்கு ஆணை இட்டார்.

முறைப்படி சகுறு தன் தூதுவனை முன் போக்கியது.

முடிவிலாப் புகழாளன் தூதரான சுலைமான் (அலை)அவர்கள் வந்த தூதுவனை வரவேற்று உபசரித்து, தாம் செய்துள்ள ஏற்பாடுகள் அனைத்தும் கூறி "வருக" எனச் செய்தி தெரிவிக்கச் சொன்னார்.

அகல் நகர்போல் அமைந்த மாளிகைகளில் அவர்களை இருத்தினர். "நயம் பெற விருந்திட்டு அருள்க" எனத் தம் ஏவலர்ப் போக்கினர்.

அவர்களும் அறுசுவைக் கறிகள், அகல் வானவரும் வேட்க அற்புதம் கொளச் சமைத்து, நயம்பெற விருந்தினரை அழைத்து அமர்வித்து, பக்கல் இருந்து, பரிவுடன் நோக்கி, விளங்கு பொற் கலத்தில் விழைவன பேணி ஆனா விருப்பினொடு ஆர உண்பித்தனர்.

வெய்து உண்டு வியர் அறிந்த அவர்கள் மெய்யிடைக் களபச் சந்தனமும், அத்தரும், புனுகும், கலந்து திமிர்ந்தனர்.

பின் சகுறு, அதன் அமைச்சு, அவர் தம் மனைவியர் மக்கள் நீங்கலாகப் பிறர் அனைவரும் வள்ளல் நபி உழை அணுகி, அன்பு வகை ஆர்கலி கரை புரள திருவடி இறைஞ்சி நின்றனர்.

வரன்முறை அவர்களை ஆதனத்து இருத்தி "கலிமா நிகழ்த்துமின்" என்று முன் உரைத்தார். அனைத்து ஆறாங்கடல் தீவக ஜின்களும் (நால்வர் தவிர) அக உறுதி பெருக, கலிமா உரைத்து, ஈமான் கொண்டு, அரிய நற்பலன் படைத்தன.

பின் தமரொடு தம் உறைவிடம் புக்க சகுறு (விருந்தின் மனை) அடைய "இங்கு எவரும் இரும்" என இருத்தி, அமைச்சுடன் எழுந்து நபி பால் நண்ணியது.

"ஈமான் கொள்ளவேண்டியவர் இன்னமும் உளரோ?" என நபி வினவ,

''என் மனைவி, மகள், அமைச்சர் மனைவி,மகள் ஆன நால்வர் தவிர அனைவரும் இஸ்லாம் மேவினர்'' என்றது.

''ஏன் அவர்கள் வந்திலர்?'' என அவர் வினவ,

''நாண் மிக்குடையவர், கவி இருட் கங்குலில் காண வருவர். ஆனால் அவர்கள் வரும்போது நும் நகர் ஆடவர் எவரும் பக்கலிலோ, ஊரிடத்தோ வெளிவராது இற்செறிக்கப்படுதல் வேண்டும்'' என வேண்டியது.

''நன்று'' என்று உரைத்து ''இன்று கதிர் சாய்ந்ததன் பின் ஆடவர் எவரும் வீதி வாய் இயங்கல் ஆகாது. வெளிவரக் கூடாது. மனையிடைக் காப்பும் பூணுமின். கடையும் போகலீர்''எனப்பறை அறைவிக்க ஆணை இட்டார்.

தம் மாட்டும் ஆடவர் அனைவரையும் அகற்றிவிட்டு ஒரு தனி இருந்தனர், உரவோர்.

சகுறுவின் அமைச்சன் ஏவல் வழி, அவன் மனைவியும் மகளும் மகிழ்வுடன் மன்னர் மாடு அணுகி ஒவ்விய கலிமா உவந்து நிகழ்த்தி ஈமான்கொண்டு இருமலர் துதித்துச் சார்ந்தனர் ஒருபால்.

அடுத்து சகுறு உரைத்தபடியே அதன் மனைவியும் மகளும் புறப்பட்டனர்.

பூங்கொடி, தன்னை ஒப்பனை மேவி, புண்ணிய நறுமலர் ஆடை போர்த்து, பூசிய களபம் கம, கம, கமென, அரிமயிர் முன் கைத் தொகுவளை கல, கல, கலென, பணி திரள் நகைகள் பள, பள, பளென, செயிர் தீர்மேனித் தள, தள, தளென, பிடி, அனம் பேதுற மெல, மெல, மெலென அடி பெயர்த்து அருமணிச் சிவிகை யில் அமர்ந்தனள், ஊர்ந்தாள்.

ஜமால் என்னும் பெயரியள் இவள். தன் ஈன்றாளும், தானும் சிவிகை தாமும் தகை பெற மேவி பொறுத்தாரை நபி மாளிகை நோக்கி ஊர்ந்து செல்லப் பணித்தாள்.

செவ்வியள்; அவள் மகள்; செப்பழகு உடையாள்.

சகுறுக்கும், அதன் துணைவிக்கும் 'இரு கண்மணியாய் உதித்த கலைவளர் காதலிப் பெண்' அவள்

விண் நீத்து மண் பயிலும் மின் அனையாள்.

உலகெழில் அனைத்தும் ஓரிடம் தொக்காற் போன்ற உரு வினாள்,

புயல் சுமந்து பிறை அணிந்த பொருவிலாள்; பொருவிலாள். ஒரு கொடி சுமந்த பல்மலர் நிலையினாள். குடங்கையின் அகன்ற தடங்கண்; குமிழ்மறித்து மீளும் குவளைகள்; ஆம்பல் நாறும் தேம் பொதித்துவர் வாய்: பூங்குழை ஊசல் பொறைசால் காதுகள்; அரவம் கான்ற அணிசால் மதிமுகம்.

புறந்தாழ்ந்து இருளிய பின்னுவிடு கதுப்பு;கொழுகடை மழைகண்; ஆடமை பணைத்தோள்; அம்மெல்லாகம் நிறைய வீங்கி ஈர்க்கிடை போகா ஏரிள வன முலை.

வளர்சுமை; தளர் இடை; வடதள உதரம்; நீர்ப்பெயல் சுழியின் நிறைந்த கொப்பூழ்; செறிந்து திரள் அரம்பை நேர் தாக்குறு தொடைகள்; வாங்கிய நுசுப்பு; துள்ளுவரால் எனச் சொல் புகழ் கணைக்கால்; ஆமைப் புறஅடி; அலவன் முழந்தாள்.

வருந்து நாய் நாவின் பெருந்தகு சீறடி, உரோமப் பகந்தாள் ஒன்றில் இரண்டு அந்திக் கமலம் கொண்டுவரும் காலைக் கமலம் சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் ஒளியள்; அளியள்.

குழைபடு விழியாள்
கழைபடு மொழியாள்
இழைபடும் இடையாள்

மூரல், முறுவல், முருந்து, முத்துறழ் ஈரப் பசைஇய இணை செவ்விதழாள்.

இவர்கள் வந்த சிவிகைகள் இணையிலான் தூதர் திருமுன் சேர்ந்தன.

"சகுறு மனைவியின் சிவிகைப்படம் திறந்திடுக" எனப் பணித்தார்.

மின் ஈன்ற மின், மன் முன் நின்றாள்; இறைஞ்சினாள்.

பின் 'கலிமா' உரை என நபி கூற, மொழிந்தாள்; குபிர் இருள் ஒழிந்தாள்; மெல்ல ஒதுங்கி ஒருபுடை நின்றாள்.

அடுத்த சிவிகை அவர் முன் அடைந்தது.

திரை அகன்றது. திருஅனையாள் வண்ணச் சீறடி மண் மகள் ஏந்தினள்.

பிறங்கு பேரொளி எங்கும் பரவியது. மனை ஒடுங்கிய ஆடவர் "திடீரென்று யாண்டும் ஒளி வெள்ளம் பெருகியது ஏன்?" என அறிய ஆர்வம் மிகினும், ஆணைக்கு அஞ்சி புறம் போந்திலர். "விடிந்ததன் பின்னர் விளம்புவம் நபிபால்" என அமைந்து அடங்கினர்.

விரிகதிர்த் திரள் ஒளி வெவ்விதோ, தண்ணிதோ என அறிகிலவாய்ப் பங்கயக் குலமும் ஆம்பல் மலர்களும் ஒரு நிலை உறாதனவாய் மலர்ந்தன; கூம்பின; மயங்கின; சாம்பின.

ஆன்ற பொறைசால் அறிவுடை நபிகள் தாமும் கண்டு நிலை தளர்ந்து, மயற்கடல் ஆழ்ந்தார்; உணர்வு ஆம் பிணை பெற்று உய்ந்தனர்; கடந்தார்.

அனைத்து உயிர்க்கும் அயர்வு அகற்றி அருள் தாங்கி ஆதரிக்க வல்லாரே மயற்கடல் கரை பெறாது உருகினர் என்னில் இவள் காணில் மயல் உறார் ஆர்?

புனைவன நீங்கில் புலால் புறத்திடூஉம் மானிடர்க் கூட்ட மங்கை அல்லள் இவள்; இளையாள்; அழகியாள்; வீறார்ந்த திருவினாள்.

"இவட்கு அரம்பையரும் சேடியாம் தரத்தர் அல்லர்; உலகு உள ஒளித்திரள் ஒருவழித் தோன்றியாங்கு, மாது என நம் கட்புலம் கதுவக் கண் முன் நின்றாள் இவளை நம் காதலியரும் கண்டு களி கூர்ந்து மகிழ்தல் வேண்டும்" என விழைந்து தாம்வாழ் மாளிகைகட்கு அவளை அனுப்பினார்.

ஆயிரவரிடை அவளும் புகுதலும் அளவில் ஆர்வினர் ஆகிச் சூழ்ந்தார். "பொன் உலக மாது பூவுலகில் புகுந்தது எப்பொருட்டால்?" என அதிசயித்தனர்.

"கண்பிற பொருளில் செல்லா, பெண் பிறந்தேமுக்கு" என்று வியந்து, தழுவி, உள் மகிழ்வாய் முகமன் கூறி அமைந்தனர்.

"அரிவையர் ஆண்மையை அவாவு நலத்தள்" அவள் அழகெனும் நறவினை விழி இணைச் சுரும்பர் ஆர மாந்தினர்.

அறுசுவைக் கனியுடன் அனமும் பிறவும் உடனிருந்து ஊட்டி, ஏலவார் குழலில் நானமும், தகரமும் நலம் பெறப் பூசி, அலங்கரித்தனர்.

தமக்கெனக் கொண்ட தகைபடு அணிகளும், பூவார் பட்டுக் கலைகளும் பிறவும், உவந்தனர், ஈந்தார். "கொள்க" என முன்பு கொடுத்தார்.

பின் 'செல்க; வரற்பொருட்டு' என விடுத்தனர், செல்வழி பதிந்த சேல்விழி மாதர்.

நால்வர் மாதரை "நலம் பெற நும்தம் சார்பினில் புகும்!" என நபிகள் விடுத்தார்,

நில்லா இரவு நெடிது உடற்றக் கண் படை பெறாது, கலக்கம் உற்று இருந்தார்.

பொழுதும் புலர்ந்தது.

நன்னகர் உள்ளோர் நபி பதம் மேவி, ''எம் தம் நாயகமே! இயம்புந கேட்டருள்க. நேற்று காருவா ஆதலின் எல்லை சேர்ந்த பின் இருள் பெரிது பட்டது. ஆனால் கட்புலம் காண விட்புலம் தன்னுள் விளங்கு பேரொளி பரவியது. ஆணைக்கு அஞ்சி வெளி வந்து கண்டிலம். ஆயிரம் மதியம் ஒருங்கு கூடினாற் போல அவிர் ஒளி கண்டோம்.

அதிசயம் ஆகலின் எவ்வாறு அமைந்தது இவ்வாறு எனவே அறிதல் வேண்டி, நும் தாள் அடைந்தோம்'' என விளம்பி நின்றனர்.

''சகுறுஜின் அரும்பெறல் மகள் எம்பால் நண்ணி, கலிமா விண்டு, ஈமான் கொண்டு தன் மனை திரும்பினள். ஆடவர் காண அவர் வாரார் ஆகலின் ஆணை அவ்வாறு பிறப்பித்தோம். அவள் திருமேனி ஒளியே இரவு பகல் செய்தது.

அவள் நீத்ததற்பின் அற்றம் பார்த்து அல்கிருள் சூழ்ந்தது'' என்றார்.

வனிதை வனப்பு எனும் வடவை அவர் அகத்தை மெழுகு என உருக்கியது. பொறாராய் சகுறுவின் அமைச்சரை வரவழைத்தார்.

''கொண்டலங் குழலி குமரியோ? அன்றி கன்னிமை இழந்த காரிகையோ?'' என வினவினார்.

''குமரி''

என்ற சொல் செவி குளிர்வித்தது. ''மணம் புரிதல் கூடுமோ?'' என அவர் வினவ,

''அறிந்து அறிவிப்பேன்'' என்று அவ்வமைச்சர் கூறி சகுறு பால் சென்று நடந்தன, நிகழ்த்தினார்.

சகுறு வல் விரைந்து வந்து வணங்கி ''வாழ்க நின் கொற்றம். என்றும் உமது அடிமை எனை, அயலானாய்க் கருதியது ஏன்? நேரிடையாக நிகழ்த்திடில் என் ஆம்? மகட்கொடை மறுக்க மதியிலியோ யான்? பெருந்தவப் பேறு அன்றோ? ஐயா! எண்ணம் போல் இனிது செய்க'' என வேண்டிற்று.

சீரியர் சிறிது சிந்தித்தார். "தீன் நெறியில் எவரையும் சேர்ப்பது அவர் தெரிவையரில் வனப்புடையாரைத் தெரிந்து எடுத்து அகப்படுத்தவே, எனக் காலம் போம் அளவும் வசை மொழி நிறகுமே. இவ்வசை மேவுவதே தீன் நெறி பரவுதற்கு இடையூறு. தனி ஒருவன் ஆர்வினை விட நெறியின் பரப்பே நாம் செய்யத் தக்கது" என உள் நினைந்து, தெளிந்து,

"சகுறு நின்மகள். என்மகள். நினையல் வேறு" என்றார்.

"மணம் செயக் கருதினீர். மதிவலான் பால் செய்தி அனுப்பினீர். மறுத்து இவை புகல்வது ஏன்?

எப்பிழை எம்பால் கண்டீர்? எம் மகளுக்கு உறு குறை யாது?" என வினவ,

"சகுறு. அகன்ற உலகில் அகலாப் பழி மேவ யாம் விரும்ப வில்லை. உன் மகளை நின் குலத்தாற்கு அன்றி மானுடன் ஒருவனுக்கு என்று மணம் முடித்து மகிழ்" என்றார்.

"ஆறாம் கடல் தீவகத்துப் பெண் கேட்டு எவர் வருவார் ஐயா?" என சகுறு வினவ,

"ஒவியத்தும் எழுத ஒண்ணா உருவத்தாளை முயன்று ஓவியத் தில் தீட்டி, அப்படம் எம்மிடைத் தருக. தக்கார் வரின் நாமே நும் பால் அனுப்பி வைப்போம்.

அஞ்சல் ஓம்புமதி. அறிவன் நின் உளம்" என்று கூறி அமைந் தார்.

தீட்டிய ஓவியத்தை ஒரு பேழையுள் பொதிந்து, பின் பிரியா விடைதந்து, சகுறு, சார்ந்தார் தம் தீவகம் மேவ, போக விடை தந்தார்.

சகுறு, சுலைமான் (அலை) அவர்களுடன் வாழ்ந்த காலத்து அதனிடம் "அரிய அற்புதம் கொண்டிட ஒரு மணிச் சிங்காசன மாளிகை அமைத்துத் தருக. அம்மனை அனைத்து வளங்களும் பொருந்தி ஒரு பெருநகர் போல இருத்தல் வேண்டும். நினைக்கும் இடம், எல்லாம் இயங்கும் சூட்சுமம் உடையதாகவும் இருக்க வேண்டும். அவ்வரியணை மாளிகை உன்னால் அன்றிப் பிறிது ஒருவரால் அமைக்க இயலாது" என்றார்.

41. அரியணை மாளிகைப் படலம்

"அங்ஙனமே ஆகுக. நும் கருணை இருப்பின் ஆகாதது ஒன்றும் இல்லை" என்றது. நால்வகைப் பொன்னும், நவமணித் திரளும், வெள்ளிப் பாளங்களும், வேண்டு கருவிகளும், செய்வினையாளரும், சேர்க்க வேண்டுவனவும் ஒரு வழித் திரட்டியது. செய்தும் முடித்தது.

அம்மாளிகை சொல்லில் அடங்காச் சோபிதம் உடையது. பத்தாயிரம் முழம் நீளமும், அவ்வளவு அகலமும், எழுநிலை மாடமும் கொண்டது. வான்தொடு கொடுமுடி வழித்தடை எனினும் அதனினும் உயர்ந்து, ஐந்தரைக் கடிகையில், கடுநடையில் கடக்கும் திறலினது.

மாட மாளிகை, கூட கோபுரங்களும், விசாலமான அறைகளும் திண்ணைகளும் கொண்டது. அதன் அடித்தளம் எஃகினால் அமைக்கப் பெற்றது. அதன் மீது மரகதக் கொடி ஒன்றும் நிறுவப் பெற்றது.

நாற்றளமும் நன்கு பொருந்த இடப்பரப்பு உடையது. அரியணை பொன்னாலும், மணிகளாலும் அமைந்தது.

அதனைச்சூழ்ந்து பொன்னால் அமைந்த ஈச்ச மரங்கள் இருந்தன. முதல் இரண்டன்மேல் இரு மயில் உருவுகள் இருத்தப் பெற்றன. பின் இரண்டன்மேல் இருஞ்சிறைக் கழுகுகள் சிறை ஒடுக்கி அமர்ந்தன போல் அமைக்கப் பெற்றன.

அரசர் அணையுள் அமர வரின் மயில்கள் தோகை விரித்து ஆடும். இடம் பெயர மாட்டா. கழுகுகளும் அவ்வாறே சிறகுகளை அசைத்து காற்று உதவும்.

படிகளில் அமைக்கப் பெற்ற புலிகள் வால் சுழற்றி நிமிர்ந்து எழும். கண்டார் அவை உயிருள்ளனவே எனக் கருதுவர்; வெருவுவர்.

அணையின் வலப்பால் இருத்திய ஆயிரம் பொன் நாற்காலிகளில் பனீ இசுறாயில் கூட்டத்தார் இருத்தப் பெற்றனர். இடப்பால் அமைந்த ஆயிரம் வெள்ளி நாற்காலிகளில் ஜின் கணத்திரள் அமர்ந்தன.

தரைவழிப் பயணம் மேவின் இரு திங்கள் ஆகும் தொலைவினை வான் இயங்கு இவ்வரண்மனை வழி ஒரு நாளில் கடப்பர்.

நிலத்தில் இறங்கவும் இருக்கவும், விண்ணில் பறக்கவும் விசைகள் இருத்தப் பெற்றன. இயக்கும் பயிற்சியும் சில ஜின்கள் பெற்றன.

சோறடு அட்டிலும், ஆனைக் கொட்டிலும், பரிநிலைப் பந்தியும் பணி செய் மாந்தர் தங்கும் இடங்களும் கொண்டு விளங்கியது.

ஒரு நாள் சுலைமான் (அலை) அவர்கள் சூழ்ந்துள ஜின் கணம் கண்டு "நிகரிலா அதிசயம் உடைய இரு முத்துகள் கடலிடை உள்ளன, என அறிந்தோம். ஒன்று திங்கள் போல் வெள்ளிய ஒளி உடையது. மற்றையது மாலைக் கதிரவன் போல் பொன்னொளி திகழ்வது என்பர். எங்குளது என அறியவும் எடுக்கவும், கொடுக்கவும் வல்லவர் நீவிரே. போய்க் கொணர்வீர்" எனப் போக்கினார்.

42. முத்து மாளிகைப் படலம்

சென்றன; கடல் அடித்தளம் துருவின; தேடின; முக்குளித்தன; மூச்சு அடக்கின; ஆழ்ந்து சென்றன. அங்கும் காண்கில; அயர்ந்தன. மேல் வந்த அவை சில மலக்குகள் கண்டன.

ஜின்களைக் கண்ட மலக்குகள் "நீவிர் யாவிர்? நீர் குடைந்து ஆடல் ஏன்? நிகழ்த்துக" என்றார்.

"சுலைமான் (அலை) அவர்கள் ஏவல் மேற்கொண்டு ஒழுகும் ஜின்கள் நாங்கள். அவர் கடலகத்து இரு முத்துகள் எடுத்து வரப் பணித்தார்" என்று செய்தி முற்றும் செப்பின.

"இருக்கும் இடத்தை விட்டு இல்லாத இடம் தேடித் துயர்வது ஏன்?" என்று கூறி, "அவை இருக்கும் இடம் இது" எனச் சுட்டிக் காட்டினர்.

சென்றன; கண்டன; கொண்டன; மீண்டன; தந்தன தலைவன்பால்.

பனீ இசுறாயீல் கூட்டத்தார்க்குப் பைத்துல் முக்கத்திசு பள்ளி வாயில் சுற்றிலும் வாழிடம் பல அமைத்துத் தந்தார்.

மாளிகைக் கட்டுமானப் பணி மேவிய ஜின்கள்பால் "மாளிகைகள், பெருநிலை வாயில்கள், ஓங்கு நிலைக் கதவங்கள், பொன்

தகடுகள் போர்க்கப் பெற்றனவாய் அமைய வேண்டும். பளிங்குச் சுவர்கள், பருந்தூண்கள், பல் மணிகள் அழுத்தப் பெற்று இரவினைப் பகல் செய்ய வேண்டும்'' என்றார்.

மலை என ஓங்கிய பெரு நிலை மாளிகைகள் அமைத்தன.

சினப்புலி வயத்தர்: பனீ இசுறாயீல் இனத்தர். தம் அனத் தொகையோடும் அங்கு குடி மேவினர்.

மலை சுமந்த குவடு என பெரியது ஒரு குப்பா[1] அமைத்து அதன் மேல் கடல் கொண்ட எழுபது முழ அளவு முத்தினைப் பதிக்கப் பணித்தார்.

பின் மகறிபு தேயம் சேர்ந்தார். அங்கும் ஜின்கள் உதவியால் பல மாளிகைகள் அமைத்து பைத்துல் முக்கத்தீசு பதியில் குடி அமர்த்தியோர் போக எஞ்சியவரை குடியமர்த்தினார்.

அவ்விடத்தும் குப்பா ஒன்று அமைத்து அதன் முடியில் பொன்நிற முத்தினைப் பொருத்தினார்.

பனீ இசுறாயிலார் இனிது வாழ்ந்து உறைந்தார்.

நபி அவர்கள், நாற்றளம் சூழ, நகரினை விட்டு, நானிலம் வளைத்த நாகம் காணும் நசையினராய், சகுறு அமைத்த அரியணை மாளிகை தங்கி விண் செலவு மேவினார்.

43. மலக்கல் மவுத்தைக் கண்ட படலம்

கணத்தின் ஓர் கூறில் காதம் கடக்கும் அம்மாளிகையில் பலநாள் மேவினும் வளை எயிற்று நாகம் கண்டிலர்; வருந்தினார். மாசுணம் காண மாதம் பல ஆகும் போலும் என எண்ணிய அவர் தன் கண் முன் ஒரு மலக்கு கண்டார்.

அம்மலக்கு சுலைமான் (அலை) அவர்களிடம் ''உடைத்தன் வலி அறியாது ஊக்கத்தின் ஊக்கி இடைக்கண் முரிவு படுவீர். உம் எண்ணம் பழுது பெறும். நரகச் செந்நெருப்பினும் கொடிய நஞ்சுகாலும் விழி படைத்த அந்நாகம் காண கடுநடைப் பயணம் மேவினும் ஐஞ்ஞூறு ஆண்டுகள் ஆகும். அறிவீரா? அப்பாம்பின் வாய் நடுவில் இவ்வகிலம் எவ்க்கப் பெறின் பெருவெளி இடை

1. குப்பா—விதான கலசம்.

இடப்பட்ட கடுகு போலாம். இவை எல்லாம் அறியாது என்ன எண்ணி நீர் ஏகுகின்றீர்? திரும்பிப் போம்'' என அறிவுரை கூறினார்.

''நன்று'' என்று உவந்த நபி தம் பதிக்குத் திரும்பிப் போனார்.

இடைவழியில் சில மலக்குகள் கண்டார். அவர்கள் நாஇயல் மருங்கின் அல்லாஹ்வின் திருநாமம் நவிலப் பாடுவது அல்லாமல் வேறு மொழிந்திலர். வானின்று உலகம் வழங்கி வரும் மழை முகில் இடை அவர் விமானம் சென்றது.

இடைவழி இன்னுயிர் கவர் மலக்கல் மவுத்தைக் கண் எதிர் தெரியக் கண்டார்.

கண்டதும் பேதம் உற்று அகமுடன் உடலும் நடுங்கி ஆற்றல் குறைந்தார்.

சோர்ந்த நிலையராய்ப் பதி பைத்துல் முக்கத்தீசு சார்ந்த தம் தலைவர் கண்டு பனீ இசுறாயீல் கூட்டத்தார் ''எதன் பொருட்டு இந்த ஏக்கம்?'' என வினவினார்.

''முடிவு நாள் அடுத்தது. பைத்துல் முக்கத்தீசுப் பணி முற்றுற முடிந்ததில்லை. நமக்குப் பின் நம் தோன்றல் 'றசுகீம்' உம் தலைவர் ஆக்கினோம். நாமும், நம் மகனும் வேறல்லோம். அவற்கு உம் துணை பெரிது அமைக'' எனக் கோரினார்.

கேளிர் வருந்தினர்; கேளல், கேளிராம் ஜின்களும், சைத்தான் களும், முகத்தில் சோர்வு காட்டின. கன்றிய வஞ்சத்துக் கொள் கலம் ஆன அவை நெஞ்சத்தே கிளுகிளுத்தன. ''விடுதலை விரைவில் மேவுவோம். அற்ப மானிடர்க்கு அடிமை நிலை கொண்ட நம் தளை தகர் நாள் தொலைவில் இல்லை. நனி சேய்த்து அன்று. நணித்தே'' என்று அகம் மகிழ்ந்தன.

'றசுகீம்' அரியணை மேவினார். நபி அவர்கள் பைத்துல் முக்கத்தீசு பள்ளி வாயில் மேவி 'மிகுறாபில்' வந்து ஒரு பெரும் பரம்பொருளை உவந்து வணங்கினார்.

ஒரு குருவியை அழைத்து ''வணங்கும் பொழுது, சோர்வினால் உறக்கம் மேவி மறக்கும் நிலை உண்டாயின், மெல்ல என் உடல் தீண்டு; உணர்ந்து தெளிவு பெறுவேன்'' எனக் கூறினார்.

தகைப் பெருந்தாதைக்கு தன்னேரில்லாதவன் அருள் கூடிய 'ஜபூர்' நயத்தொடு கனிந்து ஓதினார்.

வரையா நரக வாதனைகள் பற்றி அம்மறை நூல் தொடர்கள் ஓதும் போதெல்லாம் உள்ளம் புழுங்கி வருந்தி, சோர்ந்து, உடலும் நொந்து, உணர்வுகள் அற, மயங்கி, மிகுறாபில் வீழ்ந்தார்.

இஃதறிந்த அன்னை நசாயிகு பரிந்து எடுத்து, செய்ய இரு கைப்புறத்து ஏந்தி, கவான் மிசைக் கொண்டு முகத்து நீர் தெளித்து கண்ண நீர் துளித்து, கால் செய்வட்டம் மெல்ல வீசி உணர்வு தோற்றினார்.

நபிகள் எழுந்தார்; தொழுகைக் காலத்து நேர்ந்த சோர்வு குறித்துத் துன்புற்றார்.

மிகுறாபு விட்டு எழுந்த நபிகள் நகர் சுற்றி நோக்கினார். எடுத்த பணியில் பெரும்பங்கு முடிந்தது கண்டார். அகம் பூரித்தார்.

**44. பைத்துல் முக்கத்தீசிற் குறுபான் கொடுத்த படலம்**

பள்ளி வாயில் முன் ஒரு மரத்தடி (ஆசா) நட்டார். அதனை நபிகள் சார்ந்தார், நல்லார் தொட்டால் பொறுத்திருக்கும். பிறர் தொடின் பிடித்த கை பொசுங்கிப் போகும். அப்பள்ளியுள் பாவிகள் சேரின் சுவர்த்தலம் நிறம் பெயர்ந்து கருமை நிறம் காட்டும். நல்லார் புகின் முற்றும் வெண்ணிறம் காட்டும்.

ஆசா தொடவும் பள்ளிவாயில் சேரவும் அல்லவர் அஞ்சுவர்; நல்லவர் திரள்வர்.

சுலைமான் (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் "என்றும் உள்ள பொருளே! இப்பள்ளி வாயிலில் உன்னைக் குறித்து இரண்டு "றக்காத்" தொழுதாரை, அவர் செய் பிழை அனைத்தையும் பொறுத்து மாசில்லாதவர் ஆக்குக.

இங்கு சேர்பவர் மனம் பொதி அச்சம் அகல, பற்றிய பிணிகள் தீர அருள்க" என வேண்டினார்.

"குறுபான்" ஆக ஆயிரம் கோவேறு கழுதைகளும், ஆயிரம் கொழுத்த ஆடுகளும் அறுத்துப் பலி கொடுக்கப் பணித்தார்.

"எம் செயல் ஏற்றது என்பதற்கு அறிகுறியாக இஃது ஏற்று அருள்க, இறைவ!" என வேண்டினார். வான் நின்று இழிந்த தீப் பிழம்பு அப்பலியினைக் கொண்டு அகன்றது. இச்செயல், தான் கொடுத்த "குறுபானை" இறைவன் ஏற்றான் என்பது காட்டும் என சுலைமான் (அலை) அவர்கள் அகம் களித்தார். கண்டவரும் களி கூர்ந்தார்.

பள்ளி வாயிற் பணிக்கு என ஆயிரவரை நியமித்தார். அவர்கள் மாத ஊதியம் ஆகப் பெருந்தொகை அளித்தார்.

பல்நலம், வளங்கள் பொதுள் பைத்துல் முக்கத்திசு பள்ளி வாயில் என்றும் வாழ்வது ஆக!

திரை சூழ் உலகம் தீன் நெறி மேவித் துயர் தவிர்வதாக.

இன்னவாறு ஒழுகும் நாளில் இவர் வயது நூற்றெண்பது உபாத்து நாளும் அடுத்தது. பைத்துல் முக்கத்திசு பள்ளி வாயி[ற்] பணியில் ஈடுபட்டிருந்த இவர் தம் இறுதி நாள் உணர்ந்தவரா[ய்] அப்பணியை விரைவில் செய்து முடிக்கத் திருஉளம் கொண்டார் 'ஆசா' ஊன்றி, அதனிற் சாய்ந்து வேலையாளரை விளித்து 'விரைவிற் புரிக' என முடுக்கினார்.

45. சுலைமான் நபி உபாத்துப் படலம்

வல் விரைந்து அங்கு வந்த கால[னை] னார் நபிகள் கண்டார். "கண்டு போக வந்தீரோ? அன்றிக் கடி தினில் என்றன் ஆவி கொண்டு போக வந்தீரோ? கூறுக" என்றார்.

"இங்குள பணிவேறு இன்று. நும் ஆவி கொள்ளவே அமைந் தேன்" என்று விநயத்துடன் இசுறாயீல் கூறினார்.

"பள்ளி வாயிற் பணியில் சிறிது குறை உளது. அது முடித்த பின் கொள்ளல் ஆமே" என்றனர்.

"இறை பணி அவ்வாறு இல்லை. என் பணி முடிக்க வேண் டாவோ?" என்றார்.

"சூழுறு சுற்றத்தார்க்கு என் இறுதி விழைவு கூறி வரலாமா?" என,

"இயலாது" என்றார்.

''மனை சென்று மீள்கிறேன்'' எனக் கோரினார்.

''தகாது'' என்றார்.

''இவ்வே தரையில் சற்று படுக்கிறேனே'' என்றார்.

''அதுவும் கூடாது'' என்றார்.

''தரையில் நான் அமர்ந்த நிலையில் என் ஆவி கொள்க'' என ''ஆசாவில் பொருந்தி நிற்கும் இந்நிலையிலேயே உம் ஆவி கவர வேண்டும் என்பது எனக்கிட்ட கட்டளை.'' என்று கூறி மெல்லி தழ் மலர் ஒன்று அவர் திருக்கரத்து அளித்து, ''முழு மண மலரை மோத்தல் செய்ம்மின்'' என்றார். அவரும் மோந்தார்.

நாசியில் நறு மணம் சார, அம் மணம் கொண்டு அவர் விட்ட மூச்சே, இறுதி மூச்சு ஆயிற்று. உடலியங்கு ஆவி வெளியில் கலந்தது.

உயர் குணச் செம்மல் உபாத்து ஆயினார்.

வானவர் தூதர் சுலைமான் (அலை) அவர்கள் ரூகை (உயிர்) 'ஏதம் இல் இல்லீன்' என்னும் சுவர்க்கம் மீது இருத்தல் செய்தார்.

நின்ற நிலையில் அவர் உபாத்தான போதிலும், எய்தியது அறியாப் பூதம் நரர்கள், ஜின் முதல் பணியாளர் பலரும் தமக் கிட்ட பணி இரு போதும் செய்து முடித்தனர்.

உபாத்து ஆயினார் எனினும் உயிருடன் இருப்பதாகவே அவர் தோற்றம் அமைந்தது.

வெயிலில் வெளியிடை நிற்கும் அவர் மேல் நிழற்றல் செய்யப் பளிங்கினால் ஒரு புரை அமைத்தனர். பறவைகள் தூவி விரித்துக் குளிர் நிழல் இட்டன.

ஓரியாண்டு அவர் உடல் இவ்வாறு இருந்தது.

இபுலீசு இது அறிந்தான். பள்ளி வாயிற்பணி நிறைவேறக் கூடாது என்பதில் மிக்க ஆர்வத்தன் அன்றோ அவன்?

பள்ளிப் பணியாளரை ஒருங்கு கூட்டினான்.

''ஏ! முட்டாள்களே! இறந்து போனான் உங்கள் எஜமானன்; ஓடிவிட்டது ஓரியாண்டு; சிறுவான் என அஞ்சும் சிறுமதிப் பேதை யீரே! அவர் அரசர் ஆன நாள் முதல் அடிமைகளாய் உழைக் கின்றீர். இன்று உம் தளை தகர்ந்தது. போவீர்! போவீர்! புறத்தே!'' என்றான்.

"இயங்கு மூச்சு அகன்று எவர் ஈராறு மாதம் கோல் மீது சாய்ந்து நிற்பார்? நீ! போ. மருளே பொருளாய், மடமையே உடைமையாய் உடையாய்! ஒல்லை நீங்கு" என்றனர் பணியாளர்.

"பணியின் நீங்கிப் போகும் உங்கட்கு எது நேரினும், அதனை நானே கொள்வேன். சினத்தின் விளைவாய்ச் சீற்றமே கொள்ளினும், ஒறுத்தல் மேற் கொள்ளினும் உவந்து ஏற்பேன்.

செல்க! செல்க! பணி விட்டுச் செல்க", என்றான் இபுலீசு.

எவரும் கேட்டிலர்; செய் பணி விட்டிலர்.

பின் அவமே புரிவான் வல் விரைந்து நீங்கி, நீர் வாய்ச் சிதல்கள் நெருங்கி "அரிக்கும் வாய்ச் செம்மல்களே! வாழ்க உம் பணி! உம் பணி விரைவின் முடிய இயல்உதவி யான் செய்வேன். ஈரப் பசை நான் அமைப்பின் எளிதன்றோ உங்கள் பணி? எனக்கு நீங்கள் ஓர் உதவி செய்ய வேண்டுமே! செய்யும் ஆற்றலும் எய்தியவர் நீங்களே!" எனப் பணிந்து நின்றான்.

வளப்படு வசிய மொழி வஞ்சகன் கூற, அளப்பரு நலன்கள் எல்லாம் அருள் வலான் இவனே! என்று எண்ணின, செம்மாந்து நின்றன.

"அதோ! சுலைமான் நபி ஆசாவில் கையூன்றி நிற்கின்றார். பாருங்கள்; அவர் உயிர் போய் ஆறிரு மாதங்கள் அகன்றன. உயிரோடு இருக்கின்றார் என்று எண்ணிப் பள்ளிப்பணி விரைவினில் நடப்பதும் பாரீர்!

ஊன்றி நிற்கும் அந்த ஆசா அரிப்புண்டு சாய வேண்டும். கூடி அங்கு அடைவீர்; கோல் குறைபட அரிக்கத் தொடங்குவீர்; ஆவன செய்வீர்; செல்க! செய்க!" என வேண்டினன்.

குறைமதிச் சிதல்கள் கூடி அங்கு அடைந்தன. தீ வாய் கொண்டு தின்னல் மேவின.

கோலும் சாய்ந்தது.

பரிமளம் கமழும் சோதிப் பருவுடல் சாய்ந்தது.

விதிக்கு நாயகன் விதித்த வண்ணமே, மலக்குகள் அவர் மணி ஒளி உடலம் தன்னை எடுத்துச் சென்றனர்.

நாற்கடல் நடுவண் அமைந்த பெருந்தீவு ஒன்றில் இருந்த அணி கொள் மாளிகையில் அரியணையில் கிடத்தினர்.

கடுவொடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிற்று, பதின் பின் நாக்கு கொள் வெண்ணிற ஐந்தலைய நாகம் ஒன்றையும், பரிய, வலிய மலக்குகள் சிலவரையும் அவ்வகன் மனையில் காவல் வைத்தனர்; அகன்றார்.

நகரிடை...!

"இபுலீசு நம்பால் பாசம் வைத்துப் பகர்ந்தன மெய்யே! உடலம் காணோம். ஒழிந்தது போலும். போதும் இப்பணி; போவோம் நம் வழி" என்று அச்சம் நீங்கி, அப்பணியாளர் அவரவர் சார்பில் சேர்ந்தார்.

நகர மக்கள், ஜகசிம், பனீ இசுறாயீல் கூட்டத்தார் அறிந்தனர் நடந்த; உருகினர் உள்ளம்; சொரிந்தனர் கண்ணீர்; சோர்ந்தனர்; துவண்டார்;

தாய் நசாயிகும், பத்துப் பதிற்றுப்பத்து மனைவியரும் இது கேட்டு உணர்வும் உயிரும் ஒடுங்கி வீழ்ந்தார்.

"ஆவியோ நிலையில் கலங்கியது. யாக்கை அகத்ததோ? புறத்ததோ? அறியோம்" என்று துடித்த தோழியர், தூமொழி மடமான் நசாயிகு தன்னைப் பாயலில் கிடத்தினர்.

"பிள்ளைக் கனி அமுதே! பெருமானே! வள்ளால்! உன் புகழ் கேட்ட காதால் உகுத்தனை உயிர் எனவும், உடலம் காணேம் எனவும் கேட்கவோ உயிர் கொண்டேன் யான்?" என்று நசாயிகு புலம்ப,

"இறைவன் மசலாவிற்கு ஈரறு மொழி பகர்ந்த இணையில் செவ்வாய் எங்கே? பட்ட கழி தழைக்கச் செய்த பருங்கை எங்கே? பகைவர் பணி தாள் எங்கே? அணி முறுவல் முகம் எங்கே? எங்கே? அறிகிலமே ஐயா!" என்று பதினறுவரும் அரற்ற,

"ஆவியே! அமுதே! அரும் பெறல் மணியே! குறையா மதியே! பொறுமைக் கடலே! அரும் பெறல் மகவு பிரிந்த இப்பாவியர்க்கு இடம் எங்கே" என்று அன்னையர் புலம்பினர்.

"கலன் கழி மகளிர் ஆனோம். கல் நெஞ்சம் படைத்தோம். வாழ்வோம்.

பல் தலைப் புள்ளின் ஒருயிர் அனையீர்! உயிரார் பிரியின் உடலார் வீழாரோ? எங்கிருந்தாலும் நேயமொடு எமது பாலும் உறைவீரே! பொன்னுலகம் புகினும் எம்பால் புகல் ஒண்ணாதோ?

எம்மைப் பிரித்து உமது உயிரை எவ்வாறு பிடித்தான் கூற்று வன்?

இன்னும் வாழ்கின்றோமே யாம். மலக்குக்கும் (மலக்கல் மவுத்து) எமக்கும் வன்பகை யாதொன்றாலும் இல்லையே! ஏன் இது செய்தார் அவர்?

அரிது போகவோ விதி வலி கடத்தல் என்று அஞ்சுகிறோம். வல் விரைந்து போகா உயிரை வலிந்து போக்கிடில் வாய்ப்பது நரகம் அன்றோ.

வம்மின் நமனே! விரைந்து.'' என வேண்டினர், துணையாய் அமைந்த தூ மொழி மடவார்.

ஒண்டொடி மகளிர் ஓராயிரவரும் உருகி விம்மி,ஏங்கி அரற்றி, கருங்குழல் சோர, கண்மை கரைய, கருநீல நெடுந்தாரை உகுத்து, நொந்து அயர்ந்து வாடினர்.

காந்தள் கொண்டு கமலம் புடைத்தனர்.

அழுது, விம்மி, அரற்றிச் சோர்ந்தனர்.

கையற்று ஏங்கிய றசுகீம், அன்னையர் துயர் மாறத் தெளிவுறு மொழிகள் கூறித் தேற்ற, ஆதி அத்தனை, அழியா வாழ்வை, அகத்தினில் இருத்தி அமைதி மேவினார்.

கனி இதழ்ப் பல்கீசு ஈன்ற கண்மணி 'றசுகீம்' தன்னைப் பனீ இசுறாயீல் மேலோர் அரியணை அமர்த்தி தொல்புவி புரக்க ஆணையிட்டனர், என்பது முன் குறிப்பிடப் பெற்றது.

46. அரசாட்சிப் படலம்

பேத வெங்கொடுமை என்னும் பெருகு இருள் மாய்ந்தது. மண் உள்ளோர் மகிழ்ச்சி எய்தினர். 'கலிமா'ச் சொல்லா முதிர் குபிர் அரசர்கள் தாள்கள் தளை உண்டன. மண் குளிரச் செய்யும் மறவேல் நெடுந்தகைத் தண் குடைக் கீழ் மக்கள் வாழ்க்கை நிலை பெற்றது.

இவ்வாறாய் முன்னவன் கருணை ஓங்க, முதிர் வளச்சாம் தன்னில் பன்னெடு வருடம் வைகிப் பரிவொடு தழைத்து வந்தார்.

# 3. நூலும் நூலாசிரியரும்

இராஜநாயகம்—இக்காப்பியத்தின் பாட்டுடைத் தலைவர் சுலைமான் நபி அவர்கள் உலகிலேயே மாபெரும் ஆட்சியையும் அளத்தற்கரிய திறலையும் பெற்று இருந்த ஒருவர் என்பதன் காரணம் ஆக (இராஜர்க்கு நாயகம்) இப்பெயர் அவர்க்குப் பொருந்தும்.

இதனை நூலாசிரியரே குறிப்பிடுவார் (1:26; 17:74; 18:12 18:33; 34:60 போல் பல இடங்கள்)*

இக்காப்பியம் எப்பொழுது முதன் முதலில் அச்சிடப் பெற்று வெளிவந்தது என்பது நிச்சயமாகத் தெரியவில்லை.

இப்போது கிடைக்கும் பிரதி கவிஞர் நாச்சி குளத்தாரால் பதிப்பிக்கப் பெற்றது. நூலில் பதிப்பித்த ஆண்டே குறிக்கப் பெற வில்லை என்பதிலிருந்தே அது எத்தகைய பதிப்பாக இருக்கும் என்பதனை யூகித்துக் கொள்ளலாம். ஆனால் சுமார் பத்து ஆண்டு களுக்கு முன்தான் வெளியிடப் பெற்றது என்பது எல்லோர்க்கும் தெரியும்.

பழம் பெருங் கவிஞர் ஒருவர் யாத்த காப்பியத்தைப் பதிப் பித்து வெளியிடுவது என்றால் அந்தப் பதிப்புக்கே ஒரு சரித்திரம் இருக்கும். அச்சரித்திரமே பதிப்புரை ஆக அமையும்.

ஆனால் இந்நூல் பதிப்புரையில் எந்தச் சந்தர்ப்பத்தில், இதற்கு முன் வெளிவந்த எப்பதிப்பின் ஆதாரத்தின் கீழ், யாருடைய ஆய்வின் கீழ், இந்நூல் வெளிவந்தது என்பன போன்ற எவ்விவரமும் இல்லை.

---

* இது போல், நூற்பெயர் கொடுக்கப் பெறாமல், வெறும் எண் கள் கொடுக்கப் பெற்றிருக்கும் இடங்களிலெல்லாம், முதல் எண், இராஜ நாயகப் படல எண்ணையும், அடுத்து வரும் எண் அப்படலத்தின் பாடல் எண்ணையும் குறிக்கும்.

எனினும் இதற்கு முன் ஒன்றோ, அன்றி ஒன்றுக்கு மேற்பட்டதாகவோ பதிப்புகள் வந்திருக்கவேண்டும்.

இதற்கு முன் வந்த பதிப்பின் பிரதிகள் மிக அருமையாகச் சிலரிடம் மட்டுமே உள்ளன.

அவற்றிலிருந்தும் பதிப்பித்த ஆண்டு போன்ற எவ்விவரமும் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை.

நூலின் இறுதியில்,

திருநபி கிசுறத் ஆயிரத்து இருநூற்று
இருபத்து மூன்றினில் முஹற்றம்
திங்களில் பதினாலாம் தேதி அதனில்
சென்றிடும் அட்சய வருடம்
வருடு பைங் கூ(கு)னி மாத்தையில் பனிரண்
டாம் தினம் ஆகிய சோம
வாரம்உத் திரம் என்று இரண்டுமே கலந்து
வரப்படு சித்த யோகத்தில்
நரர் முதல் உயிர்கள் எவையையும் புரந்த
நபியுல்லா சுலையுமான் வரவு
நானிலம் முழுதும் மகிழ்வுற இராஜ
நாயகம் எனப் பெயர் விளங்க
விரவிய படலம் நாற்பத்து ஆறு; இரண்டா
யிரத்து இருநூற்று நாற்பானுள்
விருத்தம் அது ஆகப் புகன்றனன் மதுரை
மீசல் வண்ணக் களஞ்சியமே.

இதிலிருந்து தெரிய வருவன:

1. அரங்கேறிய நாள், ஹிஜ்ரி 1223 முஹற்றம் மாதம் 14உ. ஒத்த தமிழ் ஆண்டு அட்சய வருடம் பங்குனி மாதம் 12உ திங்கட் கிழமை, உத்திர நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினம்.

2. நூலில் 46 படலங்கள்; 2240 விருத்தங்கள் உள்ளன. [நாச்சி குளத்தார் பதிப்பிலும் அரிதில் காணப்படும் முன்னைய பதிப்பிலும் 45ஆம் படலம் முடிய 2222 பாடல்கள் உள; 46ஆம் படலப் பாடல்கள் 16; ஆக மொத்தம் 2238 பாடல்கள் தாம் உள்ளன.]

3. நூலாசிரியர் மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர்.

இவ்விருத்தப்பாவிற் குறிப்பிட்ட அரங்கேற்ற ஆண்டு (ஹிஜ்ரி 1223)க்கு ஒத்த கிறித்தவ ஆண்டு 1808.

தேதி, கிழமை, மாதம் ஆகியவற்றில் சிறிது வேற்றுமை இருப்பதற்கு வாய்ப்பு உண்டு.

காரணம் என்ன என்றால் ஹிஜ்ரி ஆண்டு சாந்திரமான அடிப் படையில் அமைவது. அதன்படி ஓர் ஆண்டிற்கு 354 நாட்கள் 8மணி 48 நொடிகள் ஆகும்.

கணக்கிட்டுச் சௌகர்யத்திற்காக வழக்கத்தில் முதல் மாதம் 29 நாள், அடுத்த மாதம் 30 நாள் எனவும் கொள்வர். சில சமயங் களில் தொடர்ந்து இரு மாதங்கள் 29 நாட்கள் கொண்டது ஆகவும், அடுத்த இரு மாதங்கள் 30 நாட்கள் கொண்டதாகவும் அமையும்.

ஆசிரியர் குறிப்பிடும் தமிழ் ஆண்டோ சௌரமானத்தை அடிப்படையாகக் கொண்டது. எனவே அக்கணக்குப்படி ஓர் ஆண்டு என்பது 365 நாட்கள் கொண்டது ஆகும்.

கிரிகோரியன் காலண்டர் எனப்படும் இப்போது வழக்கிடை உள்ள ஆங்கில ஆண்டுக்கு 365 நாட்கள் உண்டு. நான்கு ஆண்டு கட்கு ஒரு முறை 366 நாட்கள் என அமையும் (லீப் ஆண்டு).

இவை காரணம் ஆக ஹிஜ்ரி ஆண்டை ஆங்கில ஆண்டுடன் ஒப்பிடும் பொழுது 33 ஆங்கில ஆண்டுகள் 34 ஹிஜ்ரி ஆண்டுகள் ஆகும்.

இவை காரணம் ஆகவே பாடலில் குறிக்கப் பெற்றிருக்கும் நாளை ஆங்கில ஆண்டின் அடிப்படையில் கணக்கிடும் பொழுது மாதம், கிழமைகளில் வேறுபாடு காண இடம் உண்டு.

உண்மையில் ஆண்டிலும் கூட வேறுபாட்டிற்கு இடம் உண்டு. காரணம் யாது எனில் ஹிஜ்ரி ஆண்டின் முதல் மாதம் முஹற்றம் ஆகும்.

ஹிஜ்ரி ஆண்டு 1223 முஹற்றம் மாதம் முதல் தேதி 1808 பிப்ரவரி மாதம் 28உ ஞாயிற்றுக்கிழமை ஆகும்.

1808-லீப் ஆண்டு; பிப்ரவரி 29 நாட்கள் கொண்டது.

முஹற்றம் 1உ பிப்ரவரி மாதம் 28உ எனில், முஹற்றம் 14உ மார்ச்சு மாதம் 12உ ஆகும். கி.பி. உ1808 மார்ச் 12உ சனிக்கிழமை ஆகும்.

---

1 Calendars of Middle East Countries. Conversion Tables and Explanatory Notes: "NAUKA" Publishing House, Central Department of Oriental literature MOSCOW; YEAR 1979; Page 102.

பாடல்படி அரங்கேற்ற நாள் திங்கட் கிழமை. இதனை ஒரு பெரிய மாறுபாடு எனக் கொள்ளுவதற்கு இல்லை. ஒரு குறிப்பிட்ட ஹிஜ்ரி ஆண்டின் மாதங்களின் முதல் நாள் இடத்திற்கு ஏற்ப வேறுபடுவதனை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

தென் இந்தியாவில் மேற்குக் கரையில் பிறை தெரிந்த அன்று கிழக்குக் கரையில் பிறை தெரியாமல் இருக்கலாம்.

அது போல் இங்கே பிறை தெரியும் பொழுது இந்தியாவின் மேற்கில் இருக்கும் நாடுகளில் பிறை முந்தைய நாளே தெரிந்திருக் கலாம்.

எனவே உலகத்தில் எல்லா நாடுகளிலும் ஒரு குறிப்பிட்ட நாளின் மாலை நேரத்தில் ஒரே சமயத்தில் பிறை தோன்றும் என்று சொல்வதற்கு இயலாது.

ஆதலின் இதனை ஒரு பெரிய தவறாகவோ, முரண் பாடாகவோ கொள்ளவேண்டா. [சனிக்கிழமை, திங்கட்கிழமை]

அது போலவே ஒவ்வொரு ஹிஜ்ரி ஆண்டும் முஹற்றம் மாதம் 14உ தமிழ் ஆண்டு பங்குனி மாதம் 12உ என்று சொல்லவும் இயலாது.

இரண்டாவதாகக் காணப்படும் நூலின் படல எண்ணிக்கை, பாடல் எண்ணிக்கை ஐயப்பாட்டிற்கு உரியன.

திருநெல்வேலித் தென் இந்தியச் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் 'செந்தமிழ்ச் செல்வி' என்ற திங்கள் இதழை வெளியிட்டு வருகிறது.

அதன் 28ஆவது சிலம்பு, பரல் 8, 11 ஆகிய இதழ்களில் (1954 ஏப்ரல், ஜூலை) இராஜநாயகம் பற்றிய இரு கட்டுரைகள் வெளி வந்துள்ளன.

கட்டுரை ஆசிரியர் பழந்தமிழ் நூல்கள் பலவற்றிற்கு உரை கண்ட பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் ஆவார்.

1954 ஏப்ரல் திங்கள் இதழில் கட்டுரை ஆசிரியர் எழுதி இருப்பதாவது:

' "இராசநாயகம்" என்பது, செந்தமிழில் இயன்றதொரு தீஞ் சுவைப் பெருங்காப்பியம் என்று, தமிழ் உணர்ந்த அறிஞர்களுக்குக் கூட எடுத்துக் கூற வேண்டி இருக்கிறது.

இங்ஙனம் ஒரு காவியம் நந்தம் செந்தமிழ்க் மொழிக்கண் உள்ளது, என்பது புலவர்களிலும் பலருக்குத் தெரியாது. தமிழ் வரலாற்று நூல்,புலவர் வரலாற்று நூல், முதலிய வரலாற்று நூல்களிலும் இவ் இராசநாயகப் பெருங்காப்பியம் பற்றிய குறிப்புகளை யாம் கண்டது இல்லை.

இக்காப்பியம் இற்றைக்கு 40 ஆண்டுகட்கு முன்னர் அச்சேறி நூல் வடிவில் வெளியிடப்பட்டிருந்தும், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற சொற்சுவை பொருட்சுவை நிரம்பப் பெற்றதாய் இருந்தும்,பொதுவாகத் தமிழ் மக்களும், சிறப்பாகப் புலமையாளரும் இதனைப் போற்றிக் கொள்ளாதது எனக்குப் பெருவியப்பையே நல்குகின்றது.

ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு கிராமத்தில் திண்ணைப் பள்ளி ஆசிரியராய் இருந்த முதியவர் முதன் முதலாக எனக்கு இராச நாயகத்தில் இருந்து ஒரு சில செய்யுட்களை இசையோடு ஓதி அறிவுறுத்தார்.

அவர் பாடிய பாடல்கள் இயல்பாகவே செய்யுள் இன்பம் நுகரும் என் உள்ளத்திற்கு அமிழ்தம் போன்று இனித்தன.

இத்தகைய செய்யுளால் இயன்ற இராசநாயகம் என்னும் அக்காவியத்தைப் பெற்று ஓதி இன்புறக் கருதிய யான் ''இந்நூல் எங்கே கிடைக்கும்?'' என்று அக்கிழவரையே வினவினேன். அவர் ''இந்நூல் இப்போது யாண்டும் கிடைத்திலது. எம்மிடம் பழைய (அச்சு) சுவடி உளது; அதைத் தருகின்றேன்; இயலுமேல் தாங்கள் அதைக் கைப்படியாக எழுதிக்கொண்டு அச்சுவடியைத் தந்து விடுங்கள்'' என்று கூறி அன்புடன் உதவினார்.

அந்நூலை யான் முழுதும் எழுதிக்கொண்டு அச்சுச் சுவடியை அவர்க்குக் கொடுத்து விட்டேன்.

இராசநாயகம் நாற்பத்தெட்டுப் படலங்களில் இரண்டாயிரத்து நானூறு செய்யுள்கள் அடங்கியதொரு பெரு நூல். அஃது பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்த நூலாகும். அதனை இயற்றிய நல்லிசைப் புலவர் ''வண்ணக் களஞ்சியப் புலவர்'' என்னும் சிறப்புப் பெயரானே வழங்கப் பட்டுள்ளார்.

மகம்மதிய மரபினர்; ''மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர்'' என்னும் அடைமொழிகளோடே அவர் பெயர் காணப்படு

தலால், அவர் மதுரையிலே வாழ்ந்தவர் என்று தெரிகிறது. அந் நூலின் பாயிரச் செய்யுள் ஒன்று இராசநாயகம் அரங்கேறிய காலத்தை விளக்கமாகக் கூறுகின்றது,

இதிலிருந்து பல ஐயப்பாடுகள் தோன்றுகின்றன.

ஒன்று: இக்கட்டுரை வெளிவந்தது 1954ஏபிரலில். அதற்கு 40 ஆண்டுகள் முன்னர், அதாவது 1914ல் இக்காப்பியம் அச்சேறி இருக்கும்.

தான் இக்கட்டுரை எழுதுவதற்கு 25 ஆண்டுகள் முன்னர் (1929ல்) திண்ணைப் பள்ளி ஆசிரியரைச் சந்தித்ததாகக் கூறுகிறார்.

அப்பள்ளி ஆசிரியர் ஒரு பழைய அச்சுச் சுவடியைக் கொடுத்த தாகக் குறிப்பிடுகிறார். அப்பழைய அச்சுச் சுவடி 1914ல் அச்சிடப் பெற்றது ஆகுமா? அதற்கு முன்னர் அச்சிடப் பெற்றதா?

இரண்டாவது: படல, பாடல் எண்ணிக்கை பற்றியது.

48 படலங்கள், 2400 பாடல்கள் என்று கூறுவார். இப்போது நாம் காண்பன 46 படலங்கள் 2240 பாடல்கள் [2238 தாம். இது பற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.]

பழைய அச்சுச் சுவடி ஒன்றில் இருந்து முழுவதும் பெயர்த்து எழுதிக் கொண்ட ஒருவர் இப்படிச் சொல்வதனால், அது தவறாகாது எனவே கொள்ளலாம். அப்படிக் கொண்டால், நூல் இணைப்பு ஆசிரிய விருத்தத்தில் உள்ள எண்ணிக்கைக்கு இது மாறுபடுகின்றது.

கட்டுரைச் செய்தி அச்சுப்பிழை என்று கொள்ள இயலாது. ஏனெனில் 1954 ஏபிரலில் எழுதியதன் தொடர்ச்சியாகப் பிறிதொரு கட்டுரையை 1954 ஜூலையில் எழுதி உள்ளார்.

1954 ஏபிரல் கட்டுரையில் அச்சுப் பிழை அமைந்திருப்பின் இவராலேயே ஜூலை இதழில் எடுத்துக் காட்டப்பெற்று திருத்தம் பெற்றிருக்கும். அப்படி எதுவும் இல்லை. உண்மையில் ஜூலை மாதத்திற்குப் பின்னரும் கட்டுரை தொடரும் எனவே குறிப்பிடப் பெற்றுள்ளது. ஆனால் தொடரவில்லை எனத் தெரிகிறது.

மூன்றாவது: கட்டுரையாளர் அந்நூல் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்த நூல் என்பார். அப்படி ஆனால் கி.பி. 1800க்கு முன் தோன்றியதாகும். மேலும் நூலின் பாயிரச் செய்யுள் ஒன்று இராஜநாயகம் அரங்கேறிய காலத்தை விளக்கமாகக் கூறுகின்றது என்று குறிப்பிடுகிறார்,

இப்போதைய நூலில் இவ்விவரங்களைக் கொண்ட செய்யுள் பின் இணைப்பாகத்தான் உள்ளது.

கட்டுரை ஆசிரியரோ பெரும் புலவர். பாயிரச் செய்யுளுக்கும், நூலின் பின் இணைப்பான ஆசிரிய விருத்தத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டைத் தெளிவாக உணர்ந்தவராகவே இருக்க வேண்டும்.

இப்படிப் பார்க்கும் பொழுது, இவ் ஐயப்பாடுகள் உறுதிப்படுகின்றன. நூல் அரங்கேறிய காலம் பற்றியும் ஐயம் எழுகின்றது.

இவற்றிலிருந்து தெரிவது யாது எனின், இப்பெருங்காப்பியத்திற்கு ஆராய்ச்சியின் அடிப்படையில் ஆன ஒரு திருந்திய பதிப்பு வெளிவர வேண்டும் என்பதுதான்.

இப்போது கிடைக்கும் பதிப்பில் ஒவ்வொரு பக்கத்திலும் எண்ணிக்கை அற்ற அச்சுப் பிழைகள் காணப்படுகின்றன.

தமிழ்ச் சொல், வடசொல் இயல்பாகவோ, மருவியோ அமைந்துள்ளன. அறபு,பார்சிச் சொற்களும் இவ்வாறே மருவியோ இயல்பாகவோ அமைந்து காணப்பெறுவதால் எது அச்சுப்பிழை எது அச்சுப்பிழை அன்று என்றுகொள்வதில் மயக்கம் ஏற்படுகிறது.

நிச்சயமாக அச்சுப்பிழை என்று சொல்லக்கூடிய இடங்கள் பல. இருப்பினும் மற்றவற்றை அவ்வாறு அச்சுப்பிழைதான் என்று உறுதியாகச் சொல்லத் தயங்கவேண்டி உள்ளது.

மேற்குறிப்பிட்ட ஆசிரிய விருத்தம் அன்றி இக்காப்பியம் எங்கே யாரால் ஆக்கப்பெற்றது என்பதனைக் கடவுள் வாழ்த்துப் படலத்தில் உள்ள,

துதி நபி சுலையுமான் இராஜநாயகத்தை தோகைக்கு
எதிர் மடவியர் நீர் அள்ளும் குடவளை மணி ஈன்று எங்கும்
கதிர் விரி வளம் கொள் கீழைக் கரையினில் அரங்கம் ஆக
மதுரை வாழ் மீசல் வண்ணக் களஞ்சியம் மவுலல் உற்றாம்
(1:26)

என்ற பாடல் காட்டுகிறது.

இப் பாயிரச் செய்யுளில் இருந்து மூன்று செய்திகள் தெரிகின்றன:

1. அவர் மீசலைச் சேர்ந்தவர். (மீசல் என்பது இராமநாதபுர மாவட்டம் முது குளத்தூர் தாலுக்காவில் உள்ளசிற்றூர்)

2. மதுரையில் வாழ்ந்தவர். (வண்ணக்களஞ்சியப் புலவரின் மற்ற காப்பிய நூலான குதுபு நாயகப் புராணப் பாயிரச் செய்யுளில் 'கூடல் வாழ் மீசல் வண்ணக் களஞ்சியம் கூறினானே' என்பர்)

3. அவர் பெயர் வண்ணக் களஞ்சியப் புலவர். (இயற்பெயர் முஹம்மது இபுறாஹீம்)*

வண்ணங்கள் பாடுவதில் வல்லவராய், இணையற்றவராய் இருந்ததால் அவர்க்கு அளிக்கப்பட்ட பட்டம் ஆகும் இது.

இயற்பெயர் மறைய, வண்ணம் பாடும் திறமையால் கிடைத்த புகழ்ப் பெயரே விளங்குகிறது.

வெகு காலம் அவர் நாகூரில் வாழ்ந்தார். நாகூர் வாழ் புலவர் பெருமக்கள் தாம் அவரது வண்ணம் பாடும் சிறப்பையும் அவற்றின் பொருள் ஆழத்தையும் ஓசை இனிமையையும் பெரிதும் பாராட்டி நாகூர் தர்காவில் வைத்து "வண்ணக் களஞ்சியப் புலவர்" என்ற பட்டத்தையும் சூட்டினர்.

நாகூரில் வாழ்ந்த காலத்தில் அவ்விடத்தே அடக்கமாகி இருக்கும் ஷாஹுல் ஹமீது நாயகம் என்றும், காதிறு ஒலி என்றும் (இ. நா. 1:18) பெரிதும் பாராட்டப் பெறும் இறைநேசச் செல்வரிடத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தார்.

இவர் இளமையில் மதுரையில் ஒரு மடத்து ஆதீன கர்த்தரிடம் தமிழ், வடமொழி, பிறவும் கற்றுத் தேறினார்.

இவருடைய கல்விச் சிறப்பையும் கவிதா விலாசத்தையும் கண்டு தஞ்சை அரசர் ஒருவர் சிங்கமுகப் பொற்சிவிகை ஒன்று பரிசிலாக ஈந்தார் எனவும், அதில் இவர்ந்தே இவர் நாடு வலம் வந்தார் எனவும் கூறுவர்.

நெடிது நாள் நாகூரில் வாழ்ந்த இவர் 89 ஆம் வயதில் இராமநாதபுரம் மாவட்டம் இராசசிம்ம மங்கலத்தை அடுத்த தும்பட்டிகா கோட்டை என்னும் சிற்றூரில் மரணம் அடைந்தார் எனவும் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டார் எனவும் சொல்ப. [முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்—M.R.M அப்துற் றஹீம்]

வண்ணக் களஞ்சியப் புலவருடைய மற்றொரு காப்பியம் குதுபுநாயகம் என்னும் முகியித்தீன் புராணம் ஆகும்

---

* குத்பு நாயக நூலின் சிறப்புப் பாயிரத்தில் காணலாம்.

காதிறிய்யா என்னும் ஆன்மீக வழியை நிறுவிய முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (ரலி) அவர்கள் வாழ்க்கை, ஒன்றுக்கு மேற்பட்ட புலவர்களின் காப்பியக் கருப்பொருளாய் அமைந்தது.

புலவர் நாயகம் என்று பாராட்டப் பெறும் சேகுனாப் புலவர் (செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம்புலவர்) அவர்களும் ஒரு காப்பியம் பாடிஉள்ளார் (ஹிஜ்ரி 1225ல்).

வண்ணக் களஞ்சியப் புலவர் குதுபு நாயகம் என்ற பெயரில் காப்பிய நூலாக அமைத்தார் (ஹிஜ்ரி 1229ல்).

இலங்கையில் வாழ்ந்த பதுறுத்தீன் புலவரும் முகியித்தீன் புராணம் என்னும் காப்பியம் பாடி உள்ளார் (ஹிஜ்ரி 1232ல்).

வண்ணக் களஞ்சியப் புலவர் பாடிய குதுபு நாயகம் காண்டங்களாகப் பகுக்கப்படவில்லை. 39 படலங்கள் கொண்ட நூல். காப்புச் செய்யுள் உள்ளிட்டு 1707 பாடல்கள் உள்ளன.

வண்ணக்களஞ்சியப் புலவர் இக்காப்பியத்தில் ஏறத்தாழ எல்லாப் படலங்களிலும் நாகை ஷாஹுல் ஹமீது நாயகம் எனப் படும் காதிறு ஒலி ஆண்டகையைப் பற்றிக் குறிப்பிட்டு உள்ளார்.

ஒவ்வொரு படல ஈற்றுப்பாடல் அல்லது அதன் முன் பாடலில் இத்தகைய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

இச்சந்தர்ப்பங்களில், ஷாஹுல் ஹமீது ஆண்டகையைப் புகழும் பொழுது அப்பெரியாரின் மூதாதையர் தாம் காப்பியத் தலைவரான முகியித்தீன் ஆண்டவர் என்று சுட்டிக் காட்டி உள்ளார்.

[இஸ்லாம் வளர்த்த தமிழ்—டாக்டர் ம. மு. உவைஸ் ப. 169, 170]

இந்தக் குதுபு நாயகக் காப்பியப் பழம் பிரதி ஒன்று என்னிடம் உள்ளது. அது ஹிஜ்ரி 1293 ஆம் ஆண்டு ரஜபு மாதம் காரைக்கால் முகம்மது ஸமதானி யந்திர சாலையில் அச்சிடப் பெற்றது.

முற்குறிப்பிட்ட MOSCOW வெளியீட்டு நூற்படி ஹிஜ்ரி 1293க்கு ஒத்த ஆண்டு கி.பி. 1876.

வண்ணக் களஞ்சியப் புலவரின் குமாரர் ஆகிய நாகூர் ஹமீது இபுறாஹீம் உள்ளிட்ட ஐவரால் இந்நூல் அச்சிடப் பெற்றது.

எனவே இந்நூல் சரியான அச்சுப் பிரதி என்று கொள்ள இடம் உண்டு. இப்பிரதியில் நூல் அரங்கேற்றம் பெற்ற செய்தி கடவுள் வாழ்த்துப் பகுதியில் (பாயிரம்) 31 ஆம், 32 ஆம் பாடல்களில் அமைந்து இருக்கிறது.

இதனுள், முதற் பாடலில், ஹிஜ்ரி 1229ல் நாகூரில் உள்ள ஷாஹுல் ஹமீது நாயகம் அவர்களுடைய தர்க்காவிலே அரங் கேற்றப்பட்டது என்று கவிஞராலேயே குறிப்பிடப்படுகிறது.

MOSCOW வெளியீட்டு நூல் படி ஹிஜ்ரி 1228 ஆம் ஆண்டின் முஹற்றம் மாதம் முதல் தேதி கி.பி 1813 ஜனவரி 4உ ஆகவும்; 1229 ஆம் ஆண்டு முஹற்றம் முதல் தேதி கி.பி 1813 டிஸம்பர் 24உ ஆகவும் அமைகிறது.

எனவே இந்தக் குதுபு நாயக நூல் ஹிஜ்ரி 1229 முஹற்றம் மாதம் 8 ஆம் நாள் அன்றி அதற்கு முன் அரங்கேற்றப்பட்டிருந் தால் ஒழிய அரங்கேற்ற ஆண்டு கி.பி. 1814 ஆகும்.

செந்தமிழ்ச் செல்வி கட்டுரையின் குறிப்புப்படி இராஜ நாயகக் காப்பிய முந்தைய பதிப்புகளில் இவ்வரங்கேற்றம் பற்றிய செய்தி பாயிரப் பகுதியில் அமைந்திருக்கக் கூடும்.

மேலும் குதுபு நாயக நூல் 1876 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப் பட்டதாகத் தெரிவதால் இராஜநாயகக் காப்பியமும் அக்கால கட்டத்தில் பதிப்பிக்கப் பெற்றிருக்கலாம்.

அப்படி முதன் முதலில் வெளிவந்த பதிப்பின் பிரதி கிடைத் தால்தான் சரியான விவரம் விளங்கும்.

வண்ணக் களஞ்சியப் புலவரின் மூன்றாவது காப்பிய நூல் தீன் விளக்கம் ஆகும்.

(தீன்-இங்கு இஸ்லாம் மார்க்கத்தைக் குறிக்கும்)

தீன் விளக்க நூல் ஹிஜ்ரி 1236ல் இராமநாதபுர மாவட்டம் ஏர்வாடி (ஏறுபாடி) என்னும் இடத்தில் இருக்கும் இபுறாஹீம் ஷஹீது வலி யுல்லா அவர்களது தர்காவில் அரங்கேற்றப்பட்டது.

வண்ணக் களஞ்சியப் புலவர் இவ் இறைநேசச் செல்வரின் வழித்தோன்றல் என்பர்.

இந்நூல் 22படலங்களையும் 1740 பாடல்களையும் கொண்டது.

ஜனாப் R.P.M கனி அவர்களும், M.R.M அப்துற் றகீம் அவர் களும், JM சாலி அவர்களும் பாடல் எண்ணிக்கை 1740 என்பர்.

ஆனால் இஸ்லாம் வளர்த்த தமிழ் நூலில் டாக்டர் உவைஸ் அவர்கள் 1715 பாடல்கள் எனக் குறிப்பிடுகிறார்.

இக் காப்பியத்தில் வண்ணக் களஞ்சியப் புலவர் தம் மூதாதை யர் ஆன அம்மகான் இபுறாஹீம் ஷஹீது அவர்களின் வாழ்க்கையை

யும், மதுரைப் பாண்டிய மன்னனோடு அவர் நிகழ்த்திய போர் களையும், இறுதியில் அவனை வென்று மதுரையில் இருந்து ஆட்சி செய்ததையும் கூறுகிறார். (இஸ்லாம் வளர்த்த தமிழ்—டாக்டர் உவைஸ்)

பின்னர்ப் போர் ஒன்றில், ஏர்வாடியில் (உடல் அடக்கம் செய்யப்பட்ட இடம்) வீர மரணம் அடைந்தார் என்பதையும் இந் நூலில் விவரிக்கிறது.

பத்து நாட்கள் நடைபெற்ற போரின் வருணனையே இந் நூலில் முக்கிய இடம் பெறுகின்றது என்றும், ஒவ்வொரு நாளும் நிகழ்ந்த போர் ஒவ்வொரு படலத்தில் வருணிக்கப்பட்டுள்ளது என்றும், காப்பியத்தில்இடம் பெறும் கடவுள் வாழ்த்து, நாட்டுப் படலம், நகரப்படலம் ஆகிய மூன்றுபடலங்கள் நீங்கலாக ஏனைய 19 படலங்களில் 10 படலங்களில் போர் நிகழ்ச்சிகளும், 9 படலங் களில் பிற செய்திகளும் இடம் பெற்று உள்ளன என்றும் டாக்டர் உவைஸ் அவர்கள் தமது ''இஸ்லாம் வளர்த்த தமிழ்'' நூலில் குறிப்பிடுவார். (ப. 221)

இதன் காரணம் ஆகவே இக்காப்பியத்தில் வீர ரசம் ததும்பு கிறது என்று சொல்லவும் வேண்டுமோ?

இவை தவிர ''அலி பாதுஷா நாடகம்'' என்ற நாடக நூல் யாத்தார், ''சீறா வண்ணம்'' முதலிய பல வண்ண நூல்களையும் அமைத்தார்.

இராஜ நாயகக் காப்பியத்தை ஆராயுங்கால் அதன் ஆசிரியருடைய தமிழ்ப் புலமைச் செறிவும் ஆழமும் தெற்றெனத் தெரிகின்றன.

பழந்தமிழ் இலக்கியங்களில் பயன்றுள்ள அரிய சொல்லாட்சி களைப் பரவலாகக் கையாண்டிருப்பதோடு வடமொழிச் சொற் களையும், தற்சம, தற்பவ வடிவில் பெருவாரியாக ஆண்டுள்ளார்.

தாவூது நபி, சுலைமான்நபி ஆகியவர்களைப் பற்றிப் பாடப் பெற்ற நூல் ஆகையால் தவிர்க்க இயலாவகை அறபுச் சொற்களும் பார்சிச் சொற்களும் பரவலாக அமைந்துள்ளன.

கம்பன் தனக்கு முன்னர் வாழ்ந்த புலவர்களது இலக்கியங்கள் அனைத்தையும் கற்றுத்துறை போயவன் என்பதால் அவற்றைத் தனது ஆக்கிக் கொண்டு நுண்ணறிவும் கற்பனையும் செறிய இராமாயணத்தைப் பாடியமையால் அவன் பின் வாழ்ந்தார் எவருமே அவன் பாதிப்பில் இருந்து தப்பவில்லை.

உண்மையில் சொல்லப் போனால் கம்பனுக்குப் பின் காப்பியம் பாடத் துணிந்தார் மிகச் சிலரே எனலாம்.

சீறாப் புராணம் பாடிய உமறுப் புலவர் கம்பனை எட்டிப் பிடிக்க முயன்று ஓரிரு இடங்களில் அவனை விஞ்சி விட்டார் என்றும் கூறலாம்.

இராஜ நாயகம் பாடவந்த வண்ணக் களஞ்சியப் புலவர் உமறுப் புலவரின் திறமையினால் பெரிதும் ஈர்ப்புண்டு அவரை அடி ஒற்றியே தன் காப்பியத்தை யாக்க முயன்றிருக்கின்றார்.

இராஜ நாயகக் காப்பியத்தை ஆயும் பொழுது வண்ணக் களஞ்சியப் புலவர் தாம் பயின்ற பிற காப்பியத் தொடர்கள் அனைத்தும் இக்காப்பியத்தில் கொட்டி விடவேண்டும் என்ற வேணவாவினால் தூண்டப்பட்டு இருந்தார் என்பது தெரிகிறது.

எது எப்படி இருப்பினும் வண்ணக் களஞ்சியப் புலவர் ஆழ்ந்த இலக்கியப் பயிற்சியும், பரந்த கல்வி ஞானமும், அசைக்க முடியாத சமயப் பற்றும், போற்றுதற்குரிய கற்பனை வளமும் பெற்றிருந் தார் என்பது தெளிவு. இவருடைய மூன்று காப்பியங்களுள் முதலா வதாகிய இராஜநாயகத்திலேயே 'வண்ணக் களஞ்சியப் புலவர்' என இவர் குறிப்பிடப் பெறுவதால் மிக்க இளமையிலேயே வண்ணங்கள் பாடுவதில் திறமை செறிந்தவராக இருந்தமை தெளிவாகிறது; அதன் காரணம் ஆகவே அவர் இயற்பெயர் மறைய இச்சிறப்புப் பெயரே விளங்குவதாயிற்று.

# 4. காப்பியக் கதைக்கரு—ஆதாரங்கள்

விவிலியம் (அல்லது) பரிசுத்த வேதாகமம் எனப்படும் BIBLE, பழைய ஏற்பாடு (OLD TESTAMENT) புதிய ஏற்பாடு (NEW TESTAMENT) ஆகிய இரண்டு பகுதிகள் கொண்டது.

பழைய ஏற்பாடு, இறைவன் உலகைப் படைத்த நாள் தொட்டு ஏசுநாதர் தோன்றிய நாள்வரை, நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுகிறது.

இறைவன் உலகின் எல்லாப் பகுதியினரையும் நல்வழிப்படுத்து வதற்காக, அவ்வப் பொழுது நபிமார்களை அனுப்பி வைத்தான் என்ற அடிப்படையில் இஸ்லாம் அமைந்து இருப்பதால், விவிலியத் தில் குறிப்பிடப்பெறும் தீர்க்கதரிசிகள் அனைவரும், பெரும்பாலும் முஸ்லிம்களாலும் நபிகள் அல்லது தீர்க்கதரிசிகள் என்று ஏற்றுக் கொள்ளப் பெற்றவரே ஆவர்.

எனினும் விவிலியத்தில் குறிக்கப் பெறும் எல்லா நிகழ்ச்சி களையும் உண்மை என்று முஸ்லிம்கள் ஏற்பதில்லை.

திருக்குர்ஆன் கருத்துக்கு மாறானவையும், விவிலியத்தில் உள்ளன. முஸ்லிம்களால் தாவூது நபி எனப்படுபவர், விவிலியத் தில் DAVID (அல்லது) தாவீது என்று குறிப்பிடப்படுகிறார். அது போலவே சுலைமான் நபி அவர்கள் SOLOMON (அல்லது) சால மோன் எனப்படுகிறார்.

விவிலியத்தில் குறிப்பிடப்பெறும் QUEEN OF SHEBA (அல்லது) சாபா நாட்டு அரசி என்பவர் திருக்குர்ஆனில் ஸபா நாட்டு அரசி எனப்படுகிறார். (தி.கு. 27:22-23)

தி.கு.—திருக்குர்ஆன்

சில ஆண்டுகட்கு முன் வரையில், நம் பள்ளி மாணவர்கட்கு DAVID AND GOLIATH, SOLOMON THE WISE AND THE QUEEN OF SHEBA என்ற சொற்றொடர்கள் மிகப் பழக்கம் ஆக அமைந்தன. இவைகள் பற்றிய எண் அற்ற கதைகளையும் அவர் கள் நன்கு அறிவர்.

தாவூது நபி அவர்களுக்கு, இறைவன், பறவைகள், மிருகங்கள், ஆகிய உயிரினங்களின் மொழிகளைத் தெரிந்து கொள்ளும் ஆற்றலையும் கொடுத்து இருந்தான் எனத் திருமறை கூறும்.

மேலும் இஸ்லாத்தின் அடிப்படை மரபுப்படி மக்கள் தலை வராய் இருந்த ஒவ்வொருவரும், தங்களுடைய நடைமுறை வாழ் விற்குத் தேவையானவற்றைத் தாமே உழைத்துப் பெற்றார்கள்.

இம்முறையில் தாவூது நபி அவர்களுக்கு இரும்பை நெருப்பில் இடாது எளிதில் வளைத்துக் கவசங்கள் செய்கின்ற திறமையை இறைவன் அளித்தமை பற்றியும் திருமறை குறிக்கிறது.

(தி. கு : 21:80)

தாவூது நபி, சுலைமான் நபி ஆகிய இருவருக்குமே தெளிந்த ஞானம், நற்கல்வி இவற்றை இறைவன் மட்டறக் கொடுத்தான் என்றும், தாவூது நபி அவர்களுக்கு மலைகளையும், பறவை களையும், வசப்படுத்திக் கொடுத்தான் எனவும், அவை தாவூதுடன் இறைவன் நாமத்தைப் பாடிப் பரவி துதித்துக் கொண்டிருந்தன என்றும் திருக்குர்ஆன் கூறும் (21 : 79)

தாவூது நபி அவர்கள் கோலியத்தை (ஜாலூத் எனத் திருக்குர் ஆன் கூறும்) அழித்ததையும் பற்றித் திருக்குர்ஆன் எடுத்துக் காட்டும்.

விவிலியம் SAUL (சவுல்) என்று குறிப்பிடும் அரசனைத் திருக்குர்ஆன் தாலூத் என்று குறிப்பிடும். (2: 249, 250, 251)

தாவூத் நபி திருமகனார் ஆன சுலைமான் நபிக்கும், மாபெரும் இராஜ்ஜியத்தையும் தெளிந்த அறிவையும், ஞானத்தையும் பல படைப்புகளின் மீது ஆதிக்கத்தையும் இறைவன் கொடுத்திருக் கிறான் எனத் திருக்குர்ஆன் கூறும்.

''இன்னும் ஸுலைமானுக்குக் கடுமையாக வீசும் காற்றையும் (நாம் வசப்படுத்திக் கொடுத்தோம்) அது அவருடைய ஏவலின்படி, நாம் எந்த பூமியைப் பாக்கியம் உடையதாக ஆக்கினோமோ (அந்த பூமிக்கும்)அவரை எடுத்துச் சென்றது. இவ்வாறு ஒவ்வொரு பொருளையும் பற்றி நாம் அறிந்திருந்தோம்'' (தி.கு 21:81)

''இன்னும் ஷைத்தான்களில் இருந்தும் அவருக்காகக் (கடலில்) மூழ்கிவரக் கூடியவர்களை (நாம் வசப்படுத்திக் கொடுத் தோம்); (இதுதவிர) மற்ற வேலைகளையும் (அந்த ஷைத்தான்கள் செய்யும்; அன்றியும் நாமே அவற்றைக் கண்காணித்து வந்தோம்') (தி.கு. 21:82')

மேலும் தாவூது நபி, சுலைமான் நபி அவர்களுக்கும் இறைவன் கொடுத்து இருந்த அருளினைப் பற்றித் திருக்குர்ஆன் இவ்வாறு எடுத்துக் கூறும்:

'தாவூதுக்கும், ஸுலைமானுக்கும் நிச்சயமாக நாம் கல்வி ஞானத்தைக் கொடுத்தோம்; அதற்கு அவ்விருவரும் : ''புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது; அவன் தான், மூமின்களான தன் நல்லடியார்களில் அநேகரை விட நம்மை மேன்மை ஆக்கி னான்.'' என்று கூறினார்கள் (27;15)

பின்னர் ஸுலைமான் தாவூதின் வாரிசானார் : அவர் கூறினார்: ''மனிதர்களே! பறவைகளின் மொழி நமக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டு இருக்கிறது; மேலும் நாம் எல்லாவிதப் பொருள் களில் இருந்தும் ஏராளமாக அளிக்கப்பட்டு உள்ளோம்; நிச்சய மாக இது தெளிவான அருள் கொடையே ஆகும்.'' (27:16)

மேலும், ஜின்கள், மனிதர்கள், பறவைகள், ஆகியவற்றில் இருந்தும் ஸுலைமானுக்குத் திரட்டப்பட்டு அவை (தனித்தனி யாகப்) பிரிக்கப்பட்டன. (27:17)

[ஜின்—இறைவன் படைப்புகளில் ஓரினம் பரு உடல் கொள் ளாது நுண் உடல் மட்டும் பெற்றவர்கள் மூவர்: உன்னத இடத் தைப் பெற்றுள்ள மலக்குகள் எனப்படும் விண்ணவர்; நடுத்தரத் தரான ஜின்கள்; கடைத்தரத்தர் ஆன ஷைத்தான்கள் ஆகியரே அம்மூவர்.

ஆனால் திருமறைக்கு விரிவுரை கண்டுள்ள பல அறிஞர்கள் பகுத்தறிவின் அடிப்படையில் இதற்கு வேறு விதமாகவும் பொருள் கொள்வர்.

அவர்கள் கருத்துப்படி ஜின்கள் என்பன சுலைமான் நபியால் அடக்கி ஒடுக்கப்பட்ட வலுவுள்ள மலை ஜாதியினர் ஆவார்கள்; முரட்டுத்தனமாக யாதொன்றையும் மிகத் துணிவுடன் செய்து முடிக்க வல்ல உடல் வன்மை மட்டுமே அவர்கட்கு இருந்தன. அன்றியும் பகுத்தறியும் திறன் மிகக் குறைவாகப் பெற்றவர்கள்; இதன் காரணமாகவே மனிதர்களிலிருந்தும் இவர்களைப் பிரித்துத் திருக்குர்ஆன் எடுத்துக் காட்டுகிறது என்பதாகும்.

திருக்குர்ஆனுக்கு உரையும் விளக்கமும் எழுதிய ABDULLAH YUSUF ALI எனும் பெரியார் மேலும் ஒரு படி செல்வார்.

பைத்துல் முக்கத்தீசு கட்டப் பெற்றதைக் குறிப்பிடும் திரு மறையின் 34 : 12, 13 கருத்துக்களைக் குறிப்பிட்டும், ஜின் எனப் படுவன, முடலை யாக்கை முழுவலி மாக்கள் எனவும், பயிற்சி பெறாத பணியாளர் (un-skilled, rough workers) எனவும் குறிப்பிடுவார்.

சுலைமான் (அலை) அவர்கள் முன்னால், அவர்கள் மேற்பார் வையின் கீழ் வேலை செய்த கட்டடப் பணியாளர் எனவும், எடுக்க, கொடுக்க, பேர்க்க, அகழ்க்க மட்டுமே ஏவல் கொள்ளப்பட்டனர் என்றும், பயிற்சி பெற்ற பணியாளரில் (Skilled workers) இருந்து மாறுபட்டவர் என்றும் குறிப்பிடுவார்.

பயிற்சி பெற்ற பணியாளர் மட்டுமே இதய சுத்தியுடன், மனப் பூர்வமாகப் பைத்துல் முக்கத்தீசு பள்ளியைக் கட்டுவதில் ஈடு பட்டனர் என்றும், அவர்கள் தாவூதின் சந்ததியினர் (கண் அனைய கேளிர்) என்றும் கூறுகிறார்.] (தி. கு. 34·13)

ஹூத் ஹூத், பறவையைப் பற்றியும் அது சாபா நாட்டு ராணியைப் பற்றிய செய்தி தெரிவித்ததையும், அவ்விராணியை ஏகத்துவத்தின்பால் சுலைமான் நபி அழைத்ததையும், அதன்படி அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதையும், திருக்குர்ஆன் குறிப் பிட்டு அமையும். (27:20—44)

ஆனால் அவரைத் திருமணம் கொண்டது பற்றிய செய்தி திருக்குர்ஆனில் இல்லை. விவிலியமோ, திருக்குர்ஆனோ அவ்வரசி யார் பெயர் 'பல்கீசு' எனக் கூறவில்லை.

தாவூது நபி அவர்களுக்கும், சுலைமான் நபி அவர்களுக்கும் இத்தகைய பெருஞ்சிறப்புகள் இருந்ததன் காரணம் ஆக அவர் களைப் பற்றிப் பல்வேறான கதைகள் நீண்டகாலமாகவே தோன்றி உலாவுகின்றன.

இக்கதைகள் பல மொழிகளிலும் நூல்வடிவம் பெற்றுள்ளன. பல்கீசுக்கும் எத்தியோப்பியா என்று இன்று வழங்கப் பெறும் அபிசீனியா நாட்டிற்கும் இடையே தொடர்பு இருந்ததாகக் கொண்டு அதைப்பற்றிய ஆராய்ச்சி இன்றும் தொடர்ந்து வருகிறது.

பலமொழிகளில் இவ்வாராய்ச்சி பற்றிய கட்டுரைகளும் வந்தன; வருகின்றன; வரும்போலும்.

சுலைமான் நபி அவர்களுடைய தீர்ப்புக் கூறும் திறமைக்கு எடுத்துக் காட்டாக விவிலியம் ஒரே ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டும்.

அது வருமாறு :

"இரு விலைமாதர், ஒரு முறை அவர் முன் தோன்றி ஒரு மகவினைத் தாளில் கிடத்தி, அக்குழந்தைக்குத் தான் தான் உரிமைத்தாய் எனத் தனித்தனி முறையிட்டனர்.

சுலைமான் நபியோ அவர்களில் எவர் உரிய தாய் என்று கண்டு பிடிக்க அம்மகவை, 'வாளால் அரிந்து ஆளுக்குப் பாதி அடைக' எனக் கூறினார்.

அவர்களுள் ஒருத்தி இதற்கு ஒப்பினாள்; மற்றவள் 'பிள்ளை எப்படியாவது உயிரோடு இருந்தால் போதும்' என்று சொல்லித் தனக்குப் போட்டி ஆக வந்தவளே 'அம்மகவினைக் கொள்க, வளர்க்க' எனக் கூறிவிட்டாள்.

இதிலிருந்து அவள்தான் உண்மைத் தாய் என்று முடிவு பெற்று சுலைமான் நபி அப்படியே தீர்ப்பு வழங்கினார்.

(விவிலியம் 1 KINGS 3)

இது யாவரும் அறிந்த கதை.

இவ்வொன்று மட்டுமே விவிலியத்தில் இடம் பெற்றிருந்த போதிலும், இது போன்ற பல தீர்ப்புகள் பற்றி விரிவாகப் பல நூல்கள் வந்துள்ளன.

அவை பெரும்பாலும் வெற்றுப் புனைந்துரைகளே என்று குறிப்பாரும் உளர்.

விவிலியத்திலும் திருக்குர்ஆனிலும் பெயரின் அடிப்படையிலும், திறமையின் அடிப்படையிலும் இவர்களைப் பற்றிக் குறிப்பிட்டு இருப்பதனால், முஸ்லிம்களும் இவை போன்ற கதைகளை நம்பத் தொடங்கினர்.

அது மட்டும் அல்லாமல் 'கஸஸுல் அன்பியா' என்ற ஒரே பெயரில்— 'அல்கிஸாய்' 'அல் தலஅபி' என்னும் இருவர் அரபு மொழியில் நூல் யாத்தனர்.

[அல் அன்பியா—நபி என்பதன் பன்மை

கஸஸ்—வரலாறு

கஸஸுல் அன்பியா—நபி மார்களின் வரலாறு.]

இறைவன் உலகைப் படைத்த நாள் தொட்டு ஈஸா நபி அவர்களுடைய வரலாறு முடிய பல நிகழ்ச்சிகளைக் கூறுகின்றன இந்நூல்கள்.

இவற்றிலும் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகட்கு மாறான கதைகள் பலவும் இடம் பெறலாயின.

முதன் முதலில் அரபு மொழியில் தோன்றிய இந்நூலை ஒட்டி பார்சி, உருது, போன்ற மொழிகளிலும் நூல்கள் பல்கின. தமிழிலும் கூட "கஸஸுல் அன்பியா," (நபிமார்கள் வரலாறு) என்ற பெயரில் நூல் வெளி வந்துள்ளது.

இவற்றில் காணப் பெறுவன அனைத்தும் உண்மையே என்றோ, இஸ்லாத்துக்கு உடன்பாடானவையே என்றோ கொள்ள இயலாது.

"இராஜநாயகம்"—இக்காப்பியத்தில் இடம் பெற்றிருக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தும் விவிலியம், திருக்குர்ஆன், கஸஸுல் அன்பியா ஆகியவற்றிலிருந்து அப்படியே எடுத்துக்கொண்டு படைக்கப் பெற்றன எனல் இயலாது.

கவிஞர், இராஜநாயகம் என்று குறிப்பிடுவது சுலைமான் நபி அவர்களைத்தான் (இ. நா 1:26)

ஆகவே காப்பிய நூல் தாவூது நபி அவர்களைப் பற்றி அவ்வளவு விரிவாகக் கூறவில்லை. ஆனால் தாவூது நபி ஆட்சிக் காலத்திலேயே சிறு பிள்ளையாக இருந்த சுலைமான் நபி அவர்களின் அறிவு நுணுக்கம் காட்டுவதற்காகச் சில பிரச்சினைகளில் தாவூது நபி தீர்ப்பு தவறுகள் என்றும், சரியான தீர்ப்பை சிறுவராக இருந்த சுலைமான் வழங்கினார் என்றும் அது பற்றி தாவூது மகிழ்ந்தார் என்றும், குறிப்பிடப் பெற்றுள்ளன.

"மேலும் தாவூதும் சுலைமானும் (பற்றி நினைவு கூர்வீராக!) ஊர்வாசிகளின் ஆடுகள் இராக்காலத்தில் ஒருவனுடைய வயலில்

இறங்கி மேய்ந்த பொழுது அவ்வயல் பற்றி அவ்விருவரும் தீர்ப்பு வழங்கிய போது (நிகழ்ந்தது நினைவு கூர்க), மேலும் நாம் அவர்களுடைய நியாயத் தீர்ப்பைக் கவனித்துக் கொண்டு இருந்தோம்.''
(தி. கு 21:78)

சுலைமான் நபி அவர்களுடைய தாய் ஆகிய 'நசாயிகு'க்கும், தாவூதுநபி அவர்களுக்கும், இடையே எப்படித் தொடர்பு உண்டாயிற்று என்பது பற்றி ஒரு அருவறுப்பு ஆன கதை விவிலியத்தில் உள்ளது. (2 SAMUEL 11,12)

இக்கதை தாவூது (நபி) உடைய பண்பு நலன் பற்றியும் பக்திச் செறிவு பற்றியும் விவரித்துக் கூறும் விவிலியக் கருத்துக்கே முரண்பட்டது ஆகும்.

திருக்குர்ஆனோ தாவூது (நபி) அவர்களைப் பற்றி மிக உயர்வாகவே பேசும்.

தாவூது நபி அவர்களுக்கு ஜபூர் என்னும் வேதத்தை இறைவன் அருளினான் என்று ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் திருக்குர் ஆன் கூறும். (தி.கு 4:163; 17:55)

மேலும் தாவூது நபி அவர்கள் எதிலும் இறைவனையே நோக்குபவராக இருந்தார் எனத் திருக்குர்ஆன் கூறும்.

''உண்மையில் (நாம் அவரிடம் கூறினோம்) ' ''தாவூதே! நிச்சயமாக நாம் உம்மைப் பூமியில் நம்முடைய பிரதிநிதியாக ஆக்கினோம்' ''
(தி.கு: 38:26)

அத்தகைய தாவூது நபி விவிலியம் கூறும் அருவறுப்பான செயலில் ஈடுபட்டிருத்தல் இயலாது. இதன் காரணமாகவே வண்ணக் களஞ்சியப் புலவர் இது பற்றி எவையும் குறிப்பிடாமல் விட்டு விட்டார்.

நசாயிகு, தாவூது நபி அவர்களின் மனைவியரில் இளையவள் எனவும் இவள் மகனே சுருதி புகழ் சுலைமான் எனவும் சொல்லாரம் சூட்டுவார்.

சுலைமான்நபி அவர்களுக்கு எத்தனை மனைவியர் இருந்தனர் என்றும் அவர்களோடு அவர் எப்படி வாழ்ந்தார் என்றும் குறிப்பிடப் பலகதைகள் உண்டு.

விவிலியமோ,

''சாலமோன் மன்னர் பாரவோனின் மகள் பால் மட்டற்ற அன்பினர். தவிர மோவாபியர், அம்மோனியர், இதுமேயர், சிதோனியர், ஏத்தையர் ஆகிய புற இனத்தார் மகளிர் மீதும் மாறாக் காதலர் ஆயினர்.

ஆண்டவன் இஸ்ராயீல் மக்களை நோக்கி 'நீங்கள் அந்நாடு களில் இருந்து பெண்கள் கொள்ளவோ, கொடுக்கவோ வேண்டா. ஏனெனில், அவர்கள் உறுதியாகத் தம் கடவுளர்களை வணங் கும்படி உங்கள் மனத்தை மாற்றிவிடுவர்' எனக் கூறி இருந்தார்.

நாடாள் வேந்தனோ இவ் அற உரைகளைப் புறக்கணித்து அந்நாட்டுப் பெண்கள் பால் ஆசைவைத்தார். தம் மனைவியரும் அரசிகளுமாக எழுநூறு பெண்களையும், வைப்பாட்டிகளாக முந் நூறு பெண்களையும் வைத்திருந்தார். அப்பெண்கள் அவர் இதயத்தைத் தீயவழியில் திருப்பி விட்டனர்.

சாலமோன் முதிர்ந்த வயதினராக இருந்தபோது அவருடைய மனைவியர் அவர் இதயத்தை அன்னிய தேவர்களைப் பின்பற்றும் படிக் கெடுத்து விட்டனர். அதனால் அவரது இதயம் தந்தை தாவீது இதயம் போல் தம் கடவுள் ஆகிய ஆண்டவரோடு முழு வதும் ஒன்றி இருக்கவில்லை.'' (1 KINGS 11)

திருக்குர்ஆனிலோ இதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. இறைவனுடைய நன்மாராயத்தைப் பிறர்க்கு எடுத்துக் கூறவந்த ஒரு நபி இடம் இப்பெண் வழிச் சேறல் என்னும் பேதைமை சார்ந் திருக்க முடியாது.

''அவர்கள் ஸுலைமான் ஆட்சிக்கு எதிராக ஷைத்தான்கள், ஓதியவற்றையே பின்பற்றினார்கள்: ஆனால் ஒரு போதும் சுலை மான் நிராகரித்தவர் அல்லர். ஷைத்தான்கள் தாம் நிராகரிப் பவர்கள். அவர்கள் தாம் மனிதர்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுத்தார்கள்.'' (தி.கு 2:102)

எனவே திருக்குர்ஆன் சுலைமான் (நபி) அவர்கள் ஏகத்துவத் தின் பால் உறுதியாக நின்றார் என்று உறுதியாகக் கூறுகிறது.

எனினும் விவிலியத்தின் அடிப்படையில் எழுந்த கதைகள் நின்ற பாடில்லை. வண்ணக் களஞ்சியப் புலவரும்

துணைவியரில் முந்நூறும் இங்கு இதன் மேல்
  சுறியத் என்பதில் எழுநூறும்
மணம் அது பொருந்தி சுவ(ர்)ன ஒண்பதிபோல்
  வயங்க வேறு ஓர் நகர் ஆக
அணி தரு பளிங்கின் நிரை நிரை ஒழுங்காய்
  ஆயிரம் மாளிகை அமைத்தே
கணை விழியினர் ஒவ்வொருவரை ஒன்றில்
  கவின் பழுத்து ஒழுகவே இருத்தி (17:79)

(சுறியத்—அபிமானப் பெண்டிர்; காதல் கிழத்தியர்) என்று பாடுகிறார்.

ஆனால் திருமறைக்கு நேர் எதிராக அவருடைய அம்மனைவியர் அவரை வழிகேட்டில் இறக்கிவிட்டனர் என்று பாடிலர். எனினும் பவுனவகு என்பாரின் மகள் ஐமுசத்து என்பாளை சுலைமான் நபி மணம் முடித்த பிறகு, அவள் தன் தந்தையின் இறப்பினால் வெகுவாக வருந்தினாள் என்பதனை அறிந்து அவள் வேண்டுகோள்படி, பவுன வகுவின் படிவம் அமைத்துத் தந்தார் என அறிகிறோம்.

படிமம் பெற்ற பாவை துன்பம் மாறினாள். ஆனால் அவ்வுருவத்தையே கடவுள் எனக் கொண்டு ஈமான் மிக்கு வழிபடல் ஆயினள். இது அவர் அறியார்.

[ஈமான்—நம்பிக்கை. அதாவது அல்லாஹ் மீதும், மலக்குகள் மீதும், வேதங்கள் மீதும், நபிமார்கள் மீதும், இறுதி நாள் மீதும் அல்லாஹ் முன் அளப்பின் மீதும் முஸ்லிம்கள் நம்பிக்கை வைத்தலையே இச்சொல் குறிக்கும்.]

சுலைமான் நபி இதனை அறியார் எனினும், சிலை வடித்துக் தந்ததே தவறு. ஆகையால் அதற்காகவே அவர் தண்டிக்கப்பட்டார் என்று ''முத்திரை மோதிரம் பறிபட்டுவந்த படல''த்தில் வண்ணக் களஞ்சியப் புலவர் பாடுவார்.

அப்படலத்தில் இறைவன் ஆணைப்படி இவர் உரு மேவி சகுறு எனும் ஜின் ஆட்சி புரிந்து வந்தது என்றும் குறிப்பிடுவார் (36:18; 36:57)

இப்பிந்தைய கூற்றுக்கு ஆதாரமாகத் திரு மறையின் ஒரு வசனத்தையும் இத்தகையவர்கள் குறிப்பிடுவார்கள். அவ்வசனமாவது:

"இன்னும் நாம் ஸுலைமானைத் திட்டமாகச் சோதித்தோம்; அவருடைய அரியணையில் ஒரு முண்டத்தை எறிந்தோம். ஆகவே, அவர் (நம்மளவில்) திரும்பினார்." (தி.கு 38:34)

இவ்வசனத்துக்கு விளக்கம் தருவகையில் திருக்குர்ஆனுக்கு உரைகண்ட பலரும் இவ்வசனத்தில் இடம் பெற்றிருக்கும் முண்டம் என்ற சொல் சுலைமான் (நபி) அவர்களுக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பு ஏற்ற அவர் மகனைக் குறிக்கும் என்றும், அம் மகன் எந்தத் தகுதியும், திறமையும் அற்றவன் என்றும்,அதனைச் சுலைமான் நபி அறிவார் என்றும்,அதற்காக இறைவனிடம் முறை யிட்டார் என்றும் கூறுவர்.

உண்மையில் சுலைமான் நபி அவர்கள் காலத்திற்குப்பின் அவர் பேரரசு சிதறுண்டு போயிற்று.

கஸஸுல் அன்பியா என்னும் பெயரில் இரு நூல்கள் எழுந்தன என்றும், தமிழ் மொழியிலும் இந்நூல் வெளி வந்து உள்ளது என்றும் முன்னர்க் குறித்தோம்.

சென்னை திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையில் உள்ள "ஹாஜி M.A. ஷாஹுல் அமீது அண்டு ஸன்ஸ்" என்னும் நிறுவன வெளி யீடு அது. முதற் பதிப்பு 1951லும் அண்மைய பதிப்பு 1982லும் வெளிவந்தன.

நூல் முன்னுரையில் குறிப்பிடப் பட்டுள்ள தொடர்களால் இதற்கு (1951)முன்னரே தமிழில் இந்நூல் வந்தமை அறிகிறோம்.

அந்நூல் (1982—பதிப்பு) முன்னுரையில்,

"தொண்ட மண்டல பூமியில் பொன்னேரித் தாலுக்காவைச் சேர்ந்த பவளமா நகரத்தில் வசிக்கும் முஸ்லிம் ஆகிய குடிமக் களுக்கு நேர் வழிகாட்டி நின்ற முஹம்மது ஜான் ஸாஹிபு லெப்பை ஆலிம் அவர்களாலும், முஹம்மது சகிஸாஹிபு அவர்கள் குமாரராகிய பேரறிஞர் காலி முகம்மது ஜான் ஸாஹிபு லெப்பை ஆலிம் அவர்களாலும் ஒரு பகுதி தமிழ் மொழி பெயர்க்கப் பட்டி ருந்தது.

அது போக மற்றதை அவ்வூர் முஹம்மது அலி லெப்பை ஆலிம் அவர்களைக் கொண்டு தமிழ் மொழி பெயர்த்து பாசிப் பட்டணம் தயினா முஹம்மதுப் புலவர் அவர்கள் அச்சிட்டிருந்தார்.

அதில் அறபு சொற்கள் மிகவும் கலந்து இருந்ததால் அவைகள் அறபு அறியாதவர்களுக்கு மிகவும் சிரமம் ஆகஇருந்தது.

எனவே காயல் பட்டணம் கண்ணஹுமது மஹுதூ முஹம்மதுப் புலவர் அவர்கள் பரிசோதித்து அச்சிட்டிருந்தார். அப்பிரதிக்கிணங்க ஹாஜி எம்.எ. ஷாஹுல் ஹமீது அண்ட் ஸன்ஸ், அவர்களால் இன்னும் வேண்டிய சீர்திருத்தம் செய்து, யாவரும் சுலபமாக விளங்கும் படியான தமிழாக, தம் பொருள் உதவியால் தங்களது ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸில் பதிப்பிக்கப் பட்டது'' என்ற குறிப்பு இருக்கிறது.

இதில் குறிப்பிடப்பெறும் கண்ணஹுமது முஹம்மதுப்புலவர் நிச்சயமாக வண்ணக்களஞ்சியப் புலவர்க்கு காலத்தால் பிந்திய வரே!

பெரும்பாலும் அவருடைய பதிப்புகள் இந்நூற்றாண்டில் வெளி வந்தவையே.

ஆனால் இச்சிறப்புப் பாயிரம் குறிப்பிடும் பிறர் பற்றிய காலத்தை நம்மால் நிச்சயமாகக் குறிப்பிட முடியவில்லை.

ஆகையால் இவைகள் எவையும் வண்ணக் களஞ்சியப் புலவர் கூற்றுக்கு ஆதாரமாக அமைந்தன என உறுதியாகக்கூற இயலாது,

வண்ணக் களஞ்சியப் புலவரோ தம்முடைய பாயிரத்தில்,

வாய்ந்த எழில் சுலையுமான் நன்னபி வரலாறு தன்னை
ஆய்ந்து இபுறாகீம் லெவ்வை ஆலிமாம் அமுத மாரி
தோய்ந்து சொல் உரையின் வண்ணம் சொல்வன் காவியம்
ஏய்ந்திடு பெயர் இராஜ நாயகம் என்பது ஆமே. [இதற்கே
(1:25)

என்று பாடுகிறார்.

எனவே அவர் சொற்படி, அவர்க்குக் காப்பியக் கதைக் கரு அமைத்துத்தந்தவர் இபுறாகீம் லெவ்வை என்னும் ஆலிம் ஆவார்.

சுலைமான் நபி அவர்களுடைய மனைவிமார் பற்றி இத் தமிழ்க் ''கஸஸுல் அன்பியா''விலும் ஒரு கதை உள்ளது:

'அவர் ஐந்நூறு பெண் ஜாதிகளுடனும் எழுநூறு அடிமைப் பெண்களுடனேயும் வாழ்கிறவராக இருந்தார்.

ஒரு நாள் ''நான் ஆயிரம் பெண்களுடனே சம்பந்தம் செய்து, ஒவ்வொரு பெண் பிள்ளைக்கும் இரண்டிரண்டு பிள்ளையாக ஹமலாகிப் (கருத்தரித்தல்)பிறந்து, இரண்டாயிரம் பிள்ளைகளும் அல்லாஹ்வுடைய மார்க்கத்திலே குதிரை மேல் ஏறுகிறவர்களாக ஆவார்கள்'' என்று சொன்னார்.

ஆனால், இறுதியில், ''இன்ஷா அல்லாஹ்'' என்று சொல்ல வில்லை. ஆகவே ஆயிரம் பேர்களுடனே அவர்கள் கூடியும் அவர்களில் ஒருத்தியே ஹமலானாள்.

அதற்குப் பின்னால் எந்தக் காரியம் செய்தாலும், ''இன்ஷா அல்லாஹ்'' என்று சொல்லுவார்,

'இன்ஷா அல்லாஹ்'—இத்தொடர்க்கு 'அல்லாஹ் நாடினால்' என்பது பொருள். முஸ்லிம்கள் எதிர்காலத்தில், சொல்லக் கூடிய, செய்யக் கூடிய, எதைக் குறிப்பிடினும் இன்ஷா அல்லாஹ் என்று சேர்த்தே சொல்வர்.

காரணம் என்ன என்றால், இறைவன் நாட்டம் யாது என யாரும் அறிகிலர். அடுத்த கணத்தில் நடப்பது யாது என அறி திறன் மனிதர்க்கு இல்லை. ஆகையால்தான் ''இறைவன் நாட்டம் பொருந்தி இருப்பின் இதைச் செய்வேன்; சொல்வேன்'' என்ற பொருளில் இன்ஷா அல்லாஹ் என்று சேர்த்துச் சொல்வர்.

இத்தகைய கதைகளைக் கொண்ட கஸஸுல் அன்பியா வண்ணக் களஞ்சியப் புலவர் காலத்தில் இருந்ததோ இல்லையோ அறிகிலம்.

பிற மொழிகளில் வந்திருந்த நூல்களில் இத்தகைய கதைகள் இருந்திருக்கவேண்டும். அது தான் வண்ணக் களஞ்சியப் புலவர் இப்படிப் பாடுவதற்குக் காரணம் ஆயிருக்கக் கூடும்,

எந்த முஸ்லிம் புலவரும் திருக்குர்ஆனில் இருப்பதற்கு மாறாகவோ, இஸ்லாத்தின் அடிப்படைக்கு மாறாகவோ எதையும் எழுதுவார்கள் என்று எண்ணிப் பார்க்கவும் முடியாது.

எனினும் சுலைமான் நபி அவர்களுக்கு மாபெரும் சாம்ராஜ்ஜியத்தையும், பேராற்றலையும் இறைவன் அளித்திருந்தான் என்று திருக்குர்ஆனே கூறுகிறது.

''(அவருக்குப் பின்னர்), ஸுலைமானுக்கு காற்றை (வசப்படுத்திக் கொடுத்தோம்). அதனுடைய காலைப் பயணம் ஒரு மாதம் ஆகவும் மாலைப் பயணம் ஒரு மாதம் ஆகவும் இருந்தது; மேலும் நாம் அவருக்காகச் செம்பை ஊற்றைப் போல்உருகி ஓடச் செய்தோம், தன் இறைவனுடைய அனுமதிப்படி அவருக்கு முன் உழைப்பவற்றில் ஜின்களில் இருந்தும் (வசப்படுத்திக் கொடுத்தோம்). அவர்களில் எவர் (அவருக்கு ஊழியம் செய்வதில்) நம்முடைய கட்டளையை புறக்கணிக்கின்றாரோ, அவரைக்

கொழுந்து விட்டு எரியும் (நரக) வேதனையைச் சுவைக்கும்படி நாம் செய்வோம் (என்று எச்சரித்தோம்)'' (தி.கு 34:12)

''அவை ஸுலைமான் விரும்பிய மிஹ்ராபுகளையும்,[1] சிற்பங்களையும், (தடாகங்கள் போன்ற) பெருங் கொப்பரைகளையும் நகர்த்த முடியாத பெரும் பாத்திரங்களையும் செய்து கொண்டிருந்தன. 'தாவூதின் சந்ததியினரே! நன்றி செய்யுங்கள். மேலும் என் அடியார்களில் நின்றும் நன்றி செலுத்துவோர் சொற்பமானவர்களே!' (என்று கூறினோம்.)'' (தி.கு 34:13)

''அவர் (ஸுலைமான்) மீது நாம் மரணத்தை விதித்தபோது அவர் இறந்து விட்டார் என்பதை, அவர் சாய்ந்திருந்த தடியை அரித்து விட்ட நிலத்தின் பூச்சி (கரையான்) தவிர வேறு எதுவும் அந்த ஜின்களுக்கு அறிவிக்கவே இல்லை. (அவர் கீழே விழவே) 'தாங்கள் மறைவான விஷயங்களை அறிந்திருக்கக் கூடுமானால் (கடின உழைப்பாகிய) இழிவு தரும் வேதனையால் தாங்கள் தரிபட்டிருக்க வேண்டியதில்லை' என்று ஜின்களுக்குத் தெளிவாகத் தெரிந்தது.'' (தி. கு. 34:14)

''இன்னும் தாவூதுக்குப் (புதல்வராக) ஸுலைமானை நற்கொடையாய்க் கொடுத்தோம்; சிறப்பான (நம்) நல்லடியார், நிச்சயமாக அவர் (எதிலும் நம்மையே) நோக்குபவர்.''
(தி. கு. 38:30)

''ஆகவே, நாம் அவருக்குக் காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம்; அது அவருடைய கட்டளைப்படி அவர் நாடிய எல்லா இடங்களுக்கும் (அவரைச் சுமந்து) சென்று கொண்டு இருந்தது.''
(தி.கு. 38:36)

''மேலும் ஷைத்தான்களில் உள்ள கட்டடம் கட்டுவோர், முத்துக் குளிப்போர் யாவரையும், (தி.கு. 38:37)

சங்கிலியால் விலங்கிடப்பட்டு இருந்த வேறு பலரையும் (நாம் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தோம்)'' (தி.கு. 38:38)

'' 'இது நம்முடைய நன்கொடை ஆகும்; (நீர் விரும்பினால் இவற்றைப் பிறருக்குக்) கொடுக்கலாம், அல்லது கொடாது நிறுத்திக் கொள்ளலாம்'' ' என்று (நாம் அவரிடம் கூறினோம்).
(தி.கு. 38:39)

---

1. மிஹ்ராப்—பள்ளி வாசலில் இமாம் தொழுகை நடத்துவதற்கு ஒதுக்கப்பட்ட இடம்.

''மேலும், நிச்சயமாக அவருக்கு, நம்மிடத்தில் நெருங்கிய (அந்தஸ்தும்), அழகிய இருப்பிடமும் உண்டு.'' (தி.கு. 38:40)

விவிலியமும் கூட சுலைமான் ஜெருசலத்தில் (பைத்துல் முக்கத்தீசு) ஆலயம் கட்டியதைப் பற்றியும் அக்கட்டட வேலையில் எவர் எவர் பங்கு கொண்டனர் என்பது பற்றியும் விரிவாகக் கூறுகிறது.

அது போலவே சுலைமான் தனக்கு மாளிகை கட்டிக் கொண்டதைப் பற்றியும் மிகச் சிறப்பாகக் கூறுகிறது.

இப்படி விவிலியத்தையும் திருக்குர்ஆனையும் பார்க்கும் பொழுது, சுலைமான் நபி அவர்களுக்கு இறைவன் கொடுத்திருந்த செல்வம், செல்வாக்கு, ஆற்றல் முதலன அளத்தற்கரியன என்பது தெளிவாகும்.

இப்பின்னணியில்தான் அவரைப் பற்றிய இத்துணைக் கதைகளும் தோன்றி இருக்க முடியும்.

இவை எல்லாம் வண்ணக் களஞ்சியப் புலவர்க்கு (இபுறாகீம் லெவ்வை ஆலிம் கூற) இராஜ நாயகம் காப்பியம் இயற்ற ஆதாரமாக அமைந்திருக்கக் கூடும்.

காப்பியத்தில் ஒன்றை நாம் மிகத் தெளிவாகக் காண்கின்றோம். அதுதான் வண்ணக் களஞ்சியப் புலவர், சுலைமான் நபி அவர்களுடைய செயல்கள், சாதனைகள் அனைத்தும் இறைவன் அருட்கொடையால் அமைந்தன என்று குறிப்பிடுவது ஆகும்.

# 5. இரட்டை மரபு

தமிழ் நாட்டில் வாழ்ந்த, வாழ்கிற முஸ்லிம் கவிஞர்களுக்குத் தங்களுடைய படைப்புகளில் இரண்டு மரபுகளைப் பின் பற்ற வேண்டிய கட்டாயம் இருக்கிறது.

அவர்கள் தங்கள் காலத்தில், தமிழில் உள்ள எல்லா இலக்கியங்களையும் படித்திருந்தவர்கள். அந்த இலக்கியங்களோ சமண, பௌத்த, ஹிந்து (சைவ, வைணவ) சமயங்களின் அடிப் படையில் தோன்றியவை.

அந்தக் காப்பியங்களிலும், இலக்கியங்களிலும் உள்ள கருத்துக் கள் அந்தந்த சமயச் சித்தாந்தங்களுக்கு இயையவே இடம் பெற்றிருந்தன.

அவைகளை ஒட்டிய எண் அற்ற கதைகளும், அவற்றின் அங்கங்களாக அமைந்திருந்தன.

சிற்சில சொல் ஆட்சிகளும் சொல் வழக்குகளும் இந்தச் சித்தாந்தங்களில் இருந்தும், கதைகளில் இருந்தும் பிரிக்க முடியாத வையாக இருந்தன.

இத்தகைய படைப்புகளைத்தான் இவர்கள் படிக்க வேண்டி இருந்தது. அத்தோடும் அல்லாமல், ஒரு காப்பியம் எப்படி அமைய வேண்டும் என்று இலக்கணம் வேறு நிர்ணயிக்கப்பட்டு இருந்தது.

தண்டி அலங்காரம் என்னும் இலக்கண நூல் பெருங்காப்பியம் ஒன்றன் இயல்பை இவ்வாறு கூறும்:

பெருங்காப்பிய நிலை பேசும் காலை
வாழ்த்து, வணக்கம் வருபொருள் இவற்றில் ஒன்று
ஏற்பு உடைத்தாகி முன் வரவு இயன்று

நாற்பொருள் பயக்கும் நடைநெறித்து ஆகி
தன்நிகர் இல்லாத் தலைவனை உடைத்தாய்
மலை, கடல், நாடு, வளநகர், பருவம்
இருசுடர்த் தோற்றம்என் றுஇனையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல், புனல்விளை யாடல்
தேம்பிழி மதுகளி, சிறுவரைப் பெறுதல்
புலவியில் புலத்தல், கலவியில் களித்தல்என்று
இன்னன புனைந்த நன்நடைத்து ஆகி
மந்திரம், தூது, செலவு இகல், வென்றி
சந்தியில் தொடர்ந்து, சருக்கம், இலம்பகம்
பரிச்சேதம், என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும், பாவமும் விரும்ப
கற்றோர் புனையும் பெற்றியது என்ப.

(தண்டி 8)

தண்டிஅலங்கார ஆசிரியர் காப்பியங்களைப் பெருங்காப்பியம், காப்பியம் என்று பாகுபடுத்துகிறாரே தவிர பெருங்காப்பியம், சிறுகாப்பியம் என்று பாகுபடுத்தவில்லை.

மேல் எடுத்துக்காட்டப்பட்ட சூத்திரத்தில் கூறப் பெற்ற நாற்பொருள் தவிர பிறவற்றுள் ஒன்றிரண்டு குறைவாக இருந்தாலும் அது பெருங்காப்பியமே ஆகும்.

ஆனால் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கனுள் ஒன்றோ, ஒன்றுக்கு மேற்பட்டதோ குறைபடுமாயினும், பிற எது இருப்பினும் அது பெருங்காப்பியம் ஆகாது; காப்பியமே ஆகும் என்பது ஆசிரியர் கருத்து. எனினும் காப்பியக் கர்த்தாக்கள் தங்களால் முடிந்த வரை பெருங்காப்பிய இலக்கணத்தைப் பின்பற்றிப் பாடவே முயன்றிருக்கிறார்கள்.

தமிழில் ஒரு பெருங்காப்பியம் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்ட பிறகு முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் இந்த மரபு வழி நிற்பது அவசியம் ஆயிற்று. டாக்டர் ம. மு. உவைஸ் அவர்கள், "இஸ்லாமிய அடிப்படையில் எழுந்த தமிழ் நூல்களுள் பெருங்காப்பியங்களைக் காண்பது அரிது. இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்கள் அனைத்தும் சிறு காப்பியங்களாகவே இருக்கின்றன" என்று கூறுகிறார்.[1]

1. "இஸ்லாமியத் தென்றல்", ப. 67

ஆனால் முஸ்லிம்களுடைய சமயக் கருத்துகளோ, மற்ற தமிழ்க் காப்பியங்களில் காணப்பெறும் கருத்துகளுக்கும், கதைகளுக்கும் பெரும்பாலும், முற்றிலும் முரண் ஆனவை.

அது போலவே காப்பிய நாயகர்களும்.

சிலப்பதிகாரத்தை எடுத்துக் கொண்டால் அதில் காப்பிய நாயகன் (அல்லது) நாயகி யார் என்று சொல்வது கஷ்டம். பல பாத்திரங்கள் ஏறத்தாழ ஒரே அளவிலான இடத்தைப் பெறுகின்றன. கண்ணகி ஒருத்தியைத்தான் காப்பியத் தொடக்கத்தில் இருந்து இறுதி வரை காண முடிகிறது. அவளோடு நெருங்கி வருபவன் கோவலன்.

சீவக சிந்தாமணியை எடுத்துக்கொண்டாலோ, அது ஒரு அரச குமாரனுடைய ஆற்றலையும், வீரத்தையும், கலைத்திறனையும், போர்வலியையும், கொண்ட திருமணங்களையும், நீண்டு விவரித்து இறுதியில் அவன் துறவு மேற்கொள்வதையும் பாடுகிறது.

இத்தகைய காப்பிய நாயகன் (அல்லது) நாயகி பற்றிப் பாடும் போது எந்த ரசத்தையும் விரிவாகப் பாடலாம். அதன் காரணம் ஆக எத்தகைய ஆட்சேபணையோ, கொள்கைப் பிறழ்ச்சியோ சமயக் காழ்ப்போ உண்டாவதற்கு இடம் இராது.

இஸ்லாமோ மனித வாழ்க்கையின் எல்லா அம்சங்களுக்கும் திட்டவட்டமான விதிகளை வகுத்துள்ள சமயம் ஆகும். இந்த விதிகளுக்கு மாறாக எந்தப் புலவனும் பாடமுடியாது. அதே சமயத்தில் முகம்மது நபி (ஸல்) அவர்களிடமும், அவர்கள் வழித் தோன்றல்களிடமும், அவர்களுடைய சகாக்களிடமும், அவ்வப் பொழுது தோன்றி சமய ஒளியையும், ஞானத்தையும், பரப்பவும், நிலை நாட்டவும், செய்த இறைநேசச் செல்வர்களிடமும் அளவற்ற மரியாதையும் பக்தியும் கூட கொண்டவர்கள்.

எனவே அவர்கள் காப்பியம் படைப்பதானால் இத்தகையவர்களைப் பற்றித்தான் காப்பியம் படைக்க வேண்டும். காப்பிய நாயகர்கள் (அ) நாயகிகளிடம்,கொண்டிருக்கும் மதிப்பு,மரியாதை பக்தியின் காரணமாகச் சிருங்கார ரசத்தை அதிகமாகப் பாடுவதற்கு இயலவில்லை.

காப்பியத் தலைவர் (அ) தலைவியரைப் பற்றிப் பாடும் போது எல்லாம், கண்ணியமும், மதிப்பும், மாண்பும் தாமாகவே தொனிக்கக் கூடிய சொற்களை ஆய்ந்து எடுத்துப் பயில வேண்டும்

நிகழ்ச்சிகளும், பொழுது போக்குக்கு ஆகவோ, கேளிக்கைக்கு ஆகவோ அமைக்கப் பெறாமல் அறத்தின்படி வாழும் வழியையும், சமய நெறி நின்று தவறாமல் இருக்கும் முறைமையையும், இகத் திலும், பரத்திலும் இன்பம் நிலைக்கும் வகையிலும், இவ்வுலக வாழ்க்கை நிரந்தரம் ஆனது அன்று, மரணத்திற்குப் பிந்தைய மறு உலக வாழ்வே முக்கியமானது, அதில் அழியாத பேரின்பம் பெறுவதற்குத் தேவையானவற்றையே இவ்வுலக வாழ்வில் செய்து கொள்ள வேண்டும் என்பன போன்றவற்றை எல்லாம் வலி யுறுத்துவன ஆக அமையவேண்டும்.

நபிமார்களும், இறைநேசச் செல்வர்களும் காப்பிய நாயகர் களாக அமைவதன் காரணமாக அவர்கள் வாழ்ந்த அற வாழ்வும் அவர்கள் போதித்த இறை ஞானமும் பெரிதும் பாடப்பெறும்.

நபிமார்களில் சிலர் பேரரசர்கள் ஆகவும் இருந்ததன் காரணமாக அவர்கள் காப்பிய நாயகர்கள் ஆக அமையும் பொழுது அவர்கள் அரசின் பரப்பையும், ஆட்சிச் சிறப்பையும் அவர்கள் மக்களை நடத்திய முறைமையையும் எடுத்துப் பாடு வார்கள்.

இஸ்லாம் துறவு வாழ்க்கையை ஆதரிக்காததன் காரணம் ஆக யார் காப்பிய நாயகராக இருந்தாலும், திருமண நிகழ்ச்சி பெரும் பாலும் இடம் பெறவே செய்யும்.

திருமணமே கொள்ளாமல் துறவு வாழ்வில் ஈடுபட்டுவிட்ட வர்கள் வெகு சில இறைநேசச் செல்வர்களே.

எனவே திருமண நிகழ்ச்சிகளைப் பாடப் புகும்பொழுது இயற்கை ஆகவே அவர்கள் படித்திருந்த பிற தமிழ்க் காப்பியங்கள் முன் மாதிரியாக அமைகின்றன.

அவை முன்மாதிரியாக அமைவதோடு அல்லாமல், தண்டி அலங்காரம் வகுத்துள்ள இலக்கணம் அதுபற்றிப் பாடவேண்டும் என்றும் சொல்கிறது. அப்படிப் பாடும் பொழுதும் கூட விரசம் சற்றும் இல்லாமல் தங்களுடைய காப்பியத் தலைவருக்கோ, தலைவிக்கோ அவர்கள் புனிதர்கள் என்ற முறையில் எவ்விதப் பங்கமும், கண்ணியக் குறைவும் ஏற்படாமல் மிகஜாக்கிரதை யாகப் பாடி இருக்கிறார்கள்.

அதே சமயத்தில் சிருங்கார ரசம் என்பது ஒரு காப்பியத்தின் இன்றியமையாத பகுதி என்ற எண்ணமும் இந்நாட்டில் நிலைத்து விட்டது.

தங்கள் காப்பியத்தினூடே இந்த ரசத்தைப் பாடாவிட்டால் இதைப் பற்றி இவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று, படிப்பவர்கள் எண்ணுவதற்கு இடம் ஏற்பட்டு விடுவதோடு, படிப்பவர்கள் காப்பியம் என்ற முறையிலே அந்தப் படைப்பினைப் படித்து இன்பம் நுகர்வதற்கும் இடம் இல்லாமல் போய்விடும் என்பதனையும் இவர்கள் அறியாதவர் அல்லர்.

ஆகையால் முஸ்லிம் தமிழ்க் காப்பியங்களில் சிருங்கார ரசமும் இடம் பெற்றிருக்கிறது.

ஆனால் மதிப்புக்கும், மரியாதைக்கும் கண்ணியத்திற்கும் போற்றுதலுக்கும் உரிய, தங்கள் காப்பியத் தலைவருடனோ (அல்லது) தலைவியருடனோ இந்தச் சிருங்கார ரசத்தை இணைக்காமல் காப்பியத்தில் வரக்கூடிய வேறு சில சிறு பாத்திரங்களோடு இணைத்து விடுவார்கள்.

இங்கும் கூட ஓரிரு மேற்கோள்களைக் காணலாம். சிருங்கார ரசம் இரண்டு விதமாகப் பாடப் படலாம்.

ஒன்று: ஒரு தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே உண்டான காதல் உணர்ச்சிகளைப் பாடுவது.

இரண்டு: ஒரு பெண்ணின் அங்க அவயவங்களை வருணிப்பது.

இராஜநாயகத்தை எடுத்துக் கொண்டாலும் கூட, காதல் உணர்வினைச் சுலைமான் நபி அவர்கட்கும், பல்கீசுக்கும் இடையில் உண்டானதாகப் புலவர் பரவலாகப் பாடவில்லை.

அதற்கு மாறாக இருவர் மோகப் படலத்தில் விரிவாகப்பாடி இருக்கிறார்.

இது போலவே இஸ்லாமிய இலக்கியம் அல்லாத பிற தமிழ் இலக்கியங்களிலும், காப்பியங்களிலும், கடவுளரையும்,பெண்டிரையும் அங்கம் அங்கமாக வருணிப்பது உண்டு.

கடவுளரை வருணிக்கும் பொழுது பாதாதிகேசமாகவும், மகளிரை வருணிக்கும் பொழுது கேசாதிபாதம் ஆகவும் வருணிப்பார்கள்.

முஸ்லிம்கள் சம்பந்தப்பட்டவரையில், இறைவன் உருவம் அற்றவன். ஆகையால் அவன் அங்கங்களை வருணிப்பதற்கு இடமே இல்லை.

மாறாக அவனுடைய கல்யாண குணங்களைத்தான் வருணிக்க இடம் உண்டு. பெண்டிரைத் தமிழ் இலக்கிய மரபுப்படி கேசாதி பாதம் ஆக வருணித்திருக்கிறார்கள். ஆனால் முற்கூறிய படி காப்பிய நாயகியைப்பற்றி அன்று.

இராஜநாயகக் காப்பியத்தில் 40ஆம் படலமான சகுறுஜின் கூட்டம் ஈமான் கொண்ட படலம் தன்னில் சகுறுஜின் மகளாகிய 'ஜமால்' கேசாதிபாதம் ஆக வருணிக்கப்படுகிறாளே தவிர, சுலைமான் நபி அவர்கள் மணம் செய்து கொண்ட பல்கீசு அன்று.

சீறாப் புராணத்தில் உமறுப் புலவர்கூட இந்த வருணனையை "தசைக் கட்டியைப் பெண் உரு அமைத்த படலத்"தில் பாடு கிறாரே தவிர, முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய மனைவியாகிய கதீஜா நாயகியைப் பற்றியோ, அவர்களுடைய திருக்குமாரத்தி ஆகிய பாத்திமா நாயகியைப் பற்றியோ அல்ல.

உமறுப் புலவரின் இச்செயல் பாராட்டுக்கு உரியதாவதற்குக் காரணம் முகம்மது நபி (ஸல்) அவர்கள் கதீஜா நாயகி அவர்களை மணம் புரிந்து கொண்டதை விரிவாகப்பாடுகிறார்; அது போலவே அலி (ரவி), பாத்திமா நாயகியைத் திருமணம் செய்து கொண்டதையும் மிக விரிவாகப்பாடுகிறார்: எனினும் அவர்களைப் பற்றிய இவ்வருணனையில் இறங்கவில்லை.

சமயக் கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் 'ஏகத்துவம்' என்பது இஸ்லாத்தின் ஆணிவேர். இதற்கு மாறாகத் தொனிக்கக் கூடிய சொல்லை மறந்தும் கூட அவர்கள் எடுத்து ஆளமாட்டார் கள். என்றாலும் தமிழ் இலக்கியத்தில் உள்ள சிற்சில சொற்களும் தொடர்களும் இஸ்லாம் அல்லாத மற்ற சமயங்களோடும் அவற்றின் கருத்துகளோடும், கதைகளோடும், பிரிக்க முடியாத படி இணைந்துவிட்டிருப்பதன் காரணம் ஆக, அவற்றை அங்கும் இங்குமாகத் தமிழ் முஸ்லிம் கவிஞர்களும் ஆண்டிருக்கிறார்கள்.

அப்படி ஆண்ட இடங்கள் பொதுவாக மூன்று ஆகும்.

ஒன்று : கூற வந்த அடிப்படை நெறிக்குச் சம்பந்தப்படாமல் வெற்று வருணனை பாடும் இடமாக இருக்கும்.

இரண்டு : முஸ்லிம்கள் அல்லாதார் உடைய சொல்லையோ, செயலையோ கவிஞன் எடுத்துக் காட்டும் பொழுது அவர் களுடைய நம்பிக்கைக்கும், சமயத்திற்கும் ஒத்த வகையில் சொற் களையும் சொற்றொடர்களையும் ஆளுதல்.

மூன்று: அந்த சொற்கும் தொடர்க்கும் இஸ்லாமிய கருத்தைப் பொருளாக அமைத்து விடுதல்.

இது போது தரப்பெறும் மேற்கோள் இதனை விளக்கப் போதுமானது.

பஞ்சாட்சரம் — ஐந்தெழுத்து மந்திரம் (நமசிவாய). இச் சொல் சைவர்களுடைய சமய நூல்களில் சர்வ சாதாரணம் ஆகக் காணப்பெறுவது. ஞானப் பாடல்கள் எழுதிய முஸ்லிம்களில் பலர் இந்த 'ஐந்தெழுத்து'ச் சொல்லைப் பரவலாகப் பயின்றிருக்கிறார்கள்.

மேல் எழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது, பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று கூறப்பெறும் முத்தேவர்களில் ஒருவர் ஆகிய சிவனைப் பற்றிய இச்சொல்லை ஏக இறைவனையே நம்பி வழிபடுகிற ஒரு முஸ்லிம் எப்படி ஆண்டார் என்று கேட்கத் தோன்றும்.

ஒரு முஸ்லிம் புலவரோ, ஞானியோ இப்படி ஆளும் பொழுது அவர் ஆள்கின்ற பஞ்சாட்சரம் (ஐந்தெழுத்து) குறிப்பதே வேறு.

முஸ்லிம்கள் நம்பி வழிபடுகிற ஏக இறைவனுக்கு 'அல்லாஹ்" என்பது அறபியில் இடுகுறிப் பெயர். சொல் அளவில் நான்கு எழுத்துகளைக் கொண்டதாகத் தோன்றினும் 'லா' என்ற உயிர் மெய் எழுத்து ல், ஆ என ஆகிட (அ, ல், ல், ஆ, ஹ்—5 எழுத்து) அல்லாஹ் என்பது பஞ்சாட்சரம் (ஐந்து எழுத்து) ஆகிறது.

இது போலவே,

அஷ்டாட்சரம் (எட்டு எழுத்து), என்று தமிழ் இலக்கியங்களில் இடம் பெறுமானால் அது திருமாலையே குறிக்கும்.

ஆனால் அதே அஷ்டாட்சரம் (அ) எட்டெழுத்து என்ற சொல்லை முஸ்லிம் புலவர்களும், ஞானிகளும் ஆளும்பொழுது இஸ்லாமியக் கருத்தினைக் குறிக்கவே ஆளுகிறார்கள்.

அல்லாஹ் என்ற இடுகுறிப் பெயரைத் தவிர இஸ்லாத்தின்படி அந்த ஏக இறைவனின் கல்யாண குணங்களின் அடிப்படையில் வேறு பல பெயர்களும் உண்டு. அவற்றுள் 'அல்லாஹ்' என்பதற்கு அடுத்து வருவது 'அர்—ரஹ்மான்' என்பது. (இது பற்றிய விவரங்கள் பின்னர்க் காண்போம்.

இந்த 'அர்—ரஹ்மான்' என்ற சொல்லுக்கு "அளவற்ற அருளாளன்" என்பது பொருள்.

அல்லாஹ்—இடுகுறிப் பெயர் ஆக இருக்க, அர்—ரஹ்மான் என்னும் இச்சொல்லோ இறைவனுடைய பண்பு ஆகிய 'அருள்' எனப்படும் 'ரஹ்மத்' என்ற சொல்லின் அடிப்படையில் எழுந்தது. எழுத்து எண்ணிக்கையில் ஆறு ஆயினும், ர, மா என்னும் இரு உயிர் மெய் எழுத்துகள் ர், அ, ம், ஆ என்று ஆவதன் காரணம் ஆக (அ, ர், ர, அ, ஹ், ம், ஆ, ன்) எட்டு எழுத்துகள் ஆவது காண்கிறோம்.

(அறபியில் அல் ரஹ்மான் என்பதுதான் அர் ரஹ்மான் என்று வரும். அல் என்ற அறபிச் சொல்லுக்கு THE என்று பொருள். இங்கே நாம் அறபிச் சொற்களின்படி எண்ணைப் பார்க்கவில்லை. அவ்வறபுச் சொல் தமிழில் எழுதப் பெறும் பொழுது எத்தனை எண்ணாக ஆகிறது என்பதனைத் தான் பார்க்கிறோம்.)

* * *

இன்னொன்றையும் பார்க்கலாம். 'நான்மறை' என்ற சொல் தமிழில் இடம் பெறும் பொழுது 'ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களையே குறிப்பதாகப் பொருள்படும்.

ஆனால் முஸ்லிம்கள் இந்த நான்மறை என்ற சொல்லை எடுத்து ஆளும் பொழுது மூசா நபிக்கு அருளப்பட்ட தௌராத், தாவூது நபிக்கு அருளப்பட்ட ஜபூர், ஈஸா நபிக்கு அருளப்பட்ட இன்ஜீல், முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட திருக்குர்ஆன் ஆகிய நான்கையே குறிக்கும்.

* * *

இந்துப் புராணக் கதைகளில் இருந்து வருணனைக்காக, வண்ணக் களஞ்சியப் புலவர் எடுத்து ஆண்டிருக்கிற சிலவற்றை மேற்கோள்களாகக் காணலாம்.

அஷ்டதிக் கஜங்கள்—இவை பூமியின் எட்டுத் திசைகளிலும் இருந்து பூமியைத் தாங்கிக் கொண்டு இருக்கின்றன என்பது இந்துப் புராணக் கருத்து.

இதனை வண்ணக் களஞ்சியப் புலவர் எடுத்து ஆண்டு உள்ளார். நாட்டுப் படலத்தில் இடி இடித்து, மழை பெய்தது என்பதனைப் பாடவந்த புலவர்,

"அட்ட திக்கயம் ஒருப்படக் கதறல்போல் அதிர்ந்து" (2:2)

என்று பாடுவார்.

* * *

மன்மதன் கதையும் இந்துப் புராணக் கதையே. மன்மதனுடைய தேர், தென்றல் எனவும், யானை, இருள் எனவும் கூறுவர்.

இவ்விரண்டனையுமே வண்ணக் களஞ்சியப் புலவர் எடுத்து ஆண்டிருக்கிறார்.

"வேள் இரதம் கொண்டு வந்து" (2:38)

என்றும்

"கரிய கங்குலின் வாரண அதிபதி மதன கலைகள்" (40:44)

என்றும்,

(வாரணம்—யானை; மதனன்—மன்மதன்)

"அமர் மலர்த்தொடை மோகப் போர் அரசு" (25:42)

(மலர்த்தொடை—ஐங்கணை)

என்றும் பாடுவார்.

* * *

காளி என்பது முழுக்க முழுக்க இந்துக்களுடைய பெண்பாற் கடவுளே. சிவனுடைய தேவி ஆகவும், திருமாலின் தங்கை ஆகவும் கருதப்படும் இவளைப் பற்றிப் பாலை நில வருணனைப் பகுதிகளிலும், போர்க்கள நிகழ்ச்சிகளிலும் புலவர் குறிப்பிட்டுப்பாடுவார்.

சுடு காட்டில், ஈம ஒள் எரி, இடையில் சிவபெருமானுடன் இவள் நடனம் ஆடுவாள் என்றும்கூறுவார்கள். (திருவாலங்காடு—ஊர்த்துவத் தாண்டவம்)

இக்கருத்தையே வண்ணக் களஞ்சியப் புலவரும்

"கரிய மேனியும் படைத்து உளது
அனுதினம் காளிக்குஉரிய ஏவல் செய்து உறைவது"

என்றும் (15:31)

"முதிர் தீயின் நின்று விளையாடும் அன்பு முயல்காளி" (31:16)

என்றும்,

"மூவிலை அயில் கரக் காளி" (35:49) என்றும், பாடுவார். இவளைச் 'சூடியாள்' என்றும் குறிப்பார். (15:18)

முதல் பிரயோகம் பாலை நில வருணனையில் வருகிறது. அடுத்த பிரயோகம் போர்க்கள வருணனையில் வருகிறது.

* * *

சந்திர கிரணம் ஏற்படும் பொழுது இராகு என்னும் பாம்பு சந்திரனைப் பற்றுவதாகக் கூறுவது இந்துப் புராணக் கருத்து.

"திங்களைப் பாம்பு கொண்டற்று" என்று திருக்குறள் கூறும்.

அதனையே வண்ணக் களஞ்சியப் புலவரும்,

"சந்திரன் கருங்கோள் என்னும் கள்ளனை" (9;135)
என்று குறிப்பார்.

சந்திரனைப் பற்றுகின்ற கருங்கோள் (இராகு) போன்ற கள்வன், என்று உவமை வழி அமைப்பார்.

"கிராணம் தொட்டு மாறிய வெய்யோன்" (26:10) என்ற தொடரைப் பிறிதொரு இடத்தில் அமைத்துள்ளார். இங்கு சூர்ய கிரகணம் குறிக்கப் பெறுகிறது.

* * *

ஐந்தரு—பஞ்சதரு. ஏற்பார்க்கு எவையும் ஈயவல்ல இந்திர லோகத்து மரங்கள் இவை என்பர் இந்துக்கள்.

அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிஜாதம், மந்தாரம் என்பன அவை.

சுலைமான் நபி அவர்கள் பிறந்த பின்னர், மகிழ்ச்சியினால் தாவூது நபி அவர்கள் வரையா ஈகை மேற்கொண்டார் என்று கூற வந்த புலவர், தாவூது நபி அவர்களை,

"ஐந்தருவை நிகர் கரத்தார்" (5:68) என்று புகழ்வார்.
கைக்கு ஐந்துவிரல்கள் ஆதலால் இவ்வுவமம் மேலும் சிறக்கும்.

... கைத்தலத்தில்
ஐந்தருவும் ஐந்து விரலாகித் தருவ எனச்
செந்தமிழுக்கு நல்குமலர்ச் செங்கையான்

(கூளப்ப நாயக்கன் விறலிவிடு தூது 55)

* * *

தேவர்கள் கண் இமைக்கமாட்டார்கள்; கால் நிலம் தோயார் என்பது இந்துப் புராணக் கருத்துகள்.

"நுதலது இமையா நாட்டம்" (அகம்)

"கால் நிலம் தோயாக் கடவுள்" (நாலடியார்)
என்றும் பாடுவர்.

வண்ணக் களஞ்சியப் புலவரும், முஸ்லிம் புலவர்கள் பலரும், உமறுப் புலவரும் கூட இக்கருத்தை எடுத்து ஆண்டுள்ளனர்.

"இமையா நாட்ட விண்ணவர்" (18:2)
"இமையா நாட்ட அரம்பையர்" (34:28)
என இராஜநாயகம் இயம்பும்.

* * *

தாணு என்ற சொல்லுக்கு நிலைபேறு என்பது பொருள் (சூடாமணி நிகண்டு).

மலை, தூண் என்ற பொருள்களும் உண்டு (பிங்கலந்தை).

அதே பிங்கல நிகண்டின்படி, சிவனையும் அச்சொல் குறிக்கும். சுசீந்திரம் கோயிலுக்கு 'தாணுமால் அயன்' கோயில் என்றே பெயர் (தாணு—சிவன்; மால்—திருமால்; அயன்—பிரம்மா).

"தாணுவே! சீர் ஆரூர் மேவும் சிவனே" (காளமேகம்).

"தருமம் நீடு உருவத் தாணுவே தாணுவே என இருந்தான்"
(திருவாலவாய் உடையார் திருவிளையாடல் 28:43)

"தாணுவாய் உலகினைத் தழுவி நிற்கும் மேரு".
(தாணு—தூண்). (கம்பன் 6159)*

இராமன், "தாணுவின் தோற்றத்தானைத் தழுவினன்"
(கம்பன் 8943)

(தாணு—சிவன்; இலக்குவன் சிவன் போல் செம்மேனிச் செம்மல் ஆகலின், நிறத்தின் காரணம் ஆக உவமை காட்டப் பெறுகிறான்).

வண்ணக் களஞ்சியப் புலவரும் 'தாணு' என்ற இச்சொல்லை கலைமான் நபி அவர்களைக் குறிக்க ஆளுகிறார்.

"கோணல் எட்டு உள வயிரத்துள் சரடு கோத்திடவும்
பூண மற்ற ஒரு வயிரத்தின் உள் புரை இடவும்
வேணது என்றனர். துளையிடு ஜின்களை விளித்து
தாணு ஓதினர். மணி ஒன்றினில் இட்டன தமரே" (32:64)

மாபெரும் வல்லமையும், பல்வேறான ஆற்றல்களும் உடைய பேரரசர் என்று குறிப்பிடவே இச்சொல்லை ஆளுகிறார் எனலாம்.

* * *

வீறுசால் சொற்களில் திரு என்பதும் ஒன்று. பொலிவு மிக்கதனைத் திரு என்பதும் மரபு.

இச்சொல் கண்டாரால் விரும்பப்படும் தன்மையது என்று திருக்கோவையார் உரை நூல் இளக்கும்.

---

* சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு; எண்-தொடர் எண்.

விடுதல் அறியா விருப்பினர் ஆகி வண்ணக் களஞ்சியப் புலவர் இந்நூலிடைப் பல சொற்களைத் 'திரு' புணர்த்துக் கூறியுள்ளார். சில காண்போம்.

இறை அருள் சான்ற காரணத்தாலேயே சுலைமான் (அலை) அவர்கள் திருநபி எனப்பெறுகிறார்.

"திரு நபி கமலம் போன்ற செய்யவாய் மலர" (34:44)
என்பார்.

நெறி நிறுத்துவான் வேண்டி அந்நெடிய வல்லோன், நிமிர் புகழ் சுலைமான் அவர்கட்கு அறிவுறுத்த விண் வழி ஒலி எழுப்பினான். அவ்வொலி "திரு மொழிச் சத்தம்" எனப்படுகிறது. (அசரீரி என்பதும் அது).

..."உளத்தை நேர்வழி உறச் செய்து
குலவிய பெருமை மதிப்பு அகங்காரம்.
குணத்தையும் குணக்கு உள மாசு
சிலதையும் அகற்றினேன்" என ஒருவன்
திருமொழிச் சத்தம் வந்ததுவே." (14:8)

இந்துக்கள் தம் கடவுளரின் உற்சவ மூர்த்தியை அலங்கரித்து, வீதிவாய்ப் பலர் காண எடுத்துச் செல்வர். இதனை இறைவன் உலாப் போதருகின்றான் என்பர்.

இவ்வாறு அமைந்த ஒரு நிகழ்ச்சி குறித்து, முதன் முதலில் உலா நூல் அமைத்தவர் சேரமான் பெருமாள் நாயனார்.

இந்நூல் ஒன்றே திரு அடைபுணர்த்தப் பெற்று திருக்கைலாய ஞான உலா என வழங்கப் பெறுகிறது.

இம்மரபு ஒட்டி பின்னர் அரசர், புரவலர் உலாப் போதரலை "உலா" பிரபந்த அமைப்பில் பலர் பாடினர் எனினும், அவை எவையும் 'திரு' அடை சேர்க்கப் பெற்றில.

இந்நூலில் சுலைமான் (அலை) அவர்கள் தம் திருமணத்தின் முன் கொண்ட உலா திரு உலா எனக் குறிப்பிடப் பெறல் காணலாம்:

"...ராஜ நாயக நபியுல்லா தம்
திவள் ஒளி மனையில் சேர்ந்தார்.
திரு உலா வருதற்கு ஏற்றது
அவளவும் தலைவர் செய்தே..." (34:58)

திருவிளையாடல் என்ற சொல்லுக்குத் தமிழ் இலக்கியங்களி லும் அவற்றின் மரபுகளிலும் ஒரு தனிப் பொருள் உண்டு.

சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு ஆன 'தமிழ் லெக்சிகன்' V— திருவிளையாடல் என்ற சொல்லுக்கு Sacred sports of a deity; தெய்வ லீலை என்று பொருள் கொடுத்து, See "திருவிளை யாடற் புராணம்" என்று கூறும்.

திருவிளையாடற் புராணம் என்பதனை 'மதுரைச் சிவபிரா னது 64 திருவிளையாடல்களைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் பாடிய புராணம், (பக்கம், 1920) என்றும் எடுத்துக் காட்டும்.

எனினும் இச்சொல்லை வண்ணக் களஞ்சியப் புலவர் தம் காப்பியத்தில் எடுத்து ஆண்டிருக்கிறார்.

"உம் ஒருவர்க்கு ஆயிரம் மனைவியரா? அவர்களுள் ஒருவரை எனக்குத் தரக் கூடாதா?" என்று பக்கீர் ஒருவர், சுலைமான் நபி அவர்களைக் கேட்டார், என்பதனையும் தம் மனைவியருள் யார் ஒருத்தி தனித்து இருக்கின்றாளோ, அவளை அந்த பக்கீர் கவர்ந்து கொண்டு ஏகலாம் என்று சுலைமான் நபி பதில் இறுத்தார் என் பதனையும், அந்த பக்கீர் சுலைமான் நபியின் மனைவியர் இருப் பிடங்களுக்கு விரைந்து சென்று ஒவ்வொரு மனையிலும் காணி னும், அவ்விடத்தில் அவள் பக்கலில் சுலைமான் நபி இருந்தார் என்பதனையும், பின்னர் மன்றத்திற்கு விரைந்து வந்தபோது அங்கும் சுலைமான் நபி இருக்கக் கண்டார் என்பதனையும், நாம் முன்னர்க் கண்டோம்.

இதனை எடுத்துக் கூற வந்த வண்ணக் களஞ்சியப் புலவர்,

"இங்கு முன் இருந்தது என மணி பீட
தவிசினில் இருந்தனர். இவை கண்டு
எங்கணும் நிறைந்த திருவிளையாடல்
இயற்ற அரும் பொருள் என எண்ணா
பங்க வெள் அறிவால் கொடிய சொல் இவர் முன்
பகர்ந்த அரும் பிழை படைத்தனம் என்று
அங்கமும், மனமும் நடுக்கு உற வெருவி
அனல் இடு மெழுகு போன்று உருகி (17:87)

என்று பாடுவார்.

* * *

அடிகள் என்ற சொல்லும் தமிழ் இலக்கியங்களில் இறை நேசச் செல்வர்களையே குறிக்கப் பயிலப் பெறும். பக்தி இலக்கியங் களில் பயிலப் பெறும் சொல் இது.

இச் சொல்லையே சுலைமான் நபி அவர்களைக் குறிக்க வண்ணக் களஞ்சியப் புலவர் ஆளுகிறார்.

...சகுறினை அழைத்து

நனிதவம் புரிந்திட்டு ஈன்ற நின் புதல்வி

நமக்குமே புதல்வி என்று இசைத்தார். (40:68)

''அடிகள் இவ்வசனம் இசைத்தலும்'' (40:69)
என்று பாடுகிறார்.

* * *

இந்து சமய மரபின்படி கங்கா நதிக்கு ஒரு தனிச் சரித்திரமே உண்டு. பகீரதனுடைய தவத்தின் காரணம் ஆக, அது ஆகாயத்தில் இருந்து இப்பூவுலகிற்கு வந்தது என்றும், அதனுடைய வேகத்தை இப்பூமி தாங்கிக் கொள்ள மாட்டாது என்ற காரணத்தினால் சிவபெருமான் தன் சடையில் அதனைத் தாங்கிக் கொண்டான் என்றும், குறிப்பது அக்கதை.

எனவே தான் கங்கா நதிக்கு ஆகாய கங்கை என்ற பெயரோடு பூகங்கா என்ற பெயரும் உண்டு.

இந்த வழக்கையே வண்ணக் களஞ்சியப் புலவரும் 'வான் கங்கை' (3:4) 'வானதி' (5:24) என்றும் எடுத்து ஆளுவார்.

* * *

இந்து மரபின் படி கடல்கள் ஏழு எனப்படும். அவையாவன: உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பன.

இவற்றுள் பாற்கடலைக் கடைந்த பொழுது அடியிற் கண்டவை அதிலிருந்து தோன்றின என்றும் அந்த மரபு கூறும்.

தன்வந்திரி, அமுதம், அறுபது கோடி அரம்பையர், இவர் தம் தோழியர், உச்சைச் சிரவம் என்னும் குதிரை, கௌஸ்துப மணி, பஞ்சதருக்கள், காமதேனு, சந்திரன், ஐராவதம் (வெள்ளை யானை) மூதேவி, திருமகள், வாருணி என்பன. (அபிதான சிந்தா மணி பக்கம் 1104-5).

கம்பனுடைய காப்பியத்தில் 'பாற்கடல் கடைந்த நிகழ்ச்சி', பால காண்டத்தில் அகலிகைப் படலத்தில் இடம் பெற்றிருக்கிறது என்பர்.

இந்த நிகழ்ச்சியை 'மிகைப் பாடல்கள்' என சென்னைக் கம்பன் கழகத்து 'கம்ப ராமாயணப் பதிப்பு' கொடுக்கும். அப்படிக் கொடுக்கப் பெற்றிருக்கும் மிகைப் பாடல்களுள் ஒன்று பாற் கடலில் இருந்து தோன்றிய பொருள்களுள் எவை எவை, எவர் எவர் கொண்டார் என்று குறிப்பிடும். அப்பாடல்

"வெருவும் ஆலமும் பிறையும் வெள் விடையவற்கு அளித்து,
தருவும் வேறு உள தகைமையும் சதமகற்கு அருளி,
மருவு தொல் பெரு வளங்களும் வேறு உற வழங்கி,
திருவும் ஆரமும் அணிந்தனன், சீதரமூர்த்தி"
(பக்கம் 220;பா.122)

என்பது ஆகும்.

இவை எல்லாவற்றையும் மனத்திற் கொண்டே, பல்கீசு திரு மணப் படலத்தில் அமைக்கப் பெற்ற பந்தலின் சிறப்பைப் பற்றிப் பாட வந்த வண்ணக் களஞ்சியப் புலவர்

"அமுதமும் உதவி, சோதி அணி மணி உதவி, நீண்ட
கமழ் தரு உதவி, கூர்வேல் கண்ணினர் உதவி, வீரர்
தமையும் அங்கு உதவி, ஓசை தன்னையும் உதவலாலே
நிமிர் வளம் நெடிய பந்தர் நிறைந்த பாற்கடலே போலும்"
(34:22)

என்று பாடுவார்.

பாற்கடல்—அமுதம், (தேவாமுதம்), கௌஸ்துப மணி, பஞ்ச தருக்கள், அரம்பையர், ஓசை.

பந்தல்—இன்சுவை, நவமணிகள், மரங்கள் (வாழை, கமுகு போல்வன), அழகிய மகளிர், ஓசை.

'நிமிர் வள நெடிய பந்தர்' பாற்கடற்கு உவமிக்கப் பெற்றதனைக் கண்டோம்.

திருப்பாற்கடல் என்ற சொல் ஆட்சி அமைந்த பிறிதொரு பாடல் காண்போம்.

"பெருகிய திருப்பாற்கடல் நிறம் அதனைப் பிரித்து எடுத்து
உருப்படுத்தல் போல் அரிய வெண்ணிற மெல் இழைத்துகில்"
(34.60)

உடுத்தார் சுலைமான் (அலி), என்று அறிகிறோம்.

"நுரை முகந்தன்ன மென் பூஞ்சேக்கை", "ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்" போன்ற சங்கத் தொடர்கள் ஒப்பு நோக்கத் தக்கன.

* * *

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன் (சிவன்) செயற்கு அருஞ்செயல்கள் ஆகப் புலவர்கள் குறிப்பன பல.

அவற்றுள் கறை(நஞ்சு)மிடறு அணியலும், கரி உரி போர்வை அணியலும் பெருஞ்சிறப்பின என்பர்.

சிவனது பல மூர்த்தங்களுள்* கஜசம்ஹார மூர்த்தியும் ஒன்று.

ஆனை உரு மேய அரக்கனைக் கொன்று, அவனது அடர்த்தெழு குருதி அசும்பு அறாப் பசுந்தோலைப் போர்த்துப் பொலிந்தான் அப் பொன்னார் மேனியன் என்பர்.

யானையின் பசுந்தோல் பிறர் உடம்பில் பட்டால், கொண்டாரைக் கொல்லும் என்று சீவக சிந்தாமணி விளங்கக் கூறும் (பாடல் 2787ன் உரை விளக்கம்)

இத்தகைய கொல் இயல் கூர்ங்கோட்டு மதமாப் பசுந்தோல் போர்த்து அமைவது எவர்க்கும் இயலாத ஒன்று. செயற்கருஞ் செயல் எனவும் கூறுவர்.

அயோமுகி இலக்குவனைத் தன் தட மார்பொடு கையின் அடக்கி எடுத்து ஏகினள். அவளது பரிய, பெரிய, கரிய உடற்குள் கிடந்த இலக்குவன்,

"வீங்கிய வெஞ்சின வீழ் மத வெம்போர்
ஓங்கல் உரிக்குள் உருத்திரன் ஒத்தான்" (கம்பன் 3601)

என்பர்.

இந்நூலிலும் ஜின்களின் செயற்கு அருந்திறலைச் செப்பும் இடத்து அவை

"திட கய குருதியை மண சந்தன சேறா(க)
உடலம் எங்கணும் பூசி யானையை உரித்து உடுத்து" (15:26)

திரிந்தன என்பார்.

* * *

* ச. தண்டபாணி தேசிகர் நூல்—"ஆடல்வல்லான்"

இந்து மரபின் படி பொருள்சேர் புகழாளனையும் (இறைவன்) "அவனோடு ஒருங்கு வைத்து எண்ணத் தக்க" உயர் பெருமக்களையும் கண்ணால் காண்பது தர்சனம் எனப்பெறும். தரிசனம் என்றசொல் கண் என்ற பொருளும் தரும். அச்சொல்லையே இந்நூலில்

"முகம்மது நபியைத் தெரிசிக்கும் கண்களே கண்கள்" (20:21)

என்று குறிப்பிட்டு அமைவார்.

* * *

உயிர்களின் வாழ்நாள் உலப்புறும் வேளையில் காலன் வந்து உயிர் கடிதில் கவர்வன் என்பது இந்திய புராண மரபு.

முஸ்லிம்கள் கருத்துப்படி இப்பணி தலைமேற் கொண்டார் இசுறாயீல் என்னும் மலக்கு ஆவார். (16:5)

காலன், நமன், சமன், யமன், கூற்று, அந்தகன், மறலி, நடுவன் என்பன ஒரு பொருள.

இந்நூலில் இந்து புராணச் சொற்களையும், மலக்கல் மவ்த்து என்பதனையும் வழங்கி உள்ளமை காணலாம்.

"உயிரை வாங்கும் மலக்குக்கும் எமக்கும் உண்டோ வன்பகை" (45:40)

"காலனார் கடிது அங்கு உற்றார்" (45:6)

"எம்மைப் பிரித்து உமது உயிரை வேறாய்ப் பிடித்தது எவ்வாறு கூற்றே" (45:39)

"நமன் வரும் அளவும் இங்கு நண்ணி" (45:41)

என்பன காணலாம்.

* * *

கோயில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டா என்பது பழமொழி. "ஊரானோர் தேவ குலம்" என்பது இலக்கியத் தொடர்.

இத்தகைய தேவகுலத்தை (கோயில்) வலம் வரலும், வழிபடலும், வணங்கலும், இந்துக்கள் மரபே.

இவ்வாறு வலம் வருவதனையே பிரதட்சணம் என்பர்.

பிரதட்சணம் வந்தபின் சென்னி மண் உற வணங்கல் (சாஷ்டாங்க நமஸ்காரம்) முறை.

போற்றுறு மரபின் பெரும் புகழாளரையும் இவ்வாறு வலம் வந்து வணங்கல் முறை.

"இலங்கு ஒளி சிலாதலம் தொழுது வலங் கொண்டு"
(சிலம்பு 10:25)

"அம்மலை வலம் கொண்டு அகன்பதிச் செல்லுமின்"
(சிலம்பு 11:36)

"கோமுகி வலம் செய்து கொள்கையின் நிற்றலும்
எழுந்து வலம் புரிந்த இளங்கொடி செங்கையில்"
(மேகலை. 11:56)

"நான் முகக் கடவுளொடு தாண் முதல்தானம்
அன்னத் தொழுதியின் மென்மெல வலம் கொண்டு"
(பெருங். 2:3:59)

"திருக் கிளர் மாடம் சேர்ந்து வலம் கொண்டு"
(பெருங். 3:6:91)

"வலம் கொடு தீயை வணங்கினர்"
(கம்பன், 1250)

"எழுத பாவையை வந்தித்து, அழுது,
மும்மை வலம் கொடு இறைஞ்சி, ஏத்தி
ஏகினன்"
(கம்பன், 5428)

"நிலம் செய்து, விசும்பும் செய்து நெடியமால் படை,
நின்றானை
வலம் செய்து போயிற்று"
(கம்பன், 9119)

என்பன இலக்கிய வழக்காறுகள். இம்மரபு ஒட்டியேபோலும் இந்நூலிடை,

"காரணக் கடவுள் அருமறைதப் பிரதட்சணம் வரு
கால்களே கால்கள்"
(20:26)

என்று பாடி உள்ளார்.

* * *

ஆதி சங்கரர் பற்றிய நிகழ்ச்சி ஒன்று உண்டு, அது ஆவது:

"மற்றொரு நாள் கங்கா ஸ்நானத்தை முடித்துக் கொண்டு ஆசாரியர் திரும்பிக்கொண்டிருக்கிறார், சிஷ்யர்கள் புடைசூழ. அப்போது ஒரு புலையன் அவருக்கு வெகு அருகில் வந்து விடுகிறான்.

அவனுடைய தோற்றத்தின் அருவருப்புப் போதாதென்று அவன் சுமந்துள்ள கள்ளுக் குடத்திலிருந்து நாற்றமும், குப்பென அடிக்கிறது. அவன் தன் கையில் நாலு நாய்களை வேறு பிடித் திருக்கிறான்!

அவனை எட்டிப் போகுமாறு சங்கரர் சொல்கிறார்.

அப்போது ஓர் அதிசயம் நிகழ்கிறது சேற்றிலிருந்து, செந் தாமரை முளைப்பது போல,

அந்தப் புலையன் அவரைச் சில கேள்விகள் கேட்க ஆரம்பிக் கிறான்.

''சுவாமியாரே! எதை எதிலிருந்து விலகிப் போகுமாறு சொல் கிறீர்கள்? அன்னத்தை உண்பதனால் வளரும் ஒரு கூட்டை, அதே போல் அன்னத்தினால் வளர்ந்த இன்னொரு கூட்டினிடமிருந்து விலகச் சொல்கிறீர்களா? அல்லது அவற்றுள் ஒரு கூட்டுக்குள் இருக்கும் ஞான ஒளியை இன்னொரு கூட்டுக்குள் இருக்கும் ஞான ஒளியிலிருந்து எட்டிப் போகச் சொல்கிறீர்களா?''

நிரம்பவும் யோசிக்கவேண்டிய வினாவைக் கேட்டு விட்டான் சண்டாளன்.

உணவால் உருவாகும் இரு உடம்புகளுமே, எலும்பும் நிணமும், குருதியும் உருவாக்கிய பிண்டங்கள் தாம். அவற்றில் ஒன்றினால் மற்றதற்கு எப்படித் தீட்டு ஏற்படும்? இரண்டுமே குப்பை தானே?

ஞான ஒளிகளை விலகிப் போகச் சொல்வதும் அத்வைத சந்நியாசிக்கு அழகில்லை. ஏனெனில், ஞான ஒளிகள் என்று பன்மையில் சொல்வதே தவறு. இருப்பது ஒரே ஞானம் தான். அதில் சேர்க்கை ஏது? விலகல் ஏது?

புலையன் கேட்கிறான் :

''சூரியனுடையபிரதிபிம்பம் பரமபாவனமான கங்கா நதியிலும் விழுகிறது; சேரிக் குட்டையிலும்தான் விழுகிறது. அந்தப் பிம்பங் களிடையே ஏதும் வித்தியாசம் உண்டோ? வெறுமையாகவுள்ள ஒரு பொற்குடத்தின் உள்ளிருக்கும் அதே வெளிதான் வெற்று மட்கலத்திலும் உள்ளது. அதே போல் தேகத்தில் மாறுபாடு இருந் தாலும் உள்ளே உள்ள வஸ்து ஒன்றுதானே? அலை அடங்கிய, இயல்பாகவே ஆனந்தமாக உள்ள, அறிவுக்கடல் தானே இரண்டு உடலுக்குள்ளேயும் உள்ளது? இதில் அந்தணன் என்றும், புலையன் என்றும், பெரிதான பேதமயக்கம் எங்கிருந்து வந்தது ஸ்வாமி?''

அவன் சொன்னதைச் செவி கொடுத்துக் கேட்டார் சங்கரர். ஆத்மாவையே செவி ஆக்கிக்கொண்டு அதன் உட்பொருளை

அப்படியே விழுங்கிக் கொண்டார். அவ்வளவே தான்! அதன்பின் அந்தப் புலையனை அவரது உள்ளம் சமூக ரீதியில் எடை போட வில்லை. சமூக வாழ்வுக்கு மேம்பட்டு, பரம் பொருளில் வாழ்பவர் கள் விஷயத்தில் சமூகத்தின் பாகுபாடுகள் எப்படிப் பொருந்தும்? விவகார உலகக் கட்டுப்பாடுகளை விலக்கி அப்புலையனைத் தம் குருவாக மனத்தால் வரித்தார் சங்கரர். புலையன் பாதத்தில் அப்படியே விழுந்து எழுந்தார். அந்தப் பாவனையே "மநீஷா பஞ்சகம்" என்ற அற்புதமான ஐந்து சுலோகங்களாகக் கரை புரண்டது."

(ஜய ஜய சங்கரா— ரா. கணபதி பக்கம் 75, 76)

இந்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருப்பது போல் வண்ணக்களஞ்சியப் புலவர் ஓர் அருமையான பாடலைப் பாடி உள்ளார்.

எறும்பு அரசைக் கண்ட படலத்தில் எறும்பு அரசனுடைய அறிவுரைகளை எவ்வாறு சுலைமான் நபி அவர்கள் வியந்து வரவேற்றார் என்பதனைக் கண்டோம்.

இது குறித்து வண்ணக் களஞ்சியப் புலவர் தம் கூற்றாக 4 பாடல்கள் பாடி உள்ளார் (21:19, 20, 21, 22) அவற்றுள் ஒன்று:

அங்கணக் கொடிய கும்பி அதனிடை விலை இலாத
ஒண்கதிர் மணியைக் காணில் ஒழிப்பரோ உலகில் யாரும்?
கங்கையில் கிடந்த ஈன சாதியே எனிலும் உள்ளம்
பொங்குநல் அறிவுக்கு ஈனம் புகலுமோ வேதம் நான்கும்?
(21:20)

(அங்கணம்—சாய்க்கடை; கும்பி—சேறு; ஈனசாதி—புலையன்)

இப்பாடலின் ஈற்றிரு அடிகள் மேலே எடுத்துக் காட்டப் பெற்ற ஆதி சங்கரர் வாழ்க்கை நிகழ்ச்சியை நினைவுறுத்துவதாக இருப்பதனைப் படிக்கும் நாம் உணர்கிறோம்.

* * *

இவ்வாறே இந்தியப் புராணமரபுச் சொற்கள் சிலவும் சொல் அளவில் பயிலப் பெற்றுள்ள இடங்கள் சில காணலாம்.

வெள்ளை யானை (5:6); எழுவகைப் பிறப்பு (6:5)
எண்பத்து நான்கு இலக்கம் ஆம் உயிர் (6:5); தேனு (7:28)

வெள்ளியங்கிரி (16:13); கிங்கரர் (27:45)
மீன கந்தி (36:45); புவிமாது (31:14)

* * *

இந்தப் பூமியை ஒரு ரிஷபம் தன்னுடைய கொம்புகளில் தாங்கிக் கொண்டிருக்கிறது என்று கஸஸுல் அன்பியா கூறும்.

இதனையே வண்ணக் களஞ்சியப் புலவர் தம்முடைய காப்பியத்தின் ஊடே,

'புவி சுமை கொளும் ஓர் விடை' (1:12) என்றும்.

'புவி கொளும் விடை மருப்புகள்' (15:13) என்றும்,

'வளம் நிறை புவியைத்தாங்கும் வடிவிடை மருப்பு' (18:9) என்றும்,

'தவறாது கொண்ட விடை ஏறு கொம்பு' (31:14) என்றும் பாடுவார்.

இது போலவே, உலகத்தை ஒரு பெரும்பாம்பு சுற்றிக் கொண்டிருக்கிறது என்றும், அதனைப் பார்க்க சுலைமான் நபி அவர்கள், காற்றை அழைத்துத் தன்னைச் சுமந்து கொண்டு போகச் சொல்லி ஏவினார் என்றும், அப்போது காற்று அவரைச் சுமந்து கொண்டு சென்ற போது ஒரு மலக்கு (வானவர்) அவர் முன் தோன்றி அப் பாம்பின் கொடுந்தன்மையை எடுத்துக் காட்டிய பொழுது சுலைமான் நபி அவர்கள் தம் நகர்க்குத் திரும்பி விட்டார் என்றும் கூறும்.

இச் செய்தியை வண்ணக் களஞ்சியப் புலவர் தம் காப்பியத்தில் 'மலக்கல் மவுத்தைக் கண்ட படலம்' தன்னுள் பாடுவார்.

'புவி வளை பணியினைக் காண' அவர் விரும்பினார் என்றும் அந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள விண்ணில் பறந்து செல்லும் பொழுது ஒரு மலக்கைக் கண்டார் என்றும் பாடுவார். அம்மலக்கு,

''மறையின் நீதிச் செங்கோல் செய் தாவூது அருள் மகவே!
அறையும் வாருதி சூழ் புவி வளைந்த பாம்பு அதை உள்
உறைவது ஆகிய மகிழ்ச்சியாய்க் காண்குற உன்னி
நிறைவது ஆகிய தளத்தொடு புகுவது என்? எனவே''

(43:3)

"நெடுமையில் புவி முழுதும் சுற்றியும் இன (ம்) நீளம்
கொடுமையில் கொடு நரக செந்நெருப்பினும் கொதிப்ப
அடுவிடத்தினை உமிழ் விழி படைத்து ஐஞ்ஞூறு ஆட்டை
கடு நடைப் பயணத் தொலை உளது உடற்கனமே"

(43:4)

"மகி தலத்தை அப்பாம்பின் வாய் நடுவினில் வைக்கில்
இகழ் தனி சிறு கடுகை ஓர் பெரு வெளி இருத்தும்
தகைமை ஒக்கும் ஆங்கு அதன் ஒலி செவியினில் சாரில்
அகம் மகிழ்ச்சியும் தளமும் நீர் தாமும் எங்கு ஆமோ?"

(43:5)

என்று கேட்டார் என்று பாடுவார்.

கஸஸுல் அன்பியாவில் இடம் பெற்றிருக்கும் இவ்விரண்டு செய்திகட்கும் இஸ்லாத்தில் ஆதாரம் இல்லை என்பர்.

* * *

பிற மதத்தினரிடையே வழங்கி வந்த கதைகளையும், கற்பனைகளையும் அப்படியோ, சிறிது மாற்றியோ இவ்வாறு கூறி இருக்கின்றார் என்றும் கூறுவர்.

தண்டி அலங்காரத்தில் இருந்து முற்கண்ட செய்யுளால் ஒரு பெருங்காப்பியம் என்பது சர்க்கம், இலம்பகம், பரிச்சேதம், படலம் என்பவனவற்றுள் ஏதேனும் ஒரு பெயரைக் கொண்ட உட்பிரிவு களால் அமையும் என்று தெரிகிறது.

இதற்கு ஒப்பவே வில்லிபுத்தூரார் பாரதம், சர்க்கங்களாக வும்,சீவக சிந்தாமணி இலம்பகங்களாகவும், பிரிக்கப் பெற்று இருக் கின்றன.

பரிச்சேதம் என்று பெயர் கொண்ட பிரிவு தமிழ்க் காப்பியங் கள் எவற்றிலும் இல்லை.

ஆனால் பெரும்பாலான தமிழ்க் காப்பியங்கள், காண்டங்கள் எனப்பெறும் பெரும் பிரிவுகளையும், படலங்கள் எனப் பெறும் உட்பிரிவுகளையும், கொண்டன.

காண்டங்களாகப் பகுக்கப் பெறாமல் படலங்களாலேயே முற்றும் அமைந்த காப்பியங்களும் உள.

உமறுப் புலவர் இயற்றிய சீறாப்புராணம் மூன்று காண்டங் களையும், 92 படலங்களையும், 5027 திருவிருத்தங்களையும் கொண்டது.

நாகூர் ஆண்டவர் எனப்படும் ஷாஹுல் ஹமீது நாயகம் அவர்களுடைய அற்புதங்களைப் பற்றி சேகுனாப் புலவரால் பாடப் பெற்ற திருக்காரணப் புராணம் என்பது மூன்று காண்டங் களையும், 56 படலங்களையும், 2576 திரு விருத்தங்களையும் கொண்டது. (தலைக் காண்டம், இடைக்காண்டம், கடைக் காண்டம் என்ற பிரிவின.)

வண்ணக் களஞ்சியப் புலவர் பாடிய இராஜநாயகக் காப்பியம் காண்டங்களாகப் பகுக்கப் பெறவில்லை. படலங்களாகத்தான் பிரிக்கப் பெற்றுள்ளது.

இது போலவே இவர் இயற்றிய 'குதுபு நாயகம்', 'தீன்விளக்கம் ஆகியவையும் படலங்களாக மட்டுமே பிரிக்கப் பட்டுள்ளன.

எனினும் எல்லா முஸ்லிம் புலவர்களும் காப்பிய அமைப்பில் ஒரே மரபையே பின் பற்றி இருக்கிறார்கள்.

அதுதான் கடவுள் வாழ்த்து, நாட்டுப் படலம், நகரப் படலம், தலைமுறைப் படலம் (தலைமுறை தோற்றப்படலம் (அ) மரபியல் படலம்), அவதாரப் படலம் என்று தொடங்கி, காப்பியத் தலைவ ருடைய வளர்ச்சி, திருமணம், செயல், பணி, போர் ஆகியவற்றைப் படலங்களாகப் பகுத்துப்பாடுவது.

இராஜநாயகக் காப்பியத்தையும் வண்ணக் களஞ்சியப் புலவர் இதே மரபையே பின்பற்றி இயற்றி இருக்கிறார் என்பது முன்னர் அமைந்துள்ள காப்பியக் கதைச் சுருக்கத்தால் தெளிவு பெறும்.

மேலே காட்டிய இயல்புகளைக் கருத்தில் கொண்டுதான் டாக்டர் M. M. உவைஸ் அவர்கள்,

"இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங் கள் அனைத்தும் கடவுள் வாழ்த்துப் படலத்தைப் பொறுத்தவரை யில் ஒரே ஒழுங்கு முறையைப் பின்பற்றி உள்ளன. நாட்டு நகரப் படலங்களும் அவ்வாறே அமைந்துள்ளன.

இஸ்லாத்துக்கு முரணான செய்திகளை எவ்வளவுக்கு எவ்வளவு தவிர்க்க முடியுமோ அவ்வளவுக்கு அவ்வளவு தமது காப்பியங்களில் தவிர்த்தே சென்றுள்ளனர் முஸ்லிம் புலவர்கள்.

ஒரு சில சந்தர்ப்பங்களில் தமிழ் இலக்கிய மரபைப் பேணுவ தற்காக அத்தகைய முரண்பட்ட செய்திகள் இடம் பெறாமல் போகவும் இல்லை.

இயற்கை வருணனைகள் பெரும்பாலும் தமிழக இயற்கை யினைச் சுட்டிக்காட்டுவது போன்று இருந்தாலும், அறபு நாட்டின் புவி இயல் அமைப்பும், அத்தகைய வருணனைகளில் பேணப்பட் டுள்ளமையைக் காணலாம்" என்பார்கள்.*

---

* (இஸ்லாம் வளர்த்த தமிழ்-ப 275)

# 6. கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்து—காப்பியத்தின் பகுதியே ஆயினும், கதையின் பகுதி ஆகாமையின் (பாயிரம் ஆகலின்) இங்கே அது தனியாக விளக்கம் பெறுகிறது.

இப்படலத்தில் அமைந்துள்ள புதிய அம்சங்களும் இவ்விளக்கத்திற்குக் காரணம் ஆகும்.

''இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களின் கடவுள் வாழ்த்தைப் பொறுத்தவரையில் ஒரு சீரான ஒழுங்கு முறை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. முதற்கண் ஏக இறைவனான அல்லாஹ் கடவுள் வாழ்த்தில் வருணிக்கப்படுகிறான். அவனுடைய பண்புகள் விளக்கப்படுகின்றன. அவன்றன் ஆசியைப் பெறவே கவிஞர் அவ்வாறு பாடுகின்றனர்.

அதனைத் தொடர்ந்து தீர்க்க தரிசிகள் எனப் பொருள் கொள்ளப்படும் நபிமார் வருணிக்கப்படுகின்றனர். நபிமாரைக் குறிப்பிடும் பொழுது முகம்மது நபி (ஸல்) அவர்கள் வாழ்த்தப்படுகிறார்கள். அவர்களைத் தொடர்ந்து முன்னூற்றுப் பதின்மூன்று முறுசலான (தூதரான) நபிமார்களும், ஒரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களும், வருணிக்கப்படுகின்றனர். துணிந்தவர்கள் எனப் பொருள்படும் உலுல் அஸ்மி என்னும் நபிமார் வருணிக்கப்படுகின்றனர்.

நபிமார்களுக்குப் பின்னர், அபுபக்கர் (றலி) அவர்களும், உமறு (றலி) அவர்களும், உதுமான் (றலி) அவர்களும், அலி (றலி) அவர்களும் முறையே வருணிக்கப்படுகின்றனர்,

அப்புறம் வருணிக்கப்படுபவர்கள் நபிகள் பெருமானாரின் திருப்பெயரர்கள் ஆன அசன் (ஹஸன்) (றலி) அவர்களும் உசைன் (ஹுஸைன்) (றலி) அவர்களும் ஆவர்.

[ரலி—(றலி): இது 'ரலி யல்லாஹு அன்ஹு'' என்பதன் சுருக்கம். இதன் பொருள்: ''அல்லாஹ் அவரைப் பொருத்திக் கொண்டான்'' என்பது ஆகும்]

கடவுள் வாழ்த்துகளில் பின்னர் இடம் பெறுபவர்கள் நபிகள் நாயகம் அவர்களின் தோழர்கள் ஆவர். பெருமான் முகம்மது நபி (ஸல்) அவர்களின் வீட்டைச் சேர்ந்தவர்களும் கடவுள் வாழ்த்தில் இடம் பெறுவதுண்டு.

இஸ்லாமியச்சட்ட நுணுக்கங்களை விளக்கும் முகமாக மதுகபுகளை நிறுவிய இமாம்கள் (தலைவர்) நால்வரையும் பற்றிய குறிப்பு இடம் பெறும்.

அடுத்து இறைநேசர்கள் எனப்படும் வலிமார் (அவுலியா) கடவுள் வாழ்த்தில் துதிக்கப்படுகின்றனர். முகியித்தீன் ஆண்டவர், சாஹுல் ஹமீது ஆண்டவர், செய்கு சதக்கத்துல்லா அப்பா ஆகியோர் அடுத்தடுத்துப் போற்றப்படுகின்றனர்.''*

எனினும் ஒவ்வொரு புலவரும் தம்முடைய கடவுள் வாழ்த்துப் படலத்தில் இவ்வரிசையைப் பின்பற்றிய போதிலும் அங்கும் இங்குமாகச் சிறு மாற்றங்களையும் செய்து இருக்கின்றனர்.

இராஜநாயகக் காப்பியத்தில் கடவுள் வாழ்த்துப் படலத்தில் 31 விருத்தங்கள் உள்ளன.

முதல் 4 விருத்தங்கள் இறைவனைப் பற்றியவை. அடுத்து வரும் 2 விருத்தங்கள் முகம்மது நபி (ஸல்) அவர்களைப் பற்றியவை. அடுத்து வரும் 7ஆவது விருத்தம் முறுசலீன்களைத் துதிப்பது.

முறுசலீன்கள் என்பவர்கள் 1,24,000 நபிமார்களில் இறைத் தூதராக, வேதங்கள் அருளப் பெற்றவர்கள் என்று கூறுவர்.

அடுத்து வரும் 8ஆவது விருத்தமோ, இந்த முறுசலீன்கள் தவிர 1,24,000 நபிமார்களில் மற்றவர்களைத் துதிப்பதாகும்.

இவர்களைச் சின்ன நபிமார் என்றே புலவர் குறிப்பிடுகிறார்.

---

*(இஸ்லாம் வளர்த்த தமிழ்-டாக்டர் உவைஸ் ,பு. 104, 105)

அடுத்துவரும் 4 விருத்தங்களும் முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய காலத்திற்குப் பிறகு முஸ்லிம்கட்குத் தலைமை ஏற்று நடத்திய, புகழ் பெற்ற கலீபாக்கள் எனப்படும் நால்வர் ஆகிய அபு பக்கர் (ரலி), உமறு (ரலி), உதுமான் (ரலி), அலி (ரலி), ஆகியவர் பற்றியவை.

13ஆம் விருத்தம் முகம்மது நபி (ஸல்) அவர்களது திருப்பெயரர்கள் ஆகிய ஹஸன், ஹுஸைன் ஆகியவர் அடிதொழுவாம் என்கிறது.

அடுத்த விருத்தமோ பதுறு யுத்தத்தில் பங்குகொண்டு நியாயத் தீர்ப்பு நாளில் எவ்விதக் கேள்வியும் கேட்கப்படுதல் இல்லாமலே சுவனம் புகுபவர் ஆகிய பதின்மரைப் புகழ்ச்சி செய்வாம் என்கிறது.

15ஆம் விருத்தமோ சந்திரனை நட்சத்திரங்கள் சூழ்ந்து இருப்பதுபோல, நபிகள் பெருமானார் அவர்களைச் சூழ்ந்திருந்த 42,000 அஸ்ஹாபிகள் பெயர்த்துதி நவில்வாம் என்று கூறும்.

அடுத்த விருத்தமோ நான்கு இமாம்களின் பாத தாமரை பரவுவாம் என்னும்.

இமாம் என்ற சொல்லுக்குத் தலைவர் என்பது பொருள். அந் நான்கு இமாம்கள்,

இமாம் அபூஹனீபா
இமாம் மாலிக்
இமாம் ஷாஃபீ
இமாம் அஹ்மத் இப்னு—ஹன்பல்

ஆவார்கள்.

இவர்கள் தாம் முஸ்லிம்களுடைய சட்ட திட்டங்களை வகுத்தவர்கள். ஒவ்வொருவரும் வகுத்த முறைக்கு மத்ஹபு என்று பெயர். (மத்ஹபு-வழி)

எல்லாவற்றையும் சேர்த்து இறைவனுடைய கட்டளைகளின் அடிப்படையிலும் முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய சொல், செயல் ஆகியவற்றின் அடிப்படையிலும் அமைந்த முஸ்லிம்களுடைய சட்டத்திற்குப் பொதுவாக 'ஷரீஅத்' என்பது பெயர்.

அதனை இப்பாடலில் 'சறகு' என்று குறிப்பார். இதனை எடுத்துக் கூறும் பொழுது இப்பாடலில் உள்ள ஒரு அழகினையும், அடிப்படை உண்மையினையும் எடுத்துக் காட்டுவது பொருத்தமாக இருக்கும்.

இது தொடர்பாக வண்ணக் களஞ்சியப் புலவரின் விருத்த மாவது:

"மேருவாம் உபயபுய வேதநாயகர் நபி தம்
வீறுசேர் சறகின் நெறியோர்
தாருவாய் அதனில் உயர் நாலு நீள்
பணர் எழுவது ஆகவே மதகபுகளாய்
நேருலாவிய அவர்கள் வாய்மையே கதி
அருளு நீர்மையால் அது கனிகளாய்
பாரெலாம் உதவ வரு நால் இமாம்
எனும் அவர்கள் பாத தாமரை பரவுவாம்" (1:16)

இந்நான்கு இமாம்கள் வகுத்த நடைமுறை நெறிகட்கிடையே சிறு சிறு வேறுபாடுகள் இருப்பினும், இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளில் எவ்விதமான வேறுபாடும் இல்லை.

இந்த உண்மையை வண்ணக் களஞ்சியப் புலவர் ஓர் அழகான உவமை வாயிலாய் விளக்குகிறார்.

சறகு (ஷரீஅத்) என்பதனை ஒரு மரம் ஆகவும், நான்கு மத்ஹபுகளையும் அம்மரத்தினின்றும் கிளைத்துப் படர்ந்த கிளை களாகவும் குறிப்பர்.

அப்படிக் குறிப்பிடுவதிலும் கூட கிளை என்பதற்குப் 'பணர்' என்ற சொல்லை ஆளுவதன் மூலம் தன் புலமைத் திறனையும் காட்டி விடுகிறார். இச்சொல் முஸ்லிம்புலவர்களிடை பெரு வழக்கில் உள்ளது.

"நெடும் பணர் தன்னில் எய்தினனே" (37:23)

"கிடந்ததோர் கானம் இலை இல ஆகி
கிளைத்திடும் பணர் எலாம்"

"கானகம் தழைத்து பணர்கள் விட்டு எழுந்து கதிரவன் கனல்
கரம் மறைத்து,"

(சீறா...அலிமா முலையூட்டுப் படலம் 67, 68)

"எழுந்தரு பணர் சினை யாவும்"

"படர் பணர் துயல்வர சலாம் பகர்ந்து"

(சீறா—அசீறாப் படலம் 32,35)

மேலும் இவ்வுவமையை இதனுடன் நிறுத்தாமல் அந்நான்கு இமாம்களையும்,

"நேர்(மை) உலாவியவர்கள்" என்றும், அவர்களது வாய்மையே கதி அருளும் நீர்மையது என்றும், அதனாலேயே அது (வாய்மை) கனிகளாய், பார் எல்லாம் உதவுகின்றது எனவும் பாடுவார்.

அடுத்த (17) விருத்தத்தில் முகியித்தீன் ஆண்டகை அவர்களை (அப்துல் காதர் ஜீலானி) வாழ்த்துகிறார்.

18, 19 ஆம் விருத்தங்கள் இரண்டும் வண்ணக் களஞ்சியப் புலவர்க்கு விசேஷம் வாய்ந்தவை.

18 ஆம் விருத்தத்தில் "நாகை வாழ் காதிறு ஒலி பாதமே நாளும் மனம் மீதில்வைத்து அருளுவாம்" என்று பாடுவார்.

இதற்குக் காரணம், வண்ணக் களஞ்சியப் புலவர் நாகூரில் நீண்ட காலம் வாழ்ந்து, அவ்வூர் தர்காவில் அடக்கமாகி இருக்கும் (காதிறு ஒலி) ஷாஹுல் ஹமீது நாயகம் அவர்கள் மாட்டுக் கொண்டு இருந்த அளவற்ற ஈடுபாடு ஆகும்.

19 ஆம் விருத்தமோ இராமநாதபுர மாவட்டம் ஏர்வாடியில் அடக்கமாகி இருக்கும் இபுறாஹீம் ஷஹீது அவர்களைப்பற்றியது.

வண்ணக் களஞ்சியப் புலவர் இபுறாஹீம் ஷஹீது அவர்களின் வழித் தோன்றல் என்பதனையும் அவர்களைப் பற்றியே 'தீன் விளக்கம்' என்ற காப்பியத்தைப் பாடி உள்ளார் என்பதனையும் முன்னர்க் கண்டோம்.

எனினும் வேறு ஒரு காரணத்திற்காக இவ்விருத்தத்தைப் பார்ப்பது அவசியம் ஆகிறது.

"கூறும் ஒளி ஆகி, மணி ஆகி, மயில் ஆயினர்
குலோதையர் தம் நாமம் நினைவோர்க்கு
ஈறுவரை நோய், பிணி, பிசாசு, பல தீ வினைகள்
ஏதும் அணுகாமல் அருள்வோர்
தேறு படி கிரியொரு நாகம் அது தானும் ஒரு
சேகரம் அது ஆக விடுவோர்
ஏறுபடி வாழும் இபுறாகீம் ஒலி பாதம் இரு
போதும் மனம்மீது நினைவாம்." (1:19)

(ஏர்வாடி—பாடலில் ஏறுபடி எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது)

இதில் இபுறாஹீம் ஒலி அவர்களுடைய பெயர் நினைவு கூர்வார்க்கு ஈறுவரை நோய், பிணி, பிசாசு, பல தீவினைகள் ஏதும் அணுகாது என்று பாடுவார்.

பிசாசு, பல தீவினைகள் (ஏவல், செய்வினை போன்றவை) என்பவை இஸ்லாத்தின் அடிப்படைக் கருத்துக்கு மாறுபட்டவை. எனினும் அங்கே (ஏர்வாடி) நடக்கின்ற நிகழ்ச்சிகளை ஒட்டி இப் படிப் பாடுகிறார்.

20 ஆம் விருத்தத்தில் சதக்கத்துல்லா அப்பா என்று எல்லா ராலும் மரியாதையுடனும், மதிப்புடனும் பாராட்டப் பெற்ற முஸ்லிம் ஞானியைப் பாடுகிறார்.

21ஆம் பாடலில் முதலியார் லெப்பை சாகிபு, அவர் மகனார் அபூபக்கர் லெப்பை சாகிபு ஆகிய ஆலிம்களைப் புகழ்ந்து பாடு கிறார்.

அடுத்த (22) பாடலில் மாமுனா லெவ்வை ஆலிமைப் புகழ் கிறார்.

இவ்விருத்தத்தையும்,இரண்டு காரணங்களுக்காகப் பார்ப்பது அவசியம் ஆகிறது.

''ஒவ்வு பால் சலம் பிரித்து உதவும் அன்னம் போல்
கௌவையாய் இருவினை கடக்கும் மார்க்கத்தை
மௌவல் வாய் மலர தௌகீது மாமுனா
லெவ்வை ஆலிமும் எம் நெஞ்சும் வேறு அன்றே'' (1:22)

இப்பாடலில் ஆளப் பெற்று இருக்கின்ற தௌகீது என்ற சொல் ''அல்லாஹ் ஒருவன்; வணக்கத்திற்கு உரியவன் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை.''—''லா இலாஹ இல்லல்லாஹு'' என்ற இஸ்லாமிய மூல மந்திரத்தைக் குறிக்கும்.

இதனை மனம் ஒப்பிக் கூறுவதனைத்தான் 'கலிமா' என்று சொல்வர்.

மாமுனா லெவ்வை ஆலிம் அவர்கள் இதில் உறுதியாக நின்ற தனை எடுத்துக் கூறுவதோடு அல்லாமல் அவருடைய பாதிப்பு தம் மேல் எந்த அளவிற்கு இருந்தது என்பதனை 'மாமுனா லெவ்வை ஆலிமும் எம் நெஞ்சும் வேறு அன்று' என்பார்.

அது மாத்திரம் அல்லாமல், சமய நெறியை தமக்கு அவர் எப்படிப் புகட்டினார் என்பதனை அன்னம் பாலிலிருந்து எப்படி நீரைப் பிரித்து, பாலை மட்டுமே பருகுகின்றதோ அது போல தீமையினின்றும் நன்மையைப் பிரித்துத் துன்பமே தருகின்ற இரு வினை கடக்கும் மார்க்கத்தை மௌவல் வாய் மலர்ந்தார் என் பார்.

மௌவல் என்ற சொல்லாட்சியிலும் கூட மாமுனா லெவ்வை ஆலிம் இடத்துப் புலவர் வைத்திருந்த பெரு மதிப்பும் ஈடுபாடும் தெளிவாக விளங்குகின்றன.

மௌவல் என்ற சொல்லுக்கு முல்லை, காட்டு மல்லிகை என்ற பொருள்களோடு தாமரை என்ற பொருளும் உண்டு.

''மௌவல் நீள்மலர் மேலுறைவானொடு''
(தேவாரம் 1213:13)

''பூ எனப்படுவது பொறி வாழ் பூவே''
(பொறி-இலக்குமி; பூ-தாமரை)

''பூவிற்குத் தாமரையே, பொன்னுக்குச் சாம்புநதம்''
(தி.வ.மாலை 36)

''தாமரைத் தண் தாது ஊதி மீமிசை
சாந்தின் தொடுத்த தீந்தேன்'' (நற்றிணை.1)
(பூக்களிற் சிறந்த தாமரை; மரங்களில் சிறந்த சந்தனம்)

இத்தகைய சிறப்பிற்கு உரிய தாமரை மலரை அவருடைய வாய்க்கு உவமையாகக் கூறுவதில் இருந்தே புலவர், அவர்பால், அவர் போதனைகளின் பால், வைத்திருந்த மதிப்பு வெளிப்படும்.

வாய்க்கு மௌவலை உவமை கூறியதற்கு இயைய வாய் திறந்து பேசுவதற்கு 'மலர்தல்' என்ற வினையைப் புலவர் ஆண்டிருப்பதில் உள்ள நயம் போற்றற்கு உரியது.

23 ஆம் விருத்தத்தில் அவுலியாக்கள் அனைவரையும் ஒருங்கு சேர்த்து வாழ்த்துவார்.

அடுத்து வரும் விருத்தமோ புதியது.

தமக்கு முன் வாழ்ந்த இஸ்லாமியப் பெரும் புலவர்களை இவ்விருத்தத்தில் போற்றுகிறார்.

''மேவிய மிகுறாஜு ஆலிப் புலவன் மின்னா நூறுத்தீன்
நீவிய மதுர இன்ப சாகரம் நிகராம் சீறா
காவிய உமறு மாலைக் கனகவிராயன் காசீம்
நாவின் நாள் எட்டில் வென்றான் ச(வ்)வாது நல் தாள்கள்
[போற்றி (1:24)

என்பது தான் அவ்விருத்தம்.

மிகுறாஜு என்பது (மிஃறாஜ்), பெருமானார் முகம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த அதி அற்புதமான விண்ணேற்ற நிகழ்ச்சியினைக் குறிப்பிடுகிறது.

இதனைப் பற்றி ஆலிப் புலவர் என்பவர் மிகுறாஜ் மாலை என்ற பெயரில் தமிழில் பாடி உள்ளார். இந்நூல் ஹிஜ்ரி 998க்குச் சரியான கி.பி. 1590ல் பாடப் பெற்றது என டாக்டர் உவைஸ் தம் ''இஸ்லாம் வளர்த்த தமிழ்'' நூலில் குறிப்பிடுவார். (ப.57)

இதைத்தான் இவ்விருத்தத்தின் முதல் அடியின் முற்பகுதி குறிப்பிடுகிறது.

இவ்விருத்தத்தில் குறிக்கப்பெற்று இருக்கும் புலவர்கள், கால நிரல்படி குறிக்கப் பெறவில்லை.

காலநிரல்படி ஆலிப் புலவருக்கு அடுத்து வரவேண்டியவர் மூன்றாம் அடியில் குறிப்பிடப் பெற்றிருக்கும் மாலைக் கனகவி ராயன் என்பவர் தாம்.

மிகுறாஜ் மாலையை ஒரு குறுங்காவியம் என்று குறிப்பிட்டு கனகவிராயர் இயற்றிய கனகாபிஷேக மாலையே முதலாவது இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம் என்பார் டாக்டர் உவைஸ் அவர்கள்.

இக்கனகாபிஷேக மாலை இயற்றப் பெற்றது கி.பி. 1648 என்று கூறுவார்.

இந்த கனகாபிஷேக மாலை பாடிய கனகவிராயரைத்தான் புலவர் இந்த விருத்தத்தில் மாலைக் கனகவிராயன் என்று குறிப்பிடுகிறார்.

அடுத்துத் தோன்றிய காப்பியமே சீறாப்புராணம் ஆகும். அது கி பி. 1703ல் அரங்கேற்றம் செய்யப்பெற்றது என்பார்.

இதனை இயற்றிய உமறுப் புலவரை எத்துணை அளவிற்கு வண்ணக் களஞ்சியப் புலவர் பாராட்டி இருக்கிறார் என்பதற்கு இவ்விருத்தத்தில், அவரைக் குறிப்பிட ஆண்டிருக்கும் சொல் லாட்சியே போதுமான சான்றாகும்.

''நீவிய மதுர இன்ப சாகரம் நிகர் ஆம் சீறா'' (நீவிய-தீவிய)

இவ்வாறு சீறாப் புராணத்தைப் பற்றி வருணித்துவிட்டு அதனைக் காவியம் என்றும் குறித்து, அதனைப் பாடியவர் உமறு என்றும் எடுத்துக் காட்டிவிடுகிறார்.

இச்சொல் ஆட்சியே சீறாப் புராணத்தில் மண்டிக் கிடக்கும் இனிமையிலும், நயத்திலும் எந்த அளவிற்கு வண்ணக் களஞ்சியப் புலவர் ஈடுபட்டு இருந்தார் என்பதனை எடுத்துக் காட்டப்போது மானது.

மூன்றாம் அடியின் ஈற்றில் காணப்படும் காசீம் (காசீம் புலவர்) அவர்களும், நான்காம் அடியில் காணப்பெறும் சவாது (ஜவ்வாதுப் புலவர்) அவர்களும் சமகாலத்தவர்.

காசீம் புலவர் காயல் பட்டினத்தைச் சேர்ந்தவர். நபிகள் பெருமானார் மீது அருமையான திருப்புகழ் ஒன்று பாடி உள்ளார். இந்தத் திருப்புகழ் அருணகிரி நாதர்த் திருப்புகழ்க்கு எந்த விதத்திலும் குறைந்தது அன்று என்று கூறுவர்.

இவர் ஜவ்வாதுப் புலவர் காலமானதற்கு இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் (ஹி. 1177ல்) காலம் ஆனவர்.

(இஸ்லாமிய இலக்கியக் கருவூலம் —R.P.M கனி, ப. 165)

ஜவ்வாதுப் புலவரோ இராம நாதபுர மாவட்டம் "யமனேஸ்வரம்" என்ற ஊரில் தோன்றியவர். இவர் ஹிஜ்ரி 1137ல் பிறந்து ஹிஜ்ரி 1202 வரை வாழ்ந்தவர் என்றும், இராமநாதபுரத்துச் சேதுபதி மன்னர் இவரிடத்துப் பெருமதிப்பு வைத்திருந்தார் என்றும் கூறுவர்.

முகியித்தீன் ஆண்டவர்களின் மாபெரும் புகழை இவர் முகியித்தீன் பிள்ளைத் தமிழ் என்ற பெயரில் பாடி இருக்கிறார்.

பிள்ளைத்தமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் சிறந்த ஒன்று இது.

கனகவிராயரின் புதல்வர், பீருகான் எனப்படுவார். இவரைத் தான் "நாள் எட்டில் வென்றான்" என்று இவ்விருத்தம் கூறுகிறது.

(அடைபட்ட ஆலயத்தின் கதவுகளைக் கவி பாடி எட்டு நாட்களில் தாமாகவே திறக்கச் செய்வதாக ஆணை இட்டு அவ்விதமே செய்து காட்டியதன் காரணம் ஆக 'நாள் எட்டில் வென்றான்' என்ற சிறப்புப் பெயரை இவர் பெற்றார்—இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் [3] அப்துற் றஹீம், ப. 409)

பீரு கானின் புதல்வர் மீரான் கனி அண்ணாவி என்பார். அவரும் ஒரு சிறந்த புலவர். இசை நயம் அறிந்த அவர் "அறுக்கான் மாலைச் சுருக்கம்" முதலிய பல நூல்களைப் பாடி உள்ளார்.

இம்மீரான் கனி அண்ணாவியின் புதல்வர் பீர் இராவுத்தர். பீர் இராவுத்தரின் புதல்வர் தாம் மின்னா நூறுத்தீன்.

மின்னா நூறுத்தீன் "பொன்னரிய மாலை" என்ற நூலைப் பாடி இருக்கிறார்.

நபிகள் நாயகம் மக்கா நகரில் இருந்து மதினா நகர்க்கு வந்து ஆட்சி புரிந்ததையும், அப்போது அவர்கள் அருளிய அறங்களையும், இறை சமுகம் சேர்ந்ததையும் இச்சிறு காவியத்தில் பாடி இருக்கிறார்.

இப்படியாகத் தனக்கு முன் வாழ்ந்து தங்கள் புலமையினாலும் சமயப் பற்றினாலும் பெருமைக்குரிய இலக்கியங்களைப் படைத்த புலவர் பெரு மக்களைக் கடவுள் வாழ்த்துப் படலத்திலேயே (பாயிரம்) போற்றிப் பாடுவது வண்ணக் களஞ்சியப் புலவர் தோற்றி வைத்த புது மரபு ஆகும்.

அடுத்த விருத்தத்தில் தன் காப்பியத்திற்குக் 'கரு' (ஆதாரங்கள்) கொடுத்த இபுறாகீம் லெவ்வை ஆலிம் அவர்களைப் பாடுகிறார் என்பதனை முன்னர்க் கண்டோம்.

இராஜ நாயகக் காப்பியத்தை கீழக்கரையில் தாம் அரங்கேற்றியதாகப் புலவர் கூறி இருப்பதனையும் முன்னர்க் கண்டோம்.

அடுத்த 27 ஆம் விருத்தத்தில் தன்னுடைய கொடை நாயகர் ஆன அகமது நயினான் மகன் அப்துல் காதர் அவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அப்படிக் குறிப்பிடும் விருத்தம் தான்,

''புராதனச் சுலையுமான் நன்னபி புகழ் புனைந்து கூறும்
இராஜ நாயகத்துக்கு அன்பாய் இருநிதி மழை பொழிந்தான்
தராதரப் புயன் சிங்காரன் அகுமது நயினான் தந்த
வராதிபன் அப்துல் காதிர் வள்ளல் வாழ் வகுதை யோனே''
(1:27)

(தரா—தரை; தராதரம்—பூதரம்—மலை; வரம்+அதிபன்—வராதிபன்; இருநிதி—மிக்க நிதி என்பது ஆகும்.)

தன்னுடைய கொடை நாயகரை ''இருநிதி மழை பொழிந்தான்'' என்றும் ''வராதிபன் அப்துல் காதிர் வள்ளல்'' என்றும் நன்றியோடு குறிப்பிடுகிறார்.

இப்படி நன்றி தெரிவிக்கும் நல்லியல்பை கடவுள் வாழ்த்துப் படலத்தோடு நிறுத்திக் கொள்ளவில்லை. காப்பியத்தின் பல இடங்களில் அவரைப் பற்றிக் குறிப்பிட்டு உள்ளார்.*

---

* இந்நூல் ஈற்றில் ''புலவரின் நன்றியுரை'' காணலாம்.

28 ஆம் விருத்தம் முதல் 31 ஆம் விருத்தம் வரையில் அவை அடக்கமாக அமைந்திருக்கிறது.

புலவருடைய அவை அடக்க விருத்தங்கள் அழகும், கற்பனையும் நிறைந்தவையாக இருப்பதற்கு ஒரு விருத்தத்தைச் சான்றாகக் காணலாம்.

மேருமலையோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது கரையான்கள் தொகுதியாகக் கூடித் தம் ஈர்வாயால் மண் கொண்டு அமைத்த புற்று மிகச் சிறிது ஆகும். அந்த அளவிற்குக் கூடத் தன் பாடல் இணை ஆகாது என்று ஒதுக்கினும் "என் புத்தி என்னைப் பார்த்து நகைக்கிறது, எனினும் ஆசை விட்டு ஒழிந்ததில்லையே, நான் என் செய்வேன்" என்று அவை அடக்கம் கூறுகிறார் கவிஞர்.

"மிகைத்த இக்கவிப் புலமை வல்லவர் முன் மேருவுக்கே
தொகைப்படும் சிதல் குவித்த மண் இணை எனச் சொல்லும் அத்
தகைத்தும் அல்ல என்று அகற்றி என் புத்தி என்றனையே
நகைத்தும் ஆசை விட்டு ஒழிந்திலை என் செய்வன் நானே"
(1:30)

எனும் விருத்தம் படித்து அநுபவிக்கத் தக்கது.

புலவருடைய கடவுள் வாழ்த்துப் பாடல்களில் ஒரு தனித்தன்மையும், அருமையான கருத்துக்களும் அமைந்து இருத்தலின் காரணம் ஆக அவற்றைச் சற்று விரிவாகப் பார்ப்பது பொருத்தம் உடையதாகும்.

"புவி முழுது அமைத்து முத்தொழில் புரிந்து வாழ்
கவின் உறும் அளவிலாக் கருணை வள்ளலை
குவி இரு வினை எனும் கோதிலார் மனத்
தவிசில் வீற்றிருக்கும் சந்ததனைப் போற்றுவாம்"
(1:1)

இது, அவரது முதற் கடவுள் வாழ்த்துப் பாடல்.

இப்பாடலில் காணும் முதற் சிறப்பு என்ன என்றால், புலவர் பாடப் போந்தது இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமே ஆயினும், இப்பாடல் முழுக்க முழுக்க எல்லாரும் தமக்கே உரிய என்று பொருத்திக் கொள்ளுமாறு பொதுவாக அமைந்தது தான்.

"புவி முழுது அமைத்து, முத்தொழில் புரிந்து" என்று முதலடியில் காணப்படுவது, இறைவனுடைய படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்கள் என எல்லோராலும் குறிப்பிடப் பெறுவது ஆகும்.

எனினும் இம்முதல் அடியின் தொடக்கத்திலும், ஈற்றிலும் இரு சிறப்புகளைக் காண்கிறோம்.

முதலில் புவி முழுதும் என்று கூறுவதன் மூலமாகப் பிரபஞ்சங்கள் அனைத்தையும் கவிஞர் குறிப்பிட்டு விடுகிறார். அது போலவே முத்தொழிலுக்கு முன்னால் 'அமைத்து' என்று வேறு கூறுகிறார்.

அமைத்தல் என்ற சொல்லிலேயே ஓர் ஒழுங்கு, கட்டுப்பாடு, திட்டம், இடம் பெற்று விடுகின்றன.

எனவே இறைவன் இப்பிரபஞ்சங்கள் அனைத்தையும் படைத்து அவற்றில் உள்ளனவற்றைப் பிறப்பித்து, வளர்த்து, பக்குவப்படுத்தி, அழியச் செய்கிறான் என்றால், அது ஒரு திட்டம் இட்ட அமைப்பின் அடிப்படையில் நடைபெறுவது. தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்காகத் தன் அருளைப் பொழியும் வழியில் இறைவன் இப்படிச் செயற்படுகிறான்.

இக்கருத்தினை முதல் அடியின் முற்பகுதி குறிக்கும். இந்த இறைவனோ என்றும் இருப்பவன் என்பதனை முதல் அடியின் ஈற்றில் காணப்படும் 'வாழ்' என்ற சொல் உணர்த்தி விடுகிறது.

இரண்டாம் அடியில் காணப்படும் "அளவிலாக் கருணை வள்ளல்" என்ற சொல் ஆட்சியும் இறைத் தன்மையை மிக்க அழகாக விளக்குகிறது.

வள்ளல் என்று பலரை நாம் குறிக்கிறோம். தாராளமாக வரையறை இன்றிக் கொடுப்பவன் என்ற பொருளில் தான் வள்ளல் என்கிறோம். எந்த மனிதனும் வள்ளலாக இருக்க வேண்டுமானால், எதனைக் கொடுப்பதன் காரணம் ஆக, அவனை வள்ளல் என்கிறோமோ, அது அளவற்றதாக இருக்க வேண்டும்.

ஆனால் மனிதனை வள்ளல் என்று சொல்வோமேயானால் அவன் கொடுக்கும் எதையும் அளவில்லாதது என்று சொல்ல முடியாது. அவன் கொடுப்பது செல்வமாக இருந்தால், அவனிடத்திலே இருக்கும் செல்வத்திற்கும் அளவு உண்டு. அவன் கொடுப்பது பிறர்க்குக் கற்றுக் கொடுப்பதாக இருந்தால் (கல்வி), அவனுடைய அறிவிற்கும் ஒரு வரம்பு உண்டு. அவன் கொடுப்பது உடல் உழைப்பு என்றால் அதற்கும் ஓர் எல்லை உண்டு.

எனவே மனிதன் கொடுக்கக்கூடிய எதற்கும் ஓர் எல்லை உண்டு என்பதனால், வரையாது கொடுப்பவன் என்ற பொருளில் வள்ளல் என்று எந்த மனிதனையும் குறிப்பிட முடியாது.

இன்னொன்றையும் பார்க்கலாம். இவன் பிறர்க்குக் கொடுப்பதை, இவனுக்குக் கொடுப்பதே இறைவன் எனும் பொழுது அந்த இறைவனே வரையாது கொடுக்கும் வள்ளலாக ஆவான்.

ஆகையால்தான் 'அளவிலா' என்ற சொல்லைப் புலவர் ஆள்கிறார்.

இறைவன் கொடுக்கும் எதற்கும் மூலமாக அமைவது அவனுடைய சிருஷ்டியே. சிருஷ்டியே அவனுடைய கருணை தான்.

சிருஷ்டித்ததோடு அமையாமல் அவற்றைப் போஷித்து, அவ்வவற்றின் இயல்புக்கு ஏற்ப, வளர்த்துப் பக்குவப் படுத்தி, வர்க்க விருத்திக்கும் வழி செய்கிறான். இது அவனுடைய கருணையினால் தான் அமைகிறது.

ஓர் உயிர் சிருஷ்டிக்கப்படும் பொழுதே, அதற்குத் தேவையான அனைத்தும் ஒருங்கே சிருஷ்டிக்கப்பட்டு விடுகின்றன. இதுவும் அக்கருணையின் இயல்பே ஆகும்.

கருணை என்ற பண்பு, எதையும் எதிர்பார்க்காமல், இயல்பாகத் தோன்றுகின்ற பரிவினையே குறிக்கும்.

அன்பு, பாசம் என்பன போன்ற சொற்களைப் பல்வேறு சூழ்நிலைகளில் பலருக்கிடையில் குறிக்கிறோம். இவை எல்லாம் ஏதோ ஒரு எதிர்பார்ப்பின் காரணம் ஆகவோ, தொடர்பின் காரணம் ஆகவோ, பழக்கத்தின் காரணம் ஆகவோ, நெருக்கத்தின் காரணம் ஆகவோ உண்டாகின்றன.

கருணை என்ற ஒன்று தான் எதையும் பிரதிபலனாக எதிர்பார்க்காமல், பிறருடைய தேவைகளைத் தாமாகவே வலிய வந்து பூர்த்தி செய்ய முன் நிற்பது.

சிருஷ்டியே கருணையின் காரணமாக அமையும் பொழுது அந்த சிருஷ்டியினுடைய தேவைகள் அனைத்தும் பூர்த்தி செய்யும் பொறுப்பை, சிருஷ்டி கர்த்தாவே, வலியத் தானே ஏற்றுக்கொண்டு விடுகிறான்.

எனவே தான் அவன் கருணை வள்ளல் ஆகின்றான்.

இறைவனைக் கருணை வள்ளல் என்று புலவர் குறிப்பிடுவதற்கு அவர்க்கு, அவர் சார்ந்த சமயம் கற்பித்த, இறைமைத் தன்மையும் நிச்சயமாகக் காரணமாக இருந்திருக்கும்.

திருக்குர்ஆனிலும், நபிகள் நாயகத்தின் சொற்களிலும் இறைவனுடைய கருணை பலபட எடுத்துக் காட்டப்பட்டிருக் கிறது.

''நிச்சயமாக அல்லாஹ் (எவருக்கும் அவர்களுடைய பாபத் திற்கு அதிகமான தண்டனையைக் கொடுத்து), ஓர் அணு அளவும் அநியாயம் செய்வதில்லை. ஆயினும் (ஓர் அணு அளவு) நன்மை இருந்தால் (கூட) அதனை இரட்டித்துத் தன் அருளைக் கொண்டு (பின்னும்) அதற்கு மகத்தான கூலியைக் கொடுக்கிறான்''
(தி.கு. 4:40)

''நம் வசனங்களை நம்பியவர்கள் உம்மிடம் வந்தால், ஸலா மூன் அலைக்கும் (''உங்கள் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக'') என்று (நபியே) நீர் கூறும். உங்கள் இறைவன் கிருபை செய்வதைத் தன் மீது. கடமையாக்கிக் கொண்டான்' உங்களில் எவரேனும் அறியாமையினால் ஒரு தீமையைச் செய்து விட்டு, அதற்குப் பின், பாவத்தை விட்டும் திரும்பி, மனம் திருந்தி நடப்பாரேயானால், நிச்சயமாக அவன் (அல்லாஹ்) மன்னிப் பவனாகவும், மிக்க கருணை உடையவனாகவும் இருக்கின்றான்.''
(தி.கு. 6:54)

இந்த திருக்குர்ஆன் வசனத்தில், ஒரு தனிச் சிறப்பு அமைந் திருக்கிறது. அல்லாஹ்வே சர்வ வல்லமையும் உடையவன். அனைத்தையும் சிருஷ்டித்துக் காப்பவன்; அனைவர்க்கும் வாழ் வளிப்பதோடு வழி காட்டுபவன்; தன்னுடைய படைப்புகள் அனைத்துக்கும், அவர், அவைகட்கும் தேவையான சட்ட திட்டங் களை வகுப்பவன்; அவர்களுடைய, அவற்றின் செயல்களின் அடிப்படையில் நீதி வழங்குவோனும் கூட.

அத்தகைய அல்லாஹ்வுக்கு சட்டம் ஒன்றை வகுப்பதற்கோ, கடமை ஒன்றைச் சுமத்துவதற்கோ, வேறு எவரும் இருக்க முடி யாது.

எனவேதான் இவ்வசனம் ஓர் அற்புதமான கருத்தை உணர்த்துகிறது.

தன் படைப்புகளிடத்து கிருபை (அல்லது) கருணை காட்டு வதை தானே தனக்குக் கடமை ஆக்கிக் கொண்டிருக்கிறான் என் பது தான்.

இக்கருணை எப்போதும் ஒரே மாதிரியாக இருக்க முடியாது. ஒரு குழந்தை நோய் வாய்ப் பட்டால் அதற்குரிய மருந்தை, அக்

குழந்தை கொள்ள மறுத்த போதும், அதன் 'காலொடு, கைய முக்கி, பிள்ளையை வாய் நெரித்துத்' தாய் மருந்து புகட்டுவாளே ஆனால் அச்செயல் குழந்தை நோய் நீங்கி நலம் பெற வேண்டும் என்ற கருணையால் அமைவதே.

அது போலவே ஒருவன் தவறு செய்து விட்டால் அவனைத் தண்டிப்பது, அவன் அத்தவற்றிலிருந்து திருந்த வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடு அமைவதால் அதுவும் கருணையே ஆகும்.

இதனையும் திருக்குர்ஆன் மிக்க அழகாக எடுத்துக் கூறும்.

''(நபியே! இதற்குப்) பின்னரும் அவர்கள் உம்மைப் பொய்யர் எனக் கூறினால் (அவர்களை நோக்கி) 'உங்களுடைய இறைவன் மிக்க விரிவான அன்புடையவன் தான்; எனினும் குற்றம் செய்யும் மக்களை அவன் தண்டிப்பதை ஒருவராலும் தடுக்க முடியாது' என்று கூறிவிடும்.'' (தி கு. 6:147)

'' 'இன்னும், இவ்வுலகத்திலும், மறுமையிலும், எங்களுக்கு அழகிய நன்மைகளையே விதித்து அருள்வாயாக! நிச்சயமாக நாங்கள் உன்னையே முன்நோக்குகிறோம்' (என்றும் பிரார்த்தித்தார்.)அதற்கு இறைவன், 'என்னுடைய வேதனையைக் கொண்டு நான் நாடியவரைப் பிடிப்பேன்; ஆனால் என்னுடைய அருளானது எல்லாப் பொருள்களிலும் (விரிந்து, பரந்து) ஆழ்ந்து நிற்கிறது; எனினும்' அதனைப் பய பக்தியுடன் பேணி, நடப்போருக்கும், முறையாக ஜக்காத்துக் கொடுத்து வருவோருக்கும் நம்முடைய வசனங்களை நம்புகிறவர்களுக்கும் நான் விதித்து அருள் செய்வேன்' என்று கூறினான்.'' (தி.கு. 7:156)

[மூஸா நபி அவர்கள் அல்லாஹ்வைப் பிரார்த்தித்ததையும் அவர்களுக்கு இறைவன் அளித்த பதிலையும் இத்திருவசனம் குறிப்பிடுகின்றது]

''நன்மை புரிந்தோருக்கு (உரிய கூலி) நன்மையும், மேலும் அதைவிட அதிகமும் கிடைக்கும், அவர்களின் முகங்களை இருளோ இழிவோ சூழ்ந்து இருக்காது. அவர்கள் தாம் சுவனபதிக்கு உரியவர்கள். அதிலேயே அவர்கள் என்றென்றும் தங்கி இருப்பார்கள்.'' (தி.கு.10:26)

'' 'என் அடியார்களே! (உங்களில்)எவரும் வரம்புமீறி தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்ட போதிலும், அல்லாஹ் உடைய அருளில் அவர் நம்பிக்கை நிச்சயம் இழக்க வேண்டாம்—நிச்சய

மாக அல்லாஹ் பாவங்கள் யாவையும் மன்னிப்பான்—நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன்; மிக்க கருணை உடையவன்'' (என்று நான் கூறியதை நபியே!) நீர் கூறுவீராக.'' (தி.கு. 39:53)

அல்லாஹ் உடைய இத்தகைய கருணை திருக்குர்ஆனில் பல இடங்களில் பேசப்படுவது போலவே நபிகள் பெருமானார் வாக்கி லும் பேசப்படுகிறது. அவற்றை நுண்மையாக ஆய்வோமே ஆனால் மனிதர்களின் நல்ல எண்ணத்திற்கும், நன்னடத்தைக்கும் ஒரு தூண்டுகோலாகவே இறைவனுடைய கருணை அமைந்திருக் கிறது என்பது தெளிவாகும்.

அத்தகைய நாயக வாக்கியங்களில் சில வருமாறு.

''அல்லாஹ் சொல்லுகின்றான் :—

நல்ல (அமல்) செயலுடன் (என்னிடம்) வருவோனுக்கு அதை விடப் பத்து பங்கு பரிசு கிடைக்கும். மேலும், நான் அவனுக்கு (அருள்)அளிப்பேன்.

கெட்ட செயலுடன் (என்னிடம்) வருவோனுடைய பரிசு அதற்குச் சமமான தீமையே. மேலும், நான் மன்னிக்கிறேன். என்னை நோக்கி ஒரு சாண் தூரம் வரும் ஒருவனை நோக்கி நான் ஒரு செஜம் நெருங்குகின்றேன். அவன் ஒரு செஜம் என் பக்கம் வந்தால் நான் அவன் பக்கத்தில் ஆறு செஜம் செல்கின்றேன்.

அவன் என்னை நோக்கி நடந்து வந்தால் நான் அவனை நோக்கி ஓடி வருகிறேன். ஆனால், என்னைப் பிறவற்றுடன் இணை வைக்காமல், என்னிடம் வருவோனுக்கு நான் பாவ மன்னிப்புடன் எதிர் பார்க்கப்படுகின்றேன்.

ஆண்டவன் சொல்லுகின்றான்:—

தானாக (தனது பய பக்தியால்) என்னை அணுகும் என் அடி யானை நான் நேசிக்கின்றேன். அவ்வாறு நான் அவனை நேசிக்கும் பொழுது நானே அவன் காதால் கேட்பவனாகின்றேன். அதனால், அவன் கேட்கின்றான். அவன் பார்க்கும் பார்வையும் நானாகின்றேன். அவன் தொடும் கைகளும் நானே. அவன் நடக்கும் கால்களும் நானே ஆகின்றேன். பிறகு, அவன் கேட்டால் நான் கொடுக்கின்றேன். அவன் என்னிடம் வந்தால் அடைக்கலம் கொடுக்கின்றேன்.

ஆண்டவன் தனது வானவருக்குக் கூறுகின்றான்—: என்னு டைய அடியான் தீங்கு செய்ய நினைத்தால், அதை அவன் செய் யும் வரை எழுத வேண்டாம். பிறகு, அவன் செய்த ஒரு குற்றமாக

அதை எழுத வேண்டும். ஆனால், எனக்காக அவன் அதை விட்டு விட்டால், அதை நல்லகாரியம் ஆகப்பதிவு செய்து கொள்ளுங்கள். அவன் நல்ல வேலை செய்ய எண்ணம் கொண்டால், அதைச் செய்யாவிட்டாலும் அவன் நல்ல வேலை செய்ததாகவே எழு துங்கள். ஆனால், அவன் அதைச் செய்து விட்டால், பத்திலிருந்து எழுநூறு நற்கருமங்கள் அவனுக்காக எழுதுங்கள்.''

[அண்ணல் நபி ஹதீஸ்—அருள் மணிகள் - ஸையத் இப்ராஹீம், ப. 3,5]

இப்பின்னணியில் இறைவனை அளவிலாக் கருணை வள்ளல் என்று புலவர் குறிப்பிடுவது எவ்வளவு பொருத்தமாக அமைந் திருக்கிறது!

இறைவனுக்கோ, உருவம் இல்லை; ஆகையால் அவனைக் கண்ணால் பார்க்க முடியாது. அவன் எங்கும் நிறைந்தவன் எனவே ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் இருக்கிறான் என்று சொல்ல முடியாது.

அத்தகைய இறைவனைத் தெரிந்து கொள்வது உணர்வு ஒன்றினாலேயே முடியும். எனவே தான் 'மனத்தவிசில் வீற்றிருப் பவன்' என்று குறிப்பிடுகிறார், புலவர்.

அம்மனம் எத்தகையதோ எனின் 'குவி இரு வினை எனும் கோது' இலாதது ஆகும். 'கோது' என்ற சொல்லுக்குக் குற்றம் என்பது பொருள். ஆசாபாசங்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டு நம் மனத்தில் மாசு உண்டாக்குகின்றன. அத்தகைய மாசற்றவன் மனத்தினால் தான் இறைவனை உணர முடியும்.

இங்கும் கூட புலவர் ஆண்டிருக்கும் இருவேறு சொற்களைச் சற்றுக் காணலாம்.

ஒன்று 'தவிசு' என்பது. மற்றொன்று 'வீற்றிருத்தல்' என்பது. தவிசு என்பதற்கு அமரும் இருக்கை என்பதுபொதுவான பொருள். இருப்பினும் உயர்ந்த இருப்பிடத்தைக் குறிப்பிடத் 'தவிசு' என்ற சொல்லை ஆளுவது வழக்கம்.

அளவில்லாக் கருணை உள்ளவனுக்கு உயர்ந்த இடத்தைத் தானே கொடுக்க வேண்டும்?

'வீற்றிருக்கும்' என்ற சொல்லும் அத்தகையதே. சிருஷ்டி கர்த் தாவை, சிருஷ்டியின் உணர்விலே வெறுமனே அமர்ந்திருக்கிறான் என்று சொன்னால் போதுமா?

ஆண்டவன் அல்லது உடையவன் என்ற அவனுடைய அந்தஸ் துக்கு ஏற்ப, அவனை அமர வைக்க வேண்டாவா?

அவனுக்கு அந்தஸ்தோ, உயர்வோ நாம் கொடுத்து வருவது அன்று. அவை அவனுக்கே உரியவை. பிறர் அவனிடம் இருந்தே பெறுபவை. அப்படிப் பெறும் பிறர், அவனைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, அவனுக்கு உரிய அந்தஸ்தையும், பெருமையையும், மாண்பையும் அளிக்க வேண்டாவா? எனவே 'வீற்றிருக்கும்' என்ற சொல்லைப் புலவர் ஆள்கிறார்.

இப்பாடலில் உள்ள பிறிதொரு சொல்லை ஆய்வோம். அது தான் ஈற்றடியில் அமைந்த ஈறில்லா இறைவனைச் 'சந்ததன்' என்று புலவர் குறிப்பிடுவது.

சந்ததம் என்ற சொல்லுக்கு நிரந்தரம், எப்பொழுதும் என்பன பொருள்.

'சந்ததமும் சிந்தித்தேன்' (மாறன் அலங்காரம்)

'சந்ததம் பந்தத் தொடராலே' (திருப்புகழ்)

அப்படி எப்பொழுதும், நிரந்தரமாக இருக்கும் இறைவனை 'சந்ததன்' என்று புலவர் குறிப்பிடுகிறார். இச்சொல்லை இவர்க்கு முன் எவரும் இப்பொருளில் வழங்கியதாகத் தெரியவில்லை.

என்றாலும், மிக்க அழகான, பொருத்தமான சொல் அமைவு ஆகும் இது.

ஒரு காப்பியம் படைக்கும் கவிஞனின் முதல் பாடல் கடவுள் வாழ்த்துப் பாடல் ஆக அமைவது மரபு என்று கண்டோம். இப் பாடலின் அமைப்பே காப்பியப் புலவனை இனம் காட்டி விடும்.

வண்ணக் களஞ்சியப் புலவருடைய புலமை, அவருடைய பரந்த மனம், இறைமைப் பொது உணர்வு, பிரபஞ்சம் அனைத்தையும் தன் உள்ள உணர்வுக்குள் காணும் முயற்சி, ஆகியவற்றை எல்லாம் இந்த முதற் பாடலிலேயே நாம் காண்பதால் இது விரிவாக விளக்கம் பெற்றது.

கடவுள் வாழ்த்துப் பாடலில் அடுத்து காணும் இருபாடல்கள்:

ஆரணத்தினில் அகிலாண்ட கோடியில்
ஏர் அணக் கடல் வரையினில் மற்று எங்கும் ஆம்
பூரணப் பொருள் எனப் பொருந்தும் ஓர் முதல்
காரணக் கடவுளைக் கருத்து இருத்துவாம் (1:2)

அணங்கு உறுத்திய பிறப்பு இறப்பும் அன்றியே
இணங்கும் எப்பொருளினும் நிறையும் ஏகனை
குணம் குறிப்பு அரிய கோமானை அன்பினால்
வணங்குவர்க்கு உலகு எலாம் வணக்கம் செய்யுமே

(1:3)

என்பன ஆம்.

இவற்றிற்கு அதிக விளக்கம் தேவை இல்லை. எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருப்பவன் என்பதனையும், அவனே பூரணன் என்பதனையும், காரணக் கடவுளும் அவனே என்றும் கூறி இருப்பதோடு, பிறப்பு, இறப்பு அற்றவன் என்பதனையும், எப்பொருளிலும் நிறைந்த ஏகன் அவனே என்பதனையும், எடுத்துக் கூறி, அவனுடைய கல்யாண குணங்களையோ, குறிப்பையோ கூற இயலாவகை அரியவனான அவனை, அன்புற வணங்குவோர்க்கெலாம் உலகம் எல்லாம் வணக்கம் செலுத்தும் என்றும் கூறி முடிக்கிறார் புலவர்.

# 7. இறை தத்துவக் கருத்துகள்

இராஜநாயகக் காப்பியத்தில் வண்ணக் களஞ்சியப் புலவர் இறைமை பற்றிய கருத்துகளைப் பரவலாக எடுத்துக் காட்டி இருக்கிறார். அவர் முஸ்லிமாக இருந்தது ஒருபுறம் இருக்க, நாம் முன்னர் எடுத்துக் காட்டியபடி, அடிப்படைக் கருத்து, உலகம் தோன்றிய நாளில் இருந்து மக்களுக்கு ஒரே நெறியைத்தான் இறைவன் விதித்து இருக்கிறான்; அந்த இறைவனோ ஏகனாகவும், என்றும் இருப்பவனாகவும், எங்கும் நிறைந்தவன் ஆகவும் உள்ளான், என்பது ஆகும்.

அல்லாஹ் என்பது அறபுச் சொல். இது இறைவனைக் குறிப் பிடும் இடுகுறிப் பெயர். ஆண்பாற் சொல்லோ, பெண்பாற் சொல்லோ அன்று எனினும் நம்முடைய மொழியின் குறைபாடு காரணம் ஆக 'அன் விகுதி' சேர்த்து, ஆண்டவன், இறைவன் என்று எழுவாயாகவும், செய்கிறான், சொல்கிறான் எனப் பயனிலையாகவும் ஆள்கிறோம்.

இவற்றில் இருந்து அல்லாஹ் ஆண்பாலன் என்று எவரும் தவறாக எண்ணிவிடக் கூடாது.

இத்தகைய கருத்துகள் இன்று நாம் காண்கின்ற பல சமயங் களிலும் உள்ளவை தாம். ஆனால் அவைகள் இக்கருத்துகளை ஒரு குறிப்பிட்ட உருவத்தைக் கொண்ட ஆண்பாற் கடவுளரோடோ, அல்லது பெண்பாற் கடவுளரோடோ இணைத்து விடுகின்றன.

எனவேதான் இறைவன், இறைவி என்ற சொல்லாட்சிகள் ஏற்பட்டன. இனி இஸ்லாத்தின்படி இறைமை எத்தகையது, அதாவது இறைவன் எத்தகையவன் என்பதனைக் காணலாம்.

அவன் ஒருவன்; அதாவது, ஏகன். அவன் தனித்தவன்; அதாவது, அவனுக்கு இணை எதுவும் இல்லை. அவன் எல்லாம் வல்லவன்; எனவே துணையோ, உதவியோ, தேவை அற்றவன். அவன் தானாகவே நிலைத்து உள்ளவன்; அதாவது, அவனுக்குக் காரணன் அவனே ஆகும்; அவனைப் படைத்தவன் எவனும் இலன்; அவனுக்குத் தாயும் இல்லை; தந்தையும் இல்லை; அவன் ஆணும் அல்லன்; பெண்ணும் அல்லன்; அவனைப் பெற்றவரும் இல்லை; அவன் யாரையும் பெறவில்லை. அவன் தேவைகள் அற்றவன்; புகழும், துதியும், வணக்கமும், வழிபாடும், எதுவுமே அவனுக்குத் தேவை இல்லை.

ஆனால் அவனுடைய சிருஷ்டியோ தன் நன்மைக்சாக,அவனை வணங்குவதனையும், துதிப்பதனையும் தேவையாக உடையது. அவனே முழுமுதற் காரணன் ஆகையால் அவன் யார்க்கும், எதற்கும் கட்டுப்பட்டு இருக்கவேண்டியதில்லை.

மறுப்பது, ஏற்பது, அன்பு காட்டுவது, சினம் கொள்வது, நற்கூலி அளிப்பது, தண்டனை வழங்குவது, மன்னிப்பது, ஆக்குவது, அழிப்பது, ஆகிய எதிலும் அவன் எந்த நிர்ப்பந்தத்திற்கும் ஆளானவன் அல்லன்.

இவற்றுள் எதனையும் செய்வதும், செய்யாமல் இருப்பதும் அவனுடைய சுய இச்சைக்கும் அதிகாரத்திற்கும் உட்பட்டது. எனினும், அவனுடைய ஒவ்வொரு செயலும் நீதியின் வடிவாகவே திகழ்கிறது. அவன் கருணையின் வள்ளலாக இருக்கின்றான். கருணையையும் இரக்கத்தையும் தனக்குத் தானே கடமை ஆக்கிக் கொண்டு இருக்கின்றான்.

அவன் எல்லாக் குறைகளினின்றும், மாசுகளினின்றும் நீங்கி தூய்மை ஆனவன். அவன் எங்கும் நிறைந்தவன். அவன் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு கணத்திலும் நிறைந்துள்ளான். எவ்வுருவமும் அற்றவன். அவன் எந்த உடலிலும் ஊடுருவிப் புகுவதும் இல்லை.

இந்த உலக வாழ்க்கையை உடைய மனிதன் அவனைத் தன் புறக் கண்களால் பார்த்துவிட முடியாது. அவன் ஆதி, அந்தம் இல்லாதவன்.

இறைவனுடைய இவ்வியல்பினால் அவனுடைய சிருஷ்டியாகிய மனிதன் அவனைத் தவிர வேறு யாரிடத்திலும் தன் தேவைபற்றிப் பிரார்த்திப்பதற்கு இல்லை.

அதிகாரங்கள் அனைத்தும் அவனுக்கே உரியவை. ஆதலால், அவனைத் தவிர வேறு யாராலும் அவன் படைப்புகளின் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலாது.

தன்னையும், தன்னுடைய நெறியையும், தன் படைப்புகளாகிய மக்களிடையே அறிவிப்பதற்கும், போதிப்பதற்கும், அவன் நபிமார்களை அனுப்பிக் கொண்டு இருந்திருக்கிறான். அவன் நபிமார்களை அனுப்பாத மக்கள் பகுதி எதுவுமே இல்லை. அவரவர்க்குப் புரியக் கூடிய மொழிகளிலும் அக்கட்டளைகள் அறிவிக்கப்பட்டு உள்ளன.

இஸ்லாத்தின் இந்த அடிப்படைத் தத்துவத்தைப் புலவர் பொருத்தமான இடங்களில், காப்பியத்தில், உணர்த்திக்கொண்டே செல்கிறார். இறைவனைப் பற்றி அவர் குறிப்பிடும் முறையே இதனை உணர்த்தும். கடவுள் வாழ்த்துப் படலம் முன்னர்க் கண்டோம். பிற படலங்களில் எப்படி எல்லாம் அவனைக் குறிப்பிடுகிறார் என்பதைக் காணலாம்.

வண்ணக்களஞ்சியப் புலவர் இறைவனைக் குறிக்கும் தொடர்கள் சில:

| | |
|---|---|
| அக்ஷயன் (அச்சயன்) (க்ஷயம்-அழிவு) | 32:21 |
| அரியவன் | 18:1 |
| அழியா வாழ்வு | 45:45 |
| அகத்தன் | 33:23 |
| அருமறைப் பொருள் ஆம் ஒருவன் | 31:9 |
| அளவிடாதவன் | 17:102 |
| அளவிலவன் | 5:58 |
| அளவிலாதவன் | 33:22 |
| அளப்பரியவன் | 6:10 |
| அவ்வியம் அணுகான் | 17:102 |
| அழிவிலா றகுமான் | 17:102 |
| அளவற்ற அருள் | 31:57 |
| அவன், இவன், எனப் பூரணம் ஆவன் | 12:19 |
| அரும்பொருள் இறை | 5:22 |
| அருள் மிகுத்து, உயிர் எவை எவையினும் நிறைந்து, அருளும் ஒரு தனிப் பொருள் | 5:16 |
| அகில சராசரம் முழுதும் அமைத்துக் காக்கும் சோதி | 5:56 |

இத்தகைய தொடர்களே அன்றி, முழுப்பாடல்களாகவும் இறைத்தன்மையை அழகாக எடுத்துக் காண்பிப்பார் புலவர். அரசு நிலையிட்ட படலத்தில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வாயிலாக இறைத்தன்மையை நான்கு பாடல்களில் அருமையாக விளக்கு வார்.

துணி மனத்து எவர் நினைப்பதும், மறப்பதும் துயரும்,
தணிவு அற பெரு மகிழ்ச்சியும், வலிமையும் தாழ்வும்
அணி வகுப்பொடு வருமுனம் அறிபவன் அவனை
கணிதம் இட்டு ஒருவரும் அளவிடற்கு அரும் கடவுள்.

அலையையும் திடர் ஆக்குவன் திடர் அலை ஆக்கும்
மலையையும் அணு ஆக்குவன் அணு மலை ஆக்கும்
நிலையை ஈகுவன் கணித்திடற்கு அரு நெடும் காலம்
தொலையையும் நொடிப் பொழுது என செய்குவன் துய்யோன்

கொடுக்கிலோ அறுசு அளவு உயர் வாழ்வையும் கொடுப்பன்
கெடுக்கிலோ நரகத்தினும் கீழ்ப்பட கெடுப்பன்
அடுக்கிலோ அவன் இவன் என பூரணம் ஆவன்
விடுக்கிலோ அவனுக்கு அவனே இணை மேலோன்.

அனந்த ஞானமும், அனந்த லோகமும், அளவு அகன்ற
அனந்த போகமும், அனந்த ஊக்கமும், மறையாத
அனந்த பார்வையும் உள்ளவன் பெயர் கிளை அற்றோன்
அனந்த காலமும் அழிவு இலா இயல்பு உடையவனே.

(12: 17, 18, 19, 20)

(அறுசு—அல்லாஹ்வின் ஆதனம்)

இராஜநாயகக் காப்பியத்தின் 14 ஆம் படலம் நபிப்பட்ட முத்திரை மோதிரம் வந்த படலம் ஆகும்.

இப்படத்துள் சுலைமான் (அலை) அவர்களைத் தம்முடைய நபியாக அல்லாஹ் நியமித்தான், என்ற நற் செய்தியை ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து தெரிவிக்கிறார்கள். அத்துடன் ''சுத்த ஒண்கிரண முத்திரை ஆழி, சுவர்க்கத்தில் உள்ளது; அதை எடுத்து சுலைமான் நபிக்கு அருள்க!'' என்று ஜிப்ரீலுக்கு இறைவன் ஆணையிட்டனன் என்றும், அப்படியே நான்கு மூலை உள்ளதாக

ஒளி மிகுந்த முத்திரை மோதிரம் ஒன்றை சுலைமான் (அலை) அவர்கள் இடத்து ஜிப்ரீல் (அலை) அவர்கள் கொடுத்ததாகப் புலவர் பாடுவார்.

நபித்துவத்திற்கு அடையாளம் ஆக, இப்படி முத்திரை மோதிரம் ஒன்றை சுவர்க்கத்தில் இருந்து எடுத்து வந்து கொடுப்பது என்பதற்கு, இஸ்லாத்தில் எந்த ஆதாரமும் இல்லை. ஆனால் நீண்டநாள் மரபாக இலாஞ்சனை, முத்திரை மோதிரம், நபிமார்களுக்குக் கொடுக்கப்பட்டது என்று பேசப்பெற்றும் எழுதப் பெற்றும் வருகின்றன.

அம்மரபுப் படியே புலவரும் இங்கே பாடுகிறார். இப்படலத்தில் இடம் பெற்றிருக்கும் விருத்தம் ஒன்று நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் கருத்தினைக் கொண்டது:

இயம்பு ஒரு பக்கம் தன்னிலே **லாயி**
**லாக** என்பது முழுது எழுதி
வயங்கு ஒரு பக்கத்தினில் **குல்லுசெய்யின்**
**காலிக்கு** எவையுமே வரிந்து
தயங்கு ஒரு பக்கம் மிசை **சுபுகான**
**மன்லகுல் முல்க்** எலாம் தரித்து
வியன் கொள் ஓர் பால் **ஃபத் தபாறக் கல்லாகு**
அனைத்துமே விளங்குறத் தீட்டி

(14:12)

இப்பாடலின் முதல் அடியில் முத்திரை மோதிரத்தின் ஒரு பக்கத்தில்

"**லாயிலாக** என்பது முழுதும் எழுதி" என்று புலவர் பாடுகிறார்.

இஸ்லாத்தின் மூல மந்திரம் ஆக, கலிமா என்று சொல்லப் படுவது "லாஇலாஹ இல்லல்லாஹு" என்பது ஆகும். முகம்மது நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இருந்து முஸ்லிம்கள் கலிமா என்பது "லா இலாஹ இல்லல்லாஹு;முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்பதாம்.

இதன் பொருள்: வணக்கத்திற்கு உரியவன் வேறு யாரும் இல்லை; அல்லாஹ்வைத் தவிர; முகம்மது (ஸல்) அல்லாஹ்வின் திருத்தூதர் ஆவார்.

'லா' என்ற அறபுச் சொல் இன்மைப் பொருள் தருவது. ஆக, 'லா இலாஹ' என்பது வணக்கத்திற்கு உரியவன் இல்லை என்று ஆகும். ''இல்லல்லாஹு'' என்பதனை அதனுடன் சேர்க்கும் பொழுது "வணக்கத்துக்கு உரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை" என்ற பொருளைத் தரும். 'லா இலாஹ' என்று மட்டுமே கூறினால் இப்பொருள் முழுவதும் துலங்காது என்பதன் காரணம் ஆகத்தான், புலவர் 'லா இலாக' முழுதும் எழுதி என்று பாடுகிறார்.

மற்றொரு பக்கத்தில் **''குல்லு செய்யின் காலிக்கு''** எவையுமே வரிந்து என்று புலவர் பாடுகிறார்.

''குல்லு செய்யின் காலிக்கு'' என்ற அறபுத் தொடர் திருக்குர் ஆன் 28 ஆம் அத்தியாயம் 88ஆம் வசனத்தில் இடம் பெற்றிருக் கிறது. அவ்வசனம் ஆவது:

''(நபியே!) அல்லாஹ் உடன் வேறோர் ஆண்டவனை நீர் அழைக்க வேண்டாம். அவனைத் தவிர வணக்கத்திற்கு உரிய வேறொரு நாயன் (இல்லவே) இல்லை. அவனைத் தவிர சகல பொருள்களும் அழிந்து விடக் கூடியனவே. சகல அதிகாரங்களும் அவனுக்குடையனவே. அவனிடமே நீங்கள் (யாவரும்) கொண்டு வரப்படுவீர்கள்'' (தி. கு. 28:88)

என்பதாகும்.

இவ்விருத்தத்தில் இடம் பெற்று இருக்கும் ''குல்லு செய்யின் காலிக்கு'' என்பது மாத்திரம் ''அவனைத் தவிர சகல பொருள் களும் அழிந்துவிடக் கூடியனவே'' என்பதைக் குறிக்கும். எனினும் 'எவ்வயுமே வரிந்து' எனப் புலவர் குறிப்பிடுவதால் இவ்வசனம் முழுவதும் அம்மோதிரத்தின் ஒரு பக்கத்தில் பொறிக்கப்பட்டிருந்தது என்று கொள்ளலாம்.

முத்திரை மோதிரத்தின் 3ஆம் பக்கத்தில் **''சுபுகான மன்ல குல் முல்க்** எல்லாம் தரித்து'' என்று புலவர் பாடுகிறார். ''சுபு கான மன்லகுல் முல்க்'' என்ற தொடர் திருக்குர்ஆனில் இல்லை.

'சுபுகான' என்ற சொல்லும் 'மன்' என்ற சொல்லும் 'லகுல் முல்க்' என்ற சொல்லும் தனித்தனியாகப் பல இடங்களில் திருக் குர்ஆனில் இடம் பெற்றிருக்கின்றன.

'சுபுகான' என்ற சொல்லுக்குத் 'தூய்மையாளன்' என்று பொருள். 'லகுல் முல்க்' என்ற சொல்லுக்கு 'ஆட்சி அனைத்தும் உள்ளவன்' என்று பொருள்.

இவை இரண்டனையும் 'மன்' என்ற சொல் இணைக்கிறது.

'மன்' என்ற சொல்லுக்கு 'யார்' என்று பொருள். ஆனால் வினாப் பெயரில் அன்று. Reflexive Pronoun என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே அப்பொருளில்தான், 'மன்' என்றசொல் அறபியில் பொருள்படும்.

அது போலவே 'அல்லதீ' என்ற அறபுச் சொல்லும் இப் பொருளையே தரும். எனவே 'சுபுகான மன் லகுல் முல்க்' என்ற சொற்றொடர்க்கு 'ஆட்சி அனைத்தும் யாரிடம் உள்ளதோ அவன் தூய்மையாளன்' என்று பொருள்.

சுபுகானல்லதீ என்ற சொற்றொடர் திருக்குர்ஆனில் 17:1, 36:36, 36:83, 43:13 ஆகியஇடங்களில் வந்திருப்பதைக் காணலாம்.

'லகுல் முல்க்' என்ற சொற்றொடர் இடம் பெற்றிருக்கும் திருக்குர்ஆ வசனங்களாவன 35:13, 39:6 என்பன ஆகும்.

நான்காம் அடியில் '.:.பத்தபாறக்கல்லாகு அனைத்துமே விளங்குறத் திட்டி' என்பார் புலவர்.

'ஃபத்தபாறக்கல்லாகு' என்ற தொடர் திருக்குர்ஆனில் இரண்டு இடங்களில் இடம் பெற்றிருக்கின்றது.

ஒன்று, 23ஆம் அத்தியாயம் 14 ஆம் வசனம். இரண்டு, 40 ஆவது அத்தியாயம் 64 ஆம் வசனம்.

முதல் வசனம் ஆவது.

"பின்னர் அந்த இந்திரியத் துளியை இரத்தக் கட்டி ஆக்கினோம்; பின்னர் அந்த இரத்தக் கட்டியை ஒரு தசைப் பிண்டமாக ஆக்கினோம்; பின்னர் அத்தசைப் பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்; பின்னர் அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவித்தோம்; பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக (மனிதனாகச்) செய்தோம். (இவ்வாறு படைத்தவனான) அல்லாஹ் பெரும் பாக்கியம் உடையவன். (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன்." (தி.கு. 23:14)

இத்திரு வசனத்தின் கடைசிப்பகுதியில்தான் இத்தொடர் இடம் பெறுகிறது. இதனுடைய பொருள் "அல்லாஹ் பெரும் பாக்கியம் உடையவன்" என்பதாகும்.

ஆனால் இவ்வசனத்திலோ (23:14ல்) ஃபத்தபாறக் கல்லாகு என்ற தொடர்க்கு அடுத்து, முடிவாக "அஹ்ஸனுல் காலிகீன்" என்ற தொடர் இடம் பெற்றிருக்கிறது.

ஆகவேதான் (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன் என்று இறுதியில் வருகிறது.

40ஆவது அத்தியாயம் 64 ஆவது திரு வசனத்தில் இத்தொடர் இறுதிப் பகுதியில் இடம் பெற்றிருக்கிறது.

அங்கும் இத்தொடர்அடுத்து, வசனத்தின் இறுதியாக "ரப்புல் ஆலமீன்" என்றதொடர் இடம் பெற்றிருக்கிறது. இதன் பொருள், பிரபஞ்சங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து பக்குவப்படுத்தி ஆள்பவன் என்பதாகும். எனவே இவ்விரண்டும் சேரும் பொழுது "பிரபஞ்சங்கள் அனைத்துக்கும் இறைவன் ஆகிய அல்லாஹ் பெரும்பாக்கியம் உடையவன்" என்று பொருள்படும்.

இதனைத்தான்புலவர், "ஃபத்தபாறக் கல்லாகு அனைத்துமே விளங்குறத் தீட்டி" என்று பாடி இருக்கிறார்.

இவ்விருத்தத்தை இவ்வாறு காண்பவர்களுக்கு ஓர் ஐயம் தோன்றக்கூடும். இதில் இடம் பெற்றிருப்பவை முகம்மது நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகில் தோன்றிய பிறகு அவர்கள் வாயிலாக அருளப் பெற்ற திருக்குர் ஆனின் வசனங்களும், அவர்கள் வாக்கு களாகவுமே இருக்கின்றனவே, சுலைமான் நபி அவர்கள் நபிகள் (ஸல்) அவர்கள் காலத்திற்கு முந்தையவர் ஆயிற்றே, அப்படி இருக்க அந்த சுலைமான் நபி அவர்களுக்கு வந்த முத்திரை மோதிரத்தில் இவை எப்படி இடம் பெற்றிருக்க முடியும் என்பது தான் அது.

இந்த ஐயத்தை இரண்டு விதமாக அணுகலாம். இவ்வாறு நபித்துவத்திற்கு அடையாளமாக முத்திரை மோதிரம் ஒன்று வந்தது என்று கூறுவது நீண்டகால மரபு என்று கண்டோம்.

புலவரோ 18,அன்றி19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். எனவே அவர் அம்மோதிரம் பற்றிப் பாடும் பொழுது, திருக்குர்ஆன் வசனங்களும், நபி பெருமானாரின் வாக்குகளும் முத்திரை தன்னுள் பதிக்கப் பெற்றிருந்தன எனப் பாடுகிறார் என்பது ஓர் அணுகு முறை.

மற்றொரு அணுகுமுறை யாது எனின் லவ்ஹுல்-மஹ்பூல் என்ற பாதுகாக்கப்பட்ட பலகை ஒன்று சுவனத்தில் இருக்கிறது; அதில் திருக்குர்ஆன் ஆதியில் இருந்தே எழுதப் பெற்றிருக்கின்றது; பின்னர் முகம்மது நபி (ஸல்) அவர்கள் தோன்றிய பிறகு அவர் களுக்கு இது அருளப் பெற்றது என்பதாகும்.

இப்படிப் பார்க்கும் பொழுது திருக்குர்ஆன் சுலைமான் நபி யவர்கள் காலத்திலும், அதன் முன்னரும் இருந்தது எனக் கொள்ள வேண்டி வரும்.

இம்முத்திரை மோதிரம் வந்ததன் தொடர்ச்சியாகப் புலவர் பெருமான் வேறொரு சிறந்த கருத்தையும் எடுத்து விளக்கி இருக் கிறார்.

இம்மோதிரம் கண்டவர் அனைவரும், அதில் எழுதி இருப்பது அல்லாஹ்வின் குதறத்தால் (சர்வ வல்லமையால்) எழுதப்பட்டது என்பதனை உணர்ந்தனர். அம்மோதிரம், பார்த்தவர்கள் கண் ஒளியினைப் பறித்துப் புதிய நல்ஒளியையும், முகத்தினில் தெளிவை யும் தோன்றச் செய்தது. இதனை ஆய்ந்து அகம் மகிழ்ந்த சுலை மான் (நபி) அவர்கள்

மேவி இப்பரிசில் அனைவரும் இருப்ப
வியன் உள மின்பறில் ஏறி
யே பிசு மில்லா கிற்றகு மானிற்
றகீம் என இனிது உற இசைத்தார்
நா உரை செவியில் புகுதலும் அளவு
இலாத ஆனந்தமே பெருகி
ஓவியம் நிகர்த்து அங்கு அசைந்திலாது
இருந்தார் உளம் எலாம் நபி பதத்து உறைய.

(14:16)

முஸ்லிம்கள் சம்பந்தப்பட்ட வரையில் இரண்டனை யாரும் காணமுடியும்

முதலாவது: எக்காரியத்தைச் செய்யத் தொடங்கினாலும் “அளவற்ற அருளாளனும், நிகர் அற்ற அன்பு உடையோனும் ஆகிய அல்லாஹ்வின் திரு நாமத்தின் துணை கொண்டு” என்று தான் தொடங்குவார்கள். மேற்சுட்டிய விருத்தத்தில் இடம் பெற்றிருக்கும் அறபி வசனத்திற்கு இதுதான் பொருள். இப்படித் தொடங்குவதன் நோக்கமே,சகலசக்தியும் இறைவனைச்சார்ந்தது, அவனுக்கு அப்பாற்பட்டது எதுவும் இல்லை; எனவே அவனுடைய அருளும் ஆசியும் இன்றி எதுவும் நடைபெறாது என்பதுதான்.

சிற்சில சமயங்களில் இவ்வசனத்தை முழுமையாகக் கூறாமல் ''பிஸ்மில்லாஹி'' என்று மட்டுமே கூறித் தொடங்குவர்.

இப்படித் தொடங்குவதிலும் தவறு இல்லை. இவ்வசனத்தில் ''அல்லாஹ், அர்-ரஹ்மான், அர்-ரஹீம்'' என்று மூன்று சொற்கள் இருப்பதனைக் காணலாம்.

அல்லாஹ் என்பது அறபி மொழியில் இறைவனைக் குறிக்கும் இடுகுறிப் பெயராகும் என்பதனை முன்னர்க் கண்டோம். அடுத்த இரண்டும் இறைவனைக் காரணப் பெயர்களாகக் குறிக்கின்றன (அர்-ரஹ்மான்-அருளாளன்).

இடுகுறிப் பெயர் ஒன்றும் காரணப் பெயர் ஒன்றும் ஒரே பொருளைச் சுட்டுமாயின், இடுகுறிப்பெயர் உணர்த்தும் பொருளே மூலப்பொருள் (அல்லது) வேர்ப் பொருள் ஆகும். இல்லை என்றால் காரணப் பெயர் சுட்டுவது வேறு ஒரு பொருளை என்று ஆகிவிடும்.

எனவே, காரணப் பெயராக இரண்டனையும் சேர்த்துக் கூறாமல் மூலப்பொருளை (அல்லது) வேர்ப் பொருளையே குறிக்கும் இடுகுறிப் பெயரை மாத்திரம் கூறுவது தவறு ஆகாது.

பின்னால் நாம் இன்னமும் பார்க்கப் போகின்றோம்: மற்றும் பல காரணப் பெயர்கள் உள என்பதனை. அவை அனைத்தும் இறைவனுடைய பண்புகளையும் குணங்களையும் விளக்குவதற்கு ஆக அமைந்தனவே.

இவ்வாறு பல பெயர்கள் இருப்பதன் காரணம் ஆக ''பிஸ்மில் லாஹி'' என்று சொல்வதே வழக்கிலே போதுமானதாகக் கருதப் படுகிறது.

''இஸ்மு''என்ற அறபுச்சொல்லுக்குப் 'பெயர்' என்றுபொருள்.

இரண்டாவது: எதிர்காலத்தில் தாம் சொல்ல எண்ணு வதனையோ, செய்ய விரும்புவதையோ கூறும் பொழுது ''இன்ஷா அல்லாஹ்'' என்று சேர்த்துச் சொல்வது. இத் தொடரின் பொருள், ''அல்லாஹ் நாடினால்'' என்பதாகும்.

இதன் நோக்கமும், முதலதன் நோக்கம் போன்றதே; முதலது நிகழ்காலத்தோடு சேர்க்கப் பெற, இது எதிர்காலத்தோடு சேர்க்கப்பெறும்.

எல்லா வல்லமைகளையும் உடைய அல்லாஹ்வின் நாட்டம் என்ன என்பது நமக்குத் தெரியாமையால் 'அவன் நாடினால், இதனைச் சொல்லலாம், செய்யலாம்' என்று கூறுவது பொருத்தம் ஆகும்.

இதன் அடிப்படையிலேயே நபித்துவம் தனக்குக் கிடைத்த உடனும், அதற்கு அறிகுறியாக முத்திரை மோதிரத்தைப் பெற்ற உடனும், சுலைமான் நபி அவர்கள் ''மின்பறு'' தனில் ஏறி இப்படி

''பிஸ்மில்லாகிற்றகுமானிற் றகீம்'' என இசைத்தார்கள்,

[மின்பறு-ஏறி நின்று பிரசங்கம் பண்ணுவதற்காக (பொதுவாகத் தொழுகை நடத்தும் இடத்திற்கு அணியதாகப்) பள்ளி வாசலில் அமைக்கப்பட்டுள்ள சிறுமேடை]

இப்படிச் சுலைமான் நபி அவர்கள் இசைத்த உடன் குழுமி இருந்தவர்களை அது எப்படிப் பாதித்தது என்பதனைக் கவிதை நயம் சொட்டப் புலவர், ''அளவிலாத ஆனந்தமே பெருகி ஓவியம் நிகர்த்து அங்கு அசைந்திலாது இருந்தார்'' என்பார்.

இப்படி ''பிஸ்மியை'' சுலைமான் நபி அவர்கள் சொன்னதை நபிகள் பெருமானாருடைய வாக்கு ஒன்றனோடு இணைப்பதற்காகப் புலவர்

துவக்கிஇவ் **விசுமி லாதி** யில் விளங்கச்
சொல்லியது இவரை அல்லாமல்
உவர்க் கடல் உடுத்த புவித் தலத்தினிலே
உதித்த நல் நபிகளில் எவரும்
நலம்பட உரைத்தது இலை இதன் பெருமை
நவில் அப்துல் காதிர் நெஞ்சு உறையும்
தவப்பொருள் அனைய முகம்மது
நயினார் சாற்றிய திருமொழி கேண்மின்

என்பார். (14:18)

அடுத்த விருத்தத்தில் தான், இதனுடைய விளக்கமாகவும், இஸ்லாத்தின் அடிப்படைக் கருத்துகளில் ஒன்றாகவும் இருப்பதனைப் புலவர் குறிப்பிடுகிறார்.

ஆதி சொல் சுகுஃபு **நூறு** மும்மறையில்
அடங்கியது. அந்த **மும்மறை**கள்
ஏதமில் **குறுஆன்** என்பதில் அடங்கி
இருப்பது. இவ்வகைக் குறுஆனும்

கோது அகல் **பாத்திகா** வினில் அடக்கம்
கொண்டது. பாத்திகா முழுதும்
ஓதிய **பிசுமிலி** னில் நிறைந்து அடங்கி
உறைவது என்றனர், வரன் முறையே.

(14:19)

இவ்விருத்தத்தில் முதலடியில் நூறு சுகுபு என்ற சொல்லும் மும்மறை என்ற சொல்லும் இடம் பெறுவதனைக் காண்கின்றோம்.

இரண்டாம் அடியில் குறுஆன் என்ற சொல் காணப்படுகிறது. மூன்றாம் அடியில் பாத்திகா என்ற சொல் இடம் பெறுகிறது. நான்காம் அடியில் பிசுமில் என்ற சொல் காணப்பெறுகிறது.

முதலடியில் இடம் பெற்று இருக்கும் சுகுபு என்ற சொல்லின் 'பு' என்ற எழுத்து ஆங்கில F ஒலிக்குறிப்பு உடையது.

அறபியில் சுகுஃபு என்ற சொல்லுக்கு இறைக்கட்டளை என்று பொருள்.

விவிலியத்தில் TEN COMMANDMENTS என்ற தொடரில் இடம் பெற்றிருக்கும் COMMANDMENT ஐயே இச் சொல் (சுகுஃபு) குறிக்கிறது.

உலகில் தோன்றிய நபிமார்களுக்கு, இறைவன், மக்களுக்கு நல் வழி காட்டுவதற்காக, நன்மாறாயத்தையும் தன் கட்டளைகளையும் அவ்வப்பொழுது அருளி இருக்கிறான் என்பதை, முன்னரே கண்டு இருக்கிறோம்.

இத்தகையவற்றுள் ஒன்றுதான் சுகுஃபு என்பது. இச் சுகுஃபு எத்தனை என்பதிலும், எவ்வெந்நபிமார்க்கு எத்தனை சுகுஃபுகள் இறைவனால் அருளப்பெற்றன என்பதிலும் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு.

உமறுப் புலவர் தம்முடைய சீறாப்புராணத்தில் 'சீது' நபிக்கு ஐம்பது இறைக்கட்டளைகளும் 'இதிரீசு' நபிக்கு முப்பது இறைக் கட்டளைகளும் அருளப் பெற்றன என்று கூறுகிறார் (சீறாப் புறாணம்-தலைமுறைப் படலம் 37, 42).

இபுறாஹீம் நபி அவர்களுக்குப் பத்து இறைக் கட்டளைகள் அருளப் பெற்றன (இஸ்லாமிய கலைக் களஞ்சியம் (2)—அப்துற் றஹீம்—ப. 29)

மூஸா நபி அவர்களுக்கு அருளப் பெற்றவை பத்து இறைக் கட்டளைகளும் தௌராத் வேதமும் ஆகும். [இஸ்லாமிய கலைக் களஞ்சியம் (3)—ப. 769]

திருக்குர்ஆனின் 87 ஆம் அத்தியாயம் 19 ஆம் வசனத்தில் இபுறாஹீம் நபியும், மூஸா நபியும்(இருவரையும்)ஒன்று சேர்த்து இந்த சுஃபு என்ற சொல் இடம் பெற்றிருக்கிறது.

அவ்வசனம் தமிழில் ''இபுறாஹீம், மூஸா உடைய ஆகமங் களிலும் இருக்கின்றது'' என்று மொழி பெயர்க்கப்பட்டு உள்ளது.

இப்படி இரு நபிமார்கள் பெயர்களும் ஒன்றாக இவ்வசனத் தில் இடம் பெறுவதால் இருவர்க்கும் சுஃபுகள் அருளப்பெற்றன; ஒவ்வொருவர்க்கும் பத்து வீதம் இருபது ஆகும் எனக் கொள்ள இடம் இருக்கிறது.

இதன் படி சுஃபுகள் நூறு என்ற கணக்கு கிடைத்து விடு கிறது.

ஆனால், முதல் மனிதன் ஆகவும் முதல் நபியாவும் இருந்த ஆதம் (நபி) அவர்களுக்கு எந்த இறைக்கட்டளையும் இல்லை என்று ஆகிவிடும்.

ஆதம் (அலை) அவர்களுக்கும் பத்து இறைக் கட்டளைகள் அருளப் பெற்றன என்று கூறி, மொத்தம் 110 சுஃபுகள் என் பாரும் உளர்.

ஆனால், இங்கு எண்ணிக்கை பிரதானம் அன்று; இறைவன் தன்னுடைய எல்லா நபிமார்களுக்கும் தன் நன்மாராயங்களை அருளி இருக்கிறான் என்பது தான் முக்கியம் ஆனது.

இறைவன் தன்னுடைய நபிமார்களுக்கு அருளிய வேதங்களில் பிரபல்யமானவை நான்கு.

அவையாவன :

மூஸா நபி அவர்களுக்கு அருளிய தௌராத்; தாவூத் (அலை) அவர்களுக்கு அருளிய ஜபூர்; ஈஸா நபி அவர்களுக்கு அருளிய இன் ஜீல்; முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு அருளிய திருக்குர் ஆன் என்பன, என முன்னர்க் கண்டோம்.

இவற்றுள் முதன் மூன்றையும் தான் இவ்விருத்தத்தின் முத லடியில் 'மும்மறை' எனப்புலவர் குறிக்கிறார்.

நான்காவது ஆன திருக்குர்ஆன் தனியாக பெயரிடப் பெற்றே இரண்டாம் அடியில் குறிப்பிடப் பெறுகிறது. எனவே,

இவ்விரண்டு அடிகளின் கருத்து என்ன என்றால், சுஹுஃபுகள் என்று இறைவன் அருளிய இறைக்கட்டளைகள், தௌராத், ஜபூர், இன்ஜீல் என்ற மூன்று வேதங்களிலும் அடங்கிவிடுகின்றன. அம்மூன்று வேதங்களும் திருக்குர்ஆனில் அடங்கிவிடுகின்றன என்பதாம்.

ஈற்றிரு அடிகள் (திருக்குர்ஆன் அருளப் பெற்றபின்) நபிகள் நாயகத்தினுடைய வசனத்தை விளக்குகின்றன.

திருக்குர்ஆன் உடைய முதல் அத்தியாயத்திற்கு "சூறத் அல் ஃபாத்திஹா" என்று பெயர்.

(சூறத்—அத்தியாயம்; திருக்குர் ஆனின் அத்தியாயம்)

"சூறத் அல்ஃபாத்திஹா" என்றால் 'தோற்றுவாய் ஆன அத்தியாயம்' என்று பொருள்.

பெரும்பாலும் பாத்திஹா ஓதுதல் என்று முஸ்லிம்களிடையே வழங்குவது இவ்வத்தியாயத்தினை ஓதுவதைக் குறிப்பது ஆகும்.

"பிசுமில்லா கிற்றகுமானிற் றகீம்" என்பது அல்லாமல் ஏழு வாக்கியங்கள் இப்பாத்திஹாவில் உள்ளன.

அவை

1. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே.(அவன்)அகிலங்கள் அனைத்தையும் படைத்து, போஷித்து, பரிபக்குவப் படுத்துவோன்.
2. அளவற்ற அருளாளன்; நிகரற்ற அன்புடையோன்.
3. தீர்ப்பு நாளின் அதிபதியும் ஆவான்.
4. (அருளும் அன்பும் உடைய எங்கள் இறைவனே!) உன்னையே நாங்கள் வணங்குகிறோம்; உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்.
5. நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக.
6. எவர்களுக்கு நீ அருள் புரிந்தாயோ, அவர்கள் உடைய வழியில் (நடத்துவாயாக).
7. (அவ்வழி, உன்) கோபத்துக்கு உள்ளானவர்களுடையதும் அல்ல; வழி தவறியவர்களுடையதும் அல்ல.

என்பன.

இவ்வேழு வசனங்களும் திருக்குர்ஆனின் மற்ற பகுதிகளின் சாரமாக அமைந்து இருக்கின்றன. இதன் காரணமாகவே

இதற்கு அஸஸுல் குர்ஆன் (குர்ஆனின் அடித்தலம்) என்ற பெயரும் உண்டு. எனவே தான் இந்த அத்தியாயம் முஸ்லிம் களின் தொழுகையின் ஒவ்வொரு றக்கஅத்திலும் கட்டாயமாக ஓதப்பட வேண்டியது ஆகிறது.

பாத்திஹா இல்லாத தொழுகை இல்லை என்பது நபிகள் பெருமானாரின் வாக்கு. இவ்வத்தியாயத்தின் மற்றொரு சிறப்பு என்ன என்றால் திருக்குர் ஆனின் தொகுப்பில் மற்ற சிறு அத்தியாயங்கள் எல்லாம் இறுதியில் அமைய, இது திருக்குர்ஆனின் தோற்று வாயாகத் தலைமை கொண்டது ஆகும்.

உண்மையில் திருக்குர்ஆனின் சாரமாக இது இருப்பதால் தான் முதல் அத்தியாயமாக, அத்திருமறையில் இடம் பெற்றிருக் கிறது.

இவ்வத்தியாயத்தை ஓதி முடித்ததும் ''ஆமீன்'' என்று கூறு மாறு ஜிப்ரீல் (அலை) அவர்கள் தம்மிடம் இயம்பியதாக நபிகள் பெருமானார் அருளி இருக்கிறார்கள்.

இக்குறிப்பையும் (பாத்திகா ஓதி ஆமீன் என முடித்தல்) புலவர், ''பறவை, விலங்கினம் வசப்படு படலத்தில்'' எடுத்துக் காட்டி, நிதான அரசாட்சி நிகழ்த்தி இலகு நாளினில் சுலைமான் (அலை)அவர்கள் எந்நாட்குமே துலகும் ஆதிஇறையிடம், ''பறவை யாவும் ஒழுகு இயல்பு வாய்மை கேட்கவும், அவை பலவும் மேவவும் உன் அருள் செய்வாய்'' என துஆ செய்தார், என்பார் புலவர்.

சுலைமான் (அலை) அவர்களது துஆவுக்கு இறைவன் இரங் கினான். ஏகன் ''அம்புவியின் மீது வாழ் புட்குலம் அனைத்தையும் என் அன்பு நபிபால் விரைந்து கொண்டு போய் விடுக நீயிர்'' என்று ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கும், புயலை ஏவும் மீக்காயீல் (அலை) அவர்களுக்கும் ஏவலிட்டான்.

அவர்களும் அப்படியே பறவைகளுக்கு உத்திரவிட்டனர்.

அவைகளும் சுலைமான் (அலை) அவர்கள் முன் திரண்டன. அவற்றில் அன்னமும் ஒன்று.

அது அல்லாஹ் அருள் பெற்ற சுலைமான் (அலை) அவர்கள் பாதம் பொருந்தி, பணிந்து தன் வரலாறு கூறியது.

''ஐயா! நான் ஆதம் நபியை அறிவேன். அந்தம் மேவிய அவரடி பணிந்து வாழ்ந்த காலத்தில் ஒரு நாள் அவர், எனை அழைத்து நீ இருநிலத்தில் எல்லா வளங்களும் பெற்று வாழ்வாய் என்று கூறினார்.

மேலும் அவர், 'என் மரபில் ஒருவர் பிற்காலத்தில் தோன்று வார் அவர் சொற்படி ஜின், நரர், ஊர்வன, பறப்பனயாவும் நடக்கும். வாயுவும் அவரை வணங்கி பணி செய்யும்.

அக்காலம் நெடுக நீயும் வாழ்வாய். அவர் காணில் அவர்க்கு என் சலாம் இயம்பு' என்றார்'' என்றது.

மேலும் அவ்வன்னம் என்ன சொல்லியது, என்ன செய்தது என்பதனைப் புலவர்,

உணரும் சூறத்[1] ஒன்று எனது இடத்து உளது அதை ஓதில்
இணை இலா பறக்கத்து[2] வாழ்வு அனந்தமும் எய்தும்
அணியது ஆகும் அவ் ஆயத்தும் செவிப்படும் ஆயின்
தணி வுறா அதிசயம் மிக அகத்தினில் சாரும்.

''மருக் கொளும் புயத்தீர் சொலவோ?'' என வகுக்க
அருள் கண் காட்டினர் அதன் பொருள் சொல் அலங்காரம்
விரிக்க முற்றினும் பாத்திகா ஓதி ஆமீனைத்
தரிக்க நீட்டி விண்டு ஆதியைச் சுசூது செய்ததுவே

(17:20, 21)

என்று பாடுவார்.

இவ்விருத்தங்களின் ஈற்றினில் காண்பது தான்
''பாத்திகா ஓதி ஆமீனைத் தரிக்க நீட்டல்'' என்பது.

இன்றும்கூட கூட்டுத் தொழுகையின் பொழுது, தொழு கைக்குத் தலைமை வகித்து நடத்தும் இமாம், பாத்திஹா ஓதி முடித்த உடன், பின் நின்று தொழுபவர்கள் 'ஷாபி' 'மதஹபை'ச் சேர்ந்தவர்கள் ஆமீன் என்ற சொல்லைச் சற்று உரத்தும், நீட்டி யும் சொல்வர்.

இதனைத் தான் புலவர் பாடலில் குறிப்பிடுகிறார்.

'நபிப்பட்ட முத்திரை மோதிரம் வந்த படலப்' பாடலை (19) நாம் மீட்டும் காண்போம்.

திருக்குர்ஆன் பாத்திஹாவில் அடங்கியது என்று சொன்ன அவ்விருத்தம் பாத்திஹா முழுவதும் 'ஓதிய பிசுமிலினில்' நிறைந்து அடங்கி உறைவது என்றும் கூறுகிறது.

பிஸ்மி என்றால் என்ன? என்பதனையும், அதில் உறையும் தத்துவத்தையும் நாம் ஓரளவு பார்த்துவிட்டோம். ஆகையால் இப்படிப் பாத்திஹா, பிஸ்மிலில் அடக்கம் என்பதன் பொருத் தத்தை நம்மால் உணர முடிகிறது.

---

(1. சூறத்-அத்தியாயம்; 2. பறக்கத்து-வளம்; பேறு.)

மூலமும், முடிவும் அல்லாஹ் ஆக இருக்கும்பொழுது, அவனை அன்றி எதுவுமே இல்லை என்று இருக்கும் பொழுது, வேறு எது சொல்வதாயினும் இந்த அடித்தளத்தின் மேல்தான் அமையும்.

இங்கு இவ்விருத்தத்தின் ஈற்றில் புலவர் ஒரு சிறப்பையும் காட்டி விடுகிறார்.

''பாத்திகா முழுவதும் பிசுமிலினில் நிறைந்து அடங்கி உறைகிறது'' என்று சொல்வதன் மூலம் கருத்துக்கு ஓர் அழுத்தத்தையும் செறிவையும் கொடுத்து விடுகிறார்.

இந்த பிஸ்மிக்கு இக்காப்பியத்தின் பின் அணியில் ஒரு தனிச் சிறப்பும் இருக்கிறது.

திருக்குர்ஆனில் 114 அத்தியாயங்களும் 6666 வசனங்களும் உள்ளன என்பதனை முன்னர்க் கண்டோம். இந்த 114 அத்தியாயங்களில் 9ஆம் அத்தியாயம் தவிர 113 அத்தியாயங்களும் ''பிஸ்மில்லாகிற் றகுமானிற் றகீம்'' என்றே தொடங்குகின்றன.

ஆனால், ஒரே ஒரு இடத்தில்தான், அது ஒரு அத்தியாயத்தின் பகுதியாக அமைகின்றது. அதுதான் 27ஆம் அத்தியாயம் 30ஆவது திருவசனம் ஆகும்.

அவ்வசனம் ஸபா (சபபு) ராணிக்கு (பல்கீசுக்கு) சுலைமான் (அலை) அவர்கள் அனுப்பிய பத்திரத்தின் தோற்றுவாய் ஆகும்.

இவ்வாறு, ''பிஸ்மில்லாகிற் றகுமானிற் றகீம்'' என்ற தொடர்க்குச் 'சுலைமான்' (அலை), பல்கீசு தொடர்பின்பின் அணியில் உள்ள இந்த முக்கியத்துவத்தைப் புலவர் எடுத்துக் காட்டி விடுகிறார்.

குதுகுது எமன் நாட்டையும், அரசி பல்கீசையும் கண்ட செய்தி எல்லாம் கூறக் கேட்ட பிறகு, சுலைமான் (அலை) அவர்கள் என்ன செய்தார் என்பதை மிக்க அழகாகவும் அருமையாகவும்,

உதகத்தை உதவி இறைஞ்சியது எழுந்து ஓர்
உயர்தலத்து இருந்து ஒலு செய்து
குதறத்து உள்ளவனை, ஆதி நாயகனை,
குறையில் அந்தவனை, ஆள்பவனை,

இதபுத்தி உடையோர்க்கு எவையும் ஈபவனை,
இணை இலாதவனை, எம் கோனை,
நிதம் உற்ற பொருளை, அளவு அற்ற அருளை,
நெஞ்சினில் உருகியே தொழுதார்.

தொழுதபின் பிசுமில் முழுதுமே வரைந்து
சுலையுமான் நபி பல்கீசு என்னும்
செழுமுடி அரசுக்கு எழுது வாசகம் உள்
தெளிந்து நேர் வழி தொடர் பவர்க்கு எம்
பழுது அறு சலாம் எய்துக, எமக்கு உயர்ந்த
பார்த்திபர் இல்லை ஆதலினால்
வழுவற நமக்கும் ஆதிக்கும் வழியாய்
வர இசுலாத்தில் என்று எழுதி.

குபிர்நிலை அகற்றி தவம்நிலை கலிமா
கூறி எக்காலமும் அழியா(த)
சுபம் உயர் சுவன வாழ்வு பெற்றிடுக;
துணிந்து நம்மிடத்து அடைந்திடுகில்
உபையம் அற்று உறைவோன் அருள் கிபுலாவாம்
பைத்துல் முக்கத்திசில் உறைவோம்
அபையம் உற்று அவணில் வருக என வரிந்து
மடித்து அதன் மேல்வரி தீட்டி

கரத்தின் மோதிர முத்திரை பதித்து ஒரு பத்
திரம் கருங்கால், நெடுங் கூர்வாய்
இரத்தின மணிப்பொற்பு உறை சிறை விரித்துச்
சுருக்கு நீடு எழில் சிகை படைத்து
தெரித்து முக் காலத்து இயல்புகள் உணர்தந்
திர(ம்)நிறை குதுகுதை கூவி
விருப்புடன் அளித்து மணிமுடி புனைந்த
வேத நாயகம் இவை விளம்பும்.

(31:57,58,59,60)

என்று பாடுவார்.

(ஒலு-தொழுகை போன்ற புனித காரியங்கள் நிறைவேற்றப் படும் முன்னர் கை, முகம், கால் முதலியவற்றைக் கழுவுதல்; கிபுலா-தொழும்பொழுது சிறப்பாக எதிர் நோக்கவேண்டிய இடம் (திசை). இபபொழுது முஸ்லிம்கள் மக்காவில் உள்ள

கஃபாவை நோக்கித் தொழுகிறார்கள். நபிகள் பெருமானாரின் பிரச்சாரத் தொடக்கத்தில் பைத்துல் முக்கத்திசு என்னும் ஜெரு சலத்தை நோக்கித்தான் முதலில் அவர்கள் தொழுதார்கள். பிறகு இறை ஆணைக்கு ஏற்ப மக்காவில் உள்ள கஃபா நோக்கித் தொழத் தொடங்கினார்கள்.

அன்றிலிருந்து இன்று வரை உலகில் உள்ள எல்லா முஸ்லிம் களும் அப்படியே செய்கிறார்கள்)

ஏக இறைவனுடைய வல்லமையை வேறு ஒரு கோணத்தில் இருந்தும் புலவர் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

சுலைமான் (அலை) அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைத்தபிறகு இறைவனுடைய ஆணைக்கு இயைய விண் தலத்தவர்க்கரசு ஜிப்ரீல் விரைந்து மண்டலம் புக்கு

''வரையில், வாரியில், ஊர்களில், வனங்களில், ஓடைக்
கரையில், மற்றுள தலங்களில் உறையும் ஜின் கணங்காள்
நிரையும் பூத, பசாசுகாள் நீர் எலாம் நீதி
புரியும் நாயகர் சுலையுமான் நபியிடம் புகுமின்'' (15:3)

என்று இசைத்தார்.

ஜின் என்ற படைப்பினைப் பற்றி திருமறையில் குறிப்பிடப் பெறுவதையும், அதற்கு எவ்வகையில் பிறர் விளக்கம் தந்தனர் எனவும் முன்னர்க் கண்டோம்.

இங்கோ புலவர் ஜின்களோடு பூதங்களையும், பசாசுகளையும் சேர்த்து விடுகிறார். இதுவும் இந்நாட்டு வழக்கமே அன்றி இஸ்லாத்தில் இடம் பெறாதது.

இவை அனைத்தும் சுலைமான் (அலை) அவர்களுக்கு அடிமைப்பட்டன போல் அவர் ஆணைக்குக் கட்டுப்பட்டுப் பணி செய்தன.

இத்தகைய பேரதிகாரமும் பேராட்சியும் அவர்க்குக் கிட்டவே ஆணவம் உண்டாயிற்று.

அவ்வாணவ மிகையால் இறைவனுடைய படைப்புகட்குப் படி அளக்கும் பொறுப்பைத் தமக்குத் தருமாறு கேட்டார். அதன் பலன் யாதாயிற்று, என்பதனைப் 'படி அளந்து ஏலாப் படலம், தன்னுள் புலவர் விரித்து உரைக்கின்றார்.

இப்படி விளக்குவதன் மூலம் சர்வ வல்லமையும் இறைவனையே சேர்ந்தது; மனிதனுக்கு என எதுவுமே இல்லை; ஆணவம் காரணம் ஆக தனக்கு ஏதாவது வல்லமை இருக்கிறது என எண்ணினும் சரி, அத்தகைய வல்லமையை இறைவனிடமே வேண்டிப் பெற்று, தான் செயல்பட முனைந்தாலும் சரி, தோற்று அவமானப்படவே நேரிடும். இதனை இப்படலத்தில் இடம் பெற்றிருக்கும்,

''மிக ஒளிர் சுவன தலத்தினில்[1] இறையோன்
விலகிய கோதும்பைக் கனியை[2]
அகம் அதிற் குறியாது உவப்பினால் அருந்தி
அரும்பிழை செய்தவர்[3] மகவே!
பகரும் இப்பொழுது முதலவன் விரித்துப்
பரிவுற உரைத்த சொல் தவறி
சகல பல் உயிர்க்கும்படி இட துணிந்து
கதா[4] செய்தீர் சாற்றுதல் கேண்மின். (16:45)

''பிறந்த நாள் தொடுத்து இந்நாள் வரையினும் யான்
பெறும் இரையினில் சிறிதேனும்
குறைந்திட கொடுத்தது இலை ஒரு நெடியோன்.
கொடும்பசி இன்னது என்று அறியேன்.
நிறைந்து உணும் எனக்கு இன்று அரை வயிறு அளவு
நிரம்பிலா பட்டினி போட்டீர்
தறிந்திடா பிழைகள் செய்குவது உமது
தலைமுறைக்[5] குல விருதேயோ? (16:46)

இவ்விரு விருத்தங்களும் அழகாகவும் அழுத்தமாகவும் உணர்த்தும்.

இப்படி தாம் ஆணவம் கொண்டு, அவமானப்பட நேர்ந்தது முதல் அவர் ஒரு பாடம் கற்றுக் கொண்டு விட்டார்.

இறைவனிடத்தில் பறவை இனம் அனைத்தும் தம் சொற்படி நடக்க அருளவேண்டும் என வேண்டினார். இறைவனும் இசைந் தான்.

இறைவன் ஆணை ஏற்ற ஜிப்ரீல் (அலை) அவர்களும், மீக்காயீல் (அலை)அவர்களும் உத்தரவிட, பல்வேறு பறவை இனங்களும் அவர் திருமுன் வந்து நின்று வணங்கி, வாழ்த்தி ஏவலுக்குக் காத்திருந்தன.

---

1. ஈடன் தோட்டம்; 2. ஆப்பிள்; 3. ஆதம்நபி; 4. பிழை;
5. ஆதம் நபி மரபினர்-மக்களினம்.

ஒவ்வொரு பறவை இனமும் தம்மைத் தாமே அறிமுகம் செய்து கொண்டன. அவர் ஏவலை நிறைவேற்றக் காத்திருப்ப தாகக் கூறின.

அப்படி அறிமுகம் செய்து கொண்ட பறவைகளில் ஒன்று ஆனை இறாஞ்சி.

அதனை நோக்கி நபி அவர்கள் "சுவ(ர்)ண ஒண் பறவை போல் வடிவு மிகுந்து இருந்தனை, உன் வயதுரை" என்றார்.

பாராட்டுரையால் செருக்கிய அப்புள் "விண் திகழ் புகழினீர் ஈர் இரண்டாயிரம் வருடம் சென்றன" என்று அகந்தனில் செருக் கொடு தனை மதித்து அறைந்தது, என்று புலவர் கூறுவார்.

(17:41)

தம்முடைய ஆணவத்தினால் தாம் அடைந்த பரிபவம் (கதி) நினைவிற்கு வர சுலைமான் நபி அவர்கள் 'ஆணவம் தீமையே விளைக்கும்' என்பதனை அதற்கு உணர்த்துகிறார். அப்படி அவர் சொன்னதை

வினயம் உற்று உணர் கல்வியை, எழிலை, வீரத்தை,
வனை புகழ்ச்சியை, மிகுதன தானிய வாழ்வை,
இனையது உத்தமம் எனப் பெறும் மற்றவையினையும்
தனை மதிப்பு அகங்காரமே கெடுப்பது சரதம்.

(17:43)

என்பதால் அக செருக்கினை அகற்று என இதையத்து
அன்பதாய் பெரும் புள்ளினுக்கு[1] இசைத்தவை நிற்கின்
முன்பு தோன்றி ஓர் பறவை சலாமது மொழிந்து
பின்பு தாள் இணை மலர் பணிந்து ஒழுங்கொடு பேசும்.

(17:44)

என்று புலவர் பாடுவார்.

அறிமுகங்கள் முடிந்து சுலைமான் நபி அவர்களுக்குப் பணி புரிவதாகப் பறவை இனங்கள் வாக்குறுதி அளித்தன. அதனைச் சுலைமான் நபி அவர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றார்.

பின்னர் நடந்தனவற்றைப் புலவர் மிக அருமையாக (அறம் கரை ஆர்வ மிகையால்) எடுத்துக் காட்டுவார்.

ஒவ்வொரு பறவை இனமும் அவர்க்குத் தாம் அறி அளவில் நீதி புகட்டத் தொடங்குகின்றன.

---

1 பேருடல், சிறுமதி என்ற குறிப்பினது

வையகத்து உதிக்கும் பொழுது உடன் தோன்றும்
மவுத்துக்கு[1] சந்ததி பெறுவீர்
ஐயமில் கதியாய் பதவீடு அமையாது
அழிவுக்கு வீடுகள் அமைப்பீர்
பொய் அற உதவு பொருள் அறன் அகற்றி
போக்குக்கு பொருள்கள் தேடிடுவீர்
மெய்யினீர் எவரும் ஆதியை வணங்கும்
என நிதம் விளம்பும் ஓர் விகங்கம்[2]. (17:91)

அடுத்து அணி மயில்,
''விரிவு உறும் அனந்தம் படைப்புகாள் நீர் எவ்
விதம் நடந்திடுவதோ அந்த
தரம் உமை நடத்தப்படும் இவை சரதம்
சரதம் என்று இடைவிடா வண்ணம்''
கூறும் என்பார். (17:92)

இன்குரல் குது குது,

''கொடும் பவம் புரிவீர் அரிய மெய்ப் பொருளைக்
குறித்து அகத்தினிற் பயம் கொளுமின்
இடும்பை விட்டு அகன்று உள் உருகியே தவுபாச்
செய்யும்...'' எனப் பலதரம் பகர்ந்தது. (17:93)

அடுத்து அதிர்குரல் வளைவாய்க் குல கவுதாரி,
''மண்டல மிசையே மவுத்தெலாம் கயாத்து[3] ஆம்.
கயாத்து எலாம் மவுத்துகள் ஆகும்.
பண்டு உள பழமை புதுமை ஆம். புதுமை
பழமை ஆம். பார்த்து உணர்வீர்''...என்றது (17:94)

அடுத்து, புள்ளி அம் சிறைப்புறவு,
''நிகர் அறும் ஒருவன் கருணை அம் கடவுள்
நெடியவன் துய்யவன் நிகழ்த்தும்
அகிலமும் ககன தலங்களும் இதில்வாழ்
அனைத்து உயிர்களும் புகழ்ந்து ஏத்து
புகழ் முழுவதும் அன்னவன் தனக்கு''
......என்று தினமும் விள்ளும். (17:95)

---

1. மரணம்; 2. கழுகு; 3. பிறப்பு.

''உயிர் எவையினையும் அமைக்கவும் அவைகள்
உணப்படு புசிப்புகள் உதவி
செயிர் அற வளர்த்து காக்கவும் கடிதில்
சிதைவு உற அழிக்கவும் வல்லோன்
துயர் அணு அணுகாது இருப்பவன் எனும் ஓர்
தூயனே பழுதிலான் என்றே
அயர்வு அற ஒரு ஜின்னாறு .... அறையும்''. (17:96)

இருகண் ஒருமணிக் கரும்புள்,
''முன்னிய கடல்சூழ் வையகத்தினில் வாய்
மூடினோன் சலாமத்துப் பெறுவன்''
......என்று தன் வாயினால் வகுக்கும். (17:97)

வேல் விழிச்சியர் வசனப் பசுங்கிளி,
''கருத்து எலாம் உலக மயக்கினில் இருத்தி
கதியினை மறந்தவர் தமக்கே
வருத்தம் மீறிய கேடு எவைகளும்''
...எனவே உட்பரிவொடு நிகழ்த்தும். (17:98)

வலி இராஜாளி,
''என் தனைப் படைத்த தனி முதல் ஒருவன்
ஏது ஒரு மாசும் இல்லாத
சுந்தரன். இவை என்று அளவிடற்கு அரிய
தொகையறு புகழ் எலாம் உடையோன்.
அந்தமும் நடுவும் முதலும் அற்றவன்''.
...என்று பேசியது. (17:99)

சொறிப்புற, முடப்பதத் தவளை,
''அறிவினில் அடங்கான் எங்கணும் துதிக்கும்
ஆதி வல்லவன் பழுது அகன்றோன்
செறி தரும் எறும்பு கடை இபம் முதலாய்
செப்பும் எவ் உயிர்களும் இதன் மேல்
மறைவு உறு சீவ கோடியும் வணங்கும்
வணக்கத்துக்கு உரியவன்''
...என்று ஓதிற்று. (17:100)

---

1. சலாமத்து—பரிபூரண பக்குவ நிலை; அமைதி

காந்தள் சூட்டு (கொண்டை) வாரணம்,
''வந்து உமைக் கொடு போம் மவுத்தினை மறந்தீர்
வையகம் வானகம் அமைத்த
நந்தலில் பொருளை ஆதி நாயகனை
நாளுமே நினையுமின்'' என்று தன்
கந்தர மயிர்கள் சிலிர்த்திட கூவிற்று. (17:101)

குங்கும நிறவாய்ப் பெருங்கோழி,
''எவ் உயிரினுக்கும் இரங்கி எப்பொருளும்
ஈகுவன் இணை அறும் இறையோன்
அவ்வியம் அணுகான் அழிவிலா றகுமான்
அளவிடாதவன் அறுசு அதன் மேல்
செவ்விய எழில் சிங்க ஆசனம் உடையோன்''
...என்று உணர்த்தியது. (17:102)

குறட்டுவாய் நெடுங்கழுத்துக் கழுகு,
''தவப் பொருள் விரும்பும் ஆதம் நன்னபி பூ
தலத்திடை உதவு சந்ததி[1]காள்
மவுத்து வந்து உமது வலியும் உள் உயிரும்
மாய்ப்பது சரதம் ஆகையினால்
உவப்பு உற உமக்கு சம்மதி[2] எவையோ
அவ்வகை ஒழுகும்''
... என்று செப்பியது. (17:103)

கதிர் விரி தரள வெண்கழுத்துக் கருடன்
''விதிதரும் உலக மயக்கம் என்பதனில்
விளைவது இவ்வகை என தெளியும்
மதி உடையவருக்கு அலை கடல் வளைந்த
வையகத்தினிலும் மற்று உளதாம்
பதியினும் கயிறு[3] ஆய் இருக்கும்''
...என்று எழிலொடு சவலும். (17:104)

கூரிய கோட்டு, பாரிய திமில் இடபம்,
''வாரியை உடுத்த நெடும்புவி தலத்தில்
வந்துளீர் அழிவு இலா பதவி
காரியத்தினிலே கருத்து வைத்திடுமின்
கடந்திடில் வரல் அரிது''
.. எனவே பயின்றது. (17:105)

---

1. சந்ததி – மரபு; 2. சம்மதி – விருப்பு
3. கயிறு—நன்மை

ஓரடிக் கரம் விரி வௌவால்,

"இறை விடுத்து அருள் தூதுவர் எனும் நபிகள்
எவர்க்கும் நாயகம் என உதிக்கும்
திறல் முகம்மதர் மீதினும் அவர் திருகோத்
திரத்தின் மீதினும் சினப்பவர்க்கு
பறை தரு கொடிய லகுனத்து[1] ஆம் எனவும்
பாத்திகா எனும் சூறத்தை
உறுதி கொண்டு ஓதும்"

...என்று உரைத்தது. (17:106)

மனைப்புலி என்னும் ஓர் மாற்சாலம்[2],

"அதி குணத் தவுறாத் எனும் சுருதியில் மூன்று
ஆயத்து[3] உண்டு அதை இசை தோன்ற
இதையம் உள்ள உருக்கம் பெருகி நித்தமுமே
இரவினும் பகலினும் ஓதும்"

என்றது. (17:107)

பறவை விலங்கினங்கள் இவ்வாறு ஒரு முறை கூறியதுடன் அமையாமல் "நிதம் நிதம் அறிவு நிகழ்த்தின" என்பர். இவ்வாறு கேட்ட சுலைமான் நபி அவர்கள் 'பொதுநெறி செலுத்தி திங்கள் மும் மாரி பொழிதர மகிழ்ந்து இருந்தனர்' என்று கூறி, இப்படலம் முடிப்பார். புலவர்.

ஆனை இறாஞ்சிப் புள்ளுக்கு ஆணவத்தின் தீங்கு பற்றி சுலைமான் நபி அவர்கள் எடுத்துக் கூறியது அதன் செவிகளில் ஏற வில்லை.

எனவேதான், 'விதியை மதியினால் அகற்றி சகல சத்துவமும் தம் வசமாய் ஏற்றுதல், அகற்றல், கூட்டுதல், குறைத்தல் இவை எலாம் இதையம் என்பதனில் தோற்றுதற்கு இணங்கச் செய்து ஒழுகிடலாம்' (23:5) என்று சுலைமான் (அலை) அவர்களோடு தர்க்கமிட்டு இறுதியில் தோற்று,நாணி தொலைவில் ஒதுங்கியது.

இறைவனுடைய தன்மைகளை, எறும்புகள் மழை வேண்டி அவனைப் பிரார்த்தனை செய்தன என்று கூறுவதன் வாயிலாகவும் 'எறும்புகள் புத்திப் படல'த்திலும் எடுத்துக் காட்டுவார்.

அது போலவே 'எறும்பு அரசைக் கண்ட படலத்தில், சுலைமான் நபி அவர்களுக்கு "மகுசனா, தாயித்" எனும் பெயர் கொண்ட எறும்புகள் தலைவன்,

---

1. லகுனத்து—சாபம்; 2. மார்ச்சாலம்—பூனை; 3. ஆயத்து—மறை வசனம்,

அளவு இலாது உமக்கு வாய்ந்த நிகுமத்தில்[1] அன்புகூர
உளம் அது பொருந்தி நின்றீர் அதனில் அன்பு ஊன்றா
வண்ணம்
தளர்விலாது இறைமீது அன்பு தரித்திடில் கணியா வாழ்வு
இளர மென்மேலும் ஓங்கும் அன்று எனில் கீழ்மை ஆமே.
என அறிவுரை கூறியது என்று புலவர் பாடுவார். (21:26)

எவ்வளவோ ஆட்சியும், அதிகாரமும் பெற்றிருந்த போதிலும் அது எத்துணைச் சிறியது என்பதனை அவர் உணர வைக்கும் வகையில் எறும்புகள் விருந்திடு படலம் அமைந்து இருக்கிறது.

சுலைமான் நபி அவர்களுக்கும் அவர் படைகளுக்கும் எறும்புகள் இட்ட பெரு விருந்து, வழிச் செல் வணிகன் ஓய்வு கொண்டபோது அவனது பொத்தல் பொதிகளில் இருந்து சிந்திய, திருடிய, திரட்டியமையால் அமைந்தது என்பது அறிந்ததும் சுலைமான் (அலை) அவர்கள்,

"அவன் உடன் செலும் கூட்டத்தின் தொகையும் எவ்வளவோ?
எவளவோ சமைத்து உள கறி அரிசி மற்று இவன் பால்
நவநிதி கணக்கு எது கொலோ? நாம் நமக்கு ஈடா(க)
உவமை இல் என நினைத்தல் போல் பெரும் பிழை உண்டோ?

வணிகன் வாழ்வினில் நமது வாழ்வு அணு நிகர் மதிக்கத்
துணிவதோ? என தெளிவு கூர்ந்து எண்ணிய துணிவுக்கு
அணி கொள் ஆதி என் செய்வனோ நம்மை என்று அஞ்சி
உணர்வதாய் சுகூதினில் விழுந்து இரந்து இரந்து உருகி
...நின்றார் என்பார் புலவர். (22:45, 46)

இவ்வாறு அமைத்தும் அமையாமல் அமைதரு நன்னீதிகள் கவிக் கூற்றாய் இப்படலத்தில் புலவர் அமைத்திருக்கிறார். அவற்றின் திரள் கருத்து ஆவன:

மேலவர் அணுவினும் நுண்ணிய அளவிலும் சிறுபிழை மனத்தில் நினையின் அத்தினமே அவர்க்கு நெடியோன் துயர் புரிகுவன். (22:48)

பாதகர்கள் உலகினில் இறைவனை மதியாது பிழைகள் செய்யின், அவர்கள் கொடுந் தீவினை எய்தி அலற அழிவிலா நரகத்தினில் கிடத்துவான். (22:49)

1. செல்வம்

இறைவன் செய்கை ஈது ஆகையால் அவன் வழியினை உணர்ந்து செருக்கு அகத்தினில் முற்றாமல் நெறிப்படுவனவே செய்தல் வேண்டும். (22:50)

நன்றி, கல்வி, மிகுநிதி, வென்றி, நல்வாழ்வு இவற்றில் எல்லா வற்றிலும் மேம்பட்ட எவரும் இலர். ஒவ்வொருவர் ஒவ்வொன்றில் ஒவ்வொரு வகையில் உயர்ந்தவர். உயர்வு அற உயர்ந்த இறைவன் ஒருவனே, முதல்வன். (22:51)

ஓர் அரசன் செருக்கு மிகின் அதனைவிட மடமை உண்டோ? ''பெருக்கத்து வேண்டும் பணிவு''. அரசினையோ, நிதியினையோ நிலை பேறானவை என்று எண்ணுவதும், தருக்கு மேவுதலும் தகாது. (22:52)

ஊர் சதமல்ல; உற்றார் சதமல்ல; உடம்பும் சதமல்ல; பிள்ளை சதமல்ல; பெண்டிர் சதமல்ல; என்று நன்கு அறிந்தும் எதனால் சிந்தையில் செருக்கு மிகுகின்றீர் செகத்திரே? (22:53)

யான் எனது என்னும் செருக்கு அறுத்து, தவம் எய்தி வானும் வையமும் துதி செய வாழ்வாரே வாழ்வார்.

அல்லார், தான் எனும் இறுமாப்பு மேவி செம்மாந்து வம்பில் தலையிட்டு முட்டுண்டு பின் குனிவர். அவரே தாழ்வர். (22:54)

இறை அருள் கூட, பெரு நலம் துய்த்த இராஜ நாயகமே செருக்கு உற்றதற்கு, எறும்புகள் வழி இவ்வகை அறிவுறுத்திய இறைவன் எவரை விடுவான்? (22:55)

இறைவனுடைய தன்மையையும், பெருமையையும், மனிதனு டைய இயலாமையையும், சிறுமையையும் விளக்குவதற்குப் புலவர் பிறிதொரு சந்தர்ப்பத்தையும் பயன் படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஜமுசத்திற்கு அவள் வேண்டுகோள்படி, அவள் தந்தையின் படிமத்தைச் சமைத்து அவள்பால் கொடுக்க, சுலைமான் நபி அவர்களுக்குத் தெரியாமலேயே அவள் அவ்வுருவத்தையே கடவுள் ஆக எண்ணி வணங்கியதன் காரணம் ஆகவும், இறைவனுடைய படைப்புகளில் ஒன்றாகிய மீனவப் பெண் ஒருத்தியைக் கண்டு அவளைப் பற்றிக் கேவலமாக நினைத்ததன் காரணமாகவும் அவருடைய முத்திரை மோதிரம் பறிபட்டு அவர் அவலத்தில் ஆழ்ந்து வருந்தினார் எனக் கண்டோம் அல்லவா?

அப்பொழுது வருந்தி இறைவனிடம் தன்னுடைய பிழையைப் பொறுத்து அருளுமாறு அவர் இறைஞ்சியதை இதற்காகப் புலவர் பயன் படுத்திக் கொள்கிறார்.

இப்படிப் பயன் படுத்திக் கொள்ளும் பொழுது முஸ்லிம் களிடையே மிகப் பிரபலமாக ஓதப்பட்டு வருகிற அஸ்மாஉல் ஹுஸ்னா (அல்லாஹ்வின் அழகிய திருநாமங்கள்) வை ஓதினார் என்பதைக் குறிப்பிடும் பொழுது அவ்வழகிய திருநாமங்களை முழுமையாக நான்கு விருத்தங்களிலும் அடுத்த விருத்தத்தின் முதல் அடியிலும் கொடுத்து விடுகிறார்.

"அல்லாஹ்வுக்கே மிக்க அழகிய திருநாமங்கள் உரியன; ஆகவே அவற்றைக் கொண்டே நீங்கள் அவனை அழையுங்கள். அவனுடைய திருநாமங்களின் புனிதத் தன்மையை மீறுகிற வர்களை விலக்கி விடுங்கள்; அவர்கள் தம் செயல்களுக்கு உரிய கூலியைச் சீக்கிரமே பெறுவார்கள்"

(திருக்குர் ஆன் 7:180)

இந்த அஸ்மாஉல் ஹுஸ்னா என்ற சொற்றொடர் திருக்குர் ஆனில் வேறு பல இடங்களிலும் இடம் பெற்றிருக்கின்றது.

இந்த அழகிய திருநாமங்கள் எத்தனை என்பது பற்றிப் பலர் பலவிதமாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

"தப்ஸீருல் ஜலாலைன் என்ற திருமறையின் விரிவுரையின் ஒரு பக்கத்தில் 'அஸ்ஸாவி' என்பார் 'அவனுடைய திருப்பெயர்கள் பல, அவை 300 என்றும், 1001 என்றும், 1,24,000 என்றும்—அதாவது நபிமார்களுடைய எண்ணிக்கை—ஏன் எனில் ஒவ்வொரு நபியும் இறைவனுடைய திருநாமம் ஒன்றின் அகமிய உண்மையைப் பெற்ற வராக இருந்தார்' என்றும் குறிப்பிட்டு இருக்கிறார்".[1]

வண்ணக் களஞ்சியப் புலவரோ "ஆயிரம் திருப்பேர்ப் பொருள்" என்று இறைவனைப் பற்றிக் குறிப்பிடுவார்.

(17:80)

அவற்றுள் 100 திருப்பெயர்களில் அல்லாஹ் என்ற பெயரும் சேர்ந்திருக்கிறதா? இல்லையா? என்பது பற்றியும் அறிஞர் களிடையே கருத்து வேறுபாடு உண்டு.

---

1. (அல்லாஹ்வின் அழகிய திருநாமங்கள்—மு. மு. இஸ்மாயீல் ப, 23, 24)

அல்லாஹ் என்பதுதான் மூலப்பெயர் (அல்லது) வேர்ப் பெயர்; பிற அனைத்தும் இறைவனுடைய பண்பின் அடிப்படையில் அமைந்தன என முன்னர்க் கண்டோம்.

எனவே எந்தப் பெயர் இத்தொகுதியில் இடம் பெறினும், பெறாவிடினும், எப்பெயரை வாயினால் உச்சரித்தாலும், உள்ளம் அந்த ஏக நாயகனையே எண்ணிக் கொண்டு இருக்கும் ஆயின், இந்த வேறுபாடுகள் எல்லாம் அடிப்படை உணர்வை மாற்றிவிடா என்ற காரணத்தினால் கூர்ந்து ஆராயத் தேவை இல்லை.

இனி வண்ணக் களஞ்சியப் புலவர் சொல்வதைப் பார்ப்போம்.

சுலைமான் (சுலை) அவர்கள் தாம் பட்ட துன்பத்தின் காரணம் ஆக என்ன எண்ணினார், இறைவனிடம் என்ன இறைஞ்சினார் என்பன பற்றி இரண்டு விருத்தங்களில் புலவர் கூறுவார்:

மலர்தலை உலகில் சில நபிமாரை
வாதனை இயற்று சோதனைகள்
பலவிதம் புரிந்தாய். ஆயினும் எனைப்போல்
பட்டினி வருத்தினை இலையே.
சலதரம், அனிலம் ஒடு பலஉயிர்க்கும்
தலைபதி ஆக்கி எச்சடி பெற்று
அலையவும் விதித்தாய் இலை. தமியனையே
அளவு அற உயர்த்தினை, தாழ்த்தாய். (36:35)

தாங்கினன் இதுமட்டும். இனம் வருத்திடுகில்
தாங்குதல் வலியனோ? எளியேன்,
ஓங்கிய கருணை முனிவு உடையவனே!
ஒருபொழுதினும் இனி இது போல்
தீங்கு இயல் கருமவினை செயேன்; பொறுத்தல்
செய்து அருள் எனத் தெளபா செய்தே
தூங்கு இசை சுருதிபகர் **சதநாமம்**
துதி செய தொடுத்தனர் அன்றே. (36:36)

இதனுள் 36ஆம் விருத்தத்துள் இடம் பெற்றிருக்கும் ஒன்றை நயம் காண வேண்டும். அதாவது, இறைவனுடைய திருநாமங்கள் நூறு (சதம்) என்று அவர் கூறுவது.

அப்படிக் கூறினும் அடுத்து வரும் விருத்தங்களில் அவர் அல்லாஹ் என்ற திருநாமத்தைக் குறிப்பிடவில்லை.

இந்த சதநாமங்களையும் கூறி இறைவனை விளித்து

"... ... ... ... ... சந்ததனே
மக்கள் ஜின் முதல் ஆம் சராசரம் பெருகி
வாழ்வதும் தாழ்வதும் அனந்த
விக்கினம் அடைந்து தவிர்வதும் எவையும்
வேறு ஒரு பொருளினால் அன்றே
இக்கணம் உனது கருணை செய்து அருள்வாய்
ஏழையெற்கு உனை அலாது எவரே. (36:41)

என்று மனம் உருகி இறைவனைச் சுலைமான் நபி அவர்கள் இறைஞ்சினார்.

இறைவனும் அவருடைய பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டான் என்பதனைப் புலவர்,

"என்று இறையவன் தன் அழகிய நாமம்
எனும் ஒரு நூறுமே துதித்து
நின்று உளம் உருகி அழுது கைஏந்தி
நெடுந் துவா இரைந்தனர் முதலோன்
வென்றி கொள் கருணை நோக்கம் தோன்றியது"
(39:42)

என்று பாடுவார்.

இந்த நூறு அழகிய திருநாமங்களின் வரிசை அமைப்பு புலவரின் விருத்தங்களில் மாறுபட்டுள்ளது.

அறபுச் சொற்களான இப்பெயர்களை அறபியிலேயே ஒரு குறிப்பிட்ட வரிசையில் முஸ்லிம்கள் ஓதுவார்கள்.

இத்தொண்ணூற்றொன்பது, நூறு, திருநாமங்களும் எவை எவை என்பது பற்றியும், தொகுப்பிலும் சிறு வேறுபாடுகள் உள்ளன.

அஃதன்றியும் அறபி மொழியில் உள்ள சில எழுத்துகளுக்கு உரிய உச்சரிப்பைக் கொண்ட சொற்கள் தமிழிலோ, ஆங்கிலத்திலோ இல்லை.

புலவரோ தமிழில் இக்காப்பியத்தைப் பாடி இருப்பதனால் தமிழ் எழுத்துக்களையே பயன்படுத்தி இருக்கிறார்.

இதன் காரணம் ஆக அறபிப் பெயர்கள் அதனுடைய எழுத்துக்கு ஏற்ற ஒலியுடன் இவ்விருத்தங்களில் அமையவில்லை.

இதனால் சிற்சில இடங்களில் ஒரே பெயர் ஈரிடங்களில் வருவது போலத் தோன்றுகிறது.

வேறு சில இடங்களில் தமிழ்ச் சொற்களின் புணர்ச்சி விதி களைப் பின்பற்றுவதால் மூல அறபுச் சொற்களை நிதானிப்பதில் கஷ்டம் ஏற்படுகிறது.

அன்றியும் ஒரிரு இடங்களில் விருத்தத்தின் இடையே அறபுச் சொல்லுக்கு உரிய பொருளையும் தமிழில் கொடுப்பதோடு அல்லா மல், அறபுச் சொல்லுக்குப் பதிலாக அதனுடைய பொருள் தரும் சொல்லையே தமிழில் கொடுத்து விடுகிறார்.

உதாரணமாக : நூர்-அறபுச் சொல்; இதன் பொருள் 'சோதி' என்பது.

பாடல் 36:40ல் நூர் என்ற அறபுச் சொல் வரவில்லை. அதன் பொருளான சோதி என்ற தமிழ்ச் சொல்லே வந்துள்ளது.

இப்பொழுது கிடைக்கிற ''இராஜ நாயகம்'' பதிப்பின் குறையைப் பற்றி முன்னரே கண்டோம்.

இந்த இறைவனின் திருநாமங்களை வரிசைப் படுத்தி இருக் கிற, ''முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலம்'' பகுதியில் உள்ள 37, 38, 39, 40, 41 ஆகிய விருத்தங்களில் காணப்படும் குறை களைப் பற்றிச் சொல்லத் தேவையே இல்லை.

ஆனால்,

''தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி''

என்ற டாக்டர் ம.மு உவைஸ் அவர்கள் நூலில் ஏதோ ஒரு பழைய பதிப்பில் இருந்து இந்நான்கு விருத்தங்களும் அடியிற் கண்டவாறு கொடுக்கப்பட்டு இருக்கின்றன. (பக்கங்கள்: 229, 246, 198, 242, 171)

நவம் தரு கருணை **யாறகுமானே**
**யாறகீம் மலிக்குல் குத்தூசே**
கவின் கொளும் **மூமின் முஹைமின் உஸ்ஸலாமே**
**காலிக்குல் ஜப்பார் முதக்கப்பிர்**
உவந்து அருள் **பாரீ அசீசு முசவ்விர்**
**கப்பார் கஹ்ஹார் வஹ்ஹாப்**
மவுன **றஸ்ஸாக்கு பத்தாகு அலீமு**
**பாசிது காபிலு அதலே** (36;37)

நாட்டிய முதில்லு முகீசு ஐமீகு
றாபிகு காபிலு பசீறு
காட்டிய சுக்கமு லத்தீபு கபீறு
கலீமு அழீமு கபூறு
மூட்டிய சுக்கூறு அலிய்யுல்க் கபீறு
முகீத்து ஜலீலு கசீபு
வாட்டரு ஹபீலு கரீமு றகீபு முசீபு
வாசிஉல் கக்கீம் வதூதே (36:38)

சுத்தனே மசீது பாயிசு சகீது
சுயம்பு வொக்கில் கவியு மத்தீனே
மொத்தனே வொலிய்யுல் கமீது முயீது
முமீத்து முஹ்யி கையுல்க் கையும்
அத்தனே முகுசீ வாசீது மாசீது
அண்ணலே வாகிதே சமதே
நித்தனே காதிர் முக்ததிர் முகத்திம்
நிகழ் அவ்வல் ஆகிர் முவ.ஃ.கிர் (36:39)

தகுத்துள ளாகிர் பாத்தினு பர்று
தவ்வாபு வாலீ முத்த ஆலி
வருத்த முன்தகிம் அபுவ்வு றஊபு
மாலிக்குல் முல்குதுல் ஜலாலி
இகழ்ச்சியல் இக்குறா முக்குசித்து
ஜாமியே கனியே முகுனிய்யு
தொகுத்திடா முகுத்தீ மானியு ளாறு
நாபிகு சோதியே ஹாதி (36:40)

தக்கதோர் பத்தீகு வாரிது பாக்கி
ஸபூறு றசீது சந்ததனே (36:41)

இந்த நான்கு விருத்தங்களின் படியும் 41 ஆம் விருத்தத்தின் முதல் அடியின் படியும் 96 பெயர்களே அறபியில் இடம் பெற்றிருக்கின்றன. அவை யாவன :

1. யா றகுமான் (ரஹ்மான்)—அளவற்ற அருளாளன்
(யா-இவ்வோரெழுத்து ஒரு மொழி விளித்தல் பொருளது)
2. யா றகீம் (ரஹீம்)—நிகரற்ற அன்பு உடையவன்
3. மலிக்—மன்னன்
4. குத்தூசு (குத்தூஸ்)-பரிசுத்தமானவன்
5. மூமின் (முஃமின்)—அபயம் அளிப்பவன்;
—நம்பிக்கையாளன்
6. முஹைமின்—பாதுகாவலன்
7. ஸலாம்—சாந்தி அளிப்பவன்
8. காலிக்—படைப்பவன்
9. ஜப்பார்—சர்வ வல்லமை வாய்ந்தவன்
10. முத்தகப்பிற்—பெருமை உள்ளவன்
11. பாரி (பாரிஉ)—ஆத்துமாவை அமைப்போன்
12. அஜீசு (அஜீஜ்)—யாவையும் மிகைத்தவன்
13. முசவ்விற்—உருவம் அமைப்பவன்
14. கப்பாற் (கஃப்பார்)—மன்னிப்பவன், பிழை பொறுப்பவன்
15. கஃகாறு (கஹ்ஹார்)—அடக்கி ஆள்பவன்
16. வஃகாப் (வஹ்ஹாப்)
—இடைவிடாது வழங்கிக் கொண்டிருப்பவன்
17. றஜ்ஜாகு (ரஜ்ஜாக்)
—இரணம் (உணவு) அளிப்பவன்
18. பத்தாகு (ஃபத்தாஹ்)—வெற்றியாளன்
19. அலீமு (அலீம்)—யாவும் அறிந்தவன்
20. பாசிது (பாஸித்)—தாராளமாகக் கொடுப்பவன்; வாழ்வு, இதயம் ஆகியவற்றை விரிவுபடுத்துபவன்.
21. காபிலு—தடுப்பவன்; கைவசப்படுத்துபவன்
22. அதல் (அத்லு)—நீதிபதி (36:37)
23. முதில்லு—தாழ்த்துகிறவன்
24. முஇசு (முயீஸ்)—மேன்மை அடையச் செய்பவன்
25. ஜமீகு (ஸமீஃ)—யாவையும் கேட்பவன்
26. றாபிகு (றாஃபிஃ)—உயர்த்துகிறவன்
27. காபிலு (ஹாபிள்)—தாழ்த்துபவன்
28. பசீறு (பஸீறு)—யாவற்றையும் பார்ப்பவன்
29. கக்கமு (ஹகம்)—அறிவாளன்; பேரரசன் என்ற முறையில் நீதி செலுத்துபவன்,

30, லத்திபு (லதீஃப்)—உள்ளன்பு உடையவன்
31. கபீறு (ஹபீர்)—படைப்புகளின் இரகசியங்களை அறிந்தவன்
32. கலீமு (ஹலீம்)—மென்மையானவன்; தண்டிப்பதில் நிதானம் காட்டுபவன்
33. அழீமு (அளீம்)—நெருங்க முடியாதபடி மிகப் பெரியவன்; மனிதர் அறிவிற்கு எட்டாதவன்
34. கபூறு (கபூர்)—மன்னிப்பவன்
35. சுக்கூறு (ஷுக்கூர்)—நன்றி உடையவன்
36. அலீய்யு—உன்னதம் ஆனவன்
37. கபீறு (கபீர்)—பெரியவன்
38. முகீத்து (முகீத்)—விதியை நிர்ணயிப்பவன்
39. ஜலீலு—மாட்சிமை மிகுந்தவன்
40. கசீபு (ஹஸீப்)—கணக்குக் கேட்பவன்
41. ஹபீலு (கபீமு)—பாதுகாவலன்
42. கரீமு (கரீம்)—கண்ணியம் மிக்கவன்
43. றகீபு (ரகீப்)—கண் காணிப்பவன்; பாதுகாவலன்
44. முசீபு(முஜீப்)—முறையீட்டை ஏற்பவன்
45. வாசியு (வாஸிஃ)—எங்கும் நிறைந்து அனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு உள்ளவன்.
46. கக்கீம் (ஹக்கீம்)—உலகின் விதியை அறிவொடு நிர்ணயித்து அதன் காரணம் ஆக நற்பலன் விளையச் செய்பவன்
47. வதூத்—உள் அன்பு மிக்கவன்; நல்லடியார்களைப் புகழ்வதுடன் அவர்கள் மீது நல்லருள் பாலிப்பவன் (36:38)
48. மசீது (மஜீத்)—மகத்துவம் மிக்கவன்
49. பாயிசு (பா இத்)—மறுமையில் அனைவரையும் எழுப்புபவன்
50. சகீது (ஷஹீத்)—சான்று பகர்பவன்
51. வொக்கில்—படைப்புகளின் அனைத்து அலுவல்களையும் பொறுப்பு ஏற்றுப் பரிபாலிப்பவன்
52. கவியு (கவிய்யு)—வல்லமை உள்ளவன்
53. மத்தீன்—உறுதியானவன்
54. வொலி (வலி)—பாதுகாவலன்
55. கமீது (ஹமீத்)—புகழுக்குரியவன்
56. முயீது (முயீத்)—படைப்புகள் அழிந்த பின்னர் அவற்றை மீளச் செய்பவன்
57. மும்த்து—இறப்பைப் படைத்தவன்

58. முஹ்யி—உயிரைப்படைத்தவன்
59. ஹைய்யு (ஹைய்யு)— உயிரோடு உள்ளவன்
60. கையூம்—நிலையானவன்
61. முகுசீ (முஹ்ஸி)—கணக்கிட்டு அனைத்தையும் அறிகின்றவன்
62. வாசிது (வாஜித்)—பரிபூரண செல்வந்தன்
63. மாசிது (மாஜித்)—ஆட்சியும், அதிகாரமும் ஒருங்கே வாய்ந்த மேலானவன்
64. வாகிது (வாஹித்)—ஒருவன் தனித்தவன்
65. சமது—(எவருடைய) தேவை(யும்) அற்றவன்
66. காதிர்—ஆற்றல் மிக்கவன்
67. முக்ததிர்—எல்லாம் வல்லவன்
68. முகத்திம்—தான் விரும்புபவர்களைத் தன்பால் அணைத்து ஏனையோரை ஒதுக்கித் தள்ளுபவன்
69. அவ்வல் —முதல்வன்
70. ஆகிர்—இறுதி ஆனவன்
71. முவஃகிர்—பிற்படுத்துபவன் (36:39)
72. ளாகிர்—பகிரங்கமானவன்
73. பாத்தினு (பாத்தின்)—மறைவானவன்; அந்தரங்கமானவன்
74. பர்று—நன்மைகளின் ஊற்றாக உள்ளவன்
75. தவ்வாபு—பாவ மன்னிப்புக் கோரலை செவி உறுபவன்
76. வாலீ—ஆட்சி செய்பவன்
77. முத்த ஆலி—மிகவும் உயர்ந்தவன்
78. முன்தகிம்—பழி தீர்த்துக் கொள்பவன்
79. அபுவ்வு—குற்றங்கள் எழுதப்பட்ட தாள்களில் இருந்து அவற்றை அழிப்பவன்
80. றஊபு (றவூஃப்)—துன்பச் சுமைகளை நீக்குபவன்
81. மாலிக்குல் முல்க்—அரசின் அதிபதி
82. துல் ஜலாலி வல் இக்ராம்—மாண்பும் தாராளத் தன்மையும் உள்ள அதிபதி
83. முக்குசித்து (முக்ஸித்)—நீதியாளன்
84. ஜாமிஃ—ஒன்று சேர்ப்பவன்
85. கனீ—எவ்விதக் குறையும் இல்லாத செல்வன்; எவ்விதத் தேவையும் அற்றவன்
86. முகுனிய்யு—வளமாக்குபவன்
87. முகுத்தீ—வழங்குபவன்

88. மானியு—தடுத்து வைப்பவன்
89. ளாறு—துன்புறுத்துபவன்
90. நாபிகு—அருள் சொரிபவன்
*91. நூர்—சோதி-ஒளிமாயமானவன்
92. ஹாதி—வழிகாட்டுகிறவன் (36:40)

93. பத்தீகு—புதுமை செய்வோன்
94. வாரிது—உரிமையாளன்
95. பாக்கி—நிரந்தரமானவன்
96. சபூறு (ஸபூறு)—பொறுமையாளன்
97. றசீது—நேர் வழியில் நடத்திச் செல்பவன் (36:10)

நூர் என்னும் அறபுச் சொல்லை நேரிடையாக மொழி பெயர்த்து சோதியே என்று கொடுத்து இருக்கிறார் என்பதைப் பார்த்தோம்.

சந்ததன் என்ற சொல்லையும் 41 ஆம் விருத்தத்தில் பயின்றிருக்கிறார்.

இதே சொல்லைக் கடவுள் வாழ்த்துப் படலத்தின் முதற் பாடலிலும் அவர் பயின்றிருப்பதனைப் பார்த்தோம்.

இரண்டு இடங்களில் இறைவனுடைய நூறு பெயர்களைச் சுலைமான் நபி அவர்கள் கூறி இறைவனைத் துதித்தார் என்று புலவர் பாடுவதால் எஞ்சிய 4 பெயர்களும் இந்தப் பாடல்களில் இடம் பெற்றிருக்கவே வேண்டும்.

ஆனால் இவற்றுள் 96 அறபுப் பெயர்கள் மாத்திரமே காணப் பெறுகின்றன.

எனினும் புலவர் வலியுறுத்துவதன் காரணம் ஆக (36:36, 42) மற்ற 4 பெயர்களும் தமிழ் மொழி பெயர்ப்பாகவே புலவர் கொடுத்து இருக்கிறார் என்று நாம் கொள்ள வேண்டும்.

அவற்றுள் ஒன்று "சோதி", நாம் பார்த்து விட்டோம். பிற மூன்றும் எவை என்பதனைக் கண்டு பிடிக்க வேண்டும்.

37ஆம் பாடலில் "கவின் கொளும்" என்ற தொடர் இடம் பெற்றிருக்கிறது. வழக்கமாகக் குறிப்பிடப் பெறும் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களுள் ஒன்றாகக் குறிப்பிடப் பெறுவது 'ஜமீல்'.

இதன் பொருள் அழகுக்கு உரியவன் என்பதாகும்.

---

* பாடலில் பயின்றசொல் 'சோதி'; நூர், சோதி ஒரு பொருளனவே

எனவே ''இந்தக் கவின் கொளும்'' என்ற தொடர் 'ஜமீல்' என்பதன் மொழி பெயர்ப்பாக இருக்கலாம் என்று கொள்ள முடியும்.

39ஆம் விருத்தத்தில் ஒவ்வொரு அடியின் முதற் சொல்லாக, ''சுத்தனே'', ''மொத்தனே'', ''அத்தனே'', ''நித்தனே'' என்ற நான்கு சொற்கள் இடம் பெற்றிருக்கின்றன.

இவை ஒவ்வொன்றுமே இறைவனுடைய பண்புப்பெயராக இருக்கும் தன்மை பெற்றது.

இறைவனைத் தூய்மையானவன் என்று திருக்குர்ஆன் திரும்பத் திரும்பக் கூறும்.

அப்படித் தூய்மையானவன் என்ற பொருளில்தான் 'சுத்தனே' என்று புலவர் குறிப்பிடுகிறார் என்று கொள்ளமுடியும்.

அது போலவே 'மொத்தனே' என்றசொல்லையும் 'முழுமை யானவன்' என்ற பொருளில் புலவர் பயின்றிருக்கிறார் என்று கொள்ள வேண்டும்.

மொத்தம் என்ற சொல் முழுமை என்று பொருள்படும். 'மொத்தன்' என்ற சொல் பிற இலக்கியங்களில் பயிலப் பெறா விடினும் 'மொத்தன்' என்ற சொல்லைப் புலவர் வடித்து இருக் கிறார் என்று கொள்வது பொருத்தம் ஆகும்; ஏன் எனில், 'சந்ததம்' என்ற சொல்லில் இருந்து 'சந்ததன்' என்ற சொல்லை அவர் வடித்திருப்பதனை முன்னர்ப் பார்த்திருக்கிறோம்.

'மொத்தன்' என்ற சொல் 'ஒத்தன்' என்ற சொல்லினுடைய பாடபேதமாக இருக்கலாம் என்று கொண்டால் இன்னும் ஒரு சிறப்பான கருத்தைக் காண முடியும்.

இறைவன் ஒருவன் என்பது இஸ்லாத்தின் ஆணிவேர். அதன் காரணம் ஆக, 'அகது' என்ற சொல் அல்லாஹ்வின் அழகிய திரு நாமங்களில் ஒன்றாக அமைந்துள்ளது.

இந்த 'அகது' என்ற சொல்லுக்கு ஒருவன், ஏகன் என்று பொருள்.

ஆகவே இந்த 'அகது' என்ற சொல்லின் மொழி பெயர்ப்பாக 'ஒத்தனே' என்ற சொல்லைப் புலவர் குறிப்பிடுகிறார் என்று கொள்ள முடியும்.

அடுத்து நாம் பார்க்க வேண்டிய சொல் 'அத்தன்' என்பதாகும். இச்சொல்லுக்குத் தகப்பன், மூத்தோன், குரு, உயர்ந்தோன் என்ற பொருள்கள் உண்டு.

இது அன்றியும் பொதுவாகக் கடவுளைக் குறிக்கவும் 'அத்தன்' என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் பயிலப் பெற்றுள்ளது.

எனினும், இங்கே 'உயர்ந்தோன்' என்று பண்புப் பெயராக இறைவனைக் குறிக்க புலவர் 'அத்தனே' என்ற சொல்லை ஆண்டிருக்கிறார் என்று கொள்ள முடியும்.

இறுதியாக உள்ள 'நித்தனே' என்ற சொல்லின் பொருளை விளக்கத்தேவை இல்லை. 'என்றும் இருப்பவன்' என்பது அதன் பொருள்.

இத்தகைய பண்பின் அடிப்படையில் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்கள் அமைந்திருக்கின்றன என்று கொள்ள வேண்டும்.

அதுவும் அல்லாமல் இப்பாடலின் (பாடல் 39) முதல் அடியில் 'சுயம்பு' என்ற சொல்லும் இடம் பெற்றிருக்கிறது.

வழக்கமாகக் குறிப்பிடப் பெறும் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களில் 'முப்திஉ' என்பது ஒன்றாகும். இதன் பொருள் 'சுயம்பு' என்பதாகும்.

இம் 'முப்திஉ' என்ற சொல்லின் மொழி பெயர்ப்பாகச் 'சுயம்பு' என்ற சொல் ஆளப்பெற்றிருப்பதாகக் கொள்ளலாம்.

மேலும் இதே (39 ஆம்) பாடலில் 'அண்ணலே!' என்ற சொல் ஆளப் பெற்றிருக்கிறது.

இதன் பொருள் தலைவன், முதல்வன் முதலியனவாகும். வழக்கமாகக் குறிப்பிடப் பெறும் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களில் 'ரப்பு' என்பதும் ஒன்று.

அதன் மொழி பெயர்ப்பாக 'அண்ணலே' என்ற சொல்லைப் புலவர் ஆண்டிருக்கிறார் என்று கொள்ளமுடியும்.

இப்படியாக 'சோதியே' என்ற சொல்லைத்தவிர முற் குறிப்பிடப்பெற்ற பல சொற்களில் மூன்றினையும் சேர்த்து 'சதநாமம்', 'இறைவன் தன் அழகிய நாமம் எனும் ஒரு நூறு' என்று புலவர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

பின்னர். சுலைமான் (அலை) அவர்கள் ஜமுசத்து தன் தந்தை உருவையே (பவுனவகு) கடவுள் என்று வணங்கி வந்தாள் என்பது தெரிந்து, அதுவும் தன் தாழ்வுக்குக் காரணம் ஆயிற்று என்பதனை உணர்ந்தார்.

பின், சுலைமான் (அலை) அவர்கள் ஜமுசத்தை விவாகரத்து செய்ததோடு அல்லாமல்

''வாங்கி அவ் உருவை அடித்து உடைத்து அனலில்
வைத்து எரித்து அணுவர நீற்றி
ஆங்கு அந் நீற்றை காற்றினில் தூற்றி
அகற்றினர்...'' (36:67)

என்று புலவர் பாடுவார்.

இஸ்லாத்தினுடைய இந்த இறைத் தன்மைக்குச் சற்றும் பங்கம் இல்லாமலே புலவர் தம் காப்பியத்தில் பாடி இருக்கிறார் என்பதற்கு, ஓரிரு மேற்கோளை இங்கே காணலாம்.

''புறா வசனித்த படலத்தில்'' புறா ஒன்று தனக்குக் குஞ்சுகள் இல்லாமையால் வருந்தியதைக் குறிப்பிடுகிறார்.

'மலடு' எனக் கீழ்ப்பட்டு இனத்தின் முன் அடங்கித் தலை கவிழ்ந்த தன் நிலையைச் சுலைமான் (அலை) அவர்களிடம் எடுத்து உரைத்தது.

தன் குறை தீர வேண்டி அது அவரிடம்,

''பல பல உயிர்க்கும் திருவருள் கடைக்கண்
பார்வையால் இகபரம் கொடுக்க
உலகினில் உதித்த மனுக்குல நிதியே
உமது உளம் இரங்கி என்தனுக்கு
சலனம் அற்றிட குஞ்சுகள் இனிது உதிக்க
தனியவனிடத்து துஆ இரந்து
நலவரம் புரிய வேண்டும் என்று உரைத்து
நறுமலர்ப் பதம் தொழுததுவே. (6:20)

சுலைமான் (அலை) அவர்கள் சிறுவராக இருந்த போது அவரிடம் இவ்வாறு வேண்டியது.

இதில் நோக்கத் தக்கது யாது எனில், தனக்குக் குஞ்சுகள் உண்டாகச் சுலைமான் நபி அருள வேண்டும் என்று அது கோரவில்லை. தனக்குக் குஞ்சுகள் உண்டாவதற்கு ஆக சுலைமான் நபி அவர்கள் தனியவன் இடம் துஆ இரக்க வேண்டும் என்றே கோரியது.

அதற்கு ஒப்பி நபி அவர்கள் அகம் மகிழ்ந்து அப்புறவின் முதுகைத் தடவி ''உன் வயிற்றில் எழுபது பார்ப்புகள் தனியவன் அருளினால் பிறக்கும்'' என்றே ஆறுதல் கூறுகிறார்.

எந்தத் தனியவன் இடத்தில் துஆ இரக்க வேண்டும் என்று புறா கேட்டுக் கொண்டதோ, அதே தனியவன் அருளையே, புறா, குஞ்சுகள் பெறுவதற்கு சுலைமான் (நபி) அவர்கள் வேண்டுகிறார், என்பது ஆழ்ந்து பாராட்டத் தக்க புலவர் செயலாகும்.

இது போலவே அரசு நியையிட்ட படலத்திலும் புலவர் ஒரு குறிப்பினைக் காட்டுவார். சுலைமான் (நபி) பெயர் எழுதிய ஒரு கழியையும், மற்ற பதினாறு சகோதரர்கள் பெயர் எழுதிய கழிகளையும் ஓர் அறையில் வைத்து இருந்து மறுநாள் பார்க்கும் பொழுது, சுலைமான் (நபி) பெயர்எழுதிய வறண்ட கழிமாத்திரம் செழுமை உற்று இருந்தது. பிற கழிகள், உள்ள பசுமையும் இழந்து வறண்டன என்பதைப் பார்த்தோம்.

இதனால் அதிருப்தி அடைந்த பதினாறு சகோதரர்களும் தங்கள் தந்தையாகிய தாவூது (அலை) அவர்களைக் குறை கூறும் பொழுது, சுலைமான் நபியிடம் கொண்டிருந்த அன்பினால் அவர் பெயர் பொருந்திய கழியை மாத்திரம் செழுமை அடைய அவர் [தாவூது (அலை)] செய்து விட்டார் என்று கூறவில்லை.

அதற்கு மாறாக ''கரவிலாது கழி வைத்து அகன்ற பின் மருவும் அந்த மகன் கழி ஆணிவேர்தரவும், காய்கனி தந்து தழைக் கவும் இரவெலாம் கண் விழித்து ஏங்கி துவா செய்தீர்'' (12:62)

என்றுதான் குற்றம் சாட்டுகிறார்கள். இதை எல்லாம் பார்க்கும் பொழுது சகல வல்லமையும் இறைவனுக்கே உரியது என்பதைக் காப்பியம் முழுவதிலும் புலவர் வலியுறுத்துகிறார் என்பது தெளிவு.

## 8. நபிகள் பெருமானார் பற்றி

அல்லாஹ்விடத்தில் வைக்கும் அசைக்க முடியாத நம்பிக்கைக்கு அடுத்து, முஸ்லிம்கள், முகம்மது நபி (ஸல்) அவர்களிடம் அளப்பரும் அன்பும், பாசமும், மரியாதையும் வைத்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் தேட வெகுதூரம் போக வேண்டியது இல்லை.

இறைவன் அவர்களைத் தன்னுடைய தூதராகத் தேர்ந்து எடுத்து அவர்கள் மூலமாகவே திருமறையாம் திருக்குர்ஆனை அருளி இருக்கிறான்.

எனவே எந்த அல்லாஹ்வே எல்லாம் என்று முஸ்லிம்கள் உறுதியாக நம்புகிறார்களோ, அந்த அல்லாஹ்வையும், அவனுடைய இயல்பையும், தன்மையையும், வல்லமையையும், கருணையையும் அவர்களுக்கு அறிவிப்பதற்கு ஒரு வாயிலாக இருந்தவர்களே அவர்கள் (நபிகள் பெருமானார்) தாம்.

அது அன்றியும், உலகம் தோன்றிய நாள் முதற் கொண்டு உலகின் பற்பல பகுதிகளிலும் வாழ்கின்ற மக்கள் இனத்தை நல் வழிப்படுத்துவதற்காக இறைவன் 1, 24, 000 நபிமார்களை அனுப்பிய இடத்து, அந்த நபிமார்களுக்கு எல்லாம் முத்திரையாக இறைவனுடைய இறுதித் தூதுவராக, முகம்மது நபி (ஸல்) அவர்கள் அமைந்தார்கள் என்ற முஸ்லிம்களின் நம்பிக்கை, இரண்டாவது காரணம் ஆகும்.

மூன்றாவது காரணம், நபிகள் பெருமானார் அவர்களுடைய வாழ்வு முழுமையான வாழ்வாக அமைய, இறைவன் திருமறையில் கூறியவற்றிற்கு ஒரு விளக்கமாக அவர்களே அமைந்தமையும் ஆகும்.

நான்காவது காரணம், அல்லாஹ் தன்னுடைய திருமறை ஆகிய திருக்குர்-ஆனிலேயே,

''(நபியே!) நாம் உம்மை அகிலத்தாருக்கு எல்லாம் ஓர் அருட் கொடையாகவே அன்றி அனுப்பவில்லை'' (தி.கு 21:107) என்றும்,

''அல்லாஹ்வின் மீதும் இறுதி நாளின் மீதும் ஆதரவு வைத்து, அல்லாஹ்வை அதிகம் தியானிப்போருக்கு நிச்சயமாக அல்லாஹ் வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி உங்களுக்கு இருக்கிறது'' (தி.கு. 33:21)

என்றும் கூறி இருக்கிறான்.

ஐந்தாவதாக, இறுதித் தீர்ப்பு வேளையில் இறைவன் முன்னிலையில், மனிதர்கள் செய்த பாவங்களுக்கு அவர்களை மன்னித்து அருளுமாறு பரிந்து உரைக்கும் உரிமை அவர்களுக்கு இருப்பதாகும்.

இவ்வாறான காரணங்களால் நபிகள் பெருமானாரைப் பற்றிப் பெரிதும் நினைப்பதும், புகழ்வதும் முஸ்லிம்களுடைய இடைவிடாச் செயல்களாக அமைந்து விடுகின்றன.

இப்பின்னணியில்தான் முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் கடவுள் வாழ்த்துப் படலத்தை அமைத்து இருப்பதனை அணுகவேண்டும்.

கடவுள் வாழ்த்துப் படலத்தில் அல்லாஹ்வைத் துதிப்பதற்கு அடுத்து நபிகள் பெருமானார் வாழ்த்தப்படுகிறார். வேறு பல ரையும் அதே படலத்தில் வாழ்த்த வேண்டி இருப்பதனால் அவர்கள் ஆசையுறுகிற அளவிற்கு நபிகள் நாயகம் அவர்களைப் பற்றிப் பாராட்டுவதற்கு இடம் இல்லாமல் போகிறது.

காப்பியமே நபிகள் நாயகத்தைப் பற்றி அமைந்து விடுமா னால் (சீறாப் புராணம் போல்) காப்பியம் முழுமையிலும் புலவன் தான் வேண்டிய அளவிற்கு அவர்களைப் புகழவோ, பாராட்டவோ முடியும்.

அது போலவே நபிகள் நாயகம் அவர்களுடைய உறவினர்கள் பற்றியோ, தோழர்கள் பற்றியோ, அவர்களைப் பின்பற்றியவர் கள் பற்றியோ, காப்பியம் அமையும் ஆனால் அவர்கள் வாயிலா கவும் நபிகள் பெருமானாரைப் பற்றித் தம் மனம் விரும்பிய அளவிற்குப் புகழவும், பாராட்டவும் செய்ய முடியும்.

வண்ணக் களஞ்சியப் புலவர் ஆக்கிய இராஜநாயகம், நபிகள் நாயகம் பிறப்பதற்கு முன் தோன்றிய சுலைமான் நபி அவர்கள் பற்றியது.

எனவே கடவுள் வாழ்த்துப் படலத்தில் மாத்திரம்தான் பொதுவாக நபிகள் பெருமானார் பற்றி பாராட்டவும் புகழவும் வாய்ப்பு கிடைக்க முடியும்.

இது அன்றியும், பிறிதொரு வாய்ப்பும் எல்லோர்க்கும் கிட்டக் கூடியதே. முதல் மனிதரும் நபியும் ஆகிய ஆதம் நபி தொடங்கி பின் வந்த ஒவ்வொரு நபியிடத்தும் முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய ஒளி தொடர்ச்சியாக இடம் பெற்றிருந்தது என்பதன் காரணம் ஆக அந்த அடிப்படையிலும் நபிகள் பெருமானார் பற்றிப் பாடுவதற்கு ஒரு வாய்ப்புக் கிட்டும்.

ஆனால் காப்பியத்தின் அமைப்பிற்கு ஏற்ப இப்படிப் பாராட்டும் பகுதி மிகச் சிறியதாகவே இருக்க முடியும்.

இராஜநாயகக் காப்பியம் சுலைமான் நபிகள் பற்றியது ஆகையால் கடவுள் வாழ்த்துப் படலத்திலும், பிற இடங்களிலும் ஆதம் (அலை) தொடங்கி, சுலைமான் (அலை) வரை வந்த நபி மார்களிடத்தில் முகம்மது நபி (ஸல்) அவர்களுடைய ஒளி தங்கி இருந்தது; முகம்மது நபி (ஸல்) அவர்கள் வருகையை அவர்கள் எல்லோருமே முன் கூட்டியே அறிவித்திருக்கிறார்கள் என்ற மட்டில்தான் பாட முடியும்.

வண்ணக் களஞ்சியப் புலவருக்கு இப்படிச் செய்வதில் மன நிறைவு ஏற்படவில்லை. எனவே நபிகள் பெருமானார் பற்றிப் பாடுவதற்காகவே காப்பியத்தின் 20ஆம் படலம் ஆகிய ''கருபத் துல்லாவில் குறுபான் கொடுத்த படலம்'' அமைத்து இருக்கிறார்.

அதன்படி,

சுலைமான் (அலை) அவர்கள் ஒரு தினம், ஒரு தலம் குறித்து, அங்கு ஏகத் தன் நால்வகைத் தளங்களும் புடைசூழ, காற்று வாகனத்து, பரமதானியில் அமர்ந்து அந்தர மார்க்கமாகச் சென்றார். காற்றும் பரமதானி சுமந்து சென்றது.

இடைவழியில் மக்கமா நகர் கருபாவின் மேல்உறப்பறந்தது.

அவ்வேளையில் ''நபிமார்களுடைய வரிசையில் நமக்குப் பின்னர் ஒருவர் உதிக்கப் போகிறார். அவர் பிறக்கப் பேறு

படைத்த தலம் இது'' என்று தம்மவர்க்குச் சுலைமான் (அலை) அவர்கள் சுட்டிக் காட்டிய அவ்வளவில் விமானம் குறித்த தலத்தினில் சார்ந்தது: இறங்கியது.

சுலைமான் (அலை) அவர்களுடைய இச்செய்கை குறித்து கஃபா[1] அழுதது என்று புலவர் பாடுவார்.

எத்தகைய கஃபா என்பதனைக் கவிக் கூற்றாக

''அமரர்கள் கரத்தினால் இயற்ற
எத்தலத்தினிலும் வியன் உற விளங்கி
இலங்கு ஒளி கதிர் மதி இருபால்
நித்தம் நித்தமும் சாய்ந்து ஓட மேலவர்கள்
தவம் எலாம் நிறைவு உற உலக
மத்திமத்து உதித்த கஃபதுல்லா...'' (20:3)

என்பார்.

உருக்கமான தொனியில் அது அழவும், ''ஏன் அழுதாய்?'' என்று இறைவன் கேட்க அக்கஃபத்துல்லா...

''...உன் நபிகளில் ஒருவோர் தம்
தளமுடன் எனது சிகரத்தின்மீது
தாவியே பறந்து செல்கின்றார்
தெளிவின் என் இடத்தில் இழிந்திலர் உன்னை
தொழுதிலர், திக்று[2] செய்திலரே'' (20:4)

என்று கூறிற்று.

இதனோடும் அமையாமல் தான் அழுததற்குப் பிறிதொரு காரணத்தையும் அது கூறியது.

''இது அலாது எனைச் சூழ்தர உனக்கு இணையாய்
இயற்றிய புத்துகளினை[3] வைத்து
அதிவித வணக்கம் புரிந்தனர் கொடியோர்
ஆகையால் அழுதனன்...'' (20:5)

என்றது.

அதற்கு அமைதி கூறும் வகையில் அல்லாஹ் கூறியதாகப் புலவர்,

---

1. கஃபா—கஃபத்துல்லா—இறைவனைக் குறித்துத் தொழுகை நடத்தும் இடம்.
2. திக்று—இறைவனைத் தியானித்தல்
3. புத்துகள்—உருவச்சிலைகள்; வழிபாடு செய்யப்பெறுவன

"துறவினர் உயிரே! பின்னைநாள் உன்னைச்
சுசூது இடு நெற்றிகள் கொண்டு
நிறைவு செய்து அருள்வேன் என் திருஒளியாய்
நித்தில மா மயில் வடிவாய்
பொறை தரு நபிகள் எவர்க்கும் நாயகமாய்
புண்ணியப் பொருளின் உட்பொருளாய்
அறைதரு கபீபு முகம்மது நபியை
அனுப்புவேன் உனது பால் அதனில் (20:6)

இருகதி குறுவான்[1] அதையும் உன்னிடமே
இறக்குவன் உனைப் பரிபாலித்து
அருளவும் வணங்கித் துதிக்கவும் மிகுந்தோர்
தமை அமைத்து அருள்வன் அன்பு ஓங்கி
பெருகு பார்ப்பு அதனை தேடி வந்து அடையும்
பறவை போல், பிள்ளையைத் தேடி
வரும் அ(ன்)னையினைப் போல் எனது கல்க்குகள்[2] உன்
மாட்டினில் வருகவும் புரிவேன் (20:7)

திடம் சில பறுலு[3] ஆனதையும் நின் மருங்கில்
சேர்ப்பன் இ புத்துகளினையும்
எடுத்து எறிந்திட செய்திடுவன் உன்தனை துய்து
ஆக்குவன் எண்ணம் உற்று உருக்கம்
தொடுத்து இரங்குவது ஏன்? அழுதிடல் அகற்று என்று
ஓதினன் தூயவன் அது கேட்டு
அடல் பெரும் கஃபா துன்புறு நிறைபோய்
அனந்த இன்பங்கள் கொண்டதுவே. (20:8)

என்று பாடுவார்.

இப்படி கஃபா அழுததனைச் சுலைமான் (அலை) அவர்களுக்கு முதலவன் அறியச் செய்தான். உடனே அவர் சேனையோடு எழுந்து மருத்து (காற்று) வாகன மிசை ஏறி, பறந்து மக்கமா நகரில் வந்து இறங்கினார்.

அவ்வாறு சேர்ந்த உடன்

"...கஃபத்துல்லா உள்
புகுந்து அதைச் சூழ்ந்து அணி அணியாய்

1. குறுவான்—திருக்குர்ஆன்
2. கல்க்குகள்—உயிர்கள்; மனித இனம்
3. பறுலு—நித்தியக் கடமைகள்

இருந்த புத்து அனைத்தும் ஏவலோர் தமைவிட்டு
எடுத்து எறிந்திட புரிந்து இறையை
பரிந்து அதில் இருந்து வணங்கி உள் கனிந்து
பரவினர் கருணையங்கடலே'' (20:10)

பின் அத்திரி, இடபம், வெள்ளாடு, கொறி, தகர் முதலிய விலங்குகள் பல அறுத்து குறுபான் கொடுத்தார். பெருவிருந்திட்டார். பசியினால் வருந்து மிசிக்கீன்களை அழைத்து அளவில்லாத பொருள்களைத் தானம் கொடுத்தார்.

பின் அங்கு குழுமி இருந்தவர்களிடம்,

''உற்ற மேலவன் தன் அருளினால் கஃபா
உதித்து அருள் இத் தலந்தனிலே
குற்றம் அற்று உயரும் குறைசி அம் குலத்தின்
கொழுந்து அது ஆய் வேத காரணர் ஆய்
வெற்றியும் விருதும் மிக பெறுபவராய்
விண்ணவர் புகழ் மணி விளக்காய்
நற்றவ நபிகள் எவர்க்கும் நாயகமாய்
வருவர் ஓர் நபி நவம் ஓங்க (20:14)

மடல் செழுங் கமல மலர்ப்பதம் பணியா
மருவலர் உயிரை வாட்கு இரையாக்
கொடுப்பர் இ புவி ஓர் கவிகையில் புரப்பர்
குற்றம் ஒன்றும் அணுக இலாது எவையும்
கடக்கும் மெய்ப்பொருளை பழிப்பவர் தம்மை சங்
கரித்து அருள் பீசபீல்[1] இயற்றி
திடப்படும் தமது வேத கற்பனை ஆம்
தீன் பயிர் மிக வளர்த்திடுவார் (20:15)

அண்டலர்க்கு இடி ஏறு எனும் இவர் வரும்நாள்
அகிலத்தில் இருந்து உளத்து ஈமான்
கொண்டவர் எவரும் சுவன மங்கை யர்க்கு
கொழு நராய் சோபனம் பெறுவார்.
விண்டு அருள் கலிமா உரைத்திடாது இவர்க்கு
விலகிய மாறு செய்வோர்கள்
கண்டு அளவிடுதற்கு அரு நெடுங்காலம்
கனன்று எரி நரகிடைக் கிடப்பார்'' (20:16)

என்று கூறினார் சுலைமான் (அலை) அவர்கள்.

---

1. பீசபீல்—மார்க்கப்போர்

இப்படி நபி அவர்கள் வழி கூறியதோடும் அமைதி பெறாத வண்ணக் களஞ்சியப் புலவர், தம் கூற்றாக, நபிகள் பெருமான் அவர்களைப் பற்றி மிக அற்புதமான ஏழு விருத்தங்களைப் பாடி உள்ளார். படித்து மகிழத் தக்கன அவை:

"ஆகம கலைகட்கு அனந்த ஆபரண
அழகு எனும் திருப் பெயர் அரசை,
ஏக சிற்பர மெய்ப் பொருள் ஒளி தெளிவை
எமக்கு எமை காட்டு தர்ப்பணத்தை,[1]
சேகர பல கற்பனை கடந்து உயர்ந்த
செம்மலை, நரர் உயிர்க்கு உயிராம்
தேக தத்துவ நிர்மல மருமதை
தியானம் செய் **மனங்களே** மனங்கள். (20:20)

வள்ளலை ஒருநான் மறைக்கு அரும்பொருளை
மறைபடாது இலங்கும் ஒண் மதியை
தள்ளுதற்கு அரு மும்மலத்தையும் கடந்தோர்
தவத்தினுள் விளங்கிய கனியை
கள் அவிழ் மரவ மலர்த்தொடைப் புயரை
கருணையங் கடலினில் பிறந்த
தெள் அமுது அனைய முகம்மது நபியைத்
தெரிசிக்கும் **கண்களே** கண்கள். (20:21)

எப்புவியினிலும் இருந்து அரசு இயற்றும்
ஏகபூரண வர(ம்) உதயத்தை
அற்புத வடிவை ஞான லோசனத்தை[2]
அளவில் ஆனந்த வாருதியை
ஒப்பு அகன்று அகன்ற வெளியில் வாழ் ஒளியை
உள் இருள் அகற்று செஞ்சுடரை
மைப்புயல் கவிகை நபிகள் நாயகத்தை
வாழ்த்தல் செய் **வாய்களே** வாய்கள். (20:22)

அரிய விண்ணவர்கள் சிரம் மிசை உறையும்
மலர் சரணம் அம்புய நிதியை
உருஅரு அதனில் நடுநிலை பொருந்தும்
உத்தம காட்சி உற்பவத்தை

1. தர்ப்பணம்—கண்ணாடி.
2. லோசனம்-கண்

சரத நித்திய சோபனமணி சுவனம்
தனில் மகுமூது எனும் யானை
கிரி மிசை உலவு நபி தம்மைத் துதிப்பக்
கேட்கும் அச் **செவிகளே** செவிகள். (20:23)

இணைவிழி மணியை உலகின் மங்கையர்கள்
எவர்க்கும் மன்றாட்டு* அருள் மானை
உணர்வதற்கு அரிய தனிமுதல் அறுசில்
உறு புலிக்கு அளித்து அவர் ஈன்ற
அணி அரிஏறு என்றிடும் இரு புதல்வர்
அங்கையால் தொட மகிழ் நபிதம்
மணி ஒளிர் திருமேனியினில் கஸ்தூரி
வாசம் கொள் **நாசியே** நாசி. (20;24)

கந்தமும் தவத்தோர் கதிகளும் நிறைந்து
கடல்வளை புவி தொடாது உயர்ந்து
தந்த வெண்பிறை பாந்தளும் வரிப் புலியும்
தாழ்ந்து பாதலம் கடந்து உருவி
அந்தரம், அவனி, கதிர், மதி அமைத்தோன்
அறுசினில் கபுசொடு நடந்து
சுந்தரம் குலவு முஸ்தபா சரணம்
தொடும் இரு **கைகளே** கைகள். (20:25)

பாரினில் நபிகள் எவர்களும் இவர் உம்
மத்தின் ஓர் பதவிகள் அருள் என்று
ஆரணம் உதவு தனிப்பொருள் இறைபால்
அனுதினம் துவா இரந்து அருள
வாரணத்து அரசர் நவமணி முடிகள்
மலர்ப்பதம் இறைஞ்ச ஈன்று உதித்த
காரணக் கடவுள் அகுமதைப் பிரதட்ச
சணம் வரு **கால்களே** கால்கள். (20:26)

இவ்விருத்தங்களில் ஒரு சிறப்பினைக் காணலாம்.

---

* மன்றாட்டு-இதன் விளக்கம் சீறாப்புராணம் பாத்திமா திருமணப் படலம் 51-ஆம் பாடலில் காணலாம்; இரு புதல்வர்: ஹஸன், ஹுஸைன்.

இறைவனைத் தியானிப்பது ஆயினும் சரி, இறைவன் திருத் தூதரான நபிகள் பெருமானாரைப் புகழ்ந்து பாராட்டுவது ஆயினும் சரி, ஐம்புலன்களும் ஒரு சேர, ஒன்றித்த நிலையில் அமைய வேண்டும்.

ஐம்பொறிகளின் பேறு பற்றிக் குறிப்பிட 21, 22, 23, 24 ஆகிய விருத்தங்களையும், செயற்பாடு மேவும் மெய்யின் இயக்கம் கர, சரணாதிகளால் அமைவதால், அவைக்காக 25, 26ஆம் விருத்தங் களையும், ஆக ஆறு விருத்தங்களைப் பாடி உள்ளார்.

ஆனால் ஐம்பொறிகட்கும் மூலமாக, அமைந்ததும், அவை அனைத்தையும் அடக்கி, நெறியின் புறஞ்செலாவாறு ஆள்வதும், மனமே ஆகலின், அதற்கு முதல் இடம் தந்துள்ளார் (பா. 20).

மனம் ஈடுபடவில்லை என்றால் பிற ஈடுபடின் என், ஈடுபடா விடின் என்? அவை பயனின்று. ஈடுபாட்டிற்கே உரியது மனம் ஒன்று தான். எனவே அது குறித்து முதல் விருத்தத்தில் குறிப்பிட்டு விடுகிறார்.

நினைக்க மட நெஞ்சும், வாழ்த்த வாயும் பெற்ற வண்ணக் களஞ்சியப் புலவர், வாய்ப்பு அமைத்துக் கொண்டு வாயாரப் பாடு கிறார் வள்ளல் புகழினை.

அவர் தொடரிலேயே கூறுவதானால், ''வினவு உறுசுவையைக் காணில் விடுவதோ செந்தேன் ஈயே'' என்றமையலாம். (21:19)

# 9. நாட்டு நடப்பு

உயிரினங்கள் அனைத்திற்கும் மிக்க சக்திபெற்ற உணர்வு, பால் உணர்வே ஆகும். காரணம் என்ன என்றால் இன விருத்திக்கு இந்த உணர்வே மூலாதாரம் ஆனது. இந்த உணர்வே இல்லா விட்டால் இனம் விருத்தி அடைய வழி இல்லாமல் அழிந்து போய் விடும்.

ஆகையால்தான் மனித உயிரினம் என்பதோடன்றித் தாவர இனங்களிலும் கூட இனவிருத்திக்கான வழி முறைகள் இயற்கை யாக அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

இத்தகைய மூலாதாரமான வலிமை மிக்க உணர்வை அறவே அழித்து விடமுடியாது. அதே சமயத்தில் இவ்வுணர்வு எப்படி வேண்டுமானாலும் வெளிப்படலாம் என்று விட்டுவிட்டால் சமுதாயம் என்ற ஒன்றே இல்லாமல் போய்விடும்.

ஆகையால்தான் இவ்விரண்டனுக்கும் நடுவே இவ்வுணர்வை விதிக்கப்பட்ட ஒரு வரன் முறையிலே வெளிப்படுத்திக் கொள்வ தற்காகத் திருமணம் என்ற ஓர் ஏற்பாட்டைச் செய்து கொண் டிருக்கிறோம்.

திருமணத்தின் காரணம் ஆக, மக்கள் பிறக்க, இனம் வளர, சமுதாயம் தோன்ற, இவர்களுக்கு இடையே ஒரு பாசமும், பந்த மும் ஏற்பட, அவற்றின் காரணம் ஆக அன்புக்கும், உறவுக்கும், அறத்திற்கும், பண்புக்கும் வழி உண்டாக, நாகரிகமான சமுதாயம் தோன்றுகிறது.

இல்லாவிட்டால் விலங்கு இனம் போன்ற வாழ்வுதான் வாழ முடியும். அறத்தின் வழி வாழக்கூடிய இல்லறம், திருமணத்தின் மூலமாகத்தான் சாத்தியம் ஆகும். ஆகையால் தான் இஸ்லாம் துறவறத்தை ஆதரிக்காமல் இல்லறத்தை ஆதரிக்கிறது.

முஸ்லிம்களுடைய முக்கியமான கடமைகள் இருவகைப்படும். ஒன்று பறுலு என்பதாகும்; மற்றது சுன்னத் எனப்படும்.

பறுலு என்பது ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயமாக நிறைவேற்றியே தீரவேண்டிய கடமைகள் ஆகும். தவறில் அவன் தண்டனைக்கு உள்ளாவான்.

இரண்டாவதானது சுன்னத். நபிகள் பெருமானாருடைய சொல், செயல், ஒப்புதல் அனைத்தும் இதற்குள் அடங்கும். இந்தச் சுன்னத்தின் படி நடந்தால் நன்மை உண்டு; லாபம் உண்டு. அதன்படி நடவாவிடிலோ எதிர்மறையாக நன்மையோ, லாபமோ இல்லை என்பது தானே தவிர தண்டனை என்பது இல்லை.

அதே சமயத்தில் அந்த சுன்னத்தை எந்த முஸ்லிமும் அலட்சியப்படுத்தி விடமுடியாது.

முகம்மது நபி (ஸல்) அவர்களை மக்களுக்கு ஓர் அழகிய முன் மாதிரி என்று அல்லாஹ்வே குறிப்பிட்டு இருக்கிறான் என்பதனை முன்னர்க் கண்டோம். அத்தகைய முன் மாதிரியானவருடைய சொல்லையும் செயலையும் பின்பற்றுவது, இறைவனுடைய கட்டளைக்கு அடிபணிவது போலவே ஆகும்.

ஆகையால் முஸ்லிம்களிடையே, ஆண்மை உடையவனும், தன் மனைவியைப் போஷிக்கிற வசதி உடையவனும் திருமணம் செய்து கொள்வது சுன்னத் ஆகும்.

இத்திருமணம் (அல்லது) நிக்காஹ் மிக எளிதான முறையில் நடக்க இஸ்லாமிய நெறி முறை, வழி வகுத்திருக்கிறது. இஸ்லாத்தின்படி திருமணம் என்பது ஒரு வாழ்க்கை ஒப்பந்தமே ஆகும். இதற்குத் தேவையானது என்ன என்றால் சம்பந்தப்பட்ட ஆணும் பெண்ணும் ஒருவர் மற்றவரைத் தன் வாழ்க்கைத் துணை ஆக ஏற்றுக் கொண்டு விட்டதாக இரண்டு சாட்சிகளின் முன்னால் சொல்வது.

பெண்ணை மதிக்கும் வகையில் அவளுக்கு, மணமகன் 'மஹர்' எனப்படும் ஒரு தொகையைக் கொடுப்பது.

இப்படியாக இருவரும் தம்முடைய சம்மதத்தை அறிவிப்பதற்கு முன்னால் குதுபா ஓதுவது வழக்கம். [குதுபா-குத்பா என்ற சொல் பொதுவாகப்போதனை உரைத்தல், என்று பொருள் தரும். இங்கே கணவன் மனைவி ஆகப்போகிறவர்களுக்கு, அவர்கள் எப்படி இறைவனுடைய கட்டளைகட்கு உட்பட்டு நடக்கவேண்டும் என்றும் போதித்து இறைவனுடைய ஏகத்துவத்திலும், நபி பெருமான் இறைத்தூதர் என்பதிலும், அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர்களாக இருக்க வேண்டும் என்றும் கூறி திருக்குர்ஆனில் இருந்து சில குறிப்பிட்ட வசனங்களை ஓதுவதும் ஆகும்.]

அவர்களுடைய சம்மதம் தெரிவிக்கப்பட்ட உடன் மண மக்களின் நல்வாழ்விற்காக துஆ இறைஞ்சுவதும் பழக்கமாகி வந்தது.

அதே சமயத்தில் திருமண நாள் அன்று விருந்து கொடுப்பதும், திருமண நாளின் பின்னர் மணமகன் 'வலிமா' என்று சொல்லப் படும் விருந்து கொடுப்பதும் பழக்கம் ஆகியது.

இந்த வலிமா என்ற விருந்துக்கு அழைக்கப்படும் ஒவ்வொரு வரும் அதற்குப் போவது அவசியம் என்று கொள்ளப்பட்டது. திருமணம் என்ற நிகழ்ச்சி புதியதொரு குடும்பத்தை உண்டாக்கு வ்தற்கு அஸ்திவாரமாக அமைவதால் அது மக்களிடையே பிர கடனப்படுத்தப் படவேண்டும் என்ற காரணத்திற்காக, மற்றவர் களை அழைக்கவேண்டும் என்பதோடு அல்லாமல் அது ஒரு மகிழ்ச்சிக்கு உரிய சம்பவம் ஆதலால் தஃப் (தப்ஸ-சிறு பறை) பறை முழக்கலாம் என்றும், இல்லறத்தின் மேன்மையையும் இறைக் கட்டளையின்படி இல்லறம் நடத்தவேண்டிய அவசியத்தையும் எடுத்துக் கூறும் வகையில் பாடல்கள் பாடலாம் என்றும் நபிகள் நாயகமே அனுமதித்து இருந்ததாகக் கூறப்படுகிறது.

இந்த தப்ஸ என்பதனை இன்றுகூட தமிழ்நாட்டு முஸ்லிம்கள் அறிவார்கள். திருமணச் சமயங்களில் பயன்படுத்து கின்றனர்.

நபிகள் நாயகம் அவர்கள் வாக்குப்படி, திருமணத்திற்கு முன் பெண்ணை ஒருவன் பார்த்துத் திருமணம் செய்து கொள்ளுவதற்கு முடிவு செய்து கொள்ளவேண்டும் என்று இருக்கிறது.

ஆனால், எக்காரணத்தினாலோ, 'பர்தா' என்ற முறைபழக்கத்திற்கு வந்த பிறகு முஸ்லிம்களிடையே பெரும்பாலும் ஆண்மகன் தனக்கு வரப்போகும் வாழ்க்கைத் துணைவியைத் திருமணத்திற்கு முன் பார்ப்பது இல்லை.

அவனுடைய தாயோ, சகோதரியோ, நெருங்கிய பெண் உறவினரோ தாம், பெண்ணைப் பார்த்து அவனிடம் சொல்லி அவனுடைய சம்மதத்தைக் கேட்டுத் திருமணத்தை முடிவு செய்கிறார்கள்.

இந்த நிலையில் நிக்காஹ் நடக்கும் பொழுது சாட்சிகளுக்கு முன் நேரிடையாக மணப்பெண் வந்து தன்னுடைய சம்மதத்தைச் சொல்வது இல்லை.

மணப் பெண்ணுடைய வலிக்காரன் என்று சொல்லக் கூடியவர் (பிரதிநிதி), அவள் சம்மத்தைக் கேட்டு வந்து சாட்சிகள் முன்னிலையில் மணமகனிடம் சொல்ல, அவனும் தன்சம்மதம் தர திருமணம் நிறைவேறுகிறது.

யார் யார் இவ்வாறு வலிக்காரனாக இருக்க முடியும் என்பதனைச் சட்டம் விதித்து இருக்கிறது; இது மணப்பெண்ணின் பாதுகாப்புக்காக.

உதாரணம் ஆக "ஷாபி மதகபில்" மணமகளுடைய தந்தை, தந்தை இல்லாவிட்டால் தந்தையின் தந்தை, போன்ற மணமகளின் நலனில் அக்கறை உடையவர்தாம் வலிக்காரன் ஆகச் செயற்பட முடியும்.

இந்நிலையில் திருமணத்தின்போது மணமகளும், மணமகனும் ஒரே தவிசில் வந்து அமர்ந்தனர் என்று புலவர்கள் பாடி இருக்கிறார்கள்.

உமறுப்புலவரே, நபிகள் பெருமானார் அவர்கள் கதீஜா நாயகியை மணம் புரிந்து கொண்டதனைப் பாடப் புகுந்தபோது

"கணிப்ப அரும் கதிர்கள் பாய் மணித் தவிசில்
முகம்மது கவின்பெற இருந்தார்".
(சீறா 1:23:104)

என்றும் கதீஜா நாயகியரை

"பேரழகு ஒழுகும் பெண் நலம் கனியை
... கரும்பை...அமுத நாயகியை...முகம்மது
மணித்தவிசு இடத்து மருங்கின் இருத்தினரே".
(சீறா 1:23:111)

என்றும் பாடுகிறார்.

இது போலவே அலி (றலி) அவர்கள் பாத்திமா நாயகியை மணம் புரிந்து கொண்டபோது

... செவ்வி
இடுசுடர்த் தவிசின் மீதில் அலி இனிது இருந்தார் அன்றே".
(சீறா: 3:15:167)

என்றும்

"வந்த பொன் மயிலை...

அந்தரத்து இழிந்த,மின்போல் அலி இடத்து
இருத்தினாரால்". (சீறா: 3:15:180)

என்றும் பாடுகிறார்.

தமிழ்நாட்டு முஸ்லிம்களிடையே இத்தகைய பழக்கம் இல்லை. உமறுப்புலவர் சீறாப்புராணம் பாடிய காலத்தில் இத்தகைய பழக்கம் இருந்ததா, இல்லையா, என்று சொல்வதற்குத் திட்ட வட்டமான ஆதாரம் இல்லை.

எனினும், வண்ணக் களஞ்சியப் புலவரும் இந்த மரபையே பின்பற்றிப் பாடுகிறார்.

சுலைமான் (அலை) அவர்களுக்கும் பல்கீசுக்கும் நடந்த திருமணம் பற்றிக் கூறும்பொழுது,

"முரசம் ஆர்த்திட, பெரியவர் ஆசிகள் முழங்க
பரவு சோபன மயிலை, அற்புத குணவதியை
சரத பூரண மதியை பல்கீசு எனும் தவத்தை
இருபதி கதிப் பொருள் நபி இடத்து இருத்தினரே".
(34:139)

என்பார்.

இவ்விருத்தத்தினுள் இருவரும் அருகருகே அமர்ந்திருந்தனர் என்று சொல்வதோடு, அச்சமயம் முரசம் ஆர்த்தது என்றும் பாடி இருப்பது நோக்கத்தக்கது.

கனவு கண்டு மணம் செய்த படலத்தில் இன்னும் சில விஷயங்களையும் சொல்கிறார்,

"உணர்ந்தவர் புகல் கல்யாண ஓரையின் தினத்தின் மோதீன்
குணம் தரும் உறவோர் தம்மைக் கூட்டியே பந்தரிட்டு
கணம் தரு நகர் உள்ளோர் யாவருக்கும் மங்கலம் என்று ஓதி
வ(ண்)ணம் தரு வாய்மை வேத வல்லவர் தமக்கும் சொல்லி
(9:62)

அழைத்து இனிது இருத்தி பெண்ணை
அலங்கரித்து அகத்தில் வைத்து
மழை தடம் கரத்தினானை மணம்
சிறப்பு இயற்றி கூண்டும்
குழை கண்ணார் குரவை ஆர்ப்ப
ஒலித்து வார் முரசு இயம்ப
தழைத்து உள குழுவின் நாப்பண்
ஆசனம் தனில் இருத்தி (9:63)

சீதனம் 'மகர்' பொருத்தம் செப்ப நூல்
முறை வழாமல்
ஆதினத்து இளவலுக்கும் அருமருந்து
அனைய செஞ்சொல்
மாது அனம் தனக்கும் மேலோர்
மருமலர் மாலை சூட்டி
போது அனந்தமும் கொள் வாசம்
மண அறை புகுத்தினாரே".
(9:64)

இப்பாடல்களில் 'கல்யாண ஓரையின் தினம்,' என்ற சொல் ஆட்சியும் 'குழைக் கண்ணார் குரவை ஆர்ப்ப' என்ற சொல் ஆட்சியும், 'சீதனம் மகர் பொருத்தம்' என்ற சொல் ஆட்சியும் கூர்ந்து நோக்கத்தக்கன.

'ஓரை' என்ற சொல்லுக்கு இராசி, முகூர்த்தம், நேரம், 2½ நாழிகை கொண்ட காலம் எனும் பொருள்கள் உண்டு.

தமிழ் நாட்டு நடப்பின் அடிப்படையில் இவ்வாறு "கல்யாண ஓரையின் தினம்" என்று புலவர் ஆண்டிருக்கிறார்.

அது போலவே குரவை ஆர்ப்பதும், தமிழ் நாட்டிற்கே உரிய தனிச்சிறப்பு ஆகும். சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றிருக்கும் ஆய்ச்சியர் குரவையும், குன்றக் குரவையும் குரவை பற்றிய செய்திகளை விரித்து உரைக்கின்றன.

ஆனால் இந்த குரவை என்னும் பெண்கள் ஒலி எழுப்புவது, இன்றும் தமிழ் முஸ்லிம்களிடையே மங்கல விழாக்களில் பழக்கமாக இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

அடுத்துக் காண வேண்டியது 'மகர்' என்பது. இஸ்லாமியச் சட்டமும் இதனையே குறிப்பிடும். நபிகள்நாயகம் காலம் தொட்டு இது அமுலில் இருக்கிறது என்றும் கண்டோம்.

ஆனால், சீதனம் என்பதோ தமிழ்நாட்டு மரபு. இம் மரபை தமிழ் நாட்டு முஸ்லிம்கள் இன்றும் பின்பற்றி வருவதனைப் பார்க்கலாம்.

வண்ணக் களஞ்சியப் புலவரின் இப்பாடல்களைப் பார்க்கும் பொழுது சீறாப்புராணத்தில் உமறுப்புலவருடைய இரு பாடல்களும் பொருத்தமாக அமைந்திருப்பதனைப் பார்க்கிறோம்.

''இருவரும் சம்மதித்து உரைத்தார் என
குறைஷி குலத்து அரசர் இதயம் கூர் ந்து
மரு வரு பூங் குழலாட்கும், முகம்மதுக்கும்
மண நாளை வகுத்துக் கூறி
தெரி தரு **சீதனப்** பொருளும் இன்னது
என வகைவகையாய்த் தெளியச் சாற்றி
பொரு அரிய பொன் பிளவும், வெள்ளிலையும்
தருக எனப் புகழ்ந்திட்டார் ஆல்''.

(சீறா. 1:22:61)

''வெள்ளிலை பாகு ஏலம் இலவங்கம்
உடன் தக்கோலம் விரை கற்பூரம்
அள்ளிய சந்தனச் சேறும், பொற்கலத்தில்
குவைவித்து எடுத்து அருள வாங்கி
வள்ளியோர்க்கு இனிது ஈந்து, மறையோர்க்கும்
எடுத்து அருளி, வலக்கை சேர்த்தி
தெள்ளிய நன் **முகூர்த்தம்** முதல் திங்கள்
என வகுத்து உரைத்தார் செவ்வியோரே''.

(சீறா. 1:22:62)

இது அன்றியும் நபிகள் நாயகம் கதீஜா பிராட்டியாருக்கு

''... சம்மதித்து ஐந்நூறு
இரசிதம் **மகர்** எனப் பொருந்தி

பிரியம் உற்று உரைத்தனர் '' (சீறா. 1:23:113)

பின்,

''செறி தரும் மடவார் **குரவைகள்** இயம்பத்
திரளொடு பல்லியம் ஆர்ப்ப...

...குலக் கதீஜா எனும் கொடியும்
மறைபடாது எழுந்த மதி முகம்மதுவும்
மண அறை புகுந்தனர் அன்றே'' (சீறா. 1:23:115

அலி (றலி) அவர்கள் பாத்திமா நாயகிக்குக் கொடுத்த மகர் பற்றி உமறுப்புலவர் பாடுவது வேறு ஒரு தரத்தைச் சேர்ந்தது.

அவ்விருவர்க்கும் திருமணத்தை ஜிப்ரீல் (அலை), மீககாயீல் (அலை), இசுறாபீல் (அலை) ஆகியோர் சாட்சியாக இறைவனே மகருடன் நிர்ணயித்தான் என்றும், ஜிப்ரீல் அவர்கள், முகம்மது (ஸல்) அவர்களிடம் வந்து சொன்னார் என்றும் உமறு பாடுவார்.

• பொன் நகர் விளக்கி பின்னர் புகழ் தர **மகரும்** நாட்டி
என் உடன் இசுறாபீல், மீக்காயீலும் சாட்சியே அ
பன்ன அரு அலியார்க்கு இன்ப பாத்திமா தமை நிக்காகு
முன்னிய தருத்துரபாவின் முடித்தனன் இறைவன் அன்றே.''
(சீறா. 3:15:32)

''ஐந்நூறு இரசிதத்து அரிய காசு மகர் என வலிக்கன்
ஆதி வதுவையை''
(சீறா. 3:15:43

நிர்ணயித்தான்.

அதனைப் பாத்திமாவிடம் சொல்வதற்காகப் பெருமானார் இசைந்தார்கள். அப்படிச் சொன்னபோது பாத்திமா நாயகி அந்த மகர்க்கு அலி (றலி) அவர்களை மணந்து கொள்ளத் தனக்கு விருப்பமில்லை என்று கூறி விடுகிறார்.

அப்படிப் பாத்திமா நாயகி அவர்கள் சொன்னது பெருமானார் உட்பட எல்லோருடைய உள்ளத்திலும் மலைவினை உண்டாக்கிற்று.

அப்பொழுது ஜிப்ரீல் அவர்கள் ''போற்று நும் புதல்வி உள்ளத்து உறைகின்ற மகரைக் கேட்டு வருக என்று உம்பர் போற்றும் இறையவன் அருளிச் செய்தான்'' என்று கூற நபிகள் பெருமானார் தம் பாவைக்கு மொழிந்தார்.

கேட்டு, நூல் எனும் மருங்குலார் நுவலரும் உவகை எய்தி சீலம் உற்று அறிவினோடு ஒரு மொழி செப்பலுற்றார்.

''இறுதியில் பவத்தின் மாதர்
என் ஷபா அத் ஈடேற்றம்
பெற மன்றாட்டு அருள வேண்டி
பேரருள் கபூல் செய்தானேல்
உறுதி நன்மகர் பெற்றேன் என்று
உரைத்தனர் உரைத்த மாற்றம்
சிறை குலாம் வள்ளல் ஆதி
திரு முன் விண்ணப்பம் செய்தார்''

''நபியை மான் பாத்திமாவை
நரர் புலி அலியை ஏந்த
புவியினும் உவந்தோர் செய்யும்
பிழை பொறுத்திடுவது ஆக
அவியும் பிற்காலம் மன்றாட்டு
அருளுவன் என்ன ஆதிக்
கவின் உறச் சொன்னான் கேட்டு
ஜிபுறயீல் கடிதின் வந்தார்''.

(சீறா: 3;15:51,52)

(ஷபாஅத்-பரிந்து பேசுதல்; அதாவது இறுதி நாளன்று இறைவன் முன்னால் பிறர்க்காகப் பரிந்து பேசுதல்)

இவ்விரு பாடல்களும் பாத்திமா நாயகியின் உள்ளத்தில் மனித வர்க்கத்தின் மாட்டு தோன்றி இருந்த பேரருளையும் அந்தப் பேரருளைப் பாராட்டிப் பேராளன் அதற்கு இசைந்ததை யும் எடுத்துக் காட்டுகின்றன.

ஆனால் இதிலும் உமறுப் புலவர் இன்னமும் ஒரு படி மேலே சென்று விடுகின்றார்.

இறைவன் இணக்கத்தினை ஜிப்ரீல் சொன்னதைக் கேட்டும் அமைதி பெறாமல், இறைவன் அதனை எழுத்து மூலமாகத் தர வேண்டும் என்று பாத்திமா நாயகி கோர, இறைவன் அதனையும் மகிழ்வுடன் ஏற்று (அவ்வாறே)

''பாவையர் உரைத்த வண்ணம்
பச்சை அம் கடுதாசின் கண்
மேவரக் கனக மையால் வரிபட
விளங்கத் தீட்டி
சேவையின் நினைவும் மாறாச்
செவ்விய ஜிபுறயீல் பால்
ஈவது என்ன ஓதி இறையவன்
அளித்திட்டான் (ஆல்)''.

(சீறா:3:15:55)

என்று கூறுவார்.

இப்பாக்களை இங்கே எடுத்துக் காட்டுவதன் நோக்கம் எந்த அளவிற்கு உமறுப் புலவர் அவர்களை வண்ணக் களஞ்சியப் புலவர் புகழ்ந்து பாராட்டிப் பின்பற்ற முயன்றிருக்கிறார் என்பதனை உணர்த்துவதே ஆகும்.

வண்ணக் களஞ்சியப் புலவர் திருமணத்தைப் பற்றிப் பேசும் பொழுதும் மரணத்தைப் பற்றிப் பேசும் பொழுதும் 'சடங்குகள்' செய்வதைக் குறிப்பிடுவார்.

இஸ்லாத்தில் திருமணம் சம்பந்தப் பட்டவரையில் தேவைகள் எவை எவை எனக் கண்டோம். உண்மையில் சடங்குகள் என்று சொல்வதற்கு இடம் இல்லை. ஆனால் அவர் வாழ்ந்த ஊர்களில் சடங்குகள் என்ற பெயரில் சில நிகழ்ச்சிகள் நடந்திருக்கவேண்டும்.

அவற்றைப் பற்றிப் பார்ப்பதற்கு முன்னர் திருமணத்தோடு சடங்குகளை அவர் சேர்த்துப்பாடி இருக்கும் இடத்தைப் பார்க்கலாம்.

இறைவிதி வழியிற் சேர்ந்தோர் இருவர்க்கும் வேத நீதி
முறை நெறி வழுவிலாது முயல் சடங்கு எவையும் செய்து
நிறை செய்து, ஒப்பனைகள் செய்து, நிலை செய் நிக்காகு செய்து
துறை செ(ய்)யும் தோன்றல் செங்கோல் தொன்னகர்க்கு அனுப்பல் செய்தார்
(28:33)

என்று பாடுவார்.

தமிழிலே உலா இலக்கியம் என்ற வகையே உண்டு. திருக் கைலாய ஞான உலா என்ற உலா இலக்கியமே முதலாகத் தோன்றியது என்பர். எனவே, அது ஆதி உலா எனவும் படும்.

அதனுள் சிவபெருமான் உலா வருவதாகவும், அவரைக்காண பக்த கோடிகள் திரண்டனர் எனவும் கூறுவர்.

உலாக்கண்ட மக்கள் மனநிலை (குறிப்பாகப் பெண்டிர்) எப்படி இருந்தது என்று அந்நூல் விரிவாகக் கூறுகிறது.

எழுபருவப் பெண்டிர் உருவ நிலை, உணர்வு நிலை, மனநிலை இவற்றை எல்லாம் விளக்கிப்பாடுவது மரபு.இம்மரபின் தோற்றம் வேறு; ஆனால் வழக்கிடை வந்தது வேறு.

இவ்வேழு பருவ நிலைகளும் இறைவனோடு ஒன்றுபட விழைகின்ற ஆன்மாவினுடைய, பல வளர் மனநிலைகளை விளக்கிடவே தோன்றின.

இவ்வாறு அமைப்பதன் காரணம் யாது எனின் இறைவனைத் தலைவனாகவும் ஆன்மாக்களை அந்தத் தலைவனுடன் ஒன்றி விடத் துடிக்கும் தலைவியராகவும் (காதலியராகவும்)கொள்வதன் அடிப்படைதான்.

இப்படி இறைவனைத் துதிக்கத் தோன்றிய உலா, பின்னர் அரசர்களைப் புகழும் உலா ஆகி, எவர் எவர், எவ்வெவ் ஆண் மகனை உயர்வாக நினைக்கிறார்களோ, அவர்களையும் உலாவில் தலைவனாக ஆக்கிப்பாடும் நிலை உண்டாகிவிட்டது.

இப்படி உலா வருபவனுடைய தன்மையும், தரமும் இறங்கி விட்டதற்கு ஏற்ப அவனைக் கண்டு மோகிக்கும் பெண்களுடைய இயல்பை வெற்றுக் காதல் அடிப்படையில் பாடிவிட்டனர்.

கற்பு என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது, எனக் கொண்டால் தன் மனைவி அல்லாத பிறிது ஒரு பெண்ணைப் பார்த்து ஆடவன் உடல் விழைச்சு கொள்ள விரும்புவது எப்படித் தவறு ஆகுமோ, அப்படியே தன் கணவன் அல்லாத பிறிது ஓர் ஆண்மகனைப் பார்த்து ஒரு பெண் காமுறுவதும்.

ஆகையால் ஒரு ஆண்மகனை உலா வரச் செய்து அந்த உலா வைக்காண வந்த பெண்கள் அத்தலைவனிடத்துத் தம்மனங் களைப்பறி கொடுத்து விடுவதாகப் பாடுவது சிறந்த கற்பு ஒழுக்கத் தினை நிலை நாட்டுவது ஆகாது.

இதனை உணர்ந்து கொண்டு காப்பியங்களுடே உலா ஒன்றனைப் புலவர்கள் பாடிய போதிலும் இந்த ஒழுக்க நெறிக்கு பங்கம் வராமல் செய்யவே முயன்றிருக்கிறார்கள்.

கம்பன் தன் இராம காதையில் உலாவிடற் படலம் என்ற ஒரு படலத்தைக் 'கடிமணப் படல'த்திற்கு முன்னால் பாடிவைத்தான்.

இராமனைத் திருமாலின் அவதாரமாகக் கம்பன் கொண்டு பாடியதால் அவனுடைய அழகைக் கண்டு இரசித்த பெண்களின் நிலையைப் பக்தி நெறியிலேயே விளக்கிவிட முடியும்.

கம்பனுக்குப் பின் வந்த காப்பிய கர்த்தாக்கள் ஓரளவு அவனைப் பின்பற்றிப் பாட முயன்றிருக்கிறார்கள்.

அதே சமயத்தில் தம்முடைய காப்பியத் தலைவனுடைய தூய்மைக்கும் மாண்புக்கும் எவ்விதக் குறைவும் வராமல் பார்த்துக் கொண்டும் இருக்கிறார்கள்.

உமறுப் புலவர், நபிகள் பெருமானார் கதீஜா பிராட்டி திரு மணம் நடந்த போது முகம்மது நபி (ஸல்) அவர்கள் உலா வந் தார்கள் என்பதனைத் தனியாகப் பாடாமல் மணம் புரி படலத் தின் பகுதியாகவே பாடி இருக்கிறார்.

பாத்திமா திருமணப்படலமும் அவ்வாறே அமைந்திருக்கிறது.

இவ்விரு உலாக்களிலும் மணமகன் ஆகிய முகம்மது நபி(ஸல்) அவர்களும், அலி (றலி) அவர்களும், குதிரை மேல் அமர்ந்து உலாச் சென்றனர் என்று குறித்துள்ளார்:

"தேன் நறுந் தெரியலார் செம்பொன்
நாட்டுறை வானவர் வாழ்த்திட
வாசி மேற் கொண்டார்" (சீறா 1:23:41)

"இலகிய மடவார் குரவைகள் இயம்ப
எழில் அலி வாசிமேற் கொண்டார்" (சீறா 3:15:121)

எனினும் உலாச் சென்ற இருவரையும், பார்த்த பெண்கள் மன நிலையைச் சற்று வேறுபடுத்தியே காட்டி விடுகிறார்.

மணம் புரி படலத்தில் முகம்மது நபி (ஸல்) அவர்களைக் காணும் பெண்கள் பருவ வேறுபாடு இன்றிப் பொதுவாகச்சுட்டப் படுகிறார்கள். நபி (ஸல்) அவர்களது, பெருமையையும், கருணை யையும், அழகையும், காம்பீர்யத்தையும் கண்டு பெருமிதம் தோன்றப் பெண்கள் இருந்தனர் என்பதனைத் தேர்ந்து எடுக்கப் பட்ட சொற்களைக் கொண்டு தன் பாக்களில் அமைக்கிறார்.

பாத்திமா திருமணப் படலத்திலோ, பவனி வரும் அலி (றலி) அவர்களைப் பொதுவாகப் பெண்கள் இவ்வாறு கண்டு மகிழ்ந் தனர் என்று கூறுவதோடு நின்றுவிடாமல் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஆகிய எழு பருவத்தினரும் பவனி வருபவரைக் கண்டு என்ன எண்ணினர், சொல்லினர், செய்தனர் என்பதனைத் தனியாகப் பாடுகிறார், 12 பாடல்களில்.

அலி (றலி) அவர்கள் இறைத் தூதர் அல்லர் எனினும் இறைத் தூதர் மருகர் என்பதனை மனத்தில் இருத்தி அதற்கு ஏற்பவே பாடுகின்றார்.

வண்ணக் களஞ்சியப் புலவரும் இராஜநாயகக் காப்பியத்தில் திருமணப் படலத்தில் இம்மரபைப் பின்பற்றுகிறார். இங்கும் சுலைமான் (அலை) அவர்கள்

"கவன வாம்பரியில் ஏறினர்," (34:66)
...பவனி வந்தார் என்று பாடுவார்.

இராஜ நாயகக் காப்பியத்தில் உமறுப் புலவருடைய பாத்திமா திருமணப் படலத்தை ஒட்டியே பொதுவாகப் பெண்கள் சுலைமான் (அலை) அவர்களுடைய அழகை அநுபவித்ததைப் பாடியதோடு இவ்வெழு பருவப் பெண்களும் பவனி வரும் மணமகன் அழகைக் கண்டு அநுபவித்ததையும் பாடுவார்:

''சேல்கள் போல் விழி, பவளங்கள் போல் இதழ், சிறுத்த
நூல்கள் போல் இடை, மலைகளைப் போல் முலை, நுகர் தேன்
பால்கள் போல் மொழியொடு பல உறுப்பு எலாம் படைத்து
மால்கள் யாவதும் தோன்றல் போல் தோன்றினர் மான்னார்.
(34:90)

மனம் கொளும் சுகந்தம் அது எலாம் திமிர்ந்து பூண் வனைந்து
தனம் கொளும் திரு பவனி வந்து அருள் நபி தம்மை
அனங்களும், கிளிகளும், குயில்களும், பிடியானை
இனங்களும் தொடர்ந்த என தொடர்ந்தனர் கொடி இடையார்.
(34:91)

வேலை ஓர் புறம் திரண்டன என நோக்கமும் விழி பூ
சோலை ஓர் புறம் திரண்ட என கூந்தலும் தோன்ற
மாலை ஓர் புறம் சரிந்திட, சிலம்பு வாய் புலம்பச்
சேலை ஓர் புறம் சரிந்திட, வந்தனர் சிலரே. (34:92)

பொதுவாக அவ்விடத்துத் திரண்ட பெண்கள் இப்பவனி கண்டு மகிழ்ந்தனர் என்பார்.

இப்பாடல்களில் உள்ள சந்த நயம், சொல் அழகு, உருவக அமைப்பு, பொருள் செறிவு சுவைத்தற்குரியன.

பவனி கண்டு கண்களின் மயக்கத்தில் தன்னை மறந்து,

''கந்தம் வான்புய நபி எழில் கண்டு உளம் கலங்கி
''இந்த ஊர் எது? எவர் வருபவனி ஈது? எனது
சொந்த நாமம் ஏது? உமது பேர், ஊர் எவை,
சொ(ல்)லும் என்று
அந்த வாள் நுதல் தோழியருடன் சிலர் அறைவார்''.
(34:97)

ஊர்வலத்தில் எவ்வளவோ உடன் வரினும், ஒலி எழினும், அவை எவையும் காணாளாய், கேளாளாய், கருத்தும் கண்ணும் ஒன்று பொருத்தி சுலைமான் (அலை) முகத்தாமரையில் படர் வண்டாயினள், ஒருத்தி என்பார். அதனை,

இவரில் ஓர் திரு மயல் மிகுத்து உடல் மறந்து இரு கண்
கவரியே முதல் விருது எ(ல்)லாம் குழு எ(ல்)லாம் காணாது
உவரி போல் முரசு ஒலி எலாம் செவி புகாது ஒருவன்
நபியை மாத்திரம் கண்டனள் அக நயனத்தால் (34.110)

என்று பாடுவார்.

இதன் பின் ஏழ் பருவப் பெண்டிர் இயலும் செயலும் குறித்து 11 பாடல்களில் குறிப்பிடுகிறார்.

இங்கு காணத் தக்கது ஒன்று உண்டு. தமிழ்நாட்டுப் பழைய இலக்கியங்களில் தலைவன் (அரசன்) குதிரை மேல் ஏறி பவனி வந்தான் எனக் குறிப்பிடுகை அரிது.

"யானை எருத்தத்து இருந்த... தென்னன்"
"கால் கிளர்ந்தன்ன வேழம் மேல் கொண்டு"
"பைங்கண் இளம் பகட்டின் மேலான்"
"ஓடை மழகளிற்றான்"
"உந்து மத களிற்றான்"
"அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய"

என்றெல்லாம் ஏந்தல்கள் (தலைவர்) ஏந்து கோட்டு யானை இரும்பிடர் இருந்து பவனி வந்ததாகவே குறிப்பிடுவர்.

முஸ்லிம் தமிழ்ப் புலவர்களோ பாராள்வேந்தர் பவனிக்குப் பரியைப் பயன்படுத்தினர் எனவே குறிப்பிடுவார். மாணிக்க வாசகர் காலத்திற்கு முன்னரே அறபு நாட்டில் இருந்து குதிரைகள் தமிழகத்தில் இறக்குமதி ஆயின என்று அறிகிறோம், "நீரின் வந்த நிமிர்பரிப் புரவி"* என்ற பட்டினப் பாலைத் தொடர் இதனை விளக்கும்.

தமிழ் நாட்டில் வாழ்ந்த முஸ்லிம்கள் அறபு நாட்டிலிருந்து வந்த முஸ்லிம்களின் மரபினராகவோ, அல்லது அறபு நாட்டிலிருந்து வந்தவர்களால் இஸ்லாத்தைத் தழுவியவர்கள் ஆகவோ தான் இருந்திருக்க முடியும்.

ஆகவே அவர்கள் அறபு நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப் பட்ட, அந்நாட்டிற்கே உரிய குதிரைகள் பற்றிக் குறிப்பிடாமல் இருப்பரோ? மங்கலவிழாக்களில், மண்டு போர்க்களத்தில் மன்னர்கள், தலைவர்கள் கொய்யுளை, மாவையே கொண்டனர் எனவே குறிப்பிடுவர்.

---

* கடலிலே வந்து நிமிர்ந்த செலவினை உடைய குதிரைகள்

இந்நூற்றாண்டிலும் கூட இப்பழக்கம் முஸ்லிம்களிடையே இருக்கிறது. அதாவது மணமகன் குதிரையின் மேல் ஏறி பவனி வருவது. சமீப காலமாகத்தான் மேல் நாட்டுப் படிப்பினாலும், நாகரீகத்தின் பாதிப்பினாலும் குதிரைமேல் ஏறிச் செல்வதற்குப் பதிலாகத் திறந்த கார் (Car) களில் போகின்ற பழக்கம் வந்திருக்கின்றது.

இராஜநாயகத்தில் ஒரு தனிக் குறிப்பையும் காண்கிறோம். பல்கீசு திருமணப் படலத்தில் சுலைமான் (அலை) அவர்கள் குதிரை மீது அமர்ந்து பவனி வர, நால்வகைப் படைகள் சூழ்ந்து வந்தன என்பர்.

தவிர ஜின்கள், பேய்கள் திரண்டு உடன் வந்தன எனவும் குறிப்பிடுவார்.

அவற்றுள் சில அவர் முன் விளையாடல்கள் செய்தன:

''நலிவு அறும் இறைவன் தூது வாசியின் முன்
நய விளையாடலாய் எதிர்ந்து
வலி மிகும் உபைய ஜின்கள் மல் பொருதல்
மலைகள் மல் பொருதல் போல் துலங்கும்
சொ(ல்)லி இரு புயம் கொட்டிடும் ஒலி முரசத்
தொனி எலாம் முகில் எலாம் அடக்கி
கலியையும் ஒடுக்கி அளவு அறு பூத
கணச் செவி புகுந்து உடல் துணுக்கும்''. (34:79)

இருள் மேனிப் பூதங்களும் இணை இணையாக மல் விளையாடின. ஜின் ஒன்று கரிய பூத வேதாளத்தை உருட்டி விண்ணில் பந்து எறிவது போல் எறிந்து, கையில் ஏந்தி இவ்வாறாய் விளையாடிற்று என்றெல்லாம் குறிப்பிடுவார்.

இதுபோல் மணமகன் ஊர்வலத்தில் மற்போர்க் காட்சிகள் வேறு காப்பியங்களில் இடம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. வண்ணக் களஞ்சியப்புலவர் மீசலில் பிறந்து, மதுரையில் வாழ்ந்து, நாகூரில் நிலைத்தவர் என்பர்.

நாகூரிலும், நாகூரைச் சூழ்ந்து இருக்கும் ஊர்களிலும், மணமகன் ஊர்வலத்தில் அவன் முன் சிலர் வேஷம் இட்டு கேளிக்கைகளும், விளையாட்டுகளும் செய்வது வழக்கமாக இருந்தது.

இப்பொழுது 'கிராமியக் கலை' என்று தொலைக்காட்சியில் காண்பிக்கப்பெறும் பொய்க்கால் குதிரை, மயில் நடனம் போன்ற

கலைகளை நாகூர், நாகூர்சார்ந்த ஊர்களில் வாழ்ந்த முஸ்லிம்கள் தம் வீட்டுத் திருமணங்களில் இடம் கொடுத்து உற்சாகப்படுத்தி வளர்த்தனர்.

இவற்றை எல்லாம் உட்கொண்ட ஊர்வலம் இரவில்தான் நடைபெறும். பெருமூச்சு விடும் 'கியாஸ் லைட்' ஒளியில் அவ் விளையாடல்களில், கலைநிகழ்ச்சிகளில் பங்கு கொள்வார், அணிந் திருக்கும் ஜிகினாத்தகடுகள் பளபளக்கும்; கண் கவரும் வண்ணப் பூச்சுகள் பிரகாசம் பெறும். மணமகனும் புது சோபையுடன் காட்சி தருவான். இவ்வாறான புலிவேஷம், மயில்நடனம், பொய்க்கால் குதிரைக் கலைஞர்கள் ஒவ்வொரு இடமாக, ஊர்வலத்தின் முன்னர்ச் சென்று, அங்கங்கே கூடுபவர்கள் கண்டு மகிழ்வதற்கு வசதியாகத் தம் கலை நிகழ்ச்சிகளை நடத்துவர். இது போல்வன வற்றிற்குப் பகல் வேளை உகந்தது அன்று. இரவு நேரமே ஏற்புடையது.

இதன் காரணம் ஆகத்தான் முற்குறிப்பிட்ட பிரதேசங்களில் முஸ்லிம் திருமணங்கள் இரவில் நடப்பது வழக்கம்.

வெகு சமீப காலத்தில் தான் இம்முறை அநாகரிகம் என்று கருதப் பெற்றமையால் அருகி வருகிறது.

இன்றைய திருமணங்களில் மேல்நாட்டு உடையணிந்து (CAR) கார்களில் ஊர்வலம் ஆகப் போவதையே மணமகன் விரும்பு கிறான்.

அதே சமயத்தில் வேஷங்களும், விளையாடல்களும் ஊர்வலத் தில் இடம் பெறுதற்குப் பதிலாக மணமகன் அமர்ந்து வரும் CARக்கு முன்னால். இதற்கென்று பயிற்றுவிக்கப்பட்ட இளைஞர் கள் "பைத்து" சொல்லிக் கொண்டு செல்வர்.

(பைத்து—கவிதை; திருமண நிகழ்ச்சிகளில் இஸ்லாத்தின் அடிப்படைச் சமயத் தத்துவங்களை அறபியிலோ, தமிழிலோ கவிதைகளாகப் பாடிக் கொண்டு செல்வர். அதனோடு நில்லாது மணமகன், மணமகள் இல்லத்திற்குச் சென்று திருமணம் முடித்த பிறகு மணமக்களை வாழ்த்தவும் செய்வர். இதற்கென்றே சில ஊர்களில் "பைத்து ஸபாக்கள்" உம் அமைந்து இருக்கின்றன.)

வெறுமனே இத்தகைய "பைத்துகளை" ஓதிக் கொண்டு போவதும் உண்டு, அல்லது முன்னர் நாம் கண்ட தப்ஸு என்னும் சிறு பறை ஒலிக்கு ஏற்ப ஓதிக் கொண்டு போவதும் உண்டு.

இராஜ நாயகக் காப்பியத்தில் தனிச்சிறப்பு உடைய பிறிது ஒன்றையும் காண்கிறோம்; பல்கீசு திருமணப் படலத்தில் குறிப்பிடப் பெறும் பெரு விருந்துபற்றி.

பொதுவாக முஸ்லிம்கள் திருமணத்தில் இரண்டு வகை விருந்துகட்கு இடம் உண்டு,

ஒன்று திருமண நிகழ்ச்சியின் போது, அன்றி அதன் முன்னர் கொடுக்கப்படுவது.

மற்றது திருமணத்தின் பின் மணமகன் கொடுக்கும் வலிமா என்னும் விருந்து.

பெரும்பாலும் திருமணம் நடைபெறும் இடத்திலேயே மற்றவர்கள் விருந்துக்கு அழைக்கப்பட்டு அவர்கட்கு உணவு பரிமாறப் பெறும்.

முஸ்லிம் பெண்கள் பர்தா முறை அநுஷ்டிப்பதன் காரணம் ஆகப் பெண்களுக்குத் தனியாகவும் ஆடவர்க்குத் தனியாகவும் உணவு பரிமாறுவது வழக்கம்.

இஃதன்றியும் இன்னொரு பழக்கமும் இருக்கின்றது. முதுமை காரணம் ஆகவோ, பிறிதொரு காரணத்திற்காகவோ, சிலர் விருந்து நடக்கும் இடத்திற்கு வந்து உணவு அருந்த முடியாமல் இருக்கலாம். இன்னொரு பழக்கமும் உண்டு. அதுதான் திருமணம் ஆகாத கன்னிப் பெண்கள் வீட்டை விட்டு வெளியில் செல்ல மாட்டார்கள் என்பது. இத்தகையவர்களும் திருமண விருந்தில் பங்கு கொள்ள வேண்டும் என்பதற்காகத் திருமணம் நடத்துபவர்கள் உணவு சமைத்து பாத்திரங்களில் வைத்து வண்டிகளில் ஏற்றி தெருத் தெருவாகச் சென்று ஒவ்வொரு வீட்டு வாயிலிலும் நிறுத்தி வீட்டில் இருப்பார்க்கு உணவைக் கொடுப்பர்.

இந்த, தமிழ்நாட்டு முஸ்லிம்கள் இடையே மட்டும் உள்ள, இப்பழக்கத்தைத் வண்ணக களஞ்சியப் புலவர் குறிப்பாக எடுத்துக் காட்டுவார்.

''குழுவுடன் எழுந்து ஆனந்தக் கடலிடை குளித்து நீந்தி
மழை பொழிவது போல் பன்னீர் பொழிதர வாயல் நீங்கி
முழவு உறழ் புயத்தார் சென்றார் அனம் கறி முதல்யாவும்
எழு தரு சகடத்து ஏற்றி ஏவினர் வீதி எங்கும்''

(34:53)

மனை மனை தோறும் ஏகி வண்டிலோர் இறக்கி நல்க
புனை முகில் கரிய கூந்தற் பூவையர் தாமும் உண்ணும்
இனிய மென் மொழிச் சிறாரும் எவரும் உண்டு அகம் களித்தார்
வினவி இ விருந்து உண்டோர்கள் வீடு எல்லாம் வியந்து சொல்வார். (34:54)

இராஜநாயகக் காப்பியத்தில் இப்பகுதியில் இன்னொரு சிறப்பையும் பார்க்கிறோம். முஸ்லிம்களுடைய விருந்தில் உணவு, நெய்ச் சோறாகவே அமைந்திருக்கும். அதிலும் குறிப்பாக நாகூர் போன்ற பகுதிகளில் அனமும், கறியும் அல்லாமல் தயிர் (அல்லது) பால், வாழைப்பழம், மா (அல்லது) தக்காளி சேர்த்து செய்யப் பட்ட இனிப்புப் பச்சடி பரிமாறுவது உண்டு.

பின்னர்ச் சொன்ன இம்மூன்றையும் தனித்தனி உண்பாரும் உளர். மூன்றனையும் ஒன்றாக்கிக் கலந்து பிசைந்து உண்பாரும் உண்டு.

இவ்வாறு உண்டு முடிந்தபின், உண்ட கையில் நெய்ப்பசை இருக்குமாதலால் பயற்றுமா (இப்போது SOAP) கொண்டு பசை அற நீர்விட்டுக் கழுவுவர். சுத்தம் செய்து கை, வாய், துணியினால் துடைத்துக் கொள்வது வழக்கம்.

இவற்றை எல்லாம் மிக்க அழகாகவும் விளக்கம் ஆகவும் வண்ணக் களஞ்சியப் புலவர்,

கைஎல்லாம் வாய்கள் எல்லாம் கமழஉள் களிப்புப் பொங்க
மெய்எல்லாம் புளகம் ஓங்க விழிஎலாம் குளிர கட்டும்
பொய்எல்லாம் மெய்யின் முன்னே போதல்போல் பசிகள் நீங்க
நெய்எல்லாம் ஒழுக தங்கள் வயிறுஎல்லாம் நிறைய உண்டார்,

வேலொடு பொரும் கண் மோகர்
விரும்புநெய் அமுது உண்டு அப்பால்
பாலொடு சில பேர் உண்டார்
பாலொடு பழமும் சேர்த்து
தாலொடு சில பேர் உண்டார் தயிரொடு
சில பேர் உண்டார்
மாலொடு பலதும் கூட்டி வாரியே
சில பேர் உண்டார்,

உண்டபின் கலையினாலே பையகை
 வாய் துடைத்து
விண்டமா அதனில் தோய்த்து
 மென்புனல் சொ(ண்)டு தூய்து ஆக்கி
தண்(மை) தரும் கலவைச் சேறும்
 தயிலமும் தரித்து வாசம்
கொண்ட பாகு இலையும் வாய்க் கொண்டு
 எழுந்தனர் குழுமி ஆர்த்தே. (34:50,51,52)

என்று பாடுவார்.

பொதுவாக இவ்விருந்து எவ்வளவு ருசியாக இருந்தது என்பதனை உண்டவர்கள் வாயிலாகவே கூறுகிறார்,

அமுது எல்லாம் திரண்டது என்னில்
 அறு சுவை அதனில் உண்டோ?
நமது எல்லா மனமும் வாழ்த்த நல்கு
 இந்த விருந்து ஒப்பாமோ?
தமது எல்லா மனையும் மேவ தகுவர்
 பால் நிதம் மணம் செய்து
எமது எல்லாத் தினமும் இவ்வாறு
 இடும் எனப் பகர்வோம் என்பார். (34:55)

திருமணத்தை ஒட்டிய சடங்குகள் பற்றிப் புலவர் குறிப்பிடுவதைக் கண்டோம். இஸ்லாமியச் சட்டப்படி நாம் முன்னர்க் கண்டவற்றுக்கு மேலாகச் சடங்குகள் வேறு எதுவும் இல்லை. எனினும், சில பழக்கங்கள் நடைமுறையில், புலவர் வாழ்ந்த காலத்தில் இருந்திருக்க வேண்டும்.

குறிப்பாக அவர் வாழ்ந்த இடத்தை நோக்கும் பொழுது இக் கருத்து உறுதிப்படுகிறது.

நிக்காஹுக்கு முன்னதாக இரு நிகழ்ச்சிகள் நடைமுறையில் இருந்து வந்திருக்கின்றன.

திருமணத்துக்கு முன்னால் மணமகனுக்கும், மணமகளுக்கும் அவரவர் இல்லத்தில் அவரவர் உறவினர் முன்னிலையில், கையில் மருதோன்றி இடுவது வழக்கம். இது ஒரு மங்கல நிகழ்ச்சியாக, மகிழ்ச்சியோடு கொண்டாடப் பெறுவது.

இது போலவே அவ்விருவர்க்கும் அவர் வாழ் மனையில் தனித் தனியாக, 'பணி எடுத்தல்' என்ற ஒரு நிகழ்ச்சியும் உண்டு. இவ் வழக்கத்தின்படி பெண்ணுக்கு (மணமகளுக்கு) அடர்புருவ

முடியைக் குறைத்து ஒழுங்குபடுத்துவர். ஒருகால், அப்படிக் குறைத் தால்தான் மை இடுவது ஒழுங்காக அமையும் என்பது காரணமாக இருக்கலாம்.

அதுபோலவே மணமகன் அலங்கரித்துக் கொண்டு ஊர்வலம் புறப்படு முன்னரும் புருவ முடி அடர்வைச் சற்றுக் குறைப்பர். தவிர முக மயிர்களையும் ஒழுங்குபடுத்துவதும் உண்டு.

மணமகள் வீட்டில் நடக்கும் இந்நிகழ்ச்சிக்கு மணமகன் வீட்டுப் பெண்களை அழைப்பதும், மணமகன் வீட்டில் நடக்கும் இந்நிகழ்ச்சிக்கு மணமகள் வீட்டு ஆடவர் அழைக்கப்படுவதும் வழக்கம்.

இந்தப் 'பணி எடுத்தல்' என்ற சொல் எப்படி வந்தது என்று தெரியவில்லை. சென்னைப் பல்கலைக் கழக வெளியீடான TAMIL LEXICONல் அடியிற் கண்டவாறு காணப்படுகிறது:

"பணிக்கை—Trimming the hair of the face; நேர்த்தியாய் முக மயிர் வெட்டுகை" என்று விளக்கம் தரப்பட்டுள்ளது.

அது அன்றியும் இது JAFFNAல் இருந்து வந்த சொல் எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

இச்சொல்தான் மாறி வந்திருக்கக் கூடும்.

இவை அன்றியும் 'நிக்காஹ்' முடிந்த உடன் மணமகன் மண மகளுக்குத் தாலி கட்டுதல் என்பதையும் தமிழ் நாட்டு முஸ்லிம் கள் பழக்கத்தில் வைத்திருக்கிறார்கள்.

பெண்கள் சம்பந்தப்பட்ட வரையில் இது முக்கியமான நிகழ்ச்சி. இந்நிகழ்ச்சி பெண்கள் பர்தா அணிபவர் என்ற காரணத் தினால், பிற ஆண்கள் மணப்பெண்ணைப் பார்க்கக் கூடாது என்ற நிலையில், பெண்களின் கூட்டத்திலேயே நடைபெறும். இந் நிகழ்ச்சிக்காக ஊர்ப் பெண்கள் அனைவரும் தனியாக அழைக்கப் படுவதும் உண்டு. அப்போது விருந்து வழங்கப் பெறுவதும் உண்டு.

தமிழ் நாட்டு முஸ்லிம்களிடையே மற்றொரு பழக்கமும் உள்ளது. இப்பழக்கம் குறிப்பாகக் கடற்கரை சார்ந்த பகுதிகளில் வாழும் முஸ்லிம்களிடையே அதிகமாக இருக்கிறது.

அதுதான் கணவன் தன் மனைவி வீட்டிற்கு வந்து விடுவது. நிக்காஹ் முடிந்த பிறகு முதல் நான்கு இரவுகளும் மணமக்கள் மணமகள் இல்லத்தில் இருப்பர்.

மணமகன் காலை எழுந்து தன் தாய் வீடு சென்று மதிய உணவை அங்கு முடித்துக்கொண்டு இரவிற்கு மனையாள் அகம் நாடுவான்.

முன்பின் பார்த்திராத ஒரு ஆண்மகனோடு, கூடி வாழ்வதற்கு அவளுடைய சொந்த உறவினர் இடையே இருப்பது அச்சம் தெளிந்த நிலையை, உணர்வைத்தரும் என்பதற்காக இவ் ஏற்பாடு அமைத்திருக்கலாம்.

இவ்வாறாகத் தொடர்ந்து நான்கு இரவுகள் மணமகள் இல்லத்தில் மணமகன் இருக்க, அடுத்த நாள் காலையில், விடியலில் மணமகனின் தாய், (சகோதரி போன்ற நெருங்கிய பெண் உறவினர்) முதன் முறையாக மணமக்கள் இருவரையும் வந்து மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்வார்கள்.

அப்படிச் செல்லும் பொழுது அவர்கள் மணமகளுக்கு மாலை அணிவிப்பதுண்டு. தவிர முன் தானையில் மங்கலப் பொருள்கள்— தெங்கும், பழமும், பூவும் பிறவும் நிறைத்து, மடித்திரைத்து அழைத்துச் செல்வதுண்டு. இதனை 'நாலாம் நீர்ச்சடங்கு' என்பர். [அதே LEXICON இச்சொல்லையே ஆண்டிருப்பது வியக்கத் தக்கது. "நாலாம்-நீர்.

1. Bath taken by a newly married pair on the fourth day of marriage. விவாகத்தின் நான்காம் நாள் மணமக்கள் புரியும் நீராட்டுச் சடங்கு,

2. The fourth day of the marriage.
விவாகத்தின் நான்காம் நாள்"]

மேற்கூறியவை புலவர் வாழ்ந்த ஊர் வழக்கமாக இருந்ததன் காரணம் ஆக, அவற்றைத் திருமணத்தோடு கூடிய சடங்குகள் என்று அவர் கூறி இருக்கலாம்.

திருமணம் பற்றிக் கூறியது போலவே மரணத்தைப் பற்றியும், பிரேத அடக்கம் பற்றியும், சடங்குகள் பற்றி புலவர் குறிப் பிடுகிறார்.

சமயக் கடமைகளின்படி மரித்தவர் உடலைக் குளிப்பாட்டுதல், கபன் இடுதல், தொழுவித்தல், நல்லடக்கம் செய்தல் ஆகிய இந் நான்கும் முக்கியமானவை ஆகும்.

ஒருவர் மரணத்தறுவாயில் இருக்கும்பொழுது அருகில் இருப் பவர்கள் "லா இலாஹ இல்லல்லாஹு" என்னும் கலிமாவை

அவரை வாயினால் சொல்லிக் கொண்டே இருக்கச் செய்வர். அப்படி அவரால் தம் வாயினால் சொல்லமுடியாத நிலையில் இருப்பாரே ஆனால், அருகில் இருப்பவர்கள் அவர் காதுபட இவற்றைச் சொல்லிக்கொண்டே இருப்பது வழக்கம்.

உயிர் நீத்த உடலை ஜனாஸா என்று குறிப்பிடுவர். முதலில் உயிர் நீத்த உடலைக் குளிப்பாட்டவேண்டும். எல்லா அசுத்தங் களும் நீங்குமாறு குளிப்பாட்டுதல் இதன் பாற்படும்.

அப்படிக் குளிப்பாட்டிய பிறகு, அதற்கு உடுத்தப்படும் ஆடைக்குத்தான் கபன் என்று பெயர். ஆண்களுக்கு மூன்று துணி களாலும் பெண்களுக்கு ஐந்து துணிகளாலும் இக்கபன் அமைய வேண்டும் என்பது சுன்னத்.

இது அன்றியும் இக்கபன் துணிக்கு நறுமணத் தூபம் இடுவதும் விரித்த துணி மீது பல மணப்பொருள்கள் தூவுவதும், மேனியை அடுத்ததில் சூடம் போடுவதும், உடலில் வேறு சில இடங்களில் சூடம் கலந்த பஞ்சை மெதுவாக வைப்பதும் வழக்கம்.

இப்படிக் கபன் துணியினால் மூடப்பட்ட ஜனாஸாவை ஒரு பெட்டியில் வைத்து அடக்கம் செய்யும் இடத்திற்குத் தூக்கிச் செல்வர். அப்படித் தூக்கிச் செல்வது நன்மையான செயல் என்ப தால் அவ்வப் பொழுது பலர் மாறி மாறி தங்கள் தோள் கொடுக்க முன் வருவர்.

இப்படிச் சுமந்து செல்லப்பட்ட ஜனாஸா கப்றில் அடக்கப் படுமுன் இதற்கெனவே அமைந்த ஜனாஸா தொழுகை நடத்த வேண்டும். அதற்குப் பிறகு அது அக் 'கப்றில்' அடக்கம் செய்யப் படும்.

இவை சம்பந்தமாக நபிகள் பெருமானாருடைய சில வாக்கு களும் செயல்களும் எல்லா முஸ்லிம்களாலும் பின்பற்றப் படுகின்றன.

கபன் துணி வெண்மையானதாக இருக்கவேண்டும். எந்தக் கட்டத்திலும், எந்த வித ஆடம்பரமும் இருக்கக் கூடாது. ஒருவர் இறப்பது மற்றவர்க்கும் மரண நினைப்பை உண்டாக்குவதாக இருப்பதால், அதற்கு ஏற்ப அவர்கள் சொல்லும் செயலும் ஏக இறைவனைத் துதிப்பதாகவும், இவ்வுலகில் அவன் கொடுத் திருக்கும் வாழ்நாள் முடியுமுன் அவன் கட்டளைப்படி நடந்து நன்மை செய்ய உறுதி கொள்ளும் வகையிலும் இறந்தவர் பிழை

யையும், தம்முடைய பிழையையும் பொறுத்து அருளுமாறு இறைவனிடம் வேண்டுகின்ற வகையிலும் அமைந்திருக்க வேண்டும்.

இதன் காரணம் ஆகவே, ஒரு முஸ்லிம் மரணம் அடைந்து அவர் உடல் அடக்கப்பட்டு முடிகிற வரையில் கலிமாவும் திருக்குர் ஆன் வசனங்களும் குறிப்பாக 36ஆம் அத்தியாயம் ஆன யாசீனும் ஓதப்பட்டுக் கொண்டு இருக்கும்.

நெருங்கிய உறவினர்கள் மனவருத்தம் கொள்வது இயல்பே ஆயினும் அது ஒப்பாரியாகவோ, உரத்த குரலிலோ அமைதல் ஆகாது. ஒரு ஜனாஸாவைத் தொடக்கத்தில் இருந்து அது கப்றில் அடக்கப்படும் வரை தொடர்ந்து செல்வது நன்மையான காரியம் ஆகும்.

யாராவது ஒருவர் எங்காவது அமர்ந்திருக்கும் பொழுது தெருவிலே, ஒரு ஜனாஸா தூக்கிக் கொண்டு செல்லப்படுவதைக் காண நேரிடின், அமர்ந்திருக்கும் அவர் தம்மை அது தாண்டிச் செல்லும் வரை எழுந்து நிற்க வேண்டும்.

நபிகள் பெருமானாரே இப்படிச் செய்து இருக்கிறார்கள்.

தூக்கிச் செல்லப்பட்டது, ஒரு யூதர் பிரேதம் என்று உழையர், தெரிவித்தபோது "அதுவும் தூய்மையான ஆன்மா இருந்த இடம் அல்லவா" என்று பதில் இறுத்தார்கள்.

ஒருவர் இறந்து விட்டால் அவரைப் பற்றித் தீமையாக எதுவும் பேசக் கூடாது; அவர் செய்த நல்லனவே பேசவேண்டும் என்பது நபிபெருமானுடைய வாக்கு.

மரணம் அடைந்தவரின் உறவினர்களிடம் சென்று அவர் களுக்கு ஆறுதல் கூறுவது மற்றவர் கடமை ஆகும்.

கணவன் இறந்து விட்டால் விதவை நான்கு மாதம் 10நாள் "இத்தா" அநுஷ்டிக்க வேண்டும். (இந்த காலவரையறை பொதுவாக அவள் மறுமணம் செய்து கொள்வதற்கு முன்னால் உள்ள இடைவேளையைக் குறிப்பதாகும்.) மண விடுதலை செய்யப் பட்ட பெண்ணுக்கு இவ்விடைவேளை மூன்று மாதங்களாகும்.

கணவனை இழந்த விதவை இயற்கையாகவே துக்கத்தில் இருக்கக் கூடியவள். ஆகையால் அக்காலத்தில் அவள் மிக எளிய வாழ்க்கையை, (ஆடம்பர அலங்காரம் இல்லாமல்) மேற்கொள்ள வேண்டும், அது போலவே, அணிகலன்களை நீக்குவதும் எளிய

உடைகளை அணிந்து இருப்பதும் அவளுக்கு இயல்பு மட்டும் அன்று, அது அவள் இறந்த கணவனுக்குக் காட்டும் மரியாதையும் ஆகும்.

இறந்த ஒருவர் அடக்கப் பட்டிருக்கும் இடத்திற்குச் செல்வது தவறு ஆகாது. அப்படிச் செல்வது இறந்தவர் ஆன்ம சாந்திக்கும், அவருடைய பிழை பொறுத்தலுக்கும், ஆண்டவனை இறைஞ்சுவதோடு அல்லாமல் தாமும் இறைவனை அடைய வேண்டியவர்களாக இருப்பதனை மனத்துட்கொண்டு தம் பிழைகளைப் பொறுக்க வேண்டும் என்று ஆண்டவனை இறைஞ்சுவதற்காகவுமே தான்.

மற்றபடி அந்தக் கப்றுதனை வணக்கத் தலம் ஆக்குவதோ, அதன் மேல் அலங்காரங்கள் செய்வதோ தவறு ஆகும்.

சிற்சில இடங்களில் இறந்த 3ஆம் நாள், 10ஆம் நாள், 40 ஆம் நாள் ஆகிய நாட்களில் அந்தக் கப்றுக்குச் செல்வதும், அங்கிருந்து கொண்டு சடங்குகள் சில செய்வதும் பழக்கமாக இருக்கிறது. இவை தவறு.

ஒரு வேளை இவை போன்றவற்றைத்தான் புலவர் சடங்குகள் என்று குறிக்கிறார் போலும்.

ஆனால் இறந்த தினத்தன்றோ, பிற தினங்களிலோ, ஏழை எளியவர்க்குத் தான தருமம் செய்வது தவறு ஆகாது; காரணம் தான தர்மம் செய்வன நன்மையான காரியங்கள். அல்லாமல் இறந்தவன் பிழைகளைப் பொறுக்க ஆண்டவனை இறைஞ்சுவதில் அந்த தான தர்மங்கள் பெற்றவர்களும் கலந்து கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

இராஜநாயகக் காப்பியத்தில் முக்கியமாகத் தாவூது (அலை) அவர்கள், பல்கிசு, சுலைமான் (அலை) அவர்கள் ஆகிய மூவர் மரணச் செய்திகள் குறிப்பிடப் பெற்றுள்ளன.

இம்மூவரிலும் தாவூது (அலை) அவர்களுடைய மரணத்தைப் பற்றித்தான் விரிவாகப் பாடி உள்ளார் (தாவூத் நபி உபாத்துப் படலம்), புலவர்.

"கருதி இவ் அறிவை உள்ளம் கலந்தனர் புதல்வர் பின்னர்
ஒரு பொருள் கடவுள் நாமம் உளத்தினில் இருத்தல் செய்து
பரிமளம் திகழும் மென் பூம் பாயல் சாய்ந்து இரு கண் மூடி
அரு மறை பெறு தாவூது நபி உபாத்து ஆயினாரே. (13:19)

என்று தாவூது (அலை) அவர்களுடைய மரணம் பற்றிக் குறிப்பிடுவார்.

தாவூது (அலை) அவர்களுக்கு என 'கபன்' ஜிப்ரீல் மூலமாக இறைவனால் அனுப்பப் பெற்றது எனவும் சொல்வார்:

' ''சீத ஒண் கதிர் செய் இந்த ஆடையால் கபன் செய்து உம் தம்
தாதையை அடக்கி செய்யும் சடங்குகள் இயற்றி, பின்னர்
பூ தலம் தனக்கு நீரே ஒரு செங்கோல் புரிமின் என்ன''
ஓதினர் சிறையின் சோதி ஒளிர விண் அடைந்தார் அன்றே'.
(13:34)

இங்கு 'அடக்கிச் செய்யும் சடங்குகள்' என்றும் புலவர் கூறுவது நோக்கத் தக்கது.

தாவூது (அலை) அவர்கள் உடலை,

அரிய நீராட்டி, தேகத்து ஆடையால் ஈரம் மாற்றி
பரிமளம் திகழும் சொற்க[1] படத் [2]தினால் கபனும் செய்து
விரை தரு சுகந்தம் பூசி விழிகளில் சுறுமா[3] தீட்டி
மரை மலர் வதன மைந்தர் மஞ்சில்[4] வைத்து எடுக்கல்
உற்றார். (13:40)

பனீ இசுறாயீன் கூட்ட மன்னரும் அமரர் தாமும்
தினகரன் மழுங்கும் மாடச் செழுநகர் சாம் உள்ளோரில்
அனைவரும் திரண்டு எழுந்தார் அதில் தொட[5]
கிடைத்தோர் மஞ்சை
இனிது உடன் சுமந்து பட்சி நீழலில் ஏகினாரே. (13:41)

வள்ளலை தாங்கி சென்று பைத்துல் முக்கத் தீசு என்னும்
பள்ளியின் அருகு இறக்கி பரிவொடு தொழுவித்து ஏர் கொள்
கள் அவிழ் மலர் தார் மைந்தர் கபுறில் வைத்து அடக்கம்
செய்தே
வெள்ளம் ஒத்து எவரும் சூழ மீண்டும் தம் மனையில் வந்தார்.
(13:42)

என்று பாடுவார்.

இம் மூன்று பாடல்களிலும் நாம் முன்னர் எடுத்துக் காட்டியன அடங்கி இருப்பதைக் காணலாம்.

இப்படியாக ஜனாஸாவை அடக்கம் செய்து விட்டு வீடு திரும்பியவலர்கள் இரவலர்க்கு ஈந்ததை,

---

1. சொற்கம்—சொர்க்கம்; 2. படம்-ஆடை 3. சுறுமா—மை;
4. மஞ்சு—கட்டில்; இங்கு சவப்பெட்டி
5. தொட—ஜனாஸா தூக்கும் வாய்ப்பு தோள் கொடுத்தல்.

வந்த பின் இரவலோர்க்கும் மறை முதியவர்க்கும் கேளா
சிந்தை கொண்டு அகத்து அடங்கும் சிறுமையோர் தமக்கும் பைம்பொன்
புந்தியில் கணிக்க ஒ(ண்)ணாத மணி, கலை போத நல்கி
அந்தம் இல் கலி அன்னோரை அடுத்தவர்க்கு (ம்) இலதாய்ச் செய்தார்

என்பார். (13:43)

அதன் பின் மற்றவர்கள் ஆறுதல் சொன்னதையும், ''நவ்வி விழி நசாயிகு, மற்றுள தொண்ணூற்றெண்மரை, குலமுதியவர், தோழியர், நகர்வாழ் நங்கையர் அருகிருந்து தேற்றினர்'', என்றும்,

சுலைமான் (அலை) அவர்களும் ஒக்க இருக்கும் ஒருபதினறு வரும் 'ஆதியின் செயல்' என அகத்துத் தேர்ந்து, மாற்ற அரிது என உணர்ந்து தெளிந்தார் என்றும், எரி மணிக் கலன்கள் இழந்த மொய் குழலினாரும் மறுகி உள் கலங்கினும் கூற்றின் ஆற்றல் மாற்றரிது என மனம் தேறி, தெளிந்து உறைந்தார் எனவும் கூறுவார்.

பின்னர் சுலைமான் (அலை) அவர்கள்,

இன்ன போது ஈன்ற தந்தைக்கு
 இயல் சடங்கு எவையும் செய்தே
முன்னி வந்து அடைந்தோர்
 யார்க்கும் தராதர முகமன் கூறி
துன்னுக அனுப்பல் செய்து
 துணைவர்கள் எவரும் நெஞ்சில்
பன்னிய அன்பு கூர பரிவொடு
 கலந்து இருந்தார். (13:47)

என்பர்.

இந்நிலையில் புலவர் எந்தச் சடங்குகள் பற்றிப் பேசுகிறார் என்பது தெளிவாகத் தெரிகிலது.

முன்னர்க் குறித்தவாறு சிற்சில முஸ்லிம்களிடையே உள்ள ஜனாஸா அடக்கப்பட்ட கப்றை வணக்கத் தலம் போல் ஆக்கி, அலங்காரம் செய்து, அடிக்கடி அங்கு போய் அதற்கு மரியாதை செய்து வரும் பழக்கத்தைக் குறிக்கிறார் என்று கொள்ளவேண்டி இருக்கிறது.

அவர் வாழ்ந்த இடங்களை நினைவில் கொண்டால், அவ் விடங்களில் நடந்து வந்த பழக்கங்களை வைத்துக் கொண்டு தான் இப்படலத்தில் கூறி இருக்கிறார் எனத் தோன்றுகிறது.

இந்த நவ நாகரிக காலத்தில், வாழ்க்கை வேகத்தினாலும், முன்னர் அநுஷ்டித்து வந்திருந்த பலவற்றைப் பொருளற்றவை, மூடநம்பிக்கையின் அடிப்படையில் பிறந்தவை, என்று கொள்வ தாலும், சமயஅறிவு வளர்வதாலும், இந்தச்சடங்குகள் பல இன்று அறவே மறைந்து போயின. ஆயினும் புலவர் வாழ்ந்த காலத்தில் அவை வழக்கிடை இருந்தன.

ஆதலால் தான் அவற்றைத் தன் காப்பியத்தின் ஊடே சடங்குகள் என்று குறிப்பிட்டு இருக்கிறார் என்று கொள்ள வேண்டும்.

இன்றும் அத்தகைய பழக்க வழக்கங்கள் இங்கும் அங்குமாக வழக்கில் இருப்பதே அவர் வாழ்ந்த காலத்தில் அவை பரவலாக இருந்தன என்ற கருத்தை வற்புறுத்தப் போதுமான சான்று ஆகும்.

# 10. புதுமை

காப்பியம் பாடவரும் புலவர்கள் தங்களுக்கு முன்னர் வாழ்ந்த புலவர்களின் திறமையினால் ஈர்க்கப்பட்டு அவர்களை ஒட்டியும் மிகைக்கவும் முயன்று பாடித் தங்கள் காப்பியங்களைப் படைத்தனர். அப்பொழுது தங்கள் தனி முத்திரையையும் அந்நூலகத்துப் பதிய விட்டுப் போகவே விரும்பினார்கள்.

இத்தகைய தனித்தன்மை இல்லாத இடத்துப் பல்வேறு காப்பியங்களைப் படித்தாலும் அவற்றின் தனிச் சிறப்புகளை நுகர வாய்ப்பில்லாமல் போகிறது. படிப்பவர்களுக்கும் அவை சலிப்பையே தரும்.

ஆனால் பெரும் புலவர்கள் அனைவரும் தங்கள் தனி முத்திரையைப் பதிப்பித்தே சென்றுள்ளனர்.

வண்ணக் களஞ்சியப் புலவரும் இந்த விதிக்கு விலக்கு அல்லர்.

வேறு எந்தக் காப்பியத்திலும் இடம் பெறாத பகுதி ஒன்று இராஜநாயகத்தில் இடம் பெற்றுள்ளது.

காப்பியங்களில் மன்னர்கள் காடுகளுக்குச் சென்று வேட்டையாடினர் என்று குறித்தல் இயல்பே. அரிச்சந்திர புராணமும் கூளப்ப நாயக்கன் காதலும் இச்செய்திகளை விரிவாகக் கூறும்.

அத்தகைய வேட்டை ஆடுவதற்கு அவர்கள் என்ன என்ன ஆயத்தங்கள் செய்தனர் என்பதையும், அவர்கள் எப்படி ஆடினர் என்பதையும் புலவர்கள் விரிவாகப் பாடினர். அது மரபும் கூட.

வண்ணக் களஞ்சியப் புலவர் இம்மரபிலிருந்து மாறுபட்டு ஒரு கடல் வேட்டையை விரிக்க, விளக்கத் தொடங்குகிறார்.

"இராஜகுமாரன் கடல்வேட்டைக்கு எழுந்தபடலம்" தன்னுள் இந்தவர்ணனையும் கற்பனையும் இடம் பெற்று இருப்பதோடு பல பேர் அறிந்தும் இராத புதுச்செய்திகள் பல காணப்படுகின்றன. சில செய்திகள் அவர் வாழ்ந்த காலத்தில், வாழ்ந்த இடத்தில் நிகழ்ந்தனவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கலாம்.

அவை பின்னர் அருகி விட்ட போதிலும், அழியாமல், அடையாளமாக,அங்கும் இங்குமாக,இன்றும்கூட உள்ளன. அத்தகையன சிலவற்றைக் காண்டலும் கூடும்.

அரச குமாரன் கரை வேட்டைக்குச் செல்வது வழக்கமாக இருந்தது என்று கூறிய புலவர், ஒரு நாள் கடல் வேட்டைக்குப் போக விரும்பினான் என்பதனை,

> ''கடலினில் வேட்டை ஆடிக் காணஒணாப் புதுமை
> யாவும்
> திடன்உற காணவேண்டும் என மனம் சிந்தித்தானே''
> (24:38)

என்று பாடுவார்.

அடுத்து வரும் பல பாடல்களில் அப்படி வேட்டம் போவதற்கு முன்னதாக எவ்வெப்பொருள்களை எல்லாம் சேர்த்துக் கொண்டான் என்பதனை மிக்க விரிவாகப் பாடுவார். சுமார் 200 ஆண்டுகட்கு முன்னால் வாழ்ந்தவர் அவர்.

கடலில் இன்று கப்பல்கள் வேகமாகச் செல்வதுபோல அன்று சென்றிரா. அது மாத்திரம் அல்ல. வேட்டைக்குக் கடலில் செல்லும் ஒருவர் எத்தனை நாட்களுக்குப் பிறகு கரைக்குத் திரும்புவார் என்றும் சொல்ல முடியாது.இன்றுகூட மீன் பிடிப்பதற்காகக் கட்டு மரத்தில் கடலில் செல்பவர்கள் குறிப்பிட்ட நாளில் திரும்பலாம் என்று கணக்கிட்டு, அந்த நாள் வரை உண்ணத் தேவையான உணவையும், அருந்து நீரையும் எடுத்துச் செல்வதனை நாம் அறிவோம்.

இப்பின்னணியில் ஒரு அரச குமாரன் மகிழ்ச்சியுடன் தான் காலம் கழிப்பதற்காகக் கடல் வேட்டம் போகிறான் என்பதனைக் காணவேண்டும்.

அப்படியானால் அவனுடைய ஆயத்தமும், அவன் எடுத்துச் சென்ற பொருட்களும் எத்தகையன எனவும் எவ்வளவின எனவும் கற்பனை செய்தும் பார்க்க இயலாது. இவ்வகையில் கவிஞர் விளக்கமாகப் பாடுகிறார்.

........ ........ ........

''திரை அலை எறியும் எ வாருதியினும்
சென்று மீள
உரு மிக பெரிதாய் ஒவ்வொன்றும் ஒரு மரக்
கோட்டை ஒப்பாய்
மர வினையாளர் தம்மால் வங்கம்
நாற்பது வைத்தானே. (24:39)

கப்பல்களை ஆற்றங்கரைகளில் தான் கட்டமுடியும். கடற் கரையில் கட்டி அப்படியே கடலுக்குள் அதனைத் தள்ளி விடுவது என்பது சிரமமான காரியம். இதனை நன்கு உணர்ந்த கவிஞர்,

''வைத்த பின் நதியில் தள்ளி வாரியில் சேர்த்து'' (24:40)
இயக்கியதாகப் பாடுவார்.

கடல் பயணத்தில் கஷ்டங்கள் நேராமல் இருக்க ''(கப்பல்) நூலின் சித்திரம் தெளிந்த மீகாமரும், நெடுஞ்சிகர மேரு தத்தி வந்து எதிர்த்த போதும் தடக்கையால் பொடிகளாக் கும் சுத்தவீரிய கலாசு*களும்'' தொகுத்தான் என்பார். (24:40)

பகடு[1], பாய், வடம், பத்தாயம்,[2]
நங்குரம், பாய் மரங்கள்
நிகர் இல் பீரங்கி குண்டு வெடி
கரு நிற மருந்து
வகை தரு தூண்டில், மண்டா,[3] வலை,
இராசாளி போர்க்கு
தகுபடை எவையும் ஒன்றுக்கு
அனந்தம் அ தரணி சேர்த்தான். (24:41)

அடல் கட்டி அருளும் மன்னன்
விருது அவைக்கு ஆயினோர்கள்
உடல் கட்டி புலி அழைப்போர்
உத்தம சாத்திரத்தோர்

---

* (கலாசு—அறபுச் சொல்; கப்பலின் பாதுகாப்புக்கு என அமைந்த ஊழியர்)

1. பகடு-சிறுபடகுகள்; 2. பத்தாயம்-தானியக்குதிர்கள்; இச் சொல்நாகூர்ப் பகுதியில் வழக்கிடை அமைந்து உள்ளது. இச் சொல் பெரும் பெட்டகம், விலங்குகள் அடைக்கும் கூடு, எலிப் பொறி முதலிய பொருள்களும் தரும். 3. மண்டா-மீன், பன்றி முதலியன குத்தும் ஈட்டி,

கடல்[4] கட்டி குளிகள், சீனக் குழல்கள்[5]
கண்ணாடி, பாசம்
மிடல் கட்டி பூட்டும் பேழை
வேண்டு மட்டு ஆங்கு வைத்தான். (24:42)

தவிர அக் கொற்றக் குமரன் ஓர் ஆண்டு அளவிற்கான போசன கலன்கள், ஆடு, குடிநீர், உண் பொருள், போன்றனவும் தொகுத்தான் என்பார்.

மேலும் அவ்வங்கங்களில்,

கரி, பரி, சிவிகை, தேர்கள் கவின் கொள இரண்டாய் நான்காய்
மருவும் ஆழிக் கோலாரி வண்டில்கள்[6] மாட்டு வண்டில்
பரிவினில் இதற்கு உரித்தோர் பல சமர் பொருது வீரர்
உரிய பஞ்சாளர்[7] மெய் காட்டு ஓவியம் நிறைப்பது ஆனான் (24:44)

மேலும்,

பதின் எண் மேளங்கள் கொம்பு குழல்தொகை,பணிலம்,வீணை
முதிர் சரமண்டலம், சூல் மோரிசங்கு[8] கின்னரங்கள்[9]
கதி நரம்பு இடுகுடுகுகள்[10] நரம்பு இடாக் கடங்கள்[11]கையால்
அதிர் சதங்கைகள்,சாரங்கம்[12] ஒலிப்பவர் அனைத்தும் இட்டான். (24:45)

---

4. கடல் கட்டி குளிகள்-கல்லைக் கட்டி, கடலில் மூழ்கி,முத்து, சங்கு, பவளம் எடுப்போர்; கடலில் மூழ்குகையில் சுறவு முதலிய வற்றால் ஆபத்து நேராமலிருக்க மந்திர உச்சாடனம் செய்து பாதுகாத்துக் கொள்வதற்கு 'கடலைக் கட்டுவது' என்று சொல் வதும் உண்டாம். அண்மைக் காலம் வரை முத்துக் குளிப் போருக்கு மத்தியில் அத்தகையோர் இருந்ததாகக் கூறப்படுகிறது. இந்த வழக்கம் பற்றி மார்க்கோ போலோ பாண்டிய நாடு பற்றிய பகுதியில் குறிப்பிட்டுள்ளார்.

5. சீனக் குழல்—Telescope என்னும் தொலை நோக்கி; இதன் சிறப்பு என்ன என்றால் மேற்குறித்த நாகூர்ப் பகுதியில் magnifying Glass எனப்படும் 'பூதக் கண்ணாடியை (உருப் பெருக்கு ஆடி)', சீனக் கண்ணாடி என்றே மக்கள் வழங்குவர். சென்னைப் பல்கலைக் கழக TAMIL LEXICON இதனைச் சீனிக் கண்ணாடி என்று குறிப்பிட்டு-Telescope; தூர திருஷ்டிக் கண்ணாடி என்று பொருள் கொடுத்திருப்பதும் நோக்கத் தக்கது.

6. கோலாரி வண்டில்-வில் வண்டி, அலங்கார வண்டி (தஞ்சை மாவட்ட வழக்கு)

7. பஞ்சாளர்—தட்டான் கன்னான், சிற்பன், தச்சன், கொல்லன்.

8. மோர்சிங்-நாகூர்ப்பகுதியில் வழக்கிலுள்ள இசைக்கருவி

9. கின்னரம்-யாழ்

10. குடுகு-உடுக்கை

11. நரம்பு இடாக்கடங்கள் -முழவு வகை

12. சாரங்கம்-வீணை

தவிர,

புரவலர் மகுடம் போன்ற புலவர்கள் சொல்விசித்திரர்
பரவசம் செய்யும் கீதர் பரத நாட்டிய மின்னார்கள்
விரவு தேசிகம்[13] செய்மாதர் நட்டுவர் வேய்துருத்தி
தெரி சதி[14] மத்தளம் கைம்மணியொடு சேர்க்கல்உற்றான்.
(24:46)

இப்பாடல் வழியும் பல்கீசு வரலாற்றுப் படலம் 33, 34, 35 ஆகிய பாடல் வழியும் வண்ணக் களஞ்சியப் புலவர் இசை, பரத நாட்டியம், இசைக் கருவிகள் இயக்கு முறை, பற்றிய அறிவும் தேர்ச்சியும் பெற்றிருந்தார் என அறியலாம்.

அவ்வரச மகன் இவற்றோடு அன்றி மணப்பொடிகள், பல்வித வேடங்கள் கொள்ளும் நடிகர்கள், விகடகவிகள், வலைஞர்கள் ஆகியோரை அவ்வங்கங்களில் செறித்தான்.

நாவிதர், வண்ணார், மருத்துவர், வலையர், வேடர் எனப் பலரையும் நிலவ வேய்ந்தான் (24:47,48).

இவற்றை எல்லாம் கப்பலில் சேர்த்துக் கொண்டு, தான் வேட்டைக்குச் சென்றிருக்கும் காலத்து நாட்டை ஆள்வதற்கு என ஒருவரை அரசுப் பொறுப்பில் அமர்த்திப்பின் கப்பலில் புகுந்தனன்.

தோற்றும் அப்பொழுது வானைத்
தொடும் நெடுங் கொடிகள் ஏற்றி
மேல் தனி விருது டாலும்[15]
வியப்புற அணிந்து மேகம்
ஆற்றலம் எனவே ஓட
அகில வாரியும் நடுங்க
தேற்ற மீகாமன் சொல்லால்
பீரங்கித் தொனி செய்தாரே. (24:50)

அரசன் இருந்த வங்கம் நடுவில் வைக, மற்றவை அதனைச் சூழ அமைத்தனர். பிணைப்பு அறாவகை இருப்புச் சங்கிலிகள் கொண்டு தொடுக்கல் உற்றார்.

---

13. தேசிகம்-கூத்து வகை
14. சதி-ஜதி,
15. டால்-அரச சின்னம் பொறித்த கொடி; கூளப்ப நாய்க்கன் என்னும் சிற்றரசனது ''விருதுடால்'' கருடன் ''சேனை நடு வெள்ளைச் செய டால் வீசி வர'', கூளப்ப நாய்க்கன் காதல்: கண்ணி 69

அரசமகன் இன்பமாகப் பொழுது போக்கினான் என்பார் சங்கீதம், விகடம் கேட்டு மகிழ ஒருநாள், பரதநாட்டியம் கண்டு மகிழ ஒருநாள், வேடமிட்ட நடிகர்கள் நாடகக் காட்சி காணல் ஒரு நாள், வீணை ஒலி கேட்டு மகிழ ஒருநாள், மோர்சிங், முழவு ஒலி, சங்கொலி கேட்டு இன்புற ஒருநாள், மீன் பிடிக்க ஒருநாள், முக்குளித்து பவளம் வலம்புரி, முத்து, சங்கு திரட்ட ஒரு நாள் என வாரத்து நாட்களை வகுத்துக் கொண்டனர்.

தவிர இடைவழித் தீவுகள் காணில் அங்கு இறங்கி, பறவை வேட்டை ஆடி "கேளி விலாசங்கள்" புரிந்தனர்.

இவ்வாறாகக் கடல் வேட்டைக்கு எழுந்தமை பற்றிக் கூறுவார்.

அடுத்த புதுமை.

ஒரு நாட்டு அரசன் மற்றொரு நாட்டின்மீது போர் தொடுத்து வெற்றிகொண்டு வாகை சூடிய நிகழ்ச்சிகள் தமிழ் இலக்கியங் களில் பரவலாகப் பாடப் பெற்றுள்ளன. அங்கெல்லாம் வெற்றி கொண்ட அரசன் தோற்றவர்களை, அரச குடியினரை எப்படி எல்லாம் அவமானப்படுத்தினான் என்று பார்ப்போம்.

"தெவ்வர், மிளகு எறி உலக்கையின், இருந்தலை, இடித்து"
(ப. பத்து:41)

"வால் இழை கழித்த நறும்பல் பெண்டிர் பல்இருங் கூந்தல் முரற்சியால் குஞ்சர ஒழுகை பூட்டி"னர். (ப.பத்து ஐந்தாம் பத்து, பதிகம்)

அங்குள்ள மங்கையரை அடிமை மகளிராக அமைத்துக் கொண்டனர் என்பர்.

அத்தகைய மகளிர் கொண்டி மகளிர் எனப்பட்டனர்.

மக்களையே அன்றி நாட்டையும், அரண்மனையையும் எவ்வாறு அழித்தனர் எனச் சில காண்போம்:

"பாடல் சான்ற பயம் கெழு வைப்பின்
நாடு கவின் அழிய, நாமந்தோற்றி;
............
உள்ளுநர் பனிக்கும் பாழ் ஆயினவே." (ப. பத்து: 13)

அந்நாடுகள்

"அழல் கவர் மருங்கின் உருஅறக் கெடுத்து
தொல்கவின்அழிந்த கண் அகன் வைப்பின்,..."(ப.பத்து: 15)

நெடு மதில், நிலை ஞாயில்,
அம்புடை ஆர் எயில் உள் அழித்து உண்ட
அடாஅ அடு புகை அட்டு மலர் மார்பன்''
(ப. பத்து. 20)

''பின் பகலே அன்றி பணார் அகநாட்டு
நண்பகலும் கூகை நகும்''
(பு.பொ. வெண்பாமாலை 39)

மேலும்,
பட்டினப்பாலை அடிகள் 250-270 காணலாம்.

''உரு கெழு மன்னர் ஆர் எயில் கடந்து,
நிணம் படு குருதி பெரும் பாட்டு ஈரத்து
அணங்குடை மரபின் இருங்களம் தோறும்,
வெள்வாய்க் கழுதைப் புல்இனம் பூட்டி,
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகல் உழவ''
(புறம்: 392)

''வடதிசை மன்னர் மன் எயில் முருக்கி
கவடி வித்திய கழுதை ஏர் உழவன்'' (சிலம்பு 27:225,6)

''கரி பரந்து, எங்கும் கடுமுள்ளி பம்பி
நரி பரந்து நாற்றிசையும் கூடி எரிபரந்த'' (முத்:21)

''வேர் அறுகை பம்பிச் சுரை படர்ந்து
வேளைபூத்து
ஊர் அறியலாகா கிடந்தனவே'' (முத்:22)

என்று பகைவர் நாட்டு அழிவைப் பாடுவார் புலவர் பெருமக்கள்.

இவ்வாறு அழிவுக்கு ஆற்றல் காட்டினர். இதனைப் புலவர்கள், வீரத்தைக்காட்டும் அடையாளமாகக் கொண்டனர்; கூறினர்.

இவர்கள் அனைவரிலிருந்தும் மாறுபட்ட ஒரு செய்தியை வண்ணக் களஞ்சியப் புலவர் தம் காப்பியத்தில் காட்டுவார்.

மகறிபுதேய மன்னனுக்குத் தூது அனுப்புகிறார். அந்தத் தூதின் கருத்து யாது எனின், அம்மன்னன் குபிர் என்னும் அஞ்ஞானத்தை விட்டு கலிமா ஓதி தீன் நெறியை மருவித் தமக்குக் கப்பம் கட்டவேண்டும் என்பதுதான். இப்படி வந்த தூதன் சொன்ன செய்தி கேட்ட மன்னன் சினம் கொண்டு, ''யார் அவன்

எனக்கு மேலோன்? அவன் (எனக்கு) திறை அருளாது இந்தத் தூரமும் வருவதாய் ஓர் துணிவு கொள் செருக்கு உ(ள்)ளானோ?'' என்றான். (24:4)

அப்படிக் கேட்டதோடல்லாமல் ''என்னைக் கலிமா சொல் என்று சொன்ன அவன் உயிரை யானே திறை ஆகக்கொள்கிறேன்; தூதனை வதைத்தல் நீதியன்று எனத் தொல் நூல் சொல்வதால் உன்னை விடுத்தேன். அகன்று போ!'' என்றான்.

இதில் அமைந்திருக்கும் பிந்தைய கருத்து கம்பனை ஒத்து இருப்பதனைக் காண்கிறோம். இராவணன் அநுமனைக் கொல்லக் கருதி ஆணை பிறப்பித்தபோது,

> ''பூதலப் பரப்பின், அண்டப் பொகுட்டினுள் புறத்துள், பொய்தீர்
> வேதம் உற்று இயங்கு வைப்பின், வேறு வேறு இடத்து வேந்தர்,
> மாதரைக் கொலை செய்தார்கள் உளர் என வரினும், வந்த
> தூதரைக் கொன்றுளார்கள் யாவரே, தொல்லை நல்லோர்''.(5917)

என்று வீடணன் அறிவுரை கூறுகிறான்.

தூதன் திரும்ப வந்து செய்தி சொன்ன பிறகு சுலைமான் (அலை) அவர்கள் அந்த மகறிபு தேய மன்னன்மீது படை எடுத்துச் செல்கிறார்.

மூண்ட போரில் மன்னனும் அமைச்சன் தானும் மற்றுள டைஞர் யாரும் மாய்ந்து போயினர்.

களத்து இவை முடித்த ஏந்தல் தானை சூழ புரிசையினுள் புக்கார். அரண்மனைக்கு, அளப்பரு நிதியசாலை, அனைத்துக்கும் காவல் செய்து தளத்தில் விஞ்சியதும் செல்வம் யாவும் தம்வசம் செய்தார். (24:22)

மன்னன் தேவியும், மைந்தனும் மற்றுள்ளோரும், வள்ளல் பால் சென்றனர். அச்சிறுவனை அவர் கந்த மென்பதத்தில் தாழ்த்திக் ''களத்தினில் இறந்த வேந்தை, மந்திரி தனை அடக்கி வர அருள் புரிக'' என வேண்டினர்.

இவ்விடத்தில் வண்ணக் களஞ்சியப் புலவர், பாடுவார்:

''உத்தரம் புரிய சென்றே உதவு
சந்ததியால் மன்னற்கு
எத்திற சடங்கும் செய்வித்து
இயல்புற அடக்கம் செய்தார்.
சித்திர யூக வாண் மந்திரிக்கும்
அங்கு உரியோர் எய்தி
பத்தி கொள் முன்னூல் ஓதும்
படி முடித்து அடக்கினாரே.'' (24:25)

இங்கு சிலப்பதிகாரத்தையும் பதிற்றுப் பத்தையும் சிறிது காண்போம். மாற்றார்தேயம் மண்டு எரி கதுவ, பிணம் பிறங்கு அழுவத்து அவை சுடுபுகையால் தான் அணிந்த கண்ணியும் தாரும் வாடுவதை வயவேந்தர் விரும்பினர் என்று அறிகிறோம்.

''ஆள் அழி வாங்கி அதரிதிரித்து'' என்ற சிலம்பின் தொடர் அப்பிணங்கள் கூழாய்க் குழைந்து உருத்தெரியாவகை அமையத் தன் பகை தெறுதிறன் காட்டினான் என்று குறிக்கும்.

வண்ணக் களஞ்சியப் புலவர் இந்நூலிடைச் சொல்லும் இச் செய்தி தமிழ் இலக்கிய மரபிற்கு மாறுபட்டிருப்பதனைக் காணலாம்,

பின்னர்த் தம் நம்பிக்கைக்கு உரிய ஒருவரை அந்நாட்டுக்கு அரசன் ஆக்கினார்.

சில நாட்கள் அங்கு தங்கி இருந்து, அம்மன்னனுக்குச் சில அறிவுரைகள் கூறித் தன் நாடு திரும்புகிறார் சுலைமான் (அலை) அவர்கள். அவர் கூறியன :

''கோ அருள் சிறிய தோன்றல்
குழந்தைக்கும் தாயர் ஆன
பாவையர் எவர்க்கும், சூழ்ந்த
பரிசனர் எவர்க்கும், நாட்டார்
யாவர்களுக்கும் வேண்டும் பொருள் எலாம்
ஈந்து எந்நாளும்
தாஅறப் புரந்து சிந்தை சஞ்சலம்
அகலச் செய்மின். (24:30)

சினத்திலும் நெறியே செய்மின்;
　　தீன் வழி நிலைமை செய்ம்மின்;
மனத்தினின் வாழ்வினாலே மகிழ்வுறாது
　　ஒழுகல் செய்ம்மின்
கனத்தினும் உதவி செய்ம்மின் என்றனர்'' (24:31)

களத்தில் விஞ்சிய செல்வம் மாத்திரம் தன் வயப்படுத்தினாரே அன்றி, நாட்டின் மற்ற செல்வங்களை யாரும் சிதைக்கா வகையில் காவல் செய்தார் என்பது முன்னர்க் கண்டோம்.

தன் நாடு திரும்பும் பொழுதும்கூட,
''மீட்டும் வெம்பரியில், வாளில், மணிகளில் வியந்தது ஏதும்
　ஈட்ட நம்பால் அனுப்புக'' என்றனர். (24:32)

இறந்த மன்னன் மகன் தக்க பருவம் அடைந்த உடன் சுலைமான் (அலை) அவர்களை அணுகி கப்பம் கட்டுவதாக ஒப்பி அரசினைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுகிறான்.

அவ்வேண்டுகோளுக்கு இணங்கித் தான் அரசாள நியமித்த அவர்க்குப் பத்திரம் எழுதி அரசை இளவரசன் பால் ஒப்புவித்து விட்டுத் தன்னை வந்து சேருமாறு உத்தரவு இடுகிறார்.

அதன்படி மகறிபு தேய ஆட்சிப் பொறுப்பை இளவரசன் ஏற்கிறான்.

இந்நிகழ்ச்சி இராஜகுமாரன் கடல் வேட்டைக்கு எழுந்த படலத் தொடக்கத்தில் காணப்பெறுவது.

மூன்றாம் புதுமை, சில குறிப்பிட்ட இடங்களில் புலவர் பாடும் வாழ்த்துப்பாடல்கள். பல்கீசைத் திருமணம் செய்து கொண்ட பிறகு, வேத நாயகர், அருள் செம்மல், களப ஒண்புயாசல நபியும் திருக்கருத்தில் அளவு கண்டிடா ஆனந்தம் மிகுந்தனர் என்று கூறி விட்டு,

''நிலங்கள் வாழ்க, மேலவர் தவம்
　　வாழ்க, மானிடர் ஜின்
குலங்கள் வாழ்க, புண்ணியப் பொருள்
　　வாழ்க, கோல் வாழ்க,
பலங்கள் வாழ்க, தீன்வாழ்க,
　　பல்கீசுடன் பண்பாய்
நலங்கள் வாழ்க, வாழ்ந்திருந்தனர்
　　சுலையுமான் நபியே'' (34:144)

என்று பாடுகிறார்.

இஃதன்றியும் காப்பிய இறுதிப் பகுதியில்,

''ஆதி தன் கருணை வாழி!
அகுமதர் இறசூல் வாழி!
தூது இவர்க்கு அருகர் ஆன
தோழர் நால்வோர்கள் வாழி!
போதினைப் பாத்திமா புத்திரர்
அஸன், உஸனார் வாழி!
சோதி செய் நபிகள் வாழி!
சுலையுமான் நபி சீர் வாழி!. (46:14)

கவின் முகியித்தீன் அப்துல் காதிர்
பொன்தாள்கள் வாழி!
அவுலியா நிலையோர் வாழி அணி
உலமாக்கள் வாழி!
எவர்களும் தீனோர் வாழி!
ஈகை நல் தருமம் வாழி!
புவிகதிர் மதிகள் செங்கோல்
புரவலர் புலவோர் வாழி!. (46:15)

அதி பதிவகுதை ஆளும் அகுமது
நயினான் ஈன்ற
துதி அப்துல் காதிர் வாழி! துலங்கு
கோத்திரத்தோர் வாழி!
மதி தொடும் குடுமி மாட
மதுரையோன் வனச ஆரம்
கதிர் விரி மீசல் வண்ணக்
களஞ்சியங் கவிநூல் வாழி!. (46:16)

# 11. உலக நீதி

## 1. விதி

விதி என்பது முறைமை, நியதி, நேர்மை, ஒழுங்கு எனப் பல பொருள் பெறும். நடந்தே தீரும் முறைமையை விதி என்று குறிப்பர். இதனைத் தமிழ் மரபின் படி ஊழ் என்பர். வள்ளுவர், ''மற்றொன்று சூழினும் தான் முந்துறும்; ஊழின் பெருவலி யா உள?'' என வினவுவார். (குறள்:380)

இதனை மக்கள் வழக்கிடை விதி என்பர். மிக்க துன்பத்தால் வருந்தும் பாமர மக்களிடையேயும் ''நான் வந்த வழி'' என்ற சலிப்புத் தொடர் குறிப்பிடப் பெறுகிறது

காப்பியத்தினூடே புலவர் விதி என்ற சொல்லைப் பலமுறை பயில்கிறார். விதியின் படியே அனைத்தும் நடக்கும் என்பதனை உணர்த்துவதற்காகப் பல நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுவதோடு அல்லாமல் இதனை வலியுறுத்துவதற்கு ஆக ஆனை இறாஞ்சி தர்க்கப் படலம், கடல்வேட்டைக்கு எழுந்த படலம், இருவர் மோகப் படலம், விதி கூட்டிய படலம், ஆனை இறாஞ்சிப் பட்சி நாணிய படலம், ஆகியவற்றைப் படைத்திருக்கிறார்.

ஊழ், விதி என்ற சொற்கள் தமிழ் இலக்கியங்களில் பரவலாக இடம் பெற்றிருப்பதோடல்லாமல், நம் மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் தனக்கு நிகழும் ஒன்றை 'விதி' என்று சொல்லாத நாளே இல்லை என்று சொல்லி விடலாம்.

''யான் செய் தொல் வினைக்கு எவன் பேதுறுவது?''என்பாள் சங்க காலத் தலைவி.

"இம்மை செய்தன யான் அறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்து"

என வினவுவான் மாடலன். "முன் செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே" என்று இடுக்கண் அழியாப் பட்டினத்தார் வியப்பார். "நீர் வழிப்படூஉம் புணை போல் ஆருயிர் முறைவழிப் படூஉம்" என்று தெளிவார் கணியன் பூங்குன்றனார்.

"வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்,
தாழ்வினை அதுவர, சீரை சாத்தினான்;
சூழ்வினை நான்முகத்து ஒருவன் சூழினும்,
ஊழ்வினை ஒருவரால் ஒழிக் கற் பாலதோ?"

(கம்பன்: 1764)

என்பான் கம்பன்.

"விதியின் பிழை (1734)" என்பான், சுற்றமை வில்லன் சுந்தர ராமன். "விதிக்கு விதி ஆவேன் (1735)", என்று வீரம் விளம்பிய வில்லி, பின்னர் "வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?" (3333) என்பான்.

"தலை எழுத்து" எனவும், "அன்றைக்கு எழுதி வைத்தது" எனவும், பாமரரிடையேயும் வழங்கப் பெறும், இவ்வூழிடத்துத் தமிழ் மக்கள் அசையா உறுதி கொண்டு இருந்தனர் என்பது தெளிவாகும்.

வண்ணக் களஞ்சியப் புலவரும் "ஊழ்", "விதி", "ஊழ்விதி" என்பனவற்றை ஆண்டு இருக்கிறார், "உத்தம ஆதிபர் ஆவரோ ஊழ்விதி ஒழிந்தே" (12:55) எனவும், "முடியில் ஊழ்விதி ஒழிப்பது எவ்விதமே?" (26:32) எனவும் குறிப்பார்.

இஃதன்றியும் விதி என்ற தமிழ்ச் சொல்லைப் பரவலாக ஆண்டிருப்பதோடல்லாமல், "கலா", "கதர்", "கலாக்கதர்" என்ற அறபுச் சொற்களையும், தொடர்களையும் ஆண்டிருக்கிறார்.

இக் கலா, கலாக்கதர் என்பனவற்றுக்குப் பொதுவாக விதி என்று பொருள் கொள்ளக் கூடும்.

தமிழ் இலக்கியங்களில் காணப்படும் ஊழ் (அல்லது) விதி என்ற கருத்துக்கும், இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் விதி என்ற தமிழ்ச் சொல் ஆளப் பெற்றிருந்தாலும், கலா, கதர் என்ற அறபுச் சொல் ஆளப்பெற்றிருந்தாலும், அவைக்கும் சிறிது வேறுபாடு உண்டு. எனினும், ஒரு சில இடங்களில் இரண்டு கருத்துக்களும் ஒத்திருப்பதுபோல் ஆளப்படுவதும் உண்டு.

இக்கருத்துகள் அனைத்தும் மறு பிறப்பில் இந்துக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையில் இருந்து பிறப்பவை. ஆனால், இஸ்லாம் சம்பந்தப்பட்டவரை மறு பிறப்பு என்பது இல்லை. இவ்வுலக வாழ்விற்குப் பிறகு மறுமை என்ற ஒன்று உண்டு என்பதுதான் இஸ்லாத்தின் அடிப்படை.

எனவே விதி, வினை என்று முஸ்லிம்கள் கூறும் பொழுது எல்லாம் இறைவன் நாட்டம், இறைவன் விதித்தது என்ற பொருளில் தான் கூறுவார்கள். மனிதனுடைய வாழ்வு முழுவதுமே இறைவனால் முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்டுவிட்டது என்ற ஒன்றே அடிப்படையாக அமையுமானால் மனிதனுக்குச் சிந்தனை சுதந்தரம், சொல் சுதந்தரம் இல்லை என்று ஆகிவிடும்.

அப்படியானால் அவனுடைய சிந்தனைக்கும், செயலுக்கும் அவன் பொறுப்பல்லன் என்றும் ஆகிவிடும். இச்சூழ்நிலையில், முஸ்லிம்களுடைய அடிப்படை நம்பிக்கை, சகல சக்திகளும் இறைவனுக்கே உரியது என்பதோடல்லாமல் நல்லது எது தீயது எது என்று பகுத்து அறியும் திறனையும் மனிதனுக்குக் கொடுத்து நல்ல தன்பால் நடக்க அவனை ஊக்குவிக்கவும் அந்த இறைவன் செய்கிறான் என்பதாகும்.

இவ்வடிப்படையில் நான் இறைவனிடத்தில் தன் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள துஆ இறைஞ்சுவதும், தன் பிழைகளைப் பொறுத்துக் கொள்ள தெளபாச் செய்வதும். இவைகளை முஸ்லிம் புலவர்கள் வற்புறுத்தும் போதும் நாட்டிலே மரபாக இருக்கிற சொற்களையும், தொடர்களையும் பயிலவே செய்கிறார்கள்.

யாராவது ஒருவர் ஒரு துன்பத்தை அநுபவிக்கும் பொழுது தாம் செய்த தீவினையின் பயனாக அதனை அநுபவிக்கிறோம் என மிக இயல்பாகச் சொல்கிறார்கள். இதனைத் தவிர்க்க முஸ்லிம் தமிழ்ப் புலவர்களாலும் முடிவதில்லை.

''எழுதி, எழுதிச் செல்லும் கை விதியின் கை'' என்பார் உமார் கய்யாம்.

> ''ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்
> அன்றி அது வரினும் வந்தெய்தும்—ஒன்றை
> நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
> எனையாளும் ஈசன் செயல்''

எனவும்,

"இட்டமுடன் என் தலையில் இன்னபடி
என்று எழுதி வைத்தான் இறைவன்"

என்றும், ஔவையார் குறிப்பிட்டு உள்ளார்.

இக்காப்பியத்தில் விதி, ஊழ், ஆளப்பெறும் இடங்கள் சில வற்றைப் பார்ப்போம்.

சுலைமான் (நபி) அவர்கள் பிறப்பினை மலக்குகள் வழி முன்னர் அறிந்த இபுலீசு "கருப்பம் அற்றிட ஒரு கலைவு செய் வோம்" (5:45) எனக் கருதினான். செயல் கை கூடவில்லை. இதனைப் புலவர்,

"எது செயத் துணியினும் ஏக நாயகன்
விதி செயப்படும் அதை விலக்கக் கூடுமோ?" (5:46)

என நம்மையே வினவுவார்.

தவிர சதக்கா நன்மைப் படலத்தில் "பலகை லவுகில் அன்று எழுதிய விதமாக" (10:15) என்று குறிப்பார்.

"கனவு கண்டு மணம் முடித்த படலம்" காண்போம்.

கனவு கண்டு, கனவு மங்கையைக் காண, மனை நீத்த அர சிளங்குமரன்,

"கூட்ட ஒ(ண்)ணாத விதி உளது எனில்
இறக்க மட்டும் வேறு ஒரு மின்னாள் மணம்
கொளாமல் இருந்திடக் கடவோம்"

என்று உறுதி கொள்கிறான். (9:20)

"நான் நல்லன் எனவே தரும சிந்தனையாளற்கு விதியும் ஒத்து இருக்கும்" (9:21) என நம்புகிறான்.

தன் மகனைப் பிரிந்த மன்னன் "யான் செய் தீவினையோ" என்று மக்கி வாய்ப் புலம்பினான். (9:29)

"மருங்கில் கட்ட வத்திரம் இல்லாற்கு மகளை மணமுடிக்க வேண்டும் என்னின் தவத்தால் ஈன்ற மகட்கு விதியிதோ?" (9:54) என்று மோதீன் மனைவி மனம் மறுகினாள்.

தன் கணவனைக், கள்வன் குற்றம் சாட்ட, கொற்றவன் கொலைத் தண்டம் விதிக்க, ஆற்றாது அழுது அரற்றிய அம்மோதீன் மகள் "பாவச் சென்மமோ எடுத்தேன்; என்ன தீவினை செய்துற்றேனோ?" (9:108) என்று கலங்கினாள்.

சுலைமான் (அலை) அவர்கள் இடத்துப் பறவை அரசன் கழுகு
"எழில் திரு நபி நீர் பதநடை புரிய
இதையத்துள் விரும்புவீர் எனினும்
ஒழிப்ப அரிது அலவே வாகனத்து உலவு
வீர் எனும் கலா வினை உம்மால்" (23:2)

"அன்றியும் எவர் ஆயினும் இறை விதித்த
அரும் கலா அகற்றுதல் அரிதே என்றது" (23:3)
அவ்வார்த்தை "சரதம்" என்று இசைத்தார் ஏக நாயக நபி.

இருகரம், அறுபது விரல், ஆனை எடுத்து எறிய வல்ல ஆற்றல் சான்ற திருவிலி ஆன ஆனை இறாஞ்சி "...நபியே! நீர் இன்று விதியினைத் தவிர்வது அரிது எனக் கழுகு விண்டதும், உமக்கு இசைந்ததும், என் இதையம் எள்ளளவும் பொருந்தில. மதியால் இவை விலக்குதல் அரிதேயோ? சாற்றும் அவ்விதியை மதியினால் அகற்றி சகலசத்துவமும் தம் வசமாய் ஏற்றுதல், அகற்றல், கூட்டுதல், குறைத்தல் இவை எலாம் இதையம் என்பதனில் தோற்றுதற்கு இணங்கச் செய்திடலாம்" என்றது, (23:4,5). கேட்ட நபி அவர்கள் சினம் மிக "ஆற்றும் இவ்விதம் நீ உரைத்திடல், எவர்கட்கு ஆயினும் அகற்ற அரிது" என்றார்.

"அரிது என உரைத்தீர் அகற்றுவன் யான்" எனப் புள்கூற "இரு நிலத்தினில் ஓர் அதிசயம் உரைப்பன். இது அகற்றுவை கொலோ?" என அரசர் வினவ, "விரைவினில் தவிர்ப்பன்" என்றது.

பின் நிகழ்ந்தன கதைச் சுருக்கத்தில் காண்கிறோம்.

மகறிபு தேய மன்னன் மகனைச் சார்ந்தோர் அழு தொனியை காற்றினால் துலங்கு அரு உரு இலாச் சோதி நாயகன், கூட்டுறை பெண்ணின் காதினில் புகுதச் செய்தான். (25:11)

காரிகை கண்டாள்; காமுற்றான். அவளைத்தன்னோடு கூட்டி வைக்கும்

"விதி எனும் பாங்கி சித்தம் எவைகொலோ?" அறிகிலனே
என மெலிந்தான். (25:55)

(இங்கு ஒரு இலக்கிய நயம் நோக்கத் தக்கது. பாங்கி என்ற சொல் தமிழ் இலக்கியத்தில் தலைவனையும் தலைவியையும் கூட்டுவிக்கும் தோழியைக் குறிக்கும்.

இங்கே விதியையே தலைவிக்குத் துணையாய் நிற்கும் பாங்கி என உருவகப்படுத்துகிறார்.)

பின் அவளிடம் ''கன்னியர்க்கு அரசே! யாம் ஒன்று கருதி, உள்ளத்து அளவறு மோகத்தோடு நாம் ஒன்று செய, கை கூடா நாள் ஒன்று செய்தது. உன் சித்திர வடிவு காண எனை இங்கு சேர்த்தவன், மேகம் கத்திய தொனியும் கேளாத் தூரத்தில் கவலும் என் வாய்ச் சொல் சத்தமும் கேட்கச் செய்தோன், தழுவவும் கூட்டுவான். முன் புள்ளி போட்டதற்கு இமைப் பொழுதேனும் முந்துறப் பொருந்த ஒண்ணாது. இயல் பருவம் அன்றி விருக்கம் பழம் தராமைபோல், ஈட்டிய விதியின் வண்ணம் மதியும் வந்து இயையும். வருவது தானே தோன்றும். வருகிலாது ஒன்றும் வாராது. உருகி இக்கருமம் தன்னில் உழல்வது ஏன் எனில் இவ்வாறு விரகம் உற்று அழுங்க என்றும் விதி இவை விட்டுப் போமோ'' என்று கூறியதுடன் நில்லாமல், ''வையகத்தில் ஒன்றை மனத்தினின் விருப்பம் வைக்கின் மெய் வருந்திடுதல் வேண்டும் என இருவினையும் தீர்ந்த துய்யவர் உரைப்பர்.'' என்றும் கூறி அவளை அடைய, தான் வகுத்த திட்டத்தை விரிப்பான்.

(26:14, 15, 16, 17, 18)

கேட்டாள், கிளர்ந்த சிந்தையாள். இட்டதிட்டம் நிறைவேற இருவரும் கலந்தனர். முன் சுலைமான் (அலை) அவர்கள் குறித்த யாண்டு, மாதம், நாள் நிறைந்தது. இறைவன் விதிப்படி இருவரும் கூடி ''ஜனா'' செய்தனர். இந்நிலையில் கவிஞர் தன் கூற்றாக உரைப்பன கருதத் தக்கன.

'கீட்டிசைப் பெண்ணை மேற்றிசைக்காளை எதிர் தரப் புணர்வன்' என்ற இறைவன் விதிப்பினை விலக்குவன் என்று கூறி அப்பெண்ணை நாலாங் கடல் நடுவில் ஒளித்து வைத்தது பறவை. அவ்விடத்து அது அறியா வகை அவர்கள் புணர்ந்தனர் என்னில், விதியினைத் தடுப்பது அரிது என உரைத்தல் வேதத்தின் கருப்பொருள் அன்றோ? கல்படு தேரைக்கும் கருப்பை உயிர்க்கும், கல்க்குகள் எவைக்கும் றிசுக்குகள் அருளும் கடவுள் புல்லிய கடலின் வழி பெரிது இருக்க, புள் அறியாதவாறு காதலனை வல்லியுடன் சேர்த்து அகமகிழ்வுடன் மருவி வாழ்ந்திடச் செயல் அரிதோ?

பலவகைப்படு உயிர்கள் தட்ட என்று இயற்று கருமங்கள் எவையும் தாங்களே தங்களை அகலாது ஒட்ட என்று இயற்று செயல்களாய் முடியில் ஊழ்விதி ஒழிப்பது எவ்விதமே?

அனிச்சப்பூ கால்களையாது இட்ட படுக்கையில் கிடப்பினும், கண்படை பெறாது வருந்துவாரை வெயிலில் பரலில், மரநிழலில் நித்திரை புரிய ஆழ்ந்த வைப்பது யார்? விறகே சுமந்து, தினமே அலைவானையும் மணி முடி புனைய வைப்பது யார்? விதி இது கருதில் விலக்குவார் உளரோ?'' (26:30, 31, 32, 33)

அறம் கரை நாவின் அருந்தமிழ்ப் புலவர் அறிவுரை கூற வாய்ப்பு கிடைத்தால் விடுவாரா?

''மல்லிகை மலரின் மணம் எவர் கொடுத்தார்?
மணம் அற முருக்கை யார் கெடுத்தார்?
கல்எலாம் மணியாய் ஒளிர்வது ஆர் தடுத்தார்?
காக்கை கண் மணி ஒன்று ஆர் எடுத்தார்?
நல் இயல் பெருஞ்சீர் பெற என எவரும்
நாடுவர் அவர் அவர் தமக்கு
வல்லவன் விதித்த விதிப்படி அலது
மதியினால் வாழ்வது ஒன்று இலையே! (26:34)

ஆனை இறாஞ்சி அரசரிடம், முன் அவர்க்கும் தனக்கும் ஏற்பட்ட தர்க்கம் நினைவுபடுத்தியது. ''சாற்றிய தவணை சென்றது. நான் விதியை என் மதியினால் மாற்றிவிட்டேன்'' என்றது.

''கீழ்மைப்படு கறாமி* நீயோ மிக்கவன் விதியை மாற்றுவாய்?''* என வெகுண்டு சொன்னார்.

நடந்தன சிறிதும் அறியா அப்புள், ''இவை கண்டு இன்னமும் சினப்பது ஏன்? அவர் அவர்க்குத் தக்கதில் குறைய கூட்டத்தகும்'' என்று செருக்குடன் கூறிற்று.

''விதிக்கு ஈமான் கொள்ளாவிதம் அது ஆக என் முன்னே எதிர்த்து வாய் பகர்கின்றாயோ?'' என்று கூறி அரச மகனை அழைத்தார். (28:27,28)

அவன் வெளி வந்தான். நபி அவர்கள் நடந்தன நவின்றார். பட்சி நாணியது; மறைந்தது.

இவ்வாறு விதியின் ஆற்றல் விளக்கவே இப்படலங்களை அமைத்தார் என எண்ணவேண்டி உள்ளது.

''காமுகன் சுறாயிகு பல்கீசு கண்டு மோகித்து அரசு, உயிர்போம் என்று ஆம் விதிசெயும் செயலை யாரால் விலக்குவது?'' என்பார்

(*கறாமி-தீமை செய்பவன்)

பல்கீசு அரசு உரிமைப் படலத்தில் (30:3). மேலும், அங்கே "வி(ரு)தியை வலி ஏதாலும் வென்றிடல் உலகில் உண்டோ?" எனவும் கூறுவார்.

சுலைமான் (அலை) அவர்கள் கருணை கூர்ந்து மணம் முடித்த ஜமுசத்து செய்த பெரும் பிழையால் தான் துன்பம் அடைந்தார் என்பதனை முத்திரை மோதிரம் பறிபட்டுவந்த படலம் விளக்கும்.

கோர மங்கையைத் தெருவினிலே கண்டு பழிப்புற எண்ணினார். அத்தீமைக்கே உருவம் கரிந்து, பதவி இழந்து பலர் பரிகசிக்க பரிபவம் அடைந்தார், "யாம் செய்யும் வினை" என நொந்தார். (36:23)

இப்படலத்தில் புலவர் தம் கூற்றாக,

"வாழ்வினில் சுலையுமான் நபிக்கு இணையாய்
மாநிலத்து இலை. மடந்தையரில்
தாழ்வினில் இவள்போல் இலை. இவள் நபி கா
தலியுமாய் அரம்பை போல் ஆனாள்.
ஆழ்வியன் நபி வெம்பசி, வசையடி பெற்று
அலைந்து முன்போல் வடிவு ஆனார்.
ஊழ்விதிப் பயனை உணர்வது ஆர் உணரின்
ஒழிப்பது ஆர் தேகங் கொண்டு உதித்தோர் என்பார்."

(36:59)

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது:

"அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது" என்பதே.

## 2. அரச நீதி

அரசு நிலையிட்ட படலத்தில் தாவூது நபி அவர்களுடைய பதினேழு புதல்வர்களில் இளையவரும், பதின்மூன்று வயது அடைந்தவருமான சுலைமான் நபி அவர்களுக்குத் தாவூது நபிக்குப் பிறகு அரசுரிமை போகவேண்டும் என்று பல சோதனைகளுக்குப் பிறகு எல்லோரும் ஒரு மனதாக முடிவு எடுத்ததைக் கண்டோம்.

இதற்குப் பின்னால், தாவூது நபி அவர்களுக்கு உபாத்து (மரணம்) வந்து அடுத்தது. இவ்வாறு மரணம் வந்து அடுத்ததைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது யாக்கை நிலையாமை பற்றி அழகாகவும் அற்புதமாகவும் புலவர் பாடுவார்.

"விழியில் காண்பது அனைத்துமே அழிவதன்றி நவப்பட வழுவிலாது நயத்து நிற்பவை உண்டோ?" என்று கேட்பார். "உயிர்கள் யாவும் அமைத்திடத் துணியும் அந்நாள் மேலோன் மவுத்தை முன் வகுத்து ஹயாத்தைப் பின் வகுத்தான்" என்றும் கூறுவார். அதுவன்றியும்,

"கருத்தினில் நினைக்கத் தோன்றும் காரண காயம் தானும்
வருத்துறு வினையின் மேவி வரைவு அற அழியும் என்னில்
பொருத்திய கரண பூத புவன போகங்கள் பெற்றே
உரு திரண்டு அழிந்த மேனி உடல் அழிவு அடைந்திடாதோ

எண்ணி ஓர் அளவு நீர்மேல் குமிழியை
அளவு என்று ஒத்த
நண்ணி ஈது அழியும் போது பெரிது
நாரியர்கள் கூர்வேல்
கண் இமை அதன் நான்கு ஒன்றாம்
கால்நொடி அளவு என்றாலும்
மண்ணினில் உதித்த யாக்கைக்கு
ஒரு நிலை வகுக்கல் ஆமோ? (13:4)

என்றும் பாடுவார்.

தாவூது நபி அவர்களுக்கு மவுத்து வந்து அடைந்தது எண்ணி புத்திரர் எவரும் அவர்களைச் சூழ்ந்து கவலையில் ஆழ்ந்து இருந்தனர். அவ்வேளையில் தமக்குப் பின் அரசுப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப் போகும் இளைய குமாரனான, சுலைமான் (அலை) அவர்களை அழைத்துச் சில அருமையான அறிவுரைகளைக் கூறுகிறார். "நந்தலில் விளையாடல், சொல் பரியாசம் செய்தல், வெகுளி செய்திடல் இவற்றை ஒழிக்க. இன்றேல் அறிவில் தெளிவையும், ஆலோசனை எலாம் போக்கும் (13.5, 6)

ஒரு பொருள் கடவுளிடத்து அச்சம் உறுக. நெஞ்சில் கருதுதல் ஒழியா வண்ணம் கனவிலும் தியானம் செய்க. உலக வாழ்க்கையில் பெறத்தக்க பேறுஎலாம் வயங்கத் தரும்.இருவினை அகற்றும் மேலாம் பதவியும் ஈயும். (13:7)

மனைவியர் கற்பினை அவர்களே காக்கக் கடவர். அது குறித்து அயிர்த்தலும், சந்தேகமாகக் குறித்தலும் வேண்டா, இவ்வயிர்ப்பு துயர் மிகுவித்து அளவறு கேடு உண்டாக்கும். (13:8)

பிறர் இடத்துப் பெறும் சிறிது பலனை எண்ணி பேரளவு நம்பிக்கை வைக்க வேண்டா. இவ்வாறான நம்பிக்கை நலத்தைத் தாழ்விக்கும் (13:9)

வறுமையையும் வெளிப்படா மறைச் சொல்லையும் உயிர் போன்ற தோழமை உடையார் இடத்தும் பகர வேண்டா; அவமதிப்பாக அவர்கள் எண்ண இடம் தரும். (13:10)

இனிவரும் காலம் இனிதே அமையும் என்பதனை மனத்தில் இருத்துக. தனியவன் கருணை சார்வதற்கு உறுதி. (13:11)

அறிஞர்கள் கூட்டுறவு தன்னால் தெளிவு தோன்றும்; மடமை விலகும். சேர்ந்தொழியும் தீவினை. இதனை விடச் சிறந்த பலன் தருவது பிறிதொன்று இல்லை. (13:12)

புல்லவர் தம்மை, தேராப்புந்தியர் தம்மை, மோக மெல்லியர் தம்மை உள்ளத்தாலும் வெறுத்து ஒதுக்குக. இவர் கூட்டுறவு கீழான மடமையை எய்துவிக்கும். (13:13)

சிக்கறுத்து நன்னெறியே கூறும் உலமாக்கள் கூட்டுறவே வேண்டத்தக்கது. தர்க்கம் இட்டு அவரை அகற்றாது தழுவி வாழ்க. இத்தொடர்பு பெரிதும் நன்மை பயக்கும். (13:14)

சத்துவத்து (ஆற்றல்) அளவு பெண்களை மணம் முடிக்க. அறம் வழீஇ அயலவர் பெண்டிரை நத்துதல் தவிர்க. அடுக்கிய மூவுலகும், ஆதிமுதல்வனும் இவ்வழிவழீஇயினாரை இகழ்வர். (13:15)

உறவுள குடும்பத்தார் மீது காட்டும் பரிவும், உரிமையும் பிறர் இடத்தும் கொள்க. இத்தன்மையர் ஆகின் புவி புகழும்; இறையருள் பெருகும்; செல்வம் தானாகவே வந்து சேரும். (13:16)

இவை போன்ற பல புத்திகள் சொன்னார் என்பதனைப் புலவர்,

''ஈது போல் அனந்தம் புந்தி இசைத்தனர் எவையும்''

என்று பாடுவார்.

தன் மகன் நலம் கருதி ''பகர் திருவசனம் போலும் பலன் செய்யும் மந்திரம் (பிறிது ஏதேனும்) உண்டோ?'' எனவினவுவார்.

இவ்வறிவுரைகளில் கூர்ந்து நோக்கத் தக்கன பல உள. உலக நடைக்கு ஏற்ப கூறப் பெற்ற அறிவுரைகள் சில இருப்பினும் மனிதத் தன்மையை அடிப்படையாகக் கொண்ட சில அறிவுரைகளும் இடம் பெற்றிருக்கின்றன, என்பதனைக் காணலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக இஸ்லாமியக் கருத்துகளின் அடிப்படைக்கு ஏற்ப என்றும் சிந்தையில் நிலைத்து நிற்க வேண்டியது இறை அச்சம்.

இது நிலைத்து நிற்குமாயின் நன்மையைத் தவிர தீமை எவையும் செய்ய வழியே இருக்காது.

இதற்கு ஏற்பவே ''புல்லவர், தேராப்புந்தியர், மோக மெல்லியர் எவரே ஆயினும் அவர்களை நெஞ்சில் உவப்பதும் வெறுப்பதும் என்ற இரண்டையும் செய்யற்க'' என்று அறிவுறுத்துகிறார்.

''சிக்கறுத்து இயலும் வேதத் தெளி(வு உடைய) உலமாக்கள் தம்மைத் தர்க்கமிட்டு அகற்றிடாது அன்னவர் உரை தழுவி வாழ்க'' என்றும் அறிவுறுத்துகிறார்.

அரசனுக்கு, அவனுடைய கடமைகள் எவை எனக் கூறி தன் ஆட்சியின் கீழ் வாழும் அனைவரிடத்தும் விருப்பு வெறுப்பு இன்றி ஒரே மாதிரியாகவே அமைந்து இருக்கவேண்டும் என்பதனை வற்புறுத்த

''உறவுள குடும்பத்தார் மீது இருத்து நல் உரிமை போலும்
பிறர் தமைக் குறித்து உள் அன்பு பெயர்ந்திடாது இருத்தல் வேண்டும்''

என்றும் கூறுவார்.

## 3. ஈகைச் சிறப்பு

தரும லாபப் படலத்தில் ஈகையினுடைய பெருமையையும் பலனையும் உடன்பாடாகவும் எதிர் மறையாகவும் புலவர் பாடி இருக்கிறார்.

பறவைகள் இட்ட முட்டைகளை வீட்டிற்குச் சொந்தக்காரன் எடுப்பதனை ஜின்களாலும் தடுக்க முடியவில்லை. அவை அடிபட்டு, உதைபட்டு நொந்து போனதையும், அதற்குக் காரணம் ஓர் உறட்டித் துண்டை பசியுடன் வந்த ஒருவனுக்கு அவன் ஈந்ததுதான் என்பதையும் அப்படலத்தில் கண்டோம்.

இதனையே அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் ஈகைச் சிறப்பைப் புலவர் பாடுகிறார்.

''அருள் கொடை அறன் வலிக்கு இணை எவையே?'' என்று பொதுவாக ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டு, ஈகையினால் உண்டாகும் லாபத்தையும், ஈதல்செய்யாமையால் உண்டாகும் நஷ்டத்தையும் ஆறு பாடல்களில் பாடுகிறார்.

முதல் முதலாக ஜின்கள் பட்ட அவதியையே அடிப்படையாகக் கொண்டு, ஒரு சிறு உறட்டித்துண்டு கொடுத்தது, சுலைமான் நபி கட்டளைப்படி அந்த முட்டைகளைக் காக்க வந்த ஜின்

களை அணுகா வகை செய்யும் ஆயின் தருமத்தைப் போல் உண்டோ லாபம்?'' என்று கேட்கிறார். இதனை அடுத்துப் பொது வாக,

''இயல் பெரும் பல மந்திரம் எலவயை ஓதிடினும்
வியத்த நோன்பு நித்தமும் உறையினும் இதன்மேல் எ
செயல் பொருந்து புண்ணியங்கள் செய்யினும் பசி தீர
நயத்தொடு ஈவது ஓர் தருமத்தைப் போலுண்டோ லாபம்?''
(27:32)

என்றும் கேட்கிறார்.

பிற நற்செயல்களோடு தருமத்தை ஒப்பிட்டு, தருமத்தைப் போல் உண்டோ லாபம் என்று இப்படிக் கேட்ட புலவர், அந்த தர்மத்தினால் என்னென்ன பலன்கள் உண்டாகும், என்று கூறி தர்மத்தைப் போல் உண்டோ லாபம் என்று அடுத்த பாடலில் கேட்டு விடுகிறார்.

''ஆன தத்து உயிர் இடரையும் அகற்றி வாழ்வு அருளும்.
வானகப் பெரும் பதவியும் தரும். எலாம் மாறி
தான் இறக்கினும் உடன் வரும். சருவ சாதகம் ஆம்.
நால் நிலத்தினில் தருமத்தைப் போலுண்டோ லாபம்?''
(27:33)

மேற் சொன்ன கருத்துகளையே எதிர் மறையாகத் தர்மம் செய்யாதது போல் நட்டம் வேறு ஏதாவது இருக்க முடியுமா? என்று காரண காரியத்தோடு பின்வரும் பாடல்களில் கேட்டு விடுகிறார்.

சாதாரண உலக இயற்கைதான். மனைவியோ, மக்களோ, சுற்றமோ, செல்வமோ, உடன் வராது இருக்க, செய்த தருமத்தின் பலன் ஒன்றே உடன் வருவது நிச்சயம் என்று இருக்கும் பொழுது அதனைச் செய்யாமை போன்ற நட்டம் வேறு உண்டோ என்று கேட்கிறார். (27:34)

''பலம் செய் சம்பத்து எவ்வித திறன் உற படைக்கினும் இந்
நிலம் செய் வாழ்வு ஒரு நொடியினில் அறும் என நினைத்து
பலம் செய் வாழ்க்கை அம்மறுமை என்று ஆய்ந்து அவை
பெறவே
நலம் செய் தன்மம் செய்யாதது போல் உண்டோ நட்டம்?''
(27:35)

"எவ்வளவு ஆயினும் தங்களால் ஏன்ற மட்டு ஈயாது
அவம் அது ஆய் ஒரு நாளுமே போக ஒணார் ஆய்ந்து ஓர்
உவகை ஆக கை பொருளினால் வாக்கினால் உடம்பால்
நவிலும் தன்மம் செய்யாதது போல் உண்டோ நட்டம்?"
(27:36)

இம்மையில் எத்தகைய செல்வாக்குடனும், சம்பத்துடனும் வாழினும் அவ்வாழ்வு ஒரு நொடியில் அழியக் கூடியது என்பதனை நினைத்து, அழியாததும், நிலையானதும், மறுமையே என்று ஆய்ந்து, அதனைப் பெற தருமம் செய்யாமை போல் உண்டோ நட்டம் என்று கேட்கிறார்.

தர்மம் என்பது பணத்தையோ, பொருளையோ கொடுப்பது மாத்திரம் அல்ல. தர்மம், பொருளால், வாக்கால், உடம்பால் செய்யலாம்.

இஸ்லாத்தின் போதனைகள் படி தர்மம் என்ற சொல் பரந்த கருத்தைக் கொண்டது.

வீதியில் கிடக்கும் முள் வெறுங்காலில் நடந்து செல்பவர்களைக் குத்தி விடுமே என்பதற்காக அதனை எடுத்து ஒதுக்குப்புறமாகப் போடுவதும் தர்மம் தான்.

நோயினால் நொந்து சலித்துப் போய் இருப்பவர்களைப் பார்த்து அவர்கட்கு ஆறுதல் கூறி அவர்கள் நலம் பெற இறைவனை இறைஞ்சுவதும் தர்மம்; வேறு எந்த விதத் துன்பத்தினாலும் மனம் உடைந்து போய் இருப்பவர்களை அணுகி இன்முகம் காட்டி அவர்களுக்கு ஆதரவு அளித்து அவர்கள் நன்மைக்காக இறைவனை இறைஞ்சுவதும் தர்மமே ஆகும்.

இவற்றை எல்லாம் உள்ளடக்கிக் கொண்டது தான் இப் பாடல்.
(27:36)

## 4. யதார்த்த இயல்பு

மனிதர்களுடைய யதார்த்த தன்மையையும் அங்கும், இங்குமாகப் புலவர் எடுத்துக் காட்டிக் கொண்டு போகிறார்.

நம் அனைவர்க்குமே ஓர் இயல்பு உண்டு. அறத்தையும் ஒழுக்கத்தையும் பற்றிப் பொதுவாகப் பேசிக் கொண்டு இருப்போம். அவற்றைக் காப்பாற்றவும், நிலை நிறுத்தவும் எந்த அளவிற்குச் செயல்படுவோம் என்பது வேறு செய்தி.

எத்தகைய கொடுங்கோலன் மன்னனாக இருந்தாலும் எத்தனைக் கொடுமைகள் நாட்டில் நடந்தாலும் அதைப் பற்றி வெறுமனே பேசிக் கொண்டிருப்போமே தவிர நாம் நேரிடையாக பாதிக்கப் படாதவரையில் செயலில் இறங்கமாட்டோம்.

நாம் பாதிக்கப்படும் பொழுது அந்தப் பாதிப்புக்குக் காரணம் ஆனவர்களை நாம் தூற்றுவோம். அவனை நாம் ஒழிப்பதற்குப் பதிலாக வேறு யாராவது தம் திறமையினாலும், உறுதியினாலும் ஒழித்து விட்டால் அவரைப் பாராட்டுவோம்.

இது நாம் ஒவ்வொருவரும் அறிந்திருக்கின்ற ஒன்று. ஆனால், எப்போதும் சொல்வதற்குத் துணிவு இல்லாதது.

"கனவு கண்டு மணம் செய்த படலத்தில்'' கள்வன் கொணர்ந்த பொய்ச் சாட்சிகளை நம்பி தாவூது நபி அவர்கள் அக்கள்வனிடம் அப்பெண்ணை ஒப்படைத்து அவள் கணவன் தலை துணிக்கப் பணிக்கிறார்.

இக் கொடுமையை உணர்ந்த பெண் அவலத்தில் ஆழ்கிறாள். அதனைக் கண்ட பொது மக்களுடைய சொல், செயல் எப்படி இருந்தது என்பதனை மிக்க அழகாகப் புலவர் பாடுவார்.

'' 'ஆழ்ந்து அளவிடில் இவன் காதலி அல அவனைக் கூடி
வாழ்ந்தவள் ஆதலாலே வல்லிக்கு இ துயரம் என்பார்
சூழ்ந்த ஊழ்வினை ஈது என்பார் சொன்னது நபி தன் காதில்
வீழ்ந்திடில் நிபம் ஆம் என்பார் வீண் எலாம் நமக்கு ஏன்
என்பார்,'' (9:114)

"இவனை இ வழியில் கண்டோம் ஏந்திழை உருகி சொல்லும்
அவனையும் விழியில் கண்டோம் அவன் இவள் கணவன் என்று
கவலுதற்கு ஈடு யாதும் கருத்தினில் பிரித்து ஓராமல்
அவம் நபி செய்தார்'' என்பார் 'அவர்க்கு முன் அறைவோம்'
என்பார். (9:115)

'' 'தோள் தட வரை பால் உள்ள தோன்றலை வதைப்பார்
என்னில்
வாள் தடம் கண்ணினாளும் மாய்க்கும் தன் உயிரை' என்பார்
'பாட்டளி முரலும் கூந்தல் பைந்தொடி அழகு சொல்லக்
கேட்டதும் இல்லை' என்பார் ''கிளி மொழிக்கு அஞ்சும்'
என்பார்,'' (9:116)

இதற்கு மேல் ஏதும் செய்திலர்.

ஒரு சாரார் "வீண் எலாம் நமக்கு ஏன்" என்றுஇருந்து விட, பிறிதொரு சாரார் "நபி பிழை செய்தார்" என்றும், "அவரிடம் எடுத்து உரைப்போம்" என்றும், சொன்னார்களே தவிர, அப்படி ஒன்றும் செய்திலர்.

பல்கீசு வரலாற்றுப் படலத்தில் சுறாயிகு என்னும் மன்ன னுடைய கொடுமைகளைப் பற்றி நான்கு பாடல்களில் வடித் தெடுத்துப் பாடுவார் புலவர்.

"அடல் அரி இவன் பின் புன்மை அனைத்தும் வான் தடவு செந்தீ
வடவையும், விடங்கள் யாவும் மனு உரு எடுத்தது ஒப்பாய்
சுடர் மணி வயிரத் தோளான் குமையிறு சுதனாய்த்
தோன்றும்
கொடியவன் சுறாயிக் என்போன் குடை ஒன்றில் புடவி
[கொண்டான். (29:5)

பொய்வகை, களவு, நிந்தை, கொலை
மது பொசித்தல் என்னும்
ஐ வகை ப(ா)வம் கிரீடம் ஆய்
அதற்கு அடுத்த புன்மை
செய்வகை எவையும் தேசக்
கலன்களாய் சிறக்கப் பூண்டு
மொய் வகை இபுலீசுக்கு முதன்
மகவு ஆயினானே. (29:6)

தவம் குணம் பொறுமை உள்ளத்
தயவு புண்ணியம் நிசச்சொல்
உவந்து அருள் கொடைகள் என்னும்
பயிர்களை உறுதி கேடாம்
அவம் படு வாளினால் வேர்
அற அறுத்து அனந்தல் போதும்
நவம் படு கொடுமை மாறான்
நயஉரை பகரா நாவான். (26:7)

சுந்தரம் குலவ ஆதி
சூதகம் ஆய் திரண்ட
சந்திர வதன மின்னார்
குளித்த பின் தான் போகித்து

பிந்த மற்றொருவர்க்கு ஈய
கட்டளை பெரிதின் ஈந்தே
உந்திய கிழமை ஒன்றுக்கு
ஒரு பெண்ணை அனுபவிப்பான். (29:8)

எனினும்,

அவனுக்கு எதிராகத் துணிந்து யாரும் எந்த நடவடிக்கையும் எடுக்க முன்வரவில்லை.

பல்கீசு தன் தந்திரத்தினால் அவனைக் கொன்றுவிட்டு, தானைத் தலைவர் நூற்றுவரை வரவழைத்து விருந்தளித்து, அரசன் எழுதியது போன்ற பொய்ப்பத்திரம் ஒன்று தயாரித்து அளித்தாள்.

அதில் அவர்களுடைய மனைவியர்தம்மை தன்னுடைய படுக்கை வீட்டிற்கு அழைத்து வந்து விட்டுச் செல்ல வேண்டும் என்று குறிப்பிடப் பெற்றிருந்தது.

அதனைப் படிக்கக் கேட்ட பிறகு அத்தானைத் தலைவர்கள் வெகுளி அகத்தில் அடங்காது பேச முற்படுகின்றார்கள்:

''உழைத்தனன் நரகில் போகும் உழைப்பு
எலாம். பெரியோர் நெஞ்சைக்
குழைத்தனன். மிகுந்த பெண்கள்
கற்புகள் குடி போக்கு எண்ணம்
தழைத்தனன். இது அல்லாது நமது
பெண்டீரைத் தானே
அழைத்தனன் படுக்கை வீட்டுக்கு.
அதிசயம் இது போல் உண்டோ? (30:50)

நேயத்தைக் கெடுத்த பாவி. அரசு என்று
நிலைத்த அன்றே
ஞாயத்தைக் கெடுத்தான். முன்னோர்
நாமத்தைக் கெடுத்தான். இந்த
தேயத்தைக் கெடுத்தான். சேர்ந்தோர்
சிறப்பையும் கெடுத்தான். பொய் ஆம்
காயத்தை நிலை என்றே இக்
கருமங்கள் செயத் தொடுத்தான்.'' (30:51)

இப்பாடலில் உள்ள ஒலிநயம் படித்து நுகரத் தக்கது.

"நடுபுத்தி மேலோர் சொல்லை மறப்பதே
    நரகம் மீதில்
இடு புத்தி என்று இவ்வாறாய் இமைக்கினும்
    தன் குணத்தை
விடுபுத்தி அணுவும் மாறான் விரிகடல்
    சூழ்ந்த பாரில்
கெடு புத்தி இவன் போல் உள்ளார்
    கண்டிலோம் கேட்டிலோமே." (30:52)

"ஆன மூ உலகும் 'சீ' என்று
    அடர்வகை புகலும் எந்த
ஈனமும் இதற்கு ஒப்பு ஆமோ?
    என்றென்றும் மறு தேயத்தில்
தானமும், தவமும், சீரும்
    தழைப்பவர் நகைப்பதாக
மானமும் இழந்து போயோ வாழ்ந்திருப்
    பது நாம் எல்லாம்?" (30:53)

"ஆர்க்கு இது பொருந்தும் என்பார்.
    அழியும் நாள் வந்தது என்பார்.
பார்க்கு அரசு இவனோ என்பார்.
    பயித்தியம் கொண்டான் என்பார்.
ஏற்ற நன்நெறி ஈது என்பார்.
    இத்தனை துணிவோ என்பார்.
மூக்கினில் விரலை வைப்பார்.
    முறுவலித்து இதழ் கறிப்பார்" (30:54)

அவர்கள் கொண்ட மெய்ப்பாட்டினை நயம்படப் பாடும் பாடல் இது:

"துடைகளில் அடிப்பார்; மீசை
    மயிர் துடிதுடிப்பார்; மாடப்
புடை வசை படிப்பார்; தங்கள்
    புறம் கையைக் கடிப்பார்; காலம்
கொடிது என முடிப்பார்; ஈதுஇ
    கோல் என நொடிப்பார்; பொங்கி
கடல் என நடிப்பார்; செங்கண்
    கடைகளில் அனல் வெடிப்பார், (30:56)

நாட்டில் வாழ்ந்த பெண்களின் கற்பை அவன் கவர்ந்த பொழுது எல்லாம் உண்டாகாத வெகுளியும் எழுச்சியும் தங்களுடைய மனைவியரைத் தன் படுக்கை அறைக்கு அனுப்புமாறு அம் மன்னன் கட்டளை இட்டபோது வெளியாகிறது.

அதற்கு ஏற்பவே பல்கீசு அவனைக் கொன்று விட்டாள் என்பது தெரிந்த பிறகு

''தளத்து அதிபதிகள் உள்ளக் கரை புரள் உவகை
சார்ந்தார்''.
''குணத்தொடு மானம் காத்த குயிலினைத் துதித்துச்
சொல்லத்''

தொடங்கினர்:

''அளப்பரும் தவமே! தாயே! அணிமணி முடி பல்கீசே!
விளக்கு கற்பரசே! தூண்டா விளக்கமே! மேலோர் தங்கள்
உளத்து உறை பொருளே! எங்கள் மானம் ஆம் பயிரும் ஓங்க
வளர்த்த புண்ணியமே! நீரே! மானசஞ்சீவி'' என்றார்.
(30:65)

''விரை செறி குழலீர்! நாங்கள்
வியன் பெற விலை கொண்டீர் நீர்!
உரை செறி புகழ் பெற்றீர் நீர்!
உலகம் எவ்எவைக்கும் தாய் நீர்!
தரை மகள் அணி கிரீடம்
தானும் எம் உயிருமே நீர்!
அரசுநீர்! அமைச்சுநீர்! ஆய்
எங்களை ஆள்வீர்'' என்றார். (30:66)

''நீதி நீர்! நெறியும் நீர்! வான்நிதியும்
நீர்! கெதியும் நீர்! எம்
ஆதிநீர்! அருளும்நீர்! உள் அறிவு இன்மை
இருள் அகற்றும்
சோதி நீர்! மின்னார் கற்பு துலக்கம்
நீர்! மணக்கும் புட்பச்
சாதி நீர்! நலத்தை எல்லாம் தாங்கும்
பூங்கொடியும் நீரே!'' (30:67)

இப்பாடலும் ஒலி நயத்திற்கு எனப் படித்து அநுபவிக்கத் தக்கது.

இவ்வாறு எல்லாம் "மயில் பதத்தைப் போற்றி இறைஞ்சி வாழ்த்தினர் களிப்பால்".

பல்கீசிற்கு முடிசூட்டிய பிறகு,

"உலகம் எவ் வெவைக்கும் தாயாய்
உமிழ் கதிர் மணியாய் மாசற்று
இலகும் ஒண் மதியாய் கற்பு
வடிவதாய் எமன் தேயத்துக்கு
அலர் நிகர் குணங்கள் வாய்ந்த
அரசியாய் பல்கீசு என்னும்
குலமயில் உதித்தது'' என்றே
கட்டியம் கூறி நின்றார் ...'' (30.82)

என்று புலவர் பாடுவார்.

## 5. புலவர் எடுத்துக் காட்டும் சில விந்தைகள்

சகுறஜின் ஈமான் கொண்ட வரலாற்றைப் பார்த்தோம். சுலைமான் நபி அவர்கள் முன் சகுறஜின் வந்து நின்றது. நபி அவர்கள் அதனை உறுக்கி நோக்கினார், வெருவி, உடல் நடுங்கி, மனவலி குறைந்து, அயர்ந்தது. நபி அவர்கள் திறம் உணர்ந்து "இவர் பதத்தில் சாரில் எவ்வகை வினையும்போம். அகல ஒண்ணாது, இறைஞ்சவேண்டும்'' என்று எண்ணியது. வெண்ணகை மிளிர முறுவலித்து, கைகட்டி வாய்பொத்தி எதிர்தர நின்றது.

"எமை அவமதிப்பாய் ஆய்ந்து உளதாம் பரியாசம் உற்றதோர் நகைப்போ? உரை'' என வினவினார்.

அதற்குப் "பெரும் பொருள் நபியே! உமைப் பரியாசம் செயத் தக்கவனோ நான்? நினைக்கவும் கூடுமோ? நான் வருவழியில் சில நிகழ்ச்சிகள் கண்டேன்; எண்ணிப் பார்த்தேன்; என்னையும் அறியாது சிரிப்பு நேர்ந்தது'' என்று கூறி, தான் கண்ட நிகழ்ச்சிகளைக் கூறத் தொடங்கிற்று.

"ஆற்றங்கரையை அணுகி தான் கொண்டு வந்த மட்குடத்தில் நீர் நிரப்பிக் கரை ஏறினான் ஒருவன். தான் ஏறிவந்த கோவேறு கழுதையின் கயிற்றை அக்குடத்தின் வாயில் (கழுத்தில்) கட்டினான். வெருண்ட அது குடத்தோடு விரைந்து ஓடத் தொடங்கியது. குடம் உருண்டு, உடைந்து ஒழிந்தது.

இவனை நிகர்த்த அறிவீனரும் உளரோ?

அடுத்து ஒருவன் தொடுதோல் அமைப்பானிடம் சென்று தனக்குப் பாதகாப்பு இணை செய்து தரவேண்டினான். அவன் வேண்டுகோள் விசித்திரம் ஆனது. 'என் கால்கள் ஓயாமல், விரை வாய் வழி நடப்பினும் மடிந்து அறாமல், புத்தம் புதுமை கெடாமல், பொலிவு மாறாமல், நான்கு ஆண்டுகள் அளவும் உழைக்கத் தக்கதாக அவை அமையவேண்டும்' எனக்கோரினான். அது அழிவுறும் வரையில், அந்நான்கு ஆண்டுகள் அளவில், இவன் அழிவுறாது இருப்பான் என்பது என்ன நிச்சயம்? சிதடருக்கு அதிபன் ஆன இவன் சொல் எனக்கு நகைப்பு உண்டாக்கிற்று.

மூன்றாவதாக ஓரிடத்துத் தொன்முதாட்டி ஒருத்தி, ஒரு விரிப்பின்மீது அமர்ந்து, பிறர்க்குக் குறியும், ஜோதிடமும் சொல்லிக்கொண்டு இருந்தாள். தன்னிடம் வந்த பூவையர்க்கும் புருடர்க்கும் 'பாக்கியம் அமையும். செல்வம் சேரும். துன்பங்கள் அகலும்' என்று கூறினாள். சிலர்க்குத் திருமணப் பொருத்தப் பயன்களும் கூறிக்கொண்டு இருந்தாள். இவளைச் சூழ்ந்து பலர்.

இவள் சொல்வது கேட்டு மகிழ்ந்த சிலர் அவ்வாறே வதுவை யும் செய்தனர். அவர்கள் மூடர்கள் அன்றோ?

எதிர் காலப்பலன் கூறும் இவள் தான் இருக்கும் விரிப்பின் கீழ்ப் புதையல் ஒன்று இருப்பதனை ஏன் அறியாமல் போனாள்? சோதிடப் பலன் கேட்கச் சூழ்ந்தனர் பலர் மூடர். எண்ணிப் பார்க் கிறேன். என்னையும் அறியாது நகை பொங்குகிறது.

நான்காவது ஆக ஒரு நிகழ்ச்சி. ஒருவன் நோயினால் வருந்திக் கொண்டு இருந்தான். அது நீங்க ஈருள்ளி கொண்டான். நோய் அகன்றது. உலகத்தவர் பிணிக்கு எல்லாம் ஒப்பற்ற மருந்து இதுவே என எவரிடத்தும் வலியச் சென்று உரைத்தான். அவர்களும் தமக்கு உண்டான நோய் நீங்க அவன் ஆலோசனைப்படி ஈருள்ளி உண்டனர். நோய் பெருகியதே அன்றிக் குறைந்ததாகத் தெரிய வில்லை. துன்பமே மிக்கனர்.

இவ்வாறாகத் தான் உண்ட மருந்தைப் பிறரும் (எல்லா நோய்க்கும் மருந்து ஆக) உண்ணக் கொடுத்தலும், கூறலும் மடமை. அவ்வாறு அவன் சொன்னதைக் கேட்டு அருந்தியும் நோய் அகலாமை கண்டும் மீட்டும் சிலர் அதனையே கொள்வது அதனை விட மடமை.

ஓரிடத்தில் சிலர் கூடி அல்லும் பகலும் அநவரதமும் அல்லாஹ் திருநாமம் வழுத்தியும் வணங்கியவாறும் இருந்தனர்.

அவர்கள்பால் இறைவன் அருள் பெருக்கவில்லை. அவன் செவி களில் அவர்கள் இறைஞ்சுதலையும் ஏற்கவில்லை.

பிறிதோர் இடத்தில் இருந்த சிலர் இபாதத்தும் செய்யாராய் துஆ இறைஞ்சாராய், அகம் கனிந்து உருகாராய் உள்ளனர். அவர்கட்கு அந்தம் அற்ற இறைவன் அளவற்ற கருணை வலியவே இறக்கி அருள்கிறான்.''

இவ்வாறு கூறி, தான் நகைத்ததற்கான காரணங்களைச் சகுறஜின் விளக்கிற்று.

## 6. (அ) பொதுக் கருத்துகள்

(புலவர் தொடர் வழி...உவமை விளக்கம்)

○ பெருகு புது வெள்ளம், ஆணவம் பெருத்து, தெளிவு இன்றி வீண் அவம் தரு வேசியர் மனம் போன்றது. 2:8

○ தாழ்ந்துள இடத்தில் சாரும் சலிலம், மலியும் நற்குணத்த வர்க்கு, மெய் வருந்துறா வகை வலிய வந்துள செல்வம் ஒத்து இருந்தது. 2:14

○ வயலில் பதித்துள நெற்பயிர், சிறியவர் மனப்பெருமை போல், இறுமாப்பு அடைந்து நிற்கும். 2:26

○ நெற்பயிர் சூல் முதிர்ந்து மெய்யறிவினர் போல் நிலம் படிந்து விளங்கிற்று. 2:26

(சீவக சிந்தாமணி, சீறாப்புராணம், பெரிய புராணம் போல் வனவும் இவ்வுவமம் கையாளும்.)

○ குங்குமப் பூவின் மகரந்தம் முருக்கு மலரில் படிந்தது. முருக்க மலரும் மணம் குலவியது. இது புவியில், பெரியோரைச் சேர் கின்ற சேர்க்கை வாசனைபோல் அமையும். 2:38

(முருக்க மலர் இயல்பில் மணம் இல்லாதது. வீசும் காற்றால் அதனை அடுத்துள்ள குங்குமப்பூ போன்ற நறுமண மலர்களின் தாதுக்கள் பறந்து வந்து இதனுள் படிய, இதுவும் மணம் பெறும்.)

○ ஒரு சற்குரு மொழி நிலை என்பதில் நில்லாப் பேதையர் மனம் போல், எதில் அடுக்கினும் அந்நிறம் முழுதினும் காட்டும் இயல்பு சேர்வது பளிங்கு. 3;9

○ மதலை பிறந்த செய்தி அறிந்த நபி வறுமையால் வாடுறு இளைஞர்க்கு அரசு கிடைத்தது என மகிழ்ச்சி தழைப்பது ஆயினார். 5:66

○ கசடு நீங்க ஆய்ந்தவர் முன் கசடு அனார் கூசி நா அசையாது அடங்குதல் போல் வாயிழந்தேன். 6:18

○ ஆசை நோய் மிகுந்தோர்க்கு அமிழ்தம், அவ்வாசையாம் பொருளே ; வேறு ஒரு மருந்தும் அதனை அழித்திடாது. 6:18

○ கனவில் கண்ட பொன்னை நகை செய்யக் கருதுதல் போலக் கனவில் கண்ட பெண் மேல் நினைவு வைத்து உளேன். 9:21

○ காட்டு வழி நல்லதோர் வழிபோல் தோன்றும்; நடந்திடின் நன்றி தேராப் புல்லவர் தமது நண்புபோல் அறத்தேயும். 9:34

○ சொல் எழில் கனிகள் தூங்கும். பறித்து அவைத் துய்க்க என்றால், செல்வரின் பால் சூழும் கொடியவர்போல் முசிறு (கட்டெறும்பு) வைகும். 9:34

○ முன்னவன் குருதி என்பில் பட, அது எரியினில் காய்ந்த ஓர் ஓட்டில் நீர்த்துளி இட்டதுபோல் ஆயிற்று. 11:19
(இரும்புண்ட நீரின் மீள்கில...கம்பன் 3420)

○ இளையவன் குருதிஎன்பில் பட, அது ஒட்டாது வழிந்துஓடியது; தளைபடும்மூடரை அறிஞர் தள்ளல் போல் ஆனது. 11:20

○ சுலைமான் நபி அவர்கள் சோதரர்கள் ஒட்டகங்களுக்கு உள கூன் என முரண் ஒழியாதவர். 12:43
(பிறவியிலேயே அமைந்தது)

○ சுலைமான் பெயர் எழுதிய கம்பு அறம் தவிர்ந்தவர் குடிகள் போல் அற்று உலர்ந்து அழிய இறந்த கம்பு ஆகும். 12:46
(கோல் கோடியவனிழல் உலகுபோல் உலறிய உயர்மர வெஞ் சுரம் கலி-பாலை-9)

○ சுலைமான் சோதரர் இட்டகழிகள், உள்ள பசுமையும் அகன்று பொய்த்துளார் முகம் கறுத்திட வெளிறல் போன்றன ஆயின. 12:51

○ சுலைமான் பெயரிடு கம்பு, நற்றவர் நிலை என ஆணி வேர் ஊன்றி, தவறு அகற்றி நன்னெறி செய்வோர் நிலை எனத் தழைத்தது, 12:52

○ சுத்த ஓர் அ(ன்)னை பெறுகினும் சோதரர் ஒத்து அமை வரோ? கடலில் பிறக்கும் முத்துக்கள் எல்லாம் ஆணி முத்து ஆவதோ? 12:55

○ பொங்கும் அக்கினி பெருங்கர்ப்பூரத்தான் மறைக்கின் யாது ஆம்? மங்குமோ? மிகவும் பெரிதாய் வளராதோ? இறை அருள் உளோர்க்கு எவர் செயும் இடரும் சீர்த்தியைக் கொடுப்பது அல்லாமல் அடம் தருமா? 12:56

○ ஒரு மசலா கூறித் தம் சோதரனை வெல்ல நினைத்தனர். பறக்கும் மின்மினியைக் கொண்டு பனி மதியை வெல்ல நினைப்பவர்கள் ஆயினர். 12:68

○ நசாயிகு மற்றும் உள்ளோர் வானிடி அதிரக் கேட்கும் மயில் என மயங்கினர். 13:21

(இடியுண்ட மஞ்ஞை போல் ஏங்கி அழுதாள்—சிலம்பு 9:23,24)

○ நரஜென்மம் நினைப்பினில் விருப்பொடு வெறுப்பு அகற்றி புளியம் பழமொடு தோடு என மருவி வாழவேண்டும். 14:5

○ பெருவரையில் பிறந்துள இரும்பு மீட்டும் அவ்வரையைப் பிளப்பதனால், மண்பெரும் புவியில் ஈன்ற தந்தையின் மகன் வியப்பு என்பது வழக்கு. 17:81

(தாய் எட்டடி; குட்டி பதினாறடி)

○ உள் உறும் அமுதம் ஓராது, பலாக்கனியின் புறத்து முள் கண்டு அச்சம் உறுவது போல், சேனை வெள்ளம் கண்டு வெருவினை• இதனை ஆள்பவன் வள்ளல் என அறிகிலை. 18:25

○ கருமை கொண்டு உதவு மேகத்துளி ஒன்றைக் கடல் வெறாது கொள்ளும்; (தன் பரப்பை எண்ணி, பெறுவது தவச் சிறிது எனக் கருதாது.) ஒருமை கொண்டு எவரும் தங்கட்கு உள்ள மட்டும் உதவில், அந்த அருமை கொண்டு உவந்து கைக் கொண்டு அருளுவர் பெரியோர். 18:42

○ பொன்னகை பூண்டு, அலர்ந்தும், இதழ் வாய்த்தேன் கொடுத்திடாத கன்னியர் போன்று, அளிக்கூட்டம் மடுத்திடா வகை மலர்ந்தன சண்பகம். 22:7

("பொரு சிறை வண்டினம் பொருந்தாது" பெருங் 2;14; 34-36. சண்பக வனத்தை வண்டுகள் நாடா...)

○ (மணம் அற்ற) முருக்கு கல்வி இலாரை ஈன்றவர்க்கு ஒப்பாய் மலர்ந்தது. 22:7

(தோற்றப் பொலிவு உண்டு; உள்ளுறை அறிவு இன்று)

○ தம் செயல் வன்மையைக் காலத்தில் காட்ட உள் துணிந்து அடங்கி இருப்பவர் போல் மல்லிகை அரும்புகள் விளங்கின. 22:9

(முகை மொக்குள் உள்ளது நாற்றம்)—திருக்குறள் 1274

○ வாயால் துலங்கக் கேட்கிலாது, அருள்பவர் தமக்கு இணையாய், மலர்ந்திடாமலே காய்த்துள அத்திகள். 22:23

(பூவாதே காய்க்கும் மரமும் உள—நல்வழி 35)

○ இரக்கினும் கொடா உலுத்தருக்கு இணையாய் மலர்ந்தும் காய்த்திடாப் பாடலம் விளங்கும். 22:23

(பெரியார், சிறியவர், கயவர்...கூறு உவமை நாடின் பலா, மா பாதிரியைப் பார்—தனிப்பாடல் திரட்டு ஔவையார்—30)

○ நன்மக்கட் பேறுடையார் போல உரிய தன் சுமை தாங்க நீள் விழுது விட்டு ஆல மரங்கள் விளங்கின. 22:24

சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழ் ஊன்றியாங்கு
குதலைமை தந்தைகண் தோன்றின் தான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும் (நாலடியார்-197)

○ சலம் நிறைந்து, அடைந்தோர்க்கு எவ்வகை உதவியும் இயற்றி அமைந்த வாவி, உந்து நல் அறிஞர்களின் செல்வம் ஒத்தது. 22:26

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (திருக்குறள்-215)

○ கணிகையர் மயல் வலை நீங்கும் வலியர் (அறிஞர்) போல், சில புலால்கள் வலையை நீங்கி வெடிபோய் பாய்ந்து ஓடின. 24:57

○ இரை உண் விருப்பினால் தூண்டிலில் மாட்டிக் கொண்ட மீன்கள் தம் பெலத்தைக் காட்டா; சத்துரு செய் உபகாரத்தை நம்பினோர் என நலிவுற்றன. 24:59

○ அழகிய பெண், அடுசின ஆனை இறாஞ்சிக்காவலில் இருப்பது, மதிக்க ஒண்ணாத மாணிக்க மணியை வெய்ய நஞ்சு உறையும் நாகம் வைத்துறு விதம் போன்றது. 25:57

○ அன்பிற்கு உரியவன் விழி மணிக்குள் உறைவான். 26:12

கருமணியிற் பாவாய்நீ போதாய் யாம்வீழும்
திருநுதற்கு இல்லை இடம். (திருக்குறள் 1123)

○ இறைவன் புள்ளி போட்டதற்கு இமைப்போது எனினும் முந்துறாது; பருவம் அன்றி விருக்கம் பழம் தராது. 26:16

அடுத்து முயன்றாலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. (வாக்குண்டாம்·5)

○ இன்பமாய்க் கூடு அமைத்து வாழும்பொழுது, மரத்தில் உள்ள இவ்விடுக்கண், பூத்திருந்த வாவியிடை முதலை போன்றது.
(வாவி— நீர்த்தடம்) 27:14

○ பொய் வகை, களவு, நிந்தை, கொலை, மதுப்பொசித்தல் என்னும் ஐவகைப் பவம் கிரீடம், சூறாயிக்கு மன்னனுக்கு. (இவற்றைத் தலைமேல் கொண்டு ஒழுகினான் என்பது குறிப்பால் பெறப்பட்டது) 29:6

(ஐவேறு உருவிற் செய்வினை முற்றிய முடி—திருமுருகாற்றுப் படை, 83:84)

○ புன்மைச் செயல்வகை எவையும் தேகக் கலன்களாகப் பூண்டவன். (பொலிவு தருவன எனப் போற்றி அணிபவன்) 29:6

○ தவம், குணம், பொறுமை, உள்ளத்தயவு, புண்ணிய நிசச் சொல், உவந்து அருள்கொடை என்னும் பயிர்களை உறுதி கேடு என்னும் வாளினால் வேர் அற அறுத்தவன் சூறாயிக்கு 29:7

○ காமக் கலக்கம் ஆம் பரவையின் அமிழ்ந்து, பின் உணர்வு என்ற பலகை கையகப்பட்டது போல் உயிர்ப்பு வந்து எழுந்தார். 29:41

○ பல உடம்புகட்கும் தான் (அரசன்) ஓர் உயிர் எனப் படியாள் வேந்தன் உலவினான். 29:48
(மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்... புறநானூறு 186)

○ உடல் இரண்டு உயிர் ஒன்றாய் வாழ்ந்து உறைந்தனர். 29-61
(இருதலைப் புள்ளின் ஓர் உயிர் அம்மே அகநானூறு.12)

○ மேவிய நகைகளாலே (பற்கள்) மென்றிட, சுவைதான் கொள்ளும் நாவினை நிகராய், அன்னோர் நடுவுற்றேன். (கடிபடா வகை வளைந்து கொடுத்து, துவண்டு பயன் பெறும் நிலை) 29:69

○ காமமோகம் என்பது தீ. காதின் வழி புகுந்து அகத்துட் சார்ந்து கயவு கொண்டு எழுந்து மோகம் தீபமாய் கமலமாகி செயிர் அறவளர்ந்து, காடாக்கினியும் ஆய், வடவைத் தீயாய், உயிரையும் அடர்ந்து நஞ்சாய் உடலையும் வாட்டும். 30:2

○ பருதியை மசகம் (கொசு) மொய்க்க நினைத்தால் பட்டு ஒழியும். வி(ரு)தியை வலி ஏதானும் வென்றிடலாம் என முயல்வார் பட்டொழிவர். 30:5

○ சுடரை மலர் என எண்ணி இதம்கொளும் சுகம் பெற்று உய்வோம் இதில் என்று வீழச் செல்லும் விட்டில் ஆனான். 30:6

○ (தட்டைப் பறையின் கறங்கும்) தேரை (தன்வாய் ஒலியால்) கட்செவியின் (நாகம்) வாய் புக்காற்போல் நாம் ஆனோம். 30:16

(மணலுள் முழுகி மறைந்து கிடக்கும் நுணலும் தன் வாயால் கெடும்—பழமொழி 115)

○ பானு பங்கய ஞாயம்...கூர (பானு தோன்ற பங்கயம் மலர்வது இயல்பு)
பல்கீசு அரசி ஆக, தானைத் தலைவர்கள் அவள் பதம் துதித்து அன்பு கூர்ந்தனர். 30:83

○ மாறுகொண்ட மனத்தர் ஆய இழிவு ஆன வஞ்சர் சினம் ஆய் அழன்று எரிவதாய் இருந்த சுரம்.
(சுரம்-பாலை நிலம்) 31:12

○ மகிழ் கூரும் அன்பின் உடன் நேர் அறிந்து நடவாத வஞ்சியரையே தரு பாரி (மனைவி) என்று (கொண்டு) அழலுவார்கள் நெஞ்சு தனிலே கொள்ளும் துயர்க்கு நிகராகும், இந்தப் பாலை நிலம். 31:17

○ இப்போதைய என் நிலையை, அனைத்தையும் அமைத்த மறைப் பொருள் சமூகம் அதனில் நீர் நின்றிடும் நிலையை நினைத்து உளத்து உணர்வீர். 31:52

(வலியார்முன் தன்னை நினைக்க தான்தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து —திருக்குறள்-250

○ செயிர் அகன்ற நல்லறிவு மேவியும், முரண்தீரா முயல்வி னோர் தமக்கு இணையான, தமர் (தொளை) இட்ட எண் முடங்கல்(எண் கோணப்பட்டை) வைரம். 32:4

○ அலகைகளின் முகப்புறம் ஒளியுற விளங்க, முதுகுப்புறம் கறுப்புள விதம், முன்னம் ஓர் குணம், பின்னர் ஓர் குணம் உள மூடன் தன் அகத்து இயல்பு இது எனக் காட்டல் போலாம். 32:36

○ "உன்னதம் வழங்கும் குணமும் ஆம் திரு
என்று யாம் உள புலன் சொலின் மணந்து
பன்னிரு கோடிப் பெருங்கடல் சேனை
பாவையும் நபியும் ஒன்றாகில்..."

... இதன் விளைவாய் நமக்குப் பிறக்கும் தோன்றல்களும், அவர்க்கும், அவர் தோன்றல்கட்கும் வழி வழித்தொழும் பாவர். இது அகத்தில் எண்ணாது உடன்பாடு தெரிவித்தல் கொள்ளியினால் தலைசொறிவது நிகர். 33:8

○ ஆதியில் கொழுநன் சிரம் அறுத்து அவன் சிங்காதனம் இவள் பெறல் ஆனாள். பேதைமை மடவார்க்கு அணிகலம் எனப் பெரியவர் வகுப்பது மெய் ஆனது. 33:12

○ புனல் தடத்தில் மூடப் பெற்ற பளிங்கு, பார்ப்பவர் மருளத் தோன்றி, நன்னிலை அகன்றுளார் மனம்என, அடுத்துள நிறம் எலாம் நயந்து காட்டியது. 33:17

○ தூணில் தோன்றும் மலர் நிழலை, மெய்ம்மலர் எனக் கருதி, வண்டு ஏகி, நலிந்து வாடல், புல்லர் சொல் நியம், (நிஜம்) என்று எண்ணிப்போய் அடுத்திடுவார் போலும். 34:21

○ மருவிய பொருளை எல்லாம் வளம்பட இயற்றல், ஓங்கி ஒரு நிலையாய் நிற்றல், உள் இருள் அகற்றல் இத்தன்மைகளால் மாளிகைகள் இருபதியினும் பேறு எய்தி இருக்கும் மேலவர் போலும். 34:24

○ கிள்ளை குளறுமொழி கேட்டு வெறாது உவப்பர். அன்பு பிழைகளை அறியச் செய்யாது; உயர்த்தும் அன்றோ. 34:37

○ மடவியர் மயல் அற்றோர் மனம் போல் விளங்கும் மலைகள்; அம்மலைகள் போன்ற யானைகள். 34:70

நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. திருக்குறள்-124

○ வாள் நகை (ஒளி முறுவல்), துவர் வாய் (செவ்விதழ்)மின்னார் (மகளிர்) மன நடைப் பரிக்குழாம். 35:25

நடை-விரைந்து செல்லல்

வான் வழங்கு இயற்கை வளி பூட்டினையோ?
மான் உரு ஆக நின் மனம் பூட்டினையோ?

அகநானூறு-384

○ பொறியினால், புலனால் தனித்தனி விளையும் புன்மை ஈது எனத் தெளிந்து, அறியும் அறிவினால் உயர்ந்தும், காமநோய் பெருகி அணைந்து மெய்ம்மறந்தவர் தலை கவிழ்வர். அது போல் சகுறுஜின் உடலம் அயர்ந்து, வாய் ஒழிந்து, விழி சிவந்து, மயங்கியது. 38:20

○ மயல் என்பது கொடிய வடவை. அதனை அற அவிப்பது தெளிவு எனும் பெருகு புனல். 40:68

○ சிறப்பு உடையவராய் வாழ்ந்து இறந்த அரசர் தொகை கடல் மணல் எண்ணிக் கணக்கிடுவது போலாம். 45:3

○ கணவன் இல்லாத பெண்டிர்க்கு வாழ்வில்லை. சொல் இல்லாமல் பொருள் இல்லை. 45:36

## 6. (ஆ) பொதுக் கருத்துகள்

○ பிறப்பும், இறப்பும் அணங்குறுத்துவன. 1:3

○ என் புத்தி என்றனையே நகைத்தும், ஆசைவிட்டு ஒழிந்திலது. 1:30

○ அறை கடல் உலகில் எவர்க்கும் நற்பொருள்கள் அறிவுடைப் புதல்வர் போல் உண்டோ? 6:9

○ ஒன்னலர் முன் வைத்திடு கால் பின் வாங்குவது; வறுமையால் சிறியோர் தமது பின் சென்று நிற்பது; மலடு எனக் கீழ்ப்பட்டு

இனத்தின் முன் அடங்கித் தலை கவிழ்வது—பெருகிய இழிவு. 6:19

- இறத்தல் வந்து எய்துமாகில் பயங்கொளாதவர் யார்? 7:12
- இறையோன் உலகில் மேலோர்க்கு அளித்த பண்பாம் கல்வித் தொகை ஒன்றுக்கு ஆயிரம் வகை ஆம். 8:15
- மண்ணினுக்கு அழகு பெண்; மடந்தையர்க்கு அழகு பொன். 9:23
- உரைத்த வார்த்தை காதில் அமுது ஒக்கச் சேருமாகில் வெண்ணகை (முத்தன்ன மூரல்) மான் (மகளிர்) மேல் கொள்ளும் விரகத்துக்கு அளவும் உண்டோ? 9:44
- ஓர் இளைஞன் வனப்பினன் ஆக இருப்பது துணைவிக்கு இன்பம்; அறிவில் தெளிவினன் ஆக இருப்பது மாதுலனுக்கு இன்பம்; வளப்படு செல்வத்தன் ஆக இருப்பது பெண்ணை ஈன்ற தாய்க்கு இன்பம்; ஒழுக்க உயர்வினன் ஆக இருப்பது நகரத்தோர்க்கு இன்பம். 9:69
- பொய்யை மெய்யுரை வெல்லாதோ? 9:110
  (வெல்லவே வேண்டும் என்பது தெளிவு)
- அறிவுடைப் புதல்வர் போலப் பொருள் இலை யார்க்கும். 9:142
- உணர்ந்த மேலவர் ஒழுக்கமும் சீலமும் ஒத்து இருப்பர். 12:53
- ஒன்று செய்ய மற்று ஒன்றாய் முடிந்தது. 12:58
  (பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது-வழக்கு)
- தந்தையர்க்குப் பிந்து பாரியின் (மனைவி) மீதும், அவள் பிள்ளை மீதும் அந்தம் அற்ற அன்பாம். 12:60
- தந்தை தாயர் தவப்பயன் சேயர் ஆகச் சென்மித்தது. 12:76
- கல்விப் பொருள் மகவு

  வெல் வெற்றி உதவி,
  தவ வினைக்கு இடன் அருளி,
  செல்வப் பொருள் வருவித்து,

  அணி திகழ் உத்தமர் சபையில் நல்வித்தகர் புகழச் செய்து, நரகப் பழி விலகும். 12:83
- மெய்யறிவு, மேவிய இருமைப் பதவியும் உதவும். 14:6
- அருள்ளக் காத்து, அளித்து, பலன் அடையாமல், பாவலர்க்கு உதவி புகழ் தேடாமல், இருள் காத்த நெஞ்சினர் செல்வம்

புதைத்து இறந்திட அந்தப் பொருளைப் பூதம் காத்து நிற்கும். 15:28

கேடு கெட்ட மானிடர், பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைப்பர். நல்வழி-22

உண்ணான், ஒளி நிறான், ஓங்கு புகழ் செய்யான்,
கண் அனைய கேளிர் துயர் களையான்... நாலடியார்-9

○ புல்லர் பெருஞ்செல்வப் பணம் கையாடி மகிழ்ச்சிகள் படைப்பர். இவர் பேய் அனையர். 15:32

○ ஒருவோனிடம் சத்திய உரை பேசிப் பின் நிச விருத்திகள் நிலைகளைப் பேதமாய் நிகழ்த்துவர், வீடு இழப்பர், பாழ் நரகும் எய்துவர். 15:34

வேதாளம் சேருமே; வெள்ளெருக்குப் பூக்குமே; பாதாள மூலி படருமே: மூதேவி சென்றிருந்து வாழ்வளே; சேடன் குடி புகுமே—மன்றோரம் சொன்னார் மனை. நல்வழி-23

○ வடித்த புந்தி சொல்லிடினும் எண்ணாமல், வைதிடினும் அடிக்கினும் கடுகு அளவும் அஞ்சாமல், அழிவுஆம் குடித்தனம் செய்யும் மாதர் உளர். இவர் பேய் அனையர். 15:35

இல்லிற்கு இசைந்து ஒழுகா இப்பெண்டிர், "பெண் வடிவில் இங்கு பேய்கள் உலா வருவது உண்டு" எனத் தக்கார்.

○ பன்(னும்) அறிவு எவை கற்றாலும் பெண் புத்தி பழுதே அன்றோ? 18:19

○ கடுகினும் சிறியது ஆம் ஓர் உயிர்க்கு இடர் கண்ட போது அடு துயர் தவிர்ப்பர் மேலோர். 18:32

○ கெடு தொழில் எவர்க்கும் செய்வர் கீழ்மையோர். 18:32

○ கவளம் கையால் இடுபவர் தமையும் கொல்வர் கயவர். 18:32

○ அகத்தும், புறத்தும் ஆதி ஆம் தனி முதற்கு அச்சம் உற்று நடக்க. 19:3

○ தாழ்வினும் அனுசித வாழ்வினும் அவனையே நாடுக. 19:3

○ சினம் மிகினும் நீதமே செய்க. துன்பம் வரினும் மனத்தினில் மகிழ்க. 19:4

○ அடம் செய்யும் கொடிதாய் யார்க்கும் அவம் நெறி புரிதல் தவறு. 21:15

- சகம் செய்யும் நன்றி என்றும் இடம் செய்யும் மனத்தில் கொள்க. 21:15

- யாதேனும் வினவு உறு சுவையைக் காணின் விடுவதோ செந்தேன் ஈயே? 21:19

- அங்கணக் கொடிய கும்பி அதனிடை விலை இலாத
ஒண்கதிர் மணியைக் காணின் ஒழிப்பரோ, உலகில் யாரும்? 21:20

- கங்கையில் கிடந்த ஈன சாதியே எனினும் உள்ளம்
பொங்கும் நல்லறிவிற்கு ஈனம் புகலுமோ? வேதம் நான்கும். 21:20

- இதழ் பெரிய, அழகு நிற முருக்கு சிறிய கஸ்தூரிப் புட்பம் நிகர்க்குமோ? 21:21

- உறுகடல் புவியில் யார்க்கும் உடல் அளவு அறிவு உண்டோ? 21:21

- மகுசனா, தாயித் எனும்பெயர் உடைய எறும்புகள் தலைமை, கண்டு யாது எவையும் உண்ணும் கடைப்பிறப்பு. காலிலேயும் நொண்டி. அது நபி அவர்கள் முன் வந்து எய்தியது. அந் நுட்ப சாதியிடத்தும் யாவதும் உணர்ந்த நபி அறிவு கேட்பார், எனில், 'தண்டியார் தழுவுவர், ஆய்ந்தோர் தங்கள் மாட்டும் ஈனரேனும் அணுகில்' என்பது மெய் ஆகின்றது. 21:22

- இறைவன் மீது அன்பு தரித்திடில் கணியா வாழ்வு கிளர மென் மேலும் ஓங்கும். அல்லாமல் அவன் அளித்த அளவில்லாத செல்வத்தில் மட்டும் அன்பு ஊன்றி நிற்பது கீழ்மையாம். 21:26

- நாமே நமக்கு ஈடா உவமை இல் என நினைத்தல் பெரும் பிழை. 22:45

- மேலவர் அணுவினும் சிறுபிழை மனத்தினில் நினையும் அத்தினமே நெடியோன் துயர் புரிகுவன். 22:48

- பிழைகள் செய் பாதகர் தீவினை எய்தி அழிவிலா நரகத்தினில் அவர் கிடந்து அலற இறைவன் செய்வான். 22:49

- நன்றி, தேர்தரு கல்வி, இருநிதி, நயத்த வென்றி இலற்றினில் ஒருவர்க்கு ஒருவர்கள் வியப்பாம். யாரினும் கதித்தவர் ஒருவர் உண்டோ? எனவே மருள் சிறந்து இறுமாப்பது போலும் மடமை உண்டோ? ஒன்று அது ஆகிய முதல்வன் அன்றோ உயர்ந்தவன். 22:51

- உலகத்து மானுடர் தாம் பெற்ற அரசினை, நிதியினை எண்ணி இறுமாப்பு உறுவர். இதனினும் மடமை உண்டோ? 22:52
- உடம்பும் ஒருவனது சொந்தத்து உளது அன்று. எனின் அடங்க ஆண்டு அருள் அரசு, இருநிதி, அரண்மனை, பெண்டு, பிள்ளை என்பன சொந்தம் ஆமோ? தெளிந்தோர் இவ் எவற்றாலும் செருக்கு மேவார். 22:53
- ஊன் எனப் பெறும் உடல் விருப்பு, மற்றும் எவையும் ஒதுக்கி யான் எனது என்னும் செருக்கு அறுத்து தவம் எய்தும் சிறப்பினரே, வான் என உயர் உலகமும் துதி செய வாழ்வர். 22:54
- பயத்தினால் சிலரை வெல்லப்படும். யாவரையும் வெல்ல நயத்தினால் கூடும். 25:52
- பனி மலை ஒளித்தாலும், பாற்கடல் குளித்தாலும், தொடர்ந்து சென்று சுடும் அன்றோ விரகத் தீயே! 25:53

  நீருள் குளிப்பினும், குன்றேறி ஒளிப்பினும் காமம் சுடும்—
  நாலடியார் 90
- உயிர்க்கு அச்சம் மோகத்துக்கு உண்டோ? 26:26
- பதி தொறும் புகுந்து இரத்தல்; மூடர் பிற்படல்; எதிரி முன் நின்று அடிபடல்; இவை உயிர் வதையின் மேல் அதிகமாம் கொடிது. 27:3
- தன் மனையாள் படரும் ஈனம் ஒன்று உறையின், மறைத்து, எழில் படுத்தி, இடர் அகற்றத் தக்கது கணவன் செயல். 27:4
- வைத்தியன் இயல்பு:

  உற்ற நோய் விழியினால் உணர்தல் 27:19

  கடுக்கொள் நோய் தவிர்த்தல் 27:28

  மை திருந்து கையன் ஆதல் 27:37

  (மை திருந்தல்—மருந்து தயாரிப்பதில் திறமை)
- கற்பு விட்ட முருந்து உறழ் மூரலார் தம் வஞ்சனை மொழியல் ஆமோ? 28:17
- மின்னார் தோற்றரும் கபடம் இன்ன விதம் எனத் தோய்வது ஆமோ? 28:18
- ஒரு வேளை,

  இறந்தவர் தொகை இவ்வளவு எனக் கூறலும் கூடும். பிறந்து வாழ்வார் இவ்வளவு பேர் எனக் கூறலும் கூடும். தவம்

மேவித் துறந்தவர் வயப்பும் எண்ணிக் காணலும் கூடும். ஆனால்,

துணிந்து இத்தகையது தான் என்று மறம் தரு வேற்கண் நல்லார் மனத்தினைக் காணலாமோ? 28:19

○ கற்பு விட்டவர்,

மனத்தினில் எண்ணும் எண்ணம் எல்லாம் கபடம்; பேசும் இயல்பு எல்லாம் கபடம்; கண் (பார்வை) எல்லாம் கபடம்; உடம்பு (செயல்) எல்லாம் கபடம்; தொட்ட மண் எல்லாம் கபடம். 28:20

○ மேவல் செய் கணவன் அல்லால் விழி மலரா மின்னார்(ஐ)க் காவல் செய்ததனால் யாதும் பயன் உண்டோ? 28:21
(ஒப்பு—திருக்குறள் 57)

○ கட்கின் தோற்றத்தர் ஆய கற்பு விட்டவரைக் காவல் செய்த தனால் பலன் யாதும் உண்டோ? 28:21

○ மேலவர் உரைகளாலே வெளிப்படும் உரைகள் யாவும் மேலிரு விழிகளாலே கண்டு இருப்பது ஒத்து உறுதி கொள்ளவேண்டும். அது செய்யார், சாலவும் இழிவாம் கீழ்மையினை அடைந்து அலைவர். 28:32

○ அமைச்சன் ஆனோன்,

சத்திய வசனம் மாறான். சகல நூற்கலையும் தேர்வான். காலம் மூன்றும் பொருவு அறப் பிரித்துச் சொல்வான். 29:10

மாறிய உரை மறந்தும் வகுத்திடான். 29:18

நாத்தான் இரண்டு உரையா நாகரிகன் - வருணகுலாதித்தன் மடல் 468

வாக்கிரண்டு சொல்லாத மானபரன்-சேதுபதி விறலிவிடு தூது 90

○ யூசறுகும், உமையிறத்தும் ஒருவர்க் கொருவர் கண்டு கண் இணை கலந்தனர். அயில் விழிச்சி நோக்க ஆர்வ யூசறுகும் கண்டு கௌவையின் மயங்கி வீழ்ந்தான். காது இன்பக் கீதம் எங்கோ சென்றது. ஒவ்வொன்றுக்கு ஒரு காலம் தேர்ந்து உணர்ந்திடின் மயங்கும். மௌவல் அம் குழலார் தேகத்து அழகு ஒன்றே மயக்கும். 29:40

(கண்டு, கேட்டு,...திருக்குறள் 1101)

○ மானம் அது அழிவது ஆயின் உயிர்க்குக் காவல் உண்டோ? 29:70

(மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே—இனியவை நாற்பது-13

○ கற்பு உடையவரை மேவக் கவனம் கொள்ளுதல், பொற்புறு தனத்தை, கல்விப் பொருளை, பொன்றாத சீரை, அற்புத குலத்தை வேரோடு அறுக்கும். அம்மட்டோ? உயிரையும் மாய்த்து, நற்பர கதியை மாற்றி, நரகினில் குடி இருத்தும் 30:4

○ மூவகை உலகும் 'சீ' என்று அடர்வசை புகலும் ஈனம் 30:53
'சை' எனத் திரியேல் ஆத்திசூடி-52

○ காலம் மூன்றும் உணர்பவனே அமைச்சன் 31:1

○ பெரியவர்களிடைப் பேசும் பொழுது தூசுகள், கரங்கள் வீக்கி வாய் புதைத்துச் சூழ்ந்து நிற்க. 31:68

சிந்துரப் பவளச் செவ்வாய்ச் செங்கையிற் புதைத்து, மற்றைச் சுந்தரத் தடக்கை தானை மடக்குற... கம்பன் 1598

○ தேடு அகப் பொருள் முகத்தினால் தெளிவர் மந்திரிகள். 32:6

○ துணைவி எனத் தக்காள் தன் கணவன் பழிப்புறு வசனம் எவை உரைத்திடிலும், பல துதி என நினைத்திடலும்,—வழக்கு இயல்பு எவை சொல்லினும் அவை வேத இயல்பு வாசகம் என மதித்திடலும்—கழுத்து அறுத்திடினும் அறுத் திடும் கொடுமை கருதிடாது ஆளன் கை நோம் என்று அழுத்தி எண்ணலும்—நற்கதி இவன்பால் என்று ஆய்தலும் பெறுவாள். 33:13

○ உவமை இல்லவன் பால் உறுதி கொள்க. மேலாம் இல்லற தருமம் செய்க. 34:7

○ மன்னர்க் குறித்த மங்கலத்து நாள், ஆதுலர், மறையோர், முதியோர் எவர்க்கும், அவர் அவாஅற வேண்டுவது அளிப்பர். அனைவரும் வாழ்த்து எடுப்பர். 34:66

○ நவம் மிகுத்துள குற்றம் உளவேல், உவமை ஒன்றிலான் தண்டனை புரிவான். 36:14

○ பழிப்பவர் பழிப்புக்கு உடையவர்; அது அல்லது பழிக்கும் அப் பொருள் எனலாமோ? 36;46

○ வசன வரம்பு, நாணயத்தோடு இயன்ற வர்த்தகம் புரிக. 37:5

○ போனதற்கு இரங்கும் செயல் நலம் அல. 37:11

○ மது உண்டார்,

அறிவினர் எனினும் மடம் எய்துவர். தனியவன் தனக்கு வேறுபட்டு அலைவர். சகம் எலாம் இகழும் அறிவு அறை போகும்; 38:16

கொலை, களவு, பொய், நிந்தை என்னும் நான்கும் இயற்று தற்கு இடன் ஆவர். வெஞ்சுடு நரகிடைப் புகுவர், வினைக் கெலாம் வித்து ஆவர் 38:17

○ மக்கள் செய் பிழையைத் தாய் பொறுப்பள். சிதடர் செய் பிழையைப் பெரியவர் பொறுப்பர். தொழும்பர் செய் பிழை யைச் சாதனர் பொறுப்பர். 38:42

○ இளைஞர் மன நிறை நிறுக்கும் சிறு தராசு பெண்கள் கரடு. 40:43

○ தமது உயிர் தாமே கொல்லின் சாருதல் நரகம். 45:41

○ கண்ணீர்ச்; சிந்தனை துயரத்தை, தெளிவுறு மொழிகள் மாற்றும். 45:45

○ புலவர்கள் தணிவு அறு மதுரம் தோன்ற சகல நூல் பொருளும் தேர்ந்து துணிவு உறு துறை கண்டு ஓதுவர். 46:4

## 7. புலவர் ஆளும் வழக்கிடைத் தொடர்கள்

### 1. கடவுளே உனக்கு கண் இல்லையா?

கடவுளே! உனக்கு நோக்கக்
கண் இலாது இருக்கின்றாயோ? 9:111

கனவு கண்டு மனம் முடித்த படலத்தில் வரும் தொடர் இது. தாவூது நபி அவர்களுடைய தீர்ப்பிற்குப்பிறகு கள்வனிடம் அக் காரிகை ஒப்படைக்கப்பட்டாள். கோதையைத் திருடன் கையில் கொடுத்து, "நீ கொடு போ" என்றார். தீ வைகும் கொடுங்கண் பாவி திடுக்கிடக் கொண்டு சென்றான். அல்லற்பட்டு ஆற்றாது அழுது அரற்றிய அவள் கூற்றாகப் புலவர் இத் தொடரை அமைத் திருக்கின்றார்.

## 2. பெண் புத்தி பின் புத்தி

பன் அறிவு எவை கற்றாலும்
பெண் புத்தி பழுதே அன்றோ? 18:19

சுலைமான் நபி அவர்கள் படை இயங்கு வழியில் வானம் பாடிப் பேடு ஒன்று முட்டை இட்டு அடைகாத்தது. அதன் சேவல், "இவ்வாறு செய்தல் பிழை; பலர் வருதல் போதலாய் நிதம் நடக்கும் பாதையில், மனத்துணிவாய் முட்டை இட்டனை. உன் முட்டைகள் படைவீரர் கால்களால் துகைபட்டு, குழைபட்டுத் தூளாகிப் போகும். நான் கூறியும் கேட்கவில்லை. பன் அறிவு எவை கற்றாலும் பெண் புத்தி பழுதே" என்று இடித்துக் கூறியது.

நுண் உணர்வு கொளினும் நூலொடு பழகினும்
பெண் அறிவென்பது பெரும் பேதைமைத்து,

என்பர் நூலோர்.

## 3. கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது

புனலை எண்ணிக் கூவலை அகழ
பூதம் புறப்படும் கணக்காய் 26:8

புனல் - நீர்; கூவல் - கிணறு

மகறிபு தேய மன்னன் அம்மங்கையுடன் கூடி வாழ்வதற்குத் திட்டம் ஒன்று சொல்லிக் கொடுத்தான். அவளும் அதனைத் தன் தாயிடம் கூறுவதாகக் கூறினாள்.

ஆனை இறாஞ்சி அண்ணல் நபியிடம் அவள் துயர் தீர வழி கேட்டது. அதற்கு அவர் "தனித்து இருக்க உன் மகள் பயப்படில், கிளி பால் எட்டு நாள் தரித்து அதன் பின் ஒன்பதாம் நாள் எம்பால் சேர்" என்று கூறினார். ஆனை இறாஞ்சி அச்செய்தியைத் தன் மகளிடம் கூறியது. அது கேட்டு அவள் "பூ வலயமும் வனப்பும், பொருந்து பொற்புயம் காணும் ஆவலோடு இருந்தேனே. நச்சிச் சொன்ன சொல்லால் என் நசை பழுதா யிற்றே. எட்டு நாள் காவலை வலியப் பெற்றேனே" என்று எண்ணி வருந்திச் சோர்ந்த போது சொன்னவை இவை.

## 4. தேடின மூலிகை காலில் பட்டது

நாலில் பட்டகம் தேடிய பூடது
நடக்கும் காலில் தட்டல் ஒத்து 27:21

கான் எலாம் துருவினும் காண்பதற்கு அரிய மூலிகை ஒன்று தேடிச் செல்பவர் காலில் பட்டது போல், எவ்வித முயற்சியும் இன்றி எளிதில் பெறுவதை இது குறிக்கிறது.

வைத்தியன் பருந்தின் முட்டையின் கருக்கொண்டு மருந்து ஒன்று செய்ய முனைந்தான். பருந்தின் முட்டைகள் பெறற்கு அரியன. ஒருமுறை அவன் தன் வீட்டுத் தோட்டத்து மரம் ஒன்றில் பருந்து கூடு கட்டியது கண்டான். மரத்தில் ஏறி முட்டைகளைக் கைக்கொண்டான்; மருந்து செய்தான்.

பருந்துகள் இச்செய்தியை நபி அவர்களிடம் கூறி முறையிட்டன. வல்லான் நபியும் வைத்தியனை வரவழைத்து வழக்கு விசாரித்தார். அப்போது அவன் கூறிய செய்தி இது.

''ஐயா என் மரக் கூட்டினில் எளிதினில் கிடைக்கும் இதனை கைக்கொள்ளாது அகற்றிடில், தொழில் முறை இழப்பேன். என் சீவனம் எவ்வாறு நடக்கும்? கூறுக பெரும!'' எனக் கேட்டான்.

## 5. பாம்பின் வாய்த் தேரை

கட்செவி(நாகம்) யின் வாய்த் தேரை 30 :16

தன்னை இரையாகக் கொள் பாம்பிற்குத் தன் இருப்பிடத்தைத் தானே தன் குரலால் வெளிப்படுத்தித் தன்னைத் துயர்ப்படுப்பது தேரை.

யூசறுகு (அமைச்சன்) செல்வ மகள் பல்கீசு. அந்நாடாள் வேந்தனோ நலன் அழி காமுகன். மிக்க எழில் கொள் தன் மகள் அவன் கண்ணில் படாவகை காக்க யூசறுகு விரும்பினான். அவளோ தன் தந்தையோடு அவர் வாழ் நகரில் தானும் இருக்கவே விரும்பினாள்.

ஊர்க்குப் புறத்தே, ஒதுக்கிடத்தில் மாளிகை அமைத்து மகளை அங்கு குடி வைத்தான். உளவர்கள் இதனை அறிந்து சுறுயிக்கிடம் கூறினர். அவனும் யூசறுகை வரழைத்து ''நீ பெற்ற மொழிக் கரும்பினை எனக்குக் கல்யாணம் முடித்து உதவுக'' என்றான்.

யூசறுகு கேட்டு ''என் மகள் பால் சொல்கிறேன்'' என்று கூறி மனை மீண்டான். மகளிடம், ''உன்றனுக்கு இசைந்த புத்தி அணுவும் முன்னாது நீத்தாய். சென்று இதற்கு என் சொல்வேன். கட்செவியின் வாய்த் தேரை ஆயினோம்'' என்று கூறி வருந்தினான்.

## 6. கூண்டோடு கைலாசம்

கூட்டோடு சொற்கம் புகுவது அரிது. 31:42

கூண்டு, கூடு - உடலம்

துன்பம் சிறிதும் கலவா நிலையில் இருப்பது சொற்கம் என்பர். இறந்த பின் பெறத்தக்க பேறு என்பர். உடலோடு அவ்விடை அடைதல் அரிது என்பர். மண் உலகில் மிக்க மகிழ்ச்சியில் திளைப்பார்; தாம் உடம்பொடு துறக்க உலகம் புக்கதாகக்கூறி மகிழ்வார்.

இன்பின் (எமன் தேயத்துக் குதுகுது) பின்பு சென்று எமன் நாட்டுப் பல்வளங்களையும் கண்டு மகிழ்ந்த எகுபீறு [சுலைமான் (அலை) அவர்களது குது குது] தான் மண் உலகில் இருப்பதாகக் கருதவில்லை என்றும் சுவர்க்கத்தில் இருப்பதாகவே நினைப்பதாகவும் கூறியது. "இந்நகர் அலால் சொற்கமும் வேறு உளதோ? இம்மனையின் வியன்மனை வேறு உளதோ? இவளினும் மிக்க பேர் அழகின் அரம்பையும் உளளோ?" என்று சொல்லிச் சொல்லி மகிழ்ந்தது; நயந்தது; அதிசயம் மிகுத்தது. அப்போது சொன்னது இது.

## 7. பணத்தோடே பணம் சேரும்

34:108

சுலைமான் (அலை) அவர்கள் மணக்கோலம் காண ஊர் மக்கள் திரண்டனர். அரசரில் மேம்பட்ட சுலைமான் நபி அவர்களுக்கு, அறிவில், அழகில், ஆற்றலில் மேம்பட்ட பல்கீசு மனைவியாய் அமைவது பொருத்தமே என்று தம்மை மறந்து, வியந்து பாராட்டினர். அப்போது,

"பணத்தோடே பணம் சேரும் மேலவர்கள் ஆபரணக்
குணத்தோடே குணம் சேரும்" என்று கூறி மகிழ்ந்தனர்.

## 8. பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்

நனி மயல் முதலாய் மயல்கள் எவ்
எவையும் பசி உறின் நாடுவது உண்டோ. 36:48
(பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்)

முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில், சுலைமான் (அலை) அவர்களைத் தண்டிக்கும் வகையில், உருவை மாற்றி எல்லோராலும் எள்ளி நகையாடப் படச்செய்து, பசியினால் வருந்தச் செய்தபோது, அவர்கள் இறைவனிடம் தன் தவறு பொறுத்து, மன்னித்து அருளுமாறு இறைஞ்சினார்.

அப்பொழுது இறைவனின் அருளினால் மீனவர்கள் ஒரு பெண்ணை அவர்க்கு மணம் செய்வித்து, அவரைத் தம்முடன் மீன் பிடிக்க உடன் கூட்டிச் சென்றும் உதவினர்.

கடலில் பிடித்த மீனில் ஒரு பகுதியை அவர்க்குக் கொடுக்க அவர் அதனைத் தன் மனைவியிடம் கொடுத்தார்.

அளமொடு பரிமீன் கறியும் உண்டு ஆர்ந்து மிஞ்சியது பெண் புசித்தாள். இளைய பெண் வதனம், இதற்கு மேல், குறிப்பின் இரு விழி நோக்கினர். இவ்விடத்துப் புலவர் தம் கூற்றாக இத் தொடரைப் பெய்து உள்ளார்.

## 9. ஆவதும் பெண்ணால் அழிவதும் பெண்ணால்

பெண் எனப்படும் ஓர் பொருளினுக்கு இணையாய்ப்
பெரிதினும், சிறிதினும் உளவோ? 36:66

சுலைமான் (அலை) அவர்கள் பல்கீசை மணந்த நாள் முதலாய் மிக்க உயர்வுடனும், மகிழ்ச்சி உடனும் வாழ்ந்தார்.

ஆனால் பவுனவகுவின் மகள் ஆன ஜமுசத்து தன்னை மணந்ததன் காரணம் ஆக அழகு இழந்தார்; அரசிழந்தார்.

இந்த மாறுபட்ட இருநிலைகளையும் எடுத்துக் கூறும் வகையில் கவிக் கூற்றாக இத்தொடர் அமைந்துள்ளது.

# 12. இலக்கியப் பூங்கா

## 1. சந்தம்

வண்ணக் களஞ்சியப் புலவர் பல்வேறு இலக்கியங்களையும் படித்துத் தேர்ந்தவர் என்பது இராஜநாயகத்தின் ஒவ்வொரு பாடலிலிருந்தும் புலப்படும். பெரும் புலவர்களுக்குத் தம் காலத்திலும், தம் காலத்திற்கு முன்னாலும் வாழ்ந்த கவிஞர்களுடைய படைப்புகளை ஆழப் படித்து அதன் காரணம் ஆகத் தம்முடைய அறிவையும், புலமையையும் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற அவா இருப்பது இயல்பு.

தனக்கே எல்லாம் தெரியும்; பிறரிடமிருந்து எதனையும் கற்றுக் கொள்ள வேண்டிய தேவை இல்லை என்ற எண்ணம் அவர்களுக்கு என்றுமே இருந்ததில்லை. அதுவன்றியும் பிறருடைய படைப்புகளைப் படிக்கும் பொழுது தம்முடைய சிந்தனைகளையும் அதில் தோய விடுவதன் காரணமாகப் பிறர் ஆண்ட சொற்களையோ, பயின்ற சொற்றொடர்களையோ, சற்று மாற்றிப் பயன்படுத்தினால் பயனும், பொலிவும் மிகாதா என்ற காரணத்தினால் அவைகட்கு மெருகு ஏற்றி அவற்றினூடே தம்முடைய தனித்தன்மையையும் சேர்த்துப் புதியதோர் அழகினைப் பொலிய செய்ய முயல்வார்கள். அவர்களுடைய அவை அடக்கம் வெறும் மரபாக இல்லாமல் உண்மையான எளிமையையும், பிற புலவர்களிடத்தில் அவர்கள் கொண்டிருந்த மதிப்பையும் அடிப்படையாகக் கொண்டு இருக்குமானால் அவர்களுடைய படைப்பு உண்மையில் மிளிரவே செய்யும்.

வண்ணக் களஞ்சியப் புலவரிடத்தில் இந்த உண்மையான எளிமையும், பிற புலவர்களிடத்து பாராட்டத் தக்க மதிப்பும் இருந்ததன் காரணம் ஆக, அவருடையகாப்பியம் உண்மையிலேயே சிறந்து விளங்குகிறது என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்.

எனவே அவருடைய படைப்பு பிறருடைய படைப்போடு எப்படி இணைந்து நிற்கிறது என்று பார்ப்பது பொருத்தமே ஆகும்.

அப்படிப் பார்ப்பதற்கு முன்னால் அவருடைய சிறப்புப் பெயரைக் வெளிக்காட்டக் கூடிய வண்ணமும், ஒலி நயமும் மிகுந்த ஓரிரு பாடல்களைக் காண்பது சிறப்பாக இருக்கும்.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் எல்லாவற்றிலும் அலி (றலி) அவர்களைப் பற்றிக் கூறப்படும் இடங்களில் எல்லாம் அவருடைய ஒப்புயர்வற்ற வீரத்தைக் குறிக்க, தேர்ந்தெடுக்கப் பெற்ற சொற்களாலேயே புலவர்கள் பாடுவார்கள். வண்ணக் களஞ்சியப் புலவரும் அவ்வாறே செய்து இருக்கிறார்:

நடை நடம் இடு துலுதுலின் வருவிசையினில்
நரர் புவி சுமை கொளும் ஓர்
விடை உடல் குழைதர, அலைகடல் சுவறிட
மிகு கணம் உதிர் தரவே
கடையுகம் முடிவு அதிர் என முதிர் திசை மத
கரிகளும் அலறிடவே
அடையலர் முடி பொடி பட இடறிய புலி
அலி இரு பதம் நினைவாம். 1:12

மேலும், இராஜ நாயகக் காப்பியத்தில் கனவு கண்டு மணம் முடித்த படலத்தில், அரச குமாரனுடைய துணைவியைக் கள்வன் கவர்ந்து சென்ற பிறகு சாம் நகர்க்கு அவ்வரச குமாரன் வந்து பிச்சை கேட்டான். அப்பொழுது அவன் குரலில் இருந்து அவன் யார் என்பதனைத் தெரிந்து கொண்ட அவன் மனைவி நடந்ததை எண்ணிப் புலம்பித் தன் கணவனை அடைந்து ஒன்றி நின்றாள். அவளைக் கவர்ந்து வந்த கள்வன் கொண்ட மெய்ப்பாட்டினைப் புலவர் வல்லொலி ததும்ப,

கடிது எழுந்து இங்கு வந்தான்
கண்டு பல் நெறு நெறு என்னும்
படி கடித்து அதிர்த்து எதிர்த்து
ஆர்ப்பரித்துவண்டு உறுக்கி மீசை

துடிதுடித்திட கண் நீற்றுப் பொறி எழ
துணைக் கை மாறா
அடி அடித்தனன் அவ்வேளை அயல்
உள்ளோர் வந்து சூழ்ந்தார் (9:94)

என்று பாடுவார்.

அரசு நிலையிட்ட படலத்தினைக் காண்போம். சுலைமான் நபி அவர்கள் பதினாறு சகோதரர்களும் எழுபது அறிஞர்களும் கூடி அவரிடம் "நரர்க்கு ஒன்று நல்விதம் கொளின் நன்மை எலாம். இனி புல்விதம் கொளின் புன்மையது: (அது) என்?" என்றார். கடைப் பாலனார் "அது அவர் அவர்தம் கல்பு (இதயம்)" என்றார். இவ்வாறு கூறக்கேட்ட பின் அனைவரும் அவரை அரசுக்கட்டில் ஏறத் தகுதியானவர் என்று ஏற்றுக் கொண்டனர்.

பிறகு, பிறர் எப்படி மகிழ்ந்தார்கள் என்பதனைச் சந்த நயத்தோடு

ஒழியாவறு மையினோர் பழுதுளர்சேர் சொலும் குதலைக்கு
எழுதா மகிழ்வு அடைவார் மறையினிலாய் வருமசலா
அழகானம தலையேசொல அயலோர்வியன் உறவே
வழுவாஅர சிவர்காதுறின் மகிழ்வுஆர் அளவிடுவார்
(12:82

என்று பாடுவார். (இது தொடர்ந்து வரும் 12:83-முதல்-94 முடிய சந்தப் பாடல்களே)

அதுபோலவே, தன்னிடத்தில் பணி புரிய வந்த ஜின்களிடம் பெரிய பரமதானி ஒன்று செய்து தருமாறு சுலைமான் நபி அவர்கள் கட்டளையிட, அவை அதனைச் செய்து முடித்ததையும், அதனைக் கண்ட சுலைமான் நபி அவர்கள் மகிழ்ந்து, அந்த ஜின்களுக்கு விடை கொடுத்ததையும் சந்த நயத்தோடு,

கதிரவன் ஒளியைச் சுருட்டிஓர் நெடிய
கற்கைசெய்து எடுத்துவந் ததுபோல்
மதிதரக் கொணர்ந்து நபிதிரு முனமே
வைத்தன கண்டுஅகம் மகிழ்வாய்
இதுஇயற் றியஜின் எவைக்கும் நல்வரிசை
ஈந்து அனுப்பினர் சில ஜின்னை
நிதம் இவை விரித்துச் சதுர் செயும் பணியில்
நின்றிட விடை கொடுத்தனரே

என்று பாடுவார். (17:73)

பல்கீசுக்குப் பத்திரம் அனுப்பின படலத்தில் ஏழு பாடல்களில் பாலைநிலம் வருணிக்கப்படுகிறது. அவ்வேழுமே சந்தப் பாடல்கள் ஆகும். அவற்றில் ஒன்றைப் பார்ப்பதே போதுமானது:

உடலியாதும் வெந்து விடும்நேர் பொருந்தில்
எனும்ஓர் பயம்கொ ளுவதால்
சுடரோன் ஒதுங்கி நிதமோடு கின்ற
சுடுபாலை என்ற தலமே
வடவா னலங்க ருகியே யொடுங்கி
மறைவாய் அகன்று விடவே
இடையூ றிடும்க னலுமே விளங்கில்
இதுகோடி பங்க திகமே. (31:11)

பல்கீசு திருமணப்படலத்தில் பெண்கள் வருணனை பெருவாரி யாக இடம் பெறுகிறது. இங்கும் சந்தம் முந்து இடம் பெறும்.

வளர்கருங் கூந்தலாட மதுமலர் மாலையாட
தளரும்ஆ பரணம்ஆட தமனியர் குழல்க ளாட
புளகவெம் முலைகளாட புனைஇழை மருங்குலாட
ஒளிர்மணி வளங்களாட ஊசல்கள் ஆடுவாரே.

(34:32)

இப்படலத்திலேயே சுலைமான் நபி அவர்களுடைய திருமண ஊர்வலத்தைக் காணத் திரண்ட பெண்டிரைப்பற்றிப் பாடும் பொழுது,

சேல்கள் போல்விழி, பவளங்கள் போல்இதழ், சிறுத்த
நூல்கள் போலிடை, மலைகளைப் போல்முலை நுகர்தேன்,
பால்கள் போல்மொழி யொடுபல உறுப்பெலாம் படைத்து
மால்கள் யாவதும் தோன்றல்போல் தோன்றினர் மானார்

என்று பாடுவார். (34:90)

பவுனவகு வதைப் படலத்தில் போர்க்களத்தில் ஜின்கள் போரிட்டதைக் குறிப்பிடும்பொழுது,

அடித்தன சிலஜின் கூட்டம்
அங்கங்கள் நெறுநெறு என்னப்
பிடித்தன சில ஜின் கூட்டம்
பிடித்துத் தாளினில் தேய்த்து ஆவி

முடித்தன சிலஜின் கூட்டம்
முனைத்தளம் போதாது என்று
துடித்தன சிலஜின் கூட்டம்
தொனித்தன சில ஜின் கூட்டம்

என்பார். (35:27)

சகுறஜின் கூட்டம் ஈமான் கொண்ட படலத்தில் சகுறஜின் தன் மகளாகிய ஜமால் அழகினை வெகுவாகப் பாடுவார் புலவர். அத்தகைய பாடல்களில் சந்த நயமும் இரட்டைக் கிளவி அமைப்பும் கொண்ட அடியிற்கண்ட பாடல் தலை சிறந்தது.

மருமலர்க் களபம் கமகம கம என
மணிவளை கலகல கல என
திரள்ஒளி நகைகள் பளபள பள என
தேகசுந் தரம் தளதளதள என
தரைபதம் அழுந்தத் தொடு தொடு தொடு என
தருமம் என்னுடன் நடநட என
பிரிவுஅற மதகுஞ் சரத்தின்பின் நடக்கும்
பிடியின்மெல் லியநடை பெயர்வாள் (40:45)

## 2. வர்ணனை

எந்தக் காப்பியத்துக்கும் அழகும் மெருகும் ஊட்டுவது வர்ணனை. வர்ணனைக்குச் சொற் செறிவும், சொற் செட்டும் மாத்திரம் இருந்தால் போதாது. எதையும் கூர்ந்து நோக்கும் திறனும் கற்பனையும் வேண்டும். அத்தகைய கூர்ந்து நோக்கும் திறன் இருப்பதால்தான் அன்றாட வாழ்க்கையில் நாம் பார்க்கும் பலவற்றில் காணத்தவறி விடுகிற அருமையையும், தன்மையையும் புலவர்களால் எடுத்துக் காட்டமுடிகிறது.

இந்த வருணனை நிலத்தைப் பற்றியதாக இருக்கலாம்; மக்களைப் பற்றியதாக இருக்கலாம்; விலங்குகளைப் பற்றியதாக இருக்கலாம்; பறவைகளைப் பற்றியதாக இருக்கலாம்.

இவர்கள், இவைகளுடைய உணர்வுகளைப் பற்றியதாகவும் இருக்கலாம்.

நிலத்தைப் பற்றிய வருணனைகள் நாம் காண முடியாத இடங்கட்கு நம்மை அழைத்துச் செல்லும். மக்களையும், விலங்குகளையும் பற்றிய வருணனைகள், நாம் பார்க்காதவர்களையும்

பார்க்காதவைகளையும், நம்மைப் பார்க்கச் செய்வதோடு, நாம் பார்த்தவர்களிலும், பார்த்தவைகளிலும் நாம் பார்க்கத் தவறிய வற்றையும் பார்க்கச் செய்கிறது.

உணர்வுகளைப் பற்றிய வருணனையோ, நாம் அநுபவிக் காத உணர்வுகளை அநுபவிக்கச் செய்வதோடு, அவற்றோடு நம்மை ஒன்றவும் செய்து விடுகிறது.

தமிழ் இலக்கியங்களில் நிலத்தை நான்கு வகையாகப் பாகு படுத்தி குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று வருணிப்பது வழக்கம்.

குறிஞ்சியும், முல்லையும், பலநாள் மழை பெய்யாத போது தம் இயல்பு இழந்து பாலை ஆகிறது என்றும் கூறுவர். இதனை,

வேனலம் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தான் நலம் திருகத் தன்மையில் குன்றி,
முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து,
நல்லியல்பு இழந்து, நடுங்குதுயர் உறுத்து,
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.

என்று குறிப்பிடும். (சிலம்பு, 11 :62-66)

பெரும்பாலான இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள், இந்திய நாட்டைப் பற்றியோ தமிழ் நாட்டைப் பற்றியோ, பாடப் பெற்றவை அல்ல. அரேபியாவையோ, சாம் என்னும் சிரியா வையோ, பாரசீகத்தையோ பற்றிப் பாடப் பெற்றவைதாம்.

தமிழ் இலக்கியம் படைக்கப் புகுந்த தமிழ் முஸ்லிம் புலவர் கள், தமிழ்நாட்டின் இயல்புகளை முற்கூறப் பெற்ற நாடுகளின் மேல் ஏற்றிப் பாடி இருக்கின்றனர் என்பது யாவரும் அறிந்த ஒன்று.

இராஜ நாயகக் காப்பியத்தில் வண்ணக் களஞ்சியப் புலவர் பெரும்பாலும் பாடுவது சாம் நாட்டையும், எமன் தேயத்தைப் பற்றியும் தான். எனினும் தமிழ் இலக்கிய வழக்கினை அங்கு புகுத்து விடுகிறார்.

நாட்டுப் படலத்தில்,

புகலும் இவ்விதப் புதுப்புனல் அகில்சுடு புகையின்
முகில் வெதும்பும் தண் குறிஞ்சி விட்டு எழுந்து அழல்முதிர்ந்து
பகலவன் சுட நெருஞ்சி வஞ்சிகள் எரி பாலை
அகல விண்டுஉள நெடுவிடர் நிலத்து உலாயதுவே (2:10)

என்று ஒரேபாடலில் குறிஞ்சியையும், பாலையையும்குறிப்பிடுவார்.

இதன் தொடர்பாகவே அடுத்து வரும் பாடலில்,

கள்ளி வேலியைப் பெயர்த்து வெம்கானலைக் கடத்தி
வள்ள ஊற்றுஅறும் உறைக் கிணற்றையும் வெறு வயிற்று
பள்ள வாய்க்கரைத் தடத்தையும் நிறைத்து இளம்பால்வாய்
பிள்ளை தூக்கு எயிற்றியர் வெருண்டிட பெருகியதே
(2.11)

என்று பாலையின் தன்மையை விளக்க முற்படுகிறார்.

குறிஞ்சி, பாலைபற்றிக் குறிப்பிட்ட புலவர், அடுத்த பாடலில் மருதத்தையும், முல்லையையும் பற்றிப் பாடுவார்:

ஈடுஇல் இச்சுரம் மருதம், ஆக்கிய நதி இடையர்
பாடிஉற்ற முல்லையில் புகுந்து அவர் பொருள் பறித்து
தேடிவைத்த முல்லையின் மலர் கவர்ந்து சேண் அளவு
காடு உழக்கி, வாழ் விலங்கினம் கொ(ண்)டு கடந்ததுவே.
(2:12)

இப்பாடலில் இரண்டாம் அடியில் 'முல்லை' என்ற சொல் நிலத்தையும் மூன்றாம் அடியில் அச்சொல் மலரையும் குறிக்க ஆளப் பெற்றிருப்பதனைக் காண்கிறோம்.

மறுபடியும், கனவு கண்டு மணம்செய்த படலத்தில், திருமணத் தின் பின் தன் சொந்த நாட்டிற்குத் தன் புதிய மனைவியுடன் திரும்பிய அவ்விளைஞன் "மருதமும் கடந்து குறிஞ்சியும் அகன்று, சென்றான்" என்பார். இவ்விடத்தில் "நடை அறிந்திலம் என நாணிய அன்னங்கள் (தா)மரை மலரில் ஒளித்தன" என்றும் "வைக்கோல் போர்கள் வரைகள் போல் இருந்தன" என்றும் குறிப்பிடுவார்.

காரிகை கூந்தலைக் கார் முகில் என்று எண்ணிக் கலவ மயில் தோகை விரித்து ஆடின. தினைக்கதிர்கள், அணில்வால்போல் இருந்தன. புனக்கிளி கடிய பூங்கண் மாதர் ஒளி வீசு மணிகளைக் கவண் வைத்து எறிந்தனர் என்றும் கூறுகிறார்.

எனினும் வண்ணக் களஞ்சியப் புலவர் விரிவாகப்பாடுவது சோலையையும், பாலையையும் பற்றியே ஆகும்.

சோலையைப் பற்றி எறும்புகள் விருந்திடு படலத்தில் பாடும் பொழுது புலவர் பல்வேறு அணிநயங்கள் தொனிக்கவும், உவமை கள் ஒளிரவும் பல பாடல்களை அமைத்திருக்கிறார்.

கதலி, மா, பலா, ஈந்து, இலவம், அனிச்சை ஆர் கமுகு
முதிய சந்தனம், குங்குமம், செண்பகம், முருக்கு
பதிய(ம்) மல்லிகை, மாதுளை, தேங்கு, தால், பாலை
ததிகொள் புன்னை, கோங்கு, ஆசினி தேக்கு, மஞ்சாடி (22:4)

மகிழ், விளா, மருது, அருணம், வெண் சீவந்தி, வன்னி
அகில், கருங்கனி, வெண்கனி, நெல்லி, ஆல், அத்தி,
விகசிதம் தரு பாடலம், கொன்றை, வெட்பாலை
புகல் அசோகு இ(ன்)னம் பல தரு இனம் மலர்ப் பொழிலே. (22:5)

(கதலி-வாழை; தேங்கு-தெங்கு; தால்-பனை; ஆல்-ஆலமரம்; படலம்-பாதிரி):

புலவருடைய திறன் இப்படிப் பட்டியல் போடுவதோடு நின்று விடவில்லை. அழகான உவமையும், அற்புதமான கற்பனையும் கொண்டதாக அமைந்து இருப்பதனையும் காணலாம்.

சுதை நிறைந்து அரு இரசிதப் புள்ளி அம் சுரும்பு
பதும மென்மலர் அமுதம் உண்டு இசை பயின்றிடுதல்
மது அருந்தினோன் வெறியினால் குழல் தலை மாற்றி
இதம் மிகுந்த கீதம் தர ஊதுதற்கு ஏற்கும். (22:28)
(குழல்-உட்குடைவு உடைய சங்கு)

புகழேந்திப் புலவர்க்கும், ஒட்டக் கூத்தர்க்கும் இடையில் ஒரு முறை விவாதம் நடந்ததாகக் குறிப்பிடுவர்: ''மல்லிகையே வெண் சங்கா...'' என்று தொடங்கப்பெறும் அப்பாடல், ''வண்டு சங்கு தனைத் தலைமாற்றி ஊதியதோ?'' என்று கூத்தர் வினவ ''ஆம், குடிகாரனுக்கு எது தலை? எது கீழ்ப்புறம்? என்று அறியும் அறிவு ஏது?'' என்று புகழேந்திப் புலவர் விடை இறுத்தாராம்.

இச் செய்தி தனைச் செவி வழி அறிந்த வண்ணக்களஞ்சியப் புலவர் தக்க இடத்தில் அதனை அமைத்து இருப்பது பொருத்த மானது அல்லவா?

அடுத்து,

துள்ளி வாளைகள் வீழ்ந்திடில் குமிழிகள் தோன்ற
வெள் என பெடை உருஅதில் காட்ட உள் வியப்பாய்
உள்ளி ஆணனம் நோக்கலும் அப்பெடை ''உவந்து ஓர்
புள்ளை நோக்குவையோ?'' எனப் புலவியே புரியும். (22:30)

வெடிபோய் வாளை வீழ்ந்தது அறியாது, முக்குளித்தது தன் துணை எனக் கருதி நோக்கிய தன் சேவலுடன் ஊடல் கொண்டது பெண் அனம். இதுபோல் பறவைகள் ஊடலையும் மயக்கினையும் புலவர்கள் குறிப்பிடுவது மரபே. "கேதகை மலர்நிழல் இனமெனக் கருதி தாரா தழுவிடும்" என்பார் மனோன்மணீய ஆசிரியர்.

"அகல் அடை (இலை) மறைத்தென, கதும் என(ப்பெடை தன் சேவலை) காணாது, கலங்கியது. மதி நிழல் நீருட் கண்டது சேவல் எனக்கருதி உவந்து ஓடியது. எதிரில் தன் துணை வரக் கண்டு மிக நாணியது" என்று கலித்தொகை கூறும் (மருதக்கலி. 5)

இதுபோல் பிறிது ஒரு காட்சி கம்பனில் காணலாம்:

தாஇல் பொன் தலத்தின், நல் தவத்தினோர்கள் தங்குதாள்
பூஉயிர்த்த கற்பகப் பொதும்பர் புக்கு ஒதுங்குமால்—
ஆவி ஒத்த அன்பு சேவல் கூவ வந்து அணைந்திடா
ஓவியப் புறாவின் மாடு இருக்க ஊடுபேடையே (கம்பன் 115)

பேடை சேவலை அன்போடு அழைத்தது. சேவல் வந்திலது. ஓவியப்புறாவின் பக்கல் தங்கியது. கண்ட பேடை குழறி, மாழ்கி, சீறி, மிகுஊடலால் அச்சேவலின் கண்படாவகை கற்பகச்சோலையில் புகுந்து மறைந்தது என்பான் கம்பன்.

பல்கீசுக்குப் பத்திரம் அனுப்பின படலத்தில் எமன் நாட்டின் இயற்கை வளத்தைக் குதுகுது கண்டு நுகர்ந்தது என்றும் கூறி சோலைவளம் பற்றி,

மலர்கள் ஓர் நான்கு வகைகளும் செறிந்து
  வான் உலக அமுதினில் சுவைகள்
உலகில் வந்து இதனுள் குடிபுகுவது போல்
  உள்ள தீங்கனிகளும் பழுத்து
விலகி வில் உமிழும் மணி பல கொழித்து
  வெள் அனத்தொகை குடியிருக்கும்
சலம் நிறை தடங்கள் பலதும் உற்றிடும் அத்
  தண்டலை மீது சென்றதுவே. (31:20)

(மலர்: செடிப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ: வில்-ஒளி இமைப்பது போல்வது; அனம்-அன்னம்; தண்டலை-சோலை.)

நவிலும் அப்பொழிலும் தடங்களும் நோக்கி
  நயனமும் கருத்துமே களித்து
சுவ(ர்)ன வான் பொழில் இப்புவியினில் உதித்த
  தோ? இதில் உள்ள நீர்த்தடங்கள்

கவின் உறும் அமரர் அமுதமோ? எவர்தம்
கா இதோ? முழுவதும் நோக்கி
மவுல வேண்டுதும் நன்நபிக்கு என நினைத்து அ
வளம்சில சுற்று நோக்கியதே. (31:21)

(நயனம்-கண்; கா-சோலை; மவுலல்-கூறுதல்.)
என்று பாடுகிறார்.

இதே பல்கீசுக்குப் பத்திரம் அனுப்பின படலத்திலே, பாலை நிலத்தைச் சில பாடல்களில் மிக அழகாக வருணிப்பார்:

உடல் யாதும் வெந்து விடும்நேர் பொருந்தில்
எனும் ஓர் பயம் கொள்ளுவதால்
சுடரோன் ஒதுங்கி நிதம் ஓடுகின்ற
சுடுபாலை என்ற தலமே
வடவா அனலம் கருகியே ஒடுங்கி
மறைவாய் அகன்று விடவே
இடையூறு இடும் கனலுமே விளங்கில்
இது கோடி பங்கு அதிகமே. (31:11)

வான் சுடரும், வடவையும் அவ்வறள் பாலை வெம்மைக்கு அஞ்சி ஓடின என்று குறிப்பிடுகிறார். [சயங் கொண்டாரும்,

இரு பொழுதும் இரவி பசும் புரவி விசும்பு
இயங்காதது இயம்பக் கேண்மின்—
ஒரு பொழுதும் தரித்து அன்றி ஊடு போக்கு
அரிது...அணங்கின் காடு*...'' (கலி. பரணி 3:11)

என்பார்.]

எழுமேக மண்டலம் எலாம் இதன் கண்
எழு கானல் மண்டு கொடிதுஆம்
எழுமாரி சிந்தும் அது நீள் விசும்பில்
இடைவேகும் அன்றி நிலம் மேல்
மழை ஓர் தினந்தனிலுமே பொழிந்த
திலைமாறு கொண்ட மனமாம்
இழிவான வஞ்சர் சினமுாய் அழன்று
எரிவதாய் இருந்த சுரமே. (31:12)

---

* அணங்கின் காடு-பாலை

[பொய்யா மொழிப் புலவர் பாடல் ஒன்றில் ''விழுந்த துளி அந்தரத்தே வேம்'' என்ற தொடரும் உண்டு. அது இங்கு ஒப்பு நோக்கி மகிழத்தக்கது ]

பகலோன் அகன்று நடுயாமம் வந்து
பனி மாரி என்று விழுபோது
அகலாத அனந்த குளிர்மேவு சந்த்ரன்
அதை நேர் கொள்கின்ற அளவே
தகு சூடு கொண்டு ஒளிர் மேனி வெந்து
அதனிலே தழும்பு உளதையே
புகல்வார் களங்கம் என நீர் வளைந்த
புவியோர் நிசங்கம் இதுவே. (31:13)

மெல்லிய உடல் படைத்தார் மிகுவெயில் பொழுதில் திரிதர நேரின் கன்றி, கருகி, நிறம் பெயர்வர். இவ்வுலக இவ்வியலை வான் வழங்கு வண்மதியின் மீது ஏற்றி வண்ணக் களஞ்சியப் புலவர் பாடுவது அற்புதக் கற்பனையே. மேலும் அவர்,

நெடிதாய் வளர்ந்த மலையே பொரிந்து
நிறம் மாறி வெந்தழலுமாய்
விடுபோது எழுந்த புகையோ பரந்த
மிகு கானல் என்றிடுவதே
கொடிதான அந்த நிலம் மீது வெம்பல்
கொளவே கிடந்த மணலோ
கடுகு ஆகினும் படுவதோ நிறைந்த
கடல் ஆவி கொண்டு சுடுமே. (31:15)

என்பார்.

இப்பாடலோடு பாலைக்கலி முதற்பாடல் தொடர் ஒன்று ஒப்பு நோக்கத்தக்கது.

''ஒண் கதிர்த் தெறுதலின், வரை (பாறைகள்) பிளந்து, இயங்குநர் ஆறுகெட விலங்கிய அழல் அவிர் ஆரிடை—'' என்பதே அத்தொடர்.

பாலை நில வெம்மையை, விளங்கு புகையைப் பற்றிச் சயங் கொண்டார் கூறுவதும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதே.

''செந் நெருப்பினைத் தகடு செய்து பார்
செய்தது ஒக்கும், அச் செந்தரைப் பரப்பு!
அந் நெருப்பினில் புகை திரண்டது ஒப்பு
அல்லது ஒப்புறா, அதனிடைப்புறா!'' (கலி, பரணி3:8)

முற்சுட்டிய பாடலின் (31:15) ஈற்றடி, கலிங்கத்துப் பரணிக் கருத்தைச் சிறிது மாற்றி அமைத்ததும் ஆகும்; பரணித்தொடர் விளக்கமாகவும் ஆகும்.

அணி கொண்ட குரங்கு இனங்கள் அலைகடலுக்கு அப்பாலை
மணல் ஒன்று காணாமல், வரை எடுத்து மயங்கினவே
(கலி. பரணி 3:22)

கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல, ஞாயிறு
கடுகுபு கதிர் மூட்டிக் காய்சினம் தெறுதலின்,
உறல் ஊறு கமழ்கடாஅத்து ஒல்கிய எழில் வேழம்,
வறன் உழு நாஞ்சில் போல், மருப்பூன்றி நிலம்சேர,
விறல் மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம் (பாலைக்கலி 8)

கதிர் கனல் மாறா, கடக்கரு வெஞ்சுர இயல்புகளை எல்லாம், தமிழ் நூற் கருத்துகளைத் தழுவியும், கம்ப ராமாயணத்தில் தாடகை வதைப் படலத்தில் குறிக்கப் பெறும் பாலை நில வருணனைப்பாடல்களைக்கொண்டும், அமைத்துள்ளார்எனலாம்.

மிகு தூரம் நின்று நினைவோர் உடம்பை விடுமோ?
கனன்று சுடுமே (31:17)

என்பார் புலவர்.

பருதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான்
விருது மேற்கொண்டு உலாம் வேனிலே அல்லது ஓர்
இருது வேறு இன்மையால்,எரி சுடர்க் கடவுளும்,
கருதின், வேம் உள்ளமும்; காணில், வேம் நயனமும்,

படியின் மேல் வெம்மையைப் பகரினும், பகரும் நா
முடிய வேம்; முடிய மூடு இருளும், வான் முகடும் வேம்;
விடியுமேல், வெயிலும் வேம்; மழையும் வேம்; மின்னினோடு
இடியும் வேம்; என்னில், வேறு யாவை வேவாதவே?

விஞ்சு வான் மழையின் மேல் அம்பும் வேலும் பட,
செஞ்செவே செருமுகத்து அன்றியே, திறன் இலா
வஞ்சர் தீவினைகளால் மான மா மணி இழந்து
அஞ்சினார் நெஞ்சுபோல், என்றும் ஆறாது அரோ.

ஏக வெங்கனல் அரசிருந்த, காட்டினில்
காகமும், கரிகளும் கரிந்து சாம்பின;
மாக வெங்கதிர் எனும் வடவைத் தீச் சுட,
மேகமும் கரிந்து இடை வீழ்ந்த போலுமே.

என்பான் கம்பனும், (கம்பன்: 343, 44, 45,350)

முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில் கடற்கரையைப் பற்றியும், மீனவர் வாழ்க்கை முறை பற்றியும் புலவர் குறிப்பிட்ட போதிலும், நெய்தல் நிலத்தை அவர் விரிவாகப் பாடவில்லை.

இவ்வாறாக, நில வருணனையே அல்லாமல் ஒவியத்தைப் போலவே உயிர்களைப் புலவர் வருணித்திருப்பது அவருடைய கூர்ந்து நோக்கும் திறனையும், இயற்கையின் அருமையிலும், அழகிலும் அவர் ஈடுபட்டிருந்ததையும் வெளிக் கொணர்கின்றன.



புறா வசனித்த படலத்தில் தாவூது சிறுவர் முன் பறந்து வந்த புறா,

மரகத கிரணம் ஒழுகிய களமும்
மணி குருவிந்தம் ஆம் விழியும்
தரம் உறு பவளத்தால் அமைத்தது போல்
தாள்களும் கூரிய வாயும்
அரிய புன்னையின் காய் என திரள் சிரமும்
அழகுடன் ஒழுங்குவ சிறையும் (6:11)

கொண்டது என்று அழகு ஒழுகப் பாடுவார்.



இது போலவே பசு உயிர்மீட்ட படலத்தில் கிழக்கோ (கிழட்டு பசு) ஒன்று மென்மெல நடந்து வந்து புண்ணிய நபி தாவூதைப் பணிந்து நின்றது என்று கூறி அதன் தோற்றத்தை,

"உண்ணியும் திரண்ட பூளையொடு புனல் ஒழுகும் கண்ணும்
வெண் நுரை படிந்த வாயும் விடைத்து எலும்பு எழு
விலாவும்..." (7:2)

கொண்டது என்று குறிப்பிடுவார்.



மேலும் தாவூது நபி அவர்கள் முன் வந்து குறையிரந்த கிழவியைப் பற்றிப் புலவர்,

"தொங்கிய தனமும் நகை உறப் பெயர்ந்து
சுருங்கி உள் விழுந்த பேழ்வாயும்
மங்கிய விழியும் குழி விழு கதுப்பும்
வாயசைவினில் அசை மூக்கும்
சங்கு இயல் குழலும் உரத்த சொல் செவியும்
தனு வளைத்ததை நிகர் கூனும்
நன்குள விருத்தை..." (10:1)

என்று பாடுவார்.

(தனம்—நகில்; நகை— பற்கள்; தனு—வில்)

ஒட்டி ஒட்டு விடாத கொடிறு, மனவுக் கோப்பு அன்ன நல் நெடுங்கூந்தல் எனப் பிற புலவர் பாடுவனவும் ஒப்பிட்டு நோக்க லாம்.

பஞ்சடைந்த கண்; பேசும் போது வாய் அசைவில் மூக்குச் சதை அசைவு; உரத்துப் பேசினாலன்றிக் கேளாச் செவி... இத் தொடர்கள் எல்லாம் சொல் ஓவியம் படைக்க வல்லன ஆகும்.



பறவை விலங்கினம் வசப்படு படலத்தில் பக்கீர் ஒருவர் சுலை மான் நபி அவர்கள் முன் தோன்றி, "நபி அவர்களே! உம் ஒருவர்க்கு இத்தனை பெயர் (மனைவியர்) ஆக இருக்கலாமா? இவரில் ஓர் மனைவி தன்னை எனக்கு அளிப்பீர்" என்று கோரி னார் என்று கண்டோம்.

அந்தப் பக்கீர் தோற்றம் பற்றிப்புலவர் பாடும் பாடல் ஓவியச் சிறப்பு உடையது.

...கையினில் குறுந்தடியும்
அகல் பெருங் கிஸ்தியும், கழுத்தினிலே
அணி பல மணிகளும் சிரத்தின்
மிக நெடுந் தாசும் கையொலி உடையும்
மேனியை மறைத்துள கபனும்
திகழ் எழில் வயதும் உள பக்கீறு ஒருவர்
திருமுனம் வந்து தோன்றினரே (17:82)

என்பது தான் அது.

முஸ்லிம்கள் பெரும்பான்மையோர் வாழும் இடங்களில், தெருவில் போய்க் கொண்டிருக்கும் பக்கீரையோ, தங்கள் வீட்டுக்கு வரும் பக்கீர்களையோ பார்த்திருப்பவர்கள் இப்பாடல் நயத்தை யும், அருமையையும் உணரத் தவற மாட்டார்கள்.

அத்தகைய பக்கீர் ஒருவரைப் படம் பிடித்துக் காட்டுவது போல் இப்பாடல் அமைந்துள்ளது.

அந்த பக்கீர் குறுந்தடியும், ஏந்திய அகன்ற பெரிய கருங் கிஸ்தியும் உடையவர்.

(கருங்கிஸ்தி-கிஸ்தி என்பது பாரசீகச் சொல்; கையில் ஏந்திக் கொண்டிருக்கும் ஓர் உண் கலத்தைக் குறிக்கும் என்பர். கருநிறம் கொண்ட பொருளினால் அது செய்யப் பெற்றிருக்கும்.)

கழுத்தினில் அணி அணியாகக் கோக்கப்பட்ட மாலைகளும் கொண்டவர். தலையில் அணிந்த நீண்ட குல்லாயும் உடையவர்

தாசு-என்ற சொல் 'தாஜ்' என்ற பாரசீகச் சொல்லின் திரிபு. அதற்கு மகுடம் என்பது பொருள். இங்கு நீண்ட குல்லாயைக் குறிக்கிறது)

இடையில் அணிந்த கையொலியர். கபன் போன்ற வெள்ளுடையால் உடல் போர்த்தியவர். இளவயதினர். இத்தகையவர் சுலைமான் நபி திருமுன் தோன்றினார்.

இப்பாடலில் இடம் பெற்றிருக்கும் 'கையொலி' என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு ஆன TAMIL 'LEXICON ஐந்து முழப் புடைவை' என்று பொருள் கொடுக்கும்.

புலவர் வாழ்ந்த காலத்தையும், இடத்தையும் (நாகூர்ப் பகுதி) நினைவில் கொண்டால் 'கைலி' என்ற சொல்லின் திரிபாகவே 'கையொலி' என்ற சொல் அமைந்திருக்கக் கூடும் என்றும் கொள்ளலாம்.

(நாகூர், நாகைப்பட்டினம், காரைக்கால் பகுதிகளில் வாழ் முஸ்லிம்கள் கைலி என்று சொல்வதைத்தான் சென்னை போன்ற பகுதிகளில் லுங்கி என்று கூறுவர்)

இத்தகைய பக்கிர்கள் உண்மைத் துறவியர். எப்போதும் தங்கள் மரணத்தை எதிர்நோக்கித் தயாராய் இருப்பவர்கள். அதனால் தான் பிரேதத்தை அடக்குமுன் அதற்கு அணிவிக்கும் 'கபன்' எனப்படும் வெள்ளுடையை அவர்கள் அணிந்திருப்பார்கள் என்றும் கருதலாம்.



தரும லாபப் படலத்தில் ஒரு வைத்தியன் வீட்டு மரத்தில் பருந்து இணை கூடுகட்டி வாழ்ந்தன என்று கண்டோம்.

பருந்தின் முட்டையின் கருக் கொண்டு மருந்து செய்யும் இயல்பினன் ஆய அவ்வைத்தியன் காத்திருந்து குஞ்சுகள் திரளாமுனம் எடுத்து ஏகுவான்.

முட்டைபோம் துயரினால் வாடித் தளர்ந்த அப்பருந்துகள் அண்ணல் பால் அடுத்து செழுமறை மலர் துதி செய்து குறை நேர்ந்தன.

அவற்றின் குறை தீர்க்கக் கருதிய கொற்றவர், வினவி, "இத் தெருவில் இன்னவன் தனை விரைவில் எம் முனம் அழைத்து வந்திடுக" என ஏவலர்ப் போக்கினார்.

ஆணை வழி அரசர்ச் சார்ந்தனன் அவ்வைத்தியன்.

அவ்வைத்தியன் தோற்றத்தை மிக அற்புதமாக வண்ணக் களஞ்சியப் புலவர்,

அங்க வஸ்திரம் தாங்கிய பையும் கை அதனில்
தங்க ரத்தினக் கடகமும் கழுத்தினில் சரமும்
பொங்கு எழில் தர விரலினில் ஆழியும் பூண்டோன்
பங்கையப் பதத்து அடைந்து நின்றனன் சலாம் பகர்ந்தே
(27:17)

என்று கூறுவார்.

இன்றும் கிராமப் பகுதியில் வாழ்பவர்களால் நாட்டு வைத்தியர் என்று குறிப்பிடப் பெறுபவரை நம் கண் முன்னே நிதர்சனமாகக் கொண்டு வந்து நிறுத்துவது போல் இப்பாடல் அமைந்திருப்பதனைக் காணலாம்.

மேலும் 150 ஆண்டுகட்கு முன் புலவர் இதனைப் பாடி இருப்பதனால் அக்காலத்தில் ('நவீன டாக்டர்கள்' இல்லாத காலம்) நாட்டு வைத்தியர்களுக்கு எத்தகைய அந்தஸ்தும், அந்தஸ்துக்கு ஏற்ற தோற்றமும் இருந்தன என்பதனையும் இப்பாடல் தெளிவாக உணர்த்துகிறது.

தோளில் துவளும் அங்கவஸ்திரம், கையில் தாங்கிய பை, கைக்கு அணிந்த தங்க ரத்தினக் கடகங்கள், விரல் நிறைய மோதிரங்கள் அணிந்தவனாக அவ்வைத்தியன் தோற்றம் அளித்தான் என்று புலவர் பாடுவது உன்னுதொறும் உவப்பு அளிப்பதே.



முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில் சுலைமான் நபி அவர்கள் ஒருபெண்ணினுடைய கோரத் தோற்றம் கண்டு வெறுப்பைக் காட்டினார்கள் என்று கூறப் போந்த புலவர் அப்பெண்ணின் உருவத்தைக் கீழ்க்கண்டவாறு வருணிப்பார்.

அவள் கரடிபோன்ற தலை உடையாள்; ஈறும் பேனும் நெடு நாள் குடி இருக்கும் தலை முடியாள்; அவள் கூந்தல் திரி திரியாய் அமைந்தது, செந்நிறத்தது. (36:8)

புழுபரந்து அரித்ததால் மயிர் அற்ற புருவங்கள், பீளையும் அழுக்கும் பிரியாத கண்கள், பூனைக்கண் போன்ற தோற்றம், கொசு மொய்க்கும் கண் கடை. (36:9)

தயிலக் குத்திகள் போல் காதுகள், கரும்பனம் துண்டம்போல் கழுத்து, குழிந்த தாழிபோல் உதடுகள். (36:10)

குரங்கு போன்ற முகம், கன்னம், கைகள், கால்கள்; வெறுப்பு உண்டாக்கும் வெடிபடு குரல். கருமை செம்மை கலந்த மேனி. (36:11)

வெறித்த நோக்கு, கடு நடை, வியர்வை, புலால் நாற்றம், குளறு வாய் கொண்டவள் என்பார். (36:12)

அதே சுலைமான் நபி அவர்களை, இறைவன் தண்டித்த போது அரசிழந்து, அழகிழந்து. உண்பதற்குக் கூட ஏதும் இன்றி, பசியினால் வாடி எப்படி மெலிந்தார் என்பதனைப் புலவர்,

"மூரலும் வெளி கண்டு அயர்ந்து வாய் புலர்ந்து
முதுகு என்பில் வயிறு சேர்ந்து ஒட்டி
ஈரலும் கருகி விழிகளும் குழி வீழ்ந்து
இரு செவித் துளைகளும் அடைத்து
பார நெஞ்சு எலும்பும் காரையின் எலும்பும்
பழு எலும்புகளும் மூட்டு எலும்பும்
தூர நின்றிடினும் தெரிந்திட மெலிந்து
தொனி குறைந்தனர் நடை தளர்ந்தார் (36:28)

என்று பாடுவார்.

இயங்கும் எலும்புக் கூடு பற்றிய வருணனைச் சிறப்புடையது இப்பாடல்.

தம் பெயரோனுக்கு அன்புறு படலத்தில், சுலைமான் என்ற பெயர் கொண்ட விறகுத் தலையனை நமக்குக் காட்டுகிறார்.

அவன் எவ்வாறு சுலைமான் நபி அவர்கள் முன் எதிர்ப்பட்டான் என்பதனை

நடுமயிர் உதிர்ந்து தொலி[1] இடை சுருங்கி
நகம் கடு அழுந்துறாத் தலையும்
தொடுபவர் உடலில் சிலை[2] படுவதுபோல்
தோன்று காய்ப்பு உறும் இரு கரமும்
கடுவியர்வு ஒழுகி புழுதி ஆர்ந்து உறைந்து
கருகி முள்கீறல் சேர் உடம்பும்
இடம் நிமிர் கழுத்தும் உள ஒரு சிறுவன்
இந்தனம் சுமந்து எதிர் வந்தான் (37:2)

என்று பாடுவார்

---

1. தொலி—தோல்; 2. சிலை—கல்

இவை ஒவ்வொன்றிலும் வர்ணனை உச்சத்தை எட்டுவதோடு அன்றி வருணிக்கப்படும், மனிதரையோ, பிற உயிரினங்களையோ அப்படியே நம் கண்முன் கொணர்ந்து நிறுத்தப்பெறும் காட்சியை காண்கிறோம்.

பறவை விலங்கினம் வசப்படு படலத்தில் என்னென்ன பறவைகள், என்னென்ன விலங்குகள், என்னென்ன உபதேசத்தை சுலைமான் நபி அவர்களுக்கு எடுத்துக் கூறின என்பதனை முன்னரே கண்டோம்.

அவற்றின் உபதேசங்களோடு அமையாமல் புலவர் அவற்றின் தோற்றங்களையும் அற்புதமாக வருணிப்பார்.

எகினம் (அன்னம்) தவளம் (வெண்மை) வாய்ந்த சிறை; பசும் சிகை; செம்பதம்; பவளவாய் கொண்டது. (17:22)

குறட்டு வாய் நெடுங்கழுத்துக் கழுகு. (17:23)

நீல ஒண்கதிர்; நெடிய கூர்வாய்; கரு நிறக்கால்; செம்பவளச் சிகை; நவமணிச்சிறகு கொண்டது ஒரு குருவி. (17:48)

புறச்சிறை வாரணம் (கோழி) நீண்டமுள்; பகிர் விரல்; துணைத்தாள் வேதினச் சிகை; பல நிற ஒண் சிறை உடையது. (17:52)

பருமணிவிழி; முள்ளெயிற்றுவாள் அரவப் படம் கிழித்து அருநடம் புரியும் மரகதக் கலாபம்; செம்பசுஞ் சூட்டு வனப்பு உடைய மயில். (17:92)

நெடுங் கதிர்ப் பவளத் துண்டத்தின் நடுவே நீல ஒண் மணி தரித்தன போன்ற சூடு (கொண்டை) உடையது; உறுமு குரலது குது குது. (17:93)

மகளிர் மொழிபோல் வசனம்; பவளச் செங்கூர்வாய் மரகதச் சிறை உடையது கிளி. (17:98)

வெண்மை அம் கழுத்துக் கருடன். (17:104)

பாரிய திமில்; மென்று அசை தரும் வாய் இடபம். (17:105)

ஆனை இறாஞ்சிப் புள் அழகிய தோற்றம்பற்றி நாம் முன்னரே கண்டோம்.

இத்தகைய வருணனைகள் அன்றியும், புலவர் வாழ்க்கையின் பல அம்சங்களையும் கூர்ந்து நோக்கி இருக்கிறார் என்பதனைக் காப்பியத்தின் பல இடங்களிலும் நாம் காண்கிறோம்.

கடல் வேட்டைக்கு எழுந்த படலத்தில் கடலுக்குள் நீண்ட நாட்கள் வேட்டைக்குச் செல்லவேண்டியவர்கள் எவ்வெவற்றை எல்லாம் சேகரித்துக் கொள்ளவேண்டும், யார் யாரை எல்லாம் உடன் அழைத்துச் செல்லவேண்டும் என்று புலவர் விவரிப்பதைப் பார்க்கிறோம்.

இதுபோலவே யுத்தத்திற்குத் தயாராவதும், யுத்தம் செய்வதும், யுத்தத்தின் முடிவிற்குப் பிறகு நடந்து கொள்ளவேண்டியதும் புலவரது கூர்த்த பார்வையில் இருந்து தப்பவில்லை.

நம்முடைய நாட்டின் மிக முக்கியமானதும், மிகச் சாதாரணமானதும் ஆன உழவுத் தொழிலைப் பற்றியும் குறிப்பிடாமல் விட்டாரல்லர்.

நிதியாட்டுப் படலத்தில், உழவர்களுடைய தொழிலையும் திறனையும்,

பாழ் கிடந்த வயலை அச்சுத் திருத்தி நெடு
வரம்பு கட்டி பரவ எங்கும்
காழ் கிடந்த எருப்போட்டு வாய்உரமும்
முக எருவும் கதிக்க விட்டும்
மேழ் கிடந்த உழவு உழுது பரம்பு அடித்து
நாற்று நட்டு இறை தண்ணீரால்
ஆழ் கிடந்த குளம் ஆக்கி விளைந்து கதிர்
கொய் பருவம் ஆனது ஐயா (8:9)

என்று பாடிக் காட்டுவார்.

## 3. ஆடல், பாடல்

புலவருடைய கூர்த்த மதி, நுண்கலைகளையும் விட்டு விடவில்லை. எண்ணெண் கலைகளில் ஆடற்கலைக்கும், பாடற்கலைக்கும் உள்ள சிறப்பிடம் வேறு எதற்கும் இல்லை. கண் களி மயக்கமும், காது குளிர் வேட்கையும் அளிக்க வல்லன அவை.

இசையும் கூத்தும் காமத்திற்குத் தீபனம் என்ற கருத்தும் உண்டு.

"கிளை நரம்பு இசையும் கூத்தும் கேழ்த்து எழுந்து ஈன்ற காம
விளைபயன் இனிதில்துய்த்து வீணைவேந்து உறையும் மாதோ"
(சீவகம் 2598)

என்பார் திருத்தக்கதேவர்.

பல அரசர்கள் இக்கலை பயின்றாரை, தேர்ந்தாரை வளர்த்தும் ஊக்குவித்தும் வந்தனர். ஆற்றுப்படை நூல்கள் இச்செய்திகள் பற்றிப் பரக்கப் பேசக் காணலாம். மன்னர்கள் பொழுது போக்குக்கென அமைந்தவை இவை.

''கலையி னொடும், கவிவாணர் கவியினொடும்,
இசையினொடும், காதல் மாதர்
முலையினொடும், மனுநீதி முறையினொடும்,
மறையினொடும், பொழுது போக்கி'' (கலி.பரணி 10:46)

மகிழ்ந்தான் குலோத்துங்கன் என்பர்.

பாடல் ஓர்ந்தும், நாடகம் நயந்தும், வெண்ணிலவின் பயன் துய்த்தும், மக்கள் தம் மறந்து இருந்தார் என்பர் கடியலூர் உருத்திரன் கண்ணனார். (பட்டினப்பாலை 113, 114)

[எனினும் இசையும், கூத்தும் பக்தியையும், தூய்மையான உணர்வுகளையும் வெளிக் கொணரவும் வல்லன.]

வண்ணக் களஞ்சியப் புலவர் பரந்துபட்ட பல்நூல் பயிற்சியர். நாட்டு நடப்பை நன்கு உணர்ந்தவர்.

கலைவளர் தஞ்சை மாவட்டத்து நாகூரில் பல்யாண்டுகள் உறை தரு சிறப்பின் உயர் வாழ்க்கையர். மேலும் நூலறி புலவர். ஆகலின் ஆடல், பாடல்கள் பற்றியும் அவற்றின் அலங்காரங்கள், அணிகலன்கள், பயன்படும் கருவிகள் பற்றியும் விரிவாகப்பாடுவார்.

தாம் பாடப்புகுந்த நூலில், ஏற்ற பெற்றி அறிந்து, அமைத்து, இவை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இப்படிப்பாடுவது அவரது ஆழ்ந்த இலக்கிய அறிவையும், நுண்ணிய பார்வையையும், அழகாக வெளிக் கொணர்கின்றன.

கடல் வேட்டைக்கு எழுந்த படலத்தில், பரதநாட்டியம், தேசிகக் கூத்து ஆகிய இரண்டைப்பற்றிப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

''காண ஒண்ணாப் புதுமை யாவும் திடன் உறக்காண நயந்த'' அவ்விளவரசன் ''சித்திரக் கவிஞர் பாடச் சிறந்த சங்கீதக் கேள்வி புத்தமுதருந்தவும், மத்தளம் ஜதியோடார்ப்ப, மடவியர் நடனம் காணவும், இவ்விதமாய்க் கேளீ விலாசங்கள் புரியவும் விரும்பி தன் உடன் வந்த வங்கங்களில்,

புரவலர் மகுடம் போன்ற புலவர்கள், சொல் விசித்திரர்,
பரவசம் செய்யும் கீதர், பரதநாட்டிய மின்னார்கள்,
விரவு தேசிகம் செய் மாதர், நட்டுவர், வேய் துருத்தி,
தெரி சதி, மத்தளம், கைம் மணியொடு சேர்க்கல் உற்றான்.
(24:46)

என்பார்,

இப்பாடலில் குறிக்கப் பெற்றுள்ள புலவர்கள் என்ற சொல் கவிஞர்களை மட்டும் குறிப்பதன்று. பின்னர், 'ஆடுகள விறலியர்' பற்றியும் குறிப்பு வந்துள்ளமையால், இப்புலவர் என்ற சொல் ''நடையறிபுலவர்''(சீவகம் 672)களைக்குறிப்பிடும்.இயலாசிரியன், யாழாசிரியன், இசையாசிரியன், குழலோன்,தண்ணுமை முதல்வன், முதலாயினார்களைக் குறிப்பது, அது.

நடனம் ஆடவல்ல மகளிர், மகளிர்க்கு உரிய உறுப்பு நலன், அழகு எலாம் குடிகொண்டனையார். (முல்லைக்கலி-108) கவலையால் காமனும் படைவிடும் வனப்பினர். பூங்கொடி போன்ற உடல்வாகு உடையவர், என்பதனைக் குறிப்பாக 'மின்னார்' என்ற சொல் ஆட்சியால் அமைக்கிறார்.

ஆடல் அரங்கில் இடம் பெறும் ஆடலாசிரியன், இசையாசிரியன், கவிஞன், போல்வாரையும், கருவிகளையும் பற்றிக் குறிப்பிட்டு உள்ளார்.

ஆடல் வகைகள் பலவற்றினையும் விளக்க வாய்ப்பின்மையால், குறிப்பாகத் ''தேசிகம் செய்மாதர்''என்று அமைத்துள்ளார்.

தேசிகம்—ஒருவகைக் கூத்து. இது 'தேசி' எனவும் குறிக்கப் பெறும். தேசி—மெய்த் தொழிற் கூத்திலே ஒருவகை.

மெய்க்கூத்தாவது தேசி, வடுகு, சிங்களம்.
(சீவகம் சிந்தாமணி பா. 672 அடிக்குறிப்பு)

இத்தகைய ஆடல்களில் என்ன என்ன பாவங்கள் வெளிப்படும் என்பதை பல்கீசு வரலாற்றுப் படலத்தில் மிக அழகாகப் புலவர் குறிப்பிடுகிறார்.

தம் உழை அன்பின் வந்த யூசறுகு கண்டு, ஆடவர் பெண்மையை அவாவு தோளன் அவன் நலன் தம் இருவிழி ஆர மாந்தி, முகமன் கூறி, உண்பித்து மகிழ்விக்கக் கருதி, இயம் பல சேர்த்து ஒருவழித் தொகுத்து, பின் ஆடல், பாடல் மேவினர் இன் திரள் என்பார்.

சில ஜின்கள்,

"கருணை, சிங்காரம், வீரம், நகை, பயம் கருத்து, நாணல்
பொருவு கம்பீரம், சாந்தம், புதுமை என்று ஓதுகின்ற
இரத(ச)ம் ஒன்பதுமே தோன்ற, அபிநய இன்பம் காட்டி
திறன் உறப் பாடி ஆடல் செய்தன சிறிது ஜின்கள். (29:35)

ஓதுகின்ற இரசம் (சுவை) ஒன்பது எனினும், நூலோர் கூறுவ நாலிரண்டு சுவையே. ஏன் எனில் சாந்தம் என்பது "செத்தினும், போழினும், செஞ்சாந்து எறியினும் ஒத்திருக்கும் உள்ள உரம்". ஆகலின் காட்டற்கு அரியது. கண்மூடி மௌனியாய் இருக்கும் நிலை சாந்தம் என்பர்.

"நகையே, அழுகை, இளிவரல், மருட்கை,
அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, என்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு" என்ப. (தொல், பொருள் 6·3)

எவ்வெச் சூழலில் இவை எழும் எனக் குறிப்பன அடுத்துவரும் (தொல், பொருள். 4,5,6,7,8,9,10,11) நூற்பாக்கள்.

இவ்வெண் சுவைகளை நாற்பத்து எட்டு வகையாக விரிப்பது கூத்த நூல்.

சுவைத் தொகைத் தலைப்பில் உள்ள 29, 30ஆம் சூத்திரங்கள் நாற்பத்து எட்டு வகையாகச் சுவையில் இழைகள் துவளும் என்ற குறிப்பு உணர்த்தும்.

அக வழி சுவையே, சுவை வழி இழையே
இழை வழிக் கூத்தே, என்மனார் புலவர்*

இவ்வொன்பான் சுவைகள் பற்றி சிலப்பதிகார அரங்கேற்று காதைப் பகுதி உரை விளக்கம் விரிவாகக் கூறும்.

இம்மெய்ப்பாடுகள் தாம் அவ்வச் சுவைகளில் எண்ணம் வந்தால் உடம்பில் தோன்றும்; உடம்பினும் முகத்தின் கண் மிகத் தோன்றும்; முகத்தினும் கண்ணில்மிகத்தோன்றும்; கண்ணிடத்தும் கடையகத்தே மிகத்தோன்றும் என்பர்.

அபிநயம் காட்டி நடிப்பதில் உடல் உறுப்புகளில் விழிக்கும், கைவிரல்கட்கும், பெரும் பங்கு உண்டு. ஒற்றைக்கை அபிநயம், இரட்டைக்கை அபிநயம் என இருவகைப் படுத்துவர்.

* சாத்தனார் ; கூத்தநூல். ப. 47

பிண்டியும், பிணையலும், எழில் கையும், தொழில் கையும்,
கொண்ட வகையறிந்து, கூத்து வரு காலை— (சிலம்பு 3:18)

என்பார் இளங்கோ அடிகள்

* அபிநயம் என்றால் பெரும்பாலும் கை முத்திரை என்று நினைப்பதும் தவறு.

அபிநயம் நான்கு வகைப்படும்.

சொல்லால் பொருளைத் தருவது வாசிக அபிநயம்.

ஏற்ற ஆடை அணிகலன்களைப் பூணுவதால் தங்கள் நிலைகளை விளக்குவது ஆஹார்ய அபிநயம்.

மெய்ப்பாட்டால் விளக்குவது ஸாத்விக அபிநயம் (மயிர் சிலிர்ப்பு, உடல் ஸ்தம்பித்தல், பெருகு வியர்வை, நீர்பெருகு கண் முதலன).

அங்கங்கள் கொண்டு விளக்குவது ஆங்கிக அபிநயம் எனப் பெறும்.

அங்கம், உபாங்கம், ப்ரத்யங்கம் என அங்கங்களை முக்கூறு படுத்துவர்.

அங்கம்-தலை, கை, மார்பு, விலா, இடுப்பு, கால் என்ற ஆறு·
உபாங்கம்-கண், புருவம், மூக்கு, உதடு, கன்னம், மோவாய்.
ப்ரத்யங்கம்-கழுத்து, தோள், வயிறு பின்புறம், தொடை கணுக்கால்.

கையால் பொருளை அபிநயித்துக் காட்டும் பொழுது கை எங்கு செல்கிறதோ அங்கே கண்ணும் செல்லவேண்டும். இதனையே கம்பன் ''கை வழி நயனம் செல்ல'' என்பான்.

கண்டேன ஆலம்பயேத் கீதம்
ஹஸ்தேன அர்த்தம் ப்ரதர்சயேத்
சக்ஷுர்ப்யாம் தர்சயேத் பாவம்
பாதாப்யாம் தாளம் ஆசரேத்

கமுகு நேர் மிடறு கவினிசை கூட்ட, கைகள் பொருள்களைக் காட்ட, கண்ணிணை பாவம் கருத்துற விளக்க, காலிணை தானத்தைக் காட்ட வல்லவளே, விறல்பட ஆடுபவளே விறலி என்பர்.

---

* கருத்து : பரதநாட்டியம்—த. பால ஸரஸ்வதி

யதோ ஹஸ்தஸ் ததோ திருஷ்டி:
யதோ திருஷ்டிஸ் ததோ மன:
யதோ மனஸ் ததோ பாவ:
யதோ பாவஸ் ததோ ரஸ:

கை வழி நயனம் சேர்க
நோக்கு சேர்வழி மனம் சேர்க
மனம் சேரிடம் பாவம் செறிக
பாவம் நிறைய சுவை மலிக

என்பது இதன் பொருள்.

விளக்கமாக, பரதநாட்டியம், அபிநய தர்ப்பணம், கூத்தநூல், Bharata's Art Then and now[1] போன்ற நூல்களில் காணலாம்.

அடுத்து,

வண்ணக்களஞ்சியப் புலவர் பாடல் பற்றி வருணிப்பதைக் காணலாம்.

"ராகம் படித்துள முறை தப்பாமல்
பாடின சில ஜின் கீதம்" (29:32)

நகை மிகத் தெரிவது இன்றி
நயனங்கள் மூடல் இன்றி
தகுசொல் வாய்க் கோணல் இன்றி
தலை, உடல் அசைவது இன்றி
விகசித முகம் கூப்பு இன்றி
மிடறு வீங்குவதும் இன்றி
பகரியாழ் ஒலிக்கு அடங்க இருந்து
பாடியதன் பின்னர். (29:33)

சிரல் சிறை அசைவது இன்றி
தேகம் அது அசையாது ஒப்பாய்
அரிய கை அசைய, மேனி அசைவு
இன்றி பதலை ஆர்ப்ப
கரஙணி, பதலை ஆர்க்கும் முறைப்படி
கறங்க வேணு
விரவிய துருத்தி சத்தம் விகற்பம்
இலாது இசைப்ப (29:34)

பாடின சில ஜின் எஸ்பார்.

1. Dr. Padma Subrahmanyam, M. A., Ph. D.,

பாடலை எப்படிப் பாடவேண்டும் என்று விளக்குவது அருமைப்பாடு உடையதே.

பின்னணியில் இசைக்கருவிகள் முழங்க, அவைக்கு ஏற்பப் பாடுவது என்பது, மிகுதிறலாளர்க்கே இயலும் என்பர்.

பருந்தும் நிழலும்போல் பாட்டும் எழாலும் அமையவேண்டும்.
(சீவகம். 730)

என்பார் திருத்தக்க தேவர்.

இத்தகைய மிடற்றுப்பாடல், திருமலர்க் கமலத்து அங்கண் தேனின் முரல்வது ஒப்பது என்னும் சீவகம் (662). திருமலர்த் தாமரைத்தேன் முரன்றது போல் இன்குரல் எழுவ என்று கூறும் பெருங்கதை (1.37:120-122).

இத்தகைய பாடகர்கள் "குழலொடு கண்டம் கொளச்சீர் நிறுப்போர்" ஆவர்.

இறங்குவ மகரயாழ் எடுத்த இன் இசை
நிறம் கிளர் பாடலான் நிமிர்வ; அவ்வழி
கறங்குவ வள்விசி கருவி; கண் முகிழ்த்து
உறங்குவ, மகளிரோடு ஓதும் கிள்ளையே. (கம்பன் 140)

என்று மிடற்றுப்பாடல் சிறப்பைக் கம்பன் விதந்துஓதுவான்.

நிலத் தெய்வம் வியப்பெய்த, நீள் நிலத்தோர் மனம் மகிழக்
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால் பாடத்தொடங்கும்மன்.
(சிலம்பு 7:24)

என்பார் இசையறி இளங்கோவடிகள். இசைவல்லார் இயம்பும் மொழியும் மென்மையாக இருக்கும் என்பர். சங்க நூல்கள், நயனுடை நெஞ்சின் மென்மொழி மேவலர் (திருமுருகு: 142), மழலை நாவின் மென் சொல் கலப்பையர் (பதிற்றுப்பத்து-15) என அவர் சிறப்பை விதந்து ஓதும்.

நரம்பு மீறி இறவாது உடன் புணர்ந்து ஒன்றி
கடவது அறிந்த இன்குரல் விறலியர் (மலைபடு கடாம். 535, 6)

நரம்பின் முரலும் நயம் வரு முரற்சி விறலியர்
(மதுரைக் காஞ்சி. 217, 8)

குழலும் யாழும், தேனும், குழைத்த சொல்லர் இன்னிசைப் பாடகர்.

"மத்தித்து எடுத்த மதுரத்துக்கு எண் மடங்கு
தித்திப்பு கேட்போர் செவிக்கு ஏற, தத்தைகள்போய்
குன்றேற, தோற்று குயில் மா மரம் தோறும்
சென்று ஏற, வானில் சிறு குரரி நின்று ஒதுங்கி
விண் ஏற, அந்தரத்தில் விஞ்சையர் ஏறக் கனிந்த
பண்ணேறப் பாட வல்லாள்
இசைப் பாடினி..."

(கூளப்பநாயக்கன் விறலிவிடு தூது 4-7)

நெஞ்சம் நிறைகொளும், கொஞ்சு இசை வலாளர் கொள்ளத் தக்க இன்ன, தகாதன இன்ன என வகைப்படுத்துவர் பரஞ் சோதி முனிவரும், பிறரும்.

வயிறது குழிய வாங்கல், அழுமுகம் காட்டல், வாங்கும்
செயிரறு புருவம் ஏறல், சிரம் நடுக்கு உறல், கண் ஆடல்,
பயிர் அரு மிடறு வீங்கல், பையென வாய் அங்காத்தல்,
எயிறது காட்டல், இன்ன உடல் தொழில் குற்றம் என்ப.

(திருவிளையாடல் : கூடல் : விறகுவிற்ற படலம் 29)

கருங்கொடிப் புருவம் ஏறா, கயல் நெடும் கண்ணும் ஆடா,
அரும் கடி மிடறும் விம்மாது, அணி மணி எயிறும் தோன்றா,
இருங்கடல் பவள செவ்வாய் திறந்து இவள் பாடினாளோ
நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ என்றுநைந்தார்.

(சீவகம் 65 8

யாழோர் பாடின்,

கண் இமையா, கண்டம் துடியா, கொடிறு அசையா,
பண் அளவும் வாய் தோன்றா, பல் தெரியா. (இசைமரபு)

என்பர்.

...அணி குரல் விங்காது,
நான்மறை துள்ளும் வாய் பிளவாது,
காட்டி உள் உணர்த்தும் நோக்கம் ஆடாது
பிதிர் கனல் மணி சூழ் முடி நடுக்காது
வயிறு குழி வாங்கி அழு முகம் காட்டாது. (கல்லாடம்)

என்பார் கல்லாடனார்.

மேலும் பரஞ்சோதியார்,

வெள்ளை காகுளி கீழோசை வெடிகுரல் நாசி இன்ன
எள்ளிய எழாவின் குற்றம் எறிந்து நின்று இரட்டல் எல்லை
தள்ளிய கழி போக்கு ஓசை இசைத்தல் நெட்டு உயிர்ப்பு தள்ளி
துள்ளல் என்ற இன்ன பாடல் தொழில் குற்றம் பிறவும் தீர்ந்தே
(திருவிளை : விறகு விற்ற படலம், 30)

பாடுக என்பார்.

இதே கருத்தைக் கல்லாடனார் கவினுறக் காட்டுவார்.

நாசி, காகுளி, வெடிகுரல் வெள்ளை
பேசாக் கீழிசை, ஒரு புறம் ஓடல்,
நெட்டு உயிர்ப்பு எறிதல், எறிந்து நின்று இரட்டல்,
ஓசை இழைத்தல், கழிபோக்கு என்ன
பேசுறு குற்றம் அசைவொடு மாற்றுக (கல்லாடம்)

என ஆணையிடுவார்.

எழுது சித்திரம் போல் மன்னி இழும் எனும் அருவி ஓசை
முழவொலி கஞ்ச நாதம் வலம்புரி முரலும் ஓசை
கொழுது இசை வண்டின் தாரி என இசைக் குணனும் வேரல்
விழும் இலை சிரல் மீன் மேல் வீழ் வீழ்ச்சி போல் பாடல் பண்பும்
(திருவிளை : விறகு விற்ற படலம், 31)

என்பதும் நோக்கற்குரியது.

உச்சஸ்தாயி, சஞ்சாரம், நிரவல், கீழ்ஸ்தாயி ஆகிய பாடற் குணங்களை இசைமரபும், கல்லாடமும் விளக்கும்.

மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும் வரல் முறையால்
தந்திரிகள் மெலிவித்தும் சயம் கொண்டும் வலிவித்தும்
(பெ-புராணம்)

பாடினார் என்பர்.

கமம் சூல் மாமழை தன் பொறை பொறாது பெருமழை பொழிந்து மகிழ்விப்பது ஒப்ப, புலவர்கள் தாம் கண்டன, கேட்டன, கற்றன அனைத்தையும் பிறர்க்கு ஓதியும் உணர்த்தியும், நூலிடை உரைத்தும் அமைவர் என்பர். எனவே வண்ணக் களஞ்சியப் புலவர் தாம் பெற்ற ஆடல், பாடல் புலத்துறை முற்றிய பேரறிவைப் பாடல்களில் இடம் கண்டு அமைத்துள்ள திறம் கண்டு மகிழத்தக்கது.

ஆடல் பாடல்களில் அவர் பெற்றிருந்த புலமையின் காரணம் ஆக "அலி பாதுஷா நாடகம்" என்ற சிறந்த இசை நாடக நூலை அவரால் படைக்க முடிந்தது எனலாம்.

ஆடல் பாடல் வருணனையோடு அமையாமல், மங்கல விழாக் காலங்களில் முழங்கும் இசைக்கருவிகள் பற்றியும் கூறுகிறார்:

குளிர் துடி உறுமி திண்டிமம் தம்பூர்
பம்பை பேரிகை குடமுழவு
அளவு அறு தடாரி முருடு வெம் முரசம்
அகன்ற வாய்ப் பதலை ஆகுளிகள்
வளமுறு நவுரி பூரி காளம் கைம்
மணி, எழு மலைகளும் அதிர
ஒளிர் மணிக் கடலும் திசையின் எண் களிறும்
பயம் கொள ஒலித்தல் உற்றனரே. (34:67)

மங்கல விழாக் காலங்களில் இசை எழுப்பி மகிழ்விக்கும் கருவிகளைக் குறிப்பிட்ட புலவர், புகழ் வேட்டுப் போர் புக்கார்க்கு வெறியூட்டும் ஒலிக்கருவிகள் பற்றிக் குறிப்பிடவும் தவறவில்லை:

பட்டம் உற்ற அளவில் முதுமறை தெளிந்தோர்
பலர் மகிழ்வு ஆசிகள் பகர்ந்தார்
இட்ட பே ரொலிப் பேரிகை மணி உடுக்கை
இடக்கை தம்பட்டம் மத்தளங்கள்
ஒட்டிய உறுமி, முரசங்கள் முருடு
முழவொடு பம்பை தண்ணுமையும்
மட்டறு கடலின் முழக்கெனு முழங்க
வலம் புரிகளும் கறங்கினவே. (14:21)

... ... ...நிரைமணி முரசம் கஞ்சம்
இடி ஒலி அடங்கத் தாக்கி எழுகடல் ஒலியை மாற்றி
படி முழுது அதிர விண்ணிற் படர்தரப் பரந்தது அன்றே.
(35:11)

தமக்கு முன்னர்த் தோன்றிய அனைத்து இலக்கியங்களையும் படித்து அவற்றுள் மூழ்கித் திளைத்த புலவர் அநுபவமே இத் தகைய அருமையான படைப்புகளை, பாடல்களை உண்டாக்க உதவுகிறது.

## 4. எண் சுவை

அவலம்

வண்ணக் களஞ்சியப் புலவர்க்கு இராஜநாயகக் காப்பியத்தில் எண் வகை மெய்ப்பாடுகள் (சுவை) பற்றியும் விரிவாகப் பாடுவதற்கு வாய்ப்பில்லை. ஆனால் காமம், வீரம், அவலம் ஆகிய மூன்றனையும் சற்று விரிவாகவே பாடி இருக்கிறார்.

தாவூது நபி உபாத்துப் படலம், சுலையுமான் நபி உபாத்துப் படலம் ஆகிய இரண்டு படலங்களிலும் அவலச் சுவை பற்றிப் பாடுவதற்குப் புலவர்க்கு வாய்ப்பு இருக்கிறது. கொண்ட வாய்ப் பைப் பெரிதும் பயன்படுத்திக் கொள்கிறார்.

நெடு நாள் பழகிய பொருளைப் பிரிய எவர்க்கும் மனம் வருவ தில்லை. பேயோடு பழகினும் பிரிவு அரிது என்பர். ஒன்றுபட்டு நட்பின் உயிர் உறக் கலந்தார் பிரிவது என்பது நினையினும் நெஞ்சம் வருத்துவதே. உறவின் முறையார், உள்ளம் கலந்த நண்பர்கள் பிரிய நேரிடின் பேதுறாதவர் எவர்? அவர்கள் உயிரிழந்து போக அதனைத் தாங்க இயலாது ஒக்க உயிர் விட்டாரும் உளர். எனினும் அவரொடு பழகிய பழைய நாட்களை நினைத்து வாய்விட்டுப் புலம்பி "எவ்வாறு ஆற்றுவேன்" என்று கண்கள் குளம் படக்கலங்கி, பின் உலக இயற்கை இது, மாற்றரிது, என ஒருவாறு மனம் தேறுவர், பலர்.

'வாய் விட்டு அழுவதால் துயர் விட்டுப் போகும்', 'சுவரோடாயினும் சொல்லி அழு' என்பன பழமொழிகள். இவ்வாறு அழுவதனால் துயர்ச்சுமை பாதியாகக் குறையும்என்பர்.

இன்பமாக இருக்கும் போது முன்நாள் நினைவுகள் எழுவது அரிது. ஆனால் அவலச் சூழ்நிலையில் முன்னர் நடந்த நிகழ்ச்சி களை நீடு நினைந்து, ஒவ்வொன்றாகச் சொல்லிப் புலம்புவர்.

பிற சுவைகளுக்கு இல்லாத தனி ஆற்றல் அவலச் சுவைக்கு உண்டு. நூல்கள் ஆயினும், நாடகக் காட்சிகள் ஆயினும் இச்சுவை பொருந்திய இடங்கள் படிப்பார், பார்ப்பார் மனம் கவர்ந்து, தம் வயப்படுத்தி நீர் பெருகச் செய்யும்.

சிறப்பு மிக்க ஒருவனை, கணவனாகப் பெற்ற பெண் ஒருத்தி (அன்றி பலர்) அவன் பிரிவு ஆற்றாது புலம்பி, முட்டி, மோதி, அரற்றி, புரண்டு, அழுது துடிப்பாள் (துடிப்பார்). அவனோடு பழகிய நாட்களை நினைத்து "இல்லாமல் போயிற்றே இனி அவை" என்பதற்காக வருந்துவாள். கை அறி மடமையின் காதலற்கு ஆக்கி உண்பித்ததை நினைவில் கொள் வாள். கைம்மை வாழ்வை நினைத்துக் கலங்குவாள். இருதலைப் புள்ளின் ஒருயிர் அனையராய் இருந்த வாழ்வை எண்ணுவாள். விதவைகள் படு துயர் குறித்து வருந்துவாள். அத்தகைய அவலம் தனக்கு நேராதவாறு தானும் உடன் உயிர் போகவேண்டும் என்று நினைப்பாள். 'உடன் உயிர் போகுக தில்ல' எனக் கதறுவாள்.

இது போலவே இன்னுயிர் மனைவி பிரியினும் சிலர் ஆடவர் வருந்துதல் உண்டு. மாக்கோதை என்ற சேர மன்னன் தன் பெருங் கோப் பெண்டு துஞ்சிய காலத்து வருந்திப் பாடிய பாடல் புறநானூற்றில் உள்ளது. (245)

கைம்மை வாழ்வின் இயல்புகள் கூறி பெருந்தோள் கணவன் மாய்ந்த பின்னர் கருங்கோட்டு ஈமத்தீயும், தாமரைப் பொய் கையும் ஒன்றே என்று தீப்பாய்ந்த பூதப்பாண்டியன் பெருந் தேவியின் பாடலும் புறநானூற்றில் உள்ளது. (246)

மக்களது இவ்வியல்பை மாக்கள் (விலங்குகள்) மீதும் ஏற்றிப் பாடிய வழக்கும் உண்டு.

கருங்கண் தாக்கலை பெரும் பிறிது உற்றெனை,
கைம்மை உய்யா காமர் மந்தி
கல்லா வன் பறழ் கிளை முதல் சேர்த்தி,
ஓங்கு வரை அடுக்கத்துப் பாய்ந்து உயிர் செகுக்கும்
(குறுந். 69)

பரப்பு நீர் ஞாலத்துப் பத்தினிப் பெண்டிர்,

காதலர் இறப்பின் கனை எரி பொத்தி
ஊது உலைக் குருகின் உயிர்த்து அகத்து, அடங்காது
இன் உயிர் ஈவர்; ஈயார் ஆயின்
நல்நீர்ப் பொய்கையின் நளி எரி புகுவர்;
நளி எரி புகாஅர் ஆயின், அன்பரோடு
உடன் உறை வாழ்க்கைக்கு நோற்று, உடம்பு அடுவர்
(மணிமேகலை 2:41-47)

என்பார் சித்தலைச் சாத்தனார்.

தேம் கமழ் திருநுதல் திலகம் அழித்து, ஈகை அரிய இழையும் இழந்து, பூண்ட அணி கலன்களை கழற்றி எறிந்து, வெள்ளுடை உடுத்து, பிறர் கண் படாவாறு ஒதுங்கி, எளிய உணவு உண்டு, தவம் தலைப்படுவர் விதவையர். இவர்களைக் கலன் கழி மகளிர் என்று புறநானூறு கூறும்.

இவ்வளவு விரிவாக இங்கு இவை கூறியதற்குக் காரணம் உண்டு. தமிழ் இலக்கிய மரபில் "கணவர் பிரிந்த காரிகையர் துயர்" எத்தகையது என்பதனை நன்கு விளங்கிக் கொண்டா லன்றி இராஜநாயகக் காப்பியத்தில் அமைந்துள்ள இரு உபாத்துப் படலங்களையும் சுவைக்க முடியாது; விளங்கிக்கொள்ள முடியாது. படித்த நூல்களின் தாக்கம் பெரும் புலவர்கட்கு இல்லாமல் போகாது. இனி நூலினுள் செல்வோம்.

தாவூது நபி அவர்கள் உபாத்து ஆயினார்.

துதிபதி சுலையுமானும் சோதரன் எனும் முன்னோர்கள்
பதினறுவரும் உள் ஏங்கி பதைபதைத்து உருகி வாடி
கதிர் ஒளி மழுக்கும் மேனி கவின் நலம் கருகினாரே

(13:20)

என்று கூறிவிட்டு, தாவூது நபியின் மனைவியர் நிலைபற்றிக் கூறுவார்.

பானுவின் ஒளியை மாற்றும் படர் இருள் குடியாய் வைகி
நானமும், கமழும் கூந்தல் நசாயிகின் உடன் மற்றுள்ளோர்
ஆன காதலியர் தாமும் அகம் குலை குலைந்து வெம்பி
வான் இடி அதிரக் கேட்கும் மயில் என மயங்கி வீழ்ந்தார்.

(13:21)

என்பார்.

உறவின் முறையார் இவர் மட்டுமன்றி ஊரார் தாமும் வந்தனர்; வருந்தினர் என்பார்.

பனி இசுறாயில் கூட்டத்து ஆடவர், மகளிர், சிறுவர் அனைவரும் ஆகுலம் மிகுந்து அருவி பெருக்கினர்; உடன் சூழ்ந்தனர் என்பார்.

போற்றற்குரிய பெரும்புகழாளன் நபி பிரிவு ஆற்றாது பூங்கொடி மாதர் புலம்பினர்.

'அரசே உமக்கு முன் யாங்கள் இறந்து போகும் பேறு பெறவில்லை. படர் மிகுத்தேம். உயிரில்லாத உடலுக்கு உலக வாழ்க்கையும் உள்ளதோ? யாம் பெறத்தக்க பேறு இதுவோ?

(13:24)

உயிர்த்துணைக் கணவன் மாய்ந்து போக மிகு துயர் அடைந்தும் உயிர் வாழும் விதவையர், ஒளி இல்லாக் கண் போன்றவரே ஐயா! தளிர் ஒத்த பாதங்கள், மலை ஒத்த தோள்கள், கனி இதழ்கள், மதி முகம் இனி இவற்றை எப்போது காண்போம்? (13:25)

ஒருவேளை துயர் மிகுதியால் அழநேரின் அருகிருந்து விழி வழி நீர் விரல் முனையால் மாற்றி, "அழிந்தது உன் கண்மை எழு, எழுது போ'' என ஆறுதல் கூறுவார் யார்? உயிரே! நீங்கள் இன்றி வாழவும் வல்லமோ? அதுவும் ஒரு வாழ்வு ஆகுமா? படர் கொடிகள் பற்றிய கொழுகொம்பு இழந்தால் செழுமை பெறுமோ? (13;26)

உம்மைப் பிரிந்தும் உயிர் வாழவேண்டும் எனில் ஏன் பிறந் தோம்? ஆணிவேர் அற்ற மரமும், நடுக்கடல் நீர்ப்பரப்பில் பட்ட பறவையும் உய்வது எவ்வகை? (13:27)

யாம் துழந்து அட்ட அமிழ்து நாண் உணவை "இனிது" எனக் கூறிய அந்நாட்கள் இனி வாராவோ? அம்மொழி கேட்டு நுண்ணிதின் மகிழ்ந்தோம். இனி அவை இலவே.

அன்பொடு அன்னம் கணவனுக்குப் பரிமாறி பின் தாம் உண்பது கூழே ஆயினும் அதுவே பெண்களுக்கு அறுசுவை அமிழ்து.

உமது மறைவிற்குப் பின் மகன் கையால் உண்ணும் அன்னம் வன்பினால் இறவாமல் இறப்பதற்கு உண்ணும் மருந்தே ஆகும் அன்றோ?, (13:28)

இவ்வாறாகப் பல சொல்லி வாய்விட்டுப் புலம்பி, வயிறு அலைத்துச் சோர்ந்து, வீசிய புயலால் விளங்கிய மலர்கள் உதிர்த்த பூங்கொம்பராய் சீர் அணி மணிப் பைம் பூண்கள் யாவதும் சிதறல் உற்றார். (13:29)

இருளும், அறலும், சைவலமும் இணையில எனற்குரிய கரிய கூந்தல் உடல் போர்க்க, மடை திறந்த வெள்ளம் போல் மை அழித்து கண் புனல் ஒழுக அழுதனர். (13:30)

உருகினர்; நிலை பெறாது திருகினர்; அழகு மேனி கருகினர்; கடல் போல் பெருந்துயரம் பெருகினர். (13:31)

இவ்வாறாகக் கார் ஒதியார் நிலையைக் கவின் பாடல்களால் ஓதுவார் வண்ணக் களஞ்சியப் புலவர்.

"உயிர் இல்லாத உடலினுக்கு உலக வாழ்க்கை உள்ளவோ? பெறுபேறு ஈதோ?" என தாஹூது நபி அவர்களின் துணைவியார் புலம்பினர். இக்கருத்து இராமகாதையில் வாலிவதைப் படலத்தில் தாரை புலம்பலில் வெளிப்படும் "இடர் வேலைக்குக் கரை காண்கி லேன். உரை சேர் ஆருயிரே! என் உள்ளமே! அரைசே! உயிர் போனால் உடலாரும் உய்வரோ?" (4099, 4100) என்ற தொடர் களோடு ஒப்பு நோக்கிடத் தக்கது.

'அழுகின்ற பொழுது : கண்ணீரால் அழிந்திடும் மை தன்னை எழுது என்று பகருவார் மற்றெவர்" எனும் பாடல் தொடரும் "இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி அமைதற்கு அமைந்த நம் காதலர்" என்ற குறுந்தொகைத் தொடரும் ஒப்பிட்டு மகிழத் தக்கன.

"நிறங்கொள் கூந்தல் உடல் முழுவதுமே மூட, வேல் கண் கடை திறந்து ஒழுகும் தாரை" (13:30) என்ற தொடர் "பொழி கதிர் திங்கள் (முகம்) முகிலோடும் சேண் நிலம் கொண்டென, செங்கண் சிவப்ப அழுதாள்" கண்ணகி, (சிலம்பு 18:30-32) என்ற தொடருடன் உடன் வைத்து எண்ணத்தக்கது.

'வயிறலைத்து மாழ்கல்' (13:29) என்பது செயலற்ற நிலையில், துன்ப மிகுதியால் மகளிர் மாட்டு நிகழ்வது. இதனைக் கம்பன் "அடித்தாள் முலைமேல்; வயிறு அலைத்தாள்; அழுதாள்" என்று குறிப்பிடுவான் (கம்பன் 8678)

தம் துணைவன் துயில் கொள மகளிர், அவனது தளிரியல் பதம் தைவருவர்; வரை சேர் தோளிடை நாளும் வைகுவர்; கண் அனைய கேள்வன் வாயும் முகமும் நோக்கி மகிழ்வர்.

அரும் பெறல் கணவன் பெரும் பிறிது உற தாம் தைவந்து, வைகி, நோக்கி மகிழ்ந்த நிலை இல்லாமற் போவதற்கு உள் அகம் வெதும்புவர்.

எனவேதான் "தளிர் இயல் பதமும், செம்பொன் தடவரைப் புயமும், வாயும், நளிர் மதிமுகமும் எந்தநாள் இனிக்காண்போம்"? (13:25) என தாவூது நபி அவர்களது துணைவியர் துடித்தனர் என்பார் புலவர்.

இதனுடன் கலிங்கத்துப்பரணி பாடல் ஒன்று ஒப்பிடற்கு உரியது:

> ' "பொருதடக்கை வாள் எங்கே? மணிமார்பு எங்கே?
> போர்முகத்தே எவர் வரினும், புறங் கொடாத
> பருவயிரத் தோள் எங்கே? எங்கே?" என்று,
> பைரவியைக் கேட்பாளைக் காண்மின், காண்மின்!' "
>
> (பரணி 12:13)

வாள் இறுகப் பற்றியகை; பகைவர் வேல் எறிய மலர்ந்த மார்பு; புறம் இடல் என்பதே அறியாத திண்டோள் உடையான் தன் தலைவன், என்ற குறிப்பினது இப்பாடல். எனினும் வில்லக விரலின் தன் நல்லகம் பொருத்திய கை; தான் புல்லிய மார்பு; துஞ்சிய தோள் ஆகிய இவை காண்பதற்கு அரியன ஆயிற்றே என்ற கலக்கமும் குறிப்பது. அடுத்து சுலைமான் நபி உபாத்துப் படலம் காணலாம்.

மேலோன் கவன்ற கட்டளையின் வண்ணம் சுலையுமான் நபி அவர்களது தேகம் ஆங்கு அகன்றது. திருப்பணியாளர் அச்சம் நீங்கி அகன்றனர். (45:29)

தடம் பதியின் உள்ளார், நசுகீம். பனியிசுறாயீல் கூட்டத்தார் செய்தி அறிந்து உருகி கண்ணீர் சொரிந்தனர். அன்னை நசாயிகு செய்தி கேட்டு உணர்வுடன் உயிரும் ஒடுங்கி வீழ்ந்தாள். (45:30)

அன்னை நசாயிகு உடலகம் சோர்ந்தாள். உள் ஆவி உளதோ? இலையோ எனச் சூழ்ந்தவர் ஐயம் உற்றனர். பதைப்பும், துடிப்பும் மிக்கவராய், உணர்வு மென்மெல வரப்பெற்ற நசாயிகு தன்னைத் தம் மடியில் கிடத்தினர். உபசாரங்கள் செய்தனர். அன்னை மெல்ல உணர்வு, உயிர் சேர்ந்து எழுந்தார்.

கவினும் எம் உயிரே! பிள்ளைக் கலி எலாம் தீர்த்த வாழ்வே!
நபியும் எவ்வுயிர்க்கும் ஓர்கோல் நடத்து நல்லரசும் ஆகி
புவி அதிபதிகள் போற்ற புகழ் படைத்தனர் உம் சேய் என்று
இவை சொலக் கேட்கும் காதோ இறந்த சொல் கேட்டு
[வாழும்? (45:32)

ஈன்றவர் இறந்து பிள்ளை இருந்து இயல் சடங்கு யாவும்
ஏன்றிடப் புரியப் பெற்றால் எழில் சிறப்பு இது உம் தாதை
தோன்றிடப் பெறுவது ஆகி சுவர்க்கமும் வாழ்த்தப் புக்கார்
மீன் தொகைக் குறைநீர் போல் யாம் மெலிவுற்றேம் விதியும்
[அற்றோம் (45:34)

ஆவியே! அமுதே! எங்கள் அருந்தவப் பொருளே! அன்பே!
பூவில் வாழ் மதியே! மாறாப் பொறுமையங் கடலே! இந்தப்
பாவியர்க்கு இடம் எங்கு என்றே பகைத்தனர் அனையர்
(45:35)

தாயார்ப் புலம்பலாக அமைந்த இப்பாடல்களோடு மகன் பிரிந்த மண்டோதரிப் புலம்பல் ஒப்பிட்டு நோக்கத் தக்கது:

கலையினால் திங்கள் என்ன வளர்கின்ற காலத்தே உன்,
சிலையினால் அரியை வெல்லக் காண்பதோர் தவம் முன்
செய்தேன்;
தலை இலா யாக்கை காண எத்தவம் செய்தேன் அந்தோ!
நிலை இலா வாழ்வை இன்னும் நினைவெனோ, நினைவு
இலாதேன்? (கம்பன் 9232)

தாள் அரிச் சதங்கை ஆர்ப்பத் தவழ்கின்ற பருவம் தன்னில்,
கோள் அரி இரண்டும் பற்றிக் கொணர்ந்தனை; கொணர்ந்து,
கோபம்
மூளுறப் பொருத்தி, மாட முன்றிலில் முறையின் ஓடி
மீள அரு விளையாட்டு இன்னம் காண்பெனோ,
[விதியிலாதேன்! (கம்பன் 923 4

என்பன அப்பாடல்கள்.

தவிர, சினத்தொடும் கொற்றம் முற்றி, இந்திரன் செல்வம் மேவி, நினைத்தது முடித்து நின்ற இராவணன், புண் திறந்த நெஞ்சன், விண் திறந்திட விம்மி, அரற்றி "எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி ஏங்கி, உனக்கு நான் செய்வதானேன்" என்று புலம்பினான் என்ற கம்பன் பாடலும் (9224) இங்கு (45:34 உடன்) ஒப்பு நோக்கத் தக்கது.

தமையரும் உணர்ந்தோர் தாமும்
சாற்ற ஒ(ண்)ணா மசலாச் சாற்றும்
அமுத வாசகச் செவ்வாயும்
அடியோடும் இறந்த கம்பும்
சமைதரும் மனையின் உள்ளே
தழைத்திடத் தீண்டும் கையும்
கமழ் மலர்ப் புயமும் எந்நாள்
காண்பது இங்கு இனிமேல் யாமே (45:33)

என்று அழுது அரற்றினர்.

முன் பாடலில் (45: 34)ல் கண்ட உவமம்
"வான் நீர் சுண்டி, மண் அற வற்றி, மறுகுற்ற
மீனே என்ன, மெய் தடுமாறி விழுகின்றாள்." (கம்பன் 1902)
என்பதனோடு ஒக்க வைத்து உணர்தற்கு உரியது.

சுலையுமான் நபி அவர்களது துணைவியர் "தூவியே விழி நீர் சிந்திப் புலம்பினர்" என்பார் புலவர். (45:35)

வல்லவன் அருளே! தூதே! மகிதலத்து எவர்க்கும் பேறே!
எல்லவன் அகன்ற காலத்து இதழ் குவி நளினம் போல
கல்லகம் படைத்து யாங்கள் இருந்து என் கொல் கணவன்
அற்றும்
தொல் உலகினில் வாழ்வு உண்டோ? சொல் அற்றுப்
பொருளும் உண்டோ? (45:36)

(எல்லவன்—எல், எல்லை, சூரியன்; நளினம்—தாமரை)

மறப்பது தனைக்கொளாத மனமும், மற்றுஒருவர் வார்த்தை,
பிறப்பது தனைக் கொளாத செவிகளும், பிரிந்து மீள
சிறப்பது தனைக் கொளாத உயிரும், இத்தினத்தில் ஆவி
இறப்பது தனைக் கொண்டு எவ்வாறு இருப்பது ஆம் உலகின்
[மீதே(45:37)

ஆயிரம் மனைகள் தோறும் ஆயிரம் உருவம் ஆகி
வாய் இதழ் சுவைத்து வாழ்வீர் வகுக்கும் எவ்விடத்து
உற்றாலும்
நேயமோடு எமது பாலும் நிறைந்து உறைவீர் இப்போது
போய் உறை தலத்தும் வைகி புக ஒ(ண்)ணாதோ எம் பாலே
(45:38)

இப்பாடல், நீடுலகில் பிறரால் நிகழ்த்தரிய செயல்களை நடத்திக் காட்டியவர் நபி அவர்கள் என்ற குறிப்பினைக் காட்டுவது. அவர் உடலம் காண்கிலாது வருந்திய துணைவியர், அவர் மாண்ட போதும், அவர் மாயம் செய்கின்றார் என்று எண்ணிக புலம்பினரோ, என்று மயங்கத்தக்க வகையில், "எம்பால் வைகிப் புக ஒண்ணாதோ?" என வினவுவதாக அமைத்திருக்கின்றார் புலவர்.

உரித்தின் எம் உடல்கள் எல்லாம்
உமது உயிர் ஒன்று சார்ந்து
தரித்தது அங்கு அதனால் அன்றோ
மனைதொறும் தழுவி வாழ்ந்தீர்
இருக்கில் யாம் இருக்க, மாயின் மாய
வேண்டுதுமே எம்மை
பிரித்து உமது உயிரை வேறாய்ப் பிடித்தது
எவ்வாறு கூற்றே? (45:39)

என்று கூறிப் புலம்பினர். இப்பாடலை,

மையா நின்றனென், நான் இருந்து இங்ஙன்;
மெய் வானோர் திருநாடு மேவினாய்;
ஐயா! நீ எனது ஆவி என்பதும்,
பொய்யோ? பொய் உரையாத புண்ணியா! (கம்பன் 4103)

செரு ஆர் தோள! நின் சிந்தை உளேன் எனின்,
மருவார் வெஞ்சரம் எனையும் வவ்வுமால்;
ஒரு வேனுள் உளை ஆகின், உய்தியால்;
இருவேமுள் இருவேம் இருந்திலேம். (கம்பன் 4104)

என்ற தாரையினுடைய புலம்பல் பாடல்களுடன் ஒப்பிட்டு நயம் காணவேண்டும்.

மேலும்,

> இலக்கத்தின் உமக்கும் எங்கள் தமக்குமே ஏகம் ஆக
> கலப்பு அற்று இங்கு இருந்த ஆவி கலந்து ஒன்றாய்க் கொண்டு ஏகாது
> நிலத்து உட்கப் பிரிந்து வாங்க நீதியோ? உயிரை வாங்கும்
> மலக்குக்கும் எமக்கும் உண்டோ வன்பகை யாது ஒன்றாலும்?
> (45:40)

என்று புலம்பினர் என்பார் புலவர்.

பாற்கடலைத் தான் ஒருவனாகவே கடைந்து அமுதம் எடுத்தவன் வாலி. அதன் பயனைத் தான்பெறாது, அமரர், உண்ணக் கொடுத்தனன். கூற்றுவனும் அமரரோடு கூடி இருந்து அமுது துய்த்தவன். அவன் செய்ந்நன்றி மறந்து வாலியின் உயிர்கவர்ந்து தாரை தனித்துப் புலம்ப விடுத்தான். இது குறித்து அவள் புலம்பும் பொழுது "நமனார், உபகாரம் சிந்தியாச் சிறியாரோ? பிறியா இன் உயிர் பெற்ற பெற்றிதாம் அறியாரோ?" என்று குறிப்பிடுகிறாள்'

இதன் கருத்து "கூற்றுவனுக்கும், எனக்கும், ஏன் உமக்கும் யாதொன்றாலும் பகை இல்லையே? ஏன் இது செய்தான் அவன்? விளங்கவில்லையே" என்று அமையும்.

இக்கருத்தும் "எம் ஆவி உம் ஆவியுடன் ஒன்றாய்க் கொண்டு ஏகாது நிலைத்து உட்கப் பிரித்து வாங்க நீதியோ? உயிரை வாங்கும் மலக்குக்கும் எமக்கும் உண்டோ வன்பகை யாதொன்றானும்" என்ற சுலைமான் நபி மனைவிமார்ப் புலம்பலும் ஒத்த கருத்தின.

இவ்வாறாக அவலச் சுவைப் பிழிவாக இரு படலங்களை அமைத்து, படிப்பார் பிழியப் பிழிய அழுமாறும், அழுது, அழுது ஆனந்தம் அடையுமாறும் செய்ய வல்லவர் வண்ணக் களஞ்சியப் புலவர் என்பது தெளிவாகிறது.

இங்கு, இவ்வாறு பாடியிருப்பன அனைத்தும் தமிழ் நாட்டின் மரபை அடிப்படையாகக் கொண்டவையே.

பிற சுவைகள் யாவற்றையும் விட அவலச் சுவையே படிப்பவர் (நாடகமாயின் பார்ப்பவர்) கவனத்தை ஈர்க்கவல்லது; தோயச் செய்வது; இன்புறுத்துவது என்பது யாவரும் அறிந்த ஒன்று .

**வீரம்**

சிற்றில் நற்றூண் பற்றி. "நின் மகன் யாண்டுளன்" என நரை மூதாட்டி ஒருத்தியை வினவினாள் ஒருத்தி. அதற்கு அவள்

"அறியேன். போர்க்களத்தே தோன்றுவன். புலிசேர்ந்து போகிய கல் அளை போல ஈன்ற வயிறு இது" எனப் பெருமிதம் தோன்றக் கூறினாள் என்று கூறும் புறநானூறு. (புறம்:86)

தன் கடன், கணவன் கடன், கொல்லன் கடன், வேந்தன் கடன் எனப் பல்கடன் விளக்கம் கூறிய தாய் ஒருத்தி தன் மகன் கடனாக ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி, களிறு எறிந்து பெயர்தலைக் குறிப்பிடுகிறாள். (புறம்:312)

குழவி இறந்து பிறப்பினும், தசைப் பிண்டமாகப் பிறப்பினும் அப்பிறப்பினை ஆள் அன்று என்று கருதி வாள் போழ்ந்து அடக்குவர் வயவர். இது தமிழ் மரபு. (புறம்:74)

இத்தகைய வீரம் செறிந்த மண் தமிழ் கூறு நல் உலகம். இம் மண்ணிடைப் பிறந்த வண்ணக் களஞ்சியப் புலவர் தாம் இயற்றிய காப்பியத்துள் வீரம் பற்றி விளம்பாது ஒழிவரோ? ஆனால், அவர்க்குக் கிடைத்த வாய்ப்போ தவச் சிறிது.

இராஜ நாயகக் காப்பியத்துள் போர் நிகழ்ச்சிகள் இடம் பெறும் இடங்கள் இரண்டே.

மகறிபு தேய மன்னன் மீதும், உவரியின் நாப்பண் அமைந்த உயர் பெருந் தீவகத் தலைவன் பவுனவகு மீதும் நாற்றளப் படையை நடத்தினார் சுலைமான் நபி அவர்கள். மண் நசைமேவி மறக்களம் புக்காரல்லர். தீன் பயிர் வளர்க்க, பீசபீல் இயற்றலைத் திடப்படு கருத்தாக் கொண்டவர் என்பது அவ்விரு அரசர் மாட்டும் அனுப்பிய தூது தன்னால் அறிய வருகிறோம்.

"இறை அருள் கலிமா ஓதுக. இதயத்துள் குபிர் மாற்றுக. மறைவழி நடக்க. தீன் நெறி மருவுக. எமக்கு திறை கொடுத்துச் சிற்றரசராய் இருக்க" (24:3). இவையே அவர் அனுப்பிய தூது வாசகங்கள். போர்நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகளைப் பின்னர்க் காண்போம்.

"அரசின் கொற்றம் நான்குடன் மாண்டது" (மாட்சிமைப் பட்டது) என்று விளக்கும் புறநானூறு.

கடுஞ்சினத்த கொல்களிறும், கதழ்பரிய கலி மாவும்,

நெடுங்கொடிய நிமிர்தேரும், நெஞ்சுடையபுகல்மறவரும், என

(புறம்-55)

நாற்படை வளத்தால் பெருமிதம் மிகுவதே அரசு.

இதனை மறவாது போற்றிய வண்ணக் களஞ்சியப் புலவர் தமது நூலிடையே,

முடி ககனம் அளவி மதிதொடும் நெடிய
மொய் மணிக் கேதனத் தேர்கள்
கடுநடை சிறுகண் புகர் முகம் துடித்தாள்
கடம் ஒழுகிய மத கயங்கள்
அடல் புரிதரும் ஐங்கதி நிறை சுழிகொண்டு
அணிதரும் நானவாய்ப் பரிகள்
விடு சரம் ஒருகண் புகுதினும் மறுகண்
இமைத்திடா மன வலி வீரர் (14:33)

எனப் பெருமிதம் தோன்றப் பாடுகிறார்.

யானைப்படை

களப்பொலிவு ஊட்டுவது யானைப்படையே.

''வாடாமாலை ஓடையொடு துயல்வரப் படுமணி இரட்டும் மருங்கில் கடுநடை, கூற்றத்தன்ன மாற்றரும் மொய்ம்பின் கால் கிளர்ந்தன்ன வேழம்'' (திருமுருகு 79-82) என்பார் நக்கீரர். ''யானையுடைப் படை காண்டல் மிக இனிதே'' என்று இனியவை நாற்பது (4) இயம்பும். அணி வகுத்து,அணி பூண்டு, அண்ணல் யானைகள் நிற்கும் காட்சியே கண்கொள்ளாக்காட்சி.

கூரனல் விழி, துடைக்கால், கோடுபெற்ற அனந்தம் ஓங்கல் பார் அதிர் தர நடக்கும் பண்பு வெங்கயங்கள் என்பார்[1]. (18:5)

மேலும் இவற்றின் பிளிற்றொலி கடல் புகுந்து நீர் அருந்தி மீளும் கொண்டல்கள் குமுறுவது போல்வது என்பார். (18:5) ''வாரணம் முழுதும் புயல்களாய், அதின் வாய் வருமொலி புயல் ஒலியாய்'' என்பது (14:29)ல் இடம் பெற்றிருக்கும் தொடர்.

இதே கருத்து முன்னம் (14·29ல்) குறிக்கப் பெற்றது. ''அட்டதிக்கயம் ஒருப்படக்கதறல் போல் அதிர்ந்து'' வான் முழங்கிற்று (2.2) என்று குறிப்பிட்டு உள்ளார் என்பதை முன்னரே கண்டோம்.

போர்க்களத்து சமர் வேட்டுப் புகும் அரசர் யானை எருத்தம் பொலிய இருந்து ஊர்வது மரபு.

''சிந்துரப் பொருப்பில் ஏறித் திருவிளையாடல் காண (தம் வீரர் நிகழ்த்து போர்) கோட்டை வாயிலை நீங்கினான்'' மகறிபு தேய மன்னன் என்பார். (24:14)

---

1. ஓங்கல்-மலை, யானை;

தன் நிழலையே தன் பகை என்று எண்ணிப் பொருவதும், கோட்டு மண் கொண்டபின் நாணித் தலை கவிழ்வதும் மதமா இயல்பு என்பர் நூலோர். இதனை, 'நிழலொடு பொருதும் பொருப்பு எனும் கரி' (31:31) என்று ஒரு பாடலில் குறிப்பிட்டு உள்ளார்.

"உழைத்தட நெடுங்கண் மடவியர் மயல் அற்றோர் மனம் நிலை நிகர் மலைகள்" நிகர்யானைகள் (34:70) என்று பெருமக்கள் உள்ள நிலைக்கும், யானைகள் உருவ நிலைக்கும் உவமையாக மலைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இப்பாடலில் யானையைச் சிறப்பித்துக் கூறும் சிறு, சிறு தொடர்கள் ஓவியச் சிறப்பின. "புழைக்கரம்; சிறுகண்; புகர்முகம்; உரல்தாள்; பொருபிறைக் கூர் இணை மருப்பு,மழைத் தடம் கொதித்து பொழிதல்போல் பொழிந்து வண்டல் பாய் கவுள் மதம்"என்ற தொடர்களும் (34:70): "மலைகள் கோடுகள் பெற்ற என்னும் மதகரி(21:5)" என்ற தொடரும் வண்ணக் களஞ்சியப் புலவர் திறம் விளக்குவன.

யானைகள் நெருக்குறச் செல்வதும், நேரிட்டுப் போரிடுவதும் கனவரையொடு வரை நெருக்கல் போல், முனைத்தல் போல் இருந்தது என்பார் (14:26).

போர்க்களத்தில் பெருகு சோரி ஆற்றிடை இரும்பிணர்த் துறுகல் போல், "யாக்கை துண்டு இரண்டு ஆன அத்திகள்" இருந்தன என்பார் (24:19; 35:43)

குதிரைப்படை

'கதழ் பரிய கலிமா' படை வகுப்பைப் பார்ப்போம்

பரிமா இந்நாட்டிற்கு (தமிழகம்) உரிய விலங்கன்று. 'நீரின் வந்த நிமிர் பரிப் புரவி' என்று பட்டினப்பாலை பகரும்.

எனினும் நெடுங்காலம் தொட்டே நாட்டின் படை வளத்தில் மிகு சிறப்பிடம் கொண்டது பரிமாவே.

பரிமாச் செயல்களை, தோற்றத்தைப் பல படியாகப் பாராட்டும் புறநானூறு. வண்ணக் களஞ்சியப் புலவர் இப்பரிமாப் படை பற்றிக் கூறுவ காண்போம்.

"பலகதிப் பரிகள் பறவையின் நெருங்க" (14:26) வந்தன என்பார். பரிமா விரைவிற்கு விண் இயங்கு புள் உவமை கூறப்

பெறும். "பட்சி எனும் உக்ர துரகமும்" என்பார் அருணகிரி நாதர். பட்சி என்ற பெயர் பரிமாச் சுட்டுவதே. "பட்சி என்றபேர்தவிர்" (34-114) என்ற தொடர்நயம் பின்னர்க் காண்போம்.

அலங்கு உளைப்புரவி, கொய் உளைப்புரவி (18:10) என்றெல்லாம் அடையுடன் புகழப்பெறும் பரிமா, மிக்க வேகம் காட்டி விரைவது, உலைவிலா வாயு வேகம் ஓங்கும் வெம்பரி (21:5) என்றும், மனவேகம் மீக்கொள் வாம்பரி (1:81) என்றும் கூறப் பெறுகிறது. மிக விரைந்து நேர்ப்படச் செல்வதனால் சர கதிப்பரி (24:14) என்றும் குறிக்கப் பெறுகிறது.*

"கான்நவில் கானம் கணையில் போகி" என்ற தொடரும் தமிழ் இலக்கியத்தில் உண்டு. "வெம்பு கானிடைப் போகின்ற வேகத்தால்,...அம்பு போன்றனன்" (கம்பன் 4280) என்ற தொடரும் இந்த சரகதிப்பரி என்ற ஆட்சியின் சிறப்பை விளக்கும்.

போர்க்களத்தே மிகுதிறன் காட்டுவது பரிமா. எனவே, வினை மாட்சிய விரைபுரவி (புறம். 16) எனவும், விறல்புகழ் மாண்ட புரவி (புறம்:63) எனவும் போற்றப் பெறுகிறது.

தரைகுழி குழிக்கும்; அடையலர் மகுடம் தகர்க்கும்; ஒண் குளம்பு உள; வடிமணிக் குரல் உள; சுழியின் பரிவு உள; மலர்த் அணிந்துள பாய் பரி (34:71) என்பார் வண்ணக் களஞ்சியப் புலவர்.

நிலம் குழியக் கொட்டிப் பரிந்தன்று என்ற தொடரும், களன் உழந்து அசைஇய மறுக் குளம்பின (புறம் 97 )என்ற தொடரும்,

வெஞ்சினங்களும் கிளம்ப, வெண்டயம் சதங்கை கொஞ்ச,
வஞ்சர் நெஞ்சகம் கலங்க, மஞ்சு உடைந்து அகம் சுருங்க,
மண்டலங்களும் தயங்க, மந்தரம் சுழன்று ஒதுங்க,
அண்ட பிண்டமும் கலங்க, அந்தரம் திரண்டு எழும்ப
அட்டதிக்கும் அட்ட வெற்பும் அப்புறப் படக் குதித்து,
வட்டமிட்டு அரைக்கணத்தில் மைப்புயல் திரட்டு அகற்றி

* புரவி வேகம் உவமை-வளி, மனம், சரம்

மற்றுஅறச் சினத்து எதிர்ந்த மக்கரை (வீரர்)ப் படத்துவைத்து
வெற்றி பெற்ற சக்ர வட்ட வெண்பரி ..*

என்ற தொடர்களும் ஒப்பிடத் தக்கன,

அலி (றலி) அவர்களின் பரிமாச் சிறப்பைக் கூறும் (1:12) பாடலும், சீறாப் புராணத்தில் அமைந்துள்ள பாடல்களும் படித்து மகிழத் தக்கன.

''பாயும் வெம்புரவிப் பஞ்ச கதிகள்'' என்று தொடங்கும் பாடல், (18:6) கால் நிலம் தோயாக் குளம்பு கொள் கலிமா என்று அதன் விரைந்து செல் இயல்பைக் காட்டுகிறது.

பரிமாவின் ஐங்கதி, சுழி இவற்றின் சிறப்பை ''அசுவ லட்சணம்'' என்ற நூலில் கண்டு தெளியலாம். பஞ்சகதி (18:6; 29:13) பற்றி திருக்குறள் பரிமேலழகர் உரை விளக்கத்தில் காண லாம். தவிர உயர்ந்த ஜாதிக் குதிரைகள் விலைமதிப்பற்றவை என்ற குறிப்பும் உண்டு (29:13).

தேர்ப்படை

பொலம் படை பொத்திய அறைவாய்ச் சகடத்து நெடுங் கொடி நிமிர்தேர் அரசனது செல்வச் செழிப்பைச் சுட்டுவது. கைச்சாபம் பற்றி நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்று போர்க்களம் புகுவது அரசர் இயல்பு. இராஜநாயக நூலிடை இத்தேர்ப்படை பற்றிய குறிப்புகள் சில உள (14:33; 18:4; 31:31; 34:69).

''கலி மணித்தேர் பொன் புயல் என நெருங்க'' (14:26) என்பார் புலவர்.

இனமுகில் முகிலொடும் எதிர்த்தபோல் தேர்ப்படைகள் பொரு தன எனக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது (11:96) ''கறங்கு மணி நெடுந்தேர்'' என்ற தொடர், (புறம்.200), தேரில் மணிகள் கட்டப் படுவதனைக் குறிக்கும்.

இத்தகைய சிறப்பினை உடையது தேர்ப்படை. பவுனவகு வதைப் படலத்தில், பவுன வகுவின் தேர்ப்படைகளைக் கதையால் புடைத்து நொறுக்கியும், காலால் எற்றிக் கடலிடை வீழ்த்தியும், பூண்ட மாவின் தலை அறுத்து, அவற்றைக் கடலில் வீசியும் களித்தன ஜின்கள் என்பார் புலவர்○(35:23, 25, 26)

* சேதுபதி விறலி விடு தூது 68-71 கண்ணிகள்
○ புறநானூறு 77,

காலாட்படை

வண்ணக் களஞ்சியப் புலவர் காட்டும் வழியில் கலி கெழு மரபின் கடலந்தானைச் சிறப்பு பற்றிப் பார்ப்போம்.

'பதாதி வாருதி என நெருங்க' (14:26) எனக் குறிக்கிறார் புலவர். ஒளிறுவாள் உயர்த்திய கையர் ஆகலின் அவர்கள் கரவாள் ஒளி மின்னல்கள் போல் விளங்கிற்று என்பார் (14:29).

''இடு சரம் ஒரு கண் புகுதினும் மறுகண் இமைத்திடா மன வலி வீரர்'' என ஈரிடங்களில் குறிப்பிடுகிறார் (14:33; 31:31). இதன் நயம் பின்னர்க் காண்போம்.

படைச் செருக்கு மிக்கு பெருநிரை விலங்கும் இவர், ஊழி பெயரினும் ஆண்மை பெயராச் சான்றோர் (வீரர்)ஆவர். மலையே இயங்கி மோதவரினும் நிலையே கலங்காதவர். போர் என்ன வீங்கும் தோளர். புலவு மணம் அறாத் வேலர். கழல் அணிந்த காலர். தோல்வி என்பதனைச் சொல்லினும் அறியாத மேலர். புறம் காட்டுவார்க்கு உயிர் கொடுத்துப் போ எனப் போக்கும் தேக்கு புகழாளர், என்று பிறிது ஒரு பாடலில் குறித்துள்ளார் (34:72).

புறப்பொருள் வெண்பா மாலை,திருக்குறள் போன்ற நூல்கள் பயிற்சியால் பெருமிதம் கொண்ட புலவர் தக்க இடங்களில் அந் நூல் கருத்துகளை அமைத்துள்ளார் என்பதும், போற்றற்குரியது.

இவையே அன்றி சுலைமான் நபி அவர்கள் திரட்டிச் சேர்த்த படைக் கலன்கள் பற்றி இரு பாடல்களில் குறித்துள்ளார்:

வைத்தபின் மழு, வேல், சூலம், வல்லயம், தோ
மரம், கவண், சுழல், குணில், கதைகளி
தைத்து அகல்பகழி, கரசரம், நேமி,
தனு, உடைவாள், வசி, கோணம்,
கைத்தகு பரிசை, கலை இரு மருப்பு, ஆ
யுதம், கவசம், கணை, தூணி
இத்தொகை அனந்தம் படைக்கலம் தேடி
இருத்தினர் தமது அரண்மனையில். (14:32)

தோமரம், பிண்டிபாலம், சுரிகை, அத்திரம், கோதண்டம்,
நாமவேல், சூலம், நேமி, நாந்தகம், பரிசை, வள்ளி,
காமரு சிரகம், சிரா, கவண் முதல் படைகள் ஏந்தி
மாமணிப் புயங்கள் விம்ம மங்குலில் வாவி சூழ்ந்தார். (24:8)

இப்பட்டியல் பிறிதொரு பாடலிலும் உள்ளது (35:10),

சுலைமான் நபி அவர்கள் தம் (தா)மரை மலர்ப்பதத்தில் மணி முடி அழுந்த வணங்கிலா அரசரை நெடுவாட்கு இரை கொடுத்தார். உலகில் எதிர் ஒருவரும் அற்றுக் கோன் முறை புரிந்தார். (14:35)

எழுவான் முதல் படுவான் வரை உள்ள தலங்கள் எவை யினும் புகுந்து அவற்றைத் தமது ஆக்கினார். இவரது கட்டெழில் சேனை நூறு நூறு காவத வழிக் கணக்கு என்பர். (17:77)

மகறிபு தேய மன்னற்கும் பவுனவகுக்கும் இவர் அனுப்பிய தூது வாசகம் பற்றி முன்னர்க்கண்டோம். அவ்விருவரும் இவர் கருத்தினை ஏலார் ஆகினர்.

மகறிபு தேய மன்னன் உரைத்த வாசகம் முன்னர்க் கூறப் பெற்றது. பவுனவகு போர்மேற் கொண்டான்.

மூண்டபோரில் சுலைமான் நபி அவர்கள் படையில் முடலை யாக்கை முழுவலி ஜின்கள் இருந்தமையால், எளிதில் வென்றி மேவினார்.

கடைக்கண் கனல் உக, மறம் கிளர் மனத்தன் மகறிபு தேய மன்னவன், தன் படைத்தளத்தரை நோக்கி "மூண்டெழு போரில், முரணியோர் படையை முருக்கி, நீர் மாய்த்தல் வேண்டும். என் நேத்திரம் குளிர யான்காண வேண்டும்" என்று கூறினான். (24:12)

வெகு விரைவில் போர் முடிந்தது. ஒரு நாழிகைப் பொழுதில் ஓய்ந்தது. சோரிப் பிரளயம் எழுந்தது. அவ்வெள்ளம், சிதைந்த தேர், துணிபடு யானைகள், குறை உடலப்பரிகள் முதலியன சுமந்து, கீழ்ப்பால் விரிகடல் புகுந்தது. களத்திடை காக்கையும் கழுகும், பேயும், நரியும் கூடின என்பார் புலவர் (24:19)

வீர உரை விளம்பிய அவ் விறல் வேந்தர் இருவரும் பொருது களத்து அவிந்தனரே அன்றிப் புறம் கொடுத்திலர் (24:18;35:41)

ஜின்கள் வெறிமிகுத்து விளையாட்டாய் அமர் ஆடல் விரைந்து செய்து, வெற்றிமேவின. இவற்றின் செயல்,இலங்கையில் பேருருக் கொண்டு அசோகவனத்தில் அநுமன் ஆற்றிய அரும் போரோடு ஒக்கும்.

பவுனவகுவின் வீரர்கள் பரிய உடல் ஜின்கள் கண்டு வெருவிலர். முறையொடு சமரம் செய்து முடித்தனர் ஆவி (35:28) என்பார் புலவர்.

துணிபட்ட தலை சிதற, முண்டம் நாலடி நடத்தலும், குறை உடலம் கூத்திடலும், பேய்கள் குரவை நிகழ்த்தலும் களத்தில் நிகழ்ந்தன.

கண்ணில் வாளிதைத்தும், குடல், வயிறு பொதுத்த வாளியால் சரிந்தும், ஒரு கை, ஒரு கால் இழந்தும், வீரம் இழவா ஒருவன், அற்ற கால், அற்ற கை கைக்கொண்டு அடித்து அடர்த்தான் என்று புலவர் குறிப்பது (35:30) கும்பகர்ணன் வதைப் படலம் நினைவு ஊட்டும்.

உடல் அனைத்தும் தைத்த அம்புகளால், சுழற்காய் முள்ளாய் ஒரு வீரன் விளங்கினான் என்பார் (35:32). இது, முள்ளம் பன்றித் தோற்றத்தை நினைவுறுத்தும் என்பார் பிறிது ஒரு புலவர்.

நுரை கொளும் நதிபோல் குருதி பெருகிட, கூளியும், காளியும், அலகையும், பூதமும், நரிகளொடு, உவணம், ஞமலி (நாய்), கொடி (காகம்) திரண்டன அக்களத்தே என்பார் (35:42,49).

இவ்வாறு பேயும், பிறவும், பிறங்கு அழுவத்துக் குழுமலும், ஊன்தடி உண்ணலும் குறிப்பது தமிழ் நூல் மரபு. மரபு வழாமை வேண்டி, இதனை வண்ணக் களஞ்சியப் புலவர் கூறியுள்ளார்.

ஓரிடத்தில் சரிந்து தொங்கும் தன் குடலைக் காகம் பற்றிப் பறக்க முனையக் கண்ட ஒருவன், அதன் கால்களைக் கைகளால் பற்ற முயல்வதாகக் காட்டுகிறார் (35:39).

இவ்வாறு கூறியதோடு அமையாமல், புறத்திணைக் கூறுகளை ஒரே பாட்டில் அமைத்து மகிழ்ந்து, மகிழ்விக்கிறார்:

சாம் நகரிலிருந்து எழும் அளவும் வஞ்சி
வந்து எதிர் ஊன்றிப் பொரத்தகும் அளவும் காஞ்சி
இம்மலர் புனைந்த புயத்தர் பின் புனைந்தது தும்பை
அதன் பின் வேய்ந்தது வாகை

என்று கூறி, தூரியம், கோடுகள், குழல்கள் முழங்க திருத்தகு நகருட் புகுந்தனர் சுலைமான் நபி படையினர் என்று கூறி முடிக்கிறார் (35:56).

காதல் (காமம்)

''சுவை பல என்று கூறுவார் கூறுக. யாம் கூறுவது இன்பச் சுவை ஒன்றனையே என்று வட நூலுட் போசராசன் குறித்தான்

என்பர். காதல் இன்பம் என்பது ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலன் நுகர்தற் சிறப்புடைய காம இன்பமே என்ப''[1]

காமம் அணங்கும் பிணியும் அன்றே. யானை குளகு மென்று ஆள் மதம் போல பாணியும் உடைத்து காணுநர்ப் பெறினே (குறுந். 136) என்பது குறுந்தொகைப் பாடல்.

காமம் இயல்பாகவே ஒருவரிடம் இருந்து, உரிய காலத்தில் வெளிப்படும் என்பது இதன் பொருள்.

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு (குறள் 1088)

என்று தற்புலந்தான் ஒரு வீரன்.

''...பெருந்தோட் குறு மகள் நீர் ஓரன்ன சாயல்
தீ ஓரன்ன என் உரன் அவித்தன்றே (குறு. 95)

என்று ஒரு தலைவன் வருந்தினான்.

இவ்வாறு போர்க்குணம் மிக்காரையும், பொறை அறிவினரையும் ஆட்டி அலக்கழிக்கும் மிகுதிறல் சான்றது காமம்.

எனவே அனைத்தையும் அழிக்க வல்ல தீயை இதற்கு உவமை கூறுவர்.

கண் தர வந்த காம ஒள்ளெரி[2] என்றும், நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்தீ[3] என்றும் இக்காமத்தை தச்சிறப்பிப்பர்.

பனிமலை ஒளித்தாலும், பாற்கடல் குளித்தாலும், துனிதரத் தொடர்ந்து சென்று சுடும் அன்றோ விரகத்தீயே என்பார் வண்ணக் களஞ்சியப் புலவர் (25:53).

சுலைமான் நபி அவர்கள் அழகு எனப்படுவது ஒரு வழித் தொக்கன என்பது போல் அமைந்த ஜமால் கண்டு, மயற்கடல் படர்வதில் அழுந்தினார்; பயப்பய உணர்வாம் பலகை வந்து அது பற்றி மிதந்தார் என்ப (40:52).

பின் ''மயல் எனும் கொடிய வடவையைத் தெளிவு எனும் பெருகு புனல் கொடு முழுவதும் அற அவித்தார்'' என்பார் . (40:68)

கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெறாது உணர்வு ஒன்றிடும் இடங்கள் பற்றி இராஜநாயகக் காப்பியத்தில் குறிப்புகள் உண்டு (25:25;29:39;33:26)

---

1. திருக்குறள்—பரிமேலழகர் உரை—காமத்துப்பால்
2. குறுந்: 305; 3. குறள்: 1104

யூசறுகு-உமையிறத்;சுலைமான் நபி-பல்கீசு கண்கள் உண்டன பேச்சு நிகழ்ந்தில. ஆனால் மகறிபு தேய மன்னன் மகன் கண்டு களி கூர்ந்து பல படியாய்ப் பாராட்டினான் என்பார் புலவர்.

யூசறுகு-உமையிறத் காதல் நாடகம் சில பாடல்கள் அளவில் நடைபெற, காதல் சுவை நனி சொட்டச் சொட்ட பாடப்பெற்ற படலங்கள் இரண்டு ஆகும்.

கனவு கண்டு மணம் செய்த படலம் கைக்கிளைக் காதல் எனினும், மணம் முடித்தபின் கணவற் பிரிவிற்குப் பெரிதும் பேதுறும் அப்பெண்ணின் அவலத்தைச் சித்தரிப்பதன் வாயிலாய் அவளது ஊன்றிய அன்பை உரைக்கின்றார்.

ஆனை இறாஞ்சியின் வளர்ப்பு மகளும், மகறிபு தேய மன்னன் மகனும் காதல் வயப் பட்டுத் துடிப்பதனையும், அவர்கள் காதல் கை கூடாதபடி இடர்ப்பாடுகள் நிகழ்வதனையும், விதி எனும் பாங்கி (25:55) துணை நிற்க மணம் கூடியதனையும் விவரமாகப் புலவர் பாடுகிறார்.

பல்கீசு, சுலைமான் நபி இவர்க்கிடையே காதல் அரும்பிற்றேனும் அது நீடு நினைந்து புலம்பல், வாடிச் சோர்தல் என்ற மெய்ப்பாடுகளை நிகழ்த்தவில்லை. பெருமிதம் தோன்றவே அமைந்துள்ளது.

மனோன்மணீய நாடகத் தலைவன் புருடோத்தமன் போலவே கனவில் கண்ட காரிகையை நனவில் வந்த நங்கை எனவே உறுதியாய் நம்புகிறான் சுலுத்தான் மகன். ''கண்டதே காண்பது அல்லால் காண்கிலாப் பொருள் யார் காண்பார்?'' அவனது திடமுடிவு இது (9:18).

> புவி நடை பயிலும் பூங்கொடிமாதே!
> விண் அரம்பையரை விலைகொள் அரசி!
> ஒருரு மேவிய, உவரியிற் பிறவா அமிழ்தே!
> ஏழிசையின் பெரும் பயனே!
> மாற்றறியாச் செழும் பொன்னே!
> மறையாத மின்னே! அழகின் உள் உயிரே!
> பேசும் பொற் சித்திரமே!
> சதகோடி மின்சேவிக்கும் மின்னரசீ!
> காமக் கடல் கடக்கும் அருமருந்தே!
> கண் வழி நுழையும் கள்வீ

என்றெல்லாம் பாராட்டுகிறான்.

கனவில் கண்ட காரிகை கண் எதிர் நில்லாமை கண்டான். "எங்கு ஒளித்தாள் அவள்" என்று எண்ணினானே அன்றிக் கன வெனத் தெளிகிலான்.

மிகு காம மயக்கினர்க்கு "எங்கெங்கு காணினும் அவள் உருவமே" தென்படும் என்பர்.

அவள் உருவெளித் தோற்றம் காண்பான். அங்கு செல்வான். அணைக்கத் துடிப்பான். தழுவ முயல்வான், முழவுத் தோளான் (9.14)

கரத்தில் தட்டாத உள்(ளத்து) மயில் உருவை நோக்குவான். ரூபமாக எவர்க்கும் கிட்டாத விஞ்சை எங்கு கற்றனை? என்பான் (9:15)

இவ்வாறு மனமயக்கினர் உருவெளித் தோற்றம் காண்பதும், உண்மை என்று நம்புவதும், ஓடுவதும், தழுவுவதும், வெறுமையாய் இருப்பது கண்டு சலிப்பதும் இயல்பு. அவர்க்கு அது வேதனை.

கம்பனும் தன் காப்பியத்தில் உருவெளித் தோற்றம் பற்றிக் குறிப்பிடுகிறான் (கம்பன் 619—626). பிராட்டியை மணக்கு முன் உருவெளித்தோற்றத்தால் உள்நைந்த சுந்தரவில்லி, பிராட்டி பிரிந்த பின் வனத்திடை வாடு(மு)ம் பொழுதும் உருவெளித் தோற்றம் கண்டு நைகிறான்:

> "கருங்குழல், சேயரிக் கண்ணி, கற்பினோர்க்கு
> அருங்கலம், மருங்கு வந்து இருப்ப, ஆசையால்
> ஒருங்கு உறத் தழுவுவேன்; ஒன்றும் காண்கிலென்;
> மருங்குல் போல் ஆனதோ வடிவும், மெல்லவே?

என்று கூறி வருந்துவான். (கம்பன்3637)

சுலுத்தான் மகன் கனவில் கண்ட காரிகையைக் கண்டே தீர்வேன் என்ற திடமுடிவினனாய் நகர் நீத்தான்.

காமம் காழ்க் கொள, கருங்கை வாரணம் திரிதரு காடும், புனமும், கனல் தெறு பாலையும், கொடுவரி உலவும் குறிஞ்சியும், வேறுள நிலங்களும் பன்னிரு ஆண்டுகள் திரிந்தான் என்பார் புலவர் (9:38).

நினைத்த நேரிழையை மணம் முடித்தான்; நகர் திரும்பினான்.

ஆறலை கள்வனால் அவள் பிரிந்தான்; பேதுற்றான்.

பின் பிரிந்தவர் கூடினர். பேசவும் செய்கிலர் புல்லிக் கிடந் தனர். விண்மாரி என கண்மாரி பொழிந்து புலம்பினாள் (9:91).

கள்ளன் கையில் காரிகையை ஒப்புவித்து, கொண்டானைக் கொலை குறித்து, கொற்றவன் ஆணை பிறப்பித்தான் (9:106).

அது பொறாத அரிவை, அல்லற்பட்டு ஆற்றாது அழுது புலம் பினாள். அவள் புலம்புவது கன்மனம் கரைக்க வல்லது (9:108-112).

ஊன்றிய அன்பின் உரம் கண்டு மகிழ்கிறோம்.

அடுத்து,

இருவர் மோகப் படலத்துக் காட்சிகள் சில காணலாம்.

நேரிழை ஒருத்தி நீழல் நீரிடைக் கண்டு, தன்னந்தனி நின்ற அரசமகன், கொண்டகாம உணர்வினைப் புலவர்,

உணர்வு அற மயங்கினன்; நெஞ்சுநிலை வீழ்ந்தனன்;
வெந்துயர் சூழ்ந்தனன்; பதைத்தனன்; துடித்தனன்.
(காமத்து) ஆழ் உடம்பு படும் பாடு ஆர் சொல்வார்?
என்று வினவி வருந்துகிறார் (25:17)

பின் பலவாறு கருதி, அவள் முகம் எதிர்ந்து நோக்கினான்.

உள்நயப் போடு உரை சில மேவுவான்; விளங்கிழை நோக்கி வினவுவான் என்பார் (25:25).

கட்டெழில் கண்கதுவ, காமம் மிக்க காளையர், காரிகையரை தம் வயப்படுத்த, நய உரை நவில்வர். பல் அலங்காரம் செறிய, சொல் அலங்காரம் செய்வர்; கவிஞனாகவே ஆகிவிடுவர்; அழ கினைப் பெரிதும் புகழ்வர். இவ்வியல்பு காலத்தால் அழியாத நீடிய மரபு.

இவ்வாறு நலம் பாராட்டலை இளங்கோ அடிகள் "உலவாக் கட்டுரை பல பாராட்டல்" என்பார் (2:81)

பொன்னுலக அரம்பையே!
பூவுலகப் புதுமை பார்க்க வந்தவளே!
பெண்கள் மயங்கும் பேரெழிலினளே!
மென் நடை அனமே!
உன் மலர்ப்பாதம் மருவ இம்மலை செய்த தவம் யாதோ?

மனக் கடல் வங்கமே!
கனக் கருங் குழலே!
என் புண்ணியம் திரண்ட பூரண வடிவே!

ஓவியத்து அமையா இயங்கியல்பினளே!
மெய்த்தகவினளே! பொய்த்த இடையாளே!
சுணு இல்லாக் கரும்பே!
முத்து வடம் சேர் முகிழ்முலையே!
பஞ்சரக் கிளியே! செஞ்சரவிழியே!
பல்மலர் பூத்த ஒரு பூங்கொடியே!

என்றெல்லாம் பாராட்டினான் (25:26-30).

கேட்டுக் கிளர் சிந்தையள், எருத்தம் கோட்டி நின்றாள். மெல்லிதழ் விரிய தன் வரலாறு கூறினாள் (25:31).

நயப்படு உரை கூறி நங்கை மனம் கவர்ந்து, மோகத்தைத் தூண்டினன்.

அவள், அவன் மின் மணிப் பொன் புயமும், தன் முலையும் நோக்கி மெய் பூரித்து விண்டாள் என்பார் புலவர் (25:34).

''மார்பில் உள்ளுறத் திளைக்கல் ஆகும் ஆகில்''
என்று மனம் பூரித்த நிலை இது. (கம்பன் 715)

திடப்படு உளத்தனாய், ''தந்திரம் மொழிவேன் அவ்வகை புரிக'' (25:36) என்றான். அவளும் மனம் அது பொருந்தினள்.

கதிரவன் மறைந்தான். கனை இருள் பரந்தது. ஒரு கணம் ஊழி ஆனது. இருவரும் கண் பொருந்திலர்; பாயல் மேவிலர்; பருவரல் உற்றனர்; புல்லாதார், வல்லே புலர்கு என வேண்டினர்.

ஆவி சோர்ந்தது; அணி துகில் சோர்ந்தது; இணை விழிக் காவி சோர்ந்தது; கலனும் சோர்ந்தது; கைவளை சோர்ந்தது; கருத்தும் சோர்ந்தது என்று குறிப்பார் புலவர் (25:40-43).

''புள் உறங்கும்; பூ உறங்கும்; யாவும் உறங்கும்; ஓர் யான் மன்ற உறங்காதேனே'' என்று அவள் வாடினாள்.

அதனைப் புலவர் ''தன் துணை மனமும் தானுமாய்த் தனித்துத் தளர்ந்தனள் ஒசிந்த சிற்றிடையாள்'' என்பார் (25:40).

இக்கருத்தையே சீதையை நினைத்துக் கிடந்த நீல வண்ணன், இருள் கனிந்த கனி போல்பவன்,

''கங்குலும், திங்களும், தனியும், தானும் அத்தையலும் ஆயினான்'' என்பான் கம்பன் (618).

காமத்தைக் கொல்லனாக்கி, ஆயிழையைப் பொன்னாக்கிப் புலவர் படைக்கும் உருவகம் போற்றற்குரியது (25:41).

மலை—உலை; காற்று—துருத்தி; நிலவு—பதர்;
மனம்—நெருப்பு; பனி—புகை; கங்குல்—கரி;
காமம்—கொல்லன்; ஆயிழை—பொன்.

பருங்கிரி உலையாய் காற்றே துருத்தியாய் பதர் நிலவாய்
நெருங்கிய மனம் நெருப்பாய் நிறைபனி புகையாய் கங்குல்
அருங்குடை கரியாய் இந்த ஆயிழையே பொன் ஆக
ஒருங்கு உரு காமக் கொல்லன் உருக்கலால் உருகினாளே

தலைவியைத் தலைவன் மாட்டு இடந்தலைப் படுத்துவதும், பின்னர் அவனைக் காணாவகைத் தடுப்பதும்தோழியே. இதனைக் குறித்து வண்ணக் களஞ்சியப் புலவர், "மேவி ஆங்கு அணைவதே போல் வேந்தனை விழியில் சாட்டி, கூவி நேர்ந்து எழுப்பித் துன்பம் கொடுத்தனள் கனவாம் பாங்கி" என்பார் (25:43).

இவள் உடல் பற்றிய காமத் தீ, நெடிய கரங்களால் தழுவி, தடமுலை மிசை அணைத்துக் கிடக்கும் தாய்ப்பறவை இறகு பற்றியது எனவும், வேற்கண் உகுத்த மழையால் அது அவிந்தது எனவும் குறிப்பார் (25:46).

விட்ட பெருமூச்சு வெப்பினால் புலர்ந்து, விழிபெருக்கிய அப்பினால் நனைந்து, ஒரு நிலை உறாத துகில் உடையாள் சீதை என்பானே கம்பன் (5076), அப்பாடல் இங்கே ஒப்பு நோக்கத் தக்கது.

கண் படை பெறாது, காமம் உடற்றக்கிடக்கும் காரிகை துயர் கதிர்கால் நிலவாலும், கல்லென் முழக்கக் கனைகடலாலும், பன் மடங்கு பெருகியது என்பார். (25:49)

கடல் ஒலி கோடிமடங்காகப் பெருகியமைக்குக் காரணம் "விரிகதிர் மதியம், தென்றல் வீசிய வெம்மை தன்னைத் திரை கடல் பொறுக்கல் ஆற்றாமையே" என்பார்; "குளு குளு (கொதி நிலை) கொதித்தது" என்பார். (25:49)

"யாரணங்குற்றனை கடலே! (என்போல் துணைவன் பிரிந்தாயோ?) நள்ளென் கங்குலும் கேட்கும் நின் குரலே?" என்று குறுந்தொகைப் பாடல் (163)குறிப்பிடும்.

நீண்ட நெட்டிரா விடியாதோ? செங்கதிரோன் இறந்தானோ அளவறு காலம் கங்குல் அரசுறைநாள் அமைந்ததோ? எனப் புலம்புவாள். (25:48)

இவ்வாறு விடியா இரவைக் குறித்து ஒரு தலைவி "கோழி குரல் அடைத்துப் போயிற்றோ? ஆழியோன் தேர் அச்சு முறிந்ததோ? தேர்க்காலும் பரிக்காலும் உடைந்து போயின வோ?" என்றெல்லாம் வினவுவாள்.

துடியிடை விழி முன் காளை உருவெளி தோன்றியது. "கூட்டின் புறத்தே ஒளிக" எனக் கைச்சாடை காட்டினாள். வடிவுரு மறைந்தது; மகிழ்ந்தாள் என்பார் புலவர். (25:50)

அவனும் அங்கே அவ்வாறே அழகியின் உருவெளித் தோற்றம் கண்டு புல்க எய்தினான். மறைந்தது உருவம். "எங்கு மறைந்தாள் இவள்? மலையிலா, வங்கத்திலா? என் மனத்திலா? வாரி மின்னார் (நீரரமகள்) நிலையிலா?" என்று நினைத்தான். (25:54)

"நீண்ட மதர் விழியால், வெவ்விடம் ஊட்டிய நொவ்விடைக் குயிலே! எவ்விடை மறைந்தாய்? நான் மாயா வகை இதழ் எனும் உயிர்ச் சஞ்சீவி மருந்து தாராயோ? உம், என் செய? விதி எனும் பாங்கியின் சித்தம் யாதோ"?என்றெல்லாம் எண்ணி மெலிந்தான். (25:55)

"ஏடீ! நீ கொண்டு போன என் அறிவைத் தந்து போ" என்றான். 'என் அறிவை அவள் எங்கு கொண்டு அமைத்தாள்? கொங்கை முகையிலா? கொடி இடையிலா? முல்லை நகையிலா? எவ்வகையில் அவளை மேவி, மீட்டும் என் அறிவை வாங்குவேன்?" என்று புலம்புகிறான். (25:56)

"கங்குல் வெள்ளம் கடலினும்பெரிது". அக்கங்குல் பொழுதும் கண் துயிலாது, ளபவான் மூலையை நெஞ்சில் கருதிய துயர வெள்ளம் அளவறப் பெருகிட, இவ்வாறு இளவலும் அயர்ந்தான்; பொழுதும் புலர்ந்தது என்று புலவர் கூறுவார். (25:60)

புள், பொள் எனப் பறந்துபோன பின் மீட்டும் இருவரும் கண் கலந்தனர். "ஆங்கு அவள் அகம் இவன்பால் இவன் அகம் அவள் பால் எய்தி தேங்கி உட்பிரமை மீறி திகைத்து வாய் திறந்திலர்" என்று புலவர் கூறுவது (26:11). "இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்" என்னும் கம்பன் (516) பாடல் தொடர் உடன் ஒப்பிட்டு நயம் காணற்கு உரியது.

ஒரு வழிக் கூடற்கு உபாயம் நாடினர். அவன் உரைத்த சொல் அமுதம் என மாந்தி. அவ்வாறே செயற்பட்டாள். அத்திருவினுக்குப் பதினேழு வயதும் ஆறுமாதமும் ஏழு நாளும் சென்றது. பின் இருவரும் கூடிச் சனாச் செய்தனர்; விதிப்படி மருவினர்.

பின் நிகழ்ந்தன கதைச் சுருக்கத்தில் கண்டோம்.

மண் கொண்ட மன்னன் மகனும், எண் கொண்ட பேரெழிலாளும் ஒருங்கு இருந்த காட்சி 'கதிர் ஒருங்கு இருந்த காட்சிபோல' என்பார் புலவர்.

இக்கருத்து சிலம்பை அடி ஒற்றியது. (சிலம்பு 2.32)

ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையர் ஆடவர் என்பதாலும் திங்கள் அன்ன தண்பெருஞ்சாயலார் தையலார் என்பதாலும் வதுவை கூடியார் ஒருங்கு இருப்பதனைக் 'கதிர் ஒருங்கு இருந்த காட்சி' என்பார்.

ஆனை இறாஞ்சியின் அரும்பெறல் வளர்ப்பு மகள், "நெருங்கிய இருளைவிட்டு ஓர் நிறைமதி அனந்தம் கோடி விரிந்து ஒளிர் கதிர்கள் வீசி உதித்தல் போல் விளங்கி நின்றாள்." (28:25)

"மங்குலின் இருந்தே உதித்து எழும் பருதி ஒப்பாய் ஒங்கலம் புயத்தான் வந்தான்". (28:28)

இவ்வாறே, யூசறுகு, உமையிறத்—ஒருங்கு இருந் தகாட்சி கண்டவர், "கதிர், மதி இரண்டும் ஒன்றாய்க் கலந்திருப் 'துவே" என வியந்தார் என்பார் புலவர். (29:56)

"சரத பூரண மதியை, பல்கீசு எனும் தவத்தை, இருபதிக் கதிர்ப் பொருள் நபியிடத்து இருத்தினரே." (34:139)

"அதிகசோதி வெய்யோனோடு, மதி அமைவதுபோல்...... எதிரிலா ஒரு தனிக்குடை நபியிடத்து இருந்தார்." மகிழ்வு தழைக்கப் பூரணப் பொருத்த—நிக்காகு செய்தனர், என்பார். (34:140,41)

பல்கீசு வரலாற்றுப் படலத்தில் உமையிறத் எனும் மின்னாள், சபாநாடு மணியான யூசறுகு கண்டாள்.

"கண்ட கண் வழியே அன்னோன் கவின் நடந்தது. அகத்துள் புக்கது. ஒண்டொடி மனத்தை உண்டது. அவ்வுறையிடத்துள் தான் உற்றது. பாசம் மிகுவித்தது. ஆசை விளைத்தது. எனவே அவள் மயங்கி வீழ்ந்தாள்." (29:39)

"நெடுங்கால் உறு கண் வழிப் புகுந்த காதல் நோய், பால் உறு பிரை எனப் பரந்தது" என்ற கம்பன் வாசகம் (520) இங்கு கருத்தில் கொள்ளத்தக்கது.

யூசுறுகு, அடுத்துறைபவரால் அவள் யார் என அறிந்தான். அவளும் தன் இகுளையாரால் அவன் பற்றிய செய்தி அனைத்தும் தெரிந்து கொண்டாள்.

''இவற்கே மாலை புனைவேன் வென்றி பெற்றிடு தோள் வீரன் யூசுறுகு எனும் மிக்கோனே இன்றி யான் பொருந்தேன்'' என்ற திடமுடிவுடன் அவள் இருந்தாள். (29:45)

அன்னத்தை தமயந்திபால் தூது அனுப்பிய பின்,''இவ்வளவில் செல்லும் கொல்! இவ்வளவில் காணும் கொல்! இவ்வளவில் காதல் இயம்பும் கொல்!'' என்று ஏங்கிக் கிடந்த நளன்போலவே, நுண்ணிய நூலினோனும் ''நுவலறு நெடுநாள் செய்த புண்ணியம் பலிப்பது என்றோ? அவளிடம் புகுந்த வீரம் நண்ணி அங்கு அடைவது என்றோ? நறும் பன்னீர் குளிர்வது என்றோ?'' என்று எண்ணி, இடுங்கு, இடைக்கு இடைந்தான். (29:46)

எண்ணியபடியே விதியும் வாய்த்தது. மணம் முடித்தனர். உடலிரண்டு. உயிர் ஒன்றாய் வாழ்ந்து உறைந்தனர் என்று கூறுவார் புலவர். (29:61)

பல்கீசு, சுலைமான் பற்றிய செய்திகளைப் பார்ப்போம்.

உதகம் தேடி வரச்சென்ற ஒண் சிறை நெடுஞ்சிகைப்புள், தான் எமன் நாட்டு அலர்ப்பொழில் கண்டு, அதில் புனல் கண்டு உவகை கொண்டதும்,அங்கொரு புள் கண்டதும்,பல்கீசு கண்டதும் நவின்றது.

எகுபீறு (குது குது), நபி உளம் மகிழ்வார் என்று எண்ணியது. எமன் நாட்டு வளம் காணத் துணைபுரிந்த இன்பின் (பல்கீசு நாட்டுப்புள்) ''நாரியின் அழகு முழுவதும் நீ நோக்கி நபி உழைப்புகுந்து இயம்பிடுகில் சீரிய மகிழ்ச்சி அடைவர்'' என்று கூறியதனை உட்கொண்டு, அவள் அழகு அனைத்தும் எகுபீறு நவின்றிருக்கக் கூடும்.

அனைத்தும் செவிமடுத்தார். காதல் உற்றிலர். இகழ்ந்திலர். பாவைக்குப் பத்திரம் போக்கினார். ''வழு அற நமக்கும் ஆதிக்கும் வழியாய் வருக இசுலாத்தில்'' என்ற, அவ்வாசகம் வரைந்த ஏட்டினைக் கொண்ட எகுபீறு அத்திரு அறியா வகை.அவள் பஞ்சணை சார்ந்து, காறை எலும்பில் வைத்து அகன்று, வேறு இடத்து ஒளித்து, பின் நிகழ்ந்தன கண்டு, தெளிந்து, நபிபால் மீண்டு, விளம்பியது.

பின் நடந்தன கதைச் சுருக்கப் பகுதியில் கண்டோம்.

''கமழ்மலர் அணியல் புனை கல்யாணம் புரியவேண்டுதும்'' என நபிஅவர்கள் நினைந்ததும், ஜின்கள் ஆலோசனை கேட்டதும், அவற்றின் சூழ்ச்சியும் பின் நிகழ்ந்தனவும் அறிவோம்.

பல்கீசு, சுலைமான் நபி சந்திப்பு மிக அற்புதமான படைப்பு.

அரிவையைப் பார்த்து, ''இவ்வகைத் தவிசோ உனது?'' என வினவினார். அவளும் வியப்பு வெளிக்காட்டாது, ''ஓதிடில் அதுவும் இதுவும் நிகர்ஆம்,'' என சமத்காரமாகப் பதில் இறுத்தாள். அவளைக் காணாதவாறு முகம் திருப்பிக் கொண்டார்.

''ஏன் இத்திருப்பம்?'' என அவள் வினவ,

''புருடர் பெண்களைப் பார்த்தவாறு இருந்திடல் பழுது'' என்றார்.

''யான் குமரன்; ஏந்திழை அன்று'' என்றாள்.

'ஒருங்கு பெண் என இங்கு உணர்த்துவன்' என நெஞ்சு உருகி, நோக்கினர் உறுக்கி மலர் விழியால்.

கண்ணின் காந்தப் பார்வையின் திறம்தான் கூறுவது எளிதோ?

வாழும் நல்லருள் சேர் விழிகளால் உறுக்கி நோக்கினார். மான் அணிந்திருந்த ஆடவர் ஆடைகள் தெறித்தன. உள் இருந்த இணைமணி மலைகளும் தோன்றின.

நங்கை தன்னை அறிந்தாள்; வெட்கம் சூழ்ந்தது; தலைப் பட்டாள். தலைவன் நெஞ்சில்; தாழ்ந்தன விழிகள்; ஒதுங்கினள் ஒருபால், என்று புலவர் இந்நிகழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுவார்.

''தணப்பரும் தானையுடன் அமர்மேற்கொண்டு, வென்றியே மேவி, வடபுலம் புக்க தடாதகைப் பிராட்டி (ஆடவர் கஞ்சுகம் அணிந்து) கைலை மலைச்சாரல் சார்ந்தாள்.

போரிடப் போந்த பொலன் கொடி முன்னர், பொன்னார் மேனியன் பொருந்தத் தோன்றினான். நெஞ்சுருகி மலர் விழியால் நோக்கினான்.

தடாதகைப் பிராட்டி, நாண்மிகுந்தாள். காற்பெருவிரல்நிலம் கிளைத்து நின்றாள்,'' என்று பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணம் கூறும்.

இவ்விரண்டும் ஒப்பிட்டு மகிழ்தற்கு உரியன.

சுலைமான் நபி ஜமுசத்து திருமணம் அநுதாப அடிப்படையில் நிகழ்ந்தது.

விதியின் வன்கரங்களில் சிக்குண்டு முதிர் புலால் கமழ் வலையினர் பெண்ணை மணந்தார். இறையருள்கூட, அவள் பொன் இருந்துஒளிரும் சுவனமங்கையர் போல், புனிதசுந்தரம் மிகுந்ததும் கண்டார்.

''விண்ணவர் பதி நீங்கித் தரையில் வந்ததுபோல் உதித்தவள் ஜமால்.'' (40:46)

''சுடர்விடு நெடுவாள் கரியகண் கனிந்த துவர் இதழ்க்கவின் நலன் நோக்கிய மடல் அவிழ் கமல மலர்ப்பத நபி, தம் மனம் முதற்கரணம் ஓர் நான்கும், உடலமும், உபய நயனமும்,நிறைவாய் ஓங்கி, அம்மயற்கடல் பெருகிப் படர்வதில் அழுந்திப் பயப்பய உணர்வாம் பலகை வந்த அது பற்றி மிதந்தார்'' என்பார். (40:52)

இவ்வாறு நெறியின் புறஞ் செலாது காதற்சுவை பற்றிக்கூறிய வண்ணக் களஞ்சியப் புலவர் திறம் நீடுநினைந்து போற்றற்குரியது.

## 5 (அ)வண்ணக் களஞ்சியப் புலவரும் வள்ளுவரும்

வள்ளுவருடைய குறள் கருத்துக்களை எடுத்து ஆளாத புலவர்களே இல்லை என்று சொல்லிவிடலாம். காரணம் என்ன என்றால், மனித இனத்தினுடைய வாழ்வு, உணர்வு, அறம் ஆகிய அனைத்தின் அடித்தளத்தை ஆழமாகப் பற்றிக் கொண்டு அவற்றின் மேல் தம்முடைய குறள் அறத்தை வள்ளுவர் பாடியது தான்.

இதன் காரணம் ஆக எந்தச் சூழ்நிலைக்கும், எந்த உணர்ச்சிப் போராட்டத்திற்கும், எந்த அற வாழ்விற்கும், பொதுவாக வள்ளுவத்திலிருந்து ஒரு வழி முறையைக் காணமுடியும்.

எத்தனையோ மாறுதல்கள் தோன்றிவிட்ட இந்தக் காலத்திலும் கூட ஒரு சில குறள் பாக்கள் தவிர, பிற அனைத்தும் இன்றைய வாழ்க்கைக்கும் பொருந்துவதாக அமைந்திருப்பதே வள்ளுவரின் ஒப்பற்ற பேரறிவிற்குச் சான்று ஆகும்.

மற்றைய புலவர்கள் வள்ளுவத்தை எடுத்து ஆண்டிருப்பது போல்வே வண்ணக் களஞ்சியப் புலவரும் எடுத்து ஆண்டுள்ளார்.

அவற்றுள் சில காணலாம்.

கனவு கண்டு மணம் செய்த படலத்தில் கனவில் கண்ட பெண் மேல் மோகம் கொண்டு விரகதாபத்தால் அரசிளங்குமரன் புலம்புகிறான்.

துதிக்கும் மின் அரசே! அன்னத் தூவியும் அனிச்சம் தானும்
பதித்து வைத்திடின் நெருஞ்சிப் பழம் ஒக்கும் பதம் பளிங்கில்
மிதித்திடில் பொறுக்குமோ? கண் இமைக்குமுன் வேகமாகக்
குதித்து அன்றோ நடந்து ஒளித்தாய், கொப்பளம்
கொண்டதேயோ? (9:10)

என்று புலவர் பாடுவார்.

இப்பாடலில் ஆளப்பட்டுள்ள சொற்கள் நிச்சயமாக,

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். (குறள் 1120)

என்ற குறளை நமக்கு நினைவுறுத்துகின்றன.



அவனுடைய புலம்பலைப் பிறிது ஒரு பாடலிலும் புலவர் விளக்குவார்.

ஊடுதல் காமத்து இன்பம்; அதற்கு இன்பம் ஊடல் அற்று
கூடுதல் என்பார். நீ அவ்விதம் செயக் குறித்தாய் என்னில்
கோடுஉடை முலையினோர் கால்புல்லின் மேல் குணங்கள்
வேண்டும்
வாடு நுண்ணிடையாய்! யாதை நினைந்து நீ கரந்தவாறே?
(9:13)

இப்பாடலும்,

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்
கூடி முயங்கப் பெறின். (குறள் 1330)

என்ற குறட்பாவை, அடிஒற்றி அமைந்தது என்பது தெளிவு.



இதே படலத்தில் தாவூது நபி அவர்கள் அப்பெண்ணைக் கள்வனுடைய மனைவிதான் என்று முடிவு செய்து அவனிடம் அவளை ஒப்புவித்துப் போக்கினார். அவள் அது பொறாது புலம்புவதாக

செவிக்குளே கசக்க வார்த்தை பொறுத்து
 தீங்கு அஞ்சுவோர்கள்
கவிக்கும் வெண்குடையோர் செங்கோல்
 இயற்றிடக் கடவர் அல்லால்
அவிக்கும் வெங்கொடுமைகட்கு ஓர்
 அணுவும் அஞ்சா தாவூது
நபிக்கும் இவ்வுலகை ஆள ஞாயமோ?
 தீயது அன்றோ? (9:109)

என்று புலவர் பாடுவார்.

இப்பாடலின் முதல் இரு அடிகள்,

செவி கைப்பச் சொல் பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. (குறள் : 389)

என்ற குறட்பாவின் அடித்தளத்தில் அமைந்திருப்பதனைக் காண லாம்.



அரசு நிலையிட்ட படலத்தில் கடைசி மசலாவிற்கும், தம் முடைய சகோதரரும் உலமாக்களும் ஏற்றுக்கொள்ளக் கூடிய விடையைச் சுலைமான் நபி அவர்கள் சொன்ன பிறகு, அவர் களையே தாவூது நபி அவர்களுக்குப் பிறகு மன்னனாக ஏற்றுக் கொள்ள அனைவரும் மகிழ்ச்சியுடன் சம்மதிக்கிறார்கள்.

இச் செய்தியைச் சுலைமான் நபி அவர்களுடைய தாய் நசாயிகு கேட்ட பொழுது அவருற்ற நிலையை,

ஏன்றது இச்சொல் எழில்நபி தம் மனை
தோன்று இச்சொல் முனம் தோகையர் சொல்லக் கேட்டு
ஈன்ற போதினில் எய்தும் உவப்பின்மேல்
ஊன்ற நல் உவப்பு உற்றனர் பெற்றதாய் (12:80)

என்று புலவர் குறிப்பிடுவார்.

இப்பாடல்,

ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய். (குறள் : 69)

என்ற குறட்பாவினைக் கொண்டு அமைந்தது என்று கூறவும் வேண்டுமோ?



இதே படலத்தில் இடம் பெற்றுள்ள பாடல் ஒன்று முடுகு சந்தத்தில் அமைந்துள்ளது. குறட்பாக் கருத்துக் கொள்கலம் ஆனது அது.

வெல் வெற்றியை உதவி, தவ விளைவுக்கு இடன் அருளி,
செல்வப் பொருள் வருவித்து, அணி திகழ் உத்தம சபையில்
நல்வித்தகர் புகழச் செயும், நரகப்பழி விலகும்,
கல்விப் பொருள் மகவுக்கு இணை கருதத் தகுவதுவோ?
(12:83)

என்று சுலைமான் நபி அறிவின் திறம் பாராட்டுவார்.

தன் மகவினை அவையத்து முந்தி இருப்பச் செய் ஆர்வத்துத் தந்தை, அம்மகன் பெறு புகழ் காணும் மற்றையோர் ''என்னோற்றான் இவன் தந்தை'' என்று புகலும் புகழ் மொழி எய்துவர் என்பார் திருவள்ளுவர்.

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல். (குறள் 67)

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என் நோற்றான் கொல்? எனும் சொல். (குறள் : 70)

இவ்விரு குறட்பாப் பிழிவாக இப்பாடல் அமைந்துள்ள நயம் போற்றற் குரியது.



உறுநர்த் தாங்கலும், செறுநர்த் தேய்த்தலும் கொற்றவர்கள் கொள்ளத் தக்கவை. எனவே, அரசர்கள் தம் படைத்தளப் பெருக்கத்தில் பெருகு ஆர்வத்தர் ஆவர்.

சுலைமான் நபி அவர்கள் நபிப்பட்டம் ஏற்றபின் சேனை நால் வகையும், எழுகடல்ஒருபால் செறித்தல் போல், சேவகத்து இருத்தினார்' (14:34)

அங்கு வீரர் இயல்பை விளம்பும் காலை, 'இடு சரம் ஒரு கண் புகுதினும் மறுகண் இமைத்திடா மனவலி வீரர்' (14:33)

என்று குறிப்பிடுவார். மீட்டும் 'மன்னும் ஓர் விழியில் சரம் உருவினுமே மறுவிழி இமைத்திடா வீரர்' (31:31) என்று கூறுவார்.

இக்கருத்து,

விழித்த கண் வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின்
ஒட்டு அன்றோ வன்கணவர்க்கு (குறள் 775)

என்ற குறட்பாக் கருத்தை மேலும் மெருகூட்டியது போல் அமைகிறது.

இக்குறளின் பொருள் என்ன என்றால், பகைவரைச் சினந்து ஒரு வீரனுடைய கண் நோக்கிக் கொண்டிருக்கும் பொழுது, பகைவன் ஒரு வேலை எறிவான் ஆனால், அந்த எறி வேல் கண்டு இவனுடைய கண்கள் மூடி இமைக்குமானால் அது இவனுடைய வீரத்திற்குக் களங்கம் ஆகும் என்பதே.

வண்ணக் களஞ்சியப் புலவர், இதனைச் சற்றுச் சிறப்பாகவே தம்முடைய பாடல்களில் காட்டி விடுகிறார்.

மனிதனுடைய கண்கள் இயற்கையாகவே ஒருங்கு சேர்ந்தே இமைக்கக் கூடியவை. முன்னர்க் குறிப்பிட்ட குறட்பாக் கருத்துப் படி எதிரியினுடைய வேல் உடலின் எப்பகுதி நோக்கி வந்த போதிலும் அதன் காரணம் ஆக, ஒருவனது கண்கள் இமைக்கு மானால் அவனுடைய வீரம் பங்கப் பட்டுவிடும்.

இங்கு வண்ணக் களஞ்சியப் புலவர் கூறுவது என்ன என்றால்' எதிரியினுடைய சுடு சரம் ஒரு கண்ணில் புகும்பொழுது கூட, மறு கண் இமைக்காமல் இருக்கும் மன வலிமை உடையவர்கள் இவ் வீரர்கள் என்பதாகும்.

இதில் இடம் பெற்றிருக்கும் சிறப்பு எண்ணி எண்ணி வியக்கத் தக்கது.



வானம்பாடிப் படலத்தில் பவர் போக்கு வரவு ஒழியாப் பாதையில் தன் பேடு முட்டை இட்டது கண்டு, சினந்து, வெறுத்த ஆண் பறவை, அதனிடம்,

'நனி நரர் வருதல் போதல் ஆய் நிதம் நடக்கும் பாதை
யினில் மனத் துணிவாய் முட்டை இட்டனை இனி என்
செய்வாய்? (18:13)

தளம் இதோ இங்கு நோக்கி சார்ந்தது தாளின் நுட்பத்து
அளவு அறு தவத் தால் ஈன்ற அண்டங்கள் உடைந்து தூளாய்
வளியினில் பறக்கும் (18:14)

என்று உறுவது கூறிப் பின்னர்,

'வரு முனம் காக்கிலா தம் வாழ்க்கைகள் வளர்ந்து தாவும்
எரி முனம் வைத்தவை ஆம் எனும் உரை பழுது போமோ?
(18:17)

என்று இடித்துரைத்தது என்று புலவர் பாடுவார்,

இப்பாடலில்,

வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை எரி முன்னர்
வைத்தூறு போலக் கெடும் (குறள் 435)

என்ற குறட்பா ஆளப்பட்டுள்ளமை அறியலாம்.



எறும்புகள் விருந்திடு படலத்தில், சோலையில் அமைந்த ஒரு வாவியினை வருணிக்கப் போந்த புலவர்,

இந்த வான் பொழில் மீதினில் வாவியின்இயல்போ
அந்த மேல் உலக அமுது எனும் சலம் நிறைந்து அடைந்தோர்க்கு
எந்த நாளினும் எவ்வகை உதவியும் இயற்றி
உந்து நல்லறி ஞோர்களின் செல்வம் ஒத்து உளதே (22:26)

என்று பாடுவார்.

இப்பாடல்,

ஊருணி நீர் நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு (குறள் 215)

என்ற குறட்பாவின் அடியொற்றி அமைந்ததே.



எறும்புகள் விருந்திடு படலத்தில், எறும்புகள் இட்ட விருந்தினை ஏற்று, அவ்விருந்து இட அவை எப்படி வழி செய்தன என்பதனைக் கேட்டு அறிந்த சுலைமான் நபி அவர்கள், தம்முடைய செல்வச் செருக்கு எந்த அளவிற்குத் தீமையானது என்பதனை உணர்ந்தார் என்றும்,

ஊன் என வரும் உடல் விருப்பு எவற்றையும் ஒதுக்கி
யான் எனது எனும் செருக்கு அறுத்தவர் தவம் எய்தி
வான் என உயர் உலகமும் துதி செய வாழ்வார்
தான் எனும் இறுமாப்பு உளோர் யாவரே தாழ்வார் (22·54)

என்றும் புலவர் கூறுவது,

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும் (குறள் 346)

என்ற குறட்பாவின் கருத்தே ஆகும்.



கடல் வேட்டைக்கு எழுந்த படலத்தில், தட்டின் மேல் இருந்த அடற்கை வயவர் தம் கைக் கொண்ட மண்டாவால் (குத்து ஈட்டி) குற்ற, வட்ட வாருதியின் வேங்கை எனத்தக்க

வலிய சுறாக்கள், தாக்குண்டு, உடல் துடித்து மாயும் என்பார். இவ்வாறு வயவர் குறி தவறாமையும், குத்தப்பட்டன அது பொறாமையும், இறப்பும் உறுதி எனக் கூற,

மட்டற உணர்ந்த மேலோர் வாக்கினால் சபிக்கும் சாபம்
பட்டு உருவுவது ஒப்பாக (24:58)

என்று உவமம் கூறுவார்.

இக்கருத்து,

''சொல் ஒக்கும் கடிய வேகச் சுடு சரம்
பாய்தல்'' என்ற கம்பன் (தொடரோடும்)

''குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது (குறள் ; 29)

என்ற குறட்பாவோடும் ஒப்பிடத் தக்கது.

ஆனை இறாஞ்சிப் பட்சி நாணிய படலத்தில் பெண்களின் மனத்தின் தன்மையைக் கூறவந்த புலவர்,

''இறந்தவர் தொகையும் இன்ன(மு)ம்
இவ்வுலகிடத்தில் வந்து
பிறந்து வாழ்வார் கணக்கும் பெருகிய
தவத்தால் யாதும்
துறந்தவர் வயப்பும் எண்ணிக் காண்கினும்
துணித்து ஈது என்ன
மறம் தரு வேல் கண் நல்லார்
மனத்திளைக் காணலாமோ? (28:19)

என்று பாடுவார்.

இப்பாடலில்,

''துறந்தார்ப் பெருமை துணைக் கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று (குறள் : 22).

என்ற குறட்பாவின் கருத்து இடம் பெற்றிருப்பதனைக் காணலாம்.

## 5(ஆ). வண்ணக் களஞ்சியப் புலவரும் கம்பனும்

''கம்பன் காவியக் கலைஞன். கவிவேந்தன். கவிதைச் சிற்பி. முத்தமிழ் வித்தகன். முதுமொழிப் பாவலன், வடமொழி வல்லுநன். நாற்சொல் நாயகன். அகப்பொருள் ஆற்றல்ன். புறப்பொருட் புலவன். பக்திக் கவிஞன். அறச்செம்மல். புராணப் புரவலன். கதைக்காவலன். உலகியல் அறிஞன். கற்பனைக் காரணன். பழமை

விரும்பி. புதுமை நாடி. மரபுப் பாவலன். புரட்சிக் கலைஞன். மக்கட் கவிஞன். மானுட அன்பன். உயிரினத் தோழன், உயிரின உழைப்பாளன்.

ஊழ்வலி உணர்ந்தவன். ஒலியாற்றல் அறிந்தவன். சொற் செவ்வி பெற்றவன். குறிப்பு உணர்வு உடையவன். கருத்துச் செறிவு கொண்டவன். வருணனை ஆற்றலன். காதல் சித்திரன். இயற்கை ஓவியன். வாழ்வுப் புனைவலன். சமுதாய இயல் வித்தகன். அரசியல்வல்லுநன். தெய்வமாக்கவி. கவிச்சக்கரவர்த்தி நவரச நாடக ஆசிரியன். கருத்து ஆழம் உள்ளவன். கலைக்கோவில் படைத்தவன். சந்தங்கள் ஆண்டவன். வண்ணங்களில் விளையாடியவன். விருத்தவகை பல வடித்தவன்.

... அவன் படைத்த இக்காவியம் (இராம காதை) உயர் சொல் ஓவியம். காட்சி வண்ணம். கேள்விச் சாலை, சுவைத்தேன். எண்ணக் கலவை. மெய் இன்பம். நிலைத்த நறுமணம். ஜீவநதி. காவிய மாளிகை. கலைக்கோயில். புதுமை விருந்து.

வற்றாத வளம். குன்றாச் செல்வம். கலையாத கனவு. தெவிட்டாத இன்பம். தீராத ஆசை. வாடாத மொட்டு. எட்டாத சிகரம்.

நவில்தொறும் நயம் பயப்பது. அறி தொறும் அறியாமை காட்டுவது. தொட்டனைத்து ஊறும் மணற் கேணி போன்றது. தம் மக்கள் மழலை ஒத்தது. ஐம்புலனும் பெறும் இன்பத்தை ஒத்த இன்பத்தை அளிப்பது. தோண்டத் தோண்ட வளம் அளிக்கும் சுரங்கம் போன்றது. கேட்டதைக் கொடுப்பதில் கற்பகக்கா போன்றது. நினைத்ததைத் தருவதில் சிந்தாமணி ஒப்பது. வேண்டியதை அளித்தலில் காமதேனுவை ஒத்தது, எல்லாப் பொருளும் உடைமையால் அயோத்திக்கு இணை ஆவது.''*

இவ்வாறு, கம்பன், காப்பியக் கர்த்தாக்களில், இமயத்தின் உச்சியினை எட்டிப் பிடித்து விட்ட காரணம் ஆக அவனுக்குப் பின் தோன்றிய கவிஞர்கள் யாராலும் அவனுடைய தாக்கத்தி லிருந்து தப்ப முடிவதில்லை.

சொல்லப்போனால் அவன் காப்பியத்திற்குப் பிறகு வேறு காப்பியம் படைக்கும் முயற்சியையே பெரும்பாலோர் விட்டு

* (கம்பன் இலக்கிய உத்திகள்—டாக்டர் ச வே, சுப்பிரமணியன் பக்கம் 1, 2)

விட்டார்கள். எனவே தான் கம்பனுக்குப் பிறகு தமிழில் பெருங் காப்பியங்கள் அதிகமாகத் தோன்றவில்லை.

இந்த நிலையிலும், துணிந்து காப்பியங்கள் படைக்க முயன்ற வர்கள் முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் என்று கூறுவது மிகை ஆகாது.

அப்படிப் படைக்கும் பொழுது கம்பனைப் பின்பற்றவும் அவனுடைய காப்பிய அமைப்பினை அடி ஒற்றவும் அவர்கள் தவறவும் இல்லை; தயங்கவும் இல்லை; அப்படிச் செய்வதைத் தம் பெருமைக்கு இழுக்காக அவர்கள் கருதவும் இல்லை.

அதற்கு மாறாக, அவனை எட்டிப் பிடிக்க முயல்வதே பெரு மைக்கு உரியதாகக் கொண்டார்கள். அவ்வாறு எட்டிப் பிடிக்க முயன்று பெருத்த அளவில் வெற்றி கண்டவர் சீறாப் புரணா ஆசிரியர் ஆன உமறுப் புலவரும், அவர்க்குப் பின் அவர் அடி ஒற்றி காப்பியம் படைத்தவர்களுள் ஒருவரான வண்ணக் களஞ்சியப் புலவரும்' ஆவர்.

அவருடைய கம்பராமாயணப் பயிற்சி அவருடைய இராஜ நாயக நூலில் பற்பல நிலைகளில், இடம் பெற்றிருப்பதனை முன்னரே கண்டோம். மேலும் சிலவற்றை இப்பொழுது பார்ப் போம்.

இராஜநாயகக் காப்பியத்தில், நகரப்படலத்தில்,

இனித்த செங்கனி மெல்லிதழ் மடந்தையர்
ஐந்து எழில் நிறக் கிளியை நோக்கிடலும்
பனி கருங்குவளை விழி மணி ஒளிகள்
பாய்ந்து அதில் கறுத்திட, பஞ்ச
வனக்கிளி என பொய் சொலி கருங்கிளியை
வழங்குவதோ என வளர்ந்த
சினத்தொடும் தமது கணவர்பால் வதனம்
திரிந்திருந்து ஊடல் செய்திடுவார் (3.12)

என்று பாடுவார்.

இப்பாடல்

பஞ்சு அணி விரலினார் தம் படை நெடுங் கண்கள் எல்லாம்,
செஞ்செவே ஐயன் மெய்யின் கருமையைச் சேர்ந்தவோ தாம்?
மஞ்சு அன மேனியான் தன் மணி நிறம், மாதரார் தம்
அஞ்சன நோக்கம் போர்க்க, இருண்டதோ? அறிகிலேமால்.
(கம்பன் 1072)

என்ற கம்பன் பாடலில் பொதிந்த நயத்தை உள்ளடக்கிக்கொண்டு இருப்பதனைக் காணலாம்.



வண்ணக் களஞ்சியப் புலவர் தம் நூலில், நகரப் படலத்தில்,

முரசு மூன்று ஒலியும், சதுதள ஒலியும்,
முருக்கு இதழினர் சிலம்பு ஒலியும்,
இருநிதி மணி தூக்கு எழில் தராசு ஒலியும்,
இளைஞர்கள் சிரம்பம் செய் ஒலியும்,
விரவு நூல் உணர்ந்தோர் கிளிகள் பூவைகளின்
வேத கீத ஆநந்த ஒலியும்,
திரைஒலி கடந்து விண்ணினில் படர்ந்து
செழு முகில்ஒலி யினும் சிறக்கும் (3:17)

என்று பாடுவார்.

இப்பாடலுள் ஒலி என்ற சொல் பன்முறை ஆளப்பட்டுள்ளது. கம்பன் காதையில் பாலகாண்டத்தில் வரைக் காட்சிப்படலத்தில் உள்ள,

புதுக் கொண்ட வேழம் பிணிப்போர் புனை பாடல் ஓதை.
மதுக் கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்றும் ஓதை,
பொதுப் பெண்டிர் அல்குல் புனைமேகலைப் பூசல் ஓதை,
கதம் கொண்ட யானை களியால் களிக்கின்ற ஓதை.
(கம்பன் 888)

என்ற பாடல், படிப்பார் நினைவில் வாராதுபோகாது.



சுலைமான் நபி அவதாரப் படலத்தில், 47 ஆம் பாடலின் ஈற்றடி

''மிலைதரும் நன்மையைத் தீமை வெல்லுமோ'' என்பதாகும்.

இவ்வடி கம்பன் காவியத்தில் சுந்தர காண்டத்தில் கவிக் கூற்றாக அமைந்துள்ள,

''வெல்லுமோ தீவினை, அறத்தை மெய்ம்மையால்''
(கம்பன் 5144)

என்ற அடியின் மறுபதிப்பு ஆவது காணலாம்.

சுலையுமான் நபி அவதாரப் படலத்தில், சுலையுமான் நபி பிறந்த உடன், செய்தி தாவூது நபிக்கு அறிவிக்கப்படுகிறது. அது கேட்டு அவர் எப்படி மகிழ்ச்சி அடைந்தார் என்பதனை

... ... ... ...

இளமை வறிஞருக்கு அரசு கிடைத்தது என
ஒருயிர் போல் இருவர் கல்வி
வளமையினரில் ஒருவன் இறந்து நெடு
நாளகன்று மகி தலத்தில்
தளர்வதன்று நண்பனைத் தழுவ முன்போல்
வந்தது என மகிழ்ச்சி தழைப்பது ஆனார் [5:66]

என்று பாடுவார்.

இப்பாடலில் அமைந்துள்ள 'இளமை வறிஞர்க்கு அரசு கிடைத்தது' என்ற சொல் ஆட்சி சிறப்பு மிக்கது. வறிஞனுக்கு அரசு கிடைப்பது என்பதே பெரும் பாக்கியம். ஆனால் அப்பாக்கியத்துக்கும் புலவர் கூறும் விதத்தில் ஒரு தனிச்சிறப்பு உண்டு. அந்த அரசு இளமையிலேயே வறிஞனுக்குக் கிடைக்குமானால் அவன் வாடிய காலம் சிறிதாக, ஆளும் காலம் நெடிது ஆக அமையும்.

அப்படி ஆனால் அவ்வறிஞனுக்குக் கிடைத்த அரசபோகம் மாபெரும் போகமே என்றுதான் கூறவேண்டும்.

அதனை வண்ணக் களஞ்சியப் புலவர் மிக்க அழகாக இந்த அடியில் எடுத்துக் காட்டுவதனைக் காண்கிறோம்.

இக்கருத்தும்

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்."

(கம்பன் 179)

என்ற கம்பன் தொடருடன் ஒப்பவைத்து நோக்கி மகிழத்தக்கது.



புறா வசனித்த படலத்தில், சுலைமான் நபி அவர்களிடத்து அம்மலட்டுப் புறா தன் குறைகூறி, குஞ்சுகள் இனிது உதிக்க, தனியவனிடத்து அவர் துஆ இரந்து நலவரம் புரியவேண்டும் என்று கோரியது எனக் கண்டோம்.

அப்பொழுது அப்புறா,

"ஆசை நோய் மிகந்தோர்க்கு அமிழ்தம் அவ்வாசை
ஆம்பொருள் கிடைத்திடல் அன்றி
ஓசை வாருதி சூழ் மகிதலத்தினில் மற்று
ஒரு மருந்து அதை ஒழித்திடுமோ?" (6:18)

என்று கூறும்.

விரும்பு ஒரு பொருள் இன்மையால் வருந்துவோர் வருத்தம் தீர்ப்பது அப்பொருளே. பிறிதொன்று பெறுவதால் அவ்வருத்தம் தீராது.

குறிப்பாக ஒரு பொருளிடத்துத் தணியாத ஆசை மிகின், அப் பொருளினைப் பெற்றாலன்றி அவர் வேட்கை அடங்காது.

இராவணன் உள்ளத்தில் சீதையின்மேல் பெருங்காமம், தீ என மூண்டது. சொல் வல் திறத்துச் சூர்ப்பணகையால் அது கொழுந்துவிட்டு எரிந்தது. மென்பனியும் எரிந்தது. சீதத் தென்றலும் சிறு வாடை ஆனது.

காழ் கொண்ட காமத்தன் ஆகவின் அவன் மனத்து எழுந்த மையல் வேதனை, வெப்பம் செய்தது.

மிகு மயல் விளைத்த மிதிலைச் செல்வியைப் பெற்றாலன்றி அது தீராது என்று உணர்ந்தான்.

இவ்வாறெல்லாம் இராவணன் காம உணர்ச்சியில் மூழ்கித் தவித்ததைக் கம்பன் விரிவாகவே பாடுவான்.

அந்நிலையில் அவன் குறிப்பது,

"அன்பெனும் விடம் உண்டாரை ஆற்றலாம்
மருந்தும் உண்டோ"? (கம்பன் 3166)

என்பதாகும்.

இவ்விரு தொடர்களும் ஒப்பு நோக்கி மகிழ்தற்கு உரியன.



கனவு கண்டு மணம் செய்த படலத்தில், கனவிற் கண்ட காரிகையைத் தேடிக் கண்டு பிடிக்கவேண்டி, யார்க்கும் சொல்லாமல், தன் நகரைவிட்டுப் புறப்பட்டுவிட்டான் அரசிளங்குமரன் என்பதனைப் புலவர்,

அரசியல் இயற்கை நீத்தான்
அன்னையைப் பிதாவை நீத்தான்
சரத நண்பினரை நீத்தான்
தன் குலத்தினரை நீத்தான்
பரிசனம் எவையும் நீத்தான்
பரி கரி சிவிகை நீத்தான்
விரை செறி குழலினாள் தன்
வேட்கையை நீத்திலானே! (9:22)

என்று பாடுவார்.

இப்பாடல்,

கரனையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான்; உற்ற பழியையும் மறந்தான்; வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால், முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட மங்கையை மறந்திலாதான்.

(கம்பன் 3149)

என்ற கம்பனுடைய பாடலின் நேர் எதிர் ஒலியாக இருப்பதனை உணர முடிகிறது.

○

இப்பாடலின் (9:22) ஈற்றடியில் அமைந்துள்ள ''விரை செறி குழலினாள் தன்'' என்ற சொல் ஆட்சியும் கம்பன் கொடையே.

திருமுடி சூட்டுப் படலத்தில்,

அரியணை அநுமன் தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண்குடை கவிக்க, இருவரும் கவரிபற்ற,
விரை செறி குழலி ஓங்க, வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி, வசிட்டனே புனைந்தான்,

[மௌலி(கம்பன் 10327)

என்பான் கம்பன்

○

கனவு கண்டு மணம் செய்த படலத்தில், தாவூது நபி தீர்ப்பிற்குப் பிறகு அக்காரிகையைக் கள்வன் கொண்டு சென்றான். நீர் அறாத கண்கள், நெடிய உயிர்ப்பு கொண்ட அவளைக் கண்ட ஊர் மக்கள் வருந்தினர். வாய்விட்டும் கூறினர் என்று முன்னர்க் கண்டோம். இதனை,

அவிரொளி இழையோ? மின்னோ?
ஐய நுண்ணிடையும் என்பார்.
துவர் இதழ்க்கு இணையோ என்பார்.
துணை விழி கயலோ என்பார்.
செவிகள் வள்ளைகளோ என்பார்.
தீங்கு இவட்கு உளதோ என்பார்.
நவிலும் இன்னவர்களோடு நடந்து
செல் வழியின் மீதே (9:117)

என்று புலவர் பாடுவார்.

இப்பாடல் கம்பனது பல பாடல்களின் எதிரொலியாக அமைவதோடல்லாமல் கம்பனது,

"ஐய நுண் இடையார் ஆடும்ஆடக அரங்கு கண்டார்"
(கம்பன் 487)

என்ற தொடரில் அமைந்துள்ள சொல் ஆட்சியும் கொண்டிருப்ப தனைக் காணலாம்.



அரசு நிலையிட்ட படலத்தில் அகத்தில் முற்றிய அழுக்காறு அதனால், சுலைமான் நபியின் முன்னவர் பதினாறுபேரும், முதிர் அறிவின் உலமாக்கள் எழுபதின்மரும், சுலைமான் நபி அரசு பெறா வகைபலவித தடைகளை அமைத்தனர்; எனினும், அவர்க்கே அரசு நிலைத்தது என்று கண்டோம். புலவர் கூற்றாக அவ்விடத்து,

முத்தெலாம் ஒரு கடலிடைப் பிறக்கினும் முழுதும்
பத்தியாய் ஒளிர் ஆணி முத்து ஆவதோ? பரிந்து
சுத்த ஓர் அனை பெறுகினும் சோதரர் எவரும்
உத்தம ஆதிபர் ஆவரோ ஊழ்விதி ஒழிந்தே. (12:55)

என்ற பாடல் அமைந்துள்ளது.

இப்பாடல் கம்பன் காவியத்தில், வாலி வதைப் படலத்தில், இராமன் கூற்றாக அமைந்துள்ள,

எத்தாயர் வயிற்றினும், பின் பிறந்தார்கள் எல்லாம்
ஒத்தால், பரதன் பெரிது உத்தமன் ஆதல் உண்டோ?
(கம்பன் 3977)

என்ற பாடலை அடி ஒற்றி அமைந்து இருக்கக் காணலாம்.



ஜின் கணங்கள் வசப்படுபடலத்தில், ஜின் ஒன்றின் தோற்றம் எவ்வளவு பெரிதாக இருந்தது, என்பதனை வண்ணக் களஞ்சியப் புலவர்,

'புடை பரந்துள வலப்புயத்து இருந்து இடப்புயத்தில்
அடைய என்று ஒரு பறவை சென்றிடில் அரைக் கடிகை
உடைய போது அடுத்திடும் உடல் ஒடுக்கி ஓர் கடுகில்
தடைஅறப் புக வகை பெறு ஜின் சில தகுதி' (15:16)

என்று பாடுவார்.

இப்பாடலில் இடம் பெற்றுள்ள கருத்தும், கம்பனுடைய
"தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின்,
நாள் பல கழியுமால்;..." (கம்பன் 7382)

என்ற கும்பகருணன் தோற்றப் பொலிவு குறிக்கும் தொடரும் ஒத்து அமைவதனைக் காணலாம்.



வானம்பாடிப் படலத்தில் சுலைமான் நபி அவர்கள் சேனைகள் சென்ற விதத்தை,

பாயும் வெம்புரவிப் பஞ்ச கதிகளை பார்வை மீதில்
ஆயும் எவ்விதத்தில் காண்பது? அலது அதன் கால் குளம்பு
வாயுவின் மீதிலேயோ? மழைமுகில் மீதிலேயோ?
தோயும் மண் மீதிலேயோ தொடுவது? என்று ஐயம் தோன்ற
(18:6)

எழு கடல் எழுந்ததேயோ?
இவண் எலாம் திரண்டதேயோ?
வழி கொள்பல் உலகம் எல்லாம்
மண் தலத்து உற்றதேயோ?
மொழிவது எவ்வகை? என்று ஓதும்
முதிர் பெருந்தானை ஈட்டம்
குழுவொடு வள்ளல் ஏறும்
கொய் உளை நடத்தினாரே. (18:10)

என்று புலவர் பாடுவார்.

இவ்விரு பாடல்களும், இராமனுடைய கணை சென்ற வேகம் பற்றிக் குறிப்பிடும்

குடக்கதோ? குணக்கதேயோ? கோணத்தின் பாலதேயோ?
தடத்த பேர் உலகத்தேயோ? விசும்பதோ? எங்கும் தானோ?
வடக்கதோ? தெற்கதோ? என்று உணர்ந்திலன்;— மனிதன் வல்வில்—
இடத்ததோ? வலத்ததோ? என்று உணர்ந்திலேன், யானும் [இன்னும். (கம்பன் 7299)

என்ற இராவணன் வாய் மொழிக்கு ஏற்ப வேகம் கூறும் வகையில் அமைவதாகக் கொள்ளலாம்.

முதல் நாள் போரில் தோற்று இலங்கைத்திரும்பிய இராவணன் 'வாங்கிய வரிவில் அன்ன யாக்கையன்' பாட்டன்மாடே பகைவன் வில்லாற்றலைப் பலபடப் புகழ்கிறான். அப்பல பாடல்களுள் இதுவும் ஒன்று.

பாய்கணை வேகம் படித்து உணர்ந்த பாவலர் வண்ணக் களஞ்சியப் புலவர், தம் நூலகத்து பாய் மா வேகம், படிப்பார் நெஞ்சு கொள உணர்த்தும் பாங்கும் பாராட்டத்தக்கது.



வானம்பாடிப் படலத்தில் பிறிது ஒரு நிகழ்ச்சியைக் காணலாம். சுலைமான் நபி அவர்கள் ஆணை ஏற்று, ஜின் ஒன்று, தளங்கள் இயங்கு பாதையில், அப்பெண் பறவை இட்டமுட்டை சிதையாவாறு இரு கால் பரப்பி நின்று காத்தது.

சேனை முழுமையும் அப்பாற் கடந்து சென்றபின் ஜின் தன்னிடம் சேர்ந்தது.

அரசற்குத் தம் நன்றியைத் தெரிவிக்க ஆணும், பெண்ணும் விரும்பின. வேந்தர் இடத்து வெறுங்கையராய்ப் போதல் பிழை என்று கருதி, கையுறை யாது கொள்ளலாம் எனத் தமக்குள் ஆராய்ந்தன.

வானம்பாடிச் சேவல், தன்னிடம் இரையாகப் பிடித்த வெட்டுக் கிளி உளது எனக்கூற, அதன் பேடு, கரு திரண்டு பொரித்திடில் குஞ்சுக்கு ஈய எனத் தேடிய இரை சிறிது தன்னிடம் உளது என்றது.

பின் அவ்விரண்டும் கையுறை கொண்டு காவல் நாயகத்தை அணுகின. நாடாள் வேந்தனுக்குத் தம் நன்றி தெரிவித்தன. தாள் பணிந்து தாம் கொணர்ந்த கையுறையை அவர் திருமுன் இட்டன.

பின் அரசர் நோக்கி

''காட்டுடைப் பறவை தம்மில் கழிபறவைகள் எம் மீதில்
ஈட்டும் உள் கருணை பொங்கி இடு சினையினையும் காத்தீர்
வேட்டு நும் பதத்தில் இன்னம் வேண்டுவ கேட்பது அன்றி
பூட்டும் ஓர் கைம்மாறு ஏது புரிகுவம்? வேந்தர் வேந்தே''

(18:40)

என உரைத்து எதிர் நின்றன. இது கேட்ட அரசர் அவற்றின் பணிவு மொழிக்கு அன்பு கூர்ந்தார்.

"தினகரன் நிகர் கிரீடம் திருப்பதம் தீண்டி ஈயும்
தன மணி மலையின் மேலாய்க் கொள் நிறைதனை
மகிழ்ந்தார்'' (18:41)

கருமை கொண்டு உதவும் மேகத்
துளி ஒன்றை கடல் கொள் ஆறா(க)
ஒருமை கொண்டு எவரும் தங்கட்கு
உள்ள மட்டு உதவில் அந்த
அருமை கொண்டு உவந்து கைக்
கொண்டு அருள் விளைத்திடுவர் தங்கள்
பெருமை கொண்டு அகற்றுவாரோ?
பிழை இலாப் பெரியோர் தாமோ (18:42)

அகம் பெறும் அன்பு கூர்ந்தே
அணு நிகர் பொருள் ஒன்று ஈதல்
உகம் பெறு மலைகட்கு எல்லாம்
பெரிது என்பர் உணர்ந்த நூலோர்
முகம் பெறுவதற்கு என்று எண்ணி
ஈவது முந்நீர் சூழ்ந்த
செகம் பெறு விலைஉண்டேனும்
சிறிதினில் சிறிது என்பாரால் (18:43)

என்பன கவிக் கூற்றாய் அமைந்த பாடல்கள்.

இந்நிகழ்ச்சியும், இதனைப் புலவர் எடுத்துக் காட்டுகின்ற முறையும், கம்பன் காவிய நிகழ்ச்சி ஒன்றனோடு ஒப்பிட்டு மகிழ்தற்குரியன.

கானகத்தில் இராமனைச் சந்திக்க குகன் தேனும் மீனும் கொண்டு வந்ததையும், முனிவர்கள் சூழ அமர்ந்திருந்த இராமன், அப்பொழுது குகனிடத்துக் கூறியதையும் காணலாம்.

"அரிய, தாம் உவப்ப, உள்ளத்து அன்பினால்
அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால்.
அமிழ்தினும் சீர்த்த அன்றே?
பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம்;
எம்மனோர்க்கும்
உரியன; இனிதின் நாமும் உண்டனெம்
அன்றோ?'' என்றான் (கம்பன். 1967)

என்ற கம்பன் பாடல் ஒப்பிட்டு நயம் காணலாம்.

இருவர் மோகப்படலத்தில் மகறிபுதேய மன்னன் மகன் சோங்கு ஓரத்தில் குனிந்து வாரியை மேவுற நோக்கிப்பல் துலக்கும் பொழுது ஆனை இறாஞ்சியின் அரும்பெறல் வளர்ப்பு மகள் நிழல் 'அதிர் அலைகடல் நீரில் தோன்றக் கண்டான்.'

'நீரில் ஓர் உரு வயங்குவது ஏது?'' என வியந்து சிரத்தை அண்ணாந்து,வான் நடுப்பதித்துள முடிப் பருப்பதம் நோக்கினான். அங்கு அவள் இருக்கக் கண்டான். அவளிடம் சில உரை வினாவினான் என்பன எல்லாம் கதைப் பகுதியில் நாம் கண்டோம்.

இதுபற்றி வண்ணக் களஞ்சியப் புலவர்,

எண்ணினன் அவன் முகம் எதிர்ந்து நோக்கலும்
நண்ணி வந்து அருகு உறு நாரி போல் இரு
கண்ணினில் கண்டனன் **காமவல்லி** யோடு
உள் நயப்பொடு சில உரை வினாவுவான் (25·25)

என்று குறிப்பார்.

இக்காமவல்லி என்ற சொல் பற்றிச் சிறிது பார்ப்போம்.

கம்பன் தன் காவியத்தில், காகுத்தன் கானக வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் காலத்தில், ஒருநாள் தன்முன் ஓர் தையல் வருவதனை, நூபூரமும், மேகலையும், நூலும் அறல் ஓதிப் பூ முரலும் வண்டும் பூசலிடும் ஓசை உரைசெய உணர்ந்தான்.

அத்திசை குறித்து எதிர் விழித்தான். விண் அருள வந்த ஒரு மெல் அமுதம் வண்ணமுலை கொண்டு தன்னை வணங்குவது கண்டான்.

செங்கையின் இறைஞ்சி, வெவ்விய நெடுங்கண் அயில் வீசி, நவ்வியின் ஒதுங்கி, இறைநாணி, அயல் நின்றாள் சூர்ப்பணகை.

வேதமுதல், அவள் நோக்கி 'திருவே' நின் வரவு தீது இலது ஆகுக! ஏது பதி? ஏது பெயர்? யாவர் உறவு?! என வினாவினான்

குலப்பெருமை கூறின், குளிர் கொண்டல் நிறத்தானைக் கூடலும் கூடும் என்று தவறாகக் கருதினாள்.

தன் நிலைவிரிப்பாள்;

'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி; முப்புரங்கள் செற்ற
சே-வலோன் துணைவன் ஆன செங்கையோன் தங்கை; திக்கின்
மா எலாம் தொலைத்து, வெள்ளி மலைஎடுத்து,
உலகம் மூன்றும்
காவலோன் பின்னை; **காமவல்லி** ஆம் கன்னி' என்றாள்.
(கம்பன் 2770)

**காமவல்லி** என்ற சொல் எங்கு பார்ப்பினும், படிப்பினும், கேட்பினும் கம்பன் காவியமும், சூர்ப்பணகை தானே படைத்து தனக்கு அமைத்துக்கொண்ட இப்பெயரும் நினைவில் வாராது ஒழியாது.

மேலும் எறும்புகள் விருந்திடு படலத்தில் மகளிர்க் குறிக்கும் 'காமவல்லியர்'' என்று சொல் ஆட்சி உண்டு. (22:19)

○

விதி கூட்டிய படலத்தில் மகறிபு தேச மன்னன் மகன், ஆனை இறாஞ்சிப்புள் வளர்ப்பு மகளை நோக்கிய நிகழ்ச்சியையும், அவர்கள நிலையையும் வண்ணக் களஞ்சியப் புலவர்,

ஓங்கிய சிகரம் மேவும் ஒண்டொடி
அனமும் வீரம்
தாங்கிய புயனும் சேல்கள் பார்வை
போல் சார நோக்கி
ஆங்கு அவள் அகம் இவன் பால்
இவன் அகம் அவள்பால் எய்தி
தேங்கி உள் பிரமை மீறி திகைத்து
வாய் திறந்திலாரே (26:11)

என்று பாடுவார்.

கன்னி மாடத்தில் நின்ற சீதையை, இராமன் கண்டதையும் அப்பொழுது அவர்கள் நிலையையும்,

பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து,
ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரி சிலை அண்ணலும் வாள்-கண் நங்கையும்,
இருவரும் மாறிப்புக்கு. இதயம் எய்தினார்.
(கம்பன் 516

என்று கம்பன் பாடுவான்.

வண்ணக் களஞ்சியப் புலவர் பாடல், கம்பன் பாடல் சாயலாக இருப்பதனைக் காணலாம்.

"உள் பிரமை மீறி திகைத்து வாய் திறந்திலாரே" (26:11)
என்று வண்ணக் களஞ்சியப் புலவர் குறிப்பது.

"கண்ணொடு கண் இணைநோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல" என்ற திருக்குறட் கருத்தை ஒட்டி அமைவது. மேலும்,

"... ... ... ...
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினார்—
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?"
(கம்பன் 517)

என்பதனையும் குறிப்பாக உணர்த்தும்.



விதி கூட்டிய படலத்தில், மகறிபு தேய மன்னன் மகன், ஆனை இறாஞ்சிப் புள் வளர்ப்பு மகளை நலம் பாராட்டுகிறான்.

"தாமம் கொள் கரிய கூந்தல் தடமுலை மடவார் தாமும்
காமம் கொள் அழகு வாய்ந்த கன்னியர்க்கு அரசே!"
(26:14)

என்று விளித்துத் தன் வேட்கையை விளம்புவான்.

இக்கருத்து, மிக்க அழகுடைய பெண் ஒருத்தி கண்டால், பிற பெண்கள் உச்சிக்கரம் வைப்பர்; போற்றுவர்; புகழ்வர்; ஆற்ற ஒண்ணாத் தம் வியப்பைச் சொற்களில் வடிப்பர் என்ற உலகியல் குறிப்பனவே.

வனத்திடை வைகிய வல்விலி இராமன் கண்டு, காமுற்று, 'பங்கயச் செல்வியை மனத்துப் பாவித்து' பொங்கு ஒளி விசும்பினில் பொலியத்தோன்று மின்என, வேண்டுஉரு மேவினாள், சூர்ப்பணகை.

கற்பின் கனலியைக் கண்களில் தெரியக்கண்டாள். பண்பு உற நெடிது நோக்கினாள். எண் பிறங்கு இவள் அழகுக்கு எல்லை இல்லை என்று தேறினாள். பின் கூறுவாள்,

கண் பிற பொருளில் செல்லா; கருத்து எனில், அஃதே; கண்ட
பெண் பிறந்தேனுக்கு என்றால், என்படும் பிறருக்கு?"
என்றாள். (கம்பன்-2791)

இப்படி அமைத்துள்ள கம்பன் தொடருடன் ஒப்ப வைத்து நயம் உணரலாம்,

நனி வள எமன் தேயத்துக்கு ஒரு கொடுங்கோல் நடாத்தும் குனிசிலைக்கர சுறாயிகு தன் உளவர்கள் வழி, யூசறுகு தன் அரும் பெறல் அழகு மகளை, நகர்க்கு அப்பால் உள்ள ஒரு மாளிகையில் குடி இருத்தியதனை அறிந்தான்.

மயிலியல், குயில்மொழி, மானிளம் பேடு, மங்கையர் திலகம், எழிற்கு இருப்பிடம் என்றெல்லாம் அவ்வுளவர்கள் கூறிய சொற்கள் அவன் செவிவழி புகுந்து அகத்துட் சேர்ந்தன.

"... ... ... ... ... ... ...
கயவு கொண்டு எழுந்த மோகம் தீபமாய் கமலம் ஆகி
செயிரற வளர்ந்து காடாக்கினியுமாய், வடவைத் தீயாய்,
உயிரையும் அடர்ந்து நஞ்சாய் உடலையும் வாட்டிற்று
[அன்றே. (30:2)

என்று அவன் நிலையை வண்ணக் களஞ்சியப் புலவர் குறிப் பிடுவார்,

சுறாயிகு மனநிலையை இராவணன் மனநிலையோடு பொருத்திக் காண்பது நயம் பயக்கும்.

கம்பன் சொல்வான்:

"தீபம் ஒன்று ஒன்றை உற்றால் என்னல் ஆம் செயலின், புக்க
தாபமும் காமநோயும் ஆர் உயிர் கலந்த அன்றே" (கம்பன் 3148)

கேட்ட மங்கையை மறந்திலாத கிளர் மறவேந்தன், அம்மயிற் சாயலாளை, இதயமாம் சிறையில் வைத்தான். அவள் பெயரும் இவன் சிந்தை தானும் உற்று இரண்டும் ஒன்றாய் நின்றால், ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன மற்றொரு மனமும் உண்டோ? மறக்கலும் கூடுமோ? ஞாயிறுகாயும் வெவ்வறை மருங்கில் வெண்ணெய் உணங்கல்போல பரந்தது நோய். நோன்று கொளற்கு அரிதானது.

உரம் குடைந்து நொந்து நொந்து, உளைந்து உளைந்து ஒடுங்கினான். மேனி வெந்து, வெந்து, விம்மு தீ ஊது வன் துருத்தி போல் உயிர்த்து உயிர்த்து உயங்கினான்.

ஆக்கைதேய, உள்ளம் தேய, ஆவி வேவது ஆயினான். ஆரணங்கு அவள் மேனி காண மூளும் ஆசையால், ஆவி சால நொந்து நொந்து அழுங்கினான்.

இவ்வாறாக காமத்தால் கனலும் வெந்தீ, சீலத்தால் அவிவது அன்றி செய்யத்தான் ஆவது உண்டோ?

தெறும் இயல்பினதாய காமத்தைத் தீ என்ற நயம் போற்றற்கு உரியது. மெல்லப்பற்றி, முற்றிடம் கொண்டு, பற்றிய இடத்தையும் பாழ்படுத்தி முடிவதுதானே தீயின் இயல்பு?

காமத்தீ உள்ளம் கவர்ந்து, எழுந்து ஓங்கி, வளர்ந்து கொண்ட உள்ளத்தை, உயிரை, உடலை வாட்டும் இயல்புடையது.

வண்ணக் களஞ்சியப் புலவர் தம் பாடலில் குறிப்பிடும் தீபம், கமலம், காடாக்கினி, வடவை என்று தீ பெருகு நிலை உவமங்கள் நினைத்து நினைத்து மகிழ்தற்கு உரியன.

பல்கீசு அரசுரிமைப் படலத்தில் சுறாயிகு தன் வீரர்கள் சிலர் சூழ, முத்தன்ன வெண்ணகையாள் பல்கீசு காணும் ஆசையால் 'மாக ஒண் முகில் மட்டு ஓங்கும் அம்மாளிகை' அருகில் சென்றான் என்று புலவர் குறிப்பிடுவார்.

பல்கீசு கண்ணுக்கு இனிய தோற்றம், காதுக்கு இனிய சொற் கள் கொண்டவள் என்பதனைக் குறிப்பிட,

"பாகினை அனைய செஞ்சொல் பனிமதி முகப்பெண்..."
(30-7)

என்று கூறுவார்.

மகளிர் பொதுவாக மன்ற மாசற்ற சில சொல்லக் காமுறுவர். 'சில மெல்லியவே அம்தீம் கிளவியர்' அவர் என்பர் நூலோர்.

இதனைக் குறிக்கும் வகையில் அமைந்ததே 'பாகினை அனைய செஞ்சொல்' என்ற தொடர்.

கம்பனில்

"பாகு ஒக்கும் சொல் பைங்கிளி" (500)
"பாகுபோல் மொழிப் பைந்தொடி" (626)
"பாகு ஒக்கும் சொல் நுண் கலையாள்" (919)
"பாகு இயல் பவளச் செவ்வாய்" (1562)
"பாகு அனைய சொல்லி" (2689)
"பாகு இயல் கிளவியாள்" (3343)
"பாகு ஒன்று குதலையாள்" (4706)
"பாகு அடர்ந்து அமுது பில்கும் பவளவாய்" (9995)

எனப் பரந்துபடு அளவில் பாவையர் சொல் பாராட்டப் பெறுவது காணலாம்.

பல்கீசு அரசுரிமைப் படலத்தில் யூசறுகு இடம் சுறாயிகு "நீ பெற்ற மொழிக் கரும்பினை எனக்குக் கல்யாணம் முடித்து உதவு" என்று கேட்டான் எனவும், மகளுடன் உரையாடி அவள் கருத்து அறிந்து அரசனிடம் "அணங்கு சம்மதித்தாள்" என்று கூறினான், எனவும் கண்டோம்.

சூழ்ச்சியினால் சுறாயிகுவைக்கொல்லத் திட்டமிட்ட பல்கீசு, தன் தந்தையை அழைத்து 'என்மகள் ஜின் குலத்தவள் ஆதலால், அவளைக் காண தளத்தை எல்லாம் விடுத்து தனி ஒருவனாகவே வருக' என்று அரசனிடம் கூறச் செய்தாள்.

அவனும் சம்மதித்துத் தனி ஒருவன் ஆகவே அம்மாளிகை அடைந்தான். ஆறுவாயில்கள் கடந்தான். அணங்கனார் ஆலத்தி சுற்றி வரவேற்றனர்.

ஏழாம் வாயில் அடைந்தான். ஏந்திழை ஒருத்தி அவன் கைத்தலம் பற்றிக் கட்டிலில் அமர்த்தினாள். பல்கீசை அழைத்து வருவதாகக் கூறி அடுத்த அறையுள் புகுந்தாள். செய்தி செப்பினாள்.

பல்கீசு பல்வித அலங்காரங்கள் மேவி, மென்மெல நடந்து சென்றாள். தன் உயிர்த் தோழி ஒருத்தியிடம் பிறர் காதுபடா வகை தன் திட்டத்தை விரித்து உரைத்தாள்.

இதனைக் குறிப்பிடப் புலவர்,

"ஓர் பெண் கிளியின்பால் செவியிற் சொல்வாள்" (30-26 (4) என்பார்.

கம்பன் தன் இராமகாதையில், யுத்தகாண்டத்தில், பிரம்மாத் திரத்தால் இலக்குவன் முதலியோர் பிணிக்கப்பட்டு கிடக்கக்கண்ட இராமன், இலக்குவன் மேல் விழுந்து ஆற்றாது புலம்பி, சோர்ந்து மூர்ச்சை அடைந்து அவன் உடல் மேல் வீழ்ந்து விடுகிறான், என்று கூறுவான்.

இக்காட்சியைச் சீதை காணின் இறந்தனர் போலும் எனத் தெளிந்து, பின் தனக்கு இணங்கலும் கூடும் என எண்ணிய இராவணன் சீதை களம் காண ஏற்பாடு செய்கிறான்.

களம் கண்ட சீதை கண்சிதைய, கையால் மோதினாள்; வயிறு அலைத்தாள்; அழுதாள்; தொழுதாள்; சுருண்டாள்; கொதித் தாள்; பதைத்தாள்; வியர்த்தாள்; அயர்த்தாள்; வெதும்பினாள்; சோர்ந்தாள்.

"இனி, இன்று இடர் ஆறிட, யான் விழுவேன், அவன் மேனி யின் மீதில்" என்று துணிந்து எழுந்தாள்.

மாடு நின்ற, தேடிய தவம் அன்னத் திரிசடை, இராமன் முதலியோர் இறக்கவில்லை என்றும், இதுவும் ஒரு மாயமே என்றும் சீதையிடம் சொல்லி அவளைத் தேற்றுகிறாள்.

இச்செய்தியைச் சூழ்ந்து இருக்கும் அரக்கியர் அறியல் ஆகாது என்பதற்காகப் பாவையைத் தழுவிக்கொண்டு,

"செவியிடைக் குறுகிச் சொன்னாள்" என்று கம்பன் கூறுவான் (8592)

கம்பனைப் பயின்றமை, காவியத்தில் அமைக்க பயன்படுத்திக் கொள்ள உதவியமை காணலாம்.



பல்கீசுக்குப்பத்திரம் அனுப்பியபடலத்தில், இன்பின்[1] எகுபீறு[2] இடம் "அன்பரே! நீர் நாரியின் அழகு முழுதும் நோக்கி, நபியிடை கூறின் அவர் மகிழ்ச்சி அடைவார். எனவே அவர் காண வருக" என்று கூறி அழைத்துச் சென்றது எனக் கண்டோம்.

பத்தி எமன் நாட்டு மாளிகைக் கொடிகள் "அணங்குக்கும்! நபிக்கும் காரண வதுவை பொருத்தவம்" என நின்று அழைத்தல் போல் இருந்தன (31:35) என்று புலவர் குறிப்பிடுவார்.

இப்பாடல்,

'மை அறு மலரின் நீங்கி, யான் செய் மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்' என்று, செழு மணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை, 'ஒல்லைவா' என்று அழைப்பது போன்றது அம்மா,
(கம்பன் 480)

என்ற கம்பனது மிதிலைக் காட்சிப் படலப் பாடலுடன் ஒப்பிட்டு நோக்கத்தக்கது.



பல்கீசு திருமணப் படலத்துள் சுலைமான் நபி அவர்கள் திரு மணத்திற்காக நகர மக்கள் தம்தம் மனைகளை அலங்கரிக்கத் தொடங்கினர், என்று கண்டோம்.

---

1 எமன்நாட்டு குதுகுது; 2 சுலைமான்நபி குதுகுது

குப்பை, கூளங்களை, அகற்றித் தூய்மை செய்தனர்.

அவ்வாறு வாரி எடுத்து எறிந்தன எவை, என்பதனை வண்ணக் களஞ்சியப் புலவர்,

கடைந்த வேல் விழியார் தொய்யில் காய்ந்து உதிர் கலவை தூளும்
நடந்திடப் பரப்பல் செய்த நறும்பசும் கொழுந்தும் பூவும்
உடம்பு எழிற்கு இணை ஒவ்வாது என்று எறிந்த பொன்மணி ஒண்பூணும்
இடம்பட கிடந்தது எல்லாம் எடுத்து எடுத்து எறிவர் வாரி,
(34.10)

என்று குறிப்பிட்டு அமைவர்.

குழை கொண்டு கோழி எறியும் செல்வ வாழ்க்கையர் என்பதனைக் குறிப்பது இது.

கம்பனும், ''நிலம் தினக் கிடந்த செல்வ நிலையினை'' நிகழ்த்தும் பொழுது மிதிலைக் காட்சிப் படலத்தில்,

சொல் கலை முனிவன் உண்ட சுடர்மணிக் கடலும், துன்னி
அல் கலந்து இலங்கு பல்மீன் அரும்பிய வானும் போல,
வில் கலை நுதலினாரும், மைந்தரும், வெறுத்து நீத்த
பொன் கலன் கிடந்த மாட நெடுந்தெரு அதனில் போனார்.

என்று அமைத்துள்ளான். (கம்பன் 484)

மேலும் இராவணன் ஆட்சிப் பெருமிதத்தையும், செல்வ வளத்தையும் குறிப்பிடுவது போல், ஆரண்ய காண்டத்துள், சூர்ப்பணகைச் சூழ்ச்சிப் படலத்துள்.

நறை மலர்த் தாதும் தேனும், நளிர் நெடு மகுடகோடி
முறை முறை அறையச் சிந்தி முரிந்து உகும் மணியும் முத்தும்,
தறையிடை உகாத முன்னம் தாங்கினன் தழுவி வாங்கி,
துறை தொறும் தொடர்ந்து நின்று, சமீரணன் துடைப்ப
மன்னோ (கம்பன் 3081)

என்ற பாடலை அமைத்துள்ளான்.

இப்பாடல்கள், பெரும் புலவர்கள் ஒத்த கருத்தினர் என்ற உலகினர் கூற்றை மெய்ப்பிக்க அமைந்துள்ளன என்று அறியலாம்.



சுலைமான் நபி அவர்கள் திருமணச் செய்தி அறிந்து வயவரும் வளைக்கையாரும் தம் தம் வீடுகள், அலங்கரித்தனர்.

படிக வெண் கால்கள் நாட்டி, பவளச்செல் வளைகள் ஏற்றி,
வடிவு உற அதன்மேல் செம்பொன் மாற்றுஉயர் தகடுசேர்த்து,
நெடிய காவணங்கள் செய்வார்'' (34:112)

என்று புலவர் பாடுவார்.

மேலும் அப்பந்தர்ச் சிறப்பைப் பகரும் பொழுது,

''ஒண் மணிக் கதிர்கள் ஒன்றோடு ஒன்று தாக்குவதால் ஆரம்
வெண்மணி சிவப்பாய், செம்மையின் மணி கறுப்பாய் பந்தர்
உண்மணி எவையும் பேதித்து ஒளிர்தல் சேர்க்கையினால்
தோன்றல்
கண்மணி கொடு பார்த்து ஆயும் என இங்கு காட்டல்
[போலும் (34:19)

என்று பாடுவார்.

இப்பாடலில் பல சிறப்புகளைக் காணலாம். ஒண்மணிக் கதிர்க் கற்றைகள் ஒன்றோடு ஒன்று தாக்குகின்றன. அதன் காரணம் ஆகப் பல மணிகளின் இயற்கை வண்ணங்கள் மாறித் தோன்றுகின்றன. இப்படி நிற மாற்றம் பெறுவதனைப் புலவர் ''பேதித்து ஒளிர்தல்'' என்று குறிப்பிடுகிறார்.

''பேதித்து ஒளிர்தல்'' பற்றிக் கம்பன் தன் காவியத்தில் குறிப்பிடுவதனை இங்கு ஒப்பு காண்பது நயம் பயக்கும்.

அநுமன் கடல் கடந்து இலங்கை நகர்ப்புக்கான். ''ஆத்துறு சாலை, ஆனையின் கூடம், மாத்துறு மாடம், வாசியின் பந்தி, காத்து உறு சோலை,'' போல் பல இடங்களில் வாவிச் சென்றான்.

மாடமாளிகைகளில் இடை துருவிச் செல்லும் பொழுது,

பெரிய நாள் ஒளி கொள் நானாவித மணிப்பித்தி பத்தி
சொரியும் மா நிழல் அங்கங்கே சுற்றலால், காலின் தோன்றல்,
கரியன் ஆய், வெளியன் ஆகி, செய்யன்ஆய், காட்டும்—
காண்டற்கு
அரியன் ஆய், எளியன் ஆய், தன் அகத்து உறை அழகனே
[போல் (கம்பன் 4936)

என்று பாடுவான் கம்பன்.

இவ்விரு பாடல்களின் ஒற்றுமை கண்டு வியப்பதும், நயப்பதும் செய்வோம், நாம்.

பாராட்டத்தக்க பாடல்களில் இதுவும் ஒன்று.

வண்ணக் களஞ்சியப் புலவர் மணிகளின் இயல் நிறத்தைக் குறிப்பிடும் பொழுது, வெண்மணி சிவப்பாகவும், செம்மை வியன் மணி கறுப்பாகவும் தோன்றின என்று எடுத்துக் காட்டுவார். தன் இயல் ஒளி மாறி பேதித்து ஒளிர்ந்தது எனவும் குறிப்பார்.

''அநுமன் பிராட்டியைத் தேடிக் கொண்டு இலங்கையில் பல இடங்களில் செல்கின்ற பொழுது, நீல நிற மணிகள் பதித்த சுவர் களின் ஒளி தன் மேல் வீசுகின்ற இடத்துத் தான் நீல நிறம் உடை யவன் ஆகவும், வெண்ணிற மணிகள் பதித்த சுவர் ஒளி தன் மேல் வீசுகின்ற இடத்துத் தான் வெளியன் ஆகவும், செந்நிற மணிகள் பதித்த சுவர் ஒளி தன்மேல் வீசுகின்ற இடத்துத் தான் செய்யன் ஆகவும் தோன்றினான்''*

அநுமன் இலங்கை மாளிகைகளில் பித்திகளில் பதித்த நானா வித மணிவரிசைகள் காலும் ஒளியால், ஊடுபோகும் பொழுது கரியனாக, வெளியனாக, செய்யனாகத் தோன்றினான் என்று கம்பன் கூறிவிட்டு, வழக்கம்போல் பொருள் பொதியும் நான்காம் அடியில் அநுமனுடைய அந்த பேதித்த வண்ணத்தை அடிப்படை இறைத் தத்துவத்திற்கு உவமையாகக் காட்டுவான்.



மேலும் திருமணப் படலத்தில் மணமகன் ஆகிய சுலைமான் நபி அவர்கள், புனல் ஆடி, புத்துடை தரித்து புனைவன புனைந்து, ஒப்பனை மேவி, பவனி புறப்படுமுன் மருங்கில் கச்சில் குற்றுடை வாள் விசித்தார் என்று புலவர் கூறுவார்.

அக் குறுவாளின் பெருஞ்சிறப்பைப் பெருமிதம் தோன்றவே பாடுவார்.

''மலரடி பணியார் மருமத்துள் புகுந்து
மனத்தினில் புகுந்து அந்த மனத்துள்
உலவிய துணிவு எவ்விடத்து உள என ஆய்ந்து
உட்புகுந்து அற துளைத்து உருவி
இலகி, வென்கொடுத்தோர்க்கு இரப்பு உயிர் கொடுத்திட்டு
இவர் தலைமை நோக்க ஒணாது எனவே
விலகி வந்து உறையுள் புகு...'' (34:62)

என்று பாடுவார்.

இப்பாடலின் முதல் மூன்று அடிகள் குற்றுடைவாள் பெற்றுள்ள திறத்தைக் காட்டுவனவாக அமைகின்றன.

* திரு. வை.மு. கோபால கிருஷ்ணமாச்சார்யார் உரை.

இவ்வடை மொழிகள் படிப்பார்க்கு இராமனது கணைச் சிறப்பையே நினைவில் கொணரும்.

இராவணன் வீழ்ந்து கிடக்கிறான். மலை எடுத்த திண்டோள் மண்படிந்து கிடக்க, சினம் அடங்க, மனம் அடங்க, செயல் அடங்க, மயல் அடங்க, போரிடை மீண்டு ஒருவருக்கும் புறங்கொடாப் போர்வீரன் பொருது வீழ்ந்து கிடக்கிறான்.

முலைமிசைத் தூங்கிய முகத்தளாய்க் களம் போந்த மயன் மகள், இதுகண்டு, மரங்களும் மலைகளும் உருக, வாய் திறந்து பன்னினாள்.

வெள் எருக்கம் சடைமுடியான் வெற்பு எடுத்த
  திருமேனி, மேலும் கீழும்,
எள் இருக்கும் இடன் இன்றி, உயிர் இருக்கும்
  இடன் நாடி, இழைத்த ஆறோ?
''கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
  மனச் சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும்'' எனக்கருதி, உடல் புகுந்து,
  தடவியதோ ஒருவன் வாளி? (கம்பன் 9940)

என்று புலம்புவாள்.

பொன் துஞ்சு மார்பத்தைப் பொத்தல் செய்து, சல்லடைக் கண்களாகத் துளைத்து நின்ற இராமன் கணைத்திறனையும், சுலைமான் நபி அவர்கள் குற்றுவாள் திறனையும் புலவர்கள் சொல்வழி ஒப்பிட்டுப் பார்ப்பது நன்று.



தமிழ் இலக்கியங்கள் யாவற்றிலும் பெண்களின் இடை மிகச் சிறியதாகவே இருப்பதாகக் கூறும் மரபு உண்டு. 'இட்டிடை', 'நொவ்விடை', 'இடுங்கு இடை', 'நூலிடை', 'ஈக்காற்றுக்குஆற்றா இடை', 'உபய தன அசைவில் ஒடியும் இடை' 'பொய் உலாம் இடை' என்றெல்லாம் கூறும் குறிப்புகள் உண்டு.

எந்த அளவிற்கு இடை மெல்லிதாக இருக்கும் என்றால் 'இடை என ஒன்று உண்டோ? இலையோ' எனப் பிறர் மயங்கும் அளவிற்கு.

இதனைப்பற்றி வண்ணக் களஞ்சியப் புலவர் திருமணப் படலத்தில்,

தேனது உள்உறை சுவை என மணி ஒளி திரண்டு
தான மெல்லியர் உரு எடுத்து என இடை தமக்கு உண்டு
ஆனது இல் என உண்டு என தென்றலில் அசையும்
வான மின் என மயில் என தோன்றினர் மடவார் (34:87)

என்று பாடுவார்.

இக் கருத்து கம்பன் காவியத்தில் பாலகாண்டத்தில், கோலங் காண் படலத்தில்,

சில் இயல் ஓதி கொங்கை திரள் மணி கனகச் செப்பில்,
வல்லியும் அனங்கன் வில்லும் மான்மதச் சாந்தின் தீட்டி,
பல் இயல் நெறியின் பார்க்கும் பரம்பொருள் என்ன,யார்க்கும்
'இல்லை', 'உண்டு', என்ன நின்ற இடையினுக்கு இடுக்கண்
[சேர்த்தார் (கம்பன் 1128)

என்ற பாடலில் காண்கிறோம்.



பவுன வகு வதைப்படலத்தில், பவுனவகு போர்க்குப் புறப் படும்பொழுது யாது செய்தான் என்று குறிப்பிடும்போது, அவன்,

இன்னமுது அருந்தி பூணும் இளவெயில் முடியும் சூட்டி
பன்னருங் கலவை பூசி படைக்கலம் எவையும் பூண்டு
பொன்னொடு மணியும் தூசும் புயல் என இரப்போர்க்கு ஈந்து
மன்னன் மாளிகையை நீங்கி மதகரி ஏறினானே. (35:18)

என்பார்.

கிளையொடு சுற்றம் முற்றும், கிளர் போர்க்களத்து அவியக் கண்டும், சிந்தை அழியான் ஆகி "இன்று இரண்டின் ஒன்று ஆக்குவென்" என்று வஞ்சினம் கூறி நின்ற இராவணன்,

"ஈசனை, இமையா முக்கண் ஒருவனை, இருமைக்கு ஏற்ற
பூசனை முறையின் செய்து, திருமறை புகன்ற தானம்
வீசினன் இயற்றி, மற்றும் வேட்டன வேட்டோர்க்கு எல்லாம்
ஆசு அற நல்கி, ஒல்காப் போர்த்தொழிற்கு அமைவதானான்

என்றும், (கம்பன் 9644)

கறங்கு மணித்தேரில் ஏறிக் களம் புகுமுன் அதற்கும் வழி பாடு நெறியின் செய்து,

அனைய தேரினை அருச்சனை வரன்முறை ஆற்றி,
இனையர் என்பது ஓர் கணக்கு இலா மறையவர் எவர்க்கும்
வினையின் நல் நிதி முதலிய அளப்ப அரும் வெறுக்கை
நினையின் நீண்டது ஓர் பெருங்கொடை அருங்கடன்
நேர்ந்தான் (கம்பன் 9665)

என்றும் கம்பன் பாடுவான்.

ஒத்த கருத்தினவாய் இவை அமைந்திருப்பது கண்டு உவப்போம் நாம்.



பவுனவகு வதைப் படலத்தில் போரிடை, எதிரில் ஆற்றல் சால் ஜின்கள் எதிர்ப்பினும், எள் அளவும் மனஉரம் குறையாராய், உடல் உறுப்புகள் கூறுபடுவதாயினும் அஞ்சாராய், அடர்த்தனர் வீரர் என்று வண்ணக் களஞ்சியப் புலவர் பாடியுள்ளார்.

மற்று ஒருவனின் ஓர் கண்ணில் வாளி பாய்ந்தன, வயிற்றில்
குற்றுற குடர் சரிந்து தொங்கின. எறிகூர்வேல் மார்பு
உற்றது ஓர் கரமும் அற்றது. ஒரு கண்ணும் மிகையான்
கைக்கொண்டு
அற்றகால் அறுகை தூக்கி அடித்து அடித்து அடரல் உற்றான்
(35:30)

என்பார் புலவர்.

இவனது வீரச் செயல் கும்பகர்ணன் போரிடை விளைத்த வீரச் செயலோடு ஒப்பிட்டுப் போற்றத் தக்கது அன்றோ?

''தாளுடை மலை'' என சமரம் வேட்டு, எதிர்ப்பார் அன்னவரும் பொன்ற வென்ற விறலன், மேம்படு திறலன் கும்பகர்ணன் இராமன் துரந்த சரம் அதனால் வலக்கை இழந்தான்; அஞ்சிலன், ஆற்றல் குறைந்திலன்;

''அற்று வீழ்ந்த கை அறாத வெங்கையினால்
எடுத்து, அவன் ஆர்த்து ஓடி
எற்ற வீழ்ந்தன, எயிறு இளித்து ஓடின
வானரக் குலம் எல்லாம்'' (கம்பன் 7609)

என்பான் கம்பன்.



முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில் சுலைமான் நபி அவர்கள் எந்த அளவிற்குத் துன்பத்திற்கு உள்ளானார்கள் என்று கண்டோம்.

அப்போது அவர் தன் நிலை குறித்து வருந்தினார்.

கொடியோன், வலையினர் குடியோன், கொலை நிறை விழியோன், சிலையினும் கனத்த ஒரு தடி எடுத்து சென்னி மீது அடித்தான்.

எண்ணற அடிக்கும் அடியினில் தடியும்
இலைதய ஊக்கமும் முறிந்த அதன்பின்
கண் அகத்து அருள் அற்றவன் விடுத்தனன்
மேல் கவன்றிலர் எதிர்ந்து ஒரு மொழியும்.
அண்ணல் உள் உருகி, மலர்விழி வழி நீர்
அருவிபோல் சொரிந்திட அழுதார்.
மண்ணக மடந்தை அழுதனள். கூற்றும்,
மலக்குகள் எவர்களும் அழுதார். (36:33)

மலை உருகின; வெண்கயம் உருகின; மீன்,
மதி, கதிர் உருகின; வான
நிலை உருகின; ஏழ் முகில் உருகின; புண்
ணியம் உருகின; சல சரத்தோடு
அலை உருகின; காற்றுகளோடு நெருப்பும்
அளவற உருகின; தழைக்கும்
இலை உள தருவும், இறந்துள தருவும்
எவையுமே உருகின அம்மா! (37:34)

என்று பாடுவார்.

இவ்விரு பாடல்களும், கம்பனது நூலில் யுத்தகாண்டப் பகுதியில் சீதை களம் காண் படலத்தில் அமைந்துள்ள இருபாடல் களோடு ஒப்பிடற்கு உரியன. கம்பன் கூறுவான்,

மங்கை அழலும்—வான் நாட்டு
மயில்கள் அழுதார்; மழ விடையோன்
பங்கின் உறையும் குயில் அழுதாள்;
பதுமத்து இருந்த மாது அழுதாள்;
கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்; கமலத் தடங்கண்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கிமாரும் தளர்ந்து அழுதார்.

பொன் தாழ் குழையாள் தனை ஈன்ற
பூ மா மடந்தை புரிந்து அழுதாள்;
குன்றா மறையும், தருமமும், மெய்
குழைந்து குழைந்து, விழுந்து அழுத;
பின்றாது உடற்றும் பெரும் பாவம்
அழுத; பின் என் பிறர் செய்கை?
நின்றார் நின்றபடி அழுதார்;
நினைப்பும் உயிர்ப்பும் நீந்திட்டாள்.

என்று. (கம்பன் 8675, 76)

அவலச் சுவைக்குக் கொடுமுடியாக அமைந்த பாடல்கள் இவை.



முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில் எளியவள் ஒருத்தியை நிந்தனை நினைத்ததற்காகவும், மனைவியை மகிழ்விக்க வேண்டி உருவம் சமைத்து அளித்ததற்காகவும் உவமை இலான் தண்டனை புரிய உன்னினான், என்பதனையும் பின்னர் நிகழ்ந்தவும் நாம் கண்டோம்.

தன் தவறு உணர்ந்த தகை சால் நபி
''என்னரும் பிழையைப் பொறுத்து அருள் புரி'' என்று
இறைஞ்சியே எழுந்தனர். எழலும்
பன்னரும் பழிப்புக்கு உவமை இல் என ஆய்
படர் உடல் கோரமும் அகன்று,
முன் இருந்ததின் மும்மடங்கு எழில் படைத்தார்.
முதிர் புலால் கமழ் வலையினர் பெண்
பொன் இருந்து ஒளிரும் சுவன மங்கையர் போல்
புனித சுந்தரம் மிகுந்தனளே (36:56)

என்று புலவர் பாடுவார்.

தான் செய் தவறுதன்னை நீடு நினைந்து மன்றாட்டு வேண்டிய சுலைமான் நபி அவர்களை இறைவன் மன்னித்ததோடு அன்றி பழைய உருவத்தையும், அவர் மனைவியாகிய அம்மீனவப் பெண்ணுக்கும் புதிய அழகையும் அளித்தான் என்று கண்டோம்.

இப்பாடலில் அமைந்திருக்கின்ற பொது அழகு, அல்லாமல் ஓர் சிறப்பழகும் உண்டு.

மனிதன் எவ்வளவு உயர்ந்தவனாக இருந்தாலும் அவன் மனிதன் என்ற காரணத்தினால் தவறு செய்யக் கூடியவனே.

எனினும், தன் தவறு உணர்ந்து மனம் உருகி இறைவனைப் பிரார்த்தித்தால், அவனுடைய மன்னிப்பு கிடைப்பதோடு மாசு அகன்று புடம் போட்ட தங்கம் போல் புதுப் பொலிவும் பெறுவான்.

இதன் காரணம் ஆக முதலில் இருந்த ஒளியும் எழிலும், பன் மடங்கு பெருகித் தோன்றும்.

இக் கருத்தை உணர்த்துவது போல் அமைந்தது வண்ணக் களஞ்சியர் பாடல்.

இப்பாடலில் அமைந்துள்ள சொல் ஆட்சியும், அது உணர்த்தும் கருத்தும் கம்பன் பாடலை நாம் காணச் செய்யும்.

கம்பன், யுத்த காண்டத்தில் இராவணன் வதைப் படலத்தில், மனமாசுகள் முற்றும் அகன்று, உயிர்துறந்தான் ஆகிய இராவணன் முகப் பொலிவைப் பாராட்டி,

வெம் மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க,
மனம் அடங்க, வினையம் வீய,
தெவ் மடங்க, பொரு தடக்கைச் செயல் அடங்க,
மயல் அடங்க, ஆற்றல் தேய,
தம் அடங்கு முனிவரையும் தலை அடங்கா,
நிலை அடங்கச் சாய்த்த நாளின்
மும் மடங்கு பொலிந்தன, அம் முறை துறந்தான்
உயிர் துறந்த முகங்கள் அம்மா! (கம்பன் 9902)

என்று பாடுவான் கம்பன்.

உன்னுதொறும், உன்னுதொறும் உலப்பில் மகிழ்ச்சியை அளிப்பன இப்பாடல்கள் ஆகும்.

## 5(இ) வண்ணக் களஞ்சியப் புலவரும் உமறுப்புலவரும்

கடவுள் வாழ்த்துப் படலத்தில் தமக்கு முன்னர்த் தோன்றிய புலவர் பெருமக்களைப் போற்றிய வண்ணக் களஞ்சியப் புலவர், சீறாப் புராணம் இயற்றிய உமறுப் புலவர் பற்றி எத்துணை மதிப் போடும், மரியாதையோடும் குறிப்பிட்டிருக்கிறார் என்பதனைக் கண்டோம்.

தம் இராஜநாயகக் காப்பியத்தைச் சீறாப் புராணத்தை ஒட்டியதாக அமைக்கவே வண்ணக் களஞ்சியப் புலவர், பெரிதும் முயன்றிருக்கிறார் என்பதற்கு இதுவே சான்றுஆகும்.

சீறாப்புராணக் காப்பியப் பொருளும், இராஜ நாயகக் காப்பியப் பொருளும் எத்தனையோ விதங்களில் மாறுபட்டவை. எனினும், உமறுப்புலவர் காட்டிய பாதையிலேயே வண்ணக் களஞ்சியப் புலவர் நடைபோட முயன்றிருக்கிறார் என்பது இரு காப்பியங்களையும் படிப்பார்க்குத் தெற்றென விளங்கும்.

இச் சூழலில் சீறாப்புராணத்தோடு இராஜ நாயகத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது என்றால், அதுவே தனி நூலாக அமையும் சிறப்புடையது.

எனவே, இங்கு உமறுப்புலவரை எட்டிப் பிடிக்க முயன்று அம் முயற்சியில் அவரை விஞ்சிவிட்ட வண்ணக் களஞ்சியப் புலவரின் ஒரு பாடலை மாத்திரம் கண்டு அமைதி பெறலாம்.

முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கும், கதீஜா நாயகியாருக்கும் இடையே நடந்த திருமணத்தைத் தம் காவியத்தில், மணம்புரி படலத்தில் உமறுப்புலவர் விளக்குகிறார்.

இங்கும் மணமகன் ஆகிய முகம்மது நபி (ஸல்) அவர்கள் குதிரை மீது ஏறி பவனி வருகிறார்கள். அந்தப் பவனியையும், அப்படிப் பவனி வரும் மணமகனையும் காணப் பெண்கள் திரண்டனர் எனவும், உமறுப் புலவர் பாடுவார். பவனி வரும் மணமகனைக் கண்ணாரக் காணவேண்டும் என்ற தீராத ஆவல் அந்தப் பெண்களுக்கு.

ஆனால் மணமகனைச் சுமந்து செல்லும் குதிரையோ அவர்களின் ஆவலின் அளவிற்கு மெதுவாகச் செல்லவில்லை; செல்வதாகவும் அவர்களுக்குத் தோன்றவில்லை.

இதன் காரணம் ஆக, அந்தக்குதிரையை அவர்கள் பழிக்கிறார்கள். இதனை உமறுப் புலவர்,

ஆர வாருதியில் தோன்றும் அமுது அனார், பரியை நோக்கிப்
"பாரிடை பையப் பையச் செல்" என பரிவிற் சொல்வார்;
வாரமா மறுகிற் போதக மனம் அற மறுகி நின்னைக்
கோரம் என்று இதற்கோ பேரிட்டு உலக எலாம் கூறிற்று"
என்பார் (சீறா. மணம் புரிபடலம், 62)

என்று பாடுவார்.

இப்பாடல் சிறப்பு யாது எனில் குதிரைக்குக் கோரம் என்ற பெயருமுண்டு. கோரம் என்ற சொல்லுக்கு அழகின்மை, அவலட்சணம் என்ற பொருள்களும் உண்டு என்பதே.

தங்கள் ஆவல் தீர மணமகனை நின்று நிதானமாகக் காண முடியவில்லையே என்ற ஆதங்கத்தில் அக்குதிரையைப் பெண்கள் பழிக்கின்றனர். இவ்வாறு பழிப்புக்கு இடமளிப்பது "கோரம்" என்ற குதிரையின் பெயர்.

தங்கள் ஆவல் நிறைவேறாமையினால், அதற்குக் காரணமாக இருந்த வேகமாகச் செல்லும் குதிரையைக் 'கோரம்' என்று உலகோர் குறிப்பிடுவது சரிதான் என்று அவர்கள் கூறுவது போல் அமைந்துள்ளது.

அவர்கள் ஏமாற்றத்தையும் அதனால் அவர்கட்கு குதிரை மீது ஏற்பட்ட வருத்தத்தையும், பேசிய வசைமொழியையும் இப்பாடல் அற்புதமாக எடுத்துக் காட்டுகிறது.

இதே போன்ற ஒரு காட்சியையும், இதேபோன்ற மகளிர் மன நிலையையும், வண்ணக் களஞ்சியப் புலவர், தமது இராஜநாயகக் காப்பியத்தில் பல்கீசு திருமணப் படலத்தில் குறிப்பிடுகிறார்.

அப்படி அவர் குறிக்கும் பாடல்,

உள் சுமந்தது என் கண்மணி இதில் நபி உறைந்தார்
கட்சி கொண்டு இங்கு ஆர் செல்வது என்றனள் ஒரு கன்னி;
வெட்சி மன்றலம் குழல் மற்றோர் பெண், "மெல மெல செல்;
பட்சி என்ற பேர் தவிர்" எனப் பரிவொடுபகர்ந்தாள். (34:114)

என்பது ஆகும்.

இங்கும் பவனி காண வந்த பாவையருள் ஒருத்தி, மணமகன் ஆகிய சுலைமான் நபி அவர்களைச் சுமந்து செல்லும் குதிரை மென் மெலச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறாள். அப்படிச் சொல்லும் பொழுது அக்குதிரையினிடம் அறிவுரை பகர்கிறாள்.

குதிரைக்குப் 'பட்சி' என்ற பெயரும் உண்டு. 'பட்சி' என்ற சொல்லைப் படித்த உடன், கேட்ட உடன், யாவர்க்கும் மனத்தில் தோன்றுவது விண் இயங்கு பறவைதான்.

பறவை என்பது காரணப் பெயர். அதே சமயத்தில்மிகவேகமாக ஓடும் குதிரையை நாம் "குதிரை பறந்து போகிறது" என்போம்.

ஆகவே 'பட்சி' என்ற பெயர் வேகமாக ஓடுவதால், குதிரைக்குப் பொருத்தமாக அமைகிறது. இங்கோ பவனி காண வந்த பெண் ஒருத்தி மணமகனைச் சுமந்து செல்லும் குதிரை மென் மெலச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறாள்.

அந்த விருப்பத்தைக் குதிரையிடமே தெரிவிப்பது போல், "பட்சி என்ற பேர் தவிர்" என்கிறாள்.

"உனக்குப் பட்சி என்று பெயர் உண்டு என்பதனை நாங்களும் அறிவோம். வேகமாக ஓடும் திறமை இருப்பதால்தான் அப்பெயர் உனக்குப் பொருத்தமாக அமைகிறது. இதனையும் அறிவோம். ஆனால் இங்கு நீ அப்பெயர் தவிர்த்து விட்டு, வேகம் விட்டு மெதுவாகச் செல்லல் ஆகாதோ?" என்று கூறுவதாகப் புலவர் பாடுகிறார்.

உமறுப் புலவர் பாடலில் 'கோரம்' என்ற சொல் ஆளப்பெற்று இருக்கிறது. அங்கு தோன்றுவது ஏமாற்றமும், வெறுப்பும், வசையுமே ஆகும்.

இங்கோ 'பட்சி' என்ற சொல் ஆளப் பெற்றுள்ளது. 'பட்சி' என்ற சொல் 'கோரம்' என்ற சொல்லை விடக் குதிரைக்குப் பொருத்தமான பெயர் ஆகிறது.

பெண்கள், அருவருப்பையோ, வசையையோ ,வெளிக்காட்டாமல் மணமகனைச் சுமந்து செல்லும் குதிரையிடத்தில் பரிவோடு அதற்கு அறிவுரை கூறுவதாக வண்ணக் களஞ்சியப் புலவர் பாடல் அமைந்திருக்கிறது என்பதனை நாம் காண்கிறோம்.

## 5 (ஈ) வண்ணக்களஞ்சியப் புலவரும் பிற புலவர்களும்

(ஒத்த கருத்தின)

வண்ணக் களஞ்சியப் புலவரோடு வள்ளுவர், கம்பர், உமறுப் புலவர் ஆகியவர்களை மேலே ஒப்பு நோக்க முயன்று இருக்கின்றோம்.

இப்பகுதியிலும், விளக்கப்படும் கருத்துகளோடு அவர்கள் கருத்துகளும் ஒத்திருக்கும் இடங்கள் குறிப்பிடப் பெறுகின்றன.

- குவி இரு வினை எனும் கோது (1:1)
  இருள் சேர் இருவினை (திருக்குறள் 5)
- அலை கடல் சுவறிட (1:12)
  வாரி சுவறிட வேலை விடவல (திருப்புகழ்)
- மதி தவழ் மணி முடி மாட மக்க மாபதி (1:20)
  மதி மலி புரிசை மாடக்கூடல் (திருமுகப்பாசுரம்)

○ ஒவ்வு பால் சலம் பிரித்து உதவும் அன்னம் (1:22)
நீரொழியப் பால் உண் குருகின் (நாலடியார்-135)

○ அட்ட திக் கயம் ஒருப்படக் கதறல் போல் (2:2)
களிற்றெதிர் முழக்கும் கருவி வானம் (தனிப்பாடல்)

○ பல்கீசு இடை போல் மின்னி
எம்மை ஆளுடையாள் இட்டிடையின் (2:2)
மின்னி (திருவெம்பாவை, 16)

○ பெருங் குளிரால் வயிற்றிடைத் தலை நுழைத்து (2:4)
கையது கொண்டு மெய்யது பொத்தி
காலது கொண்டு மேலது தழீஇ (சத்திமுற்றப்புலவர்)

○ பாறையிட்ட வெண்டயிர் (2:13)
முளி தயிர் (குறுந். 167)
செந்தயிர்க் கண்டம் (கம்பன் 53)

○ தெய்வம் முன்னி தொழுது நல் தினம் குறித்து (2:21)
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி (நெடுநல். 77)

○ சிறியவர் மனப் பெருமையைப் போல் (2:26)
சிறியவர் மனப் பெருமைபோல் (முக்கூடல்பள்ளு. 51)

○ நெற்பயிர் இறுமாப்பு (2:26)
சொல் அரும் சூல் பசும்பாம்பு... (சீவகம்.53)

○ கூன் இரும்பு அதனால் அரிந்து (2:27)
கூனிக் குயத்தின் வாய் நெல் அரிந்து (பொருந். 242)

○ திகழ் மணிச் சகடத்து எடுத்து (2:28)
நெறிகளும் புதைய, பண்டி நிறைத்து (கம்பன். 51)

○ சுரும்பு,மூட உட் கிடந்து ஒலிக்கும் (2:32)
முள்தாள் தாமரை துஞ்சி (திருமுருகு. 73)

○ மேதி குவளைவாய் குதட்டி (2:33)
கழு நீர் மேய்ந்த கயவாய் எருமை (சிறுபாண்.42)

○ கவி மாங்கனியினால் எறிய (2:34)
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்
பந்தடிக்கும் (குற்றாலக் குறவஞ்சி. 68)

○ மலை எனும் முலை குலுங்குவது வாடுமெல் இடை ஒடிந்திடும் (3:11)
உபய தனம் அசையில் ஒடியும் இடை (கலி. பரணி 2:38)

○ கரத்தில் நெல்லியைப் போல் (3:16)
கை உறு நெல்லியங்கனியில் (கம்பன் 5252)

○ மண்ணிலிச்சை கொள் விருப்பம் (5:49)
வயவு உறு மகளிர் வேட்டுஉணின் அல்லது (புறம் 20)

○ வான் முளைக்கும் கதிர் மதியும் எவையும் அமைத்தவன்(5:67)
மன்னிய நாள்மீன் மதி கனலி என்று இவற்றை
முன்னம் படைத்த முதல்வன் (முத்.1)

○ எவர்க்கும் நற்பொருள்கள் அறிவுடைப் புதல்வர் போல் (6:9)
உண்டோ? நன்கலம் நன்மக்கட்பேறு (திருக்குறள் 60)

○ விடைத்து எலும்பு எழு விலா (7:2)
ஊன் கெடு மார்பு
என்பு எழுந்து இயங்கும் யாக்கை (திருமுருகு. 129,130)

○ முழந்தாள் மட்டும் வளர்ந்து இருந்தபுல் (7:5)
களிறு மாய் கழனி (சீவகம் . 54,1617)
களிறு மாய்க்குங் கதிர்க்கழனி (மதுரைக் 247)

○ தத்துக்கும் பிழைத்து இருந்தேன் (7:10)
தத்துறு சிந்தையர் தளரும் தேவர் (கம்பன். 3099)
தத்துறல் ஒழிந்திலை (கம்பன். 5383)

○ தேனுவோடு அகத்தில் சேர்ந்தார் (7:28)
உம்பர் தரு, தேனு, மணி, கசிவாகி (திருப்புகழ்)

○ அடையலர்க்கு இடியேறு (9:2)
பாண்டியர் குலாசனி (மெய்க்கீர்த்தி)

○ கவர்ந்த என்றன் நெஞ்சத்தை என்னிடத்தில் ஈந்து (9:8)
கொண்ட என் நெஞ்சினைத்
தந்தனை சென்மோ (தனிப்பாடல்)

○ குதித்து அன்றோ நடந்து ஒளித்தாய் கொப்புளம்
கொண்டதேயோ? (9:10)
மரல் பழுத்தன்ன மறுகுநீர் மொக்குள் (பொருந். 45)
குஞ்சித்து நடத்தலின் (சிலம்பு. உரை)

○ நீண்ட மயிர் சினக் கரடி (9:33)
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉ மயிர் யாக்கை குடாஅடி உளியம்(திருமுருகு.312-3)

○ முசிறு வைகும் (9:34)
பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை (நற்றிணை. 180)

○ நச்சையார் கயல்கள் போல (9:50)
நஞ்சுண் மீனின் நடுங்கி (தனிப்பாடல்)

○ சுயவசம் போய் பரவசம் எய்தி (9:66)
அவசம் உற்று உளம் நெக (கலி.பரணி 2:13)

○ வேரி வைகிய மைக் கூந்தல் (9:71)
பூங்குழலின் வேரிப் புனல் நனைப்ப (நளவெண்பா. 1:11)

○ குறப் பெண் அருங் கிளி கடியும் ஓங்கல் (9:78)
புனக்கிளி கடியும் பூங்கண் பேதை (குறுந். 142)

○ துணை விழி சொரியும் மாரி (9:91)
விண்மாரி என என் இரு
கண்மாரி பெய்யவே (தாயுமானவர். சுகவாரி. 7)

○ துணைக் கை மாறா அடி அடித்தனன் (9:94)
கங்கைக்கு இறைவன் கடகக்கை புடைத்து நக்கான்
(கம்பன். 1718)

○ மெய்க்கரி இவ்வூரில் ஒருவரும் அறியார் என்றார் (9:103)
சாலும் கரி (திருக்குறள் 25)
அறியாக்கரி (சிலம்பு 15:78)

○ பதியை விட்ட முகூர்த்தமோ (9:112)
புள்ளும் பொழுதும் பழிச்சல் அல்லதை (புறம். 204)

○ பாட்டளி முரலும் கூந்தல் (9:116)
தென் பூத்த பாட்டாளி துதைந்த பைங் கூந்தல்
(முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ். 1)

○ வளிக்கிணை கடு நடை (9.126)
வளி கிளர்ந்தன்ன செலவு (திருமுருகு. 170)

○ இந்தன உபைய பக்கம் நடுவுறை இடை எறும்பு (9:135)
இருதலைக் கொள்ளி உள் எறும்பு ஒத்து
(திருவாசகம்; நீத்தல். 9)

○ திருடினோன் தலை துணித்து (9:141)
கள்வனைக் கோறல் கடுங்கோலன்று (சிலம்பு. 20:64)

○ சங்கியல் குழல் (10:1)
மனவுக் கோப்பு அன்ன நன்நெடும் கூந்தல் (குறுந்.23)

○ தனு வளைத்ததை நிகர் விருத்தை (10:1)
மூப்பின் யாக்கை வாங்கிய வரி வில் அன்ன (கம்பன். 7283)

○ கார் ஒப்பாகும் துரை (12:79)
காரை ஒத்தவன் போம்படி கண்ட (கம்பன். 1835)
(கார்-நிறம், வள்ளன்மைக்கு உவமை)

○ வெறுங் கூழேனும் ஓர் அறுசுவைக்கு மேலாம் (13:28)
உப்பில்லாக் கூழ் இட்டாலும் உண்பதே
அமுதம் ஆகும் (விவேக சிந்தாமணி)

○ அம்மனை ஆடவும் மலைகள் (15:10)
கைம்மலர் மேல் அம்மனையாம்... அம்மலைகள்
(கலி பரணி. 5:13)

○ முகில்களைப் பிழிந்து உடல் நனை (15:14)
எழு மழை பிழியுமின் (கம்பன். 5505)

○ கொத்தளக் கொம்மை பற்களும் (15:24)
கொட்டும் மேழியும் கோத்தன பல்லின
(உருவ ஒப்புமை) (கலி பரணி. 6:8)

○ கூகை வாழ் செவி (15:30)
ஆந்தை பாந்தி இருப்ப, துரிஞ்சில் புக்கு,
அங்கும், இங்கும் உலாவு செவியன (கலி.பரணி. 6:7)

○ வடித்த புத்தி சொல்லிடினும்... (15:35)
ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும் ஓர் நோய் (திருகுறள். 848)

○ பன்னறிவு எவை கற்றாலும் பெண்புத்தி பழுதே (18:19)
நூலொடு பழகினும் நுண்ணறிவு கொள்ளினும்
பெண்அறிவு என்பது பெரும்பேதைமைத்து (மேற்கோள்)

○ கவளம் இடுபவர் தமையும் கொல்லும் கயம் (18:32)
யானை அறிந்தறிந்தும், பாகனையே
கொல்லும் (நாலடி. 213)

○ நாரத்தைக் கனிகள்... ஆடிய பந்துகள் கிடப்பது ஒத்து (22:14)
ஆட்டு ஒழி பந்தின், கோட்டு மூக்கு இறுபு,
கம்பலத்தன்ன பைம், பயிர்த் தாஅம் (நற்றிணை. 24)

○ செவ்விள நீர் முலைகள் (22:15)
செம்மாந்த தெங்கின் இளநீரை, ஓர் செம்மல் நோக்கி,
'அம்மா! இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்'
(கம்பன். 906)

○ வடம் வேய்ந்த முலை (22:15)
முத்து வடம் சேர் முகிழ்முலை (கலி. பரணி 2:10)

○ குடத்து இணை முலைகள் (22:15)
கனக கும்பக் குடமும் (நந்திக்கலம்பகம் த.பா. 22:19)

○ காமவல்லியர் இரு தனங்களைப் பொருவு கோங்கு (22:19)
யாணர்க் கோங்கின் அவிர் முகை எள்ளி (சிறுபாண். 25)

○ உகிரால் கீறுபட்டுள முலைகள் (22:20)
முலைமீது கொழுநர் கைந் (கலி. பரணி. 2:27)
நகம் மேவு குறி

○ உரிய தன் சுமை தாங்க நீள் விழுது விட்டு உள ஆல் (22:24)
சிதலை தினப்பட்ட ஆலமரத்தை
மதலையாய் மற்றதன் . வீழ் ஊன்றி (நாலடியார். 197)

○ சமயத்து ஈட்டிய சிரல் (23:15)
புலவுக் கயல் எடுத்த பொன்வாய்
மணிச்சிரல் (சிறுபாண். 181)

○ புளகிதக் களபக் கொங்கை (24:57)
புளகம் போர்த்த பொம்மல் வெம்முலை (தனிப்பாடல்)
நறுங் குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை,
தேம் கமழ் மருது இணர் கடுப்ப, கோங்கின்
குவிமுகிழ் இளமுலை கொட்டி (திருமுருகு. 33,34,35)

○ குழை போய் மீளும் மறவேல் நெடுங்கண் (25:46)
குழை ஒன்று, இரண்டு விழி (தனிப்பாடல்)
குமிழ் துரந்து, குழை ஒதுக்கி (தனிப்பாடல்)

○ (என்) அறிவை எங்கு கொண்டு நடந்தாள்
கொங்கை முகையிலோ, இடையிலோ......
நகையிலோ? (25:56)
தெட்டிலே வலிய மடமாதர் வாய்
வெட்டிலே சிற்றிடையிலே
நடையிலே...புந்தி தனை நுழையவிட்டு
(தாயுமானவர். மலைவளர் காதலி. 2)

○ கிரணம் தொட்டு மாறிய சோமன் (26:10)
அரவு நுங்கு மதியிற்கு (குறுந்.395)

○ ஈனம் ஒன்று உறையினும் மறைத்து (27:4)
சிறுமை புறம் சாத்து (நீதிநெறி விளக்கம். 19)

○ உற்ற நோய் விழியால் உணர் வைத்தியன் (27:19
நோய் நாடி, நோய் முதல் நாடி (திருக்குறள். 948)

○ தான் அருந்து உறட்டியினில் ஓர் துண்டு (27:26)
யாவர்க்கும் ஆம் உண்ணும் போது
ஒரு கைப்பிடி (திரு மந்திரம். 251)

○ கூட்டு மக்களும், மனைவியும், சுற்றமும், குறித்த, தேட்டும்,
மற்று எவைகளும், உடலமும், உடன் சேரா (27:34)
அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே (பட்டினத்தார்)

○ முருந்து உறழ் மூரலார் (28:17)
மூரல், முறுவல், முருந்து, முத்து உறழ்
ஈரப் பசைஇய, இணை செவ்விதழ்கள் (தனிப்பாடல்)

○ கத்திய கடல் சூழ்… (29:20)
கத்து கடல் சூழ் நாகை (காளமேகம்)

○ வெய்யோன் கற்ற வார் கரம் சுருக்கி
கடலிடை குளிக்க (29:25)
செவ்வென் கதிர் சுருங்கிச் செங்கதிரோன் சென்று ஒளிப்ப
(சிலம்பு. 19:32)

○ நாமவேல் கரன் (29:27)
நாமவேள் கரன். நளின பாற்கரன் (தனிப்பாடல்)
(மகளிர் முகத் தாமரை மலரவரு கதிரவன்)

○ பல உடம்புகட்குத் தான் ஓர் உயிர் எனப் படி ஆள் வேந்தன்
(29:48)
மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்
(புறநானூறு. 186)

○ மேவிய நகைகளாலே மென்றிட சுவை தான் கொள்ளும் நா
(29:69)
முளைக்கும் எயிறு முதிர் சுவை நாவிற்கு
விளைக்கும் வலியான தாம் மென்று (நன்னெறி 27)

○ நான்கும் நன்கு உடையவராய் (29:75)
நாற்குணமும் நாற்படையா (நளவெண்பா. 1:20)

○ ஜின்னுக்கு அரசு காதலியை* புல்கி (30:3)
வீம அரசன் காதலி தன் காதலனைக்
கண் உற்றான் (நளவெண்பா. 3:61)

* காதலி-மகள்

○ மொழிக் கரும்பு (30:14)

மொழிக் கரும்பு; விழிச் சுரும்பு

புருவரும்பு; யான் விரும்பு மாதராள் (தனிப்பாடல்)

○ கங்கத்தை அழைக்கும் வேலான் (30:15)

செங்கண் எரி சிந்த, வரிவில் பகழி சிந்த,

கங்கமொடு காகம் மிடைய...வந்தான் (கம்பன் 3044)

○ காதினுள்ளே வங்கத்தை உருக்கிச் சாய்க்கும் வருத்தம்(30:15)

ஈயம் உருக்கி இருசெவி வார்த்தென (தனிப்பாடல்)

○ கல் தடம் புயம் பூரித்து (30:18)

[1]உலங்கொண்ட தோளினான்;

நலங்கொண்ட நாளினான்

வலங்கொண்ட வாளினான்;

நிலம்...கொண்ட தாளினான் (தனிப்பாடல்)

○ சோதிச் சொன்ன (சொர்ண) பாத்திரம் (30:29)

அடர் பொற்சிரகம் (கலித்தொகை. 51)

○ கந்தவார் குழலி (30:33)

நானமும்[2] கமழும் குழலி நசாயிகு (13:21)

ஏல[3]வார் குழலி என்னம்மை (தேவாரம்)

○ கண்டெனும் மொழி மான் (30:45)

கண்டு மொழி, செண்டு முலை, வண்டு விழி,

உண்டு இடை? (தனிப்பாடல்)

○ மூ உலகும் 'சீ' என்று அடர்வகை (30:53)

'சை' எனத் திரியேல் (ஆத்தி சூடி. 52)

○ வடவை என்று அனந்தம் பேரை மாய்க்க வந்துதித்த போது

விடம் அதை அவித்து காக்கும் மிகு மழை போல் (30:61)

அனல் வரு கானகத்து, அமுது அளாவிய

புனல் வர, உயிர்வரும் உலவை போல்கின்றார்

(கம்பன். 7634)

○ மல்லல் அம் பூரி, சின்னம், வலம்புரி சிலம்பி ஆர்ப்ப (30:80)

பறைபட, பணிலம் ஆர்ப்ப (குறுந்தொகை. 15)

---

1. உலம் - திரண்ட கல்
2. நானம் - மயிர்ச்சாந்து
3. ஏலம் - மணப்பொருள்

○ தூசுகள், கரங்கள் வீக்கி, வாய் புதைத்து (31:68)

சிந்துரப்பவளச் செவ்வாய் செங்கையின் புதைத்து, மற்றைச்

சுந்தரத் தடக்கை தானை மடக்குற (கம்பன். 1598)

வணங்கிய சென்னியன், மறைத்த வாயினன் (கம்பன். 6448)

○ செயிர்[1] அகன்ற நல் அறிவு (32:4)

செயிர் தீர் காட்சி[2] (அகம். 66)

நன்று புரி காட்சி[3] (அகம். 245)

○ மருவரும் குழல் (32:41)

மரு ஒன்று கூந்தலாளை (கம்பன். 2790)

○ வெள்ளம் மேல் பலகையாய் (33:7)

நீர் வழிப் படூஉம் புணை (புறம். 192)

○ கார் முகத்தினை நிகர்த்துள கூனல் தடிக்கர முதியோர் (33:10)

தளர்ந்த நடையில், தண்டுகால் ஊன்றி,

வளைந்த யாக்கை மறையோன் (சிலம்பு. 15:44,45)

○ வேண்டுதல் வேண்டாதவைகள் இல்லவன் (33:22)

வேண்டுதல் வேண்டாமை இலான் (திருக்குறள். 4)

○ கஞ்சத் தவிசில் வீற்றிருந்து வாழும் தனி அனப்பெடை (34:6)

முளரித் தலை வைகும் அன்னப்புள் (நளவெண்பா. 1:12)

○ அங்கியைப் பழிப்பதாம் செவ்வாம்பல்

(அங்கி-அக்கினி — தீ) (34:15)

அள்ளல் பழனத்து அரக்காம்பல் வாய் நெகிழ

வெள்ளம் தீப்பட்டது என... (முத்தொள். 14)

○ திகழ் கன தனத்தார் (34:20)

கச்சில் கிடக்கும் கன தனத்தில்

கண் (பட்டினத்தார்)

○ அஞ்சிறை அறுகால் வண்டு (34:21)

ஏழிசை அறுகால் அஞ்சிறைத் தும்பி

(நாற்குலமலர்) வீழ் சுவைத் தேன் கொள விரையும் (தனிப்பாடல்)

கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி (குறுந். 2)

---

1. செயிர் - குற்றம்
2. காட்சி - தோற்றம்
3. காட்சி - அறிவு

○ உக்கம் பதனம் (34:33)

(இடை ஒடியும்; கவனமாக இரு)

கை பதனம்; வாய் பதனம்(வழக்கு)-செயலில், சொல்லில் கவனமாக இரு

○ குழலில்பூ சூட்டல் இடை ஒடிக்க ( 34:35)

அனிச்சப் பூ கால் களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை (திருக்குறள். 1115)

(நுசுப்பு-இடை)

○ கறியும் செய்தார் நீர் அற்று நெய்யே தோன்ற (34:45)

மூடநெய் பெய்து (திருப்பாவை. 27)

○ காதினும் மணப்பதன்றோ அன்னத்தில் கறியில் வாசம்(34:47)

(ஒன்றன் செயலைப் பிறிதொன்றன் செயலாகக் கூறும் மரபு)

நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது... (கம்பன். 380)

○ பாலொடு சில பேர் உண்டார் (34:51)

பாலின் பெய்தவும், பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி (புறம். 381)

○ வாசங் கொண்ட பாகிலையும் வாய்க் கொண்டு (34:52)

அம்மென் திரையலோடுஅடைக்காய் ஈத்த
(சிலம்பு. 16:55)

தையால்! தம்பலம் தின்றியோ என்று, தன் பக்கழித்து
(கலித்தொகை. 65)

○ புலவு மணப் படைக் கலத்தார் (34:72)

புலவு வேல் காளை, குலவுவனோ நாளை?
நிலவு துயர் நீங்காதோ? நிலவு துயர் நீக்கானோ?
(தனிப்பாடல்)

○ கருமுகில்கள் இவணில் வந்து உறுப்புகள் படைத்து (34:80)

துப்பினால் செய்த கையொடு கால் பெற்ற துளி மஞ்சு
(கம்பன். 5076)

○ வாயற்கும் மனைக்குமாய் ஒழுகி
வழி குழிந்திடத் திரிந்த பூவையர். (34:94)

திருகும் குடுமி விடியளவும் (கலி. பரணி. 2:49)

○ இடைக்கலை சேர்த்து இறுக்கி (34:122)

சேலை இடைக்குள் இறுக்கி (திருப்பூவணநாதர் உலா)

○ பாதி வந்த நூலிடை (34:126)
இழை ஒன்று இரண்டு வகிர் செய்தால்
அன்ன நுண்ணிடை (தனிப்பாடல்)

○ இருள் துணிக்கும் மெய் (34:131)
வெய்யோன் ஒளி தன்மேனியின்
விரி சோதியின் மறைய (கம்பன் 1926)

○ கூந்தலில் அகில்புகையூட்டி (34:133)
கொடி மாடத்து ஆய் இழையார் ஐம்பால்
(அகில் கொண்டு) புலர்த்தும் புகை (நளவெண்பா. 1:3)

○ கைக் கொண்டு அற்ற கால் அறுகை
தூக்கிஅடித், தடித்து அடரல் உற்றான் (35:30)
எதிர் பொருகைக் களிற்றின் வலி
கெட, ஒரு தொடையைச் சுழற்றி
எறிவர்கள் (கலி.பரணி. 11:127)

○ தெண்டனிட்டு அடி பணிந்த செயலினர்கள் (35:44)
.. காத்து ஓம்பு என்று உயிர்பிழைத்தார்
அநேகர் (கலி.பரணி: 11:156)

○ வெண்டயிர் போல் சிதறிய மூளைகள் (35:47)
வெண்டயிரும், செந்தயிரும் விராய்க் கிடந்த
கிழான் போல, வீரர் மூளைத்
தண் தயிருடன்... (கலி.பரணி: 13:17)

○ யாம் செய்யும் வினை (36:23)
முன் செய்த தீவினையோ
இங்ஙனே வந்து மூண்டதுவே (பட்டினத்தார்)

○ வசன வரம்பு நாணயம் (37:5)
வடு அஞ்சி, வாய் மொழிந்து,
தமவும், பிறவும் ஒப்பநாடி
கொள்வதூஉம் மிகை கொளாது,
கொடுப்பதூஉம் குறைகொடாது
(பட்டினப்பாலை 207-210)

தருமத்தின் வழி நின்று வாய்மையினில்
ஊனமில் சீர்ப்பெரு வணிகம் (பெ.புராணம்)

○ புளியடி அடங்கு வீடு (37:7)

புளிய மரம் பக்கலில் இருப்பது என்பது பொருள்; தம் வயல்களை உழவர்கள், ஆலடி, அரசடி என வழங்குவர்.
ஆலடி, அரசடி (கூளப்பநாயக்கன் காதல்)

○ திமிலம் இட்டு ஆர்த்தல் (38:15)

திமில குமிலம் எலாம் விளைந்தவே (கலி.பரணி. 11:136)

○ சிதடர் செய் பிழையைப் பெரியவர் பொறுப்பர். (38:42)

சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம்
பெரியோராயின் பொறுப்பது கடனே (நீதி நூல்)

தீயன சிறியோர் செய்தால்,
பொறுப்பது பெரியோர் செய்கை (கம்பன் 6661)

## குறிப்பு:

○ ஈண்டு உரைத்தன தவச்சில;
விரிவஞ்சி விடப்பட்ட வெகு பல;
இங்கு குறித்தன:
ஒத்த கருத்தின;
ஒருபுடை ஒப்பன;
முற்றும் நேர்வன; என,
என, முத்திறத்தன.

# 6. நலம் புனைந்துரை

தமிழிலக்கணம் ஐந்து நுட்பமான கூறுகள் உடையது. இவ் ஐவகை இலக்கணக் கூறுபாடுகளில், அணி, மிகுதியாகச் செய்யுளுக்கே அழகு தந்து இன்பம் பயப்பது. முன்னையோர் அணி எனக் குறிப்பிடாது உவமை என்று வழங்கினர். உவமை பெரும்பாலும் பொருள் புலப்பாட்டிற்குக் காரணம் ஆகும்.

இத்தகைய உவமை (அணி) பற்றிய இலக்கணங்களை வகுத்துக் கூறும் நூல்கள் வரம்பிலவாய்ப் பெருகின.

எவ்வெப் பொருள்களை எவ்வெவற்றிற்கு உவமை கூற வேண்டும் என்பதனைத் தொகுத்துக் கூறுவனவே உவமான சங்கிரக நூல்கள்.

சங்கிரகம் என்ற சொல் பொருள் சுருக்கக் குறிப்பு என்ற பொருளது.*

○

''தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு'' (குறள் 1103)

என்பது வள்ளுவம்.

இத்தகு இன்பவாழ்வுக்குத் துணை நிற்கும் மகளிரின் உறுப்பு நலன்களைப் பரந்துபடப் புகழ்ந்து கூறுவன பண்டைத் தமிழ் நூல்கள். சங்க காலம் தொடங்கி இக்காலத்திலும், ஏன் எதிர் காலத்திலும் இம்மரபு தொடரக் கூடும்.

பெண், (பெள்-விரும்பு), மாதர், காரிகை, தையல் என்பன மகளிர்க் குறிக்கும் சொற்கள். இவை விழைதகு அழகு என்ற குறிப்பின.

* உவமான சங்கிரகம்—டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, பக் XXXV

மகளிரின் உறுப்புகளுக்கு இணையான உவமைகளைத் தொகுத்துக் கூறுவன இத்தகைய உவமான சங்கிரக நூல்கள்.

இலக்கியத்திலிருந்து எடுபடுவது இலக்கணம் என்ற அமைதிக்கு ஏற்ப இந்நூல்கள் பழங்கால இலக்கியங்களில் காணப்பெறும் உவமைகளின் தொகுப்பாக அமைந்தன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், மணி மேகலை, சீவகசிந்தாமணி, பெருங்கதை போன்ற நூல்களிலி ருந்தும், பிறவற்றிலிருந்தும், தொகுக்கப் பெற்றன எனக் கோடல் தவறன்று.

உவமான சங்கிரக நூலாசிரியர்கள் செய்த எல்லாம் இடை படச் சேயவாய இவற்றை ஒருவழித் தோன்ற, அருமைப்பாடுற அமைத்தமையே ஆகும்.

பத்துப்பாட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த திரு J. V. செல்லையா அவர்கள் தம் நூலுள் பொருநராற்றுப் படை யின் முன்னுரையில் கீழ்க்கண்டவாறு குறிப்பார்:

"Pen Pictures : As in the other Idylls, we have some splendid pen pictures in this poem. In fact, the whole poem may be said to be one stretch of pen pictures.

To select a few, the poem starts with a picture of the ancient lute. The next picture is that of a songstress. All the parts of her body are described in a detailed and vivid manner."*

இப்பொருநராற்றுப் படை நூலில் கூந்தல் முதல் பாதம்வரை (கேசாதி பாதம்) உறுப்பு நலன், உவமை வழி விளக்கம் பெறு கிறது.

சிறுபாணாற்றுப்படையிலும் கதுப்பு, சாயல், அடி, குறங்கு, ஓதி, சுணங்கு, நகில் முதலன உவமை வழி விளக்கம் பெறுமேனும் முற்கூறிய நிரல்படி அமைந்த நூல் பொருநராற்றுப் படை ஒன்றே.

உவமான சங்கிரக நூல்கள், பிற்காலத்தே (15ஆம் நூற்றாண் டின்பின்) எழுந்தனவே எனினும், புதுவது கிளவாது, முன்னோர்

* PATTUPATTU—J. V. CHELLIAH. P. 56

மொழி பொருள் பொன்போல் போற்றும் தகவினரால் அமைக்கப் பெற்றமையால், பழந்தமிழ் இலக்கியச் சொல் ஆட்சிகளைத் திரட்டித் தொகுக்கப் பெற்றன என்று அறியலாம்.

மரபு வழாஅ மாண்பினர் ஆகலின், வண்ணக் களஞ்சியப் புலவர், அம்மரபு ஒட்டியே 'ஜமால்' அழகினைக் கேசாதி பாதம் ஆக அமைக்கின்றார்.

ஜமாலை இப்படி வர்ணிப்பதில் வண்ணக் களஞ்சியப் புலவர் சீறாப்புராணத்தில் இடம் பெற்றிருக்கும் 'தசைக் கட்டியைப் பெண் உரு அமைத்த படலம்' தன்னுள் உமறுப் புலவர் தந்துள்ள வருணனையையே பெரிதும் பின்பற்றிப் பாடுகிறார்.

ஐந்நான்கு பாடல்களில் குவவுத்தோளனது* காதல் மடமகள், ஐயள், அரும்பிய முலையள், செய்யவாயினள், சுணங்கணி மார்பினள் ஆய ஜமால் நலன்கள் விரித்துரைக்கின்றார்.

விரிவு அஞ்சி, பல விடுத்து சில பாடல்களை மட்டுமே நாம் இப்போது காணலாம்.

### கூந்தல்

கார் குலம் பயங்கொண்டு அலற, சைவலங்கள்
கடலிடை ஒளிப்ப, மை இருகு
மேல்கதிர் புகுந்து, இரவு இருந்து அகல,
மினுமினுப்பு அறல் உதைபடச் செய்து
ஏற்கமற்று எவையும் இணையற நெருங்கி
எழுந்து நின்று, அகிலும், பன்னீரும்,
நாற்குல மலரும், தகரமும் புழுகும்
நானமும் கமழ் தரு குழலாள் (40:27)

(பயம்-அச்சம், நீர்; அலறல்-முழங்குதல், அச்ச மிகையால் ஒலித்தல்; தகரம், நானம்-மயிர்ச்சாந்து வகைகள்)

இப்பாடலில் கூந்தல் (நலன்) விரிக்கப் பெறுகிறது.

கூந்தல் நலன் பற்றி உமறுப் புலவர் கூறியுள்ளனவும் காண லாம்.

மங்குலில் பெருகி விடத்தினும் கருகி
வரி அறவினும் மினுமினுத்து
தங்கிய இதழித் திரளினும் திரண்டு
சைவலத் தொடரினும் தழைத்து

* குவவுத் தோளன்—சகுறுஜின்

கொங்கு உறக் குழன்று நெறிந்து வார்ந்து ஒழுகி
குவலயத் திளைஞர் கண்ண வழுக்க
எங்கள் நன் நயினார் முன்னை நாள் அழைத்த
இருளினும் இருண்ட மைக்குழலாள்.

என்பார் உமறுப் புலவர். (சீறா:2:9:18)

இக்குழல் செறிவு பற்றி உவமான சங்கிரகக் கருத்து யாது என்று காண்பதும் நன்று:

கொண்டலும், கூந்தல்பனையும், கொன்றைக்காயும் இருளும்
தண்டலையும், கார்மணலும், சைவலமும்
— வண்டினமும்
தண் குழலை ஒப்பாம் தனி வாள்நுதற்கு நிகர்
வெண் பிறையும் செஞ்சிலையுமே[1]

இராஜநாயகக் காப்பியப் பாடலில் கருங்கூந்தற்கு கார்குலம், சைவலம் (பாசி), அறல், இருள், முதலன உவமம் ஆக அமைகின்றன.

மிகுதிறல் சான்ற அரசன் கீழ் அடங்கிய பிற சிற்றரசர்கள்,எக்காலத்தில் எது நிகழுமோ, யாது ஆமோ, என்ற அச்சமிகையால் கங்குல் பொழுதும் கண்படை பெறார். பயங்கொண்டு அலறுதலும் உண்டு.

“அரசு துயில் ஈயாது” என்ற சங்கத்தொடர் இதனை விளக்கும்.

கார் குழற்குத்தோற்ற முகில்கள் பயங்கொண்டு அலறின என்பார் புலவர்.

கார் குலம் நீருண்டு, நிறைந்த சுமைகொண்டு விளங்கும். இதனைக் குறிப்பது பயங்கொண்டு என்றசொல் ஆட்சி (பயம்-நீர்).

தவிர அவை விசும்பில் வாள் போழ்ந்து, உரவுச்சின உருமு எறிதல் பல் தெரிய வாய்விட்டு அலறுதல் போல் அமையும் என்பார்.

இதனை ‘அலற’ என்ற சொல்லால் குறிப்பிடுவார்.

‘‘பயங்கொண்டு அலறல்’ என்ற தொடரைச் சாதுர்யமாக இரட்டுற மொழிந்த திறம் வியக்கற்பாலது.

---

1. உவமான சங்கிரகம்—பக்கம். 23 பாடல். 68

மண் அகப்படுத்திய திண்புயத்தாற்குப் போரில் தோற்ற அரசர்கள், மானம் பொறாது, மலை ஏறிப்பாய்ந்து, உயிர் செகுப்பர், அன்றி கடல் பாய்ந்து உயிர் துறப்பர்.

''சிலையவர் எறி கடல் விழும்'' (கலி. பரணி. 13:86) என்ற தொடரும் ''கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர்'' (தனிப் பாடல்) என்ற தொடரும் இக்கருத்தை விளக்கும்.

குழற்கு உடைந்த சைவலங்கள் மானம் தட்ப கடலிடை ஒளிந்தன என்பார், சைவலங்கள் கடலிடை ஒளிப்ப என்ற தொடர் வழி.

அடுத்துக் கூறும் உவமம், கருமணல் (அறல்).

வெள்ளப் பெருக்கெடுத்து வடிந்தபின் ஆற்றின் படுகையில் இக்கருமணல் காணலாம். மினுமினுப்பு கலந்த கருநிறமும், நெளிந்த தோற்றமும் கொண்டு அமையும்.

சங்க காலத்தில் மகளிர் குழற்கு அறல் உவமம் ஆகக் கூறப் பெற்றது.

''ஆரம் (சந்தனம்) நாறும் அறல்போல் கூந்தல்'' (குறுந்.286) என்ற தொடருடன் இப்பாடலில் அமைந்து உள்ள ''அகில் பன்னீர், நாற்குல மலர் தகரம், புழுகு, நானம் கமழ் கருங்குழல்'' என்ற தொடரும் ஒப்பு நோக்கத்தக்கது.

இப்பாடலில் பயிலப் பெற்றிருக்கும் உவமைகளை புலவரது வேறு பல பாடல்களிலும், பிறர் படைப்புகளிலும் காணலாம்.

கார்குலம்: புயல் நிகர் கரிய கூந்தல் (24:57)
ஐது வீழ் இகு பெயல் அழகு கொண்டு, அருளி,
நெய் கனிந்து இருளிய கதுப்பு (சிறுபாண்-13, 14)

சைவலம்: அடை தரும் இருளும், வாரி அறலும் சைவலமும்,
அஞ்சி உடைதரும் நிறங்கொள் கூந்தல் (13:30)

இரவு: படர் இருள் குடியாய் வைகும் கூந்தல் (13:21)
இருள் திணிந்தன்ன ஈர்ந்தண் கூந்தல் (தனிப் பாடல்)

இருள் வணங்கும் அளக நாயகி (40:42)

அறல்: அறல் போல் கூந்தல் (பொருந்.25)

## கண்

அடுத்து கண் பற்றிய கவிஞர் வர்ணனையைக் காண்போம்.

வெள்ளமும், கணையும், பிணையும், வாள், வலையும்
மென் குவளையும், சுரும்பினமும்
அள்ள முந்து அயிலும், கயலும், மாவடுவும்
அமுத பார்வையும், விடப்பார்வைக்
கள்ளமும் திரண்டு குடங்கையின் அகன்று
காது அளாவி பெரியவர்கள்
உள்ளமும் கவர்ந்து நீண்டு செவ்வரி சேர்
உவமை செப்பரிய பார்வையினாள் (40:29)

என்று புலவர் பாடுவார்.

உமறுப் புலவர் விழியின் வடிவும், செயலும் பற்றிக் கிளந்தன பின்வருமாறு:

மடல் குழை கிழித்து தடக்குழல் குழைத்து
வரி அளியினைச் சிறைப்படுத்தி
கடல்குளம் தேறாது அலைதரச் செய்து
கணை அயில் கடைபடக் கறுவி

விடத்தினை அரவப் படத்திடைப் படுத்தி
மீனினம் பயப்படத் தாழ்த்தி
திடக்கதிர் வடிவாள் என கொலை பழகிச்
சிவந்து அரி படர்ந்த மை விழியாள்

(சீறா 2:9:20)

வாள், கயல், சேல், வேல், வண்டு, நஞ்சு, அமுதம், மான்
வேள்கணை, யமன், கருவிளை, வலை, குவளை
கஞ்சனம், பங்கயம், கடல், மழை, மால்உகிர்
அஞ்சனம், மூவிலி(?) அனையவாம் விழிக்கே[2]

என்று உவமான சங்கிரகம் கூறும்.

வெள்ளம்: உள்ளத் தடங்கா வெள்ளத்தடங்கண் (தனிப்பாடல்)
மழைக் கண் (பொருந். 26)
கடலினும் பெரிய கண்கள் (கம்பன் 3136)

கணை: குருதியொடு பறித்த செங்கோல் வாளி
மாறு கொண்டன்ன உண்கண் (குறுந். 272)

---

2. உவமான சங்கிரகம்—ப. 7. பா. 25

ஏ என்றார் அழகு வாய்ந்த இணைவிழி (9:12)

பிணை: பிணை ஏர் மட நோக்கு (குறள். 1089)

வாள்: எழுதுவாள் தடங்கண் இளமுலை மடவார் (2:32)

வலை: கண் வலைப் படூஉம் (குறு. 184)
கொடுங் கண் வலை (சிலம்பு 7:18)

குவளை: புலந்து அழுத கண் தண்டுளிக்கு ஏற்ற,
சுனை பூத்த குவளை மலர்போன்றவ்வே (குறு. 291)

சுரும்பினம்: சாடியுள் தன் வாள் கணின் நிழலைக்
கண்டாள்; வண்டு என ஓச்சுகின்றாள் (கம்பன் 974)

அயில்: நச்சுவேல் கருங்கண் செவ்வாய் (கம்பன் 972)
கொலை வேல் நெடுங்கண் (சிலம்பு 7:10)

கயல்: காமர் கயல்புரள...பூமடந்தை தன் நாட்டம்
(நளவெண்பா 1)

பொருகயல் முரணிய உண்கண் (குறு.250)

மாவடு: மாவடிமடக்கண் மாதர் (பெருங்கதை. 3:25:149)

என்பன மேலும் அமைந்த உவமைகள் ஆகும். கண்களின் செயல்களாகப் புலவர் குறிப்பிடுவன பற்றியும், ஒப்பு நோக்கத்தக்கன பற்றியும் பார்ப்போம்.

அமுத பார்வை, விடப்பார்வை:

இருநோக்கு இவள் உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து (குறள் 1091)

குடங்கையின் அகன்று:

அங்கையின் அகன்ற செங்கண் மங்கை (தனிப் பாடல்)

காதளாவுதல்:

காதளவு அளவு எனும் மதர்விழி (கலி.பரணி. 2:1)
காதளவோடிய கலகப் பாதகக் கண்
(பட்டினத்தார்...கோயில் திருஅகவல்)

குழை தீண்டும் இதன் செயல் முன்னர்க் குறிக்கப் பெற்றது.

பெரியவர் உள்ளம் கவர்தல்:

கண்டார்க்கு அலவநோய் செய்யும்
அணங்கிதுவோ காணீர் (சிலம்பு 7:13)
இருகயல் இணை விழியே—எனைஇடர்
செய்தவையே (சிலம்பு 7:15)
செங்கண், குவளை அல்ல, கொடிய, கொடிய! (சிலம்பு 7:20)

செங்கண் வெய்ய கூற்றம் (சிலம்பு 7:21)

இவ்வாறான கயல்நோக்கம் காணப்பெற்றார், பொறைஅறிவு உடையரேனும் நிலைதளர்வர் என்பது குறிப்பு.

**கண்களில் செவ்வரிகள்:**

செவ்வரி ஒழுகிய செழுங்கடை மழைக்கண்
வெண்முத்து உதிர்த்து (சிலம்பு 11:184,85)

சேயரிக்கண், செவ்வரிக் கண் என்றெல்லாம் அமைந்த சொல் ஆட்சிகள் உண்டு.

கண்களிலேயே கனிவும், சினமும், காதலும், வெறுப்பும் அச்சமும், அவலமும் காட்டுவர் நடன மாதர்.

நெஞ்சத்தின் நுழைவாய் கண்கள் என்பாரும் உளர்.

## செவ்விதழ்

முறுவலிலும் குறிப்பு உணர்த்துவர் மகளிர். இக்கருத்தைச் சுட்டும் குறட்பா:

முகை மொக்குள் உள்ளது நாற்றம் போல் பேதை
நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு
என்பதாம். (திருக்குறள் 1274)

மகளிர் செவ்விதழ் நலம் பற்றிய வண்ணக்களஞ்சியப் புலவர் கருத்தைக் காணலாம்.

தொண்டை வீழிகள் போல் கனிந்தபின் அனுங்கா
துவர் என கடிதுறா ஆம்பல்
விண்டு அலர் இலவு, முருக்கு என உலரா
விரும்பு காதலன் உயிர் வளர
பண்டு உலர் உடம்பு பூரிப்ப, மகிழ்ச்சி
படர்தர, வெது வெதுப்பு இருப்ப
தண்(மை) தரும் அமுதம் உதவி ஆய்ந்தவர் முத்
தமிழினும் சிவந்த மெல்லிதழாள் (40:31)

என்பார் புலவர்.

இவர்க்கு வழி காட்டியான உமறுப் புலவரின் சீறா கூறும் செவ்விய பாடலை இங்கு ஒப்பிடுவது நன்மைத்தே. உமறு,

வெண்ணிலா தரள நகை நிரை பொதிந்து
விரிந்த செம்பவளமோ இலவோ?
வண்ண வாய்ச் செழும் சேதாம்பலின் மலரோ?
வடிவு உறு தொண்டை அம் கனியோ?

எண்ணி நோக்கினருக்கு உவமையின் அடங்காது
எழில்குடி இருந்து அமுது ஒழுகி
பண் எலாம் சுவற்றி ஆடவர் இருகண்
பார்வையில் செவந்த மெல்லிதழாள்

என்று பாடுவார். (சீறா 2:9:22)

தாதுளை, செந்தமிழ், தொண்டை, செவ்வாம்பல்
மாதுளை, வீழி, செம்மரத்து, இலவு, இரந்தை(?)
முருக்கு, பவளம், மூதிர் இந்திர கோபம்,
த...செங்கமலம், தளிர், நெல்லுறை, மால்
கண்ணுடன் அமுதக் கடிகை சொற் கதவம் என்று
எண்ணிரண்டாகும் இதழ்க்கு உவமைகளே[3]

எனும் உவமான சங்கிரகம்.

வண்ணக் களஞ்சியப் புலவர் பாடலின் முன்னிரு அடிகள் இதழ்க்கு உவமம்படும் பொருள்களைக் குறிக்க, பின்னிரு அடிகள் அவை விளைக்கும் செயல்கள் குறிப்பது ஆதல் காணலாம்.

தொண்டை: தொண்டை வாய்க் கேகயன் தோகை (கம்பன் 1447)
தொண்டைக் கனிவாய் துடிப்ப (கம்பன் 7718)
தொண்டை அம்கனி வாய்ச் சீதை (கம்பன் 5468)

வீழி: வீழியின் கனி இதழ் அரமங்கையர் (கம்பன் 6866)

துவர் / ஆம்பல்: ஆம்பல் நாறும் தேம் பொதிதுவர்வாய் (குறுந். 300)

இலவு: இலவு இதழ் புரையும் இன்மொழித் துவர்வாய் (பொருந். 27)

முருக்கு: முருக்கிதழ் முத்தம் மூரல் முறுவலார் (கம்பன் 787)
முருக்கிதழ் குலிகம் மூட்டி வைத்தன முறுவல்
செவ்வாய் (சீவகம் 1454)

என்பன ஒப்பு நோக்கத்தக்கன.

இதழ்களின் செயல்கள்

காதலன் உயிர் வளர அமுதம் உதவல்:

பாலொடு தேன் கலந்தற்றே (குறள்:1121)
கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
(நாலாயிர. தி.பிரபந்தம். 567)
நுங்கின் இன்சேறு இகு தரும் எயிறு (சிறுபாண் 28,29)

3. உவமான சங்கிரகம் ப. 6. பா. 20

இவர் கையாளும் முத்தமிழினும் சிவந்த மெல்லிதழாள் என்னும் புத்துவமம் பாராட்டுதற்குரிய ஒன்று.

அது 'சில மெல்லியவே கிளவி' (குறு 70)

என்ற தொடர்க் கருத்தாக அமைதல் காணலாம். மன்ற, மாசற்ற, சில சொற்களால், கருத்து விளக்க தமிழ்போல் பிறமொழிகள் பயன்படுவது இன்று. செவிக்கினிய சொற்கள் பொதுளியது. இங்கு அழகு, எளிமை, இனிமை. செறிவு அனைத்தும் சான்ற தமிழ் மொழியையே உவமம் ஆக அமைத்தார். நயப்படு செயல் இது.

'திருவாய் மலர்தல்' என்ற சொல் ஆட்சி வைணவரிடையே பயிலப்பெறும். இறை திருமுன் கூடி, கதவம் திறப்பின் கண்குளிரக் காட்சி காணலாம் எனக்காத்திருப்பார் போல், "யாது இவர் வாய் மலரும்? கேட்டு மகிழ்வோம்" எனக் காத்திருப்பார் பலர், என்ற குறிப்பும் உடையது,

உள்ளக்கருத்தை மொழியாக வெளிப்படுத்துவதில் இதழ்கட்கு உரிய பங்கு பெரிதாகலின்—(உவமான சங்கிரக நூல் "சொற் கதவம்" என்று குறிக்கிறது.)—சொற்கதவம் என்ற தொடர் சாலப் பொருந்துவதே.

வண்ணக்களஞ்சியப் புலவர் தம் நூலில் பிற இடங்களில் 'இதழ்' குறித்து அமைத்துள்ள தொடர்கள்.

சேதாம்பல் வாய் (2:35)
முருக்கு இதழ் (9:56)
துவர் வாய் மாது (9:71)
கொவ்வை இலவு இதழ் (24:57)

## இன்மொழி

தினை உண் நசையினதாய்ப் புனம்புக்க புழைக்கை நெடுமா, பரண் இருந்து கவண் எறியும் பாவை பாடக்கேட்டு, செயல் மறந்தது என்ற குறிப்பு சங்கப் பாடல் ஒன்றில் உள்ளது. நீணிலத்தார் வியப்பெய்த கண்டத்தாள் பாடினார், என்ற சிலம்புத் தொடர் இசை சேர்ந்த சொல் சிறப்பை, பாடுதிறனை, வெளிப்படுத்தும். முற்குறித்தவாறு சில மெல்லிய அம் தீம் கிளவி உடையார் மகளிர்.

செவிப் பெய்த அமுதம் எனச் சிந்தை மகிழ்வார், மதுர வாசகத்து மங்கை ஒரு சொல் கூறின்,

பாகடு சொல்லி, சுபாஷிணி, மதுரபாஷிணி என்றெல்லாம் மகளிர் பெயர்கள் அமைவது உண்டு.

செவிக்கினிய சொற் கிளக்கும் தன்மையர் ஆதல் வேண்டும் என்பது அப்பெயர் இட்டார் அவா.

ஜமால் வாசகம் பற்றி வண்ணக் களஞ்சியப் புலவர் பாடும் பாடல் வருமாறு:

ஓவியத்து எழுதும் உருவமும் மரப்பாவையின்
உருவமும் அழைத்திடுகில்
ஆவி பெற்று வந்து பணிந்து வாய் திறந்தே
"அடிமை, ஆண்டருள்" எனத் துதிப்ப
மேவு முக்கனிபால், சருக்கரை, பசுந்தேன்
விண்ணமுதொடு கிளி மொழியைக்
கூவு கோகிலத்தின் இசையை, யாழ், குழலைக்
குழைக்கும் மென் மதுர வாசகத்தாள் (40:3?)

இயங்கியல் ஓவியம் போன்ற இழையார் வாசகம் பற்றிய உமறுப்புலவர் கருத்து இங்கு காண்டலும், ஒப்பிடலும் பொருத்தமே.

பால் என வெளிறா, கனி என வழியா,
பசு மடல் தேன் எனச் சிதறா,
ஏலவார் குழலார், செழுங்கரத்து ஏந்தும்,
இளங்கிளி மொழி எனக் குழறா,
வேலைவாழ் அமுதம் பிறந்த என, உலகம்
விளங்கிட பொன்மழை பொழிய
சாலவும் இறந்த தருவினம் தழைப்ப
தர வரும் இனிய மென் மொழியாள்
(சீறா 2:9:24)

குழல், கரும்பு, அமுதம், குயில், சீனி, தேம்பால்
கிளி, அளி, பூவை, யாழ், கிளரும் முப்பழம் உடன்
கண்டு, சர்க்கரை, தீங்கனியொடு இவ்வளவும்
பெண்டிர் உருவாய் உறு பேச்சு என மொழியே[4]

என்று உவமான சங்கிரகம் குறிப்பிடும்.

யாழ்க்கும் இன் குழற்கும் இன்பம்
அளித்தன இவை ஆம் என்னக் கேட்கும்
மென்மழலைச் சொல் (கம்பன் 974)

---

4. உவமான சங்கிரகம்—ப. 6; பா-22

அமுது உகுத்து அனைய செய்ய வாயிடை
மழலை இன்சொல் கிளியினின் குழறி (கம்பன் 3303)

சொல்லையும் அமிழ்தும் பாலும் தேனும்
என்று உரைக்கத் தோன்றும் (கம்பன் 4497)

குழல் படைத்து யாழைச் செய்து குயிலொடு
கிளியும் கூட்டி
மழலையும் பிறவும் தந்து (கம்பன் 4509)

இவ்வாறெல்லாம் மதுரவாசக எழில் மடந்தையர் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவர் பலர் என்ப.

கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது நூலில் விறலியின் "கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப" மொழியும் குரல் வளத்தை,

"வேலை குமுறக் கடைந்த வேலை தரும் தெள்ளமுதும்
ஆலைதரு வெண்சாறு அடுபாகும், பாலும்,
கனியும், சர்க்கரையும், கற்கண்டும், நாவுக்கு
இனிய பசுந்தேனும், இணக்கி, தனியாக
மத்தித்து எடுத்த, மதுரத்துக்கு எண் மடங்கு
தித்திப்புக் கேட்பார் செவிக்கு ஏற ..... .." (2,3,4 கண்ணிகள்)

அமைந்திருந்தது என்று புலவர் குறிப்பார்.

"பாரப் பலாச் சுளைக்கும், பாலுக்கும் மாங்கனிக்கும்
சாரச் சுவை பயிற்றும் சர்க்கரை"
(சேதுபதி விறலி விடுதூது 20)

என்பார்.

உயிர் ஓவியம் போன்று அமைந்த ஒண்டொடியாள் ஜமால். உள்ளகம் கனிந்து 'வா, அருகில் வா' என அழைப்பின், ஓவியங் களும் உயிர் பெறும்; இயங்கும்; மெல் என இயலும்; பக்கல் நெருங்கும்; பணிவு காட்டும்; "அடியேம் யாம், ஏற்றருள் எம் தொழும்பு" என வேண்டும்.

நாண் அகத்தில்லார் இயக்கம் மரப்பாவை திரிந்தற்று என்னும் வள்ளுவம். அத்தகு மரப்பாவை கூட, (உணர்ச்சி இல்

லாதது என்ற குறிப்பு) உயிர் பெறும்; உடன் எழும்; வரும்; வணங்கும். என்னில், அவள் 'உயிருட்டு சொல் இனிமை தான் என்னே! என்னே! என்று பாராட்டவே தோன்றும்.

ஓவியத்துக்கும், மரப்பாவைக்கும் உயிர் கொடுக்கும் ஆற்றல் சான்றவள் சொல்வள ஜமால் என்பார். அச்சொல்லுக்கும் உயிர் கொடுக்கும் வண்ணக் களஞ்சியப் புலவர் திறன் போற்றத் தக்கது.

## செங்கை

...... காந்தள்
விரிந்த செவ்விதழ்ப் பங்கயம் புனல் கதியாய்
வெட்கி நின்றிடப் பசுங்கிளி வந்து
இருந்திடில் பவள நிறம் படைத்து, எழில்பெற்று
இலங்கிடச் சிவந்த செங்கையினாள் (40:37)

என்று பாடுவார் வண்ணக் களஞ்சியப் புலவர். (கறுத்த பைங்கிளி பற்றிய செய்தி முன்னர்க் கண்டோம்)

அவர் முன்னோடியோ
...... ......
வரிவளை சுமந்து யாழினும் வியந்து
மயிர் நிரைந்து ஒளிரும் முன்கையினாள்
(சீறா 2:9:26)

குலிகம் ஆர்ந்தனபோல் அரக்கினும் சிவந்த
கொழுமடல் காந்தளங் கரத்தாள்
(சீறா2:9:27)

என்பார்.

... ... ... கை மகர யாழாகும்
தேம்பதுமம் மாந்தளிர் பூஞ் செங்காந்தள்...[5]

என்னும் அணிநூல்

நங்கை அங்கை செம்மைக்கு நாணி, புனலில் மூழ்கி, ஒரு தாளில் நின்று செவ்விதழ்ப் பங்கயம் தவம் செய்கின்றது என்ற குறிப்பு உடையது.

'வெட்கி, புனல் கதியாய் நின்றிட'

என்ற தொடர் பங்கயக்கை நலம் பலரும் அறிந்ததே. நூற் கடல்பரப்பில் சிறப்பிடம் பெறுவது இவ்வுவமம். "இரவி குலாதி

5. உவமான சங்கிரகம். ப. 25; பா. 73

பன் வாயில் வந்தால், தானே திறக்கும் நின் கைத்தலம் ஆகிய தாமரையே!'' என்ற ஒரு தனிப்பாடல் தொடரில், மென்மெல இதழ் விரிக்கும் தாமரை, தாள் குமிழ்பற்றி, கதவம் திறக்கும் மகள் அங்கைக்கு, உவமம் ஆதல் காணலாம்.

கைக்குவமம் கூறப்பெறும்

''காந்தள், வனம் சென்றது, உங்கள் கைபோலும் தான் இருக்க
வாய்ந்த தவம் செய்து வரம் பெறுவோம் என்றலவோ''
(கூளப்ப நாயக்கன் காதல் 189)

என்பார் சுப்ரதீபக் கவிராயர்.

நெடுவரை மிசைய காந்தள் மெல்விரல் (பொருந். 33)
கோடல் குவி முகை அங்கை அவிழ (முல்லைப்பாட்டு 95)
காந்தள் அம் துடுப்பின் கவி குலை அன்ன
செறி தொடி முன்கை கூப்பி (பட்டினப்பாலை 153,4)
மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும் (பொருந். 14)
காந்தள் மெல் விரல் (குறுந். 167)
காந்தள முகிழ்விரல் (சீவகம் 1992)

என்று இலக்கிய மணம் விரிக்கும்.

## அங்கை, விரல், உகிர்

பாணி என்பது உள்ளங்கை குறிப்பது. கோதண்டபாணி, தண்டபாணி, சாரங்கபாணி, சூலபாணி, என்ற பெயர்கள் கைத் தலம் பற்றிய கருவிகளால் அமைந்தன.

உள்ளங்கையிருந்து முளைத்த சிறு பிஞ்சுகளோ விரல்கள் என்றும், படரொளி நீட்டு நாவுகளோ என்றும் வியப்பார்.

இக்கருத்தெல்லாம் கவின, தம் பாடலில்,

மாணிக்க மணியைக் கடைந்து இணக்குவதோ?
வரி கடைந்து இடில் அழுந்துவதோ?
பாணி செங்கையினில் மிக கனிந்து இலங்கி
படர்ஒளி நீட்டு நாவுகளோ?
ஆணிக்கும்[1] கடந்த கனகத்தால் உதித்த
அரம்பையின் சிறிய பிஞ்சுகளோ
வாணிக்கு[2] எவ்விதம் சொல்லுவது எனும் விரலாள்
வயிரம் மேல் பிறத்தல் போல் உகிராள் (40:38)

என்பார்.

1 ஆணி-உரைகல்; 2 வாணி-சொல்.

இவர்க்கு முன்னர் நூல் யாத்த நன்னராளன் உமறு,

... ... ...

மலிசினை கெளிற்றின் வனப்பினும் வனப்பாய்
மணி அணி சுமந்த மெல் விரலாள்
பொலிவுறச் சிவந்து ஈந்திலை எனக்கிளர்ந்து
புனக்கிளி நாசியின் வடிவாய்
நலிவிலா திளைத்த வயிர ஒண் கதிராய்
நலங்கிடந்து இலங்கிய உகிராள்

என்பார். (சீறா 2:9:27)

அலரிக்காய், முத்திரைக்கோல்,பொன்ஆழி, துலங்கும் பயற்றங்காய்
குலவப்படும் மாந்தளிர், பவளக் கொம்பு, கெளிறு, கிட்டிக் கோல்
நிலவ சுழற்றும் திறவுகோல், நேரும் இருகை விரற்கு உவமை.
கலவ பெறும் அ(வ்)விரல் உகிர்க்கு கருதும் கிளிமூக்கு ஒப்பு [ஆமே.

என்னும் அணி நூல்.*

''கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்ளுகிர்' (பொருந் 34)
என்று சங்கப்பாடல் கூறும்.

## வயிறு

பெடைமயில் சாயல் பெருந்தகு ஜமால் தோற்றத்தைப் புலவர்,

கொலை விழியினர்கள் வனப்பெலாம் உணர்ந்தோர்
குறித்து எடுத்து உவமை ஓதுவது ஆல்
இலை என உரைப்பரால். இலை இனிமேல்
எவைகளும் நிகரிலை எனவே
நிலைதரு பொருளை விளைத்திடும் வயிற்றாள்
நிகழ்த்தும் அவ்வயிற்றினின் மடிப்புக்கு
அலர் தலை உலகில் இணை பகர்ந்திட நா
அதற்கு எலாம் மடிப்புகளாமால்

என்று கூறுவார். (40:40)

* உவமான சங்கிரகம்-2. ப. 15 பா. 14

ஓதுவது ஆல் இலை; உரைப்பரால் இலை. இனிமேல் எவைகளும் நிகர் இலைல என்னும் தொடர் இவள் அழகுக்கு உவமை இலை என்ற குறிப்பு பொதிந்தது. செயல் ஓவாச் செந்நாவும், இவள் வயிற்று மடிப்புகட்கு இணை பகர ஒன்றும் இலை என்பதால், செயல் ஒய்ந்து,மடிந்து கிடக்கும்[1] என்று குறிப்பிடும் நயம் ஓர்க.

உவமான சங்கிரக நூல்,

... ... ... ...

வடம் உதரம், உந்தி மகிழம்பூ-படர் சுழியாம்
ஏறும் படியும் எறிநீர்த் தடந்திரையும்
கூறும் பிடி மடிப்பு கொள் (பக்கம் 25; பா. 8)

என்று கூறும்.

வயிறு, வயிற்று மடிப்பு உந்தி வயிற்று மயிர் ஒழுங்கு பற்றி எல்லாம் இவர் கூறியுள்ளார். (40:41)

வட தள உதர வாணீ நங்காய் (மனோன்மணீயம்)

ஆறலை தரங்கமுள ஆலைகமழ்பாகுமுள
(கலி.பரணி. 10:65)

ஆல் இலை, படிவம் தீட்டும் ஐய நுண்பலகை (கம்பன் 4485)

நீர்ப் பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ் (பொருந் 37)

...பொன்
வில்லி மூன்று உலகின் வாழும் மாதரும் தோற்ற மெய்ம்மை
சொல்லி ஊன்றிய ஆம் வெற்றி வரை... (கம்பன் 4488)

வயிற்று மயிர் ஒழுங்கு,

கொண்ட உரோமக் கொடிக்கே, எறும்பு ஒழுக்கும்
வண்டு ஒழுக்கும், காஞ்சி மணிச்சுடரும்—கண்டகர் கால்
சங்கிலியும், வேழத்தறியும் சலாகை யும் நீள்
பங்கயத்தின் நாளமும் வைப்பார்* (பக்கம் 26, பா. 9)

உந்திச் சுழி[2] என்று உரைக்கும் அதுபார்க்க

முந்தி வந்த துணைச் சக்ரவாளம்போல் (பூவணநாதர் உலா)

உரோமப் பசுந்தாள் ஒன்றிரண்டு அந்திக்கமலம்
(கலி.பரணி. 2:19)

1. மடிவு-சோம்பல், சுருளல்
2. சுழி-நீர்த்தடம்
* உவமான சங்கிரகம்

மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டால் வல்லி சேர் வயிற்றில்
செயிர் இல் சிற்றிடை ஆய் உற்ற சிறு கொடி நுடக்கம் தீர
குயிலுறுத்து அமைய வைத்த கொழுகொம்பு என்று
உணர்ந்து கோடி. (கம்பன் 4487)

எய்யா இளஞ்சூல் ஏந்திழை வயிற்று மயிர் ஒழுங்கு பற்றிப் பொருநர் ஆற்றுப் படைபுகல் வரிகள், போற்றுறு சிறப்பின. அவை:

எய்யா இளஞ்சூல் செய்யோள் அவ்வயிற்று
ஐது மயிர் ஒழுகிய தோற்றம் போல
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
(பொருந் : 6-8)

என்பன.

## பதச் சிறப்பு

இளங்கோ அடிகள் தம் காப்பியத்துள் கானல் வரியில் தலைவன் கூற்றாக அமைத்துள்ள பாடலைப் பல்கால் பயின்று தோய்ந்த உளத்தராய வண்ணக் களஞ்சியப் புலவர், அதன் சாயல் மேவத் தம் நூலகத்து ஓர் பாடல் யாத்துக் கோத்தார்.

பதச் சிறப்பு மிக்க காப்பியத்தில் ஜமாலின் பதச் சிறப்பு கூறுவது அப்பாடல்.

கயல் எழுதி, வில் எழுதி, கார் எழுதிக் காமன்
செயல் எழுதித் தீர்ந்த முகம் திங்களோ? காணீர்
(சிலம்பு. 7:11)

என்று சிலம்பு கூற,

கரிய கங்குலின் வாரணபதி மதன
கலைகளை முழுவதும் எழுதி,
இருநிலத்து இளைஞர் மனநிலை எழுதி,
இழை இடையினர் எழில் எழுதி,
விரிவு அறச் சேர்த்து, மயல் எனும் கயிற்றால்
வீக்கிரு சிறிய புத்தகமோ?
மரை மலர் இணையும், இளந்தளிர் தனையும்
மருட்டி வென்றிடும் இருபதமே (40:44)

என்று இவர் கூறுவார்.

.........நூல் எழுது
புத்தகம் ஆமை புறவடி யொப்பாம் திரண்ட
வித்துருமம் போலும் விரல்[1]

என்னும் அணி நூல்

1. உவமான சங்கிரகம் ப. 27; பா. 13

பாகடு சொல்லின் பனித்திங்கள் முகத்தார், பதயுகளத்திற்குப் பங்கயமும், தளிரும், பொத்தகக்கட்டும், ஆமைப் புறவடியும் உவமம் ஆம் என்பர்.

பொத்தகக் கட்டை இவர் உவமம் ஆகக் கொண்டு, எழுதி வரைந்த ஏடுகள் இவை எனக் கூறுவது போல் அமைந்துள்ளது இப்பாடல்.

அவ்வேட்டுத் தொகுப்பில் உள்ள ஓலைச்சுவடிகளில் முருகிற் சிறந்த மதன கலைகளை* விரிப்பன சில, முற்றா இளைஞர் மன நிலைகளைச் சித்தரிப்பன சில, என்று கூறுவார்.

இவற்றை எல்லாம் தொகுத்து 'மயல்' என்னும் கயிற்றால் கட்டி வைத்துள்ளனர் என்பர்.

இவ்வாறு மரபை ஒட்டி மங்கை நல்லாள் ஒருத்தியின் எழில் சிறப்பைப் பல்வேறு உவமங்களின் வாயிலாய் விளக்கி உள்ள திறம் உன்னுந்தோறும் உவகை பயப்பதே.

உவமான சங்கிரக நூல்கள் தோன்றிய காலத்தின் பின்னர் சாமுத்திரிகா லட்சண நூல்கள் புற்றீசல் போல் பெருகின. அங்க அமைப்பைக் கொண்டு மனஇயல், குணநலன் விளக்குவன ஆகவும் அவை இருப்பன காணலாம். கொங்கை ரகஸ்யம் என்ற சாமுத்திரிகா லட்சண நூலும் உண்டு (தாணுப் பிள்ளை—சித்த மகுடப் பிரசுரம்)

மூக்கு ஜோஸ்யம், மூச்சு ஜோஸ்யம், கையெழுத்துக் கண்டு பலன் கூறுதல் ஆகப் பல்கிளைகளாகப் பிரிந்தன.

---

* மலரினும் மெல்லிது காமம்; சிலரதன்
செவ்வி தலைப்படு வார் (திருக்குறள். 1289)

(இலக்கியப் பூங்கா)

# 7. பல்கீசு வர்ணனை

கனவு கண்டு மணம் செய்த படலத்திலும் இருவர் மோகப் படலத்திலும், மகளிர் இருவர் வருணனைகளையும், சகுறுஜின் கூட்டம் ஈமான் கொண்ட படலத்தில் ஜமாலுடைய வருணனை யும் கண்டோம்.

இவற்றிற்குச் சற்று மாறுபட்ட முறையில் பல்கீசினுடைய அழகை வர்ணிப்பதற்கு வண்ணக் களஞ்சியப் புலவர் தேர்ந்த சொற்களைப் பொறுக்கி எடுத்துப் பயன்படுத்துகிறார்.

முதல் மூவருடைய (படலம் 9, 25, 40) வர்ணனைகளைப் படிக்கும் பொழுது படிப்பவர்கள் உள்ளம், அவர்கள் பால் கழி காமம் கொள்ளும் வகையில், பாடல்கள் அமைத்துள்ளார்.

பல்கீசை வர்ணிக்கும் பொழுதோ இத்தகைய உணர்ச்சிகள் சிறிதும் எழா வகையில், அப்பெண்மணியின் பால் மதிப்பும், மரியாதையும், கண்ணியமும், அவள் அழகைப்பற்றிய ஒரு வியப்பு உணர்வும் உண்டாகும் வகையில்தான் புலவர் பாடி உள்ளார்.

இதற்கு முக்கிய காரணம் என்ன என்றால், பல்கீசு, சுலைமான் நபி அவர்களுடைய மனைவியார் என்பதே; சுலைமான் நபி அவர்கள், இறைவனுடைய திருத்தூதர் ஆவார். இறைத் தூதரிடத்துப் படிப்பவர்கள் எந்த அளவிற்கு மரியாதையும், கௌரவமும் காட்டுவார்களோ, அந்த அளவிற்கு அவர் மனைவி பாலும் காட்டவேண்டும் என்பதும்தான்.

அதே சமயத்தில் அவள் பெண்பால். சூறத்துல் எமினா என்று அழைக்கப்படும் அளவிற்கு அழகு நிறைந்தவள். அந்த அழகையும் தம் பாடல்களில் வெளிக்கொணர வேண்டும்.

இவ்விரு உணர்வுகளையும் ஒருசேர வெளிக் கொணரும் வகையில் சொற்களைப் பொறுக்கிப் பாடல்கள் புனைவது என்பது அவ்வளவு எளிதான செயல் அன்று.

எனினும் அந்தச் செயலைச் செய்து வண்ணக் களஞ்சியப் புலவர் அதில் பெரு வெற்றியும் கண்டிருக்கிறார்.

இங்கும் வண்ணக் களஞ்சியப் புலவருக்கு உமறுப் புலவர்தான் வழி காட்டி.

கதீஜா நாயகி அவர்கள், முகம்மது நபி (ஸல்) அவர்கள் மனைவி. பாத்திமா, நாயகியோ முகம்மது நபி (ஸல்) அவர்களின் மகள்; அலி (ரலி) அவர்களின் மனைவி.

எனவே இவ்விருவர் பற்றிய வருணனைகள், படிப்பவர் உள்ளத்தில் காதல் உணர்ச்சி தோற்றுவிக்கக் கூடாது. அதற்கு மாறாக மதிப்பும் மரியாதையும், கண்ணியமும், கௌரவமும், ஆண்டவனுடைய படைப்பின் அற்புதமும் தோன்றவேண்டும்.

இதனையே உமறுப்புலவர் அதிசயிக்கும் வகையில் செய்துள்ளார்.

அதே சமயத்தில் தலைக் கட்டியைப் பெண் உரு அமைத்த படலத்தில் தமிழ் இலக்கிய மரபுப்படி கேசாதி பாதமாக ஒரு பெண்ணினுடைய இன்ப உருவை வடித்துத் தந்திருக்கிறார்.

இந்தப் பின்னணியில் பல்கீசைப் பற்றி வண்ணக் களஞ்சியப் புலவர், எத்தகைய சொற்களால் அவள் அழகையும், அறிவு நலனையும், உயர்வையும், திறனையும் வருணிக்கிறார் என்பதைப் பார்ப்போம்.

பல்கீசு பிறப்பைக்குறிப்பிடும் பொழுது,

> உடல் இரண்டு உயிர் ஒன்றாய் வாழ்ந்து
> உறைந்தனர். உறையும் நாளில்
> தொடர் பல உலகம் மீதும்
> தோகையர் துதிப்பதாக
> கடகளிறு அனையான் மேனிக்
> கவினும் பேரொளியும் ஒன்றாய்
> படர்கொடி நிகர்த்ததோர் பெண்
> பசுங்கிளி பிறந்ததன்றே (29;61)

என்று பாடுவார்.

அடுத்த பாடலில் பல்கீசின்,

சுந்தரம் நோக்கி மேலோர் 'சூறத்துல் எமினா' என்றே
புந்தி ஆய்ந்து ஒரு பேரிட்டார். அதன் பொருள் எமன்
தேயத்துக்கு
இந்த வான் மயில் 'ஓர் திவ்விய மலர்' என இசைப்பதாமே
(29:62)

என்று குறிப்பிடுவார்.

பல்கீசு வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,
'வடிவெல்லாம் ஒரு பெண்ணாகி வளர்ந்தது' (29:63)
என்று கூறுவார்.

பல்கீசு பருவம் எய்தியமை, கவியின் மீது கற்பனை சார்ந்தது, போன்றது என்பார்.

வகை அறி மரபின் வண்ணக் களஞ்சியப் புலவர், "வாளிணை நெடுங்கண் செல்வ மயில்" பற்றிச் செப்புந காண்போம்.

இகல் கயல் கருங்கண்ணாள் (படலம் 29ல்73)
பொன் குணக் கிளி 75
விழிக்கனி இதழ்க்குயில் (படலம் 30ல்1)
மயில் 2
மதி செயும் வதனம் 3
வயக்கு கற்பு அணிகலப் பெண் 5
பாவை (பல்கீசு) 6
பாகினை அனைய செஞ்சொல் பனிமதி முகப்பெண் 7
யூசறுகு கண்மணிப் பெண் 9
சுமைப் புவி துதிக்கும் கற்பச் சூழ்பல்கீசு 12
செல்வத் திரு அருள் புதல்வி 13
மொழிக் கரும்பு 14
மை தவழ் குழலாள் 20
இளங்குயில் 22
இந்து எனும் முகத்தின்மான் 23
சீலத்தின் உயர் பல்கீசு 25
கனி இதழ் அ(ன்)னம் 26
திருமயில் 28
கோடி சூர்யப் பிரகாசம் குலவு பொன்மேனி 28
செந்திரு 29
அகில் மணக் குழலினாள் 30
நகை மதி வதனமாது 30

---

* இந்நூலில் ''யதார்த்த இயல்பு'' பகுதியில் காணலாம்.

கற்புக் கவின் ஒழுகிய பல்கீசு 6
சந்த்ர வதன பல்கீசு 37
இருள் துணிக்கும் மெய்யூசறுகு உமையிறத் ஈன்ற
திருவினுக்கு எழில் திரு 131
பொருந்து அரம்பையர் எழிற்கு மேல் உதாரணப்பொருள் 132
அருந்தவம் புவி புரிந்து வந்து அருளிய அமுது 132
திருந்து கற்பு எனும் உடற்கு உயிர் உதவும் சஞ்சீவி மருந்து 132
மறி தரும் கரு நெடுங்கண் 134
பரவு சோபன மயில், அற்புத குணவதி, சரத பூரணமதி,
பல்கீசு எனும் தவம் 139
செந்தேன் பூ மழைக் கருங் குழல் மங்கை 141
திடத்த கற்பு எழில் பல்கீசு (படலம் 35ல் 1)
தொகுத்த கற்பரசு, தூண்டாச் சுடர் மணி விளக்கு 4
பேறு மிகுத்த பல்கீசு; ஆரணங்கு (படலம் 36ல்) 69
அரிவையர் திலகம்; சுலையுமான் நபி காதலிஎனும் ஸாலிகு (36:70)

மேல் குறிப்பிடப் பெற்ற சொற்களும், சொற்றொடர்களும் கொண்ட பாடல்கள் பல்கீசைப்பற்றிய வர்ணனைகளே.

வண்ணக் களஞ்சியப் புலவர் இவற்றை அமைப்பதில் எத்துணைக் கவனம் செலுத்தினார் என்பது தெளிவாகின்றது.

(இலக்கியப் பூங்கா)

# 8. நயம்செறி பாடல்கள்

பிற புலவர்களுடைய படைப்புகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதோடு அல்லாமல் வண்ணக் களஞ்சியப் புலவரது இராஜநாயகக் காப்பியத்தில் உள்ள நயம் செறிந்த பாடல்கள் சிலவற்றை இலக்கிய இன்பம் கருதி இப்போது காணலாம்.



நாட்டுப்படலத்தில் நாட்டின் செழுமையைக் குறிப்பிட வந்த புலவர்

காய் குலைக் கமுகும், பழக்குலை தேங்கும்
கன்னலும், செந்நெலும், கோங்கும்
வேய்க்குலத் திரளும், கதலி, சண்பகமும்
வேங்கையும் நெருங்கு தண்டலையில்
வாய்க்கும் வெண் பிறைக்கோடு உழக்கி
மெல்லிதழ்ப்பூ
மழை, மதுமழை, இருள் முழுதும்
சீக்கும் வெண் தரள மழை பொழிந்து இரவு
பகல்களாய்த் தினம் வளம் செழிக்கும் (2:29)

என்று பாடுவார்.

இப்பாடல் பொருள் விளக்கம் தேவை அற்ற வகையில் எளிய சொற்களால் அமைந்துள்ளது.

வளம் செறிந்த நிலை குறிப்பிடும் நயம் செறிந்த பாடல் இது.



இதே போன்று, நயம் செறி பிறிது ஒரு பாடலை, இப்படலத்திலேயே காண்போம்.

சாம் நாட்டுப் பொய்யுலாம் இடையார் சிலர், புனல் ஆடுவதற் காகப் பொய்கைத் தடம் புக்கனர்; நீரில் இறங்கினர். நீரிடை முளைத்தவோ பல நிலவுகள் எனக் கருதிப் பொய்கையில் பொலிந்த தாமரைகள் இதழ் மூடின. அல்லி, ஆம்பல், குவளை போன்ற இரவலர் மலர்கள் தளை நெகிழ்ந்தன.

அப்படி இதழ் விரித்த மலர்களுள், வரிமிடற்று ஏழிசைச் சுரும்புகள் புக்கன. நீராடி முடித்த பின் அம்மடவார் கரை ஏறிச் சென்றனர்.

மதி மறைந்தது எனக் கருதி தாமரை கண் விழித்தது, குவளைகள் முகம் கூம்பின. தேனுண்ணச் சென்ற வண்டுகள் மலருட்கிடந்து வெளிவர இயலாமல் திகைத்தன; ஆலித்தன; ஒலித்தன; உழன்றன என்பார்.

கற்பனை பொதுளிய பாடல் வருமாறு:

எழுதுவாள் தடங்கண் இளமுலை மடவார்
எழில் வளைத் தடம் புனல் ஆடின்
செழுமுகமதி என்று அரவிந்தம் குவியும்
திரள் குவளைகள் முதற் பலதும்
வழிதரும் அமுதப் பெருக்கொடு மலரும்
வரிமிடற்று ஏழ் இசைச் சுரும்பு
முழுதும் அம் மலருள் புகும் கரை ஏறின்
மூட உள் கிடந்து ஒலித்து உழலும் (2:32)



நகரப் படலத்தில் இன்னொரு கற்பனை வளம் செறிந்த பாடலை நமக்குக் காட்டுகிறார்.

நெடுநிலை மாடத்து, இடைநிலத்து ஆங்கண் பளிங்குத் தலத்தின்மேல் பாவையர் சிலர் நின்றவாறு இருக்கிறார்கள். அத்தளத்தில் அவர் கண்களின் சாயல் தோன்றுகிறது. அப்படி ஒளிரும் அத்தோற்றத்தைக் கண்டு வாவித்தடத்திடை உகளும் கயல்கள் எனப் பிறழஉணர்ந்த மீன் கொத்திப் பறவை ஒன்று அந்தரத்தினின்று, உடல் அசையாது வரி சிறை அசைத்து வேகமாகவந்து பற்றக் கருதித்தரையில் மோதியது.

இதனைப் புலவர்

பருமணி தரள வடம் சுமந்து எழுந்து
பணைத்து இறுமாந்த வெம்முலையார்
பொருது வெண் பளிங்குத் தளத்தில் நின்றிடில் அத்
தளம் குளிர் புனல்என நெடிய

கருவிழி இரண்டு கயல் எனத் தோன்ற
கண்டு வந்து உடல் அசையாது
விரி சிறை அசைத்து அந்தரத்தின் நின்று எழில்சேர்
மீன் எறி பறவை வீழ்ந்திடுமே (3:13)

என்று பாடுவார்.

○

சிறந்த கவிஞர்கள் தாம் பாடும் நாடு, நகரப் படலங்களில் செல்வச் சிறப்பினையும், அவற்றில் வாழும் மக்களின் அற நிலையையும் விளக்க சிலவற்றை உடன்பாடாக, உள்ளன என்றும் வேறுசிலவற்றைஎதிர்மறையாக, இல்லை என்றும்கூறுவதுவழக்கம்.

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் பொழுது நல்லனவற்றை இல்லை என்பது போலவும், அல்லனவற்றை உள்ளனவாகக் கூறுவது போலவும் தோன்றும்.

ஆனால், இது புலவர்கள் கையாளும் ஒரு வகை உத்தியே எனத் தெளியலாம்.

இதனைக் கம்பன், உமறுப் புலவர் முதல் எல்லாப் பெரும் புலவர்களும் கையாண்டிருக்கிறார்கள்.

வண்ணக் களஞ்சியப் புலவர் நகரப்படலத்தில்,

நாடு உறு பொருளும், நகர் உறு பொருளும்
நால்திசை மயங்குற வளர்ந்த
காடு உறுபொருளும், மலைஉறு பொருளும்
கடல் உறு பொருள்களும், கதித்து
தேடுஅரும் உயிர்ச் சஞ்சீவி ஒப்பு எனலாய்ச்
சிறந்தன கடைத் தெருத் தலைகள்
சடுஇல் அங்கு இலை என்பவை அவை நினைத்தது
இலை எனும் மொழி ஒன்றே இலையே

என்றும், (3:15)

உரைப்ப அரு நிதியில், கல்வியில், தரும
ஒழுக்கம் என்பதில், அகம் முழுதும்
நிரப்புறு கொடையில், புகழில், வேண்டுவது
நிறை துஆ பேறு பெற்றிடலில்,
கரத்தில் நெல்லியைப் போல் நியத்தினில்,[1] வளத்தில்,
கதித்து வாழ்ந்திருக்கும் நல் நகரில்
இரப்பவர் கிடைக்கில் அவர் அரும்பொருளே
இன்றி ஓர் அரும்பொருள் இலையே (3:16)

என்றும் பாடுவார்.

---

1. நியம்-நிசம், மெய்

பசு உயிர் மீட்ட படலத்தில், அப்பசு தன் எஜமானனுக்குத் தான் பலவிதங்களில் உதவி இருந்த போதிலும், அவன் நன்றி மறந்து தன்னைக் கொன்று உண நினைப்பதனைத் தான் அறிய நேரிட்டதாகவும், ஆவி நச்சி அடைக்கலம் புகுவதாகவும், நபி அவர்களிடம் கூறி முறை வேண்டியது. அப்போது அது,

சுமந்ததின் பலனும் ஈந்தேன்; சுரந்ததின் பலனும் ஈந்தேன்;
சமைந்த கன்று அனைத்தும் ஈந்தேன் தத்துக்கும் பிழைத்து
இருந்தேன்'
(7:10)

என்று கூறியது.

நெஞ்சு சுமந்த வேதனையும், விழி சுமந்த வெந்நீரும் கொண்ட பசு, தன் துயரச் சுமையை, நீதி சுமந்த நெஞ்சினர் பால் உணர்த்தும் நயம் சுமந்த அடிகள் இவை.

முறை வேண்டிய பசுவின் குறை முடிக்க வேண்டி இளையரான சுலைமான் நபி அவர்கள் பசுவைப் பின் தொடர்ந்து உடையான் மனை குறுகினார்.

அதனை வண்ணக் களஞ்சியப் புலவர்,
இந்தக் கோ முன்னும், எங்கள், இளைய 'கோ' பின்னும்
ஆ(க)ச் சென்று
அந்தக் கோ உடையோன் வைகும் அகக்கடை எய்தி நின்று
பிந்து அ கோகனகக் கையால் பிறங்கொளி கபாடம் தட்ட
வந்த அ கோ குலத்தான் வாயில் திறந்து அகம் மகிழக்
கண்டான்

என்று பாடுவார் (7:18)

இப்பாடலில் நான்கு இடங்களில் ''கோ'' என்றசொல் வந்தமையும், ஓரிடத்தில் ஒரு சொல்லின் முதல்எழுத்தாக ''கோ'' வந்தமையும் காணலாம்

கோ—பசு, அரசன் என்ற பொருள் உடையது. முதல்அடி இரண்டாம் அடி, நான்காம் அடி ஆகியவற்றுள் முதற் சீரில் வந்துள்ள 'கோ' என்னும் ஓரெழுத்து ஒருமொழி, பசுவைக் குறிக்கும்

முதலடி ஈற்றில் அமைந்துள்ள 'கோ' எனும் சொல் அரசன் என்ற பொருளது.

'கோ' என்பதனை முதல் எழுத்தாகக் கொண்ட கோகனகம் என்ற சொல் தாமரை என்ற பொருளது.

சொல்பொருள் பின்வரு நிலை அணி, அமைந்துள்ள இப் பாடல் ''ஓகோ! நன்கமைந்துள்ளதே!'' என்று பாராட்டு பெறவே செய்யும்.

இப்பாடலில் மேலும் இரு நயங்களைக் காணலாம்.

இப்படலத்துள் விளக்கம் பெறும் நிகழ்ச்சிகளின் போது தாவூது நபி அவர்கள் உயிருடன் இருந்தார். சுலைமான் நபி மிகச் சிறியவராக இருந்தார். அவர் முன்னவர் பதினாறு பேர். அப்படி இருந்தும் சுலைமான் நபி அவர்களை வண்ணக் களஞ்சியப் புலவர் 'இளையகோ' என்று குறிப்பிடுகிறார்.

ஓர் அரசனுக்கு பின் அடுத்து அரசுக் கட்டில் ஏற இருப்பவரையே இளையகோ என்ற சொல் குறிப்பிடும்.

தாவூது நபி அவர்களுக்குப் பின் சுலைமான் நபி பல சோதனைகளுக்குப் பின் அரசுக் கட்டில் ஏறினார் என்றும் அறிவோம்.

இதனை முன் கூட்டியே அறிவிப்பது போல் அமைந்துள்ள குறிப்பே இளையகோ என்ற சொல் ஆட்சி.

எனினும் சொற் கிடந்தவாறு பொருள் காணும் போது அரச குமாரன் என்றே கொள்ள வேண்டும்.

கம்பன் யுத்த காண்டத்தில் மருத்து மலைப் படலத்தில் சாம்பன் அநுமனை மருந்து மூலிகைகள் எடுத்து வரப் பணித்த போது

''எழுபது வெள்ளத்தோரும், இராமனும் இளையகோவும்''

என்று பாடுவான்.

இங்கும் இளையகோ என்ற சொல் ஆட்சி காணலாம்.

இராமனும் என்று கூறி, பின் இளையகோ என்ற சொல் பெய்திருப்பதனால் இச்சொல் இலக்குவனையே குறிக்கும்.

இளையகோ என்ற சொல் ஆட்சி இரு பாடலிலும் ஒற்றுமை நோக்கி வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளது.

இப்பாடலில் காணத்தக்க மற்றொரு நயம் "எங்கள் இளைய கோ" என்ற தொடரில் அமைந்துள்ள 'எங்கள்' என்ற சொல் சிறப்பு ஆகும்.

காப்பியம் பாடும் எந்தப் புலவரும் காப்பியத்தினூடே பாயிரத்தில் அன்றிப் பிற இடங்களில் தம்மைப் பற்றிய குறிப்புகள் பெய்து அமைவது வழக்கம் அன்று.

காப்பிய நாயகனோ, அன்றி காப்பியத்தில் இடம் பெறும் வேறு எந்தப் பாத்திரமோ, யாவரையும் கவர்ந்து கொள்ளும், ஈர்ப்புத்திறன் சான்ற குணவானாக அமையும் ஆயின், அந்த ஈர்ப்பிலிருந்து காப்பிய கர்த்தாவால் கூட தன்னை விடுவித்துக் கொள்ளல் இயலாது.

தன்னையும் அதனுடன் ஈடுபடுத்துவதில், இணைத்துந கொள்வதில் பெருமிதமே கொள்வான். இராஜ நாயகக் காப்பியப் பாட்டுடைத் தலைவர் சுலைமான் நபி அவர்கள். மாபெரும் மன்னராக, பிற மன்னர்க்கு இல்லாத சக்திகள் உடையவராக இருந்தவர். அத்தகையவருடைய பெருமை பற்றிப் பேசவோ, கேட்கவோ செய்யும் எவரும் அந்தப் பெருமையில் தாமும் பங்கு கொள்ளவே விரும்புவர்.

அதனை வெளிக் கொணர்வது போல் இளையகோ என்ற சொல்லுக்கு முன்னால் அமைந்துள்ள 'எங்கள்' என்ற சொல்லை ஆள்வதில் புலவர் கொள்ளும் பெருமிதம் பாடலைப் படிக்கும் பொழுதே புலனாகிறது.

இப்படி எந்தக் கோணத்தில் பார்த்தாலும் சொற் செறிவும், சிறப்பும் மிக்கது இப்பாடல் என்பதில் ஐயம் இல்லை.



கனவு கண்டு மணம் செய்த படலத்தில் தன் கனவில் கண்ட காரிகையைக் "கண்டே தீர்வேன்" என்ற திட முடிவுடன் புறப்பட்ட சுலுத்தான் மகன் ஒரு பள்ளி வாயிலை அடைந்தான். அதன் பொறுப்பாளர் ஆன மோதீன் அவனைக் கண்டு "யார்? எந்த ஊர்" என்று விசாரித்தார். தான் ஒரு தேசாந்தரி என்று கூறினான். அவனை உணவு உண்ண அழைத்த மோதீன், தன்னுடன் கொண்டு ஏகினார் என்றும் கண்டோம்.

தனக்கு உணவு படைக்க வந்த பெண்ணை ஏறிட்டு நோக்கினான் "அன்று நாம் கனவில் கண்ட ஆருயிர் இவளே இன்று கண்டிடப் பெற்றோம்" என எண்ணி மயங்கி வீழ்ந்தான்.

எதிர்பாரா நிகழ்ச்சியினால் ஏற்பட்ட அதிர்ச்சியும், மயக்கமும் இது.

இத்தகைய இன்ப அதிர்ச்சி நிலையை வண்ணக் களஞ்சியப் புலவர் தன் (கவி) கூற்றாகக் கூறும் பாடல் வருமாறு:

வண்ண வார் குழல் கனாவில் வரும் அழகு அமுதம் உண்டு
கண் அதில் புகுந்ததாலே இத்தனை கலக்கம் காதில்

உண்ண என்று உரைத்த வார்த்தை அமுது ஒக்க சேரும் ஆகில்
வெண் நகை மான் மேல் கொள்ளும் விரகத்துக்கு அளவும் உண்டோ?
(9:44)

விரக தாபத்தின் மிக்க ஆற்றலை விளக்கும் பாடலாக இது அமைந்தமை காண்கிறோம்.



இப்படலத்தில் பிறிது ஒரு நிகழ்ச்சி காண்போம்.

தான் ஒரு தேசாந்தரி என்று கூறிய அவ்வரசிளங்குமரன் அம்மோதீனிடம் "உறுதி அணுவும் மாறாதவர் நீர். மா திரு அனைய உம் புதல்வியை எனக்கு மணம் செய்து தர வேண்டும்" என்று கோரினான்.

பல விதமான எண்ணச் சுழலில் சிக்கிச் செய்வது அறியாது திகைத்த மோதீன் ஒருவாறு தெளிந்து "என் புத்திரி எனக்கும் என் துணைவிக்கும் பொது. என் செம்பாகம் ஆன மனைவியின் கருத்தறிந்து வருகிறேன்" என்று கூறிச் சென்றார்.

மனைவியிடம் நடந்தன கூறினார். "அதிசயம் இதற்கு என் செய்வோம்" என்றார். கேட்ட அவள் அகத்துள் வாடினாள்.

"கட்ட வத்திரமும், உண்ண உணவும் அற்ற தொடர் கவியாளனுக்கு, சோற்றுக்கு வருந்தி நம்மனை புக்கவனுக்கு நம் மகளை அளிப்பதா?" என்று வாய் விட்டுப் புலம்பினாள்.

"சென்ற இடத்தில் சீரும் சிறப்போடு என் மகள் வாழ வேண்டும் என எண்ணிக் கிடந்தேனே. அரும் பெறல் மகளை அநாதைக்கு ஈவதா? அவள் என்ன அழகு அற்றவளா?" என்றெல்லாம் பலபடியாய்ப் புலந்து வாய் விட்டுக் கதறுவாள்.

''சீர் பொதிந்த செல்வனுக்கு, வார் பொதிந்த தனத்தாளை மணம் முடித்துக் கண்ணார மணவிழா காண கனவு கண்டேனே! கேட்பவர் நகைக்கக் கீழ்மை எய்துவோமோ?'' என்று கணவனை நோக்கி வினவுவாள்.

அப்போது அவள் கூற்றாக

முன்னை எம் தவத்தின் பேறே!
முருக்கு இதழ்க் கனியே! யார்க்கும்
நன்னய அமுதே! மானே!
நறுமலர்க் கொடியே! மாறா
மின்னை, யான் பெற்ற செல்வத்
திருவை, விண் உலக மாதை,
பொன்னையோ, இரப்பான் கையில்
புகுப்பது என்று உகுத்தாள் கண்ணீர் (9:56)

என்பார் புலவர்.

தாயார் மன நிலையைக் குறிப்பிடும் தொடர், ''என் மகட்கு மணாளன் ஆக அமைபவன் செல்வந்தனாக இருக்க வேண்டும். இல்லாமையால் என் பெண் கலங்கி, கண்ணீர் வடிக்கக் கூடாது'' என்பதே.

இதனையே, வண்ணக் களஞ்சியப் புலவர்
''தனத்தினில் பெண்ணை ஈன்ற தாய்க்கு இன்பம்''
என்பார்.

மோதீன் மகள் அழகு நலம் கனிந்து ஒழுகுபவள். அத்தகைய அழகுடைய மகள் மாட்டு அவள் தாய் கொண்ட பாசமும், அவள் (மகள்) எதிர் காலம் பற்றிய விழைவுகளும் இப்பாடலில் வெளிப்படக் காண்கிறோம்.

''பொன்னையோ இரப்பான் கையில் புகுப்பது?''என்ற அவள் வினாவில் ஒகாரத்தில் வினாப் பொருளோடுஅவலக் குறிப்பும் இருப்பது கண்டு மகிழ்கிறோம்.



அரச நிலை அடைந்தார் சுலைமான் நபி அவர்கள். சருவந்து தரித்து, சுப்பா அணிந்து, ஆசாபிடித்து, அரசு கோலம் மேவினார்.

அப்போது தனிப்பொருள் இறைவன் தூதர், அவரிடம் சேர்ந்தார். ''அறிவா? அரசா? எது வேண்டுவது? இவற்றில் ஒன்று

உரைமின் என்று உம்மைக் கேட்டுவர, இறைவன் என்னை விடுத்தான். யாது நும் கருத்து?'' என ஜிப்ரீல் வினவினார்.

அப்போது உலகியல் வாழ்வுபற்றி தன் கருத்தாகச் சுலைமான் நபி கூறியன பல.

அவற்றுள் ஒன்று:

''நிலைத்துள அளவும் பெறும் அனுபவத்தை
நினைப்பினில் விருப்பொடு வெறுப்பு
பலிக்க வைத்திடுவது அகற்றியே, புளியம்
பழமொடு தோடு, என மருவி
புலப்படும் ஒரு மும்மலத்தையும் கடந்து
பொருவரும் கதியிடைப் புகுத
நலப்படுவது போல், புவியினில் உதித்த
நரஜென்ம லாபம் வேறு எவையே? (14:5)

என்பதாகும்.

இப்பாடலில் விரவி இருக்கும் சிறப்புகள் பல. இச்சிறப்புகள் இந்நாட்டின் சமய தத்துவங்களோடு ஒத்திருப்பன; அல்லாமல் அருமையான உவமையும், சொல் ஆட்சியும் பொருந்தியனவாக அமைந்திருக்கின்றன.

மனித வாழ்க்கை தாமரை இலை நீர்போல் இன்ப துன்பப் பற்று அற்று இருக்கவேண்டும், என்பது இந்நாட்டின் முதுமொழி.

அதனையே ''புளியம் பழமும் தோடும்'' என்ற சொல் ஆட்சி மூலம் புலவர் எடுத்துக்காட்டி இருக்கிறார்.

அஃதன்றியும் உலக வாழ்வு நிரந்தரமானது அன்று, என்பதனைக் குறிப்பதே 'நிலைத்துள அளவும்' என்ற தொடர்.

நினைப்பினில் விருப்பொடு வெறுப்பு அகற்றி வாழ்வது நன்று என்பது குறிப்பு.

இதனை வலியுறுத்தும் பொழுதுதான் புளியம்பழ உவமையை எடுத்துக் காட்டுகிறார்.

மூன்றாம் அடியில் அமைந்துள்ள, ''புலப்படும் ஒரு மும்மலத்தையும் கடந்து'' என்றதொடர், சைவசித்தாந்த அடிப்படையைக் குறிப்பிடுவது போல் அமைந்து இருக்கிறது.

இவ்வாறு, விருப்பு வெறுப்பற்ற மனத்தவர், மும்மலம் கடந்தவர், பொருவு அரும் கதியிடைப் புகுவர். நலப்படு வழி இவையே.

இத்தகு நலப்படு வழிசாரல் அன்றி, நரராய் ஜென்மித்தவர்க்கு லாபம் வேறு எவை? என்று வினவுகிறார்.

இப்பாடலின் நயம் பல கோணங்களிலிருந்து நுகரத்தக்கது.



பல்கீசு வரலாற்றுப் படலத்தில் எமன் நாட்டுச் சபபு நகர் வளம் பற்றிப் புலவர் குறிப்பிடும் பாடல்களுள் ஒன்று:

பசுக்கள், ஒட்டகங்கள், ஆடு,
தம்மிலே பலுகி எந்த
திசைக் கணும் பால் பீரிட்டுத்
திரிதரும் பல வருக்கம்
நசைக் கனிப் பொழில்கள் தாவல்
செயல்உறு நாடு எமன் சூழ்ந்து
இசை பெறு சபபு என்றே
சொல்லிடும் ஒரு நகரம் மன்னோ (29:2)

என்பதாகும்.

புலவர் அரபு நாட்டு வளம் பற்றிக் குறிப்பிடுவதால் கால் நடைச் செல்வங்கள் மூன்றனுள், எருமை நீக்கி, ஒட்டகங்கள் சேர்த்துப் பாடுவார்.

'வாங்கக்குடம்நிறைக்கும்', 'குடம்சுட்டு ஆயர்' என்றதொடர்கள் குடம்படுமடி கொளும் கால்நடைச்செல்வம் குறிக்கும். "பால் பெரிது அமைக" என்று அரசனை வாழ்த்தும் மரபும்உண்டு. கால்நடைச் செல்வங்களே ஒரு நாட்டின் செல்வமாகக் கருதப் பட்டது. 'மாடு' என்ற சொல்லே செல்வம் என்ற பொருளில் திருக்குறளில் குறிக்கப் பெறுகிறது.

வெண்மைப்புரட்சி என்று, இக்காலத்துக் குறிக்கப் பெறுவதும் இதுவே. இம்மூன்று விலங்குகளின் பெருக்கத்தால், அவை எத்திசைக்கணும் பால்பீரிட்டுத் திரிதந்தன என்று பாடுவார்.

அடுத்து இப்பாடலில் பழம் முதிர்சோலைகள் வளம்பற்றிக் குறிப்பிடுவார். பல வருக்கக் கனிகள், நசைக்கனிகள் என்று கூறுவார். முன்னர் பலாக்கனி பற்றிக் குறிப்பிடும் பொழுது தூங்கு தேன் குடம், என்று உரைத்தமை காணலாம். (22:11)

இத்தகைய சோலைகள் தாவல் செயல் உறுவன என்பார்.

இதன் பொருள் அப்பொழில்கள் அமைந்துள்ள இடப்பரப்பு பெருகுமே அன்றி, அருகாது என்பதாம். பரந்து விரிந்த நிலப் பரப்பில் சோலைவளம் அமைவதால், இசையால் திசைபோயது என்று புலவர் குறிப்பிடுவார்.



சபபு நகர் அமைச்சன் யூசறுகு ஒருமுறை கானமர் வேட்டம் கருதி, திறல் கைவீரர் சூழ, பரி இவர்ந்து கானம் புக்கான். மாலைப் போழ்து, திரும்பும் போதில் உடன் வருபவரை நீத்து அவன் பரி விரைந்து ஓடல் உற்றது.

விரை மலர்ச்சோலை ஒன்றில் பரி சாரல் உற்றது. கதிரவன் குடதிசை சாய்ந்தான்.

அச்சோலை றிபுனுகைத் என்ற ஜின்குலத் தலைவனுக்கு உரிமையானது. 'இரவு இங்கு வைகி காலை நகர் காண்போம்' என்று கருதியவனாய்ப் பொழிலில் தங்கினான்.

நள்ளிருள் சார்ந்தது. சோலையில் சுற்றித்திரிந்த சில ஜின்கள் பொழில் இருள் சீக்கும் பொங்கு ஒளி முகத்தன் யூசறுகு கண்டன; வியந்தன; அவன் வடிவழகில் மயங்கின.

இச் சூழ்நிலையைப் புலவர்,

அடைதலும் இவன் பொன்மேனி அழகு ஒளி இருளைமாற்றி
படர் கதிர் நிலவு காலும் பான்மை கண்டு அதிசயித்து
மடல் அவிழ் கமலப் பாதம் வணங்கி யார் என வினாவ
தடவரை புயத்தான் பேரும் ஊரும் வந்தவையும் சொன்னான்
(29:28

தரம் பெற்றோன் உரைப்பக் கேட்டு
சந்திரன் பருதி நாண
திரம் பெற்ற கவின் கொள் மேனி
தெரிசிக்கப் பெற்றோம். நீண்ட
கரம் பெற்றோம், மதுர வாய்மை
காது உறப் பெற்றோம். நல்ல
வரம் பெற்றோம், என ஆனந்த
மகிழ்ச்சி வாருதி பெற்றாரே. (29:29)

என்று பாடுவார்.

மை இருள் கங்குலிலும் அவன் முகப்பொலிவு கண்டு, அகலாது அவன் சூழ்ந்தன; அவன் வரலாறு கேட்டு அமைந்தன.

அவன் முகம் நிலவைப் பொழியும் மறு இல் திங்கள்போல் விளங்கியமை கண்டு அதிசயித்தன; செயல் மறந்து சூழ்ந்தன. அழகெலாம் ஒருங்கே கண்டால் ஆர் அதனை ஆற்ற வல்லார்?

ஜின்கள் வாய்மொழியாகவே யூசறுகு முகம், ''சந்திரன் பருதி நாணத்திரம் பெற்ற கவின்மேனி'' என்று புலவர் குறிப்பிடுவார்.

அத்தகைய ஆண் அழகனைக் காணும் பேறும், கரம் தீண்டும் பேறும், மதுரச்சொல் கேட்கும் பேறும் பெற்றமையால் தாம் நல்ல வரம் பெற்றவரே என்று மகிழ்ந்தன ஜின்கள்.

ஆடவர் பெண்மையை அவாவு தோள் நலம் என்று, கம்பன் குறிப்பது போன்ற நயம் சால் பாடல் இது.



ஆண் அழகன் யூசறுக்கு ஏற்ற துணைவியாய் அமைந்தவள் உமையிறத். ஆண் அழகன் என ஜின்கள் வாயிலாய் அவனைப் புகழ்ந்த புலவர், பெண் நலம் கனிந்து ஒழுகும் பெட்புடைக் கொடியன்னாளைச் சீரிய, கூரியவடிவேல் கண்ணார் தொழுதனர், என்று குறிப்பிட்டு அவள் அழகை நாம் உய்த்துணர வைக்கிறார்.

''குழை ஒன்று இரண்டு விழிகள், இழை ஒன்று இரண்டு செய்தாலன்ன நுண்ணிடை'' மடவார் தாமும் தமக்குள் வியந்து பாராட்டும் அழகுடையாள் உமையிறத் என்பார்.

பெண்கள் அழகை, குறிப்பாகக் கண்கள் பொலிவைக் குறிப்பிடும் புலவர்கள், அவை குமிழ் மறித்துக் குழை தீண்டி மீள்வன என்பர். இது மரபு. கயல் மீன்களை உவமை கூறலும் உண்டு.

இங்கு இவ்விரண்டும் சேர்த்து ஆள்கிறார் புலவர். காதுகளில் அணிந்துள்ள குழைகளைத் தீண்டி மீளும் அளவிற்கு அவை நீண்டு பெரியன என்பார். அதே சமயத்தில் கயல் மீன்கட்கு ஒத்து இருந்தன என்று கூற முடியாத அளவிற்கு, அவை கூரிய வடிவேற் கண்ணாக அமைந்திருந்தன என்று கூறுவார்.

குழை தாவும் கூர்வேல் கண் என்ற உவமையை உமையிறத் கண்களுக்கு அமைக்காமல் அவள் தோழியர் மேல் ஏற்றிப் பாடுவார்,

அத்தகைய அழகிய பெண்களும் தொழும் மலர்க்கொடி அன்னாள் என்பதனால் அவள் அழகை, நம் கற்பனைக்கே விட்டு விடுகிறார்.

நம் கற்பனையைத் தூண்டும் அப்பாடல் :

ஏரிய குழையில் தாவி இயல் கயலினம் ஒவ்வாத
கூரிய வடிவேல் கண்ணார் தொழும் மலர்க் கொடி அன்னாளும்
சீரிய நெறி செய்வோர்கள் திலகனும் இவ்வாறு எய்தச்
சூரியன் எழுந்தான். காளை துணிவு அதின்படி அங்கு உற்றான்.
(29:44)

பல்கீசு வரலாற்றுப் படலத்தில் கட களிறு அனையான் யூசறுகு மேனிக் கவினும், பேரொளியும் ஒன்றாய்ப் படர்கொடி நிகர்த்தது ஓர் பெண் பசுங்கிளியை உமையிறத் பெற்றெடுத்தாள் எனக் கண்டோம்.

பெற்றோர் அம்மகவிற்குப் பல்கீசு எனப்பெயர் இட்டனர். மேலோர் அம்மகவின் கண் கவர் சுந்தரம் நோக்கி "சூறத்துல் எமினா" (எமன் தேயத்துத் திவ்விய மலர்) என்று பெயர் சூட்டினர்,

வடிவெல்லாம் பெண்ணாகி வளர்ந்து வரும் காலத்து ஈன்றாள் இறந்தாள். அரும் பெறல் மகளை, தன் உயிர் ஒப்பாய்க் கருதி தாயன்பு காட்டி வளர்த்தனன் யூசறுகு.

பல்கீசு வளர்ச்சியைப் புலவர்,

தெளித்து அருள் மதி பிதாபால்
செழிப்பொடு வளரும் நாளில்
களிப்பு உற, கவியின் மீது கற்பனை
சார்ந்ததே போல்
தளிர்க்கு எழில் நிறம் வந்து எய்தும்
பருவம் சார்ந்தது போல், புள்ளி
அளிக்கு அறை குழலாள் தன்னை
அறிந்து பெண் பருவம் சார்ந்தாள். (29:65)

என்று பாடுவார்.

தாய் கையில் வளர்ந்திலள், வளர்ந்தது தந்தை பால், என்பதனை முதலடியில் குறிப்பிடுவார். தாயும் ஆகித் தாங்கிய தாதைச் சிறப்பினைத் "தெளித்து அருள் மதிப்பிதா" என்று குறிப்

வார். தாய் இழந்த பெண் மகவை வளர்ப்பது பெரும்பாடு தரும். ஏவலர் இருப்பினும், இகுளையர் இருப்பினும், தாயின் தனிக் கண்காணிப்பு பருவப் பெண்டிர்க்குத் தேவை. இதனை நன்கு உணர்த்துவது போல், தந்தையே தாய் நிலையில் வளர்த்த சிறப்பினைக் கூறுவார்.

பெண் ஒருத்தி பருவம் எய்துவது என்பது இயற்கை வளர்ச்சிப் போக்கில் நிகழ்வதே. உடலில் ஒரு தனிப்பொலிவு, கவர்ச்சி நிறம். மினுமினுப்பு இவை தோன்றும். மாந்தளிர் பார்த்த அனைவரும் இதனை அறிவர். என்றும் இல்லாத தனிப்பொலிவும், கண்கவர் தோற்றமும், மினுமினுப்பும் கொண்டு விளங்கும்.

மாந்தளிர் மேனி என்று பருவம் சான்ற மங்கையர் மேனியைப் புகழ்வர்.

தளிர்க்கு எழில் நிறம் வருவதும், அதன் வளர்நிலையில் ஒரு மாற்றமே. எனவே இவ்வுவமம் இயற்கையோடு ஒத்த உவமையாக அமைவதோடன்றி, உள்ள நிலையை உணர்த்துவது ஆகவும் இருக்கிறது, என்றாலும் வண்ணக்களஞ்சியப் புலவர் தம் புலமைத் திறத்திற்கு ஏற்பப் புத்துவமை ஒன்று காட்டுகிறார்.

ஒருகவிதை எப்படி இருக்க வேண்டும் என்று உணர்த்துமாப் போல் பல்கிசு எழில் விளங்கிற்று என்று கூறுவார்.

தனிப் பொலிவு எய்திய தையலாள் தகைமைக்கு, கற்பனை சார்ந்த கவிதை உவமை ஆக அமைகிறது.

சிறிது நூற்பயிற்சி உடையாரும் ''விரைவாகக் கவிதை தனை விரைந்து பாடக்'' காண்கிறோம். அவை மிதவை இலக்கியங்களே. கால வெள்ளத்தை எதிர்த்து நின்று நிலைக்க வல்லன அல்ல.

கற்பனை வளம் இல்லாவிட்டால், கவிதை வளர்ச்சியற்றதாக வும், பெருமை அற்றதாகவும் அமைந்து விடும்.

உண்மையில் கற்பனைதான் கவிதையின் உயிர் நாடி. கவிதைப் பொருள் செறிவிற்குச் கற்பனையே அடிப்படை. எனவே ஒரு பெண் பருவம் எய்துவதற்குக் கவியின் மீது கற்பனை சார்தலை உவமை ஆக்கிக் காட்டுவது மிக அற்புதமாகப் பொருந்துவதனைக் காண்கிறோம்.

பல்கீசு அரசுரிமைப் படலத்தில் சுறாயிகு யூசறுகை வர வழைத்து, தனக்கு அவன் மகளை மணம் முடித்துத் தரவேண்டும் என்று கேட்டதையும், அதற்கு யூசறுகு "மகள் பால் கேட்டுச் சொல்வன்" என்றதையும் நாம் அறிவோம்.

வீடு அடைந்த யூசறுகு மகளிடம், "அன்று யான் உரைத்த வண்ணம் நடந்திருந்தால், இன்று இவ்வின்னல் வந்திராது. உனக்கு இசைத்த புத்தி அணுவும் உன்னாது நீத்தாய். அவனுக்கு உன்னை மணம் முடிக்க வேண்டுமாம். இதற்கு என் சொல்வேன்; செய்வேன்" என்று வருத்தத்துடன் கூறினான், என்றும் கண்டோம்.

அப்பொழுது தந்தைக்கு மகள் யாது கூறினாள் என்பதனை

"சொன்னவை புரிவன்" என்றே
துயர்க்கடல் கரை காணாது
தன் அகக் கலம் தயங்கும்
தந்தை, மீகாமன் என்னும்
மின் இடத்து உரைப்ப "மாலை
புனைவன்" என்று உரை மெய்போற் செய்து
இன்னுயிர் செகுப்பன் என்றே
இக்கரை காட்டினாளே (30:17)

என்று புலவர் பாடுவார்.

சுறாயிகு சொற்களால் துயர்க்கடல் கரை காணாது தன் அகம் (கலம்) கலங்கும் தந்தைக்கு 'மீகாமன் என்னும் மின்' தன் திட்டத்தை வகுத்துக் கூறி, இக்கரை காட்டினாள் என்பது இப் பாடலின் பிழிவாம் கருத்து.

இப்பாடலில் அமைந்துள்ள சிறப்பு என்ன என்றால், தந்தை யின் உள்ளத்தைத் துயர்க்கடலில் கரை காணாது தத்தளிக்கும் கலத்திற்கு உருவகப்படுத்தியமையே. அவன் துயர்க்கடப்பது எவ் வகையில்? என்று அறியாது கிடந்தான். இதனைக்குறிப்பதே "கரை காணாது அகக்கலம்தயங்கும் தந்தை" என்ற சொல் ஆட்சி.

கரை காணாது தந்தை இருந்ததை குறித்தமைக்கு ஏற்பவே மகள் சொன்ன செய்தியை 'இக்கரை காட்டினாள்' என்ற தொட ரால் குறிப்பார்.

கலத்திற்கு எத்தகைய சேதமும் வாராவாறு காத்து கரை சேர்த்தல் மீகாமன் பொறுப்பு. தவிர கலத்திற்குக் கேடு எனின் மீகாமனும் அன்றோ அழிந்து படுவான்.

வீசும் புயலில் மோதும் அலையில் மனத் துணிவைத் தளர விடாது சுக்கானை இறுகப் பற்றி கலத்தொடு, நலத்தொடு கரை சேர்தல் திறப்பாட்டாளனான மீகாமன் செயல். திட்டம் வகுத்த பல்கீசையே மீகாமனாகப் புலவர் குறிப்பிடுவது உவமையின் முழுமையைக் காட்டும். இப்பாடலில் அமைந்துள்ள உருவகச் சிறப்பு உன்னுதொறும் உவகை பயப்பதே.



எண்ணம் ஈடேறப் பெற்ற சுறாயிகு காமப்பித்து தலைக்கேற தன்னைக்காண வருவதாயின் தளத்தை நீத்து தனி ஒருவனாகவே வரவேண்டும் என பல்கீசு விதித்த நிபந்தனை ஏற்று, சிந்தனைத் தெளிவின்றி வளங்கொள் கட்டக ஏழ் வாயில் மனை சார்ந்தான்.

நடந்து வரும் பாதையில் மணமலர், பொன்மலர், வெள்ளி மலர் தூவி, ஆலத்தி சுழற்றி, அணங்கனார் அவனை வரவேற்றனர்.

பெருமிதத்தோடு ஆறுவாயில்கள் கடந்து, ஏழாம் வாயில் சேர்ந்தான். கொம்மை வெம்முலைக் கொம்பனாள் ஒருத்தி

"ஆலத்தின் உருக்கொண்டோனுக்கு ஆலத்தி சுழற்றி உன்றன்

காலத்தின் முடிவு இக்கட்டில் இடத்து எனக்காட்டல் போல
சீலத்தின் உயர் பல்கீசுக்கு அலங்கரித்திருந்த செம்பொன்
கோலத்தின் மஞ்சம் மீது கரம் பற்றிக் கொடுபோய் வைத்தாள்
(30:25)

என்று வண்ணக் களஞ்சியப் புலவர் பாடுவார்.

இப்பாடலில் அமைந்துள்ள சொல் நயம் நினைந்து நினைந்து நுகரத் தக்கது. "ஆலத்தின் உருக் கொண்டோனுக்கு ஆலத்தி" என்றதொடரில் உள்ள ஆலம் என்றசொல் நஞ்சு என்ற பொருளது. ஈக்கு விடம் தலையில், இருந்தேளுக்கு வாய்த்தவிடம் கொடுக்கில், பாம்புக்குப் பல்லில் விடம் ஆனால், துர்ச்சனர்க்கு அங்கம் முழுதும் விடம் என்ற பழம் பாடல் ஒன்று உண்டு.

சுறாயிகு மிகக் கொடியன். சொல், எண்ணம், செயல் யாவற்றாலும் தீயவன். சார்ந்தாரைக்கொல்லி எனவே அவன் உருவெடுத்து

உலகில் வந்த ஆலம் ஆக ஆகிறான் என்பது குறிப்பு. எடுத்த ஆலத்தி (ஆரத்தி) என்ற சொல் கண் எச்சில் கழிக்க மகளிர் சுழற்றும் அயினி நீர் என்ற பொருளது.

காலத்தின் முடிவு இக்கட்டிலில் என்ற தொடர்; "எண்ணத் தொலையாத இன்பமெலாம் துன்னுக" என்ற பொருளைத் தரு மேனும் "உன் தீ வாழ்வு தீர்ந்து போவது இக்கட்டிலின் இடத்தே தான். அதுவும் வல் விரைந்து அமைவதே" என்ற பொருளைத் தந்து நிற்றல் காணலாம்.



நிலம் இயங்கு மின் என, நீள்விழி மாது பல்கீசு அப்பதகன் இருந்த மஞ்சம் சார்ந்தாள். அவள் அழகெனும் நறவம் இருவிழி ஆரமாந்தினான். "கோடி சூர்யப் பிரகாசம் குலவு பொன்மேனி நோக்கி நாடிய விழி மழுங்கினான் நரகம் ஆள்வான்" என்பார் புலவர். (30:28)

'பட்டுக் கிடப்பான்' என்றும், 'வரையா நிரையம் வரைந்து கொண்டவன்' என்றும் தீமகனைப் பொதுவில்புலவர் குறிப்பிடுவர்.

அவ்வாறே சுறாயிகுவையும் நரகம்ஆள்வான் என்று வண்ணக் களஞ்சியப் புலவர் குறிப்பிடுவார்.

முன்னர் (இப்படல முதலில்) கற்புடையவரை மேவ கவனங் கொள்பவன் பல நலன்களை இழப்பான்; அவன் எண்ணங்களே அவனை நற்பர கதியை மாற்றி நரகத்தில் குடியிருத்தும் என்று கூறியுள்ளார்.

அதனை மேலும் வலியுறுத்துவது போல் ஐவகைப்பாவங் களை அணிமுடி போல் தலைமேற்கொண்டு ஒழுகி, புன்மைச் செயல்களைப் பொருந்து அணிகலன்கள் ஆகக் கொண்டு மகிழ்ந்து, இபுலீசுக்கு முதன் மகன் ஆன சுறாயிகு வாழ் தக்கவன் அல்லன் எனவும், அப்பூரியன்ஆளத் தக்கது அடுநரகே எனவும் கூறுவார்.

நரகம் ஆள்வான் என்ற சொல் நயம் நினைந்து போற்றற்கு உரியது.



பல்கீசின் திட்டப்படி நஞ்சு கலந்த பானம் சுறாயிகு முன்னர் வைக்கப்பெற்றது. பருகினான். நினைவு மறந்து, உடல் மறந்து உரை மறந்து, மூச்சயர்ந்து, மஞ்சத்தில் சாய்ந்து விட்டான்.

பல்கீசு தன் தோழியை அழைத்தாள். "முந்துற வேந்தின் முடியறுத்திடுக" என்றாள். இச்செயலைக் கண் முன் நடப்பது போல், நிதர்சனமாகக் காட்டும், உயிர்த்துடிப்பு உடைய சொற்கள் பெய்து அமைத்துள்ளார்.

கந்தவார் குழலி கொலைவாள் கைக்கொண்டாள். கூர்மையைப்பதம் பார்த்தாள்; விழி செருக்கினாள்; இதழ் கறித்தாள்; ஒலி எழல் ஆகாது என்பதற்காகவும், தடையாக அமைதல்கூடாது என்பதற்காகவும் திரள் வளையல்களை முழங்கை வரை செறித்தாள். இதனைக் குறிப்பிடும் புலவர்,

"கந்தவார் குழலி ஓர் கைக் கருவியை எடுத்துத் தீட்டி
புந்தியிற் கருவியே வண்டுஉறுக்கிக் கட்டிலின் பாற்போனாள்"
என்பார். (30:33)

கயவன் கழுத்து அறுத்துக் கொல்லப்பட்டான். அவன் உடலும் தலையும் கிடந்த நிலையைப் புலவர்,

சோரி ஆங்கு ஒழுகி ஓட, துடிப்புஅற, உடல் கிடக்க
ஓர் இருவிழி அரைக்கண் உற்று, இதழ்க்கு இப்பால் வந்து
ஆர ஓர் புறத்து ஒதுங்கி கோணி, பல் அதில் அழுந்தி
ஈரம் அற்றிடும் நா தோன்ற, தலை கிடந்திட்டது அன்றே
என்பார். (30:35)

அடர்த்து எழு குருதி அடங்காப் பசுந்துணிக் கருந்தலை; வெளித்தொங்கிய நா (பல் அழுந்திக் கிடப்பது); வாய் கோணிய தோற்றம். வெட்டுப்பட்டு; வீழ்ந்து உருண்டு கிடக்கும் இந்தத் தலைபற்றிக் குறிப்பிடும் இப்பாடலை எவ்வளவு நுணுக்கமாக, இயல்பு நவிற்சியாக அமைத்துள்ளார் புலவர் என்று எண்ணு தொறும் வியப்பே மிகும்.



பல்கீசு திருமணப்படலத்தை வண்ணக் களஞ்சியப் புலவர் மிக விரிவாகப் பாடி இருக்கிறார்.

மணமகன் வரும் பவனி கண்ட மகளிர் என்ன கருதினர், சொல்லினர், செய்தனர் என்பவற்றை எல்லாம் கற்பனை நயம் ஒழுகப்பாடி இருக்கிறார்.

இப்பகுதியில் அமைந்திருக்கும் பாடல் அனைத்துமே சிறப்பு நிறைந்தன, எனினும் எடுத்துக் காட்டாக ஓரிரு பாடல்கள் காணலாம்.

பவனி வரும் சுலைமான் நபி அவர்களின் அழகு, தங்கள் கண்களில் புகுந்து விட்டது என்பார் சிலர். வேறு சிலர் இல்லை; கண்களில் புகவில்லை கருத்துக்குள் கலந்து விட்டது என்பார்.

ஆனால் அவ்விருவருமே இப்படித் தங்களுக்குள் புகுந்துவிட்ட சுலைமான் நபி தம்மூர் இருப்பதாகவே மனை நாடினர்.

இதனைப் புலவர்,

''விண்ணினின் மீதினுள் கமழ்புய நபியின் மெய்அழகு
கண்ணின் மீதினுள் புகுந்தது என்பார் சிலர். கருதும்
எண்ணின் மீதினுள் புகுந்தது என்பார் சிலர். இதனை
நண்ணி நம்மனை கொடு புகுவோம் என நவில்வார்.
(34:105)

என்பார்.

இது அன்றியும், சுலைமான் நபி பல்கீசு இவர்கட்கிடையே உள்ள பொருத்தத்தை அப்பெண்கள் ஓர் உவமையின் வாயிலாக விளக்குவார்.

வானது ஆர் புகழ் சுலையுமான் நபிக்கு பல்கீசே
ஆனதாரம், செம்மணி கனகத்து அழுத்துவது ஆம்
ஈனதாம் பிரத்தினில் மணி பதித்ததற்கு ஈடாம்
மீன தாம் விழிமறு மடந்தையர் என விள்வார் (34:107)

என்பார் புலவர்.

சுலைமான் நபி செம்மணி எனத்தக்க சீரினர். பல்கீசு கனகம் போல்வாள்.

''தங்கத் தகட்டில் தகுதி சான்ற செம்மணியைப் பதித்துப் பொலிவு ஊட்டுவரே அன்றி, தரம் குறைந்த தாம்பிரத் தகட்டில் பதிப்பார்களா?'' என்று அவர்கள் கேட்பார்கள்.

பல்கீசு நீங்கலாக, பிற எந்த பெண்ணையாவது நபி அவர்கள் மணப்பாரே ஆனால், அது செப்புத் தகட்டில் பதித்த செம்மணி ஆகும். அப்படிச் செய்வார்களோ? செய்யார் என்பது அவர்கள் கருத்து. இதனை வாய்விட்டும் கூறுவார்கள்.

'விள்வார்' என்று பாடல் ஈற்றில் அமைந்திருக்கும் சொல் ஆட்சி போற்றுதற்கு உரியது.

விள்ளுதல் என்ற சொல்லுக்கு நுனித்து ஆராய்ந்து கேட்பார் மனம் கொளக் கூறுதல் என்பது பொருள்.

தமது இக்கருத்தை ஏனோ, தானோ என்று மேலெழுந்த வாரியாகக் கூறிவிடாமல், இருவர் இயல்புகள், தகுதிகள் ஆகிய வற்றை முழுமையாக அறிந்து, கூர்ந்து ஆய்ந்த பிறகே இப்படிக் கூறினார்கள் என்பதனை இச்சொல் உணர்த்தும்.



பவனி வரும் சுலைமான் நபி அவர்களை, இன்னொருத்தி எப்படிக் கண்டாள் என்பதனை மனோ தத்துவ அடிப்படையில் புலவர் அற்புதமாகப் பாடி உள்ளார்.

இவரில் ஓர் திரு, மயல் மிகுத்து, உடல்மறந்து, இரு கண்
கவரியே முதல் விருது எலாம், குழுஎலாம் காணாது,
உவரி போல் முரசொலி எலாம் செவி புகாது, ஒருவன்
நபியை மாத்திரம் கண்டனள் அகநயனத்தால் (34:110)

என்பதுதான் அப்பாடல்.

மணமகன் பவனி காணத் திரண்ட பெண்களில் ஒருத்தி மையல் மிகுதியினால், தன்னை மறந்தாள். கண்கள் இமையாமல் பார்த்தவாறு நின்றாள். அவள் பார்வை பதிந்தது சுலைமான் நபி மீதுமட்டுமே. அவரைச் சூழ்ந்து வரும் கவரியே முதல் விருதுஎலாம். குழுவினர் எலாம் காணாதவள் ஆயினாள். காதுகளில்உவரி அலை ஒலிபோல் எழும் முரசு ஒலி,வீழினும் கேட்டிலள் ஆயினாள்.

எனினும் அக நயனத்தால் ஒருவனான இறைவன் நபியை மாத்திரம் கண்டாள். அவ்வுரு நெஞ்சத்து ஆழப் பதிந்தது.

இப்படிக் கூறுவதன் மூலமாகச் சாதாரணமாக உலாவியற் படலங்களில், பவனி வரும் பெருமகனைப் பிற பெண்கள் கண்டு காம இச்சை கொண்டனர் என்று கூறுவார்களே அதற்கு மாறாக 'அகநயனத்தால்' இறைவனுடைய திருநபியை மாத்திரம் கண்டாள், என்று குறிப்பிட்டு நபி அவர்களின் புனிதத் தன் மையைப் பாதுகாப்பதோடு, காணும் பெண்ணின் கற்பையும் பாதுகாத்து, ஓர் உயர்ந்த காட்சியைப் படைத்து விடுகிறார்.

இந்தக் கருத்து மேலும் உறுதிப்படுகிறது அடுத்த பாடலில்.

கலங்கு மையல் மீறிய ஒரு பெண்ணுக்கு எங்கணுமே
துலங்கு நன்னபிதம் திருஉரு வெளி தோற்றப்
பலம் கொள் நாற்றிசையினும் இறைஞ்சினள் நிசம் புகன்று
விலங்கினாள் ஒரு பூவையர் அதில் சினம் மிகுத்தாள் (34:111)

என்பது அப்பாடல்.

அகநயனத்தால் இறைவன் திருநபியை ஒரு பெண் காண்பாள் ஆயின், அவள் புறக்கண்கள் அப்புறம் திரும்பினும் எங்கெங்கு காணினும் அந்நபியின் தோற்றமே வெளிப்படும்.

எனவே நாற்றிசையும் திரும்பி நன்னபி கண்டு தன்னகம் உவந்து, முகிழ்த்த கைகளால் அவர்க்கு மரியாதைசெலுத்தினாள். இதனைக் கண்ட, உடன் இருந்த தோழி, புறக்கண்ணால் மட்டுமே மணமகனைப் பார்த்துக் கொண்டு இருப்பவள், தன் தோழி தவறு செய்கிறாள் என்று எண்ணி ''இத்திசையில்தான் மணமகன் பவனி வருகிறார். திரும்பு பார்'' என்று அவள் செயலில் குறுக்கிட்டு, நிசம் புகல்கிறாள். அகநயனக் காட்சி அணங்கு அது குறித்துச் சினம் கொள்கிறாள், என்பது இப் பாடலின் திரண்ட கருத்து.

மணமகன் பவனி வரும் காட்சியைப் பாடப்போந்த புலவர் ஓர் அற்புதமான தத்துவத்தை இவ்விரு பாடல்களிலும் உட்புகுத்தி இருப்பதனைக் கண்டு உணர்ந்து பாராட்டலாம்.

புறக்கண்ணில் படுவது வேறு, அகக் கண்ணில் பதிவது வேறு. புறக்கண் பல்லலங்காரம் மேவி, பரிமளம் திமிர்ந்து பரிமாஇவர்ந்து பவனி வரும் மணமகனைத்தான் பார்க்கிறது. அந்தக் காட்சியை ஒரு குறிப்பிட்ட திசையில், ஒரு குறிப்பிட்ட கோணத்தில்தான் ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான், காண இயலும்.

அகக்கண்ணோ மணமகனைக் காணவில்லை. இறைவன் திருத்தூதரைத்தான் காண்கிறது. அவ்வகக் கண்ணிற்கு ஓர் இடம், ஒரு திக்கு, ஒரு கோணம் என்ற எல்லை இல்லை, எல்லாமே அதற்குள் அடக்கமாகி விடுவதனால். அகக்கண் கொண்டு பார்ப்பவர் சம்பந்தப்பட்ட வரையில், அது நீக்கமற நிறைந்துள்ள ஓர் உண்மையை உணரும் அனுபவமாகவே அமைந்து விடுகிறது.

''முகத்தில் கண் கொண்டு பார்க்கின்ற மூடர்காள்!
அகத்தில் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்''
(திருமூலர் 2944)

என்பது அவள் கருத்து



முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலத்தில், பன்னருஞ் சிறப்பின் இறைவனை விளித்து ''என்னரும் பிழையைப் பொறுத்து

அருள் புரிக'' என இறைஞ்சிய சுலைமான் நபி அவர்கள், வேண்டு கோள் ஏற்ற வேண்டுதல் வேண்டாமை இலான் அருள் புரிந்தான் எனக் கண்டோம்.

படர் உடல் கோரம் அகன்றது. தீயினில் தூசாய், அவர் கரிசுகள் அகல, முன்னிருந்ததில் மும்மடங்கு எழில் படைத்தார்.

முதிர் புலால் முடை நாற்றம் மேவிய, அம்மீனவர் குலமாதும் பொன் இருந்து ஒளிரும் சுவன மங்கையர் போல் புனித சுந்தரம் மிகுந்தாள்.

தனக்கும், அவட்கும் ஏற்பட்ட இம்மாற்றத்தை எப்படி சுலைமான் நபி அவர்கள் அணுகினார் என்பதை,

இறையவன் முனம்போல் எழில் கொடுத்த அளவில்
எதிர் உறு துணைவியை நோக்க
கறை அறு மதிபோல் வதனமும் இலங்க
கம கம என, மணம் குலவ
நிறைதர எழில்கள் எவையும் ஓர் உருவாய்
நிலத்திடை தோன்றியது எனக் கண்டு
அறிவினில் அடங்கான் தனை துதித்து ஏத்தி
அளவிலா மகிழ்ச்சி கூர்ந்தனரே. (36:58)

என்று பாடுவார் புலவர்.

இம்மங்கையைத் தெருவினில் கண்டபோது, சுலைமான் நபி அவர்கள் வெறுத்தார்.

முதிர்புலால் நாற்றமும், கோர உருவமும் கொண்ட அவளை இக்காரணங்களுக்காகவே வெறுத்தார்; பலபடி எண்ணினார்; எள்ளினார்.

இப்போது அவளை வெறுக்க எவை காரணமாக விளங்கினவோ அவை முற்றும், இருந்த சுவடே தெரியாமல் நீங்கிடக் கண்டார். புலால் நாற்றம் போனது. புதுமணம் பரந்தது. பூரணத்துவம் அடைந்த எழில்கள் எவையும் ஒருரு மேவி பூவுலகினுள் தோன்றியது போல் அவள் காட்சி தந்தாள்.

இவ்விரண்டு காரணங்கட்காகவும், இறைவனை மீட்டும் துதித்து மகிழ்ச்சி மிக்கார் என்று நயப்பட வண்ணக் களஞ்சியப் புலவர் கூறுவார்.

(இலக்கியப் பூங்கா)

# 9. நயம் தெரி சொற்கள்

சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன் வரை, தமிழ் நாட்டில் வடமொழியும், தமிழ் மொழியும் ஒன்று சேர்ந்தே வளர்ந்து வந்தன. தமிழில் ஆழ்ந்த அறிவுடையவர்கள், வடமொழியில் ஊன்றிக் கற்றவராகவும் இருந்தார்கள். இதன் காரணம் ஆக, அத்தகையவர்கள் எழுத்தும், பேச்சும் இரு மொழிச் சொற்கள் விரவப் பெற்றே அமைந்தன.

ஒன்று உயர்ந்தது, மற்றது தாழ்ந்தது என்ற எண்ணமோ, ஒரு மொழியில் அமைந்த காப்பியக் கருப்பொருள் பிறிதொரு மொழியில் அமைந்த காப்பியக் கருப்பொருளுக்கு முரண் ஆனது என்ற கருத்தோ நிலைபெறவில்லை.

சுருங்கச் சொன்னால் இருமொழிகளும் கைகோத்துக் கொண்டு, தமிழ்நாட்டில் பீடு நடை போட்ட காலம் உண்டு.

தமிழ்ப்புலவர்கள் இருவிழிகளாக அவ்விரு மொழிகளைக் கருதியதோடன்றி, அவைகட்குச்சமமான அந்தஸ்தும்,பெருமையும் கொடுத்தே வந்தனர்.

கம்பனைப்போல் தமிழில் தனித் தன்மையிலும், இனிமையிலும், திளைத்து, அதனை ஒரு காப்பியத்தின் மூலம் வெளிக் கொணர்ந்தவர் வேறு எவருமே இல்லை என்று சொல்லி விடலாம்

அவனே வடமொழியைத் 'தேவபாடை' (கம்பன் 10) என்பான். தமிழ் மொழியைப் பற்றிக் குறிப்பிடும் போது,

நீண்ட தமிழ் (2666), நிழல் பொலி கணிச்சி மணிநெற்றி) உமிழ் செங்கண் தழல் புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் (2671)

என்றும் உள தென் தமிழ் (2677)

தமிழ் எனும் அளப்பரும் சலதி (பாலமிகை 85

என்பான்.

இவ்விருமொழி விரவி வர இன்பூறும் கவிதைகள் படைப்பதில் முஸ்லிம் தமிழ்ப் புலவர்களும் விலக்கல்லர். அவர்கள் தம் காப்பியங்களில் வடமொழிச் சொற்களையும், தொடர்களையும் பரவலாகவே பயின்றுள்ளனர்.

வண்ணக் களஞ்சியப் புலவர் இயற்றிய இராஜ நாயகக் காப்பிய நூலிலும் இவ்வுண்மை காணலாம். (இவர் பயின்றிருக்கும் வடமொழிச் சொற்கள், தொடர்கள் சில அநுபந்தத்தில் தரப் பட்டுள்ளன).

இவ்வாறு கூறினும் முஸ்லிம் தமிழ்ப் புலவர்களுடைய பணி வேறொரு விதத்தில் கடினமானதும், வியக்கத் தக்கதும் ஆகும்.

அவர்கள் படைப்புகள் அனைத்தும் இஸ்லாத்தையும், நபிமார் களையும், முஸ்லிம் பெரியோர்களையும், அவற்றின் அடிப்படையில் எழுந்த போதனைகளையும் நெறி முறைகளையும், வாழ்க்கை அறத்தையும், அஸ்திவாரமாகக் கொண்டவை.

எனவே, அவர்கள் தங்கள் படைப்புகளினூடே, அறபுச் சொற் களையும் பாரசீகச் சொற்களையும் பயிலவேண்டுவது இன்றியமை யாததாக ஆகிவிட்டது.

இச்சொற்கள் அறபு, பாரசீக மொழிகளில் இருப்பன போலவோ, தமிழ் எழுத்துகளுக்கு ஏற்ப மாற்றி அமைக்கப் பட்டவை ஆகவோ, இடம் பெற்றன.

இதன் காரணமாக முஸ்லிம் அல்லாதார்க்கு மாத்திரமே அன்றி, முஸ்லிம்களுக்கும் கூட இதனைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு இடர்ப்பாடு பேரளவில் உண்டாகி விட்டது.

எதுகை, மோனை நோக்கி அறபு, பாரசீகச் சொற்கள் தமிழ்ச் சொற்கள் போலவே திரிபு பெற்றன.

ஒரே ஒரு மேற்கோள் போதுமானது.

'தாஜ்' என்ற பாரசீகச் சொல் 'தாசு' (1.7:82) என மருவி வந்தமை முன்னரே கண்டோம்.

(தேஜ்சிங்கு—தமிழில் தேசிங்கு எனப் பயிலப்பெறுவதுபோல).

ஹக்கன் என்ற அறபுச் சொல் அக்கன் என்று சில புலவர் களால் ஆளப் பெற்றிருக்கிறது (சீறா 3:45:82)

ஹஜ் என்ற அரபுச்சொல் 'அச்சு' என்று ஆளப் பெற்றுள்ளது. (திருமதீனத்து அந்தாதி 91)

மக்கா நகர் வாழ்நர் 'மக்கி' என்று குறிக்கப் பெற்றனர். [பனியகுமது மரைக்காயர் சீறாப்புராணம் 24:1 (906)]

குர்ஆன் என்பது குறான் என்றும் குறிக்கப்பெற்றது. (புது குஷ்ஷாம் 17:66). இந்நூலினும் குறுவான் என்று குறிக்கப் பெற்றுள்ளது.

இது, போன்ற சொல்லாக்கங்கள் பல இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் பரவலாகக் காணப்பெறும்.

இராஜநாயகக் காப்பியத்தில் இடம் பெற்றிருக்கும் அறபுச் சொற்களும், இந்நூலின் ஈற்றில் அமைந்துள்ள அநுபந்தத்தில் கொடுக்கப் பெற்றுள்ளன.

இனி இக்காப்பியத்தில் மிக அருமையாகப் பயிலப் பெற்றிருக்கும் தமிழ்ச் சொற்களையும், நயம் நிறைந்த சொற்களையும் காண்போம்.

மவுலல் என்ற சொல் எந்தத் தமிழ் அகராதியிலும், நிகண்டிலும் இல்லை. இலக்கியங்களிலும் பயிலப் பெறவில்லை. ஆனால் இச்சொல் கூறுதல், உரைத்தல் என்ற பொருளில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் பரவலாக ஆளப்பெற்றுள்ளது.

உமறுப் புலவர் தமது சீறாப்புராணக் காப்பியத்தில் பல இடங்களில் இச்சொல்லை ஆண்டுள்ளார்.

அவற்றுள் ஒன்று:

கூயவன் யாவன் என்று எழுந்து, கோதையர்
நாயகி எதிர்ந்து, பக்கீறை நன்கு உற
'சாயிபு பதமலர் வருந்த தக்களன்
வாயிலின் வந்தது என் மவுலுவீர்' என்றார். (3:15:197)

அதேபோல் வண்ணக் களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகக் காப்பிய நூலில், இச்சொல்லை, இப்பொருளில் பயின்றிருக்கிறார்.

''மதுரை வாழ் மீசல் வண்ணக் களஞ்சியம் மவுலல் உற்றாம்'' (1:26)

''மவின்றிடும் இவர் தம் முகத்தழகு...'' (2:25)

''மவுல் சுலையுமான் அமுது உண்டு ஒங்கினர்'' (5:76)

என்பன அவற்றுள் சில.

கவல் என்பது அருவழக்கான பிறிது ஒரு சொல். இது தமிழ்ச் சொல்லே. எனினும் இது பொருள் மாறுபட்டு இஸ்லாமியத் தமிழ்

இலக்கியங்களில் வழங்கப் பெறுகிறது கவல் (பகுதி)—வருந்து; கவற்சி (தொழிற்பெயர்)—வருத்தம். "அவலிக்கவோ கவலிக்கவோ இல்லை" என்ற தொடரில், கவல் என்பது துன்புறுதல் என்ற பொருளில் தான் அமைந்துள்ளது.

அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும் உறுங்கவல் ஒன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை.

இப்பாடலிலும் கவல் ' என்பது துன்பம், வருத்தம் என்ற பொருளிற் பயின்றமை காணலாம்.

ஆனால் இஸ்லாமியத் தமிழ் நூல்களில் 'கவல்' என்ற இவ் வினைப் பகுதி—கூறு, சொல் என்ற பொருளிலேயே பயிலப் பட்டுள்ளது.

சீறாப்புராணம் முதற்காண்டத்து ஏழாம்படலமான "இலாஞ்சனை தரித்த படலம்" தன்னுள் இரண்டாம் பாடல் "காண் தகாப் புதுமை வண்ணம் முகம்மது கவலலுற்றார்" என்ற ஈறடி கொண்டது.

வண்ணக்களஞ்சியப் புலவரது இக்காப்பியத்தில் சில காண்போம்.

"காவலன் மகனைக் கேட்கக் கவன்றனன் நடந்தது எல்லாம்" (9:97)

"கவலுதற்கு ஈடு யாதும் கருத்தினில் பிரித்து ஓராமல்" (9:115)

"முன் கவன்றதற்கும் கேட்ட முறைஇது புருடன் தன்னை" (9:119)

இவ்வாறே பிற இடத்தும் 'கவல்', கூறுதல் என்ற பொருளிலேயே ஆளப்பெற்றுள்ளது தெளியலாம்.

இறைவன், இறைவி; துணைவன், துணைவி; என்ப போல் கணவன் என்பதற்குப் பெண்பாலாகக் கணவி என்ற சொல்லை வண்ணக் களஞ்சியப் புலவர் தம்முடைய நூல்களில் பயின்றிருக் கிறார் என்று டாக்டர் ம. மு. உவைஸ் அவர்கள் கருத்துத் தெரி வித்து, அதற்கு மேற்கோளாக, குதுபுநாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் இடம்பெற்றுள்ள,

மறையவர் துறவினர் வணங்கிச் சூழ்ந்திட
உறைதரு மதுரசா நாப்பண் உற்றிடல்
கறையறு மதிமுக கணவி காந்தன் என்று
அறைதரும் இவர் உற்று அடுத்து நின்றனர்.
(மரித்து எழுந்து மக்கள் ஈன்ற படலம், 2)

"ஆண்டு தோறினும் இவ்வாறே ஐயிரு பெண்கள் ஈன்றாள்.
காண்தகு தனையன் ஒன்றாயினும் இலாக் கவலை நெஞ்சில்
பூண்டனள். கணவி தன்னை நோக்கியே புருடத் தோன்றல்
வேண்டுஉற இனிப் பெறாயேல் விவாகம் செய்குவன் வேறு
என்றான்.

(பெண்கள் ஆண் உரு பெறு படலம் 3)

பெண்களும் பிதாவுமாக பெருஞ்செல்வம் மனையின் மேவ
கண்களில் அடங்காக் காட்சி கணவியும் எவரும் கண்டு
விண்களும் துதிக்கும் வள்ளல் விரைமலர்ப் பதம் துதித்தார்.
பண்கொளும் மதுரவாய்மைப் பாவையர் கவலை தீர்ந்தார்.

(பெண்கள் ஆண் உரு பெறு படலம் 19)

என்று அமையும், இப்பாடல்களைக் காட்டுவார்.

"மேலும் சிற்றிலக்கியங்கள் பலவற்றிலும் இக்குறிப்பிட்ட சொல் (கணவி) இடம் பெற்றிருப்பதனைக் காணலாம்" என்பார் அவர்.*

இராஜநாயகம் (நாச்சி குளத்தார் பதிப்பு) காப்பியத்தில் காணப்பெறும்,

"புத்திரி எனக்கும் என்றன் துணைவிக்கும்
பொதுமை அன்றோ?" (9:53

"வனத்தினில் துணைவிக்கு இன்பம்"
தெளிவில் மாதுலனுக்கு இன்பம் (9:69)

"அதிமயத் துணைவி வைகில் தன் குரல்
அறிய என்று" (9:88

"அணித் தினில் கொணருகின்றார்
அவன் யார் மனைவி? என்ல" (9:128

"கணவன் பேர் துணைவி நாமம் கருத்து
உவந்து ஈண்டோர் நாமம்" (9:129)

* இஸ்லாம் வளர்த்த தமிழ்—டாக்டர் உவைஸ் ப. 172, 173

"துணைவியார் உலகின் வைகி கண்ணின்
நீர் சொரிந்தது ஆற்ற" (13:23)

"இவரில் ஓர் மனைவி தனை எனக்கு அளிப்பீர்
என்றனர் இம்மொழி உணர்ந்தே" (17:84)

"அழுத்தி எண்ணலும் நற்கதி அவன்பால்
என்று ஆய்தலும் பெறில் அன்றோ துணைவி"
(33:13)

"அழிப்படும் துயர் ஈந்தவளையே துணைவி"
ஆக ஈந்தனன் இறை அதனால்" (36:46)

"இறையவன் முனம்போல் எழில் கொடுத்த
அளவில் எதிர் உறு துணைவியை நோக்க" (36:58)

"உயிர்த் துணைவியர்கள் உறையும்
மாளிகை வந்து உற்றனர் நாற்பது தினமும்" (36:63)

"உடல் உயிர்த் துணைவி உதவு சந்ததி
சூழ் உறவினர் முதல் உளோர் எவரும்" (40:2)

தொடர்களில் இடம் பெற்றிருக்கும் துணைவி, மனைவி என்ற சொற்கள் உண்மையில் கணவி என்ற சொல்லே ஆகும் என்பது டாக்டர் உவைஸ் அவர்களுடைய கருத்து.

இப்படி அவர் கூறுவதற்கு இராஜநாயகக் காப்பியப் பழம் பிரதி ஒன்று ஆதாரமாக இருக்கக்கூடும்.

எனினும் வண்ணக் களஞ்சியப் புலவர் தம் காப்பியம் முழு வதிலுமே மனைவி, துணைவி என்ற சொற்களுக்குப் பதிலாகக் கணவி என்ற சொல்லையே பயன்படுத்தி இருக்கிறார் என்பதும் முழுமையாக ஒப்புக் கொள்ளக் கூடியதாகவும் தோன்றவில்லை.

மூலப் பிரதி கிடைக்காத வரையில் மனைவி, துணைவி என்ற சொற்களோடு கணவி என்ற சொல்லையும் அவர் பயின்றிருக் கிறார் என்று கொள்வது தான் பொருத்தமாக இருக்கும்.

அடுத்துத், தொடர்வன இந்நூல் நெடும் பரப்பில் மின் என ஒளிரும் சில நயஞ்சான்ற சொற்களும், சொற்றொடர்களும் ஆம்.

அருவழக்கான அவை, உரிய பொருளுடனும், ஏற்ற மேற் கோள்கள் உடனும் விளக்கம் பெறுகின்றன காணலாம்.

## ○ அகமும் ஆகமும்

"அடர்ந்துள மகிழ்ச்சி பெருகி உள்ளகமும்
ஆகமும் குளிர்ந்து" (37:29)

அகம்—மனம்; ஆகம்—உடல்.

"உடல் சிந்தை வயம் அன்றோ?" என்பான் கம்பன் (1150). மனம் மகிழின் அதன் வெளிப்பாடு உடலில் தோன்றும். மனம் துன்புறில் உடலும் துன்புறும்.

அகம்—உடல் என்ற பொருளிலும், ஆகம்—மனம் என்ற பொருளிலும் மாறி வழங்குதலும் உண்டு.

"மென் மெலத் தழீஇத் தன் நல்லகம் பொருத்தி" (தனிப்பாடல்)

"ஆகத்து எழு கனல் கண் வழி உக" (கம்பன் 2971)

என்றும் அமைந்தவிடத்துக் காணலாம்.

## ○ அட்டில்

சோறு அடும் இடம்; சமையலறை; அடுக்களை எனவும் பெறும்.

"அருகினில் உறையும் ஏவல் தலைவர் அவ்விதமே
அட்டில் பரிவினில் இயற்றி" (34:44)

"அட்டில்கள் தோறும் சென்றே
அணி நகரோரை வேறு..." (34:49)

"அகில் இடும் புகை, அட்டில் இடும்புகை (கம்பன் 72)

"அட்டிலும் இழந்தன புகை" (கம்பன் 1805)

"புனிற்று நாய் குரைக்கும் புல் என் அட்டில்"
(சிறுபாண். 132)

"அறம் நிலைஇய அகன் அட்டில்" (பட்டினப்பாலை. 43)

"அட்டில் சாலையும் அருந்துநர் சாலையும்" (மணி 20.7)

"தொகைக் கணம் போதரும் அறச்சோற்று அட்டில்"
(பெருங். 1: 40: 132)

"அட்டிலும் அறையும் விட்டு எரி கொளுவலின்"
(பெருங். 1:40:117)

"கரிபுற அட்டில் கண்டனள் பெயர" (சிலம்பு 16:32)

மேற்குறித்த தொடர்கள், இலக்கியங்களுள் 'அட்டில்' பயின்றுள்ள சில இடங்கள் ஆகும்.

## ○ அடை கிடந்து அருள் ஓங்கிய விழி (41:18)

அடை கிடத்தல் என்பதற்குத் தமிழ் லெக்சிகன் நிலைத்துத் தங்கி இருத்தல் என்று பொருள் தரும் (ப. 56)

"முயல் அடை கிடக்கும் திங்கள்" (கூர்ம புராணம்: மேரு 16) கருணா கடாக்ஷம் என்ற வடமொழித்தொடர் கருணை பொங்கி வழியும்கண்கடை என்றபொருளது. இங்கு கருணை எப்பொழுதும் குடி இருந்துமேம்படும் கண்கள் என்றபொருள் தருவதுகாணலாம்.

"அறங்கிடந்த நெஞ்சும், அருள் ஒழுகு கண்ணும். (நள வெண்பா 1:35) என்பார் புகழேந்தியார்,

இந்நூலில், "உணர் முகில் ஆவர்த்தனுட்னும் காளகன் புணர் தர அடை கிடந்து" (16:25) என்றும்,

"கிளரும் மை முகில் அடை கிடக்கும் நெடுங்கிரி" (16:48) என்றும், வழங்கி உள்ளமை காணலாம்.

○ **அடைப்பம்**

அடப்பம், அடப்பை அடைப்பம்* எனவும் குறிக்கப் பெறும். திருமண உலாவின் போது மகளிர் தட்டங்களில் சீர் வரிசை ஏந்திச் செல்வர். அவற்றுள் அமையும் மங்கலப் பொருள்கள் வெற்றிலை, பாக்கு, சந்தனம், புதிய ஆடைகள் முதலியன.

வட்ட வெம் முலையார் அயினிகள் சுழற்றி
அடப்பை, கோடிகம் மணம் தரு சாந்து
அட்ட திக்கு அனைத்தும் கமழ்ந்திட இருபால்
அடுத்து நின்று ஏந்தினர் அன்றே. (34:65)

நெடுங்காலம் தொட்டு இந்நாட்டுள் இருந்துவரும் மரபு இது
"சீர் கொளச் செய்த செம்பொன் அடைப்பை உள்
பாகு செல்ல" (சீவகம். 1303)

"எரி மணி அடைப்பை, செம்பொற் படியகம்
இலங்கு பொன்வாள்" (சீவகம். 2140)

"பயில் வினை அடைப் பையொடு படியகம் திருத்தி"
(பெருங். 3.14.88)

"கோடி ஏந்தினர், பட்டேந்தினர், கொழுந்திரையவின்
செப்பு ஏந்தினர்" (சிலம்பு. 20:14)

"மேனகை வெள்ளடை உதவ" (கம்பன். 5147)

என்பன காணலாம்,

தம்பலம் உண்ணும் வழக்கமும் நெடுநாளையதே.

---

* அடைப்பம்; தாம்பூலப்பை (லெக்சிகன். ப. 57)

"சந்தனம் இலைபாக்கு ஈந்தே" (9;65)
"உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலை"
(நாலாயிரம். 2700)

"அம்மென் திரையலொடு அடைக்காய் ஈந்து"(சிலம்பு. 16:55)
"கையால் தம்பலம் தின்றியோ என்று" (கலித். 65)

இவற்றாலும் தம்பலம் அயிலல் மரபு என அறிகிறோம்.

(கோபப்பூச்சி-இந்திரகோபம், மூதாய், தம்பலப் பூச்சி எனப் படும். செந்நிறம் சான்றது. கடலைக் கொல்லையில் மாரிக்காலத்து காணலாம்.)

## ○ அரி

அரிசி என்ற பொருளது.

"ஆன்று உளம் மகிழ்வொடு அரி உலையினில் இட்டு
அரைக்கொதி குமிழி கொண்டிடு கால்" (37:22)

என்று குறிப்பிடுவர்.

"வால் அரி கழுவிய வண்ணச் செம்புனல் (சீவகம். 830)
(வால்-வெண்மை; அரி-அரிசி)

"பெருஞ் செந்நெல்லின், தெரிகொள் அரிசித் திரள் நெடும் புழுக்கல்" (பெரும்பாண். 473, 74)

"கழை வளர் நெல்லின் அரி உலை ஊழ்த்து" (மலைபடு. 180)

இலக்கியங்களில் அரி, அரிசி, என்பன பெருவரவின. இப் படலத்துள் தமிழ் நாட்டுக்கிராம வாழ்க்கை சுட்டப் பெறுவது காணலாம்.

## ○ ஆட்டை

ஆண்டு (ஆண்டு-ஆட்டு-ஆட்டு + ஐ-ஆட்டை)

"அத்தகை என்னில் ஓர் ஆட்டைக்கு ஆயினும்" (16:7)

"அடு விடத்தினை உமிழ் விழி படைத்து ஐஞ்ஞூறு ஆட்டை"
(43:4)

"ஆடித்திங்கள் அகவையின் ஆங்கு ஓர் பாடி விழாக் கோள்"
ஆடித் திங்களிடத்தே ஆட்டை விழாவாக.

(சிலப்பதிகாரம்—உரை பெறு கட்டுரை 3—ஆம்பத்தி அடியார்க்கு நல்லார் உரை)

"உப்பூரி குடிகிழார் மகனான உருத்திர சன்மன் பைங் கண்ணன், புன்மயிரன் ஐயாட்டைப் பிராயத்தன்."

(இறையனார் அகப்பொருள்—பாயிரம் உரை)

## ○ ஆதிமந்திரி

அமைச்சர் அவையில் அறிவால், ஒழுக்கத்தால், ஆன்றவயதால் மூத்தவரே முதல்மந்திரி ஆவார். (அக்கால மரபு). நுண்ணிய நூல் நலஞ்சான்ற இவர் கூறுவழியில் அரசும், பிற அமைச்சர்களும் சேர்வர்.

சோழர் அவையில் தொண்டர் சீர்பரவிய சேக்கிழார், அநிருத்தப் பிரம்மராயர், கோவிந்த தீக்ஷிதர் போல்வார் முதல் மந்திரிகளாய் இருந்து நாட்டை நல்வழிப்படுத்தியமை நூல்வழி நாம் அறிவோம்.

முதல் மந்திரி என்பதனைக் குறிக்க 'ஆதி மந்திரி' என்ற சொல் ஆட்சி பயில்கிறார்.

"......சென்று அணிநகர்புகுந்தே ஆதிமந்திரியினை அழைத்து" முடங்கல் கொடுத்தனர் என்பர். (33:31)

## ○ ஆதுலர்

மிகுவறிஞர். உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றி வாடுநர். அறத்திடு பிச்சை கூவி இரப்போர்.

இவர்களைப் புறந்தருதலைப் போற்றுறு அறமாகக் கொண்டனர் நமர்.

"ஆதுலர் மறையோர் முதியவர் எவர்க்கும்
அவா அற வேண்டுவது அளித்து" (34:66)

"ஆதுல மாக்களும் அலவுற்று விளிப்ப" (மணி. 4:42)

"ஆதுலர் யாவர்? என்ன அதிர்குரல் முரசில் சாற்றி"
(நைடதம். 16)

"அறியாத தேயத்தான் ஆதுலன், மூத்தோன்
...ஆசாரம் வீடு பெற்றார்" (ஆசாரம். 100)

எண்ணான்கு அறம் வளர்த்தலை இந்நாடு தன் கடமையாகக் கொண்டது என்று காஞ்சிப் புராணம் கூறும்.

அம்முப்பான்இரண்டில் ஒன்று. 'ஆதுலர்ச்சாலை அமைத்தல்'.

இவ்வறத்தைப் பெரிதும் போற்றிய சிறப்பு சமணர்ச்சாரும்.

○ **இகுளை**—தோழி

"இழை இடை இகுளையார்கள் பலரையும் இருத்தினானே"
(29:21)

"இந்து எனும் மான் உத்தரப்படி இகுளையார்கள்" (30:23)

"கார் அன்று; இகுளை! தீர்க நின் படரே" (குறு. 251)

"இகுளையர்த் தரூஉம் வாடையொடு" (நற். 5)
என்பன இலக்கிய வழக்காறுகள்.

○ **இபம் முதல் எறும்பு ஈறாக**

சிறுமை, பெருமை எல்லைகட்கு உவமம் ஆகக் கையாளப் படும் தொடர்.

(வள்ளுவம் தினை, பனை என்று கூறும்)

"அவர்தமக்கு இபம் முதல் எறும்பு ஈறு அளவாக" (17:28)

"செறிதரும் எறும்பு கடை இபம் முதலாய்" (17:100)

"...செகத்து இபம் முதல் எறும்பு ஈறாய்" (31:52)

"கருதி அங்கு அடுத்தார் இபம் முதல் எறும்பு
கடை அளவு உயிர் எலாம் கண்டே" (36:60)
என்பன காணலாம்.

இவற்றுள் இபம் வடமொழிச் சொல்; யானை என்ற பொருளது.

"இபமா முகன் தனுக்கு இளையோனே" (திருப்புகழ்)

பிற்கால இலக்கியங்களில் இபம் பெரிதும் பயிலப் பெறுகிறது.

எறும்பு-எறும்பி எனச் சங்க காலத்து வழங்கப் பெற்றது.

"எறும்பி அளையின் குறும்பல் சுனைய" (குறு. 12)

திரு எறும்பியூர் என்ற ஊர்ப் பெயரும் பழங்கால வழக்கைச் சுட்டுவதே இவ்வூர் இப்பொழுது திருவெறும்பூர் எனப்படுகிறது.

எறும்பைக் குறிக்க 'உறவி' என்ற சொல் அகநானூற்றில் பயிலப் பெறுகிறது.

○ **இரத்தின தீபங்கள்**

"தொகை இலாது ஒளி இரத்ன தீபங்களும் தூக்கி"

(42:13)

இரத்தினங்கள் (மணி) பதித்த தீபங்கள் எனப் பெறும் செல்வச் செருக்கைப் பிறர்க்குக் காட்டவும், பெருமிதத் தோற்றம் கூட்டவும் தம் அணி மணி மாளிகையில் ஏவற் சிலதியரைத் தீபங்கள் ஏந்தி வரச் செய்வர் அரசர்:

"நானநெய் விளக்கு நால் இருகோடி, நங்கையர் அங்கையின் எடுப்ப" (கம்பன். 5148)

"மாலை மணி விளக்கம் காட்டி" (சிலம்பு. 9:3)

சிலம்பின் இத்தொடர் உரையில்

"மாணிக்கவிளக்கை, மைவிளக்கோடே எடுத்து"—என்று கூறி மணி-அழகும் ஆம் என்பார் அடியார்க்கு நல்லார்,

"பரிதிபட்டது. பன் மணி நீள் விளக்கு
எரிய விட்டனர்" (சீவகம். 1304)

"இலங்கின மணி விளக்கு எழுந்த தீம்புகை" (சீவகம். 2410)

○ **உபயம்** — இரண்டு

இது உபையம் என இடைப் போலி ஆகவும் வரும்.
உவயம் என்றும் (ப—வ போலிகள்) அமையும்.
"விருத்த கோபால" (சிலம்பு)

கோவலன்—கோபாலன் என்று விளிக்கப் பெறுதல் காணலாம் இவ்வாறே வில்லி பாரதத்தும் "கோவியர் நுண்டு கில்" என்பார் (இவை ப—வ போலி)

இந்நூலிடை இவ் உபயம் இடம் பெற்றுள்ள சில இடங்கள்:

"உத்தமர் புரிந்த பின் உபைய பேர்களில்" (11:14)

"மணம் மலி புயத்தார் அதிசயித்து உபைய
மலர் விழி மணிகளில் வைத்து" (14:14)

"துதி செய்து சுலையுமான் நபி உபைய
சுந்தரப் பதம் பணிந்தனரே" (14:15)

"கதி தரும் மறை பெற்று அருள் நபி உபைய
கண்மணித் தோன்றலே கேண்மின்" (16:49)

''வருத்தம் மீறிய கேடு எவைகளும் எனவே
மதிமுக சிற்றிடை உபைய
பொருப்பு இள முலை'' (17:98)

''உவப்புறும் உமக்கு சம்மதி எவையோ
அவ்வகை ஒழுகும் என்று உபைய செவிப்பட'' (17:103)

''பிணி முக உபைய வெள்ளிப் பொருப்புகள் பெற்றதாமால்''
(25:47)

''உரைத்தலும் மகட்குச் சொல்வன் உபைய கண்மணியே
கேண்மோ'' (29:67)

''மை தரு குழலாள் சபயில் வந்து உபைய
காலும் ஒன்றாக்கி வாழ்ந்தனளே'' (31:4)

''உபையம் அற்று உறைவோன் அருள் கிபுலா ஆம்
பைத்துல் முக்கத்தீசினில் உறைவோம்'' (31:59)

''தோய்ந்த சிந்தையும் மகிழ்வுற உபைய தாள் ஒளிகள்''
(32:57)

''உண்ட பின் கலைகளாலே உபைய கை வாய் துடைத்து''
(34:52)

''தொடுத்து அதில் கிரணம் துலங்குதல் உபைய
சூரியர் ஆடல் போல்தோன்றும்'' (34:78)

''வலிமிகும் உபைய ஜின்கள் மற்பொருதல்
மலைகள் மல் பொருதல் போல் துலங்கும்'' (34:79)

''உறவு உற்று அன்பு எவையும் (...)டி இருந்து ஓங்கும்
உளத்தினில் கருணை கூர்ந்து உபைய''
திறல் உற்ற சிகரப்புய நபி...'' (37:3)

''உற்றதோர் நகைப்போ? நகைத்து இவண் அடைந்தாய்
உரை என உரைத்தனர் உபைய...
கல் தடங்கிரிகள் எனத் திரள் பெருந்தோள்'' (38:30)

''ஒண்டி நின்று ஒலிப்ப ஒலித்தன, உதவும்
உபைய பன்னக வயிரியுமே'' (39:8)

''பரிவு உற உபைய பதங்களைத் துதித்து
பணிந்து நின்றன சில ஜின்'' (40:7)

''ஒவ்விய கலிமா நிகழ்த்தி ஈமான் கொண்டு
உபைய தாள் மலர் துதித்து உற்றார்'' (40:26)

''உடலமும் உபைய நயனமும் நிறைவாய்
ஓங்கி, அ மயல் கடல் பெருகி'' (40:52)

முன்னை மரபுப்படி முடங்கல் வரைவார் ''உபய குசலோபரி'' என்று தொடங்குவர்.

இதன் பொருள் ''இரு பாலும் நலன் மிகுக'' என்பதாம்.

இவ்வுபயம் வழங்கும் இலக்கியத் தொடர்கள் சில காணலாம்.

''உபய கவி'' (தென் தமிழ், வடமொழி தேர்ந்த கவிஞன்)

''உபய சம்மதம்'' (இரு திறத்தாரும் இணைந்து ஒப்புதல்)

''உபயர்'' (வேதாரண்ய புராணம். கோலாகல 37)

''உபய குலம்'' (தாய், தந்தை மரபு)

''உபய ஓசை'' (இரட்டைக் கிளவி)

''உபய குலோத்தமன் அபயன் வாழ்க'' (கலி.பரணி. 1:2)

''உவய லோகத்தின் உள்ள சிறப்பு'' (கம்பன் 7402)

''உவயம் உறும் உலகு'' (கம்பன் 9090)

''உபய தனம் அசையில்'' (கலி.பரணி. 2:38)

## ○ உலம்

திரண்ட கல்

ஆடவர் குவவுத் தோளுக்கு உவமம் ஆவது.

''உலம் கொளும் புயத்தான் இவ்வாறு உலவல் செய்தனன்'' (29:54)

என்பார்.

கற்றடந்தோள், கல் நவில் தோள் என்பன இலக்கியத் தொடர்கள்.

''உலம் பொரு மார்பின் உதயண குமரன்'' (பெருங். 5:8:32)

''உலம் தரு வயிரத் திண்டோள்'' (கம்பன் 899)

''உலம் தரு தோளினாய்! நீ'' (சீவகம் 204)

''உலம் கொள் தோள் உறுவலி'' (சீவகம் 1471)

உலம் கொண்ட தோள்; நலம் கொண்ட நாள்;
வலம் கொண்டவாள்; நிலம் கொண்ட தாள்; (தனிப்பாடல்)

○ **உறவி** - எறும்பு

இச்சொல் அரு வழக்கினது.

"உறவி அம் குழு யாவும் இவ்வகை ஒளிக்கும் போது" (21:8) என்பார் இவர்.

மூங்கில் துண்டு ஒன்றின் குழைப்பகுதியில் புக்கது ஒரு எறும்பு.

கழை ஞெமல் கானிடை கனை எரி கதுவ, துண்டின் இரு முனையும்தீப்பற்ற, அக்கழைக் குழைப் பகுதி கிடந்த எறும்பு வெளிச் செலல் ஆற்றாது வீந்தது.

மிகு வருத்தத்தால் வாடுபவர் தம் நிலையை அவ்வெறும்பின் நிலையொடு உவமிப்பர்.

"இரு தலைக் கொள்ளி இடை நின்று வருந்தி
ஒரு தலைப்படா அ உறவி போன்றனம்" (அகம்:339)

இவ்வுவமையில் பெரிதும் ஈடுபட்ட மணிவாசகர் தம் நூலிடை இதனைப் பெய்து அமைவார்.

சமண் பெரு மக்கள் காணா உயிர்க்கும் கையற்று ஏங்குவார்.

இதனைச் சீவகம், "மெல்லவே உறவி ஓம்பி ஒதுங்கியும், இருந்தும், நின்றும்" (3119) என்று குறிக்கும்.

○ **உறி**

"நிதி, உறிக் கலசத்தில் நிறைத்தார்" (37:9)
"உறியினும் ஒலிப்பு அறக் கவர்ந்த" (37:10)
"உறியினும் நிதி ஒன்று ஆயினும் காணாள்" (37:11)

கூரையினின்று கட்டித் தொங்கவிடப்படுவது. நாய், பூனை, கவர இயலாவகை இதனுள் பொருள் இட்டு வைப்பர்.

"உறி தாழ்ந்த கரகம்" (கலித் 9:2)
"உறித் தாழ் கரமும் உன் கையது அன்றே"
உறித் தாழ் கரகம் என் கைத்தந்து" (சிலம்பு 30:64,90)

"உறி தூங்கு குண்டிகைத் தடம் கையர்"
(திருவிளையாடல் 3:63:18,19)

○ **ஊதை**

வாடைக் காற்று

பொதுவாகக் காற்றைக் குறிக்கப் பயன்படுத்தப் பெறுகிறது.

"ஊதையை விளித்து என் மாவினை வருவித்து
உதவி, நும் வெள்ளி நீர் கொளும் என்று" (10:6)

"ஊதை சென்று இயம்ப அறிந்தனர். அறிந்து
உளவு அறியார் என உறைந்தார்"

என்பார் (26:35)

வழக்கில் ஊதல் காற்று எனப்படுகிறது.

இலக்கியங்களுள்,

"ஊதை அவிழ்த்த உடை இதழ் ஒள் நிலம்" (பரிபா. 11:22)

"ஊதைகள் சொரிவன, உறைஉறும் அமுதம்" (கம்பன் 82)

"உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க" (கம்பன் 1717)

"ஊதை போல் விசையின்" (கம்பன் 4620)

"ஊதை போல்வன, உரும் உறழ் திறலின" (கம்பன் 9546)

'கையறவந்த தைவரல் ஊதையொடு" (குறுந். 55)

"ஊதை தூற்றும் கூதிர்யாமத்து" (குறுந். 86)

"ஊதை அம் குளிரொடு பேதுற்று மயங்கிய" (குறுந். 197)

"வடு அடு நுண்ணயிர் ஊதை உகுற்றும்" (ப.பத்து 51)

"வரும் கடல் ஊதையின் பனிக்கும்" (ப.பத்து 60

என்று கூறப் பெறல் காணலாம்

○ **ஊழல்**

"நடந்திருக்கும் ஊழல் உள் உளவு அறியாப் புள்" (28:7)

ஊழ்—முறைமை; ஊழ்அல்—ஊழல்—முறையின்மை
ஊழ்—பால், முறைமை, விதி, ஒழுங்கு, முதிர்வு
ஊழல்—இதுகாலை நாம் நன்கறிந்த ஒன்று
முறை கேடானவற்றைக் குறிக்கப்பயன்படுத்தப் பெறுகிறது.

## ○ எக்களிப்பு

''மிகுந்த ஜின் கணம் எக்களிப்பினில் முழங்கு
முழக்கமே மேக வெங்குரலாய்'' (34:77)

எக்களிப்பு—செருக்கோடு கூடிய மிகு மகிழ்ச்சி என்ற பொருள் உடையது.

## ○ எக்கி

எக்குதல்—மேற்செல்லுதல், ஏறுதல், மேல் எழுதல்.

''நினைவுடன் அடியிட்டு எக்கி ஓர் கவைகொள்
நெடும்பணர் தன்னில் எய்தினனே'' (37:23)

''துணி பிணர் மருப்பின் நீர் எக்குவோரும்''
(பரிபாடல் 11:57)

கம்பன் இதே பொருளில்,

''எக்கிய கதிரவற்கு அஞ்சி ஏமுற''

என்று குறிப்பிடுவான் (4547)

## ○ எல்

ஒளி, பகல்

''எல்லே இலக்கம்* (தொல்); இலகுவது இலக்கம்''.

எல் உடையது எல்லி, எல்லை, எல்லவன்.

''எல்லவன் கிரண மணி முடி அரசர்
இருபதம் இறைஞ்சி நின்றேத்த'' (6:1)

இச்சொல் பகலவனையும், அவன் கதிரையும் குறிக்கும்.

'எல்பட கண் போல் மலர்ந்த'' (திருமுருகு:74)

''இரவொடு எல்லியும் ஏத்துவார்'' (தேவாரம் 3448)

''எல்லை சேறலின் இருள் பெரிது பட்டன்று'' (குறுந். 355)

''எல்லவன் வீழ முன்னம்'' (வில்லி: 18 ஆம்போர்:119)

''எல்லவன் கதிரில் படைக்கலம் செறிய'' (சீறா 1:21:14)

எல்லி—இச்சொல் இரவையும் குறிக்கும்

''எல்லி வருநர் களவிற்கு'' (குறுந். 47)

எல்லப்பன், எல்லம்மாள் என்று தமிழர்கள் தம் மக்கட்குப் பெயரிடுவது வழக்கம்.

(திருவருணைக் கலம்பகம் எழுதிய பெரும் புலவர் சைவ எல்லப்ப நாவலர் ஆவார்.)

---

* தொல்காப்பியம். சொல். 7:21

## ○ எவைக்கும் ஓர் ஏந்தல்

'ஏவல் செய்ம்மின்' என்று அனுப்பினர் எவைக்கும் ஓர் ஏந்தல் (17:68)

மன்னுயிரைத் தன் உயிராய்க் கருதி அவற்றிற்கு வரும்துன்பம் துடைத்துத் தாங்கும் இயல்பினை உடையவர் சுலைமான் நபி அவர்கள்.

"மன்னன் நிடதத்தார் வாழ்வு ஏந்தல் மக்கள் யாம்" (நளவெண்பா. 3:52) என்ற தொடரில் இதன் சிறப்பு காணலாம்.

"ஏந்தலும், இதனைக் கேளா, இன் இள முறுவல் நாற, (கம்பன்:4134)

ஏந்தல் என்ற சொற்கு உயர்ச்சி என்ற பொருளும் உண்டு.

"ஏந்தல்—பொன்—தோளினாய்!" (கம்பன் 2785)

பெருமை என்ற பொருளிலும் பயிலப் பெறும் என்று பிங்கல நிகண்டு பேசும்.

அரசன் என்ற பொருளிலேயே பெரிதும் வழங்குறும்.

## ○ எறுழ்—மிக்க வன்மை

"எறுழ் அரியணை" (41:10)

"எறுழ், வலி, முன்பு" (புறநானூறு7:6உரை) என்றவழக்காறு உண்டு. இம்மூன்றுமே வன்மை, வலிமை என்ற பொருளன.

"புண் உடை எறுழ் தோள் புடையல் அம் கழல்கால்" (ப.பத்து. 80)

முழவு உறழ் குவவுத்திண்டோள் என்பதனைக் குறிக்கவே சங்க இலக்கியங்களுள் இச்சொல் பயிலப் பெற்றுள்ளது.

"பரு ஏர் எறுழ் திணி[1] தோள்" (பெரும். 60)

"கண் அகல் எறுழ் தோள்" (பெரும்-74)

"சிலை நவில்[2] எறுழ் தோள் ஓச்சி" (பெரும்.145)

"மா தாங்கு எறுழ் தோள்" (மதுரைக். 728)

---

1. பருமை, அழகு, வன்மை, இறுக்கம்
2. வில் வித்தகம்

"இரும்பினால் பின்னி அன்ன எறும் வலிமுழவுத் தோளார்"
(சீவகம். 785)

"இனத்திடை ஏறு போலும் எறும்வலி உரைத்தமாற்றம்"
(சீவகம் 1723)

தோளுக்கே அடையாய் அமைந்த இச்சொல்லை திண்ணிய அரியணைக்கு அமைத்தமை அருவழக்கே.

பிறர் இது செய்திலர்.

## ○ ஒலி நயம் கூட்டும் 'உ'கரச் சாரியை

செவிக்கினிய ஒலி தருதற் பொருட்டு, சில சொற்கள் 'உ' சாரியை ஈற்றில் பெற்று வரும்.

"நில், அடா! நில்லு நில்லு நீ, அடா!" (கம்பன் 9023)

நில்-நில்லு; தள்-தள்ளு; கொள்-கொள்ளு; வினைப்பகுதியே அன்றி பெயர்ச் சொற்களும் இவ்வாறு 'உ' சாரியை பெறும். அலர் மேல்-வழக்கிடை அல(ர்)மேலு எனவும், கோபால்-கோபாலு என்றும்குறிக்கப் பெறும்.

இது போலவே இந்நூலில் 'ஜமால்' எனும் பெயர்த்துதி தழைத்தாள் (40:46)—'ஜமாலு' வந்தனள் என்று குறிக்கப் பெறுகிறாள் (40:61)

## ○ கடிகை

நாழிகை என்ற பொருள் தரும் சொல்.

"உறைந்திடச் சில கடிகையின் மேல்" (40:22)

"கண்ணனாரொடு[1] கடிகையும்[2] வருக என" (சீவகம் 2362)

"கடிகைஓர் இரண்டுமூன்றில், கடிமதில்அயோத்திகண்டான்;"
(கம்பன் 1893)

"காலன் நின்று, இசைக்கும் நாள் கடிகை கூறவே,"
(கம்பன் 3083)

"வில் ஒன்றில், கடிகை மூன்றில், ஏறினர்
விண்ணில்" (கம்பன் 3130)

கடிகைக்குப் பதிலாக கன்னல் என்ற சொல்லும் நாழிகைப் பொருளில் இலக்கியங்களில் பயிலப்பட்டுள்ளது.

---

1. புரோகிதன் 2. முகூர்த்த விதானி

''கன்னல் மூன்றில், களப்பட, கால்வளை''

(கம்பன் 5090)

''குறுநீர்க் கன்னலின் யாமம் கொள்பவர்''(மணிமேகலை 7:64)

''குறுநீர்க் கன்னல் எண்ணுதல் அல்லது கதிர்
மருங்கு அறியாது அஞ்சுவரப் பாய் (அகம் 43)

''நாழிகைக் கணக்கர்'' (சிலம்பு 5:49)

பெருநில வேந்தன் பணியாளரில் நாழிகைக் கணக்கரும் ஒருவர்.

''எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய் நின்
குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப''(முல்லை 57,58)

'நாழிகையை அளந்து இத்துணை என்று அறியும் பொய்த்தல் இல்லாத நாழிகைக் கணக்கர்கள்' (முல்லைப்பாட்டு 55-58 உரை)

''நாழிகை வட்டிலில் சென்ற நாழிகை இத்துணை'' என்று அறிவுறுப்பது அவர் பணி.

'கன்னலும், கிண்ணமும், நாழிகை வட்டில்' (பிங்கலந்தை)
HOUR GLASS என்பதும் அது.

## ○ கரணிகர்

''முதலவன் பிதற்றல் எல்லாம் கரணிகன் முகத்தை நோக்கி''

(9:133)

என்ற தொடரில் அமைந்துள்ள இச்சொல் வழக்கு விசாரணையின் போது சாட்சிகள் சொல்வதனைப் பதிவு செய்து கொள்பவரைக் குறிக்கிறது.

பொதுவாக இச்சொல், கிராமக் கணக்கு வேலையைக் காட்டும். இதனைச் செய்யும் பணியாளர் கருணீகர் என்று இப்போது வழங்கப்படுகின்றனர்.

''சீர் கருணீகர்'' என்பது மரபு.

கிராமக் கணக்குப் பணியும், தமிழ்நூல் பயிற்சியும் கொண்டு விளங்குபவர்.

A SOUTH INDIAN CASTE OF ACCOUNTANTS.

பரந்துபட்ட பல்நூல் பயிற்சியர் இவ்வினத்தார்

அக்காலத்தில் (புலவர் வாழ்ந்த காலம்) கருணீகர்க்கும் கிராம முன்சீப்பிற்கும் பெருமதிப்பு இருந்தது.

அவர்கள் இட்டதே சட்டமாகக் கருதப்பட்டது.

## ○ காட்சி ஈந்தருள்

''இசைய இங்குள நாள் வரைக்கும் நும் காட்சி
ஈந்தருள், கருணைசெய் எனவே'' (40:58)

தம்மினும் மேலானவரின் செயல்களைக் குறிப்பிடும் பொழுது 'அருள்' என்பதனை உடன் சேர்த்துக் கூறுவது மரபு.

''கடைக்கண் பார்த்து அருள்க''

''திருச்செவி கேட்டருள்க''

''நல்லன எமக்கு ஈந்தருள்க''

என்பன இவ்வாறு அமைந்த தொடர்கள்.

ஜமால், மின் மண் வந்தது எனும் தோற்றத்தள். அவளது 'வழி கதிர் அழகு' என்றிடும் அமுதினைப் பார்வைகள் என்னும் சுரும்பரால் அருந்தியும் ஆராதவராய்க் கூறியவை இவை.

பிரிய மனம் இல்லாதவராய்க் கூறிய வசிய வாசகங்கள். உள்ளத்தடங்கா உவகை உரைவழி வெளிப்பட்டது.

## ○ கிங்கரர்

ஏவல் பணியாளர் என்ற பொருளது.

''கிடந்தனன்; கதை இது எனக் கிளந்த கிங்கரரால்'' (27:45) என்று இந்நூல் கூறும்.

கிம் கரஹ என்ற சொல் திரிந்து கிங்கரர் என்றாயிற்று என்பர்.

''இடு பணி யாது? ஒல்லை முடிப்போம்'' என்பார் போல் குறிப்பிற்குக் காத்திருந்து பணி செய்பவர் என்ற கருத்தினது.

எமகிங்கரர் என்ற வழக்கும் உண்டு. நாள் உலந்தார் உயிரை வல் விரைந்து கவர்ந்து செல்பவர் என்ற கருத்தினது.

''அம் கரம் கூப்பித் தொழுது ஆட்படுமின்
தொண்டீர் நமனார்
கிங்கரர் தாம் செய்யும் கிழாயின மிறை கேட்டலுமே''
(பொன் வண்ணத்தந்தாதி 66)

கம்பன் காவியத்தில் ''கிங்கரர் வதைப் படலம்'' என்று ஒரு படலமே உண்டு.

○ **குடம்பை**

''குடம்பை தேற்றுதல், முட்டை இட்டிடல்,
அடை கொளுதல்'' (17:11)

''திரன் உறு சரபப் பட்சியின் குடம்பை'' (25:8)

''கதிப் பெரும் பறவையின் குடம்பை'' (25:16)

''அசை தரு குடம்பையினில் அழுது உறைந்தாள்
ஆயிழை, அவள் உயிர் இவன்பால்'' (25:37)

இந்நூலில் பெரிதும் பயிலப் பெறுவது இச்சொல்.

வள்ளுவம் சுட்டும் குடம்பை, முட்டை குறிக்கும் எனச் சிலர் கூற, கூடு குறிக்கும் என்பார் பலர்.

குடம்பை, கூடு என்ற பொருளில் வழங்குவதனைக் கீழ்க்காண் தொடர்களும் வலியுறுத்தும்.

''கொழுமடல் இழைத்த சிறுசோல் குடம்பை (குறு:301)

''பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை'' (நற்:180)

○ **கை முதல்**

வணிகம் தொடங்குவார் முதலில் ஒரு குறிப்பிட்ட தொகை கொண்டு அதனை முதலாக வைத்து, பொருள்கள் வாங்கி விற்பனை செய்வர்.

கையில் தொகை இன்றேல், நகை போல்வனவற்றை விற்றுப் பொருள்தேடி, வாணிகம் செய்யத் தொடங்குவர். இதனைக் கை முதல் என்பது மரபு.

**இந்நூலில்**

''கை முதல் ஆக நாம் உதவும் இவை கொடு வசன வரம்பு
நாணயத்தோடு இயன்ற வர்த்தகம் புரிந்து ஓங்கி'' (37:5)

என்ற குறிப்பு உளது.

கண்ணகி தந்த சிலம்பு கைக்கொண்ட கோவலன் ''சேயிழை கேள். இச் சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு உலந்த பொருள் ஈட்டுதல் உற்றேன்'' என்று தன் கருத்து தெரிவித்தான் என்று காண்கிறோம்.
(சிலம்பு 9:74)

வணிகம் எப்படி நடக்க வேண்டும் என்ற நயமான குறிப்பும் இத்தொடரில் (37:5) அமைந்துள்ளது கண்டு மகிழ்கிறோம்.

## ○ கோத்திரம்

ஓர் இனத்தின் உட்பிரிவு என்ற பொருளது. பார்ப்பனர் இடையே, இன்ன முனிவர் பரம்பரையினர் என்பது குறிக்க...... கோத்திரம் என்று கூறுவர்.

பிற இனத்தும் இவ்வாறு குறிப்பிடல் உண்டு.

"கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு" என்ற பழமொழி வழி, ஒத்த கோத்திரத்தார் கொள்வன கொடுப்பன (மணவினை) மேவார் என்பது புலன் ஆகும்.

இந்நூலில் இனப்பிரிவு என்பது குறிக்க,

"எளியனும் எனது கோத்திரமும்" (40:66)

"துதி அப்துல்காதிர் வாழி; துலங்கு கோத்திரத்தோர் வாழி" என்றமை காணலாம். (46:16)

## ○ சந்தனாசல புய நபி

"சந்தனாசல புய நபி முகில் பதி சார்ந்தார்" (43:6)

சந்தன மரங்கள் மிகுதியாகக் கொண்டுள்ள மலைகள் போன்ற புயத்தார், என்று பொருள் கொள்வார். அதனைவிட களபம் திமிர்ந்த கல் நவில் தோளர் என்று கொள்வது சிறப்பு.

மணப்பொருள் திமிர்தல் மங்கையர்க்கும் மதுகை வீரர்க்கும் இயல்பு. மகளிர் "நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை குவி முகிழ் இளமுலை கொட்டி" ஒப்பனை மேவுவர் (முருகு. 33)

ஆடவர் உரத்தும் (மார்பு), உலம் கொள்தோள் இடத்தும் சாந்து திமிர்வர்.

"...சாந்து அருந்தி
பல்பொறி கொண்ட ஏந்து எழில் அகலம் (புறம் 161)
"தண் கமழும் சாந்து நீவினன்" (புறம் 239)

"முற்றிழை மகளிர் முகிழ் முலை திளைப்பவும்
செஞ்சாந்து சிதைந்த மார்பு" (பட்டினப்பாலை, 296, 7)

வரையசாந்தும், திரையமுத்தும் வரம்பறியாமை வந்தீண்டிய நாடு இது ஆகலின், மரபு வழாஅது, பாட்டுடைத்தலைவர் தோள் பரிமளம் கமழ்வது என்பார்.

பாட்டுடைத்தலைவி பல்கீசு தன்,

"தெரிந்த மேனியில் பரிமளக் குழம்பினைத் திமிர்ந்தார்"
(34:136)

என்று கூறி அடுத்த பாடலில் அவர் தேகம் வாசம் எவ்வெவைக்கும் மேலானது என்றும் கூறி,

"வடங்கள் பூண்டதும், பரிமளங்கள் திமிர்வதும் வதுவை
சடங்கு தீர்ப்பதற்கு..." (34:137)

என்று முடிப்பார்.

## ○ சல துர்க்கம்

"தகுமுடி அரசர் யாரும் சலதுற்கம் ஆதலாலே
இகலி இங்கு இவனை வெல்வது எத்திறத்தானும் ஒவ்வாது"
(35:7)

துர்க்கம்-செல்வதற்கு அரிய இடம், கோட்டை, என்பன பொருள். இவற்றுள் முதற் பொருளே ஏற்புடையது.

பவுன வகுவின் வாழ்விடம் நாற்கடல் நடுவண் அமைந்த உயர் பெருந்தீவு, எனவே அவ்விடம் அடைதல் எளிது அன்று என்பது திரண்ட பொருள்.

## ○ சவி

சவி-ஒளி, அழகு, வன்மை என்ற பொருள் உடையது.

"சவி உற நிறுத்தி அகலம் நாற்பதும்
எண்பது முழம் உயரமும் தவிசே" (31:39)

தவிசின் சிறப்பைக் குறிப்பிடும் போது எறும் அரியணை என்று முன்னர்க் குறிப்பிட்டுள்ளமையால் இம்முப்பொருளும் பொருந்தும்.

"சவி[1] கொள் பொன் முத்தம் என்கோ" (திருவாய்3:4:4)

"அடி இடச்சவி[2] இலாதே முடங்குவன்"
(திருக்குற்றாலத் தலப்புராணம் மந்தமா:73)

---

1. ஒளி 2, வன்மை

"சவி[1] உறத் தெளிந்து" (கம்பன் 2732)

○ **சாதனர்**

"தொழும்பர் செய் பிழையைச் சாதனர் பொறுப்பர்" (38:42)
சாதனம்[2] செய்பவர் சாதனர்.

பயிற்சி மிக்கு எடுத்த செயலினை வெற்றிபெற முடிப்பவர் சாதனர். இத்தகையார் தம் தொழும்பர் (பணியாளர்) தம்மைப் போலவே திறலும், செய்து முடிக்கும் அறிவு நுட்பமும் கொண்டு இருப்பர் என எண்ணார்.

அத்தகைய பணியாளர் பிழைகள் செய்தல் கூடும். அதுகண்டு வெறாது பொறுத்து, பிழை திருத்தவே முயல்வர்.

இக்கருத்தைக் குறிப்பதே இத்தொடர்.

○ **சிட்டர்**

சிரேஷ்டர்-மேலானவர், ஆன்றோர் என்று பொருள்படும்.

"சிட்டரைப் புரந்து அருள் நபியேவைத்தியன் நான்" (27:18)
மேலானவரை, உயர்ந்த பெரியோரைத் தம்மின் நீங்காது புரந்தருள்பவர் என்ற கருத்தினது. நல்லார் இணக்கமும் பெரியாரைத் துணைக்கோடலும் உடையவர் நபி அவர்கள் என்பது இதன் பொருள். கம்பன் காவியத்துள்,

"சிட்டர் செயல் செய்திலை; குலச்சிறுமை செய்தாய்" (6123)

என்ற தொடர் காணலாம்

○ **சிதடன்**

"அறைந்தனன் சிதடருக்கு அதிபன்" (38:33)
"சிதடர் செய் பிழையைப் பெரியவர்
பொறுத்து திருவருள் புரிவது" (38:42)

சிதடு என்ற சொல்லில் இருந்து பிறந்தது சிதடன் என்ற சொல். சிதடு-குருடு, பேதைமை, உள்ளீடின்மை என்பன பொருள்கள்.

சிறப்பில் சிதடும்,[3] உறுப்பில் பிண்டமும்" (புறம் 28)
"துஞ்சு புலி இடறிய சிதடன்"[4] (புறம் 73)

---

1. அழகு, தெளிவு 2. பயிற்சி 3. குருடு 4. குருடன்

சிதட்டு[1]க்காய் எண்ணில்'' (குறுந். 261)

இக்காப்பியத்துள் இச்சொல் பேதைமை, உள்ளீடின்மை என்ற பொருளில் வழங்கப் பெற்றுள்ளது.

○ **சீவதாது**

...''நடு பதித்து ஏகில்
சீவ தாதுவாம் நமது கீர்த்திக்கு...'' (32:48)

Life Pulse. Pulse usually felt at the wrist. சீவநாடிஎன்பதும் இது (லெக்சிகன் பக்கம் 1488). உயிர்நிலைத்து இருப்பதனைக் காட்டும்.

வெற்றிடம் தன்னில் தாம் கொணர்ந்த கற்களைப் பதித்துப் போதலே நலம் என்று உணர்ந்து, (அன்றேல் களவுக் குற்றம் சாட்டப்பெற்று தண்டனை விதிக்கப் பெறலாம் ஆகலின்) நடுப் பதித்து ஏகுவதால் உயிர் நிலைக்கும் என்றும், புகழும் நிலைக்கும் என்றும், எண்ணினர் என்ற குறிப்பு உடையது.

○ **சூட்சுமம்**

''விரைவினில் நினைக்கும் இடமெலாம் புகுந்து
மீளும் அச்சூட்சுமமும் வேண்டும்'' (41:1)

இங்கு அப்பொறியின் நுட்பமான அம்சம் பற்றிக் குறிப்பிடுகிறார் என்று கொள்ள வேண்டும்.

சீவக சிந்தாமணியில் மயிற் பொறியை விண்ணிடைச் செலுத்தவும், மண்ணிடை இறக்கவும், செய்யவல்ல கருவிகள் பொருத்தப் பெற்றிருந்தன என்பதனை இங்கு ஒப்பிடுதல் நலம்.

○ **செருக்கு அருள் பொருள்**

''செல்வச் செருக்கு அருள் பொருள் கோடா கோடி'' (30:87)

ஒரு மனிதனுக்குப் பெருமிதம், கல்வி, தறுகண், புகழ்மை கொடை முதலவற்றால் அமையும் என்பர்.*

''பொருள் என்னும் பொய்யா விளக்கம்'' என்பார் வள்ளுவர். மேலும் ''பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை'' எனவும் குறிப்பிடுவார்.

---

1. உள்ளீடு இன்மை * (தொல். பொருள். 6:9)

இவ்வாறாய பொருள் கோடா, கோடி சேர்ப்பார் செருக்கு உறாமல் என் செய்வார்? (செல்வத்து வேண்டும் பணிவு என்பர் நூலோர்).

எனினும் செருக்கு மேவுதற்குப் பெருங்காரணம் ஆக அமைவது, திரண்ட செல்வமே என்பது இவர் கருத்து.

## ○ சேனை

பிறந்த மகவிற்கு ஊட்டும் முதற்சங்குப் பால். இனிப்பு கலந்த திரவம் என்பர். பட்டினத்தார் இதனைச் சிறப்பாக மனிதர் வாழ்வின் முச்சங்கம் பற்றிக் குறிப்பிடும்போது

''முதற் சங்கம் அமுதூட்டும். நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும். கடைச்சங்கம் ஆம்போது அது ஊதும்'' என்பார்.

''சிறந்த மடவியர் எடுத்து புனலாட்டி
புலர்த்திய பின் சேனை ஊட்டி'' (5:55)

என்பார் நம் புலவர்.

புனிற்று இளமகவைப் பொருந்த

''ஏந்தி இரு கையால் எடுத்து நறு நீராட்டி
பூந்துகிலால் மெய்துவட்டிப் போற்றினார் வாய்ந்த—சங்கில்
சேனையுடன் வஞ்சம் திருட்டும் மருட்டும்
...... .. ......... .........
பொய்யும் கலந்து புகட்டினாள்
(கூளப்ப நாயக்கன் விறலிவிடு தூது —166, 167, 168)

ஈரமிலாச் சாதிநாம் நமக்கு ஈரம் ஏன் என்று உடம்பில்
ஈரம் இல்லாமல் துவட்டி ஏந்தினாள்
...... .. ......... .........
பங்கப்படுத்தி வைக்கும் பாசாங்கும் வஞ்சமும், பொய்
யுங் கலந்து சேனைப் பால் ஊட்டினாள்

(சேதுபதி விறலி விடுதூது 259, 260, 261)

என்னும் தூது நூல்கள்.

## ○ சோங்கு

ஆழ நெடுந்திரை உவரியிடை, நீர்கிழித்து மேவும், நிறை பரம் சுமந்த கலன்கள், கரை அணித்தே வாரா. நெடுந்தொலைவில் நிற்கும். அங்குரம் பாய்ச்சி அசையா வகை செய்வர்,

அங்கு நின்று, ஆழமில் கடற்கரை அணுக, 'சோங்கு' எனப் படும் சிறுபடகுகள் கொள்வர். இவை அப்பெரு மரக்கலன்களிலேயே வைக்கப் பெற்றிருக்கும்.

கரை நணுக விரும்பின், அதனைக் கலத்தினின்று சரிய விட்டு நூலேணி வழி இறங்கி, பொருந்தி, துடுப்பு வலித்து, கரைசேர்வர்.

''சோங்கினை மேலிடு சரக்கொடு கவிழ முட்டும்''
(திருவிளையாடல், வலைவீசு. 34)

என்ற தொடர் காணலாம்.

படகினும் பெரியது தோணி; தோணியினும் சோங்கு பெரிது; சோங்கினும் வங்கம் பெரிது என்பர்.

இந்நூலிடை,

''இடம் தரும் சோங்கு தன்னைச் சரிய விட்டு ஏகும் காலை''
(24:63)

''கூவு சோங்கு ஓரத்தில் குனிந்து வாரியை'' (25:10)
என்று அமைத்துள்ளார். முன்னரும் (10:19) காணலாம்.

வங்கம், மரக்கலம் எனவும்படும்.

''எக் கடற்கும் செலும் மரக்கலன்கள்'' (38:22)
என்பார்.

## ○ சோறு

''சோறு ஆனதால் இறக்கு என'' (37:28)

இச்சொல் (சொல்+த்+உ—>சோல்+த்+உ=சோறு) நெல் மணியின் உறைகழித்த அரிசி கொண்டு சமைத்தது என்ற பொருளது. (சொல்—நெல்).

கம்பு, தினை, கற்றாழை போன்றவற்றில் சோறு கொள்வதும் உண்டு.

கம்பஞ்சோறு, தினைச்சோறு, கற்றாழைச் சோறு என வழங்கப் பெறும்

''நெல்லுச்சோறு'' என்ற தனிப்பாடல் தொடரும் உண்டு.

இது சங்க நூல்களில் பெரிதும் அரிசிச் சோற்றையே குறிக்கப் பெற்றது.

''சோறுவாக்கிய கொழுங்கஞ்சி'' (பட்டினப்பாலை. 44)

"சோறு படுக்கும் தீ" (புறம் 20)

"ஏற்றுக உலையே; ஆக்குக சோறே" (புறம் 172)

"ஊன் சோற்று அமலை பாண் கடும்பு அருத்தும்" (புறம் 33)
(அமலை—திரள்)

"வரையாப் பெருஞ்சோறு முரிவாய் முற்றம்" (புறம் 261)

"பைஞ் ஞிணம் பெருத்த பசு வெள்அமலை" (புறம் 177)

"ஆம் இருந்த அடை நல்கி,
சோறு கொடுத்து, மிகப்பெரிதும்" (புறம் 362)

"தண்ணீரும் சோறும் அளிப்பான் திருப்பனந்தாள்
பட்டனன்" (தனிப்பாடல்)

"இம்மையே தரும்; சோறும் நல்கிடும்
ஏத்தலாம்; இடர்கெடலும் ஆம்" (தேவாரம்)

உறட்டி உண் வாழ்க்கை அரபு நாடு பற்றிய இக்காப்பியத்தில் சோறு இடம் பெற்றுள்ளமை சிறப்புக்கு உரிய ஒன்று.

### ○ ஞமலி

தமிழ் இலக்கியங்களில் சிறப்பிடம் பெற்றுள்ள சொல். 'நாய்' என்ற பொருளது.

..."அலகை பூதம்
நரிகளொடு, கழுகு, உவணம், ஞமலி. கொடிஆர (35:42)

போர்க்களத்து இறந்து பட்டார் உடல், குறைத் துணி உணத் திரண்டன. பிணந்தின் ஆர்வத்துப் பெருந்திரளாய்க் கூடின இவை.

"நம்மது என்று (உடல்) நாமிருப்ப நாய், நரிகள் பேய், கழுகு தம்மது என்று தாமிருப்ப" என்பார் பட்டினத்து அடிகள்.

"தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்தி" (புறம் 74)

"மனை உறை கோழியொடு, ஞமலி துன்னாது"
(பெரும்பாண். 299)

"விளி அறி[1] ஞமலி குரைப்ப" (அகம்:140)

"வலம் சுரி தோகை[2] ஞாளி (அகம் 122)

"அரவ வாய்[3] ஞமலி" (அகம் 122)

1. தன்னை வளர்ப்பவர் குரல்
2. வலப்பக்கமாக சுருண்ட வால்
3. ஓயாக் குரைப்பு ஒலி

"கூர் உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏற்றை" (பட்டினப் பாலை 140) என்பன இலக்கிய வழக்காறுகள்.

## ○ தத்து

மனக் கவலை என்ற பொருளது.

"சமைந்த கன்று அனைத்தும் ஈந்தேன்
தத்துக்கும் பிழைத்திருந்தேன்" (7:10)

"உருவேங்கள் தத்துக்கு உளத்தே இருந்தன"
(திருவேங்கடக் கலம்பகம்)

"தத்து உறு சிந்தையர்; தளரும் தேவர்" (கம்பன் 3099)

தத்து—ஆயுள் காலத்தில் நிகழும் கண்டங்கள் எனவும் பொருள் படும்.

(கண்டம்—மரணம் தரும் துன்பங்கள். ஜாதக நூல்கள் இது பற்றி விரிவாகக் கூறும்)

"...சோதிடம் போல்
அன்ன பூவையர்க்கும், புருடர்க்கும் பொருத்தம்
ஆன பாக்கியம் வளர்ந்தேறும்.
என்ன தத்துகளும் அகலும் மங்கலம்[1] செய்திடில்" (38:34)

## ○ தமர்

"மணி (வைரம்) ஒன்றினில் இட்டன தமரே". (32:64)

தமர்—தவர்; இவ்விரண்டும் தொளையிடல் என்றபொருளின. தவர் (தல்)—துளைத்தல்

"வண் குறிஞ்சி இசை தவருமாலோ" (திருவாய் 9,9,1)

தமர்—தொளையிடல் (கருவியால் அமைத்தல்)

"தமர் இடு கருவியாம்" (திருவிளையாடல், மாணிக்கம்.61)

மணிகளில் தொளையிடுதல் இந்நாட்டில் (தமிழ்நாடு) நெடுங் காலமாக இருந்து வரும் தொழில் நுட்பத் திறன்.

"கோடுபோழ் கடைநரும், திருமணி குயிநரும்[2]
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்"
(மதுரைக்காஞ்சி : 511, 12)

மாணிக்கம் போன்ற மணிகளில் தொளையிடுதல் என்ற குறிப்பினை உடையது.

---

1. சாந்தி பரிகாரம்
2. குயில்-தொளையிடுதல்

வைரத்தில் தொளையிடுதல் செயற்கருஞ் செயலே. இதனை எளிதில் முடித்தன ஜின்கள் என்று வண்ணக் களஞ்சியப் புலவர் குறிப்பார்.

## ○ தரும தாரு

''தரணியில் உதித்திடு தரும தாரு'' (5:3)

கல்வியை ஒரு மரமாக உருவகித்துக் கம்பன் பாடுவான். (167) போகக் கனி பழுத்தது என்று கூறுவான்.

இங்கு தருமத்தைத் தாரு (மரம்) ஆக உருவகிக்கிறார், கிளைகள் பல ஆகலின்.

இறை அருள் பெறல் என்னும் தண்ணிய நிழல் தருவதும் ஒன்று ஆயிரம் விளையுட்டு ஆவதும் தருவின் இயல்பு.

இடம் பெயராது நலம்தரும் தருவினை, இயங்கியல் நபி அவர்களுக்கு உருவகித்தது நயம் செறிந்தது.

## ○ தளவரிசை

தளவிசை—கல்பரப்பு (லெக்சிகன் ப. 1802)

தரைப்பகுதியில் தளம் பதிக்க, சதுர நீள், சதுரப் பாவு கற்களை இடுவர். அவற்றின் இணைவாய்த் தெரியாவாறு சாந்துகொண்டு பூசி அமைவர். தளவிசை என்பது இது.

''ஒள்ளித்தாய்த் தளவிசை பதித்திடுக'' (32:17)

இவ்விடை தங்கத்தால், வெள்ளியால் அமைந்த கன சதுரக் கற்கள் (பக்க அளவு ஒரு முழம்) பரப்பப்பெற்று (32:5) இணைக்கப் பெற்றன.

விளக்கமாக கதைச் சுருக்கப் பகுதியில் காணலாம்.

## ○ திங்கள் மேவும் பங்கயம் நிகர் விழி

சுலைமான் (அலை) அவர்கள் ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையர். திங்கள் அன்ன தண் பெருஞ்சாயலர்.

எனவே அவர் முகம் தேய்வு அறியாத் திங்கள் எனப்பெறும். கருணைத்தேன் பார்வை வழி ததும்பி வழியும் பங்கயம் நிகர்த்த கண்கள்.

இதனை நயம் பொருந்த "திங்கள் மேவும் பங்கயம் நிகர்விழி" (43:8) என்று புலவர் குறிப்பிடுகிறார்.

இங்கு காளமேகப் புலவர் பாடல் தொடர் ஒன்று நினைவில் வராமல் போகாது.

"முண்டகத்தின்மீது (முகம்) முழுநீலம் (கண்கள்)பூத்ததனைக் கண்டதுண்டு; கேட்டதில்லை" என்பதே அது.

○ **திட்டி**

பார்வை, கண் என்ற பொருளது.

"பார்வை திட்டி சேர் சென்னி வேறு, தேகம் வேறு" (30:34)

திருஷ்டி என்ற வடமொழிச் சொல் தமிழில் வழங்கும்போது திட்டி* எனப்பெறும். கண்ணேறு கழித்தலைத் திட்டி கழித்தல் என்பர்.

கன்னத்தில் கரும்பொட்டு இடுதலும், அயினிநீர் சுழற்றலும் இதன் பாற்படும் என்ப. (2:24; 34:39)

பார்வையில் நஞ்சு கக்கும் ஒருவகை நாகத்தைத் திட்டி விடம் என்பர்.

"கண் கிழித்து உமிழ் விடக் கனல் அரா—அரசு" (கம்பன் 348)

"திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை" (கம்பன் 7351)

"திட்டியின் விடத்து நாகம்" (கம்பன் 7917)

"திட்டியின் விஷத்தை" (தக்கயாகப் பரணி. 554,645)

என்பன இலக்கிய மேற்கோள்கள்.

○ **திமிரம்**

இருள் எனப் பொருள்படும்.

"இரவு ஆய் திமிரம் வந்தன என்றார் செம்மல்" (40:61)

செறிந்த இருளையும், புலவர்கள் வருணிக்காமல் விடுவது இல்லை. இறைவன் திருப்பெயர்களை ஓதார் மனம் போல் இருளிய (இரவு) வானம் என்பார் ஒரு புலவர்.

கம்பன், சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தும், (3204, 3205), 3206), சேக்கிழார் இளையான்குடி மாற நாயனார் வரலாற்றிலும் (பெரிய: 4:15,16) இருளையும் விதந்துபாடி உள்ளமை அறியலாம்.

* திருஷ்டி-திட்டி; சிருஷ்டி-சிட்டி; பிருஷ்டம்-பிட்டம்

'திமிரம் அது அறவரு தினகரன் எனவும்'' (கம்பன் 302)

''உலகம் போர்த்த திமிரம் மேய்ந்து உலவும் வெய்யோன்''
(நைடதம். 895)

என்பன இலக்கிய ஆட்சிகள்.

## ○ திரட்சி

''திரட்சி தன்னையும் கண்டு உரைமொழியையும் செவிக்
கொண்டு'' (42:11)

திரட்சி என்பது முத்து என்ற பொருளது என்று உரிச்சொல் நிகண்டு குறிப்பிடும்.

உட்புகுந்த மணல் துகள் உறுத்தல் பொறாது, சங்குப் பூச்சிகள் நெளிய அதன் உடல் கசியும் ஒருவகை நீர் அம்மண் துகள் மூட, நாளடைவில் அந்நீர் திரண்டு முத்து என உருப்பெறும் என்பர்.

பாக்குக் குலைகளிலும் இவ்வாறே முதலில் நீர் இருக்கும் என்று, அது நாளடைவில் திரண்டு, சேறு போல் ஆகி, இறுகி' கடினம் எய்தி, பாக்கு ஆக அமையும் என்றும் கூறுவர்.

''தெண்ணீர்ப் பசுங்காய் சேறு கொள முற்ற'' (நெடுநல். 26)

என்ற தொடர், இக்கருத்தை விளக்கும். நீர் நிரம்பிய இளநீர் இவ்வாறே தேங்காயாக உருப்பெறும்.

## ○ திரளுதல்

''ஆர் நுடியினிலும் மின்னார் திரளில் ஆதியில் இவன் சேர்ந்து''
(29:68)

புனத்தை உடைய குறவன் தினையை வித்தி விளைத்து அதில் தோற்றும் முதல் கதிரைத் தெய்வத்திற்குப் பலி இடும் மரபு உண்டு (குறுந். 105).

அவ்வாறே தாம் பெற்ற மகள் பூப்பெய்தி, புதுப்பொலிவு மேவி, பெண்மை நலம் கனியப் பெற்றால், பெற்றோர் அவளை முதற்கண் சுறாயிகு தழுவக் கொடுத்து விடவேண்டும், என்பது அவன் இட்ட சட்டம்.

(விளக்கம்: கதைச் சுருக்கப்பகுதி)

பெண் மகவு, பூப்பெய்தி பெண்மை நலம் கனிய கவினப் பெறுதலையே திரளுதல் என்று குறிப்பிடுவது, இக்காலத்திலும் வழக்கிடை உண்டு.

"குண்டு மணி போல், குரும்பைபோல், பம்பரம் போல்
செண்டுபோல், கொங்கைத் திமிர் ஏறி-தண்டித்து
மானும் திரண்டான்; பின் வாலிபர்கள் வந்து வந்து
தானும் திரண்டார்" (சேதுபதி விறலி விடுதூது 30, 31)

என்னும் தூது நூல்.

பக்குவப்பட்டு, நேர்ப்பட்ட நிலையைக் குறிக்கும் இச்சொல் ஆட்சி அருமையானது.

கிராமப்புற வழக்கில் இந்நிலை "பெண் சமைந்தாள்" என்று குறிக்கப் பெறும்.

## ○ தொடக்கு

துடக்கு எனவும் அமையும்

"துடக்கு அகன்று...சுவையுமான் நபி பிறந்தார்" (5:62)

இதற்கு Uncleanliness as of a woman in her periods or in child birth என்று லெக்சிகன் விளக்கம் தரும். (பக். 2085)

இந்நிலைமையை (தூய்மையின்மை) வாலாமை என்று இலக்கியம் குறிப்பிடும். "சூதகம் முதலிய தீட்டு", "தீட்டு" "தொடக்கு" என்பன வழக்கிடை உள்ள தொடர்கள்.

## ○ தொழும்பு

அடிமைத் தொழில்.

இறைவனுக்கு அனைத்து உயிர்களும் அடிமை. அவன் ஆண்டான். "என்று நீ அன்று நான் உனது அடிமை அல்லவோ?" என்பார் தாயுமானவர்.

இந்நூலில் தொழும்பு, அடிமை என்ற பொருளில் வழங்குவதனை,

"நம் தோன்றலும் தொழும்பாம்" (33:8)

"தொழும்பர் செய் பிழை" (38:42)

"எனது புதல்வி ஆம் தொழும்பை" (40:66)

என்ற தொடர்களில் காணலாம்.

"பலவாறே தொழும்பாகும் அங்கு"

(சிவஞான போதம் 1,3)

"உனக்கே தொழும்பன்" (தாயுமானவர் கருணாகர. 8)

"தொழும்பு ஆளாக ஓலை கொடுக்குதுமோ?"
(வெங்கைக் கோவை. 332)

என்பன பிற இலக்கியங்களில் காணக்கிடைப்பன.

## ○ நடுநெறி

நடுவு நிலைமை, ஒருபால் கோடாமை.
"நடுநெறி செலுத்தும் அரசு தாவூது" (38 3)

வேந்தர்க்கு அமைதக்க, விறல் பெருஞ் சிறப்புகளில் இந்நெறி வழாமையும் ஒன்று.

"...மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமர் எனக்கோல் கோடாது
பிறர் எனக் குணம் கொல்லாது...
உடையை ஆகி...
நீ நீடு வாழிய நெடுந்தகை" (புறம்-55)

"ஓர்ந்து கண் ஓடாது இறைபுரிந்து யார் மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை" (குறள் 541)

இவ்வாறு நடுநெறி நிற்பதனால் 'தன் குலத்து ஒரு மைந்தனையும்' இழக்கும் அவலமும் அரசன் எய்தல் கூடும். எனவே தான் சேக்கிழார்.

"அருமந்த அரசாட்சி அரிதோ? மற்று எளிதோ தான்"
(பெரிய புராணம். 3:44)

என்று கூறி வியப்பார்.

"பால் கொளல் இன்றிப் பகல்போல் முறை கோடாக்
கோல் செம்மை" (கலித். 86)

"நெடு நுகத்துப் பகல் போல
நடுவு நின்ற நல் நெஞ்சினோர்" (பட்டினப்பாலை. 206,7)

"சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைவதும், ஒருபால் கோடாமையும்" அரசர்க்கு அமைதக்க அணியே ஆகும்.

## ○ நந்தல்

சங்க நூல்களில் இச்சொல் செழித்தல், கலித்தல், தழைத்தல், பெருகல் என்ற பொருள்களில் வழங்கப் பெற்றது.

அவிதல், அழிதல் என்ற பொருள்களும் உண்டு.

"கையமை விளக்கம் நந்து தொறும் மாட்ட" (முல்லை. 49)

(நந்து-அவிதல்)

இந்நூலில்,

"நந்திலாப் பெருந்தவம் என வளர்ந்தன நாற்றே" (2:22)

"நந்தல் உற்றிட" (23:10)

"நந்தல் ஆயினும் நந்துவது அல்லது" (27:22)

என்று வழங்குறும் தொடர்கள் அவிதல், வீதல், அழிதல் என்ற பொருள் குறிப்பன.

## ○ நயனப்பாவை

கண்ணின் கருமணியைப் பாவை என்று கூறுதல் மரபு.

"கண்ணின் பாவை நடை கற்றன்ன இயங்கியல் குறுமகள்" என்று சங்கப் பாடல் ஒன்று குறிப்பிடும்.

இந்நூலில்,

"நவமுறு வெற்றி காண நண்ணினன் நயனப் பாவாய்" (28:12)

என்ற தொடர் உண்டு.

அன்பிற்கு உரியாரைக் "கண்ணே! கண்மணியே! அக்கட்புலம் சேர் தேவி!" என விளிப்பதும் மரபே.

உயிர்போல் வளர்த்த மகளை "நயனப்பாவாய்" என விளிப்பதும் நெறியின் பாற்பட்டதே.

"கரு மணியின் பாவாய்நீ போதா யாம்வீழும்
திருநுதற் கில்லை இடம்" (குறள் 1123)

என்ற குறட்பாவிலும், நயனப்பாவை நல்லிடம் பெற்றமை காணலாம்.

## ○ நால் வகைக்கறி

புலவர் வாழ்ந்த பகுதியாகிய நாகூரிலும் அதனைச் சார்ந்த இடங்களிலும் பிரியாணி என்ற சோறு அன்றி நால்வகைக் கறிச் சோறு, ஐவகைக் கறிச்சோறு என்றெல்லாம் சொல்வது வழக்கம்.

இவ்வழக்கத்தின்படி இச்சொல் ஆட்சியைப் பயின்றுள்ளார் என்று கொள்வது அவ்வளவு பொருத்தமாகப் படவில்லை.

மேலும், இச்சொல் ஆட்சி, ஜின்கணங்கள் வசப்படு படலப் பாடல் ஒன்றில் அமைந்துள்ளது. ஜின்கள் சமைத்த சோற்றுத் திரள் பற்றிக் குறிப்பிடும் இடத்தில் இடம் பெற்றுள்ளது.

மேல்வகைப்புகழ் திருநபி உரைப்ப விண்தலத்தின்
ஏல் வகைப்படு அமுதமும் இதுவும் ஒத்திருப்ப
நால்வகைக் கறியின் மணம் சமைத்தன நாளும்
வேல்வகைப்படு கண் அரம்பையரும் உள் விரும்ப. (15:53)

எனவே இந்நால்வகைக் கறி என்பதனைப் பொதுவாகத் தான் பார்க்கவேண்டும்.

அப்படிப் பார்க்கும் பொழுது அவை :

1. தரையிலே முளைக்கும் கீரை, காய், கிழங்கு முதலியன.
2. தரையின் மேல் திரியும் ஆடு, மாடு ஒட்டகை முதலிய மிருகங்கள்.
3. விண்ணிலே பறக்கும் பறவைகள் போல்வன.
4. நீரில் வாழும் மீன்கள் முதலியன.

இந்நால் வகைகளிலும் கறியாகச் செய்யப் பெற்று உண்ணத் தகுதியானவற்றைத் தான் நால்வகைக் கறி என்று புலவர் கூறு கிறார் என்று கொள்ளவேண்டும்.

இப்படிப் பொருள் கொள்வதற்குப் புலவர் காப்பியத்திலேயே அகச்சான்று ஒன்று உள்ளது.

சுலைமான் நபி, பல்கீசு திருமணப் படலத்தில், நாட்டுமக்கள் அனைவர்க்கும் அவர் விருந்திட்டார் என்பதனைக் கண்டோம் அது குறித்துப் புலவர் பாடும் பொழுது,

திறல் மிகுநரரும் சின்கள் தொகுதியும் செறிந்து கூடி
பொறை நிகர் அடுதானங்கள்[1] புகுந்துவால் அரியில்[2] சோறும்
கொறி[3]யொடு பலதா(க) மேதை கொடி, செடி மரத்தில் தோன்றி
நிறைதரு கறியும் செய்தார் நீரற்று நெய்யே தோன்ற

என்று கூறுவார். (34:45)

---

1. அடுதானம்—அட்டில்
2. வால் அரி—வெள்ளரிசி
3. கொறி—ஆடு

## ○ நால் வகைக் கொடை

இச்சொல் ஆட்சியின் பொருளை இஸ்லாமிய சமய நெறியின் பின்னணியிலும், பொதுவான பின்னணியிலும் காணலாம்.

இஸ்லாமிய சமய நெறிப்பின்னணியில் காணும்பொழுது இது, 1. ஜகாத் 2. ஸதகா 3. பித்ரா 4. ஈதார் என்ற நான்கினைக் குறிப்பிடுவதாக அமையும்.

ஜகாத்: முஸ்லிம்களின் ஐம்பெருங் கடமைகளில் ஒன்று ஆகும். அதாவது ஒரு முஸ்லிம் தன் செல்வத்தில் 40ல் ஒரு பகுதியை (2. 5%) ஏழைகளுக்கு உவந்து தர்மம் செய்வது.

ஸதகா: ஜகாத்தை விட மேலும் அதிகமாக, அறவழியில், தான் ஈட்டு பொருளைச் செலவிடலைக் குறிக்கும். இது ஈகையை மட்டும் குறிப்பதன்று. நன்மையான செயல்கள் அனைத்தையும் உள்ளடக்கிக் கொண்ட செறி பொருளது.

பித்ரா: குறிப்பிட்ட வேளையில் மாத்திரம் கொடுக்கப்படும் கொடையைக் குறிக்கும். இப்பொழுது, பெரும்பாலும் ரம்ஸான் பண்டிகை என்று சொல்லப்படுகிறதே அந்நாளன்று கொடுக்கப் படும் தானியக் கொடையை இச்சொல் குறிக்கும்.

முஸ்லிம்களின் ஹிஜ்ரி ஆண்டின் ஒன்பதாம் மாதம் ரம்லான் ஆகும்.

இந்த ரம்லான் மாதத்தில் தான் முஸ்லிம்கள் நோன்பிருக்கும் கடப்பாடுடையவர்.

இதற்கு அடுத்த மாதத்திற்கு ஷவ்வால் என்று பெயர்.

இந்த ஷவ்வால் மாத முதல் நாளைத்தான் தவறுதலாக ரம்ஸான் என்று பல முஸ்லிம் அல்லாதார் கூறி வருகிறார்கள். அந்நாள்தான் நமக்கு அரசாங்கத்தாலும் விடுமுறை நாளாக அறிவிக்கப்படுகிறது.

உண்மையில் இந்த ஷவ்வால் மாத முதல் நாள் ஈதுல் ஃபித்ர் (ID-UL-FITR) அதாவது பித்ராவினுடைய பெருநாள் என்பது ஆகும்.

தமிழ் நாட்டு முஸ்லிம்கள் இதனை நோன்புப் பெருநாள் என்று கூறுவர், நோன்பு மாதம் முடிந்து அடுத்து வரும்நாள் ஆகையினால்.

இந்த பித்ரா என்னும் கொடை அந்த நாளில் கோதுமை யாகவோ, நெல் ஆகவோ அல்லது அவற்றின் விலைமதிப்பு ஆகவோ ஏழைகளுக்கு ஒரு குறிப்பிட்ட சட்ட வரம்புப்படி கொடுக்கப்படவேண்டும், என இஸ்லாம் விதிக்கிறது.

அப்பெருநாளன்று காலையில் முஸ்லிம்கள் அனைவரும் சேர்ந்து தொழுகை நடத்துவர் என்பது யாவரும் அறிந்த ஒன்று.

அத்தொழுகைக்கு முன்னதாகவே இந்த பித்ரா என்னும் கொடையைக் கொடுத்துவிட வேண்டும் என்றுசட்டம் விதிக்கிறது.

ஈதார்: ஒரு முஸ்லிம் தன்னுடைய தேவையை விடப்பிறர் தேவைகளையே பெரிதாக மதித்து, தனக்கு இன்றியமையாத் தேவையது ஆக ஒரு பொருள் இருப்பினும், அதனை உவந்து பிறர்க்கு ஈவதே ஈதார் என்று குறிப்பிடப் பெறுகிறது.

இந்த ஈதார் ஏனைய தர்மங்களை விட எவ்வளவோ மேலான தாகும்.*

இப்பின்னணி அல்லாமல், பொதுவாகப் பார்க்கும் பொழுது பொருளால் செய் கொடை, உடல் உழைப்பால் பிறர்க்கு உதவி நல்கல், சொல்லினால் பிறர்க்குத்தெரிவிக்கும் ஆறுதல் மொழிகள் எண்ணத்தால் பிறரது நன்மைக்கு என இறைவனைப் பிரார்த்தித் தல், ஆகிய நான்கினையும் நால்வகைக் கொடை என்று புலவர் குறிப்பிடுகிறார் என்று கொள்ளவும் இடம் உண்டு.

சதக்கா நன்மைப் படலம் 17 ஆம் பாடல் ஆன,

வருடம் ஒன்றினுக்கு இருதரம் ஸக்காத்
தொடு சதக்கா வழங்கிடுவன்.
விரிதர விபரம் கேண்மின் ஸக்காத்து ஓர்
தரம் கொடுத்தற்கு மேல் ஸதக்கா
புரிவன். இ இரண்டும் ஈந்த பின் ஏற்றோர்
புனிதரோ அல்லரோ எனவே
கருதிமற் றொருகால் உதவுவன் இரப்போர்
கலி அற மனம் மகிழ்வு உறவே. (10:17)

என்ற பாடல் முதல் பின்னணியில் கொடுக்கப்பட்ட விளக்கத்தை உறுதிப்படுத்துவது ஆக அமையும்.

---

* [இஸ்லாமிய கலைக் களஞ்சியம் (2)—ப. 312]

தருமலாபப் படலம் 36 ஆம் பாடல் ஆகிய

எ அளவு ஆயினும் தங்களால் ஏன்றமட்டு ஈயாது
அவம் அதாய் ஒரு நாளுமே போக ஓ(ண்)ணார் ஆய்ந்து ஓர்
உவகை ஆக கை பொருளினால், வாக்கினால், உடம்பால்,
நவிலும் தன்மம் செய்யாதது போல் உண்டோ நட்டம்
(27:36)

என்ற பாடல் இரண்டாவது பின்னணியில் கொடுக்கப்பட்ட விளக்கத்தை உறுதிப்படுத்துவது ஆகும்.

## ○ நிகர்

ஒளி என்ற பொருள் உடையது.

"பவள மென்மலர் காய் இலை நிகர் எழுது படம்"[1]
(40:47)

பல வண்ணக் கலவைகளால் ஒளி பெறத் தீட்டப்பெற்ற ஓவியம் செறிந்த துகில் என்பது பொருள்.

நிகர் என்ற சொல் ஒளி என்று பொருள்படுவதனை,

"அகல் நகர் எல்லாம் அரும்புஅவிழ் முல்லை
நிகர் மலர் நெல்லோடு தூஉய்" (சிலம்பு 9:1,2)

"நீர்வார் நிகர் மலர்" (அகம்.114)

எனவரூஉம் தொடர்களால் அறியலாம்.

## ○ பக்கி

பட்சி, பறவை, புள், பக்ஷி, அண்டஜம், வீயினம் ஒரு பொருளன

'க்ஷ'-தமிழ் வடிவில் அமையும் போது 'க்க' எனவும் வரும்; அன்றி 'ட்ச' எனவும் வரும்.

குக்ஷி-குக்கி; குட்சி; பக்ஷி-பக்கி; பட்சி
க்ஷணம்-கணம்; சணம்; சக்ஷு-சக்கு, சட்சு
இலக்ஷ்மணன்-இலக்குமணன்; இலட்சுமணன் என்பன காணலாம்)

"விரைந்து பட்சிகள் கலைதர" (2:5)

"பக்கியை நோக்கி கீழ்மைப்படு" (28:27)

1. படம்-துகில்

"பறவையின் குலம் விசும்பு சென்று" (2:20)

"புள் இனத்தொகை எலாம்" (17:3)

"அம்புவியின் மீது வாழ் வியினம்" (17:2)

"அண்டசத் திரளை நோக்க" (28:31)

என்ற இந்நூல் தொடர்கள் காணலாம்.

## ○ பஞ்சகதி

"பாயும் வெம்புரவிப் பஞ்சகதி" (18:6)
"ஆய்ந்து சொல் அரிய பஞ்சகதி அச்சுவங்கள்" (29:13)
"ஆற்றறுக்கும் கல்லாமா" (திருக்குறள் 814)

தொடர் உரை விளக்கும் போது,

"கதி ஐந்தும் சாரி பதினெட்டும், பொரு முரண்
ஆற்றலும் கல்லாத மா"

என்பார் பரிமேலழகர்

இக்கதி ஐந்து எவை என அறிய, சீவக சிந்தாமணி நச்சினார்க்கினியர் உரை காண்போம்:

"விக்கிதம், வற்கிதம், வெல்லும் உபகண்டம்
மத்திமம், சாரியோடு ஐந்து" (சீவகம். 784 உரை)

இவ்வாறான குதிரைகளின் நல் இயல்புகளைத் தொகுத்துக் கூறும் 'அசுவ லட்சணம்'* என்ற நூலும் உண்டு.

மா இயல்பைப் புறப்பொருள் வெண்பா மாலையும் புகலும்.

## ○ படைக்கும் பூசை

"...கீழோர்
படைக்கும் பூசையும், மனம் உரைத்து அவர் பிரம்பாலே
படைக்கும் பூசையும் கொண்டு" (15:33)

சோழலிங்கபுரம் (சோளிங்கர்), குணசீலம், சோட்டாணிக்கரை முதலிய ஊர்களில், பேய் பிடித்தாரைக்கொண்டு விட்டு, பேய் விலகப் பல செயல்கள் மேவுவர்.

---

* தஞ்சை சரஸ்வதி மகால் நூலகம்

வேப்பங்குழையால்,* அலரிமிலாறால் அவர்களைச் சாடுவதும் உண்டு. சில இடங்களில் அருள் கண்மாறி சாட்டையால் அடிப்பதும் உண்டு. (பூசை-அடி, வழிபாடு)

தவிர பேய்க்கு விருப்பமானவை என்று தாமே கருதி கள் சாராயம், சுருட்டு, கோழிக்குஞ்சு, இறைச்சி முதலவற்றைப் படையல் எனப் படைப்பாரும் உளர்.

நாட்டின் நடப்பை நன்கு காட்டுவது இத்தொடர்.

### ○ பத்ததி

''சின்கள் பத்ததி எல்லாம் கூட்டி'' (41:5)

ஒழுங்கு என்ற பொருள் உடையது. நிரல்பட அமைத்துப் பணி கொண்டார், என்று அமையும்.

'தைலவர்க்கம்' என்னும் நூலில், பத்தி-ஒழுங்கு என்ற பொருளில் பயிலப்பட்டுள்ளது.

### ○ பயித்தியம்

பித்து என்ற சொல்லில் இருந்து பிறந்தது.

''சுலையுமான் நபி யான் என்னும் பித்தம் தலைக்கு ஏறும்''
(36:43)

### ○ பயிர்

சிறப்புக்கு உரிய பொருள் ஒன்றனைப் பயிராக உருவகப் படுத்தி, உழவுச் செயல்கள் எனச் சில குறிப்பிட்டுப் பாடும் மரபும் உண்டு.

மெய்ம்மையாம் உழவைச் செய்து,
விருப்பெனும் வித்தை வித்தி,
பொய்ம் மையாம் களையை வாங்கி,
பொறை எனும் நீரைப் பாய்ச்சி,
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகில்
சிவகதி(பயிர்) விளையும் அன்றே (திருமுறை 4:737)

---

* வேம்பு-கடிப்பகை எனப்பெறும், கடி-பேய், பிசாசு முதல.

இன் சொல் விளை நிலனா[க] ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு, வாய்மை எரு அட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றது ஓர்
பைங் கூழ்ச் சிறுகாலை செய். [அறநெறிச்சாரம். 113)

இது போலவே காமத்தையும் பயிர் ஆகக்கூறும் மரபும்உண்டு. "ஊரவர் கௌவை எரு, அன்னைசொல் நீர் ஆகக்கொண்டு, காம நோய் (பயிர்) கதிர்த்துத் தலைசாய்க்கும்" (குறள் 1147) என்பார்.

"நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃது அவள்
யாப்பினுள் அட்டிய நீர்" (குறள். 1094)

வண்ணக் களஞ்சியப் புலவர் "சுருதி நல் தீன் பயிர்" (11:1) என்று பயில்கிறார். மேலும்,

"திடப்படு தமது வேத கற்பனை ஆம்
தீன் பயிர் மிக வளர்த்திடுவார்" (20:15)
என்பார்.

நெறி பரவ, அதற்கான முயற்சிகளை ஆழமாகச் செய்தல், பின் அம்முயற்சிகளை இடைவிடாது தொடர்தல், ஆகிய செயல்களை மேற்கொண்டால் அன்றி வெற்றி மேவுதல் அரிது.

ஓர் ஏர் உழவன் போல் பெருவிதுப்புடன் மார்க்க அறிஞர் முயலவேண்டும் என்பது இதன் கருத்து.

அரிது முயல்வதும், அசாவாமை மேற்கொள்ளலும் தலைப்படின் "ஒன்று ஆயிரம் விளையுட்டு" ஆகும்.

நயம் செறிந்த உருவகம் இது.

காதல் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டு அன்பில் கனிய, பிறக்கும் மகவு காமப் பயிர் என்று குறிப்பிட்டு ஒரு பாடலில் அமைத்துள்ளார்.

"செயிர்அறும் அரசன் தேவிக்குஇசைத்து அவள் சிறந்தகாமப்
பயிர் எனும் புதல்விக்கு..." (29:49)
என்பார்.

மனித உயிர்களைப் பயிர் (5:61) எனவும், பறவை இனங்களைப் பயிர் (18:21) எனவும் உருவகப்படுத்திய இடங்களும் இந் நூலில் உள.

கனி வரும் காலத்துப் பூக்கொய்து பாழ்படுத்துவார், கொடூர உள்ளத்தவர். மெல்லவே கரு இருந்து ஈனத் தலைப்படும் பயிரைப் பசுந்தாள் நிலையில் பால் பிடியாமுன்னம் அறுத்துப்பாழ் படுத்துவார் மனிதர் ஆவரோ? ஆனால் சுறாயிகு,

தவம், குணம், பொறுமை, உள்ளத்தயவு
புண்ணியம் நிசச்சொல்
உவந்து அருள் கொடைகள் என்னும்
பயிர்களை உறுதி கேடாம்
அவம்படு வாளினால் வேரற அறுத்து
அனந்தல் போதும்
நவம்படு கொடுமை மாறான். நயஉரை
பகரா நாவான். (29:7)

என்பார் புலவர்.

## ○ பயோததி

பயம்+உததி—நீர் செறி கடல்

"நந்தம் ஆர் பயோததியினில் உள்ளது என நவின்றது"
(42:3)

நந்து, அம் சாரியை பெற்று நந்தம் என்று ஆனது.

"வளை நரல் பௌவத்து வால் வெண்முத்தம் உள்ளது" என்ற பொருளது. பயம்-நீர்; பால் என்ற பொருளும் உண்டு. உததி-கடல்.

"பனிப்பூங்குவளை பயத்தின்[1] வளர்த்த" (பெருங். 1.38:208)

"மாகம் முட்டப் பயம்[2] கொண்டு" (திரு ஆலவாய். 30:4)

"புலி உழை மடிப் பயம்[3] உண்டு"
(உபதேச காண்டம்-கைலை. 9)

பயம்+உதரம்=பயோதரம் (பால்முலை)

## ○ பரிசனர்

பணியாளர்; அரசனைச் சூழ்ந்த பணியாளர் என்ற பொருளி லும் அமையும்.

"பரிசனம் எவையும் நீத்தான்; பரி, கரி சிவிகை நீத்தான்"
(9:22)

---

1, 2—நீர்; 3—பால்

''பாலையர் எவர்க்கும், சூழ்ந்த பரிசனர் எவர்க்கும்,
நாட்டார்'' (24:30)

மக்கட்கு ஐவகைப் பயம் எழும் என்றும், அவற்றை அகற்றிக் காக்கக் கடவியவன் மாநிலக் காவல் வேந்தன் என்றும், பெரிய புராணம் கூறும். அப்பாடலில் 'பரிசனர்' என்ற சொல் பயிலப் பெற்றுள்ளது.

''மாநிலம் காவல் ஆவான் மன் உயிர் காக்கும் காலை
தான் அதனுக்கு இடையூறு தன்னால், தன் பரிசனத்தால்
ஊனம் மிகு பகை திறத்தால் கள்வரால் உயிர் தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்து அறம்காப்பான் அல்லனோ?
(பெரிய. புராணம். 2:36)

## ○ பரியாசம்

பரிஹாஸம்; நகைச்சுவை; நகைப்பு எனப் பொருள்படும்.

வேடிக்கைக்காகப் பேசுவதும் இதன் பாற்பட்டதே.

பிறரை மகிழ்விக்கக் கருதி, சிலரை எள்ளுதலும் பரியாசம் எனப்படுகிறது. இவ்வாறு பேசுவதனால் பகை உண்டாகவும் வாய்ப்பு உண்டு.

எனவே தான் வள்ளுவம்,

''பகை என்னும் பண்பிலதனை ஒருவன்
நகையேயும் வேண்டற் பாற்று அன்று'' (குறள் 871)

என்று கூறும்: இந்நூலில்,

''நந்தலில் விளையாடல் சொல் நகைப் பரியாசம் செய்தல்
...ஒழிமின்'' (13:6)

என்ற தொடர்க் காணலாம்.

வெண்ணகை மிளிர முறுவலித்தல் சில வேளைகளில் எள்ளல் குறிப்பாகவும் அமைதல் கூடும். எவர்க் கண்டு இவ்வாறு முறுவலிக்கின்றார்களோ அவர்க்கு இதனால் சினம் எழவும் கூடும்.

இதனை விளக்குவதே,

''எமை அவமதிப்பாய் ஆய்ந்து உளதாம்
பரியாசம் உற்றதோர் நகைப்போ?'' (38:30)

என்று சுலைமான் (அலை) அவர்கள் சகுறுஜின் வினவினார் என்பதன் குறிப்பு.

வறிதே பொழுது போக்கும் வம்பர்கள், "குறுமொழிக் கோட்டியர்; நெடுநகையாளர்" (சிலம்பு 16—63,64) என அடிகளால் எள்ளப்பட்டனர்.

இத்தகைய தீநெறியாளர் தொடர்பு கனவினும் இன்னாது ஆகலின் "அவ்வெள்ளைக் கோட்டியை விரகினில் ஒழிமின்" என (சிலம்பு 30:19) வற்புறுத்துவார்.

○ **பாங்கி**

தலைவியின் உயிர் அனைய தோழி. நிழலின் நீங்கா, நிறைந்த நெஞ்சினள். இவள் வாயிலாகவே தலைவன் இரந்து குறை தீர்வான். தலைவியும் இவளும் பெருஒற்றுமையர்; பிரிதல் இலர்.

தலைவி,

"தலைப் புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப் புணைக் கொளினே கடைப் புணைக் கொள்ளும்
புணை கை விட்டுப் புனலோடு ஒழுகின்
ஆண்டும் வருகுவள்". (குறுந் 222)

தலைவியைக் கண்ணாரக் கண்டு, கைகவர் முயக்கம் எய்தப் பெருந்துணை புரிய வல்லது விதியே, என நம்பிய மகரிபு தேய மன்னன் மகன்,

"விதி எனும் பாங்கி சித்தம் எவை கொலோ?" என்பான்.
(25:55)

தலைவியின் நலத்தில் கண்ணும், கருத்துமாய் இருக்கும் பாங்கி தன்னால் இயன்றவரை, வரைவுக்கு முன்அவர்களை ஒன்று சேர விடாள்.

பகற்குறி பிழைக்க, இரவுக்குறி அல்லகுறிப்படவே செய்வாள்.
ஆனை இறாஞ்சி அரும் பெறல் வளர்ப்பு மகள்

"கூவி நேர்ந்து எழுப்பித் துன்பம்
கொடுத்தனள் கனவாம் பாங்கி" (25:43)

என்பாள்.

இவ்வாறு சேரல் ஒட்டாது செய்யும் பாங்கியைத் தன்னை விட்டு விலக்குவதும்அரிது.

கனவும், விதியும் கடிதக்கன அல்லவே.

நயம் பொருந்த பாங்கி என்ற சொல் ஆட்சி அமைந்து இருப்பது மகிழ்தக்கதே.

○ **பாசுரம்**

திருப்பாடல், திருமுகம் என்ற பொருளது
"பெய்யும் ஆரண முகில் இவர் மனத்து அருள் பெருகி"
தொய்யும் நூலிடைக்கு எழுதினர் பாசுரம்" (32:60)

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் "பாசுரங்கள்" எனப்பெறும்.

"பாசுரம் பாடல் உற்றார் பர சமயங்கள் பாற"
(பெரிய புராணம். திருஞான : 818)

"மதிமலி புரிசை என்னும் சிறப்பியல்
சீர்சால் செய்யுள் பாசுரம்" (திருவிளையாடல். திருமுகம் 10)

"மதிமலி புரிசை" என்று தொடங்கும் பாசுரம் இன்னார், இன்னார்க்கு, இன்ன செய்தி குறித்து, எழுதியது என்ற குறிப்புகள் கொண்டுள்ளமையால் திருமுகப் பாசுரம் எனப்பட்டது.

"மன்னிய சிவன் யான்" (எழுதுநர்)
"செருமா உகைக்கும் சேரலன்" (பெறுநர்)
"காண்பது கருதிப் போந்தனன்" (பாணபத்திரன், அவனை)
"மாண் பொருள் கொடுப்பது வரவிடுப்பதுவே" (செய்தி)

இவையே அப்பாசுரத்துப் பொதிந்த செய்தி ஆகும்.

சுலைமான் நபி அவர்கள் பல்கீசுக்கு வரைந்த பாசுரம் 'பிசுமில்" என்று தொடங்கல் உறும்.

"சுலையுமான் நபி" (எழுதுநர்)
"பல்கீசு என்னும் செழுமுடி அரசுக்கு" (பெறுநர்)
"எம் பழுது அறு சலாம்" (வாழ்த்து கூறல்)
"இசுலாத்தில் வருக. சுவன வாழ்வு பெற்றிடுக. பைத்துல் முக்கத்திசில் உறைவோம். அங்கு வருக" (செய்தி)

இவ்வாறே பிற்காலத்தில் அமைந்த சீட்டுக்கவிகள், எழுதுவோர், பெறுவோர், செய்தி என முப்பகுதி ஆக அமையும்.

உயர்ந்தோர் எழுதுவது 'திருமுகம்' என்றும் பிறர் எழுதுந 'முடங்கல்' என்றும் பொதுவாகக் குறிக்கப் பெறும்.

"கொற்றவன் தன் திருமுகத்தைக் கொணர்ந்த தூதா"
(திருவரங்கக் கலம்பகம்)

என்பது காணலாம்.

மேலும்,

"பசரும் நன்மொழியும், மற்றோர் தீட்டு பாசுரத்தின் கூறும்"
(சீறா : ஹிஜ்ரத்துக் காண்டம், பாத்திமா. 18)

என்ற இடத்தும் காணலாம்.

### ○ பாணித்தல்

"... நபி எனிலோ பாணித்துப் புகல்வர்" (31:72)

பாணித்தல்—காலம் நீட்டித்தல்

"பாணிக்க நின்று பயன் ஆவது என்னை" (சம்பன் 3477)

"பாழியால்[1] பிறரை வேண்டேம்[2] பணிப்பதே பாணி
என்றான்" (சீவகம் : 1929)

"என் பாணி, நில், நில்" (பரிபாடல் 8:50)

(நினக்கு ஒன்று கூறுவேன். அது கூறி முடியும் துணையும் நில்)

"பாணியேம் என்றார்; அறைக என்றார் பாரித்தார்.
மாணிழை ஆறாகச் சாறு" (கலித்தொகை: 102)

இப்பாணி என்ற சொல் காலம், தாளம், பாட்டு என்ற பொருள்களில் பிற இலக்கியங்களில் பெரிதும் பயிலப்பட்டு உள்ளது.

### ○ பாளிதம்

"அணி மென் பாளிதக் கலைகளும் உதவி" (40:58)

பாளிதம்-பல் பொருள் உடைய சொல். இங்கு பட்டுப்புடவை என்பது பொருள்.

தொல் நெடுங்காலமாகப் பட்டு உடுக்கும் வழக்கம் உடையவர் தமிழர்.

"கொட்டைக் கரைய பட்டுடை" (பொருந். 155)

"பட்டு நீக்கித் துகில் உடுத்தும்" (பட்டினப்பாலை. 107)

என்ற தொடர்கள் இது விளக்கும்.

### ○ பிரட்டன்

இது பிரஷ்டன் என்ற வட மொழிச் சொல்லின் மாற்றம்.

"பெருகின மற்றொரு பிரட்டன் வந்தனன்" (11:25)

நெறியின் நீங்கியாரையும், தீரா நோயாளியாரையும் இனத்தின் பிரித்து வைப்பர்.

1. பாழி—வலிமை; 2. பாணி—தாமதம்

இது ஜாதிப் பிரஷ்டம் என்று கூறப் பெறும்.

''சேரியில் போகா முடமுதிர் பார்ப்பான்'' (கலித். 65)
(இங்கு தொழு நோயாளனைக் குறிக்கிறது)

''மறை நூல் வழுக்கத்து வரி நவில் கொள்கை
புரி நூல் மார்பர் உறைபதி'' (சிலம்பு : 13:38,39)

இங்கு தம் ஒழுக்கம் தவறியமையால் ஒதுக்கப்பட்டவரைக் குறிக்கிறது.

இவ்வாறு விலக்கப்பட்டார் திருந்தவும் செய்கிலார்; மேற்கொண்டு ஒழுகும் தீயன தவிர்கிலார்.

இந்நூலில் குலமகட்குக் கேடு சூழும் கழிகாமுகனைக் குறிக்கின்றது இச்சொல்.

○ **பீர்**

சுரப்பு, பெருக்கு என்ற பொருளது.

''திசைக்கணும் பால் பீரிட்டுத் திரிதரும் பல வருக்கம்'' (29:2)

நல்ல கேள்வித் தமிழ் ஞானசம்பந்தரது திருமுறையில் திருச்சேய்ஞலூர்ப் பதிகத்தில் இச் சொல் ஆட்சி காணலாம்.

''பீர் அடைந்த பாலதாட்டப் பேணாதவன் தாதை''
(திருமுறை 1)

(பீர் என்ற இச்சொல் அம்முச்சாரியை பெற்று, பீரம்,* என்று சங்க நூல்களில் பயிலப் பெறும். அங்கு வேறுபொருள்.)

○ **பூணிக்கை**

''...தேர்ந்து ஓதப்
பூணிக்கை கேள்வி சிலதும் கேட்டு அனுப்புவோம்'' (31:72)

அறிவு நுண்மை, சோதிக்க அமைந்த குறிப்பிட்ட, தீர்மான மான வினாக்கள் என்பது பொருள்.

''பூணித்து இவை உரை செய்தனை'' (கம்பன் 7:88)

(பூணித்து—தீர்மானித்து; சூளுற்று)

'கை' விகுதி ஏற்ற இத் தொழிற் பெயர் (பூண்+இ+கை), 'பு' விகுதி ஏற்ற தொழிற்பெயர் ஆகவும் சில இடங்களில் பயிலும்.

---

* பீரம்-பீர்க்கு, பீர்க்கமலர், பொன்மை, சுணங்கு

"அரக்கன் பல்தலை பூழியில் புரட்டல் எண் பூணிப்புஆம்"
(கம்பன். 5867)

"பூணிப்பு ஒன்று உடையன் ஆகி" (கம்பன். 7905)

○ **பேயன்**

"சொன்ன பேயன் நீ யார்? இ(ன்)னம்
சொல்லின் உன் நாக்கைச்
சன்னமாய் அரிகுவம் அகல்" (36:22)

நாஅம், பேஎம் அச்சப் பொருள்* என்னும் தொல்காப்பியம்.
(8:67)

"மன்ற மராஅத்த பேஎ முதிர் கடவுள்" (குறுந். 87)
பேய்-அச்சம் ஊட்டுவது

பேய் பிடித்தவன், தொடர்பின்றிப் பேசுவான்; பிறர் வெருக் கொளச் செயல் மேவுவான்.

ஆண்டவன் அருள் நாடும் அடியார் தம்மை பேய்க்கும், நாய்க்கும் ஒப்பாகக் கூறி குறை இரப்பார்.

தாயுமானவர் பாடல்களில் இது காணலாம்.

"பேய னாகிலும், பெருநெறி காட்டாய்" (திருவாசகம் 23:7) என்பார் மாணிக்கவாசகப் பெருந்தகை.

○ **மகத்துவம்**

பெருமை

"வழிக் கொளும் அரிய மகத்துவம் குறித்து
மனத்தினில் அதிசயித்து" (17:86)

மகத், சத், தத் என்பன 'துவம்' சேர்ந்து மகத்துவம், சத்துவம், தத்துவம் என வழங்கப்பெறும்.

"சீதா சரிதம் மகத்" என்ற தொடர்க்காணலாம்.

'மகத்'-பெருமை என்ற பொருளில் வருவதனை

"...அணுத் திரளை எல்லாம்
மகத்துவமா(க)ப் பிரமாண்டம் ஆகச் செய்யும்
வல்லவா! நீ நினைந்த..." (தாயுமானவர்:தந்தை, தாய்)
என்னும் தொடரிடைக் காணலாம்.

○ **மசகம்**

கொசு என்ற பொருளது.

---

* தொல். சொல், 8:67

"பருதியை மசகம் மொய்க்க நினைத்தல் போல்" (30:5)
என்ற தொடர்க் காணலாம்
(பருதி-கதிரவன்; மசகம்-கொசு)

கொசுக் கடியினின்றும் தப்ப, அக்காலத்தவர் குறுங்கண் கொசுவலை பயன்படுத்தினர்

*"ஓவிய எழினி சூழ உடன் போக்கி" (சிலம்பு 6:169)
இத்தொடர் உரை விளக்கத்தில் "சித்திரப் பணி எழுதிய திரை; மசகாரி" (அரும்பத உரையாசிரியர்) என்பார்.

(மசகம் + அரி—கொசுப்பகைவன்—மசகாரி, மசகரி எனவும் குறிக்கப்பெறும்)

சீவக சிந்தாமணிப் பாடல் 838ன் உரையிலும் 'மசகாரியை வளைத்து', என்ற தொடர்க் காணலாம்.*

## ○ மடப்புத்தியின் கொழுந்து

கொழுந்து— தலைப்பக்கம் உள்ளது; முதன்மையானது.

"செறிநதிக் கரையின் அருகினில்
மடப் புத்தியின் கொழுந்து ஒருவனைக் கண்டேன்"
(38:31)

கொழுந்து-முதன்மை என்ற பொருளில்,

"நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினை"
(திருமந்திரம்:காப்பு)

"கொழுந்து ஓடிப் படர் கீர்த்தி" (கம்பன் 237)

"கொழுந்து போய் கொடி மதில் மிதிலை கூடிற்றே"
(கம்பன் 754)

"வேத முதற்கொழுந்தாகிய முதல்வன்" (வில்லி பாரதம்)
முதலிய தொடர்களில் வருவது காணலாம்.
கூர்மையான அறிவினால் மிக்கு விளங்குவாரை அரம்போல் கூர்மையர் என்று வள்ளுவம் பாராட்டும். (குறள். 997)

வடமொழி 'குசபுத்தி' என்னும். (குசை-தருப்பை)

அறிவு மழுங்கி, ஏவவும் செய்கலாது, தானும் தேறாது விளங்கும் அடு மடையர்களை 'உலக்கைக் கொழுந்து' என்பர்.
(முனைதேய்ந்து, பரந்து, மழுங்கிக் கிடப்பது).

இதனையே வடமொழியார் "முசல கிசலயம்" என்ப.

---

* டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் பதிப்புகள்

'முசல இசலயம்' என்று ஒரு நூல் இயற்றப் பெற்றதாக திரு. B R. புருஷோத்தம நாயுடு அவர்கள் தம் 'கட்டுரை விருந்து' நூலில் குறிப்பார்.

## ○ மரவினையாளர்

மரத்தச்சர் என்ற பொருளது.

''மர வினையாளர் தம்மால் வங்கம்
நாற்பது வைத்தானே'' (24:39)

மரவினைஞர் என்றும் குறிக்கப்பெறுவர்.

இவர் தம் சிறப்பை ''வைகல் எண்டேர் செய்யும் தச்சன் திங்கள் வலித்த கால் அன்னோனே''* எனவும் ''மரம் கொல் தச்சன்கைவல் சிறாஅர் மழுவுடைக் காட்டகத்து அற்றே''* எனவும் சங்க நூல் சிறப்பிக்கும்.

தகுமரம் தேர் கொட்பினர் தச்சர், என்பது குறிப்பு.

தாம் பயின்ற தொழிலில் நன்கு தேர்ந்தாரையே 'வினை யாளர்' என்பர்.

அவன் 'நல்ல வேலைக்காரன்' என்று நாம் வழக்கிடைக் கூறுவது போன்றது இது.

## ○ மனத்தளவு ஈந்து

''இரத்தினம், தனம், கோடிகம் மனத்தளவு ஈந்து'' (42:11)

இரந்துண் மாக்கட்கு எவ்வளவு ஈயினும், பெறும் அவர்கள் மன நிறைவு பெறுதல் இலர். இது உலக இயல்.

''அருத்தி வேதியற்கு ஆன்குலம் ஈந்து அவன்
கருத்தின் ஆசை கரையின்மை கண்டு'' (கம்பன் 5094)

இராமன் சிரித்தான் என்பான் கம்பன்.

அவா அறும் வகை,அளப்பரு நிதியம் அளித்தார் என்பதனைக் குறிப்பதே இத்தொடர் (42:11)

''இலம் என்னும் எவ்வம்'' பிறர் மாட்டு ''உரையாமை'' ஈந்தார் என்பது குறிப்பு.

இவ்வாறு இவரிடம் பொன் பெற்றார்,'' தம்மை அடுத்தவரை, அடுத்தவரும், தமை அடுத்தோர்க்கு அதிக செல்வம் அருள்வது ஆனார்'' (5:69) என்பார்.

---

* புறநானூறு 87 * புறநானூறு 206

இத்தகு ஈகைச் சிறப்பை,

> ''அங்கு அவர் கடைக்கண் பார்வை பெற்றவரை
> அடுத்தவர் எழுதலை முறைக்கும்
> வெங்கலி அகன்று வாழ்ந்து இனிது இருப்ப
> மிகு தனபதிகள் ஆக்கினரே'' (20:12)

என்பார்.

> ''அவா அற அளித்து...'' (34:66)

என்பதும் இப்பொருளது.

மனத்தளவு உயர்ந்த நயம் செறிந்த தொடர் இது.

## ○ மால்

விருப்பம், காதல், மயக்கம், பெருமை, திருமால் என்று பல பொருள் கொண்டது. 'விருப்பம்' என்ற பொருளில் இந்நூலில் பயின்றுள்ளமை காணலாம்.

> ''மாலொடு பலதும் கூட்டி வாரியே
> சிலபேர் உண்டார்'' (34:51)

> ''என் பேய் மனம் மால் கொண்டதே''
> (திரு நூற்றந்தாதி. 1)

என்று முன்னோரும் மொழிந்தார்.

## ○ மாலிகா—மாலிகை—மாலை

வடமொழி ''ஆ'' ஈறு தமிழில் ''ஐ'' ஈறு ஆகும்.
(கலா-கலை; வித்யா-வித்யை; சீதா-சீதை)

> ''சிவந்த மாணிக்க மாலிகையும்'' (34:63)

மாலிகா (மாலை ஆக) அணிந்தவள் மாலினி.

''சாதி நச்சு வாய் அகி மாலினி'' (அபிராமி அந்தாதி 50)

நச்சரவம் மாலையாகப் பூண்டாள்.

## ○ மாலீன்—மாலின்

''நவம் உறு மாலின் ஏவ நங்குரம் தூக்கி'' (24:52)

தமிழ் லெக்சிகன் (ப. 3177)ல் மாலுமி என்று குறித்து, மாலின் (MUALLIN) என்ற உருதுச் சொல்லையும், மாலுமி (MALIMI) என்ற தெலுங்குச் சொல்லையும் ஒப்புக்காட்டி இச்சொற்களுக்குக் கப்பல் ஓட்டி என்று பொருள் தந்து, பிங்கல நிகண்டையும் ஆதாரம் ஆகக்காட்டும்,

நாகூர் வட்டாரத்தில் இச்சொல் இன்றும் வழக்கில் இருக்கிறது.

முஸ்லிம்களில் சில குடும்பத்தைச் சேர்ந்தவர் மரைக்காயர் என்று அழைக்கப்படுவர். இது மரக்கலராயர் என்ற சொல்லின் சிதைவு ஆகும்.

வேறு சில குடும்பத்தினர் மாலிம், மாலிமார், மாலுமியார் என்று குறிப்பிடப்படுவர்.

இவர்கள் அம்மரக்கலங்களை ஓட்டிச் சென்றவரின் சந்ததியர் ஆவர்.

காயல்பட்டனம், கீழக்கரை போன்ற கடற்கரைப் பகுதிகளில் வாழும் முஸ்லிம்களிடையேயும், சில குடும்பத்தினரிடையே இப் பெயர்கள் இன்றும் வழங்கப்பெறுகின்றன.

## ○ முச்சகம்

மூன்று உலகங்கள் என்ற பொருளது. மூவுலகு, முச்சக்கரம் எனவும் பயிலப் பெறும்.

> ''முச்சகத்தினும் புகழ் உள்ளோர் இருந்தபின் முறையாய்''
> (32:21)

ஈகைச் சிறப்பால் புகழ் எய்தியவர் என்பது குறிப்பால் பெறப் பட்டது. "கொடுத்தார் எனப்படும் சொல் அடுக்கிய மூவுலகமும் கேட்கும்" அன்றே? (நாலடி. 100)

> ''முச்சக்கரமும் அளப்பதற்கு நீட்டிய கால்
> இச்சக்கரமே அளந்ததால்'' (பொருந்.ஈற்று வெண்பா)

## ○ மும்மாரி

ஒரு நாட்டினை, மக்களை வாழ்த்த முற்படுவார்.

''வாழ்க அந்தணர், வானவர்; ஆன்இனம் வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக'' என்றும்,

> ''வான் மழை வழாஅது பெய்க; மலி வளம் சுரக்க''

என்றும்,

> ''வான் வளம் சுரக்க; வயல் பெரிது நந்துக''

என்றும்,

> ''வையம் நீடுக; மாமழை மன்னுக''

என்றும், வாழ்த்தி அமைவர்.

மன்னுயிர் வாழவைக்கும் மாமழை போற்றியவர் இளங்கோ அடிகளே.

அன்னதன் பின்னர் இவ்வழக்கு "மாதம் மும்மாரி மழை பொழிக" என்று வாழ்த்தும் மரபாகி விட்டது.

மாதம் மும்மாரி என்ற தொடர் முதன் முதலில் மணி மேகலையிலேயே காணப்பெறுகிறது.

"வானம் மும்மாரி பொழிக; மன்னவன்
கோள்நிலை திரியாக் கோலோன் ஆகுக"
(மேகலை. 1.33, 34)

இந்நூலில்,

"பொது நெறி செலுத்தி திங்கள் மும்மாரி
பொழிதர மகிழ்ந்திருந்தனரே" (17:108)

"மாதம் மும்மாரி பெய்ய, மகிதலம் முழுதும் வாழ்க" (46:5) என்பன காணலாம் :

மாதம் மும்மாரி பெய்தது எதனால், பெய்யாது பொய்த் தமை எதனால் என விவேக சிந்தாமணி விளம்பும்.

"திங்கள் மும்மாரி பெய்க. திருஅறம் வளர்க. செங்கோல்
நன்கு இனிது அரசன் ஆள்க" (பக்கம். 1520)

என்று சீவகசிந்தாமணியின் இறுதியில் அமைந்துள்ள வாழ்த்துச் செய்யுள் கூறும்.

கம்பன் காவியத்தில் மிகைப் பாடலாக அமைந்துள்ளதனுள் ஒரு தொடர் வருமாறு

"...... ......
முறை செயும் அரசர், திங்கள் மும்மழை வாழி..."
(பக்கம். 1696)

## ○ முயிறு

முசிறு-ஒருவகை எறும்பு. முசிறு, முயிறு எனப்பயிலப் பெறும் (ச-ய போலி), கடித்தால் கடுப்பு வலி தருவது. மா, பலா மரங்களில் காணலாம்.

"வல்ல செல்வரின் பால் சூழும் கொடியர் போல் முசிறு வைகும்" (9:34)

"பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை" (நற். 180)
(பாகல்-பலா)

## ○ மேல்வரி

"... அவணில் வருக என வரிந்து
மடித்து அதன் மேல்வரி தீட்டி" (31:59)

"விரிந்திட எழுதி மடித்து முத்திரையும்
பதித்து மேல் வரிகளும் பொறித்து" (33:30)

இம்மேல்வரி என்ற தொடர், இக்காலத்து நாம் முகவரி என்று வழங்குவதனையே குறிக்கிறது.

அகராதிகளில் காண்பரிய இது இவரது படைத்து மொழி கிளவி போலும்.

## ○ வக்கிர தந்தம்

(வக்கிரம்-கோணல்; தந்தம்-பல்)
"மதகரி மருப்பு வீக்கிய சடையும்
வக்ர தந்தமும் புகை விழியும்
அதிக மை இருள்மேனியும் உள பூதம்" (34:80)

இதன் முன்னர் பூத, பைசாசங்கள் பற்றிக் குறிப்பிடும் போது,
"கரிகள் தூங்கிய வக்கிர தந்தமும், புகைக் கண்ணும்
இருளும் மேனியும்..." (15:24)
என்றமை காணலாம்.

கம்பன் கிங்கரர் தோற்றம் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

"யானையும், பிடியும், வாரி இடும் பில வாயர்; ஈன்ற
கூனல் வெம்பிறையின் தோன்றும் எயிற்றினர்"
(கம்பன். 5495)
என்று கூறுவான்.

உடலில் எண் கோணல் இருந்த ஒருவன் 'அஷ்டா வக்கிரன்' எனப்பட்டான் (புராண மரபு).

## ○ வள்ளியம்

"வள்ளியம் என உள் உருகியே வணங்க" (38:4)

இத்தொடரில் வள்ளியம் மெழுகு என்ற பொருளில் வழங்கி வந்துள்ளது.

இவ்வாறான பொருளில், தைலவர்க்க நூலில் வருவதனைக் காணலாம்.

"மனம் உருகுவதனைத் தீயில் மெழுகு உருகுவதுபோல்" என்று குறிப்பது இலக்கிய மரபு.

"அனலிடை மெழுகு என"

"எரியின் இழுது (நெய்) ஆவர் என்க" (நன்னெறி. 20) என்று அமைந்துள்ள தொடர்கள் ஒப்பு நோக்கத் தக்கன.

○ **வள்ளியோர்**

"வள்ளியோர் துதிக்கும் ஏந்தல்" (45:5)

வள்ளன்மை உடையாரை வள்ளியோர் வள்ளியார் என்று குறிப்பர் (ஆ,ஓ-ஆதல் செய்யுளுக்கு உரித்து)

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி" (புறம். 47) என்ற தொடர் இது விளக்கும்.

ஒரு திசை ஒருவனை உள்ளி நால்திசை பலரும் வருவர் பரிசில் மாக்கள் என்று புறம் புகலும் (121).

அத்தகைய வள்ளியோரும் வாழ்த்துகின்ற சிறப்பினை உடையார் சுலைமான் (அலை) அவர்கள், என்பது இத்தொடர்ப் பொருள். (45:5)

இவ்வள்ளியோர் உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈவர் என்பான் கம்பன் (15)

தண்டா ஈகைத் தகை பேராளன் ஒருவன் இயல்பு "சதக்கா தன்மைப் படலம்" கூறியது கண்டோம். (17,18)

பிறர்க்கென, தன் வருபொருள் ஆர்த்தும் ஆர்வினர் உண்மையால் இவ்வுலகம் உண்டால் என்று நலம் பாராட்டும் புறம் (182)

**வாகு**

"வாகு அது ஆகிய வுஹுபுக் என்றிடும் மரத்து ஆசா" (44:3)

இவ்விடத்து அழகு, ஒழுங்கு என்ற பொருளில் பயிலப் பட்டுள்ளது.

○ **விடை வாங்கி**

"மலக்குகட்கு உரைத்து அவர் விடை வாங்கி வான் அகத்தில்" (42:9)

அன்பிற்குரியாரைக் கண்டு, அளவளாவி, பின் பிரிய நேரிடும் போது, "நன்றி, சென்று வரவா?" என வினவ அவர், "செய்க, மீட்டும் காண்போம்" என்பார்.

பிரிவார், "சரி, விடை வாங்கிக் கொள்கிறேன், பின்னால் காண்போம்" என்றலும் உண்டு.

எனவே இச்சொல் வழக்காற்றில் உள்ளமை அறியலாம்.

''விடை வாங்கி'' என்பதனை, உவப்பத்தலைக் கூடி பிரிய நேரிடும்போது அரிதில் விடுபட்டு வருவதனைக் குறிக்கும் என்று கொள்ளலும் ஆம் (விடு+ஐ—விடை)

''பிரியா விடை'' என்பதூஉம் இது.

''ஊர் வந்து சேர்ந்தேன் என்றன் உளம் வந்து சேரக்காணேன்
ஆர் வந்து சொலினும் கேளேன். அதனை (உள்ளம்) இங்கு
அனுப்புவாயே'' (தனிப்பாடல்)

என்று ஒரு புலவர் குறிப்பிட்டார் என்ப.

## ○ வியவர்

வியம்-ஏவல்; வியவர்-பணிமக்கள்.
வியங்கொண்டார்-ஏவல் மேற்கொண்டார் (பணி மக்கள்).
'வியங்கோள்' என்பது இலக்கணம்.

''முனம் அழைத்து வந்திடுக என வியவர்பால் மொழிய''
(27:16)

''ஏவல் வியங்கொண்டு இளையரோடு எழுதரும்
(ப.பத்து. 54)

''வினை கடை காட்ட வியங்கொண்டான்'' (சிலம்பு. 9:78)
என்பன காணலாம்.

## ○ வெள்ளறிவினார்

''வெள்ளறிவினர்கள் சிலர் அதை அருந்தி...'' (38:37)
இங்கு வெள்ளறிவினார் என்பது அடுமடையர்களைக்குறிக்கும்.
வெள்ளறிவு-அறிவீனம்.

இத்தகு வெள்ளறிவினார் 'உளர்' என்னும் மாத்திரையர். 'களர்' அனையர். நன்றி பயவார்.

ஆனால், நீடு நினைந்து, கன்றிய மனத்தராய், கரவு பொதுள் உளத்தராய்ப் பிறர் கேடு சூழ் பேதைமை இவர்பால் மேவாது. எனவே தான்,

''வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை''
எனும் மொழி எழுந்தது போலும்.

வெண்மை—அறியாமை(பெருங்கதை. 1:56:16).பரிமேலழகரும் இப்பொருளே தருவார் (குறள் 503ன் உரை)

வெண்மொழி—பயனற்ற சொற்கள் (திரிகடுகம் 32)

"... (வரைவில்) மகளிர் தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறிவினார்" (நாலடி 375)

என்றமை காணலாம்.

## ○ வேசையர்—வேசியர்

பூரியர்கள் ஆழும் அளறு எனக் குறிக்கப் பெறும் இவர்கள் பற்றி அறியார் யாரே?

பலரும் அறிந்த சொல்; தமிழகத்துப் பரவலாக இருந்த ஒழுக்கக்கேடு.

இந்நூலுள் 'ஊன் ஓம்பும்' கொட்பிற்காகத் தம் 'ஊன் விற்கும்' இவர்களைப்பற்றிக் குறிப்பிடும் இடங்களும் உள. அவ்விடங்களில் இச்சொல் உவமை விளக்கமாக வந்தனவே அன்றி வேறு இன்று [2:8, 16; 16:40; 24:57 (கணிகையர்),38:21 (விலை மடவியர்) ]

மக்களுள் கடைநிலையர் ஆகலின் இவர்தம் உறவு கடியற்பாலது என இலக்கியங்கள் நவிலும்.

"அறனும் அன்று; ஆக்கமும் தேய்ம்"

வழங்கத் தவாஅ வளம் சான்றது சாம் நகர். நிலம் நிலக் கிடந்த நிதியத்தர்; செருக்குறு பொருளர் அந்நகர் வாழ்நர்: எனினும் அறந் துஞ்சு நெஞ்சத்தர் ஆகலின் அவரிடை பரத்தமை இல்லை. அலவல் பெண்டிர் கழிகாமுகர் இலர்.

இவ்வாறு குறிப்பது, இந்நூற்கு சாம் நகர்க்கு அமைந்த ஒரு தனிச்சிறப்பே ஆகும்.

## ○○○ ஓர் நிலை

இவ்வாறான நயம் தெரி சொற்கள் எண்ணில அமைந்துள இக்காப்பியத்துள் பாட்டுடைத் தலைவி பல்கீசின் குணநலச் சிறப்பைப் படிப்படியாக உயர்த்திக் கொண்டே போகும் தொடர்களைக் குறிப்பிட்டு, இப்பகுதியை நிறைவிப்போம்.

| | |
|---|---|
| கற்பு மயில் | (30:38) |
| கற்பு வடிவது | (30:82) |
| அலர் நிகர் குணங்கள் | (30:82) |
| நிறைந்த கற்பினுக்கு உயிர்ப்பொருள் | (31:30) |
| கற்புக்கு ஓர் நிலை | (32:82) |

# 13. புலவரின் நன்றி உரை

பெரும்பாலான தமிழ்ப் புலவர்கள் கற்றல், கற்பித்தல் அன்றி, பிற தொழில்கள் அறியாதவர்களாகவே இருந்தனர்.

பொன்வாணிகம், அறுவை வாணிகம், கணிதம், மருத்துவம், கூலவாணிகம், வேளாண்மை முதலிய தொழில்களில் ஈடுபட்டார் மிகச் சிலரே.

வெகுபலர், செவிக்கு உணவு இல்லாதபோது சிறிது வயிற்றுக்கு ஈபவர். எனவே அவர்கள் மெலிந்த உடலும் (''மல் இவர் தோள் மாக்காயன்'' விதி விலக்கு), மெலியா நெஞ்சுரமும் படைத்த வராகவே இருந்தனர்.

அரசர்கள் இடும் விருந்து உண்டு, தன் உடல் வியர்வை அறிந்த தாகவும், செய் தொழிலால் அது எழவில்லை என்றும் ஒரு புலவன் குறிப்பிட்டுள்ளான்.

எனினும் உயிர் வாழவும், 'இரும்பேர் ஒக்கல்' காக்கும் கடமை கொண்டதாலும் பல அரசர்களை, வள்ளல்களை நாடிச் செலும் நிலை அவர்களுக்கு உண்டானது.

பழுமரம் நாடிப் பறவை இனம் சேறல் போலப் புரவலர்களை நாடிச் சென்றனர்.

பாண் புறந்தருநர் வளமனைகள் 'யாணர்ப்பழுமரம் புள் இமிழ்ந்தன்ன ஊணொலி அரவம்' ஓவாது விளங்கின.

அறத்தாறு நவிலும் அந்தண் மரபின் அப்புரவலர்கள் நல்கிய வளன் பெற்று, பெற்றது கொண்டு சுற்றம் அருத்தினர்.

பெற்ற பெருவளம் பெறாரும் பெற, அவர்களை ஆற்றுப் படுத்தினர். இவ்வகையில் அமைந்தனவே பத்துப் பாட்டில் உள்ள ஐந்து ஆற்றுப் படை நூல்களும்.

புறநானூற்றில் பாண் ஆற்றுப்படைப் பாடல்கள் 5ம், விறலி ஆற்றுப்படைப் பாடல்கள் 4ம், புலவர் ஆற்றுப் படைப் பாடல்கள் 2ம் உள்ளமை காணலாம்.

புலவர்களில் சிலர் பாணர் வகுப்பினர் ஆகவும் இருந்தனர். அவர் தம் துணைவியார் ஆடுகள மகளிர் ஆகவும் இருந்தனர்.

இளையோரும், வளையோரும் பாணனும், பாடினியும், புரவலர்ப் பெருமனைக் குழீஇ, தம் கலைத்திறன் காட்டி, காணமும், மணியும், கலையும் களிறும், பரிசில் ஆகப் பெற்று மீண்டனர்.

ஓரிடத்து நிலையான வாழ்வினராக அமையாத இப்பாணர் கால் பதியாத் தமிழகப் பகுதியே இல்லை எனலாம்.

ஆறலை கள்வரும், இவர் இசைக்கலை கேட்டு படைவிடுவர்.

கன்று புணர் பிடிய குன்றுபல நீந்தி புரவலர்ச் சேர்ந்தனர்.

விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலர் ஆகவே விளங்கினர்.

பெறும் பரிசிலாகப் பெருங்குவை கொள்ளினும் 'வல்லாங்கு வாழும்' எண்ணம் இல்லாதவர் ஆகலின், அடுத்தடுத்துப் பல புரவலர் காணும் நிலை அவர்க்கு உண்டானது.

வாழ்தல் வேண்டிப் பொய் கூறாத, பீடில் மன்னரைப் பாடாத, செய்யா கூறிக் கிளவாத தன்மையர் இக்கலைஞர்கள், புலவர்கள் (சங்க கால மரபு இது).

கால மாறுதலினால், இம்மரபும் பின்னர் மாறியது. "கல்லாத ஒருவனை நான் கற்றாய் என்றேன்" என்ப போல், பொய்பொதுள் புகழ்ச்சிப் பாடல்கள் பாடி, மகிழ்வித்து "கும்பிக்கை இரைதேடும் கொடுநிலை" சிலர் பெறாமல் இல்லை.

ஆனால், நயனறி நெஞ்சின் நற்றமிழாளர், தம்மைப் புரக்கும் வேந்தன், பொல்லாங்கு புரியின், இடிக்கும் கேளிராய் இருந்து, திருத்தினர் என்றும் அறிகிறோம்.

இத்தகைய அறிஞர் பெருமக்களால் வாழ்த்தப் பெறுதலையே வாழ்வின் பேறாகக் கருதிய வயவான் வேந்தர் பலர்.

தமக்கு உறும் இழிவு இது என்பதனைச் சுட்டுமாப்போல் ''புலவர் பாடாது வரைக என் நிலவரை'' என்றனர்.

''தன் உயிர் புகழ்க்கு விற்கும் புரவலர் ஒத்த செம்மாப்பு உடையேம் யாம்'' என்று புலவன் ஒருவன் குறிப்பிட்டுள்ளான்.

புறந்தரும் புரவலனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நூல்கள் இயற்றும் மரபும் உண்டானது.

இவ்வகையில் பல்கின கோவை, உலா, கலம்பகம் போன்ற நூல்கள்.

இறைவன் திரு உலாவைப் பற்றி எழுந்த முதல் நூல் ''திருக் கைலாய ஞான உலா.'' பின்னர் அரசர் உலாப் போதருதலையும் இவ்வகைப் படுத்தி நூல் அமைக்கத் தொடங்கினர் என்பதும் கண்டோம்.

வள்ளல் வளநாட்டையும் அவன் முன்னோர் சிறப்பையும் அவன் அரும் பெருங் குணங்களையும் விளக்கும் பாடல்கள் இடை இடை செறித்து தகுநூல்கள் பல அமைத்தனர்.

உவரா ஈகை உயர் பேராளர் அளிக்க, உவட்டெறிய உண்ட சோறு, ஒப்பில்லாத பல நூல்கள் அமையத் துணை நின்றது.

பிறப்பிற் குன்றா, சிறப்பிற் குன்றாப் பெருந்தகையாளரான வள்ளல்கள் புலவர்களை ஆதரித்து, இலக்கண இலக்கிய நூல்கள் எழுதத் தூண்டினர்.

''சோற்றுச் செருக்கு அல்லவோ செந்தமிழ் ஒருமூன்றும் தந்ததே'' என்ப போல் புலவர்களுக்குக் குடும்பக் கவலையே எழாதவாறு பெருஞ்செல்வம் பரிந்தளித்துக் காப்பாற்றினர்.

பாரகாவியம் படைத்த கம்பனை ஆதரித்தவன் வெண்ணைச் சடையன். வில்லிபுத்தூராரை ஆதரித்தவன் வக்கபாகை நரபதி ஆட்கொண்டான். புகழேந்தியாரைப் போற்றியவன் முரணை நகர்ச் சந்திரன் சுவர்க்கி. அடியார்க்கு நல்லாரைப் புரந்தவன் பொப்பண காங்கேயன். பவணந்தியார்ப் பாராட்டியவன் சீயகங்கன்.

இம்மரபிலேயே இந்த இராஜநாயகக் காப்பிய நூல் ஆக்கிய வண்ணக் களஞ்சியப் புலவர்க்கு ''இருநிதி மழை பொழிந்தவன்'' அகுமது நயினான் தந்த அப்துல் காதர் என்பார்.

2238 பாடல்கள் கொண்ட இந்நூலில் இவர் புகழ் 19 பாடல் களில் கூறப்பெற்றுள்ளது.

புலவர் தொடர்வழி புகழ் மொழி காணலாம்.

○ மடவியர் நீர் அள்ளும் குடத்தில் வளை மணி ஈனும்; கதிர் விரிக்கும். இத்தகைய வளம் கொண்டது கிழக்கரை.

இக்கிழக்கரையை அரங்கேற்று தலம் ஆகக் கொண்டு மதுரை வாழ் மீசல் வண்ணக் களஞ்சியம் என்னும் யான் மவுலவ் உற்றேன்.

யான் கூறும் இப்புராதன சுலைமான் நபி புகழ்க்காக எனக்கு இருநிதி மழை பொழிந்தவன் அப்துல் காதிர் என்னும் வள்ளல் ஆவான்.

வகுதைப் பதியின் புகழ் மேம்படப் பிறந்தவன். புலவர் நாவில் பொருந்திய புகழான். தராதரம் (மலை) போன்ற புயத்தனும் அழகனும் ஆகிய அகுமது நயினான் செய்தவப் பயன் ஆகச் சென்மித்தவன். 1:26,27

(மடவியர் -மகளிர்; வளை-சங்கு; புராதனம்-பழமை; இருநிதி-பெருந்தொகை)

○ அலைகள் கொழித்துக் கரை ஒதுக்கிய முத்துகள் கதிர் விரிக்கும். இருள் திணிந்தது போன்ற சோலைகள் சூழ்ந்தது வகுதைப்பதி ஆங்கு சோலைக்குயில்கள் இசை பயிலுதல், அப்துல் காதிர் அருளிய பொருள் வளம்பெற்று, புலவர்கள் ''அதிபதி! தரும குணபதி, வகுதை ஆள்பதி, நிதிபதி, அகுமது நயினான் உதவு துரை! நின் புகழ், மதி, கதிர் உலகு உள்ளளவும், வாழ்வதாக'', என்று கவியில் வாழ்த்துவதுபோல் அமையும். 2:36

○ கற்பக மரமே, மனித உருத்தாங்கி மண் வந்தது போன்றவன் அப்துல் காதிர். முகம்மது நபி (ஸல்) அவர்களைத் தன் இதயமாம் ஆதனத்து இருத்திப் போற்றியவன். அவனது வகுதைப் பதிபோல் சிறப்புடையது சாம் நகர். 3:19

○ அகுமது நயினான் செய் தவம் ஒருருக் கொண்டு அவன் மகவாய் உதித்தது. ஈன்றதந்தையின் பெரும்புகழ்மேவினான். இவன் புகழ் புவனம் முழுவதும் தழைத்தது. சுலைமான் நபி புகழ் மனத்து இருத்திப் போற்றியவன். அவன் மன வளம் போல் சுலைமான் நபி நாட்கு நாள் வளம் பெற்று வளர்ந்தார். 5:76

○ தொடர் கலியால் துன்புற்றார், சங்க நிதி,பதும நிதி இரண்டுக் நரர் உருமேவின என்ப போல் அமைந்த, பெருநிதி ஆர்த்தும் உபகர உத்தமன் அப்துல் காதிர் அடுத்து, ''தஞ்சம்'' என்பர். அவர் வறுமைத் தொடக்கறுத்து,சதாதினம் சம்பத்து பெருக, நெஞ்சகம் மகிழ்வது போல் புறாக்கள், தம் சந்ததி யோடு அளவிலா மகிழ்ச்சி கூர்ந்தன. 6:29

○ மனுக்குலத் தலைவன்; அரும் புகழான்; வளர்மதியம் போல் வளர் புகழான், அப்துல் காதிர் அடைந்து, 'அஞ்சல்' என்று அவனால் அருளப் பெற்று, மகிழ்பவர் போல், ''மயின் அன்னாளை நினக்கே, மணம் முடிப்போம்'' என்று மோதீன் கூறக் கேட்ட சுலுத்தான் மகன் மனம் மகிழ்ந்தான். 9:60

○ அப்துல் காதிர், அருவிபோல் ஒழுகு மதநீர்ப் பெருக்கு அறாத கட களிறு ஊர்பவன்; சந்திரவதனன்; மறை நெறி மறவாத வன்; சுலைமான் நபி போன்ற நபிமார்கள் காட்டிய வழி நடப்பவன். 10:24

○ கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டு மாரி போன்றவன்; அவன் அருள் மேவிய ஊர் செல்வ வளங்களால் செழித்து, மேம் படும். 12:79

○ தவப்பொருள் அனைய முகம்மது நயினார் (ஸல்) அவர்களை நெஞ்சில் இருத்தி நவம் (புதுமை) பட வாழ்பவன். 14:18

○ அப்துல் காதிர் இதையாசனப் பொருள் ஆக விளங்கும் மகுமூது இருபதமே மனுக்குலத்திற்கு இகபரகதி அளிக்கும். அவன் வாழ் வகுதை நகர், மணி துணிந்தன்ன மா இரும்பரப் பின் தடங்கள் சூழ்ந்தது. நீர்ப் பரப்பு அற மலர்ந்த, தாமரை மலர்களில் வீற்றிருக்கும் அன்னப் பறவைகள், விண் தவழ் வெண்மதி பல் உருமேவி தடங்களில் பொருந்தின போலாம். 20:19

○ அப்துல் காதிர் மிக்க அழகுடையான். சுந்தரம் குலவும் பெண் கள் கூட அவன் மீது அடங்காத மோகம் கொள்வர். அவன் அருள் பெற்ற புலவர்கள், நவநிதியும், உப்பளங்களும் தமக்கே உரியனவாய்ப்பெற்று வாட்டம் துடைத்து மகிழ்வர். 29:60

○ பதி எழு அறியாப் பழங்குடியினர் வாழ் வளத்தது வகுதை அம்பதி. அப்துல் காதிர் அதன் அதிபதி. அவன் புலவர்க்கு வாரி வழங்கும் பூவும், மணியும், பொன்னும், பிறவும் ஒளி மிக்கன, கணக்கில. 30:86

- இருள்படப் பொதுளிய, பருத்த மரங்கள் நிறைந்த, சோலை சூழ்ந்தது, வகுதையம்பதி. பறிப்பாரற்றுக் கனிகள், கிளையிலேயே முதிர்ந்து, காம்பறுந்து கீழ் விழும். இத்தகைய வளப்பெரும் பதியின் அதிபதி அப்துல் காதிர். 34:75

- முகில்கள், தேடிய புகழ்சேர் அப்துல் காதிர் கரம் போல் வழாது வழங்கத் தொடங்கின. (36:62)

- இந்நூலில் அப்துல் காதிர் சிறப்பைப் பற்றிக் கூறும்பொழுது அவர் இதயம் தூய்மையானது; மாசு மறுவற்றது; நபிமார்கள் சொல்லும் செயலும் பதிந்து கிடப்பது, என்றெல்லாம் புகழும் பாடல்களே அதிகம். 37:30

- அறப்பயனே உரு மேவியது போன்ற, அப்துல் காதிர் முக தெரிசனம் கண்டவர், கலி அகல்வர்; முழுமையான மகிழ்ச்சி பெறுவர். 38:45

- முழு நிலவின் ஒளிபோல உலகம் பரவிய, பலர் விரும்பு புகழாளன் அப்துல் காதிர். 41:19

- பல்வளம் துறுமிய பதி வகுதை. இதன் அதிபதி மணம் குலாவிய புயன், நயன் அறி நெஞ்சின், அப்துல் காதிர் ஆவான். 44:17

- நூல் ஈற்றில் அமைந்த பாடல் வாழ்த்தாக அமைந்துள்ளது.
அப்துல் காதிர் வாழ்க! அவன் குலத்தோர் வாழ்க! அவன் அருள் மழைபொழிய, அதனால் பூத்துப் பொலியும் இவ் இலக்கிய நூல் வாழ்க!
என்று நிறைவு பெறுகிறது. 46:16

# 14. தொகுப்புரை

மேலெழுந்தவாரியாகப் பார்ட்போர்க்கு, எறும்பு, புறா வானம்பாடி, பசு, ஜின், பேய், பிசாசு ஆகியவற்றின் குட்டிக்கதை களின் தொகுப்பாக அல்லவா இக்காப்பியம் அமைந்து இருக்கிறது என்று எண்ணத் தோன்றும்.

சிறந்த அறிவாளியும், புலவரும், உலகஞானமும், சமய ஈடு பாடும் உள்ளவரான வண்ணக்களஞ்சியப் புலவர், இத்தகைய குட்டிக்கதைகளை, குழந்தைகளை மகிழ்விப்பதற்காக கூறு வதைப் போல இக்காப்பியத்தைப் பாடினார் என்று சொல்லிவிட முடியாது. ஆனால் இக்காப்பியத்திலிருந்து விழுப்பொருள்களாகப் புலவர் காட்ட முயன்றவைதாம் எவை? நாம் பார்ப்பன தாம் எவை? என்று சற்று சிந்திக்க வேண்டும்.

ஒரு முஸ்லிம் என்ற முறையில் சுலைமான் நபி அவர்களை இறைவனின் திருத்தூதர் என்று நம்புவதில் வியப்பு இல்லை. அந்தச் சுலைமான் நபி, இறைவனின் திருத்தூதராக இருந்த தோடன்றி, மாபெரும் அரசின் அதிபதியாகவும், அசாதாரணமான சக்திகளைப் பெற்றவராகவும், இருந்தது பற்றிப் புலவர் பெரு மானார் பெருமை கொள்வதிலும் வியப்பில்லை.

இவற்றின் காரணம் ஆக சுலைமான் நபி அவர்களைப்பற்றி அவர் காப்பியம் பாடப்போந்தார் என்று சொல்வது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

எனினும் தன் காப்பியத்தினூடே பல்வேறு விழுப்பொருள் களை அவர் செவி அறிவுறூஉ ஆகக் காட்டி இருப்பது தான் காப்பியம் என்ற முறையில், அவருடைய படைப்புக்கும் பெருமை தருவதாகும்.

முதலில் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய உண்மை என்ன என்றால், குறைவற்றவன் (பரிபூரணன்) இறைவன்ஒருவனே தவிர, அவனால் படைக்கப் பெற்ற எவர்க்கும், எவைக்கும் ஏதாவது ஒரு குறை இருக்கத்தான் செய்யும். அதனை எடுத்துக்காட்டுவது போல் அமைவது, சுலைமான் நபி அவர்கள் இறைவனின் திருத் தூதர் ஆக இருந்த போதிலும் அகந்தை கொண்டதன் காரணம் ஆகக் குறைவுபட்டார் என்று கூறுவதாகும்.

இக்குறையோ சாதாரணம் ஆனது அன்று. எந்த ஒரு மனிதனிடத்தினில் காணப்படும், எந்த ஒரு திறமையும் செல்வமும், நலனும், இறைவனுடைய அருள் கொடையே அன்றி அவனுடைய தனி முயல்வினால் தேடிக் கொண்டது அன்று.

ஒருவன் எத்தகு பெருமுயற்சி மேற்கொள்ளினும் அம் முயற்சியின் முடிவு, இறைவனையே சார்ந்தது.

எனவேதான் எவனும் அகங்காரம் கொள்ளல் கூடாது என்று நூலோர் நுவல்வர்.

இங்கோ சுலைமான் நபி அவர்களுக்குக் கிடைத்த அரசும், ஆட்சியும், இறைவன் தான் கொடுப்பதாகவே சொல்லிக் கொடுத்தவை.

அதன் காரணம் ஆக தம்முடைய முயற்சியில் அவை கிடைத்தன என சுலைமான் நபி அவர்கள் எண்ணிப் பார்க்கவும் இடம் இல்லை.

அப்படி இருந்தும், அவர் அகங்காரம் கொள்வாரே ஆனால், அது ஒரு சிறு குறை அன்று; மாபெரும் குறையே ஆகும்.

தான் படைத்த ஒருவனோ, ஒன்றோ, இவ்வுண்மையை மறந்து தவறு செய்வான், செய்யும் ஆனால் அவனையோ, அதனையோ தண்டிப்பது இறைவனுடைய இயற்கை மாத்திரம் அன்று, கடமையும் ஆகின்றது.

அவ்வாறே இங்கும் சுலைமான் நபி அவர்கள் தண்டிக்கப் பெற்றார் என்று காண்கிறோம்.

தவறு இழைத்தவனை இப்படி இறைவன் தண்டிப்பது எதற்காக? அவனுடைய குறைகளை நீக்கி அவனை நேர்வழிப் படுத்துவதற்காகத்தான், புடம் போடுவதால்பொன்னின் மாசுகள் போவது போல.

இப்படி இறைவன் தண்டிக்கும்பொழுது, தவறு இழைத்தவன் தன்னுடைய தவற்றை உணர்ந்து, இறைவனிடம் மன்னிப்புக் கேட்கின்றான். அப்பொழுது இறைவன் குற்றம் செய்தவனைத் தண்டிப்பதனைத் தன் கடமை ஆக்கிக் கொண்டது போல, குற்றத்தை உணர்ந்து, மன்னிப்புக் கேட்பவனை, மன்னிப்பதனை தன் கடமை ஆகக் கொண்டுள்ளான்.

அவ்வடிப்படையில்தான் சுலைமான் நபி தன் தவற்றினை உணர்ந்து இறைவனை இறைஞ்சுகிறார்கள்.

அதனை ஏற்றுக்கொண்ட இறைவன், அவர்களை முந்தைய நிலைக்குக் கொணர்ந்தது மாத்திரம் அன்று, புடம்போட்ட பொன் மாசு அகன்ற பின் புத்தொளிபெறுமாப் போலே அவர்கள் எழில் மும்மடங்கு பொலிந்தது என்று புலவர் பாடுவார்.

இங்கு புலவர் பிறிதொரு சிறப்பையும் காட்டுகிறார். தன் பிழை பொறுத்து அருளுமாறு சுலைமான்நபி அவர்கள் இறைஞ்சும் பொழுது, இறைவனுடைய கல்யாண குணங்களைக் குறிப்பிடும் பெயர்களைக் கூறி அழைத்தே இறைஞ்சுகிறார்.

அப்பெயர்களுள் சில நன்மை செய்வதற்குப் பதிலாகத் தீமை செய்பவன் என்று குறிப்பது போல் தோன்றினும், குற்றம் செய்த ஒருவனைத் தண்டிப்பது, அவனை நேர்வழிப்படுத்துவதற்கு ஆகும் என்பதுபோலவே, அத்தகுபெயர்களும் தன்படைப்புகளைநேர்வழிப் படுத்தும் இறைவனுடைய தன்மையை உணர்த்துவனவே ஆகும்.

இறைவனுடைய பண்புகள் அனைத்திலும் மிக உயர்ந்த பண்பு, தன்னால் எதையும் செய்து கொள்ளமுடியாத சிசுவி னிடத்து அதன் தாய் எத்துணைப் பரிவும் கரிசனமும் காட்டு வாளோ அதனையும் விட அதிகமாகப் பரிவும் கரிசனமும் தன் படைப்புகளிடத்துக் காட்டுவதுதான்.

இறைவன் அருளைக் குறிக்கும் 'ரஹ்மத்' என்னும் அரபுச் சொல்லே இதனை உணர்த்தி நிற்கும்.

ஒரு தாய் தன் சேயினிடத்துக் காட்டும் இத்தகைய பரிவை ஒரு சிறு நிகழ்ச்சியின் மூலம் புலவர் காட்டி விடுகிறார்.

பைத்துல் முக்கத்திசு பள்ளிவாயில் கட்ட சுலைமான் நபி அவர்கள் விரும்பினார். பளிங்குக் கற்கள் தேவைப்படுவது அறிந் தார்; சகுறுஜின் அழைத்தார்; தன் திட்டம் கூறினார்.

சகுருஜின் பளிங்குக் கற்களை வெட்ட, வைரத்துண்டுகள் பல வேண்டும் எனவும், அவை பெறவும் வழி கூறியது.

அதன் குறிப்புப்படி கருடன் அன்புடன் இருத்தும் குடம்பையில் பார்ப்புகள் கண்டன சில ஜின்கள். தாய்ப் பறவை அகன்றபின், அப்பார்ப்புகள் எடுத்து வந்து ஒரு பளிங்குப் பேழையுள் அடர்தரப் பூட்டின. ஒரு மலை முழைஞ்சில் வைத்தன.

மாலை கூடு நாடிய பறவை, தன் பார்ப்புகள் காணாது பல இடங்களிலும் துருவித்தேடிற்று. முழைஞ்சில் பேழை கண்டது. அதன்மீது அமர்ந்து கால் உகிரால் பதிவுற வகிர்ந்தது. பெட்டி திறக்க வழியின்மையால் கலங்கியது; மோந்தது; நீத்தது; அகன்றது; வைரம் பல கிடந்து இலங்கு வரை சார்ந்தது. 'ஆசினி வளைவாயால்' எடுத்து வந்தது; பெட்டிமீது அமர்ந்து, வகிர்ந்து பார்ப்புகள் விடுவித்தது; எடுத்தது; அணைத்தது; தன் குடம்பை நாடியது; என்ப எல்லாம் கதைச் சுருக்கத்தில் நாம் கண்டவையே.

தம் குஞ்சுகள் மாட்டு எத்துணைப் பரிவும் கரிசனமும் கொண்டு பறவை விளங்கியது என்பதனைப் பார்க்கும் பொழுது தான் மேற்காட்டிய உண்மையை உணர்ந்து கொள்ளமுடியும்.

நூல் படிக்கும் வேகத்தில் நம் கவனத்திலிருந்து இந்நிகழ்ச்சி தப்பிப்போதலும் கூடும். ஏன் எனில், காப்பியப் பரப்பினுடன் ஒப்பிடும்போது இது மிகவும் சிறியது. ஆனால் சிந்தித்துப் பார்த்தாலோ படைப்பின் ரகசியத்தை உணர்த்தும் அடிப்படை உண்மையாக இது அமைகிறது.

இன்னொரு விழுப்பொருளாகப் புலவர் பெருமான்காட்டுவது, இறைவன் ஆணைப்படி ஜிப்ரீல் (அலை) அவர்கள் சுலைமான் நபியிடம் வந்து "உமக்கு அறிவு வேண்டுமா? அரசு வேண்டுமா?" என்று கேட்டதும், அதற்குச் சுலைமான்நபி அவர்கள் "அறிவே வேண்டும்," என்று சொன்னதும் ஆகும்.

இதன் பலன் யாது எனின் அறிவோடு மாபெரும் அரசும் கிடைத்தது ஆகும்.

காரணம் யாது எனில், அறிவு கிடைத்தால் அரசைப் பெற முடியும்; அரசு பெற்றால் மாத்திரமே அறிவைப் பெற்றுவிட முடியாது.

உண்மையில் இறைவனால் அருளப்பெற்ற அறிவு இருக்கும் வரை அடைய முடியாதது எதுவும் இல்லை, என்று சொல்லி விடலாம்.

புலவர் உணர்த்தும் மற்றொரு விழுப்பொருள் என்ன என்றால், சுலைமான் நபி அவர்கள் ஆணைப்படி நடக்க பறவை, விலங்கு ஜின் முதலன யாவையும் இறைவன் அனுப்பி வைக்கிறான்.

அவ்விறைவன் ஆணைக்கு அடிபணிந்து அவை சுலைமான் நபி அவர்கட்கு ஏவல்செய்து ஒழுகின; எனினும் அவை சுலைமான் நபி அவர்களுக்கு அறிவுரை பகர்ந்தன. அவற்றை நபி அவர்கள் மகிழ்ச்சி உடனும், நன்றியுடனும் ஏற்றுக் கொள்கிறார்.

இதற்கு ஒப்பவே, எறும்பு ஒன்று மழைக்காக இறைவனைப் பிரார்த்திக்கக் கண்டு வியப்பு கொண்ட சுலைமான் நபி அவர்கள் இனி தாம் பிரார்த்தனை செய்யவேண்டிய அவசியம் இல்லை என்று செயல் தவிர்ந்தார். இந்நிகழ்ச்சியும் இதனோடு சேர்த்து எண்ணத்தக்கதே.

சிறிய பெண் எறும்பு ஒன்று சுலைமான் நபி அவர்கள் மணி ஒளித்தேகம் தன்னுள் ஊர்தர அவர்கள் அதனைப் பிடித்து எறிந்தார்.

படியினில் வீழ்ந்த அச்சிற்றுயிர் வலிபொறாது ''நீதி செய் நெடிய வல்லோனுக்கு நீரும் நானுமே அடிமை. இதனை மனத்து அறிகிலிரோ? ஏன் இத்துணை அகங்காரம்?'' என வினவியது.

தன் தவறு உணர்ந்த தகை சால் வேந்தர் ''பொறுத்து அருள்க'' என வேண்டினார்.

அப்பொழுது அவ்வெறும்பு அவர்க்குச் சில நிபந்தனைகள் விதித்து, அதன்படி அவர் நடப்பதாக உறுதி அளித்தால் மனம் பொறுத்து அருள்வதாகக் கூறியது.

அவரும் உடன்பட்டார். ''நீர் செய்த குற்றம் இத்தினந்தனில் செயித்தனன்'' என்று செப்பியது.

அளவிலா முகமன் கூறி, அரசர் அதனை அனுப்பிவைத்தார். எழுதரும் இறைவனை ஏத்தினார்.

இவை அனைத்தும் ஓர் இறைவனையும், அவனுடைய அளவற்ற கருணையையும், படைப்புகள் அனைத்தின் ஓர்மையை யும், உணர்த்துவனவாக அமைந்திருப்பதனைக் காண்கிறோம்.

இஃதன்றியும், இறைவன் படைப்புகள் அனைத்தும் இறைவ னுக்கு அடிமையே அன்றி, அவற்றில் ஒன்று மற்றொன்றனுக்கு அடிமை அன்று என்ற உண்மையையும் உணர்கிறோம்.

இவ்வுண்மையும் வேறு ஒரு கோணத்தில் புலவரால் விளக்கம் பெறுகின்றது.

இறைவன் ஆணைப்படிதான் ஜின்கள் சுலைமான் நபி அவர் களுடைய ஏவலுக்கு இசைந்து நின்றன; எனினும் தங்களைப் போலவே சுலைமான் நபியும் இறைவனுடைய படைப்பு ஆகை யால் நபி அவர்களது அடிமையாய் இருப்பதில் அவை மகிழ்ச்சி கொள்ளவில்லை.

இந்த உண்மை இரு நிகழ்ச்சிகளால் வெளிக் கொணரப் பெறு கிறது.

சுலைமான் நபி அவர்கள் பல்கீசு அரசியை மணம் செய்து கொள்வது பற்றி ஜின்களை ஆலோசனை கேட்ட பொழுது அவை தம் இனத்தவருடன் சூழ்ந்து கருத்து தெரிவிப்பதாகக் கூறின.

தமருடன் ஆலோசிக்கும் பொழுது "இத்திருமணம் நடை பெறுமானால் ஒருவர்க்கடிமை என்ற நிலைபோக நம் குலப் பெண்ணுக்கும், பெருகு அவள் சந்ததிக்கும் அன்றோ அடிமை யாவோம். இதனைத் தவிர்ப்போம்" என்றன.

சுலைமான் நபி அவர்களிடம் இல்லாதன, பொல்லாதன கூறின.

மற்றொரு நிகழ்ச்சியோ, பைத்துல் முக்கத்தீசுப் பள்ளிக்கட்டு மானப் பணியில் சுலைமான் நபி அவர்கள் ஈடுபட்டிருந்தபோது இறைவன் நாட்டப்படி, ஆசாவில் நின்ற நிலைப்படியே அவர் உயிர் கொள்ளப்பெற்றது.

அதே நிலையிலேயே ஓர்யாண்டு அளவும் அவர் உடலம் நின்றவாறு இருந்தது. சுலைமான் நபி அவர்கள் உபாத்து ஆயினார் என்பதனை அறியாத ஜின்கள் தொடர்ந்து பணி செய்து கொண்டிருந்தன.

பின் இபுலீசின் சூழ்ச்சியால் கரையான்கள் அவரது ஊன்று கோலை அரிக்கத் தொடங்கின.

கோல் சாய்ந்தது; நபி அவர்கள் மணி உடலம் சாய்ந்தது. இதனை நன்கு அறிந்த ஜின்கள் தாம் செய்து கொண்டு இருந்த பணிகளை அப்படியே விட்டு விட்டு ஓடிப் போயின.

இவ்விரண்டு நிகழ்ச்சிகளினாலும் உணரத்தக்கது யாது எனில், ''பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம். பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்'' என்பதே.

படைப்புகள் அனைத்தும் அப்பரம் பொருட்கே அடிமை. ஒன்றற்கு ஒன்று உறுதுணையாவது அன்றி, அடிமை ஆவது இன்று என்பதுதான்.

இவை எல்லாவற்றிக்கும் மேலாக, வேறு ஒரு உண்மையும் உண்டு. அதனையும் புலவர் தம் காப்பியத்தில் எடுத்துக்காட்டத் தவறவில்லை.

அது இறைவனையோ, இறைத்தன்மையையோ மனிதன் உள்ளிட்ட அவனுடைய எந்தப் படைப்பினாலும் பூரணமாக உணர்ந்து கொள்ள முடியாது என்பதுதான்.

காரணம் மனிதன் குறைஅறிவு உடைய பிறவி. ஆகையால் அந்த அறிவினாலேயே அவனைப் படைத்த பரம் பொருளின் தன்மையை முழுமையாக உணர்ந்து கொள்வது தர்க்க ரீதியாகக் கூட நிலைநிறுத்த முடியாத ஒன்று. இதன் காரணமாகத்தான், நம்முடைய வாழ்விலே விந்தைகள் பல நிகழ்வதைக் காண்கிறோம்.

இந்த உண்மையை உணர்த்துவதற்காகவே புலவரும் தம் முடைய காப்பியத்தில் இருபெரும் விந்தைகளை விளக்கிக் காட்டு வார்.

பல்கீசு சோதனைப் படலத்தில் சுலைமான் நபி அவர்களைச் சோதிப்பதற்காகப் பல்கீசு செய்தவற்றுள் ஒன்று ஒரு வைர மணியுள் புதுவதாகத் தொளை இடச்சொன்னதும், தொளை உடைய வைரம் ஒன்றில் சரடு கோத்திடவேண்டும் என்று கோரியதும் ஆகும்.

முதற்காரியத்தை ஜின் ஒன்று எளிதில் செய்து முடித்தது. அடுத்தசெயல் செய்ய ஆற்றாது, ''எங்களால் ஏன்றிடாது'' என்று சொன்னது. பிறரும், செய்தல் அரிது எனச் செப்பினர்,

அந்நிலையில் அவர்கட்கு அரிய அச்செயலைத் தாம் செய்வ தாகக் கூறி சிதல்கள் வந்து நின்றன. நபி பதம் பணிந்து, சரடு வாய் கவ்வி பதிவுறும் தமர் வழி இழுத்து வைத்தன.

தமக்கு இட்ட சோதனையில் வெற்றிபெற உதவிய சிதல் களுக்கு நன்றி தெரிவிக்க விரும்பி, அளித்த அவனிடம் துஆ இரந்து பின் கூறினார்.

''நீங்கள் விரும்பி யாதொன்றைக் கறிக்கினும் அவை சுவை மிகுந்த கரும்பு போன்று இருக்க, ஓங்கி வாழக் கடவீர்'' என்று சொல்லி அமைந்தார்.

ஆனால் அந்தச் சிதல்கள், சுலைமான் நபி உபாத்து ஆகிய பிறகும் ஆசாவில் ஊன்றியவாறு நின்ற நிலையில் இருந்த போது, இபுலீசின் துன்மதிக்கு ஆட்பட்டு, ஒருமையுற்று எழுந்து, அவ் ஆசாக் கீழ் விரைவினிற் புகுந்து நீர்வாய்க் கொண்டு அரித்து வீழ்த்தின.

கோலும் சாய்ந்தது; கொற்றவர் உடலும் சாய்ந்தது. இவ்வாறு வீழ்ச்சிக்குக் காரணம் ஆக அவையே அமைந்தன.

இதனைவிட ஒரு பெரிய விந்தை சிந்தித்துப் பார்ப்பதும் கடினமானது.

மற்றொரு விந்தை யாது எனில், சுலைமான் நபி அவர்கள் ஐமுசத்துக்கு அவள் விரும்பியவாறு அவள் தந்தையின் உருவம் அமைத்துக் கொடுத்தற்காகவும், எளிய மீனவ மகள் ஒருத்தியை இகழ்வாக எண்ணியதற்காகவும் இறைவன் நபிஅவர்கள் முத்திரை மோதிரம் பறிப்புண்ணச் செய்தான். அழகிய உருவமும் மாற்றி னான். அந்நிலையில் அவர்க்குப்பிரதியாக அவர் உருவத்தில்ஆறாங் கடல் தீவக அதிபதி ஆன சகுறுஜின்னை இருக்கப் பணித்தான்.

காப்பியத்தை நடத்திக் கொண்டு போகும் புலவர், அந்நாட்டு மக்கள், அரண்மனையினர் அனைவருமே சகுறுஜின்னையே (நபி உருவத்தில் இருந்ததால்) நபியாக எண்ணினார், ஏற்ப நடந்தனர் என்று குறிப்பிடுகிறார்.

இவ்விடத்தில் மிக ஜாக்கிரதையாக சகுறுஜின் சுலைமான் நபி அவர்கள் மனைவியார் எவரிடத்தும் அருகில் கூடச் செல்லவில்லை என்று குறிப்பாகக் காட்டிவிடுகிறார்.

''அரியணையில் இருந்து எழுந்தே, உயிர்த் துணைவியர்கள் உறையும் மாளிகை வந்து உற்றனர். நாற்பது தினம் வெயில்

பரவிய சிங்காசனத்திருந்து மேவினர் இன்று (இந்தநாளில்)'' என்று சுலைமான் நபி மனைவியர் மகிழ்ந்தனர். (36:63)

சுலைமான் நபி அவர்கள் இவ்வாறு உருமாறி நாற்பது நாட்கள் துன்புற்றார் என அறிந்தோம். இறைவன் சகுறுஜின் அதனை விளித்து ''திரு நபி முனம் போல் அரசு இயற்றுதற்கு சேர்கின்ற நாள் இது. உன் முன் உருவம் அமைத்தனம். அணையை விட்டு அகல்'' என்றான்.

சகுறுஜின்னும் அவ்வாறே தன் உருபெற்று ஆறாஞ் சமுத்திரத் தீவில் ஏகியது.

இதே சகுறுஜின், பின்னால், சுலைமான் நபி அவர்கள் முன் ஏவலரால் கொணரப் பெற்றது; ஈமான் கொண்டது; அவர் ஆணை ஏற்று பைத்துல் முக்கத்தீசில் பளிங்கினால் பள்ளிவாசல் கட்டும் பணியில் தலைநின்றது, என்றெல்லாம் கண்டோம்.

இதுவும் மாபெரும் விந்தை அன்றோ?

# i அறபுச்சொற்கள்

இராஜநாயகக் காப்பியத்தில் இடம் பெற்றிருக்கும், அறபுச் சொற்களின் பொருள் விளக்கம் இங்கு தரப்பெறுகிறது.

நூலின் ஊடே விளக்கம் பெற்ற சொற்கள், அஸ்மாஉல் ஹுஸ்னா என்னும், இறைவனின் அழகிய திருநாமங்கள்(அறபியில் உள்ளவை) நீங்கலாக, பிறவே இங்கு தரப்பெற்றுள்ளன.



அகுமது, (அகமது அஹ்மது) (2:1)—முகம்மது நபி (ஸல்) அவர்களின் மற்றொரு பெயர்

அசா (ஆசா) (14:2)—ஊன்றுகோல்

அசுகாபி (அசுஹாபி) (1:15) – நபிகள் அவர்களின் தோழர்கள்

அதபு (38:38)—நன்னடத்தை

அமானிதம் (அமான், அமானம்) (17:29)—பாதுகாப்பு; அடைக்கலம்

அமீன் (21:13)—நம்பிக்கைக்கு உரியவர்

அவுலியா (அவ்லியா, ஔலியா) (1:23)—இறைநேசச் செல்வர்கள்; மெய்ஞ்ஞானி.

அறுசு (அர்சு) (5:29; 17:102)—அல்லாஹ்வின் ஆதனம்

ஆதம் (1:11)—முதல் மனிதன்; முதல் நபி

ஆமீன் (17;21)—அப்படியே ஆகுக

ஆயத்து (17:20)—அல்குர்ஆன் வசனங்கள்

ஆலீம் (ஆலிம்) (10:2)—அறிஞர்

இசுமுல் அஃலம் (33:20)—பெயர்களுள் மகத்தானவை

இபாதத் (38:38)—வணக்கம்

இபுலீசு (4:5) – சாத்தான்

இமாம் (1:16)—தலைவர்

இமாமத்து (1:9)—தலைவனாக இருத்தல்

இல்லீன் (45:12)—சுவர்க்கம்
(இ)றசூல் (2:1)—(அல்லாஹ்வின்) தூதர்
ஈமான் (28:28)—நம்பிக்கை
உலமா (12:3)—நல்லறிஞர்
உபாத்து (13:1)—மரணம்
உறட்டி (10:3; 27:26; 27:43) —றொட்டி
உம்மத் (20:26)—இனம்
எமன் (29:2)—அரேபியாவில் உள்ள ஒரு நாடு
ஒகி (ஒஹி, வஹி) (5:22)—இறை அறிவிப்பு
ஒகுத்து (17:54)—நேரம்; தொழுகை நேரம்
ஒசியத் (ஒஸியத்,ஒசியத்து, வஸியத்)
(45:9)—மரணத் தறுவாயில் கூறுவது; இறுதி உபதேசம்
ஒலி (1:18)—இறைநேசச் செல்வர்; மெய்ஞ்ஞானி
ஒலு (உலு) (31:34)—தொழுகை போன்ற புனித காரியங்கள் நிறைவேற்றப்படுவதற்கு முன்னால் கை, முகம், கால் முதலியவற்றைக் கழுவுதல்; மத அநுட்டானங்களுக்கு இணங்கத் தூய்மைப்படுத்தல்
கருபத்துல்லா (கருபா, கஅபா, கஃபா) (1:10; 20:3) மக்காவில் உள்ள பள்ளிவாசல்; இது முஸ்லிம்களுக்குப் புனிதத்தலம் ஆகும்.
கதா (ஹதா) (16:45)—பிழை
கபன் (13:40; 17:82; 36:17)— ஒரு முஸ்லிமின் உயிர் பிரிந்த பின்னர், நல்லடக்கத்திற்காக அணிவிக்கப்படும், சாதாரண வெள்ளாடை
கபீப் (கபீபு, ஹபீபு, (1:9)—நண்பன்
கபுசு (20:25)—பாதரட்சை
கபுறு (1?:42)—புதை குழி
கபூல், (கபுல்) (38:38)—ஒப்புக் கொள்ளுதல்
கல்க்கு (16:47)—படைப்பு
கல்பு, கல்ப் (12:70)—மனம், இதயம்
கலம் (14:13)—எழுது கோல்
கலா (23:23)—முன் அளப்பு; விதி
கலிமா(5:59)—சொல்; இஸ்லாத்தின் மூலமந்திரத்தைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் படுகிறது. ''லா இலாக இல்லல்லாகு முகம்மதுர் ரசூலுல்லாகி'' என்று ஆரம்பிக்கும் முதல் கலிமாவுடன் வேறு நான்கு கலிமாவும்

உண்டு. சுட்டு விரலைக் குறிக்க, கலிமா விரல் என்ற சொற்றொடர் பயன்படுத்தப் பெறுகிறது.

கறாம் (ஹராம்) (27:2)—தடுக்கப்பட்டவை

கறாமி (28:27)—தடுக்கப்பட்டவற்றைச் செய்பவன்; விஷமி

காபிர், குபிரர் (35:8)—நம்பிக்கை அற்றவர்; முஸ்லிம் அல்லாதவர்

கிபுலா (5:59)—தொழும்போது, சிறப்பாக எதிர்நோக்க வேண்டிய புனித கஃபா உள்ள திசை.

கிதாபு, கித்தாபு (3:1)—பொத்தகம்

கியாமம் (1:14)—இறுதித் தீர்ப்பு நாள்

குதறத்து (14:13)—சர்வ வல்லமை

குப்பா (41:5)—விதான கலசம்

குப்பாயம் (34:61)—மேல் அங்கி

குபிர், குபிரிய்யத், குபிறு, காபிர், குபிரர் (1: 8) —முஸ்லிம் அல்லாத தன்மை

குரிசி (17:75)—இருக்கை

குர்ஆன், குருவான், குறுஆன், குரான், குறுவான் (20:7) —முஸ்லிம்களின் வேத நூல்

குறுபான், குர்பான் (10:11)—தியாகம், உயிர்ப்பலி

சக்காத், ஸக்காத் (10:17)—கட்டாயக் கொடை

சதக்கா (10:12, 13)—ஈகை

சபூறு, சபூர் (5:2)—தாவூது நபி அவர்களுக்கு அல்லாஹ்வால் அருளப்பட்ட வேதம்

சருவந்து, சர்பந்து (14;2)—இது உருதுச் சொல். தலைக்கவசம் என்ற பொருளது.

சலாம், ஸலாம் (17:19, 29, 35, 44, 48, 59, 63, 65; 22:34) —அமைதி; பெரும்பாலும்ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைச் சந்திக்கும் பொழுது முகமன் கூறும் பொழுது முகமன் பொருட்டு."உம் மீது அமைதிஉண்டாவதாகுக" (அஸ்ஸலாமு அலைக்கும்) என்று கூறுதல் மரபாகும்

சலாமத் (17:97)—அமைதி; செல்வம்; பரிபூரண பக்குவ நிலை

சறகு, சரீஅத், சரீகத், சரீகத்து (1:16) —இஸ்லாமிய மார்க்கச் சட்டம்

சனா, ஜனா (23:7)—முறையில்லா முயக்கம்; வியபிசாரம்

சாம், ஷாம் (3:1; 35:5) — சிரியா நாட்டிற்கு அறபு மொழியில் வழங்கும் பெயர்

சாலிகு ஸாலிகு (8:1; 36:70)—இறைஞானப் பாதையில் செல்பவர்; நல்லடியார்

சுக்கூறு, (சுக்கூர், சுக்று) (14:9)—நன்றி

சுகூது, சுஜூது(5:59)—தொழுகையில் ஒருநிலை; முழங்காலில் அமர்ந்து நெற்றி நிலத்தைத் தொட இருக்கும் ஒரு தொழுகை நிலை

சுலுத்தான், சுல்தான் (9:1)—அரசன்

சுறியத், சுரியத் (17:79)—காதல் கிழத்தியர்; அபிமானப் பெண்டிர்

சுறுமா (13:40; 34:63)—கண்ணில் பூசும்ஒருவகை மைப்பொடி

சுன்னத் (5:59)—மரபு; கடமைகள்; நிறைவேற்றினால் நற்பயன் உண்டு எனப்படும் செயல்களை, இச்சொல் பொதுவாகக் குறிக்கும். முகம்மது நபி (ஸல்) அவர்களின் சொல்லும் செயலும் இதில் அடங்கும்.

சூறத் (17:30)— திருக்குர் ஆனின் அத்தியாயம்

சூறு (14:23)—ஊது குழல்; இறுதி நாளன்று ஊதப்படுவது

செய்கு (1:18)—ஆன்மீக வழிகாட்டி

செய்த்தான், ஷெய்த்தான், சைத்தான் (5:64) —சாத்தானுடைய குணம் உடையவர்கள்; விஷமிகள்; இங்கு ஓர் இனத்தையே குறிக்கும்

சைத்தூன் (35:6)—ஒரு நகரம்

தகுத் (33;23)—இருக்கை; ஆதனம்

தசுபீகு (17:45) —இது மணிகளைக் கொண்டது. அல்லாஹ் என்பதையும், அல்லாஹ்வின் திருநாமங்கள் 99ஐயும் நினைவு கூர்வதற்கும், தசுபீகையும், தகுமீதையும் தக்பீரையும், உச்சரிப்பதற்கும், இறைபக்தி உடைய எந்த ஒரு சொல்லையும் உச்சரிப்பதற்கும், பயன் படுத்தப்படுவது.

தக்பீர் (தக்குபீர், தக்பீறு) 'அல்லாஹு — அக்பர்' என்ற சொற்றொடரை உச்சரித்தல்

தகுமீது : எல்லாப் புகழும் அல்லாவுக்கே என்று பொருள்படும் 'அல்ஹம்து லில்லாஹ்' என்னும் அறபுச் சொற்றொடரை உச்சரித்தல்.

தலாக்கு(36:95)—விவாகரத்து தவுபா, தஉபா, தவ்பா (18:34) —பாவ மன்னிப்பு

தறஜாத், தறசாத் (20:18)—உயர் பதவி, நற்பலன்
திக்று, திக்குறு (20:4)—அல்லாஹ்வை தியானித்தல்
தீன் (1:5)—இஸ்லாம் மார்க்கம்
துஆ, துவா (7:25)—பிரார்த்தனை, வேண்டுகோள்
துல்துல் (1:12)—கலிபா அலி (றலி) அவர்களின் குதிரையின் பெயர்
தௌஹீது தௌகீது,தௌகீத்,தவ்கீது (1:22)—அல்லாஹ்வின் ஏகத்துவம்
நசாயிஃ (5: 16) – தாவூது நபி துணைவியார்; இந்நூல் பாட்டுடைத் தலைவரைப் பயந்தவள்
நபி (1:5)—தீர்க்கதரிசி
நபியுல்லா (34:43)— அல்லாஹ்வின் நபி
நிக்காகு (9:105)—திருமணம்
நிகுமத் (21:10)—அருள் கொடை; பேறு
நிசானி (36:71)—கொடி; இங்கே தொடு குழியில் கால்மாடு தலை மாடு அறிய நடப்படுவது
பக்கீர் (17:82)—ஏழை; ஊர்சுற்றித் திரிபவர் என்பதையும் குறிக்கும்; இவர்கள் துறவிகள் போல் காட்சி அளிப்பர்.
பகுதாது (1:17)—இறாக் நாட்டின் தலைநகரம்
பதுறு (1:14)—மக்காவுக்கும் மதினாவுக்கும் இடையில் உள்ள ஓர் இடம். இங்குதான் முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் அல்லாத குறைஷியர்க்கும் முதல் தடவையாகப் போர் நிகழ்ந்தது. இப்போரில் முஸ்லிம்மக்கள் வெற்றி ஈட்டினர்
பத்தான் (10:14)—ஒரு மலக்கின் பெயர்
பல்கீசு (2:2) – காப்பியப் பாட்டுடைத் தலைவி; எமன் நாட்டு ஏந்திழை
பறக்கத்து (5:73)—ஆசீர்வாதம்; நலன்கள்
பறுல், பறுலு, பறலு (10:12) –கட்டாயம் செய்தே தீர வேண்டிய கடமைகள்
பாத்திகா, பாத்திஹா (17: 21, 106)—ஆரம்பம்; திருமறையின் முதல் அத்தியாயத்தின் பெயர்
பீசபீல், பீஸபீல் (20:15)— அல்லாஹ்வின் பாதையில் மார்க்கப் போர்
புத்து (1:10)—வழிபாடுறு சிலை. (அறபுச் சொல் அன்று)

பைத்துல் முக்கத்தீசு (5:59)—ஜெறுசலத்தின் மறுபெயர்; பாலஸ்தீனத்தின் தலைநகர்

மகர் (9:64)—திருமணத்தின் போது மணமகன் கட்டாயமாக மணமகளுக்குச் செலுத்த வேண்டிய பணம்

மகரிபு, மகறிபு (24:9)—சூரியன் மறைந்த உடன் நடைபெறும் தொழுகை; மேலைத் திசையையும் குறிக்கும்

மசலா (12:8)—வினா

மஞ்சு (13:40)—உயிர் பிரிந்த உடலை அடக்கத்திற்காக எடுத்துச் செல்ல, வைக்க, உதவும் பெட்டி

மத்கபு, மதஹப் (1:16) – மார்க்கம் சார்ந்த நெறி

மதான் (35:2)—ஒரு நகர்

மதிரசா, மதரஸா, மதுரசா (8:16)—பள்ளி; கல்விக் கூடம்

மலக்கு (10:14)—வானவர்

மவுத்து (11:5; 12:30)—இறப்பு

மிகுறாப் (14:1)—பள்ளி வாசலில் இமாம் தொழுகை நடத்துவதற்கு என ஒதுக்கப்பட்ட இடம்

மிகுறாஜு, மிகுறாசு (39:22)—விண் உலக யாத்திரை

மிசுறு (1:10) – எகிப்து

மிசுக்கீன் (20:12)—ஏழையர்; இரந்துண் வாழ்வினர்.

மின்பறு (14:16)—ஏறி நின்று பிரசங்கம் பண்ணுவதற்காகத் தொழுகை நடத்தும் இடத்திற்கு அணித்ததாகப் பள்ளி வாசலில் அமைக்கப்பட்டுள்ள சிறு மேடை

முறுசலீன் (1:7)—இறை தூதுவர்கள்

முனாஜாத் (21:10)—குறை இரங்கல்

முஸ்தபா (20:25)—(தேர்ந்தெடுக்கப் பட்டவர்) முகம்மது நபி (ஸல்) அவர்கள்

மோதீன் (9:39)—முஸ்லிம்களைத் தொழுகைக்கு அழைப்பவர்.

லஆனத் (17:106)—சாபம்

(இ)லவுகில்(10:15)-இறைவனின் விதிப்பு எழுதப்படும் பலகை. இது ஆத்மீகத் துறையில் உபயோகிக்கப்படுகிறது.

லாகவுல வொலா (12:26)— 'குவ்வத்த இல்லாபில்லாகில் அளீம்' என்று முடியும். இதன்பொருள்: இறைவன் அன்றி எதுவும் இயங்காது என்பது ஆகும்.

விசுமில், பிசுமில் (14:18)—பிஸ்மில்லாஹி; அல்லாஹ்வின் பெயரால்

றகுமத் (38:39)—இறைவன் அருள்

றபியுல் அவ்வல் (36:68)—மூன்றாவது இஸ்லாமிய மாதம்

றிசுக்கு (16:47)— உணவு

றூகு, ரூகு (45:12)—உயிர்

ஜின் (1:5)—ஒருவகைப் பூதகணம்

ஹயாத் (12:30)—உயிர்

ஹயிறு, கயிறு (17:104)—நன்மை ஆனவை

ஹௌளு (33:16)—பள்ளி வாசலில் உள்ள கை, முகம், கால் கழுவ உபயோகிக்கப்படும் நீர் தொட்டி.



குறிப்பு :

தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி

அறிஞர் ம.மு. உவைசு

பதிப்புத்துறை மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

1983ஆம் ஆண்டு வெளியீடு

என்ற நூலின் துணை கொண்டு இப்பகுதி அமைக்கப் பெற்றது.

இந்நூலுள் பயின்றுள்ள (சில)

# வடமொழிச் சொற்களும், தொடர்களும்

# iii. பிறசெய்திகள்

## ஒரு பொருள் குறித்த பல சொல்:

○ கருடன் இதனையும், பருந்தையும் வேறுபாடின்றி வழங்குவார் (31:44, 46; 39:3,4)

இக்கம் 27:18 உவணம் 27:37
சேனம் 27:25 பன்னகவயிரி 39:8*
பாறு 27:43 (பன்னகம்—நாகம்)

உவணன்-சுபர்ணன் என்பதன் திரிபு என்பர்.

○ எறும்பு 19:1
உழு 19:27
உறவி 21:8
சூகை 21:9
பீலிகை 19:12

○ விறகு 37:3
இந்தனம் 37:2
ஈமம் 37:7
காஷ்டம் 37:16
முளரி 37:6

○ நீர் 26:27
அப்பு (அம்பு) 32:76
உதகம் 26:27
நீத்தம் 2:6
ஜலம் (சலம்) 1:22
அறல் 31:34
சலிலம் 2:13
புனல் 31:34

○ காற்று 10:3
அநிலம் 10:16
ஊதை 10:6
சதாகதி 10:4
மருத்து 10:12
மாருதம் 10:13

'தொட்டுருத் தெரியாமலும்
மாசுகள் தோயாது
எட்டும் எப்பொழுதினும் ஒரு
சோம்பலும் எய்தாது
அட்ட திக்கினும் உலவும்எண்
காற்று...' (17:58)

○ பரிமா
அச்சுவம் 29:13
குதிரை 26:23
கொய்யுளை 18:10
கோரம் 26:20
புரவி 18:6
இவுளி 26:26
குரகதம் 2:26
கோடகம் 26:25
பரி 18:1
மா 17:85

---

* 'பாம்பு படப்புடைக்கும் பல்வரிக் கொடுஞ் சிறைப்புள்' (முருகு. 150)

○ ஆனை இறாஞ்சி

இப்புள்ளுக்கு இக்காவியத்தில் சிறப்பிடம் உண்டு. இதன் தோற்றத்தைப் புலவர் பல பாடல்களில் விதந்து பாடி உள்ளார். (17:37, 38, 39, 40)

இதற்கு அமைந்த சிறப்புத் தொடர்கள்

| | |
|---|---|
| அணங்கனார் முகப்பறவை | 17:42 |
| அளகப்புள் | 28:27 |
| ஆனை இறாஞ்சிப்புள் | 23:3 |
| கயப் பாதப்புள் | 28:23 |
| கரி இறாஞ்சி | 25:5 |
| சரபப்புள் | 23:3 |
| சிம்புள் | 26:4 |
| நெடுங்கைப் புள் | 26:5 |
| பாவையர் வதனப் பட்சி | 26:1 |
| முகம் நரர் போல் பட்சி | 28:29 |
| யானை தூக்கு எழிற்புள் | 17:35 |
| வருடை | 26:25 |

○ மீன் 16:26

| | | | |
|---|---|---|---|
| சகுலி | 16:44 | மச்சம் | 16:34 |
| சலசரம் | 16:28 | மயிலை | 16:58 |
| புலால் | 16:42 | | |

## சில இலக்கணக் குறிப்புகள்

1. நகு, புகு-வினைப் பகுதிகள் வினை எச்சமாகப் பயிலப் பெறும் போது; நக்கு, புக்கு என அமையும். இறந்தகால வினை முற்று ஆயின், நக்கது, புக்கது, நக்கார், புக்கார் என அமையும்.

நக்கி என வழங்குகிறார் (24:4), புக்கியது (5:25) எனவும் புக்கினார் (23:12) எனவும் பயில்வார்.

''கணவன் மாய விளை துயர்'' என அமையவேண்டும்.

''மாய்ந்து விளைதுயர்'' (13:25)
என்று அமைப்பார்.

'செய்து' என் எச்சம் 'செய' பொருளில் பயிலப் பெற்றது போலும்.

'உன்றன்' என வரற்பாலதனை 'உந்தன்' என்பார் (27:22)

'அருளுதி' 'புகலுதி' என்று வரற்பாலன, இடைஉகரச்சாரியை இன்றி, அருடி (24:3), புகறி (28:1) என்று வழங்கப்பெறுகின்றன.

புலவர்க்கே உரிய சொல் ஆட்சிகள் இவை. கம்பனும் இவ்வாறே அகறி, சேறி, மீடி என்று வழங்குவான்.

## ○ பாட்டியல் வழிப் பட்டியல்

| | |
|---|---|
| இசைக் கருவிகள் | 24:45; 34:67 |
| பறவைகள் | 17:4 |
| படைக் கலன்கள் | 14:32; 24:8; 35:10 |
| மரங்கள் | 22:4,5 |
| விலங்குகள் | 17:62 |

## ○ அமர் பிறங்கு அழுவம்

| | |
|---|---|
| திணைகள் | 35:56 |
| போர் நிகழ்ச்சி | 24:17-21 35:21-55 |
| வீர உரை | 24:4.5 |

## ○ காதல்

காமம் மிக்க கழிபடர் கிளவி 9:3-13
விரகம் 25:41-50
முயக்கம் 9:66; 26:28; 35:61

## ○ வாரத்து நாட்கள் வகுத்தமைவது

ஏழு நாள் பணி 23:1
ஏழு நாள் பொழுது போக்கு 24:54, 55, 56

## ○ தண்டனை வகைகள்

திருட்டுக்குற்றம் :
தலை துணிப்பு, கழு ஏற்றல் 9:141

பொய்க்கரி கூறற்கு :
கண் பறிப்பு காண் துரத்தல் 9:141

கடமை தவறற்கு:

தசையினைச் சிறுகச் சிறுக அறுத்து எடுத்தல் (31:84)
புண்பட்ட உடலை எறும்புக் குழியிடை இடல் ,,
உடலை கொடு வெயிலில் சுடு மணலிடை புரட்டல் ,,

○ **கொடி வழி**

1. தாவூது (அலை) + நசாயிகு
   |
   சுலைமான் (அலை)
2. யூசறுகு + உமையிறத்
   |
   பல்கீசு + சுலைமான் (அலை)
   |
   றசுகீம்
3. சுறாயிகு மரபும் விரிவாகப் பாடப் பெற்றுள்ளது. (29:4, 5)

## தொகை

○ ஒரு பொருள்: கடவுள் (13:7)

○ இரு வினை (13:7) நல்வினை, தீவினை

○ முத்திரவியம்: கடல் படுந (15:46)
முத்து, பவளம், வலம்புரி

மும்மலம் (14:5)
ஆணவம், கன்மம், மாயை

மும்முரசு (5:8)
வீரம், கொடை, மணம் குறிப்பன

மூவகைக் கோடிகம் (30:62)
விளங்கவில்லை

○ நால்வகைக் கறி (15:53)
(விளக்கம் 565ஆம் பக்கம்)

நால்வகைக் குணம் (29:75)

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு

நால்வகைக் கொடை (10:'8)

(விளக்கம்: 566ஆம் பக்கம்)

நால்வகைத் தங்கம்(41:3)

ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம்*

* நாவலொடு பெயரிய பொலம் (முருகு: 18)

நால்வகைத் தந்திரம் (29:43)

சாமம், பேதம், தானம், தண்டம்

நால்நிலம் : குறிஞ்சி (9:78) முல்லை (2:12)

மருதம் (9:77) நெய்தல்...?

நாற்படை- தளம், யூகம் (14:34)

தேர், யானை, பரிமா, காலாள்

(வீரம் பற்றிய பகுதியில் விளக்கப் பெற்றது)

நாற்பிறப்பு

முட்டை (அண்டஜம்); கருப்பை;

புழுக்கம்; நிலம் கீள்வு

நாற்குல மலர்கள் (31:20)

கொடிப் பூ கோட்டுப் பூ

செடிப்பூ நீர்ப் பூ

சதுர்யுகம் (26:12)

கிரேதாயுகம் திரேதாயுகம்

துவாபரயுகம் கலியுகம்

○ ஐவகைப்பவம் (பவம்-பாவம்) 29:6—பஞ்சமா பாதகம்:
கொலை, பொய், களவு, கள் அருந்தல், (குரு) நிந்தை

பஞ்சகதி (18:6; 29:13)
நயம் தெரி சொற்கள் பகுதியில் விளக்கம் தரப்பட்டது.

ஐந்நிறம்-பஞ்சவனம் (2:12)
வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை

பொன்மை—மஞ்சள்

பசுமை—நீலம் ஆதல்வேண்டும்

(நீலம்+பொன்மை பசுமை ஆக அமையும்)

○ அறுசுவை (34:55)
கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு

○ எழுகடல்—எழுபரவை (30:80)
(வினைத் தொகையாகக் கொள்ள வாய்ப்பின்று. ஏனெனில், 'அமுதசாகரம்' என்றும்(21:29) செந்தேன் நறுங்கடல் என்றும் (21:2) பாற்கடல் (34:60) என்றும் வழங்கிஉள்ளார். (இரட்டை மரபுப் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளது).

எழுநிலம் (5:19)
சப்த த்வீபம் குறிக்கின்றார் எனின்,
நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம் புட்கரம், கமுகு, தெங்கு என்பன.

எழு பிறப்பு (6:5)
தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் (இதன் விரிவு 84 லட்சம் யோனி பேதம்)

எழுமேகம் (25:20)
ஏழ்வகைச் சுந்தர முகில்:
சம்வர்த்தம், ஆவர்த்தம் (16:25), புட்கலா வர்த்தம், சங் காரித்தம், துரோணம், காளமுகி(காளகன்)(16:25), நீல வருணம்

○ அட்டதிக்—எண்டிசை (2:2)
யாவரும் அறிந்தது.

○ நவமணி (32:33)
கோமேதகம், நீலம், பவளம், முத்து, வைரம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், வைடூர்யம்

இப்பகுதி'' அபிதான சிந்தாமணி'' துணை கொண்டு அமைக்கப் பெற்றது.

○

திருவசனம் (13:18), திருப்பணி (45:29) திருஉனம் (45:5) என்ற தொடர்களும் பயிலப் பெறுகின்றன.

(பார்க்க : 217ஆம் பக்கம்)

இராஜநாயகக் காப்பியத்திலிருந்து
இந்நூலில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற பாடல்களின்

# முதற் குறிப்பகராதி

(பகுதிகள் அன்றி, முழுமையாகக் காட்டப் பெற்றன மட்டுமே இப்பட்டியலில் கொடுக்கப் பெற்றுள்ளன)



* எண்கள் இந்நூல் பக்கங்கள் குறிக்கும்

# V

இந்நூலிடை, முழுப் பாடல்களாகவும், தொடர்களாகவும், கருத்துப் பிழிவாகவும் மேற்கோளாகக் காட்டப்பெற்ற

# நூல்களின் பட்டியல்

அகநானூறு (அகம்)
அண்ணல் நபி ஹதீஸ் அருள் மணிகள்
அபிதான சிந்தாமணி
அல்லாஹ்வின் அழகிய திரு நாமங்கள்
அறநெறிச்சாரம்
ஆசாரக்கோவை
ஆடல் வல்லான்
ஆத்தி சூடி
இசை மரபு
இறையனார் அகப்பொருள்
இனியவை நாற்பது
இஸ்லாமிய இலக்கியக் கருவூலம்
இஸ்லாமிய கலைக் களஞ்சியம் (3 தொகுதிகள்)
இஸ்லாமியத் தென்றல்
இஸ்லாம் வளர்த்த தமிழ்
உபதேச காண்டம்
உமர் கய்யாம் பாடல்கள்
உவமான சங்கிரகம்
ஔவையார் பாடல்கள்
கம்பராமாயணம்...(கம்பன்)
கம்பன் இலக்கிய உத்திகள்
கலிங்கத்துப் பரணி... (கலி.பரணி)
கலித்தொகை...(கலித்)
கல்லாடம்
கஸஸுல் அன்பியா
காளமேகப் புலவர் பாடல்கள்
குறுந்தொகை...(குறுந்)
குற்றாலக் குறவஞ்சி
கூத்த நூல்
கூளப்ப நாயக்கன் காதல்
கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது
கோபாலகிருஷ்ணமாச்சார்யார் வை.மு.
[கம்பராமாயணம் உரை- சுந்தரகாண்டம்]
சத்திமுற்றப் புலவர் பாடல்
சிலப்பதிகாரம்...(சிலம்பு)
சிறுபாணாற்றுப்படை.... (சிறுபாண்)
சீறாப்புராணம்...(சீறா)
சீவக சிந்தாமணி...(சீவகம்)
சூடாமணி நிகண்டு
செந்தமிழ்ச் செல்வி(சிலம்பு 28)
சேதுபதி விறலி விடு தூது
சைவத்திருமுறைகள் (12)
தக்கயாகப் பரணி
தண்டி அலங்காரம் (தண்டி)
தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி
தமிழ் லெக்சிகன் (தொகுதிகள்)
தனிப்பாடல் திரட்டு...(தனிப் பாடல்)
தாயுமானவர் பாடல்கள்
திருக்குர்ஆன்...(தி.கு)
திருக்குறள்...(குறள்)
திருக்கோவையார்
திருப்பாவை
திருப்புகழ்
திருப்பூவணநாதர் உலா
திருமந்திரம்
திருமுகப்பாசுரம் (11-ஆம் திருமுறை)
திருமுருகாற்றுப்படை.... (திருமுருகு), (முருகு)
திருவரங்கக் கலம்பகம்
திருவிளையாடல் புராணம் (திருவாலவாயுடையார்)
திருவிளையாடல் புராணம் (பரஞ்சோதி)
திருவள்ளுவமாலை
திருவாசகம்
திருவாய்மொழி
திருவெம்பாவை
தொல்காப்பியம்...(தொல்.)
நந்திக் கலம்பகம்

நபிமார்கள் வரலாறு
நல்வழி
நளவெண்பா
நற்றிணை...(நற்)
நன்னெறி
நாலடியார்
நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம்
நீதிநெறி விளக்கம்
நீதி நூல்
நெடுநல்வாடை
நைடதம்
பட்டினத்தார் பாடல்கள்
பட்டினப்பாலை...(பட்டின)
பதிற்றுப்பத்து...(ப.பத்து)
பரதநாட்டியம்
பரிபாடல்
பழமொழி
பிங்கல நிகண்டு
புறப்பொருள் வெண்பாமாலை
(பு.பொ.வெண்பாமாலை)
புறநானூறு...(புறம்)
பெருங்கதை...(பெருங்)
பெரியபுராணம்...(பெ.பு)
பெரும்பாணாற்றுப்படை....
(பெரும்பாண்)
பொருநராற்றுப்படை....
(பொருந்)
பொன் வண்ணத்து அந்தாதி
மணிமேகலை...
(மேகலை),
மதுரைக்காஞ்சி...(மதுரைக்)
மலைபடுகடாம்
மனோன்மணீயம்
மாறன் அலங்காரம்
முக்கூடற்பள்ளு
முத்துக்குமாரசாமி பிள்ளைத்
தமிழ்
முத்தொள்ளாயிரம்
முல்லைப்பாட்டு
முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்
மெய்க்கீர்த்தி
வருணை குலாதித்தன் மடல்
வாக்குண்டாம்
வில்லி பாரதம்
விவிலியம்
விவேக சிந்தாமணி
ஜய ஜய சங்கரா
Calendars of the Middle East
Pattup Pattu

## ...முடிவில்

இந்நூல் முழுவதும் எழுதி முடித்த பிறகு,பாதிவரை அச்சான பிறகு, சகோதரர் ஸைய்த் முகம்மது ஹஸன் அவர்கள் தம்மிடம் இருந்த இராஜநாயகக் காப்பியம் (ஒரு பழைய அச்சுப்பிரதி) தன்னிலிருந்து சில பக்கங்களை XEROX பிரதிஎடுத்து அஞ்சல் வழி அனுப்பி வைத்தார்கள்.

அவர்கள் அனுப்பிவைத்த நூலின் படிவங்களின்படி, முகப்புப் பக்கமும் முதற்பக்கமும் இவ்வநுபந்தத்தின் கடைசி பக்கங்களாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

முகப்புப் பக்கத்திலிருந்து இந்நூல்
"'சென்னபட்டணம்—கிசுறத்து—
௲உ௱௬௰௬— றமலான் மீ 22க்கு—
இங்கிலீஷ்—௲அ௱௬௰—சாலிவாகன
சகாப்தம்—௲எஉஅ—க்கு சித்தார்த்தி—
௰ பங்குனி மீ" என்று அச்சிடப்
பெற்றிருப்பதனைக் காணலாம்.

இதைப் பற்றிச் சகோதரர் ஹஸன் அவர்கள்,

"கி. பி. 1860ல் அச்சிடப்பட்ட இம்முதல் பதிப்பிலிருந்து 'சுலையுமானபிக் காப்பியம்' என்றும், இதற்குப் பெயர் கூறப் பட்டதாகத் தெரிகிறது.

பதிப்பாசிரியரின் பெயர் கள்ளகுமது மகுதூம் பிள்ளை குமாரர் மகுதூம் முகம்மது என்றுள்ளது. இது அச்சுப்பிழையன்று. இதே ஆண்டில் அவர் பதிப்பித்த ஆலிப் புலவரின் "மிகுறாசு மாலை" என்னும் நூலின் முகப்பிலும் "கள்-ளகுமது" என்றே கொட்டை எழுத்தில் காணப்படுகிறது. பிறகுதான் கண்ணகுமது என்று மாற்றிக் கொண்டிருக்கிறார்.

ஹிஜ்ரீ ஆண்டு 1266 என்று உள்ளது. 1276 என்பதுதான் சரி. 1860 என்று ஆங்கில ஆண்டு தரப்பட்டுள்ளது. சகாப்தம் 1782+78=1860 தான்வரும்.

இதன் காப்புச் செய்யுள் பிந்திய பதிப்புகளில் விடுபட்டுள்ளது.

45 ஆவதான சுலையுமான் நபி உபாத்துப் படலம் 44-ஆம் செய்யுள் பிந்திய பதிப்புகளில் விடுபட்டுள்ளது. அதையும் சேர்த்தால் 45ஆம் படலத்தில் 46 பாடல்கள் உள்ளன.

2223 உடன் அரசாட்சிப் படலம் பாடல்கள் 16ம்சேர்ப்பதோடு காப்புச் செய்யுளையும் சேர்த்தால் 2240 சரியான எண் எனத் தெரிகிறது.

இது முதற்பதிப்பு ஆதலின் பெருமழை சோமசுந்தரப்புலவர் கொடுத்த எண்ணிக்கை ஞாபகப் பிசகினால் ஏற்பட்டிருக்கும் என்று நம்பலாம்.

எழுத்துப் பிழைகள் சிலவை தவிர இதற்கும் பிந்திய இரு பதிப்புகளுக்கும் வேற்றுமை அதிகம் இல்லை.

'அச்சிற் பதிப்பித்த வரலாறு' பக்கம் இந்தப் பிரதியில் காணப் படவில்லை.''

சகோதரர் ஹஸன் அவர்களுடைய இந்தக் கருத்தை முழுமை யாக ஒதுக்கி விடுவதற்கு இல்லை. அதே சமயத்தில் பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் கருத்தையும் தள்ளி விடுவதற்கு இல்லை.

சகோதரர் ஹஸன் அவர்களிடம் இருக்கும் பதிப்பிலிருந்து இரண்டொரு செய்திகள் தெரிய வருகின்றன.

புத்தகத்தின் முதல் முகப்புப் பக்கத்தில் அச்சிடப் பெற்றிருப் பவை நூலின் முதல் பக்கத்தில் அப்படியே அச்சிடப் பெறவில்லை.

இரண்டாவதாக, முகப்புப் பக்கத்தில் கொடுக்கப் பெற்றிருக் கும் ஹிஜ்ரீ ஆண்டு, இங்கிலீஷ் ஆண்டு, சாலிவாகன சகாப்தம் ஆகிய மூன்றில் இரண்டுதான் ஒத்திருக்கின்றனவே அன்றி மற்றொன்று ஒத்திருக்கவில்லை.

மூன்றாவதாக, முகப்புப் பக்கத்தை அடுத்து ஒருதாள் காணப் பெறவில்லை. அதில் அச்சிட்ட வரலாறு இருந்திருக்கவேண்டும் என்று சகோதரர் ஹஸன் அவர்கள் கருதுகிறார்கள்.

கிடைக்காத முதலிரு பக்கங்களோடு இப்பொழுது காணப் பெறும் மூன்றாம் பக்கமும் சேர்ந்து பாயிரமாகவோ அச்சிட்ட வரலாறு ஆகவோ இருந்திருக்க வேண்டும்.

நான்காம் பக்கத்தில் மேற்படி மகுதூம் முகம்மது என்பவர் பாடிய இரு ஆசிரிய விருத்தங்கள் காணப்படுகின்றன.

அதற்குக் கீழும், ஐந்தாவது பக்கத்திலும், படல எண்ணும், படலப் பெயர்களும், படலத்தில் உள்ள பாடல் எண்களும் பட்டிய லாகக் கொடுக்கப் பெற்றுள்ளன.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக ஆறாவது பக்கத்தில் பிழை திருத்தம் கொடுக்கப் பெற்றுள்ளது.

முகப்புப் பக்கத்தில் கொடுக்கப் பெற்றிருக்கும் ஆண்டுகளில் ஏதாவது ஒன்று பிழையாயின், திருத்தம் இப்பக்கத்தில் கொடுக்கப் பெற்றிருக்கக் கூடும்.

ஒருகால் பிற பக்கங்கள் எல்லாம் அச்சடித்த பிறகு முகப்புப் பக்கம் அச்சடிக்கப் பெற்றிருந்தால் அதில் காணப்படும் ஆண்டு பற்றிய பிழை, 'பிழை திருத்தம்' பகுதியில் சேர்க்கப் பெறவில்லை என்று யூகிக்கலாம்,

இப்பழைய பதிப்பிலும் நூலின் இறுதியில் பதினான்கு சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் காணப்படவே செய்கிறது.

இக்காரணங்களினால்தான் சகோதரர் ஹஸன் அவர்களுடைய கருத்து முழுமையாகத் தள்ளிவிடக் கூடியது அல்ல என்று கூறினேன்.

மேலும் இரண்டு செய்திகளைக் காணலாம்.

45ஆம் படலத்தில் 44ஆம் செய்யுள் பிந்திய பதிப்புகளில் விடுபட்டு உள்ளது என்று சகோதரர் ஹஸன் அவர்கள் கூறுகிறார்கள்.

அப்படி விடுபட்ட செய்யுள்:

"மதி நிகர் வதன சோதி மணிப்புய றசுகீம் தம்மை
உதவு தந்தையார்க்குச் செய்யும் சடங்கெலாம் ஓங்கச்செய்து
நிதிமணி அணிகள் ஆடை நெஞ்சவர் நீங்கி ஆங்கே
அதிஜய மகிழ்ச்சி கூர ஆதுலர்க்கு அளித்தார் அன்றே"

இந்தச் செய்யுள் பிந்திய பதிப்புகளில் ஏன் விடுபட்டது என்பதற்குத் தக்க காரணம் யூகிக்க முடியவில்லை.

அதே சமயத்தில் பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார் அவர்களுடைய கருத்தைத் தள்ளமுடியாமல் இருப்பதற்கும் காரணம் இருக்கிறது.

அவர், ஓர் அச்சுப் பிரதியிலிருந்து தாம் பிரதி செய்து கொண்டதாக எழுதி உள்ளார்.

அதே சமயத்தில் தாம் கட்டுரை எழுதிய ஆண்டுக்கு 40 ஆண்டுகள் முன், அதாவது சுமார் 1914ல் அக்காப்பியம் அச்சேறி இருந்தது என்றும் கூறுகிறார்.

மேலும், அவர் தாம் எழுதுவதற்கு 25 ஆண்டுகட்கு முன்னால் திண்ணைப் பள்ளி ஆசிரியர் ஒருவரைச் சந்தித்து, காதால் கேட்ட பாடல்களைப்பற்றி மாத்திரம் ஆதாரமாக வைத்துக் கொண்டு தம்முடைய கட்டுரைகளை எழுதவில்லை.

அவர் வைத்திருந்த அச்சுச் சுவடியைத் தாம் பிரதி செய்து கொண்டதாகக் கூறுகிறார். அவர் கட்டுரையில் காணப்பெறும் பாடல்கள் எல்லாப் பிரதிகளிலும் காணப்பெறும் பாடல்களாகவே உள்ளன. ஆகவே அவர் கட்டுரை எழுதும்போது அவர் பிரதி செய்து கொண்ட அச்சுச் சுவடி அவர் முன் (கைவசம்) இருந்திருக்கவே வேண்டும்.

ஆகையினால், அவர் ஞாபக மறதியினால் கட்டுரையில் சில செய்திகளைச் சொல்லி உள்ளார் என்று சொல்ல இயலாது.

எல்லாப் பிரதிகளிலும் நூலின் இறுதியில் காணப்பெறும் பதினான்கு சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தத்தில் ஆண்டு மாதம், தேதி, படல எண், பாடல் எண் ஆகிய அனைத்தும், எழுத்தினால் கொடுக்கப் பெற்றுள்ளனவே அன்றி, தமிழ் எண்களால் கொடுக்கப் பெறவில்லை.

எனவே தமிழ் எண்களைத் தவறாகப் படித்துவிட்டு அவர் எழுதிவிட்டார் என்று சொல்வதற்கும் இடம் இல்லை.

இன்னொரு செய்தியையும் காணலாம். சகோதரர் ஹஸன் அவர்களிடம் இருக்கும் கி. பி. 1860ல் அச்சிடப் பெற்ற நூல்தான் முதல் அச்சுப் பிரதி ஆக இருக்குமாயின்—அதேபோல், பிந்தி வந்த பிரதிகள் இதன் அடிப்படையில் தோன்றி இருக்குமாயின்—சில ஐயப்பாடுகள் எழவே செய்கின்றன:

1. இப்பழைய அச்சுப் பிரதியின் முகப்புப் பக்கத்தில் ''பிசுமில்லாகிற் றகுமானிற் றகீம்'' என்றும், முதற்பக்கத்தில் ''பிசுமில்லாகி'' என்றும் அச்சிடப் பெற்றுள்ளன. இப்பிரதியை ஆதாரம் ஆகக்கொண்டு பின்னர்ப்பதிப்பித்த எவரும் தம் பதிப்பில் இதனை விட்டிருக்க மாட்டார்கள். இன்று கிடைக்கும் நாச்சி குளத்தார் பதிப்பில் இவை இல்லை.

2. இப்பழம் பிரதியின் முகப்புப் பக்கத்தில் ''இராஜநாயகமென்னும் சுலையுமானபிக் காப்பியம்'' என்றும், முதற்பக்கத்தில்

''நபி சுலைமானலை கிஸ்ஸலாமவர்கள் இயற்கையுஞ் செயற்கையு மாகிய இராஜநாயக மென்கிற புராணம்'' என்றும் அச்சிடப் பெற்றுள்ளன. இவையும் பிந்தின பிரதிகளில் விடுபட்டுப் போவ தற்குத் தக்க காரணம் இல்லை.

3. இந்நூலின் (பழம் பிரதி) முதற் பக்கத்தில் ஒரு காப்புச் செய்யுள் இருக்கிறது. பிந்தின பதிப்புகளில் இக்காப்புச் செய்யுள் விடுபட்டுப் போவதற்கும் தக்க காரணம் இல்லை.

4. முன்னர் எடுத்துக் காட்டியதுபோல் 45ஆம் படலத்தில் உள்ள 44ஆம் பாடல் பிந்தின பதிப்புகளில் விடுபட்டுப் போவதற் கும் காரணம் இல்லை.

இவை அனைத்தையும் வைத்துப் பார்க்கும் பொழுது 1860ல் வெளிவந்த இந்தப் பதிப்பை அடிப்படையாகக் கொள்ளாமல், ஓலைச் சுவடியில் இருந்தோ, வேறு ஏதாவது கை எழுத்துப் பிரதி யில் இருந்தோ இன்னொரு அச்சுப் பதிப்பு வெளிவந்திருக்கலாம்; அந்தப் பதிப்பின் பிரதிதான் பெருமழைப் புலவர் பொ.வே. சோம சுந்தரனார்க்குக் கிடைத்திருக்கலாம் என்று யூகிப்பதற்கும் இடம் உண்டு.

அனைத்தையும் சேர்த்துப் பார்க்கும் பொழுது இது மேலும் ஆராய்தற்கு உரிய செய்தி என்ற முடிவிற்குத்தான் வரவேண்டி உள்ளது.



பிசுமில்லாகிற் றகுமானிற் றகீம்

இஃது

மதுரை மீசல்

வண்ணக்களஞ்சியம் புலவரவர்களால்

செய்யப்பட்ட

# இராஜ நாயகமென்னும்

## சுவையுமானபி காப்பியம்.

தஞ்சைமாநகர் பிறந்து

நாகூரிருப்பாகிய

**அசன்கான் சாகிபு அவர்கள்**

குமாரராகிய

## மதாறுகான்சாகிபு

அவர்களி முயற்சியால்

—○—

ஷெ புலவரவர்கள் குமாரர்

முகம்மதுகௌசு என்பவரெழுதிய புத்தகப் பிரதிகொண்டு

—○—

காயற்பட்டினம்

**கள் - ளகுமது**

மகுதூம்பிள்ளை அவர்கள் குமாரராகிய

## மகுதூம் முகம்மது

என்பவரால் அச்சிநோட்டமிட்டு

முத்தமிழ் விளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

—○—

சென்னப்பட்டணம்

கெறத்து-சுஉசுசு௵- றமலான்மீ உவ-க்கு

இங்கிலீஷ்-சுஅசுய௵

சாலிவாகனசகாப்தம்-சுஎஅஉ-க்கு-சித்தார்த்தி௵ பங்குனிமீ

பிசுமில்லாகி,

—○—

இஃது

வளம்பொருந்திய பைத்தல் முக்கத்திசென்னும்

ஊரிற்

பிறந்தெழுந் தரசாட்சியற்றும்



நபிசுலைமானலை கிஸ்ஸலாமவர்கள்

இயற்கையுஞ் செயற்கையுமாகிய

# இராஜநாயகமென்கின்ற

புராணம்



மதுரை மீசல்,

வண்ணக்களஞ்சியம் புலவரவர்கள்

பாடியது

## காப்பு

திருமலர்வாசம்போலுந் தெளிதருமுறையிற் சொல்லும் பொருளினைப் போலுமுண்மை பொருந்துநாச் சுவை யைப்போலும்-அருளினிற் பொறிகளாகி யனைத்துலகா ளுஞ்சோதி-கருவினுட்கருவாய்நின்றகத்தனைக்கருத்துட் கொள்வாம்.

# சொல்லகராதி